தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—72

# அரசாங்க நிதியியலின் பொருளாதாரம்-I

(THE ECONOMICS OF PUBLIC FINANCE—I)

ஆசிரியர்
பிலிப் E. டெய்லர்,
பொருளாதாரப் பேராசிரியர்
கன்னெக்டிகட் பல்கலைக் கழகம்.

தமிழாக்கம்
மா. குமாரசாமி, எம். ஏ.,
பொருளாதார விரிவுரையாளர்,
பச்சையப்பன் கல்லூரி,
காஞ்சிபுரம்.



தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு அரசாங்கம்

தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—72

# அரசாங்க நிதியியலின் பொருளாதாரம்-I

(THE ECONOMICS OF PUBLIC FINANCE—I)

ஆசிரியர்
ஃபிலிப் E. டெய்லர்,
பொருளாதாரப் பேராசிரியர்;
கன்னக்டிகட் பல்கலைக் கழகம்.

தமிழாக்கம்
மா. குமாரசாமி, எம். ஏ.,
பொருளாதார விரிவுரையாளர்,
பச்சையப்பன் கல்லூரி,
காஞ்சீபுரம்.




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

First Edition—March, 1965

B.T.P. No. 72

**The Economics of Public Finance - I**

Philip E. Taylor

Translation

M. Kumaraswamy



Price Rs. **10–00**



Printed by
The Conch Printing & Publishing Co..
16/1, Royapettah High Road,
Madras-14.

# அணிந்துரை

(திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஐந்து ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்து வருகின்றன. நாடுமுழுதும் பரந்துள்ள மாணவர் களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறை களில் நூல்கள் எழுதித்தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண் டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே திருப்தி கரமாக நடைபெற்று வருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித்தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'அரசாங்க நிதியியலின் பொருளாதாரம்-I' என்ற இந்நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 72ஆவது வெளி யீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 107 நூல்கள் வெளிவந்துள்ளன,

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலையாசனத்தில் அமர்ந்துள்ளாள். எனவே, இவ் வன்னையை வாழ்த்துவோமாக. உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாண வர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

எம், பக்தவத்ஸலம்

# மூலநூல் ஆசிரியரின் முன்னுரை

ஒரு பாடபுத்தகத்தின் ஒரு புதிய பதிப்பு வெளிவரும்போது, அந்தப் புத்தகத்தில் தரப்பட்டுள்ள விவரங்கள் யாவும், முடிந்த அளவுக்கு நடப்புக் காலத்துக்கு ஒத்தனவாகத் திருத்தி எழுதப் பட்டிருக்கும் என்று எதிர்பார்க்கப்படுவது இயற்கையே. விவரங்கள் கிடைப்பதில் ஏற்படுகிற காலத்தாழ்ச்சி, புத்தகத்தைத் திருத்தி எழுதுவதற்கும் வெளியிடுவதற்கும் செலவாகிற கால அளவு ஆகிய வரையறைகளுக்கு உட்பட்ட அளவில்தான் அப்படி எதிர்பார்க்கப் படும். புதிய பதிப்பின் வெளியீடானது, விவரங்கள் யாவற்றையும் நடப்புக் காலத்துக்கு ஒத்த வகையில் திருத்தியமைப்பதற்கான வாய்ப்பைத் தருவதோடு, நிதிச் சிக்கல்களின் தராதர முதன்மை (relative importance), இந்தச் சிக்கல்களின் தோற்றத்திற்கு உரிய நிலைக்களங்களாக விளங்குகிற பொருளாதார அரசியல் சூழ்நிலை— ஆகியவற்றில் ஏற்பட்டுள்ள மாறுதல்களுக்கு ஏற்ற முறையில் புத்தகத்தை மாற்றி அமைப்பதற்கும் வழி வகுத்துத் தருகிறது. அது மட்டும் அன்று. பொதுநிதி இயலின் சிந்தனைப்போக்கில் ஏற்படுகிற முன்னேற்றங்களின் விளைவாக, புதிய பொருள்களைக் கருத்தாய்வு செய்வதற்கும், முன்னரே கருத்தாய்வு செய்யப்பட்டுள்ள பொருள்களை முன்னிலும் பயன்மிக்க முறையில் அலசி ஆராய்வ தற்கும், அவ்வாறு கருத்தாய்வு செய்வதன் வாயிலாக இந் நூற் பயிற்சியின் உள்ளுறையை முன்னிலும் கருத்தாழம் மிகுந்ததாக ஆக்குவதற்கும் புதிய பதிப்பு இடம் தருகிறது. இறுதியாக, பிற நூற் பயிற்சிகளால் மாணவர்களுக்குக் கிடைக்கக்கூடிய கோட்பாட்டுக் கருத்துகளின் (theoretical concepts) விரிவு, உயர்ந்த தரம் ஆகியவற்றைப் பயன்படுத்திக்கொள்ளவும் புதிய பதிப்பானது சீரிய ஒரு வாய்ப்பை நல்குகிறது.

மேலே சுட்டிக் காட்டப்பட்ட வாய்ப்புகள் யாவற்றையும் பயன் படுத்திக்கொள்ள இந்தப் பதிப்பு முயன்றிருக்கிறது. இந் நூலின் விவரங்கள், இந்தப் பதிப்பில், முடிந்த அளவுக்கு நடப்புக் காலத்துக்கு உரியனவாகத் தரப்பட்டுள்ளன. மிதமான நிலைபேறின்மை (moderate instability) என்னும் நிலைமைக்குப் பொருந்தி வரக்கூடிய தன்மையிலேயே கொள்கைக் கருத்தாய்வுகள் இப் பதிப்பில் செய்யப் பட்டுள்ளன. மிதமான நிலைபேறின்மை இருக்கும் சூழ்நிலையில், வேலைக்குறைவை அகற்றுவதில் சமுதாயத்திற்கு எந்த அளவு

அக்கறை இருக்குமோ அதே அளவு ஆர்வம், பணவீக்கத்தை அகற்றுவதிலும் இருக்கும். நிலைபேறுக்க நோக்கத்திற்கு (the objective of stability) எந்த அளவு முதன்மை உண்டோ, ஏறத்தாழ அதே அளவு முதன்மையை, பொருளாதார-அரசியல் உலக மானது, பொருளாதார வளர்ச்சி என்னும் நோக்கத்திற்கும் (the objective of economic growth) பெற்றுத் தந்துவிட்டது என்னும் உண்மை இந் நூலில் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. இத்தகைய பொருள்களைப்பற்றிக் கருத்தாய்வு செய்கையில், இந் நூலைப் பயிலும் மாணவர்கள் நாட்டு வருமானக் கோட்பாட்டின் (national income theory) அடிப்படை உண்மைகளை மட்டுமாவது அறிந்திருப்பார்கள் என்றும், அதுபோலவே நிலைபேறுக்கம்—பொருளாதார வளர்ச்சி ஆகிய கொள்கைகள்பற்றிய கருத்தாய்வின் கோட்பாட்டு அடிப் படையையும் தெரிந்திருப்பார்கள் என்றும், ஆகவே, அந்த அடிப் படையைப்பற்றிச் சிறிதளவு எடுத்துச் சொன்னால் போதும் என்றும் இந் நூலில் பாவிக்கப்பட்டிருக்கிறது. நாட்டின் சாதனங் களைப் பொருளாதாரத்தின் தனியார் துறைக்கும் அரசாங்கத் துறைக்கும் இடையே பங்கிடுவது எப்படி என்னும் பழம்பெரும் கேள்வி, அரசாங்கங்களை மாபெரும் அளவில் பெற்றுள்ள இன்றைய சகாப்தத்தில் முன்னினும் ஆற்றல் மிகுந்ததாக வலுப்பெற்று விட்டது. இத் துறைபற்றி அண்மைக் காலத்தில் எழுதப்பட்டுள்ள ஏராளமான நூல்களின் விளைவாக இந்தக் கேள்வியை மிகத் துல்லிய மான முறையில் இப்போது பகுத்தாய்வு செய்ய முடிகிறது. சாதனப் பங்கீட்டுக்கான ஒரு கருவி என்னும் கோணத்திலிருந்து வரவு செலவுத் திட்டத்தை ஆராயும் ஒரு புதிய அத்தியாயம் இந்தப் பதிப்பில் இணைக்கப்பட்டிருக்கிறது. பொது நிதி இயலில் அண்மைக் காலத்தில் மாபெரும் திகைப்பை அளிக்கும் வளர்ச்சிகள், மாநில அரசாங்கங்கள்—தல அரசாங்கங்கள் ஆகியவற்றின் துறைகளிலேயே ஏற்பட்டுள்ளன. எனவேதான், அந்த அரசாங்கங்களின் நெருக்கடி மிகுந்த சிக்கல்களை அலசி ஆராயும் அத்தியாயம் ஒன்று சேர்க்கப் படலாயிற்று. இந்தப் பதிப்பில் செய்யப்பட்டுள்ள மற்றொரு பெரிய திருத்தமானது, கூட்டரசாங்கத்தின் தனியாள் வருமான வரியால் எதிர்காலத்தில் ஆற்றப்படவேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிற பணிகளை ஆற்றுவதற்கு ஏற்ற முறையில் அதனை வன்மை படைத்த தாக ஆக்குவதற்கான சாத்தியக்கூறுகளை ஆராய்கிறது. இந்தப் பெரிய மாறுதல்களைத் தவிர, பொது நிதி இயலின் நடப்புக்கால வளர்ச்சிக்கு ஏற்ற முறையில் அமைந்த சிறிய மாறுதல்கள் நூல் நெடுக ஆங்காங்கே செய்யப்பட்டுள்ளன. இவ்வாறெல்லாம் மாறு தல்கள் செய்யப்பட்டிருந்தபோதிலும், இந்தப் பதிப்பிலும், முந்திய பதிப்புகளைப் போலவே, நூலைப் பயில்பவர்களுக்கு விவரங்களைத்

தெரிவிப்பது—நூற்பொருள் தொடர்பான பல்வேறு சிக்கல்களை அலசி ஆராய்வது—ஆகிய இரண்டு நோக்கங்களுமே தலையாய நோக்கங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

இந் நூலைப்பற்றி, இந் நூலின் முந்திய பதிப்புகளைப் பயன் படுத்தியவர்கள்— பயன் படுத்தாதவர்கள் ஆகிய இரு சாராரிடமிருந்தும், இந் நூலை வெளியிட்ட பதிப்பகத்தாரின் பிரதிநிதிகளால் கேட்டறியப்பட்ட கருத்துரைகள், இந்த நூலைத் திருத்தி அமைப்பதற்குரிய வழிகாட்டிகளாக விளங்கின. அந்தக் கருத்துரைகளை அளித்தவர்களுடைய பெயர்களையெல்லாம் இங்கே தொகுத்துக் கூற முடியவில்லை என்றாலும், அந்த ஆய்வுரைகள் யாவும் முழுமையாகப் பின்பற்றப்படாவிட்டாலும், அவற்றிற்கு உயர்ந்த மதிப்பு அளிக்கப்பட்டிருக்கிறது என்பதை அவர்கள் அறிவார்கள் என்று நம்புகிறேன். கன்னக்டிகட் கல்லூரியைச் சேர்ந்த (Connecticut College) பேராசிரியர் ரூபி மாரிஸ் (Prof. Ruby Morris), பேராசிரியர் கேதரைன் ஃபின்னி (Katherine Finney) ஆகியோரால் அளிக்கப்பட்ட கருத்தாழம் மிக்க ஆய்வுரைகள் எனக்குப் பேருதவி புரிந்திருக்கின்றன. கன்னக்டிகட் பல்கலைக் கழகத்தில் தற்போது என்னுடன் பணியாற்றும் ஆசிரியப் பெருமக்களும், முன்னர்ப் பணியாற்றி வந்தோரும், இந் நூலின் தொடர்பாக நான் அவர்களுக்குக் கொடுத்த தொல்லைகளையெல்லாம் பொறுமையுடன் ஏற்றுக் கொண்டதோடு, பல்வேறு பொருள்களைப்பற்றிப் பயன்மிக்க பல கருத்துரைகளையும் தந்திருக்கிறார்கள். இந் நூலின் பொருள் குறித்து அவர்களோடு அவ்வப்போது நான் நிகழ்த்திய உரையாடல்கள் யாவற்றையும் நான் குறித்துவைத்திருக்கவில்லை என்ற போதிலும், மெல்வின் லூரி (Melvin Lurie), ருடால்ஃப் ரோம்பெர்க் (Rudolf Rhomberg), ஜோல் டிர்லாம் (Joel Dirlam), எமானுவல் மெலிசார் (Emanuel Melichar), டொரொதி குட்வின் (Dorothy Goodwin) ஆகியோருக்கு நான் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறேன் என்பதை நன்றாக உணர்கிறேன். குறிப்பாகக் குமாரி குட்வின் அவர்கள் கருத்துரைகளைத் தந்ததோடு இந் நூலின் கையெழுத்துப் படியின் பெரும்பகுதியைப் படித்துப் பார்ப்பதிலும் திறனாய்வு செய்வதிலும் தன் தனித் திறமையைப் பயன்படுத்தினார்கள். இவர்கள் அனைவருக்கும் என் மனம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். அதே நேரத்தில், இந்தப் புத்தகத்தில் உள்ள கருத்துகள் பெற்றுள்ள இறுதி வடிவத்திற்கு அவர்கள் பொறுப்பாளிகள் அல்லர் என்பதையும் அறிவித்துக் கொள்கிறேன்.

ஸ்டார்ஸ், கன்னக்டிகட் — ஃபிலிப் E. டெய்லர்

## பொது நிதி இயலின் மாணவர்களுக்குப் பயன்படக்கூடிய பொதுவான நடைமுறைத் தகவல்களை அளிக்கும் நூல்கள், இதழ்கள் முதலியன

அரசாங்க வருமானம், செலவு, கடன் ஆகியவை பற்றிய புள்ளி விவரங்கள் :

கூட்டரசாங்கம் :

1. Budget of the United States Government (Government Printing Office, வாஷிங்டன்), ஆண்டு வெளியீடு.

   வரவு செலவுத் திட்ட வரவுகள்-செலவுகள், பொறுப்பு நிதியின் (trust fund) வரவுகள்—செலவுகள் ஆகியவைபற்றிய விவரமான புள்ளிவிவரங்கள் கொண்டது இந் நூல். முந்திய முடிக்கப்பட்ட நிதி ஆண்டு, நடப்பு ஆண்டு, அடுத்த ஆண்டு ஆகியவற்றிற்கான புள்ளி விவரங்கள் இதில் உள்ளன. இந் நூலில் சிறப்புப் பகுத்தாய்வுகள் (special analyses), வரவு செலவுத் திட்டத்தில் அடங்கியுள்ள பல்வேறு திட்டங்களின் உட்பொருளை விளக்கிக் காட்டுவதற்காகக் குறிப்பிட்ட புள்ளி விவரங்களைத் தேர்ந்தெடுத்து, அவற்றை மறு பாகுபாடும் (reclassification) செய்யப்பட்டுள்ளன.

2. Annual Report of the Secretary of the Treasury (Government Office, வாஷிங்டன்).

   கூட்டரசாங்க நிதி பற்றிய புள்ளி விவரங்களையும் பிற தகவல்களையும் தருகிற ஒரு முதன்மையான மூலம் (source) இது. வரவுகள், செலவுகள், மொத்தக் கடன் (gross debt) முதலிய சில பொதுவான பிரிவுகளைப் பொறுத்தவரை, இந் நூல், பின்நோக்கிச் சென்று 1790வரை புள்ளி விவரங்களைத் தருகிறது. இந் நூல், பொதுவாக இரண்டு ஆண்டுக் காலத் தாமதத்திற்குப் பின்னர் வெளியாகிறது.

3. Treasury Bulletin (Government Printing Office, வாஷிங்டன்), மாத வெளியீடு.

   நடப்புக் கால வரவு செலவுத் திட்ட வரவுகள்—செலவுகளையும், ரொக்க வரவுகள்—செலுத்தல்களையும் தருகிற இந்த இதழ், கடன் நடவடிக்கைகளில் சிறப்புக் கவனம் செலுத்து கிறது.

4. Daily Statement of the United States Treasury.

5. Monthly Statement of the Receipts and Expenditures of the United States Government (Government Printing Office, வாஷிங்டன்).

   வரவுகள், செலவுகள், பொதுக் கடன் ஆகியவைபற்றிய புள்ளி விவரங்களை எடுத்துக்காட்டும் சிறந்த வெளியீடுகள்.

மாநில அரசாங்கங்களும் தல அரசாங்கங்களும் :

1. Compendium of State Government Finances (Government Printing Office, வாஷிங்டன்), ஆண்டு வெளியீடு, ஐக்கிய அமெரிக்க சென்சஸ் பீரோ.

வரவுகள், செலவுகள், கடன், ரொக்க இருப்புகள் ஆகியவை பற்றிய புள்ளி விவரங்களை, ஒவ்வொரு மாநிலத்திற்கும் தனித் தனியாகவும், எல்லா மாநிலங்களுக்கும் மொத்தமாகவும் தருகிற வெளியீடு. *1942*-க்கு முன்பு இந்த வெளியீட்டுக்கு 'Financial Statistics of States' என்று பெயரிடப்பட்டிருந்தது.

2. Compendium of City Government Finances (Government Printing Office, வாஷிங்டன்), ஆண்டு வெளியீடு, ஐக்கிய அமெரிக்க சென்சஸ் பீரோ.

வரவுகள், செலவுகள், கடன், ரொக்க இருப்புகள் ஆகியவை பற்றிய புள்ளி விவரங்களை, ஒவ்வொரு நகரத்திற்கும் தனித் தனியாகவும், எல்லா நகரங்களுக்கும் மொத்தமாகவும் தருகிற வெளியீடு. *1942*-க்கு முன்னர் இந்த வெளியீட்டுக்கு 'Financial Statistics of Cities' என்று பெயரிடப்பட்டிருந்தது. *1931* வரையில், புள்ளி விவரங்கள், *30,000*-க்கு மேற்பட்ட மக்கள்தொகையை உடைய நகரங்களுக்கு வெளியிடப்பட்டு வந்தன; *1932* முதல் *1941* வரையில் *1,00,000*-க்கு மேற்பட்ட மக்கள்தொகையை உடைய நகரங்களுக்கும் *1941* முதல் *25,000*-க்கு மேற்பட்ட மக்கள்தொகையை உடைய நகரங்களுக்கும் வெளியிடப்பட்டு வருகின்றன.

3. Summary of Government Finances (வாஷிங்டன், சென்சஸ் பீரோ), ஆண்டு வெளியீடு, ஐக்கிய அமெரிக்க சென்சஸ் பீரோ.

கூட்டரசாங்கம், மாநில அரசாங்கங்கள், தல அரசாங்கங்கள் ஆகியவற்றின் நிதிபற்றிய புள்ளி விவரங்களைச் சுருக்கமான முறையில் தரும் வெளியீடு. *25,000*-க்குக் குறைந்த மக்கள் தொகையை உடைய நகராட்சிகள் உள்ளிட்ட சிறிய தல அரசாங்கங்கள், சிறப்பு மாவட்டங்கள் (special districts) ஆகியவற்றிற்கான விவரங்களும் இவ் வெளியீட்டில் அடங்கியிருப்பது, இதன் தனிச் சிறப்பாகும்.

ஏனைய பொருளாதாரப் புள்ளி விவரங்கள்

1. Survey of Current Business (Government Printing Office, வாஷிங்டன்), மாத வெளியீடு.

நாட்டின் ஆக்கம், வருமானம் ஆகியவைபற்றிய புள்ளி விவரங்களையும், பலதிறப்பட்ட விவரமான வாணிப அட்டவணைகளையும் புள்ளி விவரங்களையும் தருகிற வெளியீடு

இது. இவற்றில் பல புள்ளி விவரங்கள், வாணிபத் துறை (Department of Commerce), தவிர்த்த பிற மூலங்களிலிருந்து பெறப்பட்டவை.

2. Federal Reserve Bulletin (Board of Governors of the Federal Reserve System, வாஷிங்டன்), மாத வெளியீடு.

பணம், பாங்கு முறை, நிதி ஆகியவை பற்றிய புள்ளி விவரங்களுக்கான தோற்றமூலம் (original source). கூட்டரசாங்க நிதித்துறைப் புள்ளி விவரங்கள் சிலவற்றையும் இஃது எடுத்து வெளியிடுகிறது.

3. Monthly Labour Review (Government Printing Office, வாஷிங்டன்), மாத வெளியீடு.

தொழிலாளர் புள்ளி விவரக் கழகத்திலிருந்து (Bureau of Labour Statistics) பெற்ற விலைகள், வேலை, கூலிகள் தொழிலாளர் நிலைமைகள் ஆகியவைபற்றிய புள்ளி விவரங்களை இந்த இதழ் வெளியிடுகிறது.

(நம் புத்தகத்தில் உள்ள ஒவ்வோர் அத்தியாயத்தின் இறுதியிலும், அந்த அத்தியாயத்தில் கருத்தாய்வு செய்யப் பட்டுள்ள பொருளைப்பற்றி மேலும் படித்தற்கு ஏற்ற நூல்களின் பட்டியல் ஒன்று தரப்பட்டிருக்கிறது.)

# 1. அறிமுகம்: பொருளாதார, அரசியல் பின்னணியில் பொது நிதி

## பொதுநிதிபற்றிய ஆய்வின் தன்மை

ஏறத்தாழ எல்லாப் பொருளாதார நடவடிக்கைகளிலும் தலை சிறந்த செல்வாக்கைப் பெறும் அளவுக்கு அரசாங்கம் உயர்ந்து விட்டிருப்பதே, அண்மைக் காலத்தில் அமெரிக்கப் பொருளா தாரத்தில் ஏற்பட்டுள்ள மிகச் சிறப்பான வளர்ச்சி என்று கூறலாம். பொதுவான வகையில் இந்த உண்மையை அனைவரும் நன்கு அறிவர். என்றபோதிலும், தற்போதைய அரசாங்க நடவடிக்கை களின் அளவு எத்துணை மிகுதியாக இருக்கிறது என்பதை எடுத்துக் காட்டும் வகையில் சில ஒப்பீட்டுப் புள்ளி விவரங்களைத் (comparative figures) தருவது நலம் பயப்பதாகும். 1958ஆம் ஆண்டில், ஐக்கிய அமெரிக்காவின் கூட்டரசாங்கம் (Federal Government), மாநில அரசாங்கங்கள் (State Governments), தல அரசாங்கங்கள் (Local Governments) ஆகியவற்றிற்குச் செலுத்தப் பட்ட வரிகள், கட்டணங்கள் (fees) ஆகியவற்றின் தொகை, 115 மில்லியன் டாலராக இருந்தது. இந்தத் தொகை, அதே ஆண்டில், உணவு, உடை, அவற்றின் துணைப் பொருள்கள், புகையிலை ஆகியவற்றின் நுகர்வுக்காக மக்கள் அனைவராலும் செலவிடப்பட்ட தொகையை ஏறத்தாழ ஒத்திருக்கிறது.[1] 1958-ல் ஐக்கிய அமெரிக்காவின் நாட்டு வருமானத்தில் (National Income) ஏறக்குறைய 13 சதவீதம், அரசாங்கங்களாலேயே அளிக்கப்பட்டிருக்கிறது. இந்தத் தொகை, சில்லறை வாணிபத் தாலும் ஊழியங்களாலும் (services) ஏற்பட்ட தொகையை விட, அல்லது தனியாரின் நிதியாலும், நிலங்கள் கட்டடங்கள் ஆகியவற்றாலும் ஏற்பட்ட தொகையைவிட அதிகமாக இருந்த தோடு, பொறிவழித் தொழில்கள் எல்லாவற்றாலும் ஏற்பட்ட தொகையில் ஏறத்தாழப் பாதி அளவினதாக இருந்தது.[2]

1958-ல் ஏறத்தாழ 8 மில்லியன் பேர், அரசாங்கத்தின் சிவில் ஊழியர்களாகப் பணியாற்றினர்கள். அவர்களின் தொகை, அந்த ஆண்டில் பணியாற்றிய மொத்த சிவில் தொழிலாளர்களின் எண்ணிக்கையில் ஏறக்குறைய எட்டில் ஒரு பங்காகும். அரசாங்க சிவில் ஊழியர்களைவிடச் சிறிதளவு அதிக எண்ணிக்கை உடையவர்களே சில்லறை வாணிபத்தில் ஈடுபட்டிருந்தார்கள். நீடித்த பொருள்களின் (durable goods) உற்பத்தியில் ஈடுபட்டிருந்தோரின் எண்ணிக்கை, சிவில் ஊழியர்களின் எண்ணிக்கையைவிட, ஏறத்தாழ ஒரு மில்லியன் அளவுக்குத்தான் கூடுதலாக இருந்தது.[3] 1958-ல் ஐக்கிய அமெரிக்காவில் இருந்த மொத்தக் கடன்களில், ஏறத்தாழ ஐந்தில் இரண்டு பங்கு, அரசாங்கங்களின் கடனாக இருந்தது. அரசாங்கங்களின் கடன், கூட்டு நிறுவனங்களின் (Corporations) அல்லது கூட்டு நிறுவனங்கள் அல்லாத தனியாரின் கடனைவிடக் கூடுதலாக இருந்தாலும், அந்த இருவகைக் கடன்களின் கூட்டுத் தொகையைவிட, ஏறத்தாழ மூன்றில் ஒரு பங்கு குறைவானதாகவே இருந்தது.[4]

போர் ஏற்படக்கூடிய சூழ்நிலையில் வாழும் ஒரு நாடு தவிர்க்க முடியாத நிலையில் மிகக் கூடுதலான அளவில் செலவிடவேண்டியிருக்கிறது. ஆகவே, அண்மை ஆண்டுகளில் நிதி நடவடிக்கைகளின் அளவு இயல்புக்கு மாருக மிக உயர்வாக இருந்தது என்றும், இந்த அனுபவத்தை அடிப்படையாகக்கொண்டு பொது விதிகளை வகுப்பது முறையாகாது என்றும் சிலர் வாதாடக்கூடும். ஆனுல், 1930ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளில், ஐக்கிய அமெரிக்காவின் எல்லா அரசாங்கங்களின் செலவு, சராசரியில் அமெரிக்கப் பொருளாதாரத்தின் நாட்டின் மொத்த ஆக்கத்தில் (gross national product) ஐந்தில் ஒரு பங்கைவிடச் சற்றுக் குறைவாக இருந்தது.[5] 1940ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளின் முதல் பாதியில் (போர்க் காலத்தில்), அரசாங்கச் செலவுகள், நாட்டின் மொத்தச் செலவுகளின் ஆண்டுச் சராசரியில் (annual average of gross national expenditures) மூன்றில் ஒரு பகுதியைவிட அதிகமாக உயர்ந்துவிட்டன. அதே பத்தாண்டுகளின் பிற்பகுதியில் (ஓரளவு அமைதிக் காலத்தில்), இந்த விகிதாசாரம், நான்கில் ஒரு பகுதியாகக் குறைந்துவிட்டது. பன்னுட்டு அரசியலின் நிலைமையும், அரசாங்கங்கள் நிறைவேற்றவேண்டுமென்று குடிமக்கள்விரும்புகிற பணிகளின் அளவும், தற்போது உள்ள தன்மையிலேயே தொடர்ந்து இருக்குமானுல், அண்மையில் உள்ள எதிர்காலத்தில் அரசாங்கச் செலவுகள் நாட்டின் மொத்த ஆக்கத்தில் நான்கில் ஒரு பகுதியைவிடக் குறைந்த அளவை அடைந்துவிடும் என்று ஆரூடம் கணிப்பவர்கள் அவசரவாதிகளாகவே இருக்கமுடியும்.

நாட்டின் வருமானத்தில் ஒரு குறிப்பிடத்தக்க பகுதி அரசாங்கத்தின்மூலமாகச் செலுத்தப்படுவதால், பொருளாதாரம் முழுவதிலும் மாபெரும் அளவில் விளைவுகள் ஏற்படாமல் இருக்க முடியாது. வரி விதிப்பாலும் அரசாங்கச் செலவாலும் உண்மையான வருமானத்தின் (real income) அளவிலும் பங்கீட்டிலும், பெரு விளைவுகள் ஏற்படுவதால், பொது நிதியைப்பற்றி (public finance) மிகக் குறைந்த அளவிலேயே சிந்தனை செய்வதும், சில குறிப்பிட்ட கொள்கைகளையே திரும்பத் திரும்பக் கூறிக்கொண்டிருப்பதுமே வழக்கமாக இருக்கும் போக்கு கைவிடப்பட்டு, விரிவான அளவிலும் ஆழமான முறையிலும் சிந்திக்கும் நிலைமை வளர்ந்தாகவேண்டும். அரசாங்கம் என்பது, மிகப் பெரிய வாணிபம் ஆகும். பொருளாதார நல்வாழ்வுக்கு அதனுடைய நிதி நடவடிக்கைகள் மிக இன்றியமையாதனவாக இருப்பதால், அந் நடவடிக்கைகளைப்பற்றி மிக விரிவாக அறிந்துகொள்வதும், மிக நுண்ணிய முறையில் பகுத்தாய்வு செய்வதும், உச்ச அளவில் நடைபெற்றாக வேண்டும்.

பொது நிதிபற்றிய பகுத்தாய்வின் இறுதிக் குறிக்கோள், பொருத்தமான நிதிக் கொள்கையை வகுப்பதே. இது நிதித் துறையில் எத்தகைய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படவேண்டும் என்பதை முடிவு செய்வதே, அப் பகுத்தாய்வின் நோக்கம் என்பதைத்தான் குறிக்கிறது. மேற்கொள்ளப்படவேண்டிய நடவடிக்கைகளாவன தற்போது கையாளப்படுகிற நடவடிக்கைகளின் விளைவுகளை மிக விழிப்பான முறையில் மதிப்பீடு செய்வதும், எதிர்காலத்திற்குத் தேவையான புதிய திட்டங்களை—சில சமயங்களில் துணிவுமிக்க திட்டங்களைக்கூட—வகுத்துத் தருவதும் ஆகிய இன்றியமையாத செயல்களாகும். நிதிக் கொள்கை (Fiscal policy) என்பது, பல்வேறு மட்டங்களில் (levels) வகுக்கப்படவேண்டிய கொள்கைகளைத் தன்னகத்தே கொண்ட ஒன்றாகும். ஒரு புதிய இலக்கணப் பள்ளிக்கூடத்தைத் தொடங்குவது விரும்பத்தக்கதா என்பது போன்ற — குறிப்பிட்ட வட்டாரங்கள்மட்டுமே அக்கறை காட்டக்கூடிய கொள்கைகளிலிருந்து, முழுப் பொருளாதாரத்தின் இயக்கத்தில் அரசாங்க நிதி நடவடிக்கைக்கு இருக்கவேண்டிய பொருத்தமான பங்கு எத்தகையது என்பதுபோன்ற—மிக விரிவான நாட்டுக் கொள்கைகள்வரை உள்ள பல்வேறு கொள்கைச் சிக்கல்கள், நிதிக்கொள்கை என்பதில் பொதிந்து கிடக்கின்றன.

ஒரு குறிப்பிட்ட ஆய்வுத் துறையின் இலக்கணத்தை (definition) வகுக்கும் முயற்சியை, அந்த ஆய்வு முடிந்தபிறகு எடுத்துக் கொள்வதே சிறந்த முறை என்று கூறுவதற்குப் பல ஆதாரங்கள்

இருக்கின்றன.[c] வெறும் எலும்புக்கூடாக இருக்கும் இலக்கணம், குறிப்பிட்ட துறைபற்றிய ஆய்வு வளர வளரத்தான், சதைப் பற்றும் உறுப்புகளின் இயக்கமும் உடையதாக மாறி ஏற்றமும் எழிலும் படைத்ததாக அமைகிறது. ஆய்வின் முடிவில்தான், இலக்கணத்தின் சிறப்பும் குறிப்பும் உண்மைப் பொருள் உடையன வாக உயர்கின்றன. இதுதான் உண்மை என்றாலும், இந்தத் துறையைப் பயில்பவர்கள் தாங்கள் எதைப்பற்றிப் பயில்கிறோம் என்பதை முன்கூட்டியே உணரத்தக்க முறையில், தொடக்கத்திலேயே சில கருத்துகளைத் தெரிவிப்பது நம்முடைய கடமையாக அமைகிறது.

## பொது நிதி (Public Finance)

பொது நிதி என்பது, அரசாங்கம் என்னும் நிறுவனத்தின் கீழ் ஓர் அமைப்பாக ஆக்கப்பட்டு பொதுமக்களின் நிதிகளைப்பற்றி ஆராய்வதாகும். ஆகவே, அது அரசாங்கத்தின் நிதிகளைமட்டுமே ஆராய்கிறது. அரசாங்க நிதிகள் (The Finances of Government) என்பதில் அரசாங்கத்திற்குத் தேவையான தொகைகளை எழுப்புவதும், அவற்றைப் பிரித்து வழங்குவதும் (disbursement) அடங்கும். பொது நிதியானது, அரசாங்கக் கருவூலத்தின் (Fisc) நடவடிக்கைகளைப்பற்றியது. ஆகவே, அது ஓரளவுக்கு அறிவியலாக, கருவூல அறிவியலாக (fiscal science) இருக்கிறது. அதனுடைய கொள்கைகள் கருவூலக் கொள்கைகள் (fiscal policies), சிக்கல்கள் கருவூலச் சிக்கல்கள் (fiscal problems) ஆகும்.

தனியார் பொருளாதாரத்தின்மீது அரசாங்கம் நேர்முகமாக விதிக்கும் கட்டுப்பாடுகளுக்கும், பொதுநி,திக்கும் தொடர்பில்லை. இரயில்வேக்கள், பிற பொது வசதிகள் (public utilities), முற்றுரிமைகள் (monopolies), பாங்குகள் (banks), கடன்பத்திர அங்காடிகள் (security markets) முதலியவற்றைக் கட்டுப்படுத்தும் பணிகள் பொது நிதியைச் சேர்ந்தவை அல்ல. இந்தப் பணிகளை நிர்வாகம் செய்வதற்காக அரசாங்கம் தன் நிதிகளைச் செலவிடவேண்டிய நிலைமை, அல்லது இந்தப் பணிகளை நிறைவேற்றுவதற்குரிய கருவிகளாக வரிகளைப் பயன்படுத்தும் நிலைமை, ஆகிய இவற்றோடு பொது நிதிக்குத் தொடர்பு உண்டே தவிர, இந்தப் பணிகளோடு, பணிகள் என்னும் முறையில், பொது நிதிக்குத் தொடர்பு கிடையாது. தனியார் பொருளாதாரத்தை அரசாங்கம் பல்வேறு வழிகளில் பாதித்தாலும், பொது நிதியானது, அரசாங்கத்தால் நிதிகள் எழுப்பப்படுவது—வழங்கப்படுவது ஆகியவற்றோடுமட்டுமே தொடர்பு உடையதாகும். ஆனால், பின்னர் வரும் அத்தியாயங்களில் நாம் பயில இருப்பதைப்போல, அரசாங்க நிதிகளை எழுப்பப்படுவது—வழங்குதல் ஆகியவை பொருளாதாரம் பணியாற்றும் அளவில் குறிப்பிடத்தக்க விளைவுகளைத் தாமே ஏற்படுத்தக்கூடும்.

அரசாங்க நிதிகளை எழுப்புவதும் வழங்குவதும் எந்த விதத்திலும் குறைந்த அளவுள்ள சிக்கல்களைக் கொடுக்கவில்லை. நிதிகளை எழுப்புவதற்கான பொருத்தமான முறைகளை முடிவு செய்யவேண்டும் என்பது, தனியார் பொருளாதாரத்தால் பொருள்களின் உற்பத்தியும் வருமானமும் எவ்வாறு ஏற்படுகின்றன என்பதுபற்றிய தெளிவான அறிவு வேண்டும்; அதற்கு முழுப் பொருளாதாரமும் எவ்வாறு பணியாற்றுகிறது என்பதைப்பற்றிய தெளிவுவேண்டும் என்பதைக் குறிக்கிறது. பொருத்தமான ஒரு செலவுத் திட்டத்தை வகுக்கவேண்டுமானால், முழுப் பொருளாதாரத்தின் வருமான ஓட்டத்தில் (income stream) அரசாங்கச் செலவுகளால் ஏற்படும் விளைவுகள், அரசாங்க ஊழியங்களாலும் தனியார் செலவுகளாலும் ஏற்படும் தராதர சமுதாயப் பயன்பாடுகள் (relative social utilities), அரசாங்கச் செலவுகளில் ஏற்படும் மாறுதலால் அரசாங்கத்தின் அமைப்பிலும் தத்துவத்திலும் ஏற்படும் விளைவுகள் ஆகிய விரிவான துறைகள்பற்றிய விளக்கமான அறிவு ஏற்பட்டாகவேண்டும். இவ்வாருகப் பொது நிதி இயல் அகலமாகவும் ஆழமாகவும் இருக்கிறது. ஆகவே, நிதிச் சிக்கல்கள் தீர்க்கப்படவேண்டுமானால், பல்வேறு நுண்ணறிஞர்களின் (specialists) முயற்சிகள் ஒருங்கே இணைக்கப்படவேண்டும்.

**பொது நிதியின் கேள்விகள்:** இந்த நுண்ணறிஞர்கள் யார்? அவர்கள் யாது செய்கிருர்கள் என்பவை பொது நிதியைப்பற்றிக் கேட்கப்படும் கேள்விகளால் சுட்டிக்காட்டப்படும். இப்படிக் கேட்கப்படும் கேள்விகளிற் சில, யார், எது, எங்கே, ஏன் என்னும் வகையைச் சேர்ந்தவை. அவற்றிற்குக் காரண காரியப் பகுத்தாய்வின்மூலமாகவே விடை தர முடியும். ஆகவே, அத்தகைய கேள்விகளைப் பொறுத்தவரை அறிவியல் முறையைக் (scientific method) கையாளவேண்டி யிருக்கிறது. அவற்றிற்கு உரிய விடைகளும், அறிவியல் விடைகளாகவே இருந்தாகவேண்டும். ஏனைய கேள்விகள், அப்படி இருக்கவேண்டுமா, அப்படி இருந்துதான் தீரவேண்டுமா, அப்படி இருக்கக் கூடுமா என்னும் வகையைச் சேர்ந்தவை. இத்தகைய கேள்விகளுக்கான விடைகளைக் காண வேண்டுமானால், மதிப்புகளைப்பற்றிய தீர்ப்புகளைச் (value judgments) செய்தாக வேண்டும். இவ்வாருக, நம் பொருளோடு தொடர்புடைய நுண்ணறிஞர்களிற் சிலர், அறிவியல்வாதிகளாகவும் (scientists), சிலர் கலையியல்வாதிகளாகவும் (artists) இருந்தே ஆகவேண்டி இருக்கிறது. பொது நிதிஇயலில் நாம் பொருத்தமான நிதிக் கொள்கைகளை முடிவுசெய்யவேண்டி யிருக்கிறது என்பதையும், மக்களாட்சிமுறை அரசாங்கத்தில்(Democratic

Government) இந்தக் கொள்கைகள் பொருத்தமானவையாக மட்டும் இருந்தால் போதாது, கையாளப்படக் கூடியனவாகவும் இருக்கவேண்டும் என்பதையும், அத்துடன் நிதி நிலைமைகளை அல்லது பொருளாதார நிலைமைகளை மேம்பாடுறச் செய்வதாகமட்டும் இல்லாமல் ஏற்றுக்கொள்ளத் தக்கனவாகவும் இருக்கவேண்டும் என்பதையும் நினைவில் கொள்ளவேண்டும்.

பொது நிதிபற்றிக் கேட்கப்படுகிற கேள்விகளிற் சில (எல்லாம் அல்ல) கீழே தரப்பட்டுள்ளன:

1. நிதிபற்றிய ஒரு முன்மொழிவால் (proposal) அல்லது நடவடிக்கையால், கீழ்க்கண்ட ஒவ்வொன்றிலும் ஏற்படும் விளைவுகள் யாவை?

நாட்டின் உற்பத்தியும் வருமானமும்,
நாட்டின் வாழ்க்கைத் தரம்,
செல்வம், வருமானம் ஆகியவற்றின் பங்கீடு,
நிதி அங்காடிகள் (financial markets),
குறிப்பிட்ட வட்டாரங்கள்,
குறிப்பிட்ட வாணிபத் துறைகள்,
குறிப்பிட்ட பொருளாதாரப் பிரிவுகள் (economic groups).

2. நிதிபற்றிய ஒரு முன்மொழிவால் அல்லது நடவடிக்கையால்,

குடிமக்களின் உரிமைகள்,
அரசாங்கத்தின் அமைப்பும் வடிவமும்,
பன்னாடுகளின் உறவுகள் (international relations) ஆகியவற்றில் ஏற்படும் விளைவுகள் யாவை?

3. முன்மொழிவை நடைமுறையில் கையாளமுடியுமா?

4. மேற்படி முன்மொழிவின் நிறைவேற்றத்திற்குத் தேவையான

பணியாளர் தொகுதியை (personnel) நாம் எவ்வாறு பெறுவது?
பொருள்களை எவ்வாறு பெறுவது?
மேற்படி முன்மொழிவில் அடங்கியுள்ள திட்டத்தைத் திறமையாக நடத்தி முடிப்பது எப்படி?

முதல் கேள்வியின் பல்வேறு பகுதிகள் பொருளாதார அறிஞர்களால் விடை தரக்கூடியவை. ஏனென்றால், பொருளாதாரத்தின் அமைப்புப்பற்றிய அறிவும், பொருளாதாரம் தற்போது இயங்குகிற முறையில் அதை இயக்குகிற சக்திகளைப்பற்றிய அறிவும் உடையவர்கள்தான் அக் கேள்விகளுக்கான விடைகளைத் தர முடியும். இரண்டாவது கேள்விக்கான விடையை, அரசாங்கத்தின் மறைபொருள் தன்மைகளைப்பற்றி (esoteric aspects) மிகுதியாக அறிந்திருக்கக் கூடிய அரசியல் தத்துவ அறிஞர் (political philosopher) விதிகளையும், ஒழுங்குமுறைகளையும் கற்றுத் தேர்ந்துள்ள வழக்கறிஞர் (lawyer) ஆகியோரின் துணையுடன் அரசியல் அறிவியல் அறிஞரால் (political scientist) தர முடியும்.

மூன்றாவது கேள்விக்கான விடையைத் தர வல்லவர் அரசியல் வாதியே (politician). அரசியல்வாதியின் பணியை, லண்டனிலிருந்து வெளியாகும் 'எகானமிஸ்ட்' (Economist) என்னும் இதழ், பின்வருமாறு விவரித்திருக்கிறது :

> '.................எவ்வாறு ஓவியர்கள் ஓவியம் தீட்டுவதற்காகவே பிறந்தும், தங்களுடைய கலையைக் கையாள்வதற்காகப் பட்டினி கிடக்க நேரிட்டாலும், அந்தக் கலையைக் கையாள்வதிலேயே தங்கள் வாழ்க்கை முழுவதையும் பயன்படுத்தியும் வாழ்கிறார்களோ, அவ்வாறே குருதியோடு குருதியாக அரசியலை அமைத்துக் கொண்டுள்ள மனிதர்களும் இருக்கிறார்கள். அரசியலையே தொழிலாக உடையவர், தவிர்க்கப்பட முடியாதவர் மட்டும் அல்லர்; இன்றியமையாத ஒருவரும் ஆவார். இயலக்கூடியது என்னும் (the art of the possible) கலையைக் கையாள்பவர் அவரே. அவர் இல்லாவிட்டால், ஏறத்தாழ எதுவுமே இயலாமற் போய்விடும். நடக்கவேண்டிய செயல்களை நடத்திக் கொள்பவர் அவரே. இவற்றிற்கெல்லாம் பதிலாக அவருக்குக் கிடைக்கும் பரிசு, அவருக்கு கிடைக்கும் பெருமகிழ்ச்சி. அதிகாரமே! அவரிடமிருந்துதான் அமைச்சரவைகள் (Cabinets) தங்களுடைய ஆற்றலையும், அரசியல் கட்சிகள் தங்களுடைய ஒருமைப்பாட்டையும் பெற்றுக் கொள்கின்றன.' [1]

நான்காவது கேள்விக்கான விடை, நிர்வாகியிடமிருந்துதான் (administrator) கிடைக்கவேண்டும். நிலைமைகளுக்கு ஏற்ற அமைப்புகளை உருவாக்குவது, இதனை இதனால் இவன் முடிக்கும்

என்று ஆராய்ந்து அதனை அவன்கண் விடுவது, வேலைகளை நிறை வேற்றுவதற்கான திட்டம் வகுப்பது, பொருத்தமான சமயங்களில் பொருத்தமான இடங்களில் பொருத்தமான அளவில் செல் வாக்கைப் பயன்படுத்துவது ஆகியவை, நிர்வாகியின் சிறப்பான இயல்புகள் ஆகும். அவருடைய சிறப்பியல்பு திறமையை மிகுவிப்பது என்னும் குறிக்கோளை நோக்கியே இடையீடின்றிச் செயல்படுகிறது.

பொது நிதிபற்றிக் கேட்கப்படுகிற கேள்விகளுக்குப் பொருத்த மான விடைகள் தரப்பட வேண்டுமானால், மேலே சுட்டிக் காட்டப் பட்ட நுண்ணறிஞர்களின் சிறப்பான தகுதிகளும் திறமைகளும் தேவைப்படுகின்றன. மேலே தரப்பட்ட கேள்விகளில் பலவற்றிற்கு இந்த நுண்ணறிஞர்கள், ஒருவருடைய துணையை மற்றொருவர் பெறாமலே, தனித்தனியாகவே விடை கூறிவிட முடியும். ஆனால் ' நமக்கு அது தேவையா ?', ' அதனை மேற்கொள்வதற்கான ஆற்றல் நமக்கு இருக்கிறதா ? ' என்னும் இறுதிக் கேள்விகளுக்கு விடை அளிக்க வேண்டுமானால், பலவகைப்பட்ட நுண்ணறிஞர்களின் ஆராய்ச்சிகள்—கருத்துகள்—ஆகியவற்றின் விளைவாகக் கிடைக்கும் முடிவுகளை ஒருங்கே இணைத்தாகவேண்டும்.

பொது நிதியின் பொருளாதார தன்மைகளைப்பற்றிய பகுத் தாய்வே, இந்த நூலின் தலையாய நோக்கம். அவ்வப்பொழுது பொருளாதார மாறுதல்கள் ஏற்படுவதைத் தடுக்கும் அரசியல் வரையறைகள் (political limitations) சுட்டிக்காட்டப்பட்டிருக் கின்றன. அந்த மாறுதல்கள் நடைமுறையில் எந்த அளவு கையாளப்படக்கூடியவை என்பது சுருங்கிய முறையில் ஆராயப் பட்டிருக்கின்றன. ஆனால் இந்தப் புறனடைகளை விட்டுவிட்டு, மொத்தமாகப் பார்க்கும்போது, இந் நூலில் ஒரு பொருளாதார வாதியின் கண்ணோட்டத்தோடுதான் முடிவுகள் கொடுக்கப் பட்டுள்ளன. பொது நிதியின் பல்வேறு பகுதிகளில், எழுகிற கேள்விகள் அடிப்படையில் பொருளாதாரக் கேள்வி களாகவே இருப்பதால், பொருளாதாரவாதியின் கண்ணோட்டமே தலைசிறந்ததாக கருதப்படவேண்டும். அவருடைய கண்ணோட்டம் தலையாய அதிகாரம் படைத்தவையாகக் கருதப்படாத வேறு சில பகுதிகளில், 'ஏறத்தாழப் பொருத்தமானவை' என்னும் முறையில் முடிவுகள் தரப்பட்டுள்ளன. இம் முடிவுகள், ஏனைய துறைகளைச் சார்ந்த நுண்ணறிஞர்களால் தேவையான அளவுக்குத் திருத்தி அமைக்கப்படுவதற்கு உரியவை.

**முறை (Method) :** பொது நிதியின் பொருளாதாரம்பற்றிய கருத்தாய்வுக்கு இரண்டுவகைப்பட்ட முறைகள் தேவைப்படு

கின்றன. ஒன்று நிறுவன முறை (institutional method), மற்றொன்று பகுத்தாய்வு முறை (analytical method). அரசாங்க நிறுவனங்கள் வாயிலாகவும் பொருளாதார நிறுவனங்கள்மூலமாகவுமே பொது நிதியின் நடவடிக்கைகள் நிகழ்வதால், அந் நிறுவனங்கள்பற்றிய ஒரு வர்ணனை பொது நிதிபற்றிய ஆய்வுக்கு அடிப்படையாகும். பொருத்தமான நிதிக் கொள்கையானது, அரசாங்க அமைப்பு முறையால், அந்த அமைப்பு முறைக்கு உட்பட்ட வகையில், பல்வேறு பொருளாதார நிறுவனங்கள்மூலமாகவே நிர்வாகம் செய்யப்படுகிறது. தற்போதுள்ள சட்டங்களும், அரசாங்க அமைப்புகளும் பொருளாதார நிறுவனங்களும், நம்முடைய பகுத்தாய்வைத் தொடங்குவதற்கான கருப்பொருள்களாக விளங்குகின்றன என்பது மட்டுமல்ல, மாறுதல்கள் ஏற்படுவதை எதிர்க்கும் போக்கு (விரும்பப்படுவதாயினும் அல்ல ஆயினும்) இந்த நிறுவனங்களில் இயல்பாகவே அமைந்திருக்கிறது என்பதையும் அறிந்து கொண்டால்தான், எத்தகைய நிதிக் கொள்கைகளை நடைமுறையில் கையாளமுடியும் என்பதை நம்மால் சரிவர உணரமுடியும்.

பொருளாதாரப் பகுத்தாய்வின் நுட்ப வினைமுறைகளைப் (techniques of economic analysis) பொது நிதியில் பயன்படுத்துவதே, பகுத்தாய்வு முறையாகும் (analytical method). பொருளாதாரப் பகுத்தாய்வின் நுட்ப வினைமுறைகள் என்பவை, காரணங்களையும் அவற்றின் விளைவுகளையும் தொடர்புபடுத்தும் வினைமுறைகளே ஆகும்; அதாவது பொருளாதாரம் தற்போது இயங்குகிற முறைப்படி அல்லது இயங்கவேண்டிய முறைப்படி அதை இயக்குவதற்காக ஒன்றாக இணைந்து பணியாற்றுகிற பல்வேறு சக்திகளைத் தனித்தனியே பிரித்தெடுத்து, ஒவ்வொன்றின் மதிப்பைக் கண்டறிகிற வினைமுறைகளே ஆகும். ஆகவே, நாம், பொது நிதி இயலின் கருத்தாய்வுகளில், பொருளாதாரக் 'கோட்பாட்டை' (economic theory) அதிகமான அளவில் பயன்படுத்துவது இயற்கையே ஆகும். இந்தப் புத்தகத்தில் கருத்தாய்வு செய்யப்பட்டுள்ள சிக்கல்களின் கோட்பாட்டுத் தன்மைகளைப் (theoretical aspects) புரிந்துகொள்வதற்குப் பொருளாதாரக் கோட்பாடு அல்லது பகுத்தாய்வைப்பற்றிய மிக விரிவான அறிவு இருந்தாகவேண்டிய தேவையில்லை. என்ற போதிலும், இந்நூலைப் படிப்பவர்கள், பொருளாதாரக் கோட்பாட்டைப்பற்றி ஓரளவுக்கு ஏற்கெனவே அறிந்திருப்பார்கள் என்று நம்புகிறோம்.

**அரசாங்க நிதியும் தனியார் வாணிப நிதியும் (Government Finance and Business Finance)**

தனியார் வாணிபத்தின் பண நடவடிக்கைகளுக்கும், அரசாங்கத்தின் நிதி நடவடிக்கைகளுக்கும் இடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் யாவை? அரசாங்கமானது, அதனுல் விரும்பப்படுகிற செலவுகளின் அளவுக்கு ஏற்ப அதன் வருமானத்தை அமைத்துக் கொள்கிறது; ஆனுல் தனியார் வாணிபமோ, அதனுடைய வருமானத்திற்கு ஏற்ப செலவை அமைத்துக்கொள்ளவேண்டியிருக்கிறது. ஆகவே, அரசாங்கமும் தனியார் வாணிபமும் அடிப்படையிலேயே ஒன்றிற்கு ஒன்று வேறுபட்டவையாக உள்ளன என்று சில சமயங்களில் சொல்லப்படுகிறது. அரசாங்கத்தின் வரி விதிக்கும் அதிகாரத்தில் இருக்கும் வலுக்கட்டாய இயல்பு தனியார் வாணிபத்திற்கு இல்லை என்ற நிலை இருப்பதால் மேலே சொல்லப்பட்ட வேறுபாடு உண்மையானதாக இல்லை. அரசாங்கம், தனியார் வாணிபம் ஆகிய இருசாராரும், (நுகர்வோருங்கூட) அவர்கள் செய்யவேண்டும் என்று விரும்புவதைச் செய்து முடிப்பதற்குத் தேவையான அளவில் அவர்களுடைய நடப்பு வருவாய்கள் இல்லாதபோது கடன் வாங்குகிருர்கள். அரசாங்கத்தின் வருமானத்தை எளிதில் உயர்த்தமுடியும்; ஆனுல், தனியார் வாணிபத்தின் வருமானத்தை அதுபோல உயர்த்தமுடியாது என்று கூறுவது பொருந்தாது. தனியாரின் வாணிபங்களும், பல சமயங்களில், முதலில் தங்கள் செலவை உயர்த்துவதன்மூலம் பின்னர் தங்கள் வருமானத்தை உயர்த்திக்கொள்கின்றன. அவற்றின் செலவுக்கும் வருமானத்திற்கும் உள்ள இடைவெளியை, அவை கடன் வாங்குவதன்மூலம் நிறைக்கப்படுகிறது. அரசாங்கமும், வரி வருவாய்களை எதிர்பார்த்துக் கடன் வாங்குகிறது; அது கடன் வாங்குவது நாட்டின் வருமானத்தை உயர்த்துவதற்கான செலவைச் செய்வதற்காகத்தான். அவ்வாறு உயரும் நாட்டின் வருமானத்திலிருந்து கூடுதலான வரி வருவாய்கள் கிடைக்கின்றன. அதே சமயத்தில் வரி வருவாய்களின் அளவையும், கடனை எந்த அளவு நிர்வாகம் செய்யமுடியும் என்பதையும் எண்ணிப் பார்த்து, அவற்றிற்கு ஏற்ற முறையில், அரசாங்கம், தன்னுடைய செலவின் அளவைக் கட்டுப்படுத்திக்கொள்கிறது.

ஆனுல், அரசாங்கத்திற்கும் தனியார் வாணிபத்திற்குமிடையே, அவற்றின் நிதி நடவடிக்கைகளைப் பொறுத்தவரையில் வேறுபாடுகள் இருக்கின்றன. தனியார் வாணிபமானது, ஒரு செலவு ஏற்கப்படத் தக்கதா அல்லவா என்பதை, அந்தச் செலவால் வாணிபத்திற்கு எந்த அளவு வருவாய் கிடைக்கும் என்பதைமட்டுமே எண்ணிப் பார்த்து முடிவு செய்கிறது. இதற்கு மாருக, அரசாங்கம்

பொது நலனைப் பெருக்குவதற்காகச் செலவு செய்கிறது. ஆகவே, அந்தச் செலவிலிருந்து அது நேர்முக வருவாய் எதையும் எதிர் பார்ப்பதில்லை. பொருளாதாரத்தைப் பலப்படுத்துவதற்காகவும் தனியார் வாணிபத்தின் செழுமையை அதிகப்படுத்துவதற்காக வும் அரசாங்கம் செலவு செய்தபோதிலும், அந்தச் செலவின் விளைவாக நாட்டின் வருமானத்தில் ஏற்படும் உயர்வைத் தனியாட்க ளிடமிருந்து வரி விதிப்பின்மூலமாக எடுத்துக்கொள்ள அரசாங் கம் முடிவு செய்தாலொழிய, அந்த உயர்வு அரசாங்கத்திற்குக் கிடைப்பதில்லை. பொதுப்படையான தன்மையுடைய மேம்பாட் டுத் திட்டங்களுக்கும், பண இலாபத்தை அளிக்கக்கூடியனவா என்பது ஐயத்திற்கு இடமாக உள்ள—அல்லது, நீண்ட காலத் திற்குப் பிறகே இலாபத்தை அளிக்கக்கூடிய நடவடிக்கைகளுக்கும் செலவழிக்கக்கூடிய நிலையில் அரசாங்கம் இருக்கிறது. இவ்வாறாகச் செலவுகளைச் செய்வதில் அரசாங்கத்திற்கு உள்ள நோக்கங்களும் குறிக்கோள்களும், தனியார் வாணிபத்தின் நோக்கங்களிலிருந்து மாறுபட்டனவாக இருக்கின்றன.

அரசாங்கம், தனியார் வாணிபம் ஆகியவற்றின் வலுக்கட்டாய அதிகாரம் (coercive power) வெவ்வேறு அளவுகள் உடையதாக இருப்பது அவ் விரண்டிற்கும் உள்ள மற்றொரு வேறுபாடு ஆகும். பெரும்பாலும் மக்களின் அரசாங்கம் நடைபெறும் இடங்களில், அரசாங்கக் கொள்கையானது, தனியாரின் வாணிபக் கொள்கையை விடக் கூடுதலான ஜனநாயக முறையில் முடிவு செய்யப்படு கிறது. ஆனால், முடிவு செய்யப்பட்ட பிறகு, வரிகள் வலுக்கட்டாய இயல்பு உடையனவாகவே இருக்கின்றன. ஏனென்றால், வரிகளைச் செலுத்தாமல் இருக்கவேண்டுமானால், குடிமக்கள், வரி விதிக்கப் படக்கூடிய வருமானத்தைப் பெறாமல் இருக்கவேண்டும்; வரி விதிக்கப்பட்ட பொருள்களை வாங்காமல் இருக்கவேண்டும்; இறப் பதற்குமுன்பு பெரும் சொத்துகளைச் சேர்த்துவைக்காமல் இருக்க வேண்டும்; அல்லது சொத்துடைமை இல்லாதவர்களாக இருக்க வேண்டும். ஆனால், இப்படியெல்லாம் இருப்பது, பொதுவாக இயலக்கூடியதல்ல. ஒரு பொது விற்பனை வரியைத் தவிர்ப்பதற்கு உள்ள ஒரே வழி, பொருள்களை வாங்காமல் இருப்பதே. ஆகவே, வரிகளில் வலுக்கட்டாய இயல்பு பொதிந்திருப்பது தெளிவாகத் தெரிகிற ஓர் உண்மை. அதே சமயத்தில், தனியார் வாணிபத்தில் முற்றுரிமை (monopoly) ஏற்பட்டு, பயனுள்ள பொருள்களின் தரங்களிலும் விலைகளிலும் தங்களுக்கு விருப்பமானவற்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் வாய்ப்பு நுகர்வோரிடமிருந்து அகற் றப்பட்டுவிடுமானால், தனியார் வாணிபத்திலும் வலுக்கட்டாய இயல்பு ஏற்பட்டுவிடுகிறது. மனித வாழ்க்கையில் தவறாமல் நிகழ்

பவை, மரணமும் வரிகளுந்தான் என்று பெஞ்சமின் ஃபிராங்க்லின் (Benjamin Franklin) தெரிவித்துள்ள கருத்து, நிதி அதிகாரத்தின் வலுக்கட்டாயத் தன்மையைத் தெளிவாக விளக்குகிறது. அரசாங்கம் வலுக்கட்டாய அதிகாரத்தைப் பெற்றிருப்பதால், நிதிக் கொள்கையை வகுப்பதில் அது மிகுந்த பொறுப்புணர்ச்சியுடன் நடந்து கொள்ளவேண்டி யிருக்கிறது. வலுக்கட்டாய அதிகா ரம் சமுதாயத்தின் பொது நன்மையை மிகுவிப்பதாக இருந்தால்தான் அரசாங்கம் அந்த அதிகாரத்தைப் பெற்றிருப்பது நியாயம் என்று ஏற்படும்.

ஒரு குறிப்பிட்ட தனியார் வாணிபத்திலிருந்து கிடைக்கும் வருமானத்தைவிட அரசாங்கத்திற்குக் கிடைக்கக்கூடிய வருமானத்தின் அளவு மிக விரிவாக இருக்கிறது என்பதும், ஒரு செலவு விரும்பத்தக்கதா என்பதை முடிவு செய்யும்போது அரசாங்கம் நீண்டகாலக் கண்ணோட்டத்தையும் விரிவான கண்ணோட்டத்தையும் கொள்கிறது என்பதும், ஒரு செலவின் விளைவாக நேர்முகமான பண வருவாய் ஏற்படாமல் இருப்பதைப்பற்றி அரசாங்கம் கவலைப் படாமல் இருக்கமுடியும் என்பதும், அரசாங்கத்தின் விதிகள் (rules) தனியார் வாணிபத்தின் விதிகளைவிடக் கூடுதலான வலுக்கட்டாயத் தன்மை உடையவை என்பதும் உண்மையே என்றாலும், அரசாங்கமும் தனியார் வாணிபமும் ஒரே பொருளாதாரத்தில் தான் தங்கள் நடவடிக்கைகளை மேற்கொள்கின்றன. அரசாங்கம், பொது வருமான ஓட்டத்திலிருந்துதான் (general income stream) வரிகளை எடுத்துக்கொள்கின்றது. அது தன் நிதிகளைச் செலவழிக்கும்போது, அந் நிதிகள், அந்தப் பொது வருமான ஓட்டத்தில்தான் சேர்ந்துவிடுகின்றன. தனியார் வாணிபம் எந்த மூலங்களிலிருந்து (sources) கடன் வாங்குகிறதோ அதே மூலங்களிலிருந்து தான் அரசாங்கமும் தன் கடன்களைப் பெறுகிறது. தனக்குத் தேவையான பல பொருள்களை அரசாங்கம் தனியார் நிறுவனங்களிலிருந்து பெற்றுக் கொள்கிறது. நிதிக் கொள்கையின் வெற்றியும் தோல்வியும், தனியார் பொருளாதாரத்தில் அந்தக் கொள்கையால் ஏற்படும் விளைவுகளையே பொறுத்திருக்கின்றது. அரசாங்கத்தைப் பொருளாதாரத்திற்கு வெளியே வளர்ந்துள்ள ஒரு விசித்திரமான அமைப்பு என்று கருதுவதைவிட, பொருளாதாரத்தின் ஒரு பகுதியாகக் கருதுவதே நிதிக்கொள்கையைச் சிறந்த முறையில் வகுப்பதற்குரிய வழியாகும்.

### ஐக்கிய அமெரிக்காவின் அரசாங்க அமைப்பு

ஐக்கிய அமெரிக்காவின் அரசாங்க அலகுகள் (Governmenta units) மிகப் பலவாக இருக்கின்றன என்பது, அந் நாட்டின் பொது

நிதியோடு பலவகைகளிலும் தொடர்புடைய ஓர் அடிப்படை உண்மையாகும். ஓர் அமெரிக்கக் குடிமகன் பல்வேறு அடுக்குகளில் அமைந்த பல்வேறு அரசாங்கங்களின் செலவுத் திட்டங்களாலும், வருவாயை எழுப்பும் திட்டங்களாலும் பாதிக்கப்படுகிறார். ஏனென்றால், அவர் ஓர் அமெரிக்கக் குடிமகனாக இருக்கவேண்டுமானால், அவர் ஐக்கிய அமெரிக்க அரசாங்கத்தால் (கூட்டரசாங்கத்தால்) மட்டுமன்று, ஒரு மாநில அரசாங்கத்தாலும், அந்த மாநிலத்தின் ஒரு தலப் பகுதியின் அரசாங்கத்தாலும் ஆளப்படுபவராக இருப்பது தவிர்க்கமுடியாதது.[8] ஆகவே, ஐக்கிய அமெரிக்காவில் அரசாங்கம் என்னும் சொல், கூட்டரசாங்கம், மாநில அரசாங்கம், தல அரசாங்கம் ஆகிய மூன்றையும் உள்ளடக்கிய ஒன்றாகும். 'தல அரசாங்கம்' என்னும் பிரிவில், கோட்ட அரசாங்கம் (county government), பேரூர் அரசாங்கம் (township government), நகராட்சி அரசாங்கம் (municipal government) ஆகியவை அடங்கும். நிர்வாக வசதி அல்லது நிதி வசதியை முன்னிட்டு, நகராட்சி அரசாங்கமானது, பள்ளிக்கூட மாவட்டங்கள், நெருப்பு மாவட்டங்கள், வடிகால் மாவட்டங்கள் முதலிய பல்வேறு தனி மாவட்டங்களாகப் (special districts) பிரித்து அமைக்கப்படலாம். ஒரு குறிப்பிட்ட வட்டாரத்திற்குமட்டுமே தொடர்புடைய பணிகளையும் மேம்பாட்டுத் திட்டங்களையும் நிறைவேற்றுவதற்காகவே இத்தகைய துணைப் பிரிவுகள் நிறுவப்படுகின்றன. சில பகுதிகளில் தல அரசாங்க அலகுகளின் எண்ணிக்கை வியக்கத்தக்க அளவில் பெருகியிருக்கிறது. ஐக்கிய அமெரிக்காவில், 1957-ல், சுயேச்சையான அரசாங்கங்கள் என்று அழைக்கப்படுவதற்குத் தேவையான அளவு தன்னாட்சியுரிமை (autonomy) படைத்த 102,353 அரசாங்க அலகுகள் இருந்தன என்று சென்சஸ் பீரோ (The Bureau of the Census) கணக்கிட்டிருக்கிறது. அரசாங்க அலகுகளின் இந்த மொத்த எண்ணிக்கை, பல்வேறு அரசாங்கங்களிடையே பின்வருமாறு பிரிந்து அமைந்திருக்கிறது:[9]

| | |
|---|---|
| கூட்டரசாங்கம் ... ... ... ... | 1 |
| மாநில அரசாங்கங்கள்... ... ... ... | 48 |
| கோட்ட அரசாங்கங்கள் (county governments) ... | 3,047 |
| பேரூர் அரசாங்கங்கள் (township governments) ... | 17,214 |
| நகராட்சி மாவட்டங்கள் ... ... ... | 17,167 |
| பள்ளிக்கூட மாவட்டங்கள் (school districts) ... | 50,463 |
| ஏனைய தனி மாவட்டங்கள்(other special districts) ... | 14,423 |

பல்வேறு மாநிலங்களில் உள்ள அரசாங்க அலகுகளின் எண்ணிக்கை, பள்ளிக்கூட மாவட்டங்களை நிர்வாகம் செய்கிற கழகங்களுக்கு (Boards) அளிக்கப்பட்டுள்ள தலத் தன்னாட்சி யுரிமையின் (local autonomy) அளவைப் பொறுத்திருக்கிறது. தன்னாட்சியுரிமை படைத்த பள்ளிக்கூட மாவட்டங்களைப் பெற்றுள்ள நெப்ராஸ்கா (Nebraska), 6,659 அரசாங்க அலகுகளைப் பெற்றிருக்கிறது. ஆனால், அத்தகைய மாவட்டங்களைப் பெற்றிராத ரோட் தீவு (Rhode Island), 91 அரசாங்க அலகுகளையே பெற்றிருக்கிறது. அரசாங்கங்கள் ஒன்றன்மீது ஒன்றாக அடுக்கடுக்காக அமைந்திருப்பது பல்வேறு அரசாங்கங்களுக்கிடையே உள்ள உறவுகளில் சிக்கலான நிலைமை, பல்வேறு அரசாங்கங்களின் நிர்வாக ஆட்சி வரம்புகள் ஒன்றன்மேல் ஒன்றாகப் படிந்துவிடும் நிலைமை (overlapping of administrative jurisdictions), அதிகாரம் பல கூறுகளாகப் பிரிந்துவிடும் நிலைமை, சராசரிக் குடிமகனால் தன்னுடைய பொறுப்பை அறிவுக்கு ஒத்த முறையில் நிறைவேற்றமுடியாத நிலைமை ஆகியவற்றை ஏற்படுத்தி விடுகின்றது.

ஐக்கிய அமெரிக்காவில் ஒருவகை அரசாங்கத்திற்கும் மற்றொருவகை அரசாங்கத்திற்கும் உள்ள உறவை, பொதுப் படையான முறையிலாவது அறிந்துகொள்வது, பொது நிதி இயலின் மாணவர்கட்கு நலம் பயப்பதாகும். இந்த உறவைப் பற்றி அறிந்துகொள்வது, (1) பல்வேறு அரசாங்க நிலைகளில் நிறைவேற்றப்படவேண்டிய பணிகளின் வகைகளைப்பற்றிய கோட்பாடுகளை உருவாக்குவதற்கும், (2) நிதிக் குறிக்கோள்கள் அரசியல் நடைமுறை உண்மைகளுக்கு ஏற்றனவாக இல்லாமல் இருக்கக்கூடும் என்பதை மாணவர்க்கு நினைவுபடுத்துவதற்கும் பயன்படக் கூடியதாகும்.

**கூட்டரசாங்கத்தின் அதிகாரங்களும், மாநில அரசாங்கங்களின் அதிகாரங்களும் (Powers of Federal and State Governments):**[10] ஒரு ஜனநாயக சமுதாயத்தில் இறுதி அதிகாரம் குடிமகனிடமே அடங்கியிருக்கிறது. 'அரசாங்கங்கள், தங்களுடைய நியாயமான அதிகாரங்களை அரசாளப்படுபவர்களின் ஒப்புதலிலிருந்தே பெறுகின்றன.' இவ்வாறாக ஒரு ஜனநாயக அமைப்பில், இறுதி அதிகாரம் மக்களிடமே அடங்கியிருக்கிறது என்னும் பொருளில், 'இறைமை' (sovereignty) என்பது அவர்களிடமே பொதிந்திருக்கிறது என்றபோதிலும், 'ஓர் இறைமைத் தன்மையுள்ள அரசாங்கம்' (a sovereign government)

மிக உயர்ந்த ஆட்சி அதிகாரத்தை உடைய அரசாங்கம் என்றும், மற்றோர் அரசாங்கத்தின் கட்டுப்பாட்டுக்கோ அதிகாரத்துக்கோ அடங்காதது என்றும் பேசுவதில் தவறு இல்லை. இறைமைத் தன்மையுள்ள ஓர் அரசாங்கம், குடிமக்களால் வழங்கப்பட்டுள்ள அதிகார எல்லைகளுக்கு உட்பட்ட முறையில், அதனுடைய நடவடிக்கைகளை அதுவே முடிவு செய்துகொள்கிற முழு உரிமையும் உடையதாக இருக்கிறது. ஆனால், அதனுடைய நடவடிக்கைகளை, சட்டத்தின்மூலமாக அல்லது ஒப்பந்தத்தின்மூலமாக ஓர் அளவுக்குக் கட்டுப்படுத்திக்கொள்ள அதுவாக முன்வரக்கூடும்.[11]

ஐக்கிய அமெரிக்காவில், ஒவ்வொரு குடிமகனும், கூட்டரசாங்கம், மாநில அரசாங்கம் ஆகிய இரண்டு இறைமைத் தன்மையுள்ள அரசாங்கங்களின் கீழ் வாழ்கிறான். ஒவ்வோர் அரசாங்கமும் எந்தெந்தத் துறைகளில் இறைமைத் தன்மை உடையதாக இருக்கிறது என்பது, ஐக்கிய அமெரிக்காவின் அரசியல் அமைப்பில் தெளிவாக அறிவிக்கப்பட்டிருக்கிறது; அல்லது அதிலிருந்து உய்த்து உணரக்கூடியதாக (implied) இருக்கிறது. ஆனால், கோட்டம், பேரூர், நகரம் அல்லது சிற்றூர், தனி மாவட்டங்கள் ஆகிய தல அரசாங்கங்கள், எந்தப் பொருளிலும் இறைமைத் தன்மை உடையவை அல்ல; அவை யாவும், மாநில அரசாங்கத்தால் அல்லது மாநில அரசாங்கத்தின் அதிகாரத்தின்கீழ்ப் படைக்கப்பட்ட மாநில அரசாங்கத்தின் துணைப்பிரிவுகளே ஆகும். மாநில அரசாங்கத்தால் அவற்றிற்கு அளிக்கப்பட்ட அதிகாரங்களையே அவை கையாள முடியும். தல அரசாங்கங்களால் செய்யப்படும் செயல்கள் யாவும் மாநில அரசாங்கத்தால் அளிக்கப்பட்ட அதிகாரத்தைக் கொண்டே செய்யப்படுவதால் [இந்த அதிகாரம், தல அரசாங்க உரிமைப் பத்திரத்தால் (Charter) அல்லது மாநிலச் சட்டமன்றச் சட்டங்களால் (Statute laws) அளிக்கப்படுகிறது], அதிகார முரண்பாடுகள் பற்றிய கேள்விகள், கூட்டரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கங்கட்கும் இடையேதான் எழுகின்றன.

கூட்டரசாங்கம், மாநில அரசாங்கங்கள் ஆகியவற்றின் அதிகார வரம்புக்கு உட்பட்ட பகுதிகள் எவை எவை என்பதை, ஐக்கிய அமெரிக்காவின் அரசியல் அமைப்பு (The Constitution of the United States)—அதாவது இந்த நாட்டின் தலைசிறந்த சட்டம் பெரும்பாலும் வெளிப்படையாக வரையறுத்தும், சில சமயங்களில் உய்த்து உணரக்கூடிய வகையிலும் தெரிவித்திருக்கிறது. சில உரிமைகளையும் (rights), அதிகாரங்களையும் (powers) மக்களுக் கென்றே ஒதுக்கி வைப்பதன்மூலம் கூட்டரசாங்கம், மாநில அரசாங்கங்கள் ஆகிய இருவகை அரசாங்கங்கட்கும் அவற்றைத்

கிடைக்காதபடி செய்துவிட்ட அரசியலமைப்பு, ஏனைய அதிகாரங்களைப் பொறுத்தவரை, இன்னின்ன அதிகாரங்கள் கூட்டரசாங்கத்திற்கு உரியவை என்பதை எடுத்துக்காட்டிவிட்டு, எஞ்சிய அதிகாரங்கள் யாவற்றையும் மாநில அரசாங்கங்கட்கு ஒதுக்கி வைத்திருக்கிறது. ஹேபியஸ் கார்பஸ் உரிமையை (தடைப் படுத்தப்பட்டதாகக் கூறப்படும் ஆளைக் கொணர நீதிமன்றம் கட்டளையிடவேண்டுமென்று கோரும் உரிமையை) நிறுத்தி வைத்தல், ஒரு நிகழ்ச்சி நடந்த பிறகு அதற்குரிய சட்டத்தை நிறைவேற்றுதல் (ex post facto legislation), பொறுப்பற்ற முறையில் அரசத் துரோகக் குற்றம் சாட்டுதல், சமய உரிமை — பேச்சுரிமை — கூட்டம் கூடும் உரிமை—அச்சிடும் உரிமை ஆகியவற்றைக் குறைத்தல், நியாயமற்ற முறையில் சோதனையிடுதலும் கைப்பற்றுதலும் (search and seizure), பொருத்தமான சட்டமுறைப்படி அல்லாமல் உயிர், சுதந்திரம் அல்லது சொத்தை ஒருவரிடமிருந்து பறித்துக் கொள்ளுதல், நீதிமன்றங்களின் முன்னுல் போதுமான வாய்ப்பை அல்லது பிரதிநிதித்துவத்தைப் பெறமுடியாமல் செய்தல், இனம்—நிறம்—அல்லது முந்திய அடிமைநிலை ஆகிய காரணங்களை முன்னிட்டு வாக்களிக்கும் உரிமையை மறுத்தல் ஆகியவற்றிலிருந்து குடிமக்களுக்கு அளிக்கப்பட்டுள்ள அடிப்படைப் பாதுகாப்புகள், அவர்களுக்கு அரசியல் திட்டத்தால் அளிக்கப்பட்டுள்ள உரிமைகளில் சில ஆகும். இந்தப் பட்டியலில், குடிமக்களுக்கு அரசியல் திட்டத்தால் தரப்பட்டுள்ள எல்லா உரிமைகளும் அடங்கியில்லை. ஆனுல், இந்தப் பட்டியல், குடிமக்களின் எந்தெந்தத் துறைகளில், எந்த மட்டத்தில் உள்ள அரசாங்கத்தாலும் தலையிட முடியாத நிலை சட்டப்படி ஏற்பட்டிருக்கிறது என்பதை எடுத்துக் காட்டுகிறது.

கூட்டரசாங்கத்தின் அதிகாரங்களில் ஒரு பகுதி அந்த அரசாங்கத்திற்கென்றே தெளிவான முறையில் தரப்பட்டிருக்கின்றது. மற்ரெரு பகுதி அவற்றைப் பயன்படுத்துவதிலிருந்து மாநில அரசாங்கங்கள் தடுக்கப்பட்டிருப்பதால் தரப்பட்டிருக்கின்றது. கூட்டரசாங்கத்திற்கென்று குறிப்பிட்டுத் தரப்பட்டுள்ள அதிகாரங்கள், பொது நிதி இயலின் பகுத்தாய்வுக்குப் பெரிதும் தொடர்புடையன ஆகும். அந்த அதிகாரங்கள் பின்வருமாறு :

1. ஐக்கிய அமெரிக்கா முழுவதிலும் ஒரேவகையான முறையில் வரிகளை விதித்தலும் தண்டலும் ; ஐக்கிய அமெரிக்காவின் கடன்களைச் செலுத்துதல் ; ஐக்கிய அமெரிக்காவின் பொதுப் பாதுகாப்புக்கும் பொது நலனுக்கும் வழிவகுத்தல்.

2. அயல் நாடுகளோடும், ஐக்கிய அமெரிக்காவின் பல்வேறு மாநிலங்களுக்கு இடையேயும் நடைபெறும் வாணிபத்தை ஒழுங்குபடுத்தல்.

3. பணத்தை அச்சிடுதலும், அதன் மதிப்பை ஒழுங்கு படுத்தலும்.

4. அஞ்சல் அலுவலகங்களையும் (Post Offices), அஞ்சல் சாலைகளையும் (Post roads) நிறுவுதல்.

5. தரைப்படையையும் கடற்படையையும் உருவாக்குதல்; ஆதரித்தல்; ஒழுங்குபடுத்தல்.

6. மாநிலங்களுக்கிடையே ஏற்படுகிற பிணக்குகளில் தீர்ப்புக் கூறுதல் (adjudication).

கூட்டரசாங்கத்தால் இந்தப் பணிகள் நிறைவேற்றப் படுவதைக் கெடுக்கும் வகையில் அல்லது அவற்றில் தலையிடும் முறையில் மாநில அரசாங்கங்கள் எத்தகைய நடவடிக்கையையும் மேற்கொள்வது கூடாது என்பது திட்டவட்டமாகத் தெரிவிக்கப் பட்டிருக்கிறது.

திருத்தப்பட்ட அரசியல் அமைப்பின் பத்தாவது விதி (Article) பின்வருமாறு தெரிவிக்கிறது:

'அரசியல் அமைப்பால், ஐக்கிய அமெரிக்காவுக்கென்று ஒதுக் கப்படாமலும், மாநிலங்களால் பயன்படுத்தப்படக்கூடாதென்று தடுக்கப்படாமலும் உள்ள அதிகாரங்கள், குறிப்பிட்ட மாநிலங் களுக்கு அல்லது மக்களுக்கு ஒதுக்கப்பட்டவை' ஆகும். ஆகவே, நாம், பொதுமக்களுக்காக ஒதுக்கப்படாத அதிகாரங்களில், அயல் நாட்டு உறவுகள், அயல் நாட்டு வாணிபம், மாநிலங்களுக் கிடையே நடைபெறும் வாணிபம், பிற மாநிலங்களின் உரிமை கள், பிற மாநிலக் குடிமக்களின் உரிமைகள் ஆகியவற்றிற்கு மாநில அரசாங்கங்கள் தரும் மதிப்பு, நாடு முழுவதற்கும் ஒரே வகையான நாணய வகைகள்—எடைகள்—அளவுகள் (measures) —அஞ்சல்முறைகள் ஆகியவற்றை உருவாக்குதல் ஆகியவற்றைப் பாதிக்கும் பொருள்களைப் பொறுத்தவரை, கூட்டரசாங்கத்திற்கு அதிகாரம் உண்டு என்று கூறலாம். எஞ்சியுள்ள அதிகாரங்கள் மாநில அரசாங்கங்கட்கு உரியவை. இந்த அதிகாரங்கள், பல மாநிலங்களைப் பொறுத்த துறைகளிலும், பல நாடுகளைப் பொறுத்த துறைகளிலும் கூட்டரசாங்கத்திற்குத் தரப்பட்டுள்ள அதிகாரவரம்பில் தலையிடாதவரை, மாநில எல்லைக்கு உட்பட்ட

எல்லா விவகாரங்களிலும் மாநில அரசாங்கத்திற்கு அதிகாரம் அளிக்கும் தன்மையுடையவை.[12] கூட்டரசாங்க அதிகாரம் முடிந்து, மாநில அரசாங்க அதிகாரம் தொடங்குகிற எல்லைக்கோடு, தெளிவான ஒரு கோடாகவும் இல்லை; நிலையான ஒரு கோடாகவும் இல்லை. ஒரு குறிப்பிட்ட நேரத்தில் அந்த எல்லைக்கோடு எவ்வாறு இருக்கும் என்பது, குறிப்பிட்ட வழக்குகளில் நீதிமன்றங்கள் தருகிற உரை விளக்கத்தைப் (interpretation) பொறுத்திருக்கிறது. 'பல மாநிலங்களுக்கு இடையே நடைபெறும் வாணிபம்' என்னும் சொற்றொடருக்கு மேலும் மேலும் தாராளமான முறையில் உரைவிளக்கம் தருவதன் மூலமாகக் கூட்டரசாங்கத்தின் அதிகார எல்லைகளை விரிவுபடுத்து வதே, சென்ற அரை நூற்றாண்டின் போக்காக இருந்துவருகிறது.

ஐக்கிய அமெரிக்காவில் இவ்வாறு உள்ள இரட்டை அரசாங்கம் ஏற்படுத்தும் சிக்கல்கள், பொது நிதிபற்றிய கருத்தாய்வில் சிறப்பிடம் பெறத்தக்கவையாகும். ஒவ்வொரு குடிமகனும் தாங்க வேண்டியுள்ள வரிச்சுமையானது, கூட்டரசாங்க வரிகள், மாநில அரசாங்க வரிகள், தல அரசாங்க வரிகள் ஆகியவற்றின் கூட்டுத் தொகையாகும். ஒரு குறிப்பிட்ட மாநிலத்தில் வாழும் அமெரிக்கக் குடிமக்கள்மீது பேதம் காட்டும் தன்மைபடைத்த இரட்டிப்பு வரி விதிப்பு (discriminatory double taxation) ஏற்படுவதைத் தவிர்க்கக் கூட்டரசாங்கம் அல்லது மாநில அரசாங்கமே முன்வந்தாலொழிய, அவ்வாறு தவிர்ப்பது இயலாத செயலாகும். அதுபோலவே, பல்வேறு மாநிலங்களுக்கு இடையே வரிமுறைகளில் அல்லது வரிச் சுமைகளில் ஒருமைப்பாடு இருக்கவேண்டுமென்று அந்த மாநிலங்களின் அரசாங்கங்கள் தாமாக முன்வந்து முடிவுசெய்தாலொழிய, அத்தகைய ஒருமைப்பாட்டை ஏற்படுத்துவது இயலாத செயலே. நேர்முகமான சட்டமுறைகளின்மூலமாகக் கூட்டரசாங்க வரிமுறைகளையும், மாநில அரசாங்கத்தின் வரிமுறைகளையும் ஒருங்கிணைப்பதும் முடியாத செயலே. வாணிபச் சுழலின் இயக்கங்களை மாற்றியமைப்பதற்காகக் கூட்டரசாங்கத்தின் வரிக் கொள்கைகளுக்கும், செலவுக் கொள்கைகளுக்கும் ஏற்ற முறையில், மாநில அரசாங்கங்கள்—தல அரசாங்கங்கள் ஆகியவற்றின் வரிக் கொள்கைகளையும், செலவுக் கொள்கைகளையும் நேர்முகமான சட்டமுறைகளின்மூலமாக மாற்றியமைத்து ஒருங்கிணைப்பதும் இயலாத செயலே. பல்வேறு அரசாங்கங்களுக்கிடையே ஒருமைப்பாட்டை உருவாக்குவதற்கான அதிகாரம் இல்லாமலிருப்பதாலும் பல நன்மைகள் விளைகின்றன என்பது உண்மையே. மேலான நிலையில் உள்ள அதிகார அமைப்பு, எப்போதுமே மேலான அறிவுடையதாகத்தான் இருக்கும் என்று கூறமுடியாது. மையநிலைப்படுத்தப் பட்ட மிக மேலான அதிகார அமைப்பு இல்லாமலிருப்பதால்,

அறிவுக்குப் பொருந்தாத கொள்கை எல்லா இடங்களிலும் பொதுவாகக் கையாளப்படுகிற சாத்தியக்கூறு தவிர்க்கப்படுகிறது.

தன்னுடைய நிதித்துறை விருப்பத்தை அல்லது அறிவுடைமையை மாநிலங்கள்மீது சுமத்துவதற்குப் போதுமான சட்ட அதிகாரம் கூட்டரசாங்கத்திற்கு இல்லாமலிருந்தாலும், அந்த அரசாங்கத்தின் வரிவிதிக்கும் அதிகாரத்தாலும் கடன்வாங்கும் அதிகாரத்தாலும் அதற்குக் கிடைத்துள்ள மாபெரும் நிதிச்சாதனங்கள், அத்தகைய அதிகாரத்திற்குப் பதிலாக அதற்குக் கிடைத்துள்ள சிறந்த கருவிகளாகத் திகழ்ந்துவருகின்றன. கூட்டரசாங்கத்திடம் உள்ள உதவிக்கொடை(grant-in-aid) என்னும் கருவியானது, அந்த அரசாங்கத்திற்கு மாநில அரசாங்கங்கள்மீதுள்ள நடைமுறை அதிகாரத்தை ஏராளமான அளவில் பெருக்கியிருக்கிறது. மாநிலங்களில் நெடுஞ் சாலைகளை அமைப்பதற்காக நிபந்தனைகளோடு கூடிய நிதியுதவிகளைச் செய்வதன்மூலமாகக் கூட்டரசாங்கமானது, நடைமுறையில் மாநில அரசாங்கங்களில் தனியாக நெடுஞ்சாலைத் துறைகள் (Highway Departments) படைக்கப்படவேண்டும் என்றும், குறிப்பிட்ட சாலைகளையும் நெடுஞ்சாலைகளையும் அமைப்பதற்காகவும் பராமரிப்பதற்காகவும் மாநில அரசாங்கப் பணத்தின் ஒரு பகுதி நிதி ஒதுக்கம் (appropriation) செய்யப்படவேண்டும் என்றும், இன்னின்ன வட்டாரங்களிலும் இன்னின்ன வகைகளிலுமே சாலைகள் அமைக்கப்படவேண்டும் என்றும், குறிப்பிட்ட சில மாநில வருவாய்கள் நெடுஞ்சாலை அமைப்புக்காகவே ஒதுக்கிவைக்கப்படவேண்டும் என்றும் கட்டளையிட்டுவருகிறது என்று கூறலாம்.[13] 1935-ல் நிறைவேற்றப்பட்ட சமூகப் பாதுகாப்புச் சட்டத்தின்படி (Social Security Act) அமைந்த நிதிக்கொடைகளை, கூட்டரசாங்கமானது, வேலையின்மை இழப்பீடு (unemployment compensation), முதிய வயது உதவி (old age assistance), குழந்தை உடல்நலனும் நல்வாழ்வும் (child health and welfare), பொதுவாக மக்கள் உடல்நலன், தொழில்களின் மறுவசதி அமைப்பு, குருடர்களுக்கு உதவி ஆகிய திட்டங்கள் எல்லா மாநிலங்களிலும் ஒரே வகையாகக் கையாளப்படுவதற்கு ஏற்ற முறையில் மாநில அரசாங்கங்களை அவற்றிற்கு நிதி ஒதுக்கம் செய்யும்படி செய்வதற்கு ஒரு கருவியாகப் பயன்படுத்திக்கொண்டது.[14] தான் விதிக்கும் தரங்களுக்கு ஏற்ற முறையில் இத் திட்டங்களையெல்லாம் மாநில அரசாங்கங்கள் மேற்கொள்ளும்படி செய்வதற்கு, அரசியல் அமைப்பின்படி கூட்டரசாங்கத்திற்குச் சட்டப்படியான அதிகாரம் கிடையாது என்பது உண்மைதான். ஆனால், இத் திட்டங்களைக் கூட்டரசாங்கம் வகுத்துள்ள முறையில் நிறைவேற்றுகிற மாநில அரசாங்கங்கட்கு,

அவை இத் திட்டங்களுக்காகச் செலவிடும் அளவை ஒத்த தொகையைத் தான் உதவிக்கொடையாகத் தருவதாகக் கூட்டரசாங்கம் அறிவித்ததால், மாநில அரசாங்கங்கள் அந்த உதவிக் கொடையைப் பெறுவதற்காகத் தாங்களாகவே முன்வந்து இத் திட்டங்களை ஏற்றுக்கொள்ளலாயின. கூட்டரசாங்கம் இந்த முறையைக் கையாண்டதன் விளைவாக நாட்டிற்கு இந் நாள்வரை நன்மையே விளைந்திருக்கிறது என்பதை யாரும் மறுக்கமுடியாது. ஏனென்றால், இம் முறையின் பயனாக நாட்டிற்குத் தேவையான நற்செயல்கள் நன்முறையில் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன ; நெடுஞ்சாலைகளையும், பல நல்வாழ்வு நடவடிக்கைகளையும் (welfare activities) மாநில அரசாங்கங்கள் நிர்வாகம் செய்யும் தரமும் உயர்வடைந்திருக்கிறது.

ஒரு புதிய நடவடிக்கைக்கு உரிய ஒரு பழைய நடவடிக்கையை விரிவான அளவில் மேற்கொள்வதற்கு உரிய செலவில் ஒரு பகுதியைத் தான் ஏற்றுக்கொள்ள முன்வருவதன்மூலம், கூட்டரசாங்கமானது, மாநில அரசாங்கங்கள் தாமாகச் செய்ய முன் வராமல் இருக்கும் நடவடிக்கைகளை மேற்கொள்ளும்படி செய்ய முடியும் என்பது தெளிவாகத் தெரிகிறது. ஆனால், கூட்டரசாங்க நிதி அதிகாரத்தால் மாநில வரிமுறைகளின் தன்மையைப் பாதிக்கச் செய்ய முடியும் என்பது அவ்வளவு தெளிவாகத் தெரியவில்லை. ஆனால் கூட்டரசாங்க நிதி அதிகாரத்திற்கு அத்தகைய ஆற்றல் இருக்கிறது என்பது உண்மை. அந்த அதிகாரத்தைப் பயன் படுத்தியதன்மூலம் மாநில அரசாங்கங்கள் யாவும் ஒரே வகையான மரணவரியைக் கையாளும்படி செய்யப்பட்டதுஇதற்கு உரிய சிறந்த எடுத்துக்காட்டு ஆகும். 1924-க்கு முன்னர் பல்வேறு மாநிலங்கள் மரணவரியைப் பொறுத்த அளவில், வெவ்வேறு வகையான தனித் தனிக் கொள்கைகளைக் கையாண்டுவந்தன. சில மாநிலங்களில் மரணவரிகள் இல்லாததால், மனிதர்கள் இறப்பதற்கு மிக வசதி யான மாநிலங்கள் என்றுகூட அவை தங்களை விளம்பரப்படுத்திக் கொண்டன. ஆனால், கூட்டரசாங்கமானது அதனுடைய மரணவரி வீதங்களை உயர்த்தியதோடு, மாநில மரணவரியாகச் செலுத்தப் பட்ட தொகையைத் தனக்குச் செலுத்தப்படவேண்டிய மரண வரித் தொகையிலிருந்து கழித்துக்கொள்ளவும் அனுமதியளித்த போது, மரணவரியை விதிக்காமலிருந்த மாநிலம் அப்படி விதிக் காததால் பெற்றிருந்த கவர்ச்சியை இழந்துவிட்டது. அதோடு, கூட்டரசாங்கத்தால் கழித்துக்கொள்ள அனுமதியளிக்கப் பட்ட அளவுக்கு மாநில மரணவரியை விதிக்க அது முன்வரா விட்டால், வரி செலுத்துவோர் மீது கூடுதல் சுமையை ஏற்றாமலே அது பெறக்கூடிய வருவாயை அது இழக்கவேண்டியிருந்தது.

1924-ல் தொடங்கி இந் நாள்வரை தொடர்ந்து இருந்துவருகிற கூட்டரசாங்க மரணவரிக் கொள்கையின் விளைவாக, எல்லா மாநிலங்களாலும் விதிக்கப்படும் மரணவரியின் அமைப்பும், வீதங் களின் கடுமையும் ஒரே வகையானவையாக அமைந்துவிட்டன. மரணவரிபற்றிய இந்த விவகாரத்தில் கூட்டரசாங்க வரிவிதிப்பு அதிகாரமானது முற்றிலும் சட்டமுறைப்படியே பயன்படுத்தப் பட்டிருக்கிறது. ஆனால், அப்படி பயன்படுத்தப்பட்டதன் விளைவு, கூட்டரசாங்கமும் மாநில அரசாங்கமும் அதற்கு ஒதுக்கப் பட்டுள்ள துறைகளில் தலையாய அதிகாரம் உடையவை என்னும் அரசியல் அமைப்புக் கருத்தில் பெரிய அளவில் நெகிழ்ச்சி ஏற் பட்டதே ஆகும்.

பொதுநலனை மேம்பாடடையச் செய்யவேண்டும் என்னும் கூட்டரசாங்கப் பொறுப்புக்கும், ஒரே வகையான கொள்கையைக் கையாளும்படி மாநிலங்களைக் கட்டாயப்படுத்துவதற்கான அதிகாரம் கூட்டரசாங்கத்திற்கு இல்லாமல் இருப்பதற்கும் இடையே நடைமுறை முரண்பாடு இருப்பதை, இப் புத்தகத்தைப் படிப்பவர்கள் எளிதில் அறியக்கூடும். வரிவிதிப்பு முறைகள், அரசாங்கப் பணிகள் ஆகியவற்றால் பொதுநலன் பாதிக்கப் படுகிறது. பல்வேறு மாநில அரசாங்கங்களின் கொள்கைகள் ஒரே வகையாக இல்லாதிருப்பதால், அந்த மாநிலங்களின் பொதுநலன் பற்றிய தரங்கள் ஏற்றத்தாழ்வு உடையனவாக அமைந்துவிடு கின்றன. உதவிக்கொடைகள், மாநில வரிகளைக் கழித்துக் கொள்ளும் ஏற்பாடு ஆகிய கருவிகளின் விளைவாக, ஒரே வகை யான கொள்கையைக் கையாள்வது மாநிலங்களுக்கு எளிதான செயலாக ஆகிவிடுகிறது. ஆனால், அதே சமயத்தில் ஒரு மாநிலத் திற்குத் தலையாய முக்கியத்துவம் உடைய துறைகளில் அதற்கு விருப்பமான கொள்கைகளைச் சுயேச்சையான முறையில் கையாள் வதற்கு அதற்கு இப்போதும் வாய்ப்பு இருக்கிறது. அந்த வாய்ப்பு சட்டப்படிப் பாதுகாக்கப்பட்டும் இருக்கிறது.

**கூட்டரசாங்க வரி விதிப்பு அதிகாரம் :**

வருவாயை எழுப்புவதற்கான மசோதாக்கள், வரிவிதிப்பு அதிகாரத்தின்மீது அரசியல் அமைப்பின்படி ஏற்படுத்தப்பட்டுள்ள வரையறைகளுக்கு (constitutional limitations) உட்பட்டவையாக இருக்கவேண்டும். அந்த வரையறைகள் பின்வருமாறு : [15]

1. 'வரிகள் (taxes), தீர்வைகள் (duties), விதிப்புகள் (imposts), ஆயங்கள் (excises) ஆகியவற்றை விதிக்கவும் வசூலிக்கவும், ஐக்கிய அமெரிக்காவின் கடன்களைச் செலுத்தவும்,

அதன் பொதுப் பாதுகாப்புக்கும் பொதுநலனுக்கும் உகந்த செயல்களைச் செய்யவும் காங்கிரசுக்கு அதிகாரம் உண்டு...........'[16] இவ்வாறு அளிக்கப்பட்டுள்ள அதிகாரம் மிக விரிவானதாக இருக்கிறது. இங்கே குறிப்பிடப்பட்டுள்ள 'பொதுநலன்' என்னும் சொற்றொடர், சிறிய அளவில் உள்ள தனி வகுப்புகளின் நலனையும் குறிக்கத்தக்க அளவில் அந்தத் தொடருக்கு மிகத் தாராளமான உரைவிளக்கத்தை (interpretation) நீதிமன்றம் அளித்துள்ளது. அப்படி அளித்திருந்தபோதிலும், அரசியல் அமைப்பால் காங்கிரசுக்குத் தரப்படாமல் உள்ள குறிக்கோள்களை நிறைவேற்றுவதற்காகக் காங்கிரஸ் அந்த உரைவிளக்கத்தைப் பயன்படுத்தக்கூடாது என்றே கூறலாம். வேளாண்மைச் சரிக்கட்டுச் சட்டம் (Agricultural Adjustment Act) பற்றிய வழக்கில் (1935), பயிரிடப்பட்ட நிலங்களின் அளவைக் குறைத்த உழவர்களுக்கு உதவித்தொகைகள் (benefits) வழங்குவதற்காக வேளாண்மைப் பொருள்களைப் பக்குவப்படுத்துவோர் (processors) மீது விதிக்கப்பட்ட வரி அரசியல் அமைப்புக்கு உட்பட்டதுதானா என்னும் சிக்கல்பற்றி நீதிமன்றமானது கீழ்க்கண்டவாறு தீர்ப்பளித்திருக்கிறது: 'ஐக்கியஅமெரிக்காவின் பொதுநலன் என்னும் சொற்றொடரின் பரப்பு எது என்பதையோ, வேளாண்மையின் உதவிக்காகச் செய்யப்படும் ஒரு நிதி ஒதுக்கம் (appropriation) அந்தப் பரப்புக்குள் அடங்குகிறதா என்பதையோ முடிவுகட்டவேண்டிய பொறுப்பு இந்த வழக்கில் நமக்கு ஏற்படவில்லை. அந்தக் கேள்விகள்பற்றிய நிலைமை எப்படியிருந்தாலும், நம் அரசியல் அமைப்பில் பொதிந்துள்ள மற்றொரு கோட்பாடு, வேளாண்மை சரிக்கட்டுச் சட்டத்தை நடைமுறைக்குக் கொண்டு வருவதைத் தடைசெய்கிறது. இந்தச் சட்டம், மாநிலங்களுக்கென்று (அரசியல்அமைப்பால்) ஒதுக்கப்பட்டுள்ள உரிமைகளில் தலையிடுவதாக இருக்கிறது.................இந்த வரி, இந்த வரியால் எழுப்பப்படுகிற நிதிகளின் நிதி ஒதுக்கம், அந் நிதிகளைப் பிரித்து வழங்குவதற்கான உத்தரவு ஆகிய யாவும் ஒரே திட்டத்தின் பல பகுதிகளே. அவை அனைத்தும் அரசியல் அமைப்புக்கு மாறுபட்ட ஒரு நோக்கத்தை அடைவதற்கான வழிகளே.'[17]

2. '..........................எல்லாத் தீர்வைகளும், விதிப்புகளும், ஆயங்களும் ஐக்கிய அமெரிக்கா முழுவதும் ஒரே வகையானவையாக (uniform) இருக்கவேண்டும்.'[18] இந்த வரையறையானது கூட்டரசாங்கத்தின் வருவாய் முறைகளுக்குமட்டுமே பொருந்தும் என்பது உண்மைதான். ஒரு குறிப்பிட்ட மறைமுக வரியின் (indirect tax) மூலமாகப் பல்வேறு மாநிலங்களிலிருந்து வசூலிக்கப்படுகிற தொகைகள் ஒத்த அளவுடையனவாக இருக்க வேண்டும் என்பது, இந்த வரையறையின் பொருள் அன்று. வரி

விதிக்கப்படுகிற தனியாட்களும் நிறுவனங்களும் எந்த மாநிலத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும், அவர்கள்மீது விதிக்கப்படுகிற வரிவீதங்களும், வரி விதிக்கப்படுகிற பொருள்களுக்குத் தரப்படுகிற இலக்கணமும் (definition) ஒரே வகையாக இருக்கவேண்டும் என்பதுதான் இந்த வரையறையின் பொருளாகும். எடுத்துக்காட்டாக, நான்கு அல்லது அதற்கு மேற்பட்ட எண்ணிக்கையுடைய வேலையாட்களை, ஆண்டு ஒன்றிற்குக் குறைந்தது இருபது நாட்களாவது, ஒவ்வொரு நாளும் வெவ்வேறு வாரத்தில் இருக்கும் வகையில், வேலைக்கு வைத்துக்கொண்டுள்ளவர்கள்மீது, கூட்டரசாங்கத்தின் வேலையின்மை இழப்பீட்டு வரி (unemployment compensation tax) விதிக்கப்படுகிறது. வேலையளிப்போர் (employers) எந்த மாநிலத்தில் இருந்தாலும், அவர்கள் அனைவர் மீதும் விதிக்கப்படும் வரிவீதம் ஒரே வகையானதாக இருக்கிறது. அதுபோலவே அவர்கள் அனைவராலும் செலுத்தப்படும் வரித்தொகை, எல்லா மாநிலங்களிலும், வேலையாட்களின் கூலிகளை வரிவீதத்தால் பெருக்கிவந்த தொகையாகவே இருக்கிறது. இவ்வாறாகப் பல்வேறு வேலையளிப்போரால் செலுத்தப்படும் வரித்தொகைகள், அவரவர்களுடைய வேலையாட்களின் எண்ணிக்கை, வேலையாட்களுக்குத் தரப்படும் கூலித்தொகை ஆகியவற்றின் அளவைப் பொறுத்து வேறுபடுகின்றன. வரிவிதிப்புக்கு உட்பட்ட வேலையளிப்போர், வரிவீதம் [2] (tax rate), வரி அடிப்படை (tax base) ஆகியவை பற்றிய இலக்கணம் ஐக்கிய அமெரிக்கா முழுவதற்கும் ஒரே வகையானதாக இருக்கும்வரை, எல்லாத் தீர்வைகளும், விதிப்புகளும், ஆயங்களும் ஐக்கிய அமெரிக்கா முழுவதிலும் ஒரே வகையாக இருக்கவேண்டும் என்னும் அரசியல் அமைப்புக் கோட்பாடு நிறைவேற்றப்படுகிறது என்றே பொருள்.

3. 'எந்த மாநிலத்திலிருந்தாயினும் ஏற்றுமதி செய்யப்படுகிற பொருள்கள்மீது வரியோ தீர்வையோ விதிக்கக் கூடாது.'[19]

4. 'மக்கள்தொகைக் கணக்கின் வீதாசாரப்படி அல்லாமல் வேறு வகையில் தலைவரியோ அல்லது வேறு ஏதாவது நேர்முக வரியோ விதிக்கக்கூடாது.................' என்னும் அரசியல் அமைப்பின் இறுதி வரையறையானது இக்காலத்தில் முக்கியத்துவம் உடையதாக இல்லை. வருமான வரிதான் கூட்டரசாங்கத்தால் தற்போது கையாளப்படுகிற ஒரே 'நேர்முக' வரி ஆகும். இந்த வரியை விதிப்பதற்கான அதிகாரம், கீழ்க்கண்ட பதினாறாவது திருத்தத்தின்படி கூட்டரசாங்கத்திற்குத் தரப்பட்டிருக்கிறது: 'வசூல் தொகையைப் பல்வேறு மாநிலங்களுக்கிடையே பகிர்ந்

ருளிக்காமலும் (apportionment), மக்கள்தொகைக் கணக்கு (census) அல்லது பிற வகைக் கணக்கீட்டோடு (enumeration) தொடர்பு அற்ற முறையிலும், வருமானங்கள் எந்த மூலங்களிலிருந்து பெறப்பட்டாலும் அவை அனைத்தின்மீதும் வரி விதிக்கவும் வசூலிக்கவும் காங்கிரசுக்கு அதிகாரம் உண்டு.'[20] ஆகவே, சொத்தின்மீது ஒரு நேர்முக வரி விதிக்கக் கூட்டரசாங்கம் விரும்பினால்மட்டுமே இங்கே குறிப்பிடப்பட்ட வரையறை நடைமுறையில் பொருள் உடையதாக அமையும். கூட்டரசாங்கத் தலைவரி ஒன்று விதிக்கப்படுமானால், அது மக்கள்தொகைக் கணக்கின்படிதான் விதிக்கப்படும்; ஆகவே, அது சட்டத்திற்கு (அரசியல் அமைப்புக்கு) உட்பட்டதாக இருக்கும். மோட்டார் காரைப் பயன்படுத்தும் வரி (1942-1945), சொத்தின்மீதான (மோட்டார் கார் மீதான) நேர்முக வரி அன்று; அந்தச் சொத்தைப் பயன்படுத்துவதன்மீது விதிக்கப்பட்ட ஆயவரி (excise duty) ஆகும். ஆகவே, இவ் வரியின் அடிப்படை (tax base), மோட்டார் காரின் உடைமை அன்று; அதன் பயன்படுநிலையே (use). இவ்வாறாக இவ் வரி ஒரு 'மறைமுக' வரியாக இருப்பதால், இந்தப் பத்தியில் ஆராயப்படுகிற அரசியல் அமைப்பு வரையறைக்கு இவ் வரி உட்பட்டது அன்று. [இந்த வரியானது எல்லா மாநிலங்களிலும் ஒரே வகையான முறையில் விதிக்கப்படுவதால், மறைமுக வரிகளுக்கான ஒருமைப்பாட்டுக் கோட்பாட்டை (மேலே தெரிவிக்கப்பட்ட 2-வது வரையறையில் குறிப்பிடப்பட்டுள்ள கோட்பாட்டை) இது நிறைவேற்றுகிறது].

வரிவிதிப்பு அதிகாரத்தை வருவாய் நோக்கம் தவிர்த்த பிற நோக்கங்களுக்காகப் பயன்படுத்துவது சட்டத்திற்கு மாறானது என்னும் கருத்து—அதாவது, கட்டுப்பாட்டு நோக்கத்திற்காக வரிவிதிப்பைப் பயன்படுத்துவது அனுமதிக்கப்படாத ஒன்று என்னும் கருத்து மிகப் பலரிடம் காணப்படுகிறது. ஆனால், இக் கருத்து உண்மை நிலையை எடுத்துக்காட்டுவதாக இல்லை. விதிக்கப்படும் வரியானது மேலே தரப்பட்டுள்ள வரையறைகளுக்கு உட்பட்டதாக இருந்து, நிறைவேற்ற விரும்பும் கட்டுப்பாட்டுப் பணியானது (regulatory function) அரசியல் அமைப்பால் மறுக்கப்படாததாகவும் இருந்தால், காங்கிரசானது, வரிவிதிப்பின்மூலம் கட்டுப்பாட்டை ஏற்படுத்துகிற மறைமுக முறையையும் கையாளலாம்; ஒழுக்க விதிகளை ஏற்படுத்துகிற நேர்முக முறையையும் கையாளலாம். வரிமுறைகள் வருவாய் நோக்கத்திற்காகமட்டுமே பயன்படுத்தப்பட வேண்டும் என்று எத்தகைய சட்ட விதியும் இல்லாமலிருப்பது, நிதிக் கொள்கையின் (fiscal policy) நற்பேறு என்றே கூறவேண்டும். 1865-ல் காங்கிரசானது, மாநிலப் பாங்கு

நோட்டுகளின் புழக்கத்தின்மீது பத்து சதவீதவரி ஒன்றை விதித்தது. இந்த வரிவிதிப்பின் நோக்கம், விளைவு ஆகிய இரண்டுமே மாநிலப் பாங்கு நோட்டுகளை இல்லாமற் செய்துவிடவேண்டும் என்பதே. அந்த நோட்டுகளின் புழக்கத்தைத் தடைசெய்யும் நேர்முகச் சட்டம் ஒன்றின்மூலம் இதே நோக்கத்தை நிறைவேற்றியிருக்க முடியும். ஆனால், காங்கிரசானது, வரிவிதிப்பு முறையின்மூலம் இந்த நோக்கத்தை நிறைவேற்ற முடிவு செய்தது. இந்த முறையை ஏற்றுக்கொள்ளும் வகையில் நீதிமன்றம் தெரிவித்த கருத்தின் ஒரு பகுதி வருமாறு: 'விவாதத்திற்கு இடமில்லாத முறையில் அரசியல் அமைப்பால் தரப்பட்டுள்ள அதிகாரங்களைப் பயன்படுத்தி, நாடு முழுவதற்கும் ஒரே செலாவணியை ஏற்படுத்தக் காங்கிரஸ் முன்வந்தபோது, பொருத்தமான சட்டத்தை நிறைவேற்றுவதன் மூலம் அந்த ஏற்பாட்டின் நன்மையைப் பொதுமக்களுக்குப் பெற்றுத்தர, அரசியல் அமைப்பின்படி, காங்கிரசுக்கு உரிமையுண்டு என்பதை மறுக்கமுடியாது........................இந்த நோக்கத்தை முன்னிட்டு, காங்கிரசானது, தன்னுடைய அதிகாரத்தின்கீழ் வெளியிடப்படாத எந்த நோட்டுகளும் பணமாகப் புழங்குவதை, பொருத்தமான சட்டங்களின்மூலம் தடுக்கலாம்'.[21]

## மேலும் படிப்பதற்கு உரியவை

பொது

1. ஜெர்ஹார்ட் கோம் (Gerhard Colm), 'Why public Finance?' National Tax Journal, செப்டம்பர், 1948; இக்கட்டுரை, Essays in Public Finance and Fiscal Policy' என்னும் நூலின் (நியூயார்க்கு, ஆக்ஸ்போர்டு, 1955) முதல் அத்தியாயமாக எடுத்து வெளியிடப்பட்டிருக்கிறது.

இக்கட்டுரை பொது நிதியின் இயல்பு, பொருளாதார ஆய்வின் ஒரு தனிப் பகுதியாக அதைக் கருதுவதற்கான காரணங்கள், அதைப் பயில்வதற்குரிய பொருத்தமான முறைகள் ஆகியவற்றைப் பற்றிய ஒரு முதல்தரமான—ஓரளவுக்கு எளிய பகுத்தாய்வு ஆகும்.

2. இ. ஆர். ஏ. செலிக்மன் (E. R. A. Seligman), 'Public Finance', Encyclopaedia of Social Sciences, நியூயார்க், மாக்மில்லன், 1934.

பொது நிதியின் பரப்பு (scope) பற்றிய ஒரு பயனுள்ள கருத்தாய்வு இது. குறிப்பிடத்தக்க அளவு வரலாற்று விவரங்கள் இதில் அடங்கியுள்ளன. ஆனால், நிலைபேருக்கக் கொள்கையின் பொதுவான பொருளாதார விளைவுகளை உள்ளடக்கிய வகையில் மிக

அண்மையில் இந்த இயலின் பரப்பளவில் ஏற்பட்டுள்ள வளர்ச்சியை இக் கருத்தாய்வு ஆராயவில்லை.

வரிவிதிக்கும் அதிகாரம்

1. வில்லியம் ஜே. ஷுல்ட்ஸ், சி. லோவல் ஹாரிஸ் (William J. Shultz and C. Lowell Harriss ஆகியோரின், 'American Public Finance, 6 வது பதிப்பு, 1954, நியூயார்க்கு, பிரண்டிஸ் ஹால் (Prentice-Hall), அத்தியாயம் 7.

இந்தத் துறைபற்றிய விரிவான கருத்தாய்வு இது. இதே கருத்தாய்வு இந் நூலின் பிற பதிப்புகளிலும் இருக்கக்கூடும்.

## முதல் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. Survey of Current Business, ஜூலை 1959, பக்கங்கள் 17, 21.

2. அதே பத்திரிகை, அதே இதழ், பக்கம் 13. அரசாங்கப் பணியாளர்களின் ஊழியத்தின் மதிப்பே நாட்டு வருமானத்திற்கு அரசாங்கங்கள் தரும் பங்கு ஆகும்.

3. Monthly Labour Review, அக்டோபர், 1959, பக்கங்கள் 1156-60.

4. Survey of Current Business, மே, 1959, பக்கம் 12. மொத்தக் கடன், 901·8 மில்லியன் டாலர். தனியார் கடன் 534 மில்லியன் டாலர். இதில் 294 மில்லியன் டாலர் கார்ப்பரேஷன்களின் கடனாகும்.

5. நாட்டின் மொத்தச் செலவு (gross national expenditure), அதாவது நாட்டின் மொத்த ஆக்கம் என்பது தனியார் நுகர்வுச் செலவுகள், தனியார் பொருளாதாரத்தில் முதலீட்டுப் பொருள்களுக்கான மொத்தச் செலவுகள், நிகர அயல் நாட்டு முதலீடு, பொருள்களையும் ஊழியங்களையும் அரசாங்கம் வாங்கிய செலவு ஆகியவற்றின் கூட்டுத் தொகையாகும்.

6. பொருளாதாரவாதிகள் 'எதைச் செய்கிறார்களோ' அதுதான் பொருளாதாரம் என்று பேராசிரியர் ஜேகப் வைனர் (Professor Jacob Viner) இலக்கணம் வகுத்துள்ளதாக அறிவிக்கப்பட்டுள்ளது. [கே. இ. பௌல்டிங் (K.E. Boulding), Economic Analysis, நியூயார்க்கு, ஹார்ப்பர் (Harper), 1941, பக்கம் 3.] அவ்வாறு சுற்றி வளைத்துக் கூறும் இலக்கணமானது, தர்க்கவாதியின் கண்டனத்துக்கு ஆளாகக்கூடும்; ஆனால், ஆசிரியரின் கண்டனத்துக்கு ஆளாகாது. மாணவருக்கு அறிமுகம் செய்துவைக்கப்பட்டவுடனே ஓர் அறிவுத் துறைக்கு இலக்கணம் வகுக்க முனையும் முயற்சி பயனற்றது என்பதை அவர் நன்கு அறிவார்.

7. 'எத்தகைய பாராளுமன்ற உறுப்பினர்கள் ?' ('What Kind of M.P.s ?') The Economist, Volume CL, எண் 5343, ஜனவரி 19, 1946, பக்கம் 85.

8. ஆனால், ஓர் அமெரிக்கக் குடிமகன் கொலம்பியா மாவட்டத்தில்/குடியிருந்தால், அவர் கூட்டரசாங்கத்தின் குடிமகனுகமட்டும் இருக்கமுடியும். ஏனென்றால், அந்த மாவட்டம் கூட்டரசாங்கத்தின் ஒரு தல துணைப்பிரிவால் ஆளப்படுகிறது.

9. ஐக்கிய அமெரிக்க வணிகத் துறை, சென்சஸ் பிரோ. 'Governments in the United States, 1957.' பள்ளிக்கூட மாவட்டங்கள் விரிவான அளவில் திருத்தியமைக்கப்பட்டதன் விளைவாக, 1942க்குப்பிறகு, ஐக்கிய அமெரிக்காவின் அரசாங்கங்களின் எண்ணிக்கையில் 56,763 எண்கள் குறைந்துவிட்டன என்றும் மகிழ்ச்சிமிக்க செய்தியை இந்த அறிக்கை தருகிறது.

10. இந்த அத்தியாயத்தின் இந்தப் பிரிவு, இந்தப் பொருள்பற்றிய எளிய சுருக்கமே என்பதை அரசாங்கம்பற்றிப் பயில்பவர்கள் உணர்வார்கள். இப் பொருள்பற்றிய விரிவானவிவரங்களையும் நிபந்தனைகளையும் இங்கே தராமல் விட்டதற்கான ஒரே காரணம், போதிய இடம் இல்லாமையும், இங்கே செய்யப்படுகிற பகுத்தாய்வுக்கு அந்தகைய விவரங்களும் நிபந்தனைகளும் தேவைப்படாமையுமே ஆகும்.

11. எடுத்துக்காட்டாக, அரசாங்கம் கடன் வாங்கும்போது, அது கடன் பத்திரங்களை (ஒப்பந்தங்களை) விற்கிறது. அப்படி விற்பதன் விளைவாக, அரசாங்கம், அசலைத் திருப்பித்தருவதற்கும், வட்டியைச் செலுத்துவதற்குமான நிதிபற்றிய சில வாக்குறுதிகளை அளிக்கவேண்டியிருக்கிறது. அல்லது அது வாங்கக்கூடிய மொத்தக் கடனுக்கு ஓர் அளவை வரையறுக்கும் சட்டத்தை நிறைவேற்றுவதன்மூலம் அதன் கடன் தொகையை அதுவே கட்டுப்படுத்திக் கொள்கிறது.

12. Houston, East and WestTexas Railway Vs United States என்னும் வழக்கில் (1914), உச்ச நீதிமன்றம் பின்வருமாறு தெரிவித்தது: 'போக்குவரத்து நிறுவனங்கள் பல்வேறு மாநிலங்களுக்கு இடையே நடத்தும் நடவடிக்கைகளும், குறிப்பிட்ட மாநிலத்திற்கு உள்ளே நடத்தும் நடவடிக்கைகளும், ஒன்றைப் பற்றிய ஆட்சி மற்றொன்றைப்பற்றிய கட்டுப்பாட்டை உள்ளடக்கிய முறையில் தொடர்புகொண்டிருக்குமானல், இறுதியானதும் உச்ச அதிகாரம் உடையதுமான விதியை நிர்ணயிக்கும் உரிமை, காங்கிரசுக்குத்தான் உண்டு; மாநிலத்துக்கு அல்ல. அப்படி இல்லாவிட்டால், காங்கிரசால், அரசியல் அமைப்பின்படி அதற்குள்ள அதிகாரத்தைப் பயன்படுத்த முடியாது. அப்படிப் பயன்படுத்தாவிட்டால், நாடு முழுவதிலும் உள்ள துறையில், நாடு அல்ல, மாநிலம் தான் உச்ச அதிகாரம் உடையதாக விளங்கும்.' 234 ஐக்கிய அமெரிக்கா, 351-352.

13. ஆனல், பேராசிரியர் பிட்டர்மான் (Professor Bittermann) குறிப்பிடுவதைப் போல, பொதுச் சாலைகள் பற்றிய கழகத்தின் (The Bureau of Public (Roads) முறைகள், வலுக்கட்டாயத் தன்மையும் கட்டளையிடும் தன்மையும் உடையனவாக இருக்கின்றன என்று கூறுவதைவிட, தூண்டுகிற தன்மை உடையனவாக இருக்கின்றன என்று கூறுவதே பொருத்தமாக இருக்கும். (ஹென்ரி ஜே. பிட்டர்மான், State and Federal Grants in Aid, நியூயார்க், மென்ட்ஸர், புஷ் அண்ட் கோ, 1938, பக்கம் : 282)

14. முன்னர் குறிப்பிட்ட அதே நூல், அத்தியாயம் 12.

15. எஃப். ஏ. ஆக் மற்றும் ஓ. பி. ரே. (F.A. Ogg. and O.P. Ray), Introduction to American Government, 6-வது பதிப்பு, நியூயார்க், ஆப்பில்டன் சென்ச்சரி (Appleton-Century), 1938, பக்கங்கள் 466-69.

16. விதி 1, பிரிவு 8.

17. U.S. Vs. Butler, ஜனவரி 6, 1936. House Document எண் 386, 73-வது காங்கிரஸ், 2-வது கூட்டத் தொடர், பக்கம் 9.

18. விதி 1, பிரிவு 8.

19. விதி 1, பிரிவு 9.

20. 1913 பிப்ரவரி 25 முதல் நடைமுறையில் உள்ளது.

21. Veazie Bank Vs. Fenns, 8 Wall 549 (1869).

# 2. நிதி நிர்வாகம்

## வரவு செலவுத திடடம

வ ர வு செலவுத திடடம எனபது ஓா அரசாஙகததின தலையாய நிதித திடடமாகும வரவு செலவுத திடடக காலததில எதிாபாாககபபடுகிற வருவாயகள, அக காலததிறகாக முன மொழியபபடுகிற செலவுகள ஆகியவறறின மதிபபீடுகளை அது ஒருஙகே இணைததுத தருகிறது இ ந த மதிபபீடுகளிலிருநது, மேறகொளளபபடககூடிய நடவடிககைகள எ வை எ வை, அவறறிறகுத தேவையான நிதிகளைப பெறும வழிகள எனன எனன எனபவறறை அ றி ந து கொ ள ள மு டி யு ம அரசாஙக நடவடிககையின பரபபும தனமையும (scope and character) ஒருஙகே இணைககபபடட காடசியை வரவு-செலவுத திடடததில தான காணமுடியும இநதத திடடததிலிருநதுதான, அரசாஙகம கையாளவதறகாகத திடடமிடடுககொணடிருககிற நிதிப போககுகளைத தெளளத தெளிவாக அறிநதுகொளள முடியும இலடசியக கோணததிலிருநது பாாககுமபோது, வரவு செலவுத திடடமானது விழிபபோடு உருவாககபபடட மதிபபீடுகளையும, நோமையான விருபபஙகளையும உளளடககிய ஓா அறிககையாக இருககிறது ஆனால, நடைமுறையில அது பெருமபாலும இததுணை உயாவான தனமை உடையதாக இருபபதிலலை அது போலவே இலடசியக கோணததிலிருநது பாாககும போது, வரவு செலவுத திடட அறிககை, ஒருஙகு இணைநத வடிவததில நிதிக கொளகையைக கணடறிவதறகுச சராசரிக குடிமகனுககுத துணை புரிகிறது ஆனால, நடைமுறையில, வரவு செலவுத திட்டததைச சடடபபடி நிறைவேற்றவேணடிய கடமையை உடைய சட்டமன்ற உறுபபினருககுககூட, அத திடடம அளவுககு மீறிய சிக்கல் உடையதாகவே காட்சியளிககிறது

வரவு செலவுத் திட்டத் துறை அல்லது கழகத்தின் (Budget Department or Bureau) துணையுடன் தலைமை நிர்வாகியால் (Chief Executive) தயாரிக்கபட்டு, சட்டமாக நிறைவேற்றப்படுவதற்காக அரசாங்கத்தின் சட்டமன்றப் பிரிவிடம் தரப்படுகிற 'நிர்வாக வரவு செலவுத் திட்டம்'தான் (Executive Budget) பெரிதும் விரும்பி ஏற்றுக்கொள்ளப்படுகிற வரவு செலவுத் திட்ட வகையாகும். பெரிய அளவுள்ள அரசாங்கங்களால் பெரும்பாலும் கையாளப்படுகிற வகையும் இதுதான். இந்த வகைக்கு மாற்று வகையாக இருப்பது, 'சட்டமன்ற வரவு செலவுத் திட்டம்' (Legislative Budget) ஆகும். சட்டமன்றத்தின் ஒரு குழுவால் (committee) அல்லது குழுவுக்காகத் தயாரிக்கப்பட்டுச் சட்ட மன்றத்தின்முன் வைக்கப்படுவது இந்தத் திட்டம். நிர்வாக வரவு செலவுத் திட்டத்திற்கு மூன்று வாதங்கள் ஆதரவாகின்றன. (1) நிதிக் காலப் பிரிவில் (Fiscal period) நிதி நடவடிக்கைகளால் ஏற்படுகிற விளைவுகளுக்கு, அந்த நடவடிக்கைகளுக்கான தலைமைப் பொறுப்பு தலைமை நிர்வாகிக்கு இருந்தாலும் இல்லாவிட்டாலும், அவரே பொறுப்பேற்கவேண்டியவர் என்று பொதுமக்கள் கருதுவதால், அவருடையதாக இருக்கிற வரவு செலவுத் திட்டத்தைத் தயாரிப்பதற்கு அவருக்கு உரிமையுண்டு. (2) சட்டமன்றத்தால் ஏற்றுக்கொள்ளப்படுவதற்காக அல்லது திருத்தியமைப்பதற்காகப் பொதுவான அரசாங்கக் கொள்கையைப் பரிந்துரை செய்து—அதாவது அரசாங்கத்தின் போக்கை வகுத்துத் தருவது ஐக்கிய அமெரிக்காவில் உள்ள அரசாங்கங்களில் தலைமை நிர்வாகியின் பணிகளாக ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பவற்றில் ஒன்றாக இருக்கிறது. (3) அரசாங்கச் செலவுகளில் பெரும் பகுதி, அரசாங்க நிர்வாகத்துறையின் ஏஜன்சிகளாலேயே செலவிடப்படும் என்பது ஏறத்தாழ உறுதியாக இருக்கிற உண்மையாகும். இனி, நாம் தெளிவாகத் தெரிந்துகொள்ள இருப்பதற்கிணங்க, வரவு செலவுத் திட்டமானது, நிர்வாகத் துறையால் தயாரிக்கப்பட்டுச் சட்ட மன்றத்தின் முன் வைக்கப்படுவதால், அம் மன்றத்தின் நியாயமான உரிமைகள் எவையும் பாதிக்கப்படுவதில்லை. ஏனென்றால், நிர்வாகத் துறையில் முன்மொழிவுகள் (proposals), சட்ட மன்றத்தால் சட்டமாக ஆக்கப்பட்ட பின்னரே நடை முறைக்கு வரமுடியும்.

தற்போது உள்ள கூட்டரசாங்க வரவு செலவுத் திட்ட முறையானது, 1921-ல் நிறைவேற்றப்பட்ட வரவு செலவுத் திட்டம், மற்றும் கணக்கீடுபற்றிய சட்டத்தால் (The Budget and Accounting Act)[1] நிறுவப்பட்டதாகும். காங்கிரசின் முறையான கூட்டத் தொடர் ஒவ்வொன்றின் தொடக்க காலத்திலும், அதன் முன் வரவு செலவுத் திட்டத்தை வைக்கவேண்டிய பொறுப்பை,

அச் சட்டமானது, குடியரசுத் தலைவர் (The President) மீது சுமத்தியிருக்கிறது. அத் தலைமை நிர்வாகிக்காக வரவு செலவுத் திட்டத்தைத் தயாரிப்பதற்கென்று வரவு-செலவுத் திட்டக் கழகம் (Bureau of the Budget) ஒன்றை அச் சட்டம் உருவாக்கிற்று.[2] இக் கழகம் முதலில் கருவூலத்துறையின் (Treasury Dept.) பொறுப்பில் விடப்பட்டிருந்தது. ஆனால் 1939-ல் அது குடியரசுத் தலைவரின் நிர்வாக அலுவலகத்தின் பொறுப்பில் (Executive Office of the President) மாற்றப்பட்டுவிட்டது. மேலே சொல்லப்பட்ட வரவு செலவுத் திட்டச் சட்டமானது, வரவு செலவுத் திட்டத்தில் இருக்கவேண்டிய உள்ளுறைகளின் இலக்கணத்தைச் (definition of the contents) சற்று விரிவான வகையில் தந்திருக்கிறது. அவ்வாறு தரப்பட்டுள்ள இனங்களில் மிக முக்கியமானவை பின்வருமாறு:

1. வருகிற நிதியாண்டிற்கு இன்றியமையாதன என்று குடியரசுத் தலைவரின் கருத்துக்குத் தோன்றுகிற செலவுகள், நிதி ஒதுக்கங்கள் (appropriations) ஆகியவற்றைப் பற்றிய அன்னாரின் மதிப்பீடுகள் [அரசாங்கத்தின் சட்டமன்றத் துறை, உச்ச நீதிமன்றம் (Supreme Court) ஆகியவை பற்றிய மதிப்பீடுகள் மட்டும், அவருக்குத் தரப்படுகிற வடிவத்திலேயே, எத்தகைய மறு ஆய்வும் (revision) இன்றி, அவரால் வரவு செலவுத் திட்டத்தில் இணைக்கப்படல் வேண்டும்].

2. (அ) வரவு செலவுத் திட்டம் காங்கிரசின்முன் வைக்கப்படுகிற நேரத்தில் நடைமுறையில் உள்ள வருவாயச் சட்டங்கள்,

(ஆ) வரவு செலவுத் திட்டத்தில் இருக்கக்கூடிய வருவாய முன்மொழிவுகள் (revenue proposals)

ஆகிய இவற்றின் வாயிலாக, வருகிற நிதியாண்டில் கிடைக்கக்கூடிய வரவுகள் (receipts) பற்றிய குடியரசுத் தலைவரின் மதிப்பீடுகள்.

3. முடிக்கப்பட்ட முந்திய நிதியாண்டின் (the last completed fiscal year) செலவுகளும் வரவுகளும்.

4. நடப்பு நிதியாண்டின் (fiscal year in progress) செலவுகள், வரவுகள் ஆகியவை பற்றிய குடியரசுத் தலைவரின் மதிப்பீடுகள்.

5. நடப்பு நிதியாண்டின் செலவுக்காகக் கிடைக்கக்கூடிய நிதி ஒதுக்கத் தொகைகள்—முந்திய நிதியாண்டுகளின் நிதி ஒதுக்கங்களில் எஞ்சியிருக்கும் தொகை உட்பட.

6 இறுதியாக முடிக்கப்பட்ட முந்திய நிதியாண்டின கடைசியிலும நடப்பு நிதியாண்டின கடைசியிலும, வருகிற நிதியாண்டின கடைசியிலும இருக்கிற அல்லது இருக்கக்கூடிய கருவூலத்தின நடைமுறை நிலை அல்லது மதிப்பிடப்படுகிற நிலைபற்றிய ஐந்தொகை அறிக்கைகள (Balanced statements)

7 அரசாங்கத்தின கடன நிலைபற்றிய இன்றியமையாத விவரங்கள அனைத்தும

8 அரசாங்கத்தின நிதிநிலைபற்றிய நடைமுறை விவரங்களைத தெரியப்படுத்துவதற்குத தேவையானவை அல்லது விரும்பத்தக்கவை என்று குடியரசுத தலைவரால கருதப்படும ஏனைய நிதி அறிக்கைகளும புள்ளிவிவரங்களும

9 வருகிற நிதியாண்டில கிடைக்குமென்று மதிப்பிடப்படுகிற வரவுகள, முந்திய ஆண்டின உபரி (இருந்தால) ஆகியவற்றின கூட்டுத தொகை, செலவின மதிப்பீடுகளைவிடக குறைவாக இருந்தால, அப்பற்றாக்குறையை நிறைசெய்வதற்காகக, குடியரசுத தலைவர வரவு செலவுத திட்டத்தில புதிய வரிகள, கடனகள அல்லது பொருத்தமான வேறு நடவடிக்கைகளைப பரிந்துரை செய்யவேண்டும

10 மேலே குறிப்பிடப்பட்ட வரவுகள, உபரிகள (surpluses) ஆகியவற்றின கூட்டுத தொகை, செலவுகளின மதிப்பீட்டைவிடக கூடுதலாக இருந்தால, பொது நலனகளுக்குத தேவையானவை என்று குடியரசுத தலைவருக்குத தோன்றுகிற செலவுகளை அவர பரிந்துரை செய்யவேண்டும

வரவு செலவுத திட்ட உள்ளுறையின பரப்பை, மேலே தரப்பட்டுள்ள பட்டியல எடுத்துக்காட்டுகிறது முடிக்கப்பட்ட முந்திய நிதியாண்டில நிதிக்கொள்கையின பயனாக ஏற்பட்ட நிதி விளைவுகள, இன்னும முடியாமல உள்ள நடப்பு நிதியாண்டில ஏற்படக்கூடிய விளைவுகள (முடியாமல இருப்பதற்குக காரணம, காங்கிரசினமுன வரவு செலவுத திட்டம வைக்கப்படுவது ஜனவரி மாதத்தில என்றாலும, நிதியாண்டு முடிவடைவது ஜூன மாதம 30 ஆம நாளாக இருப்பதே), அடுத்த நிதியாண்டின வரவுகள, செலவுகள ஆகியவைபற்றிய குடியரசுத தலைவரின பரிந்துரைகள ஆகியவற்றை எடுத்துக்காட்டும வகையில வரவு செலவுத திட்டம அமைக்கப்படுகிறது கூட்டரசாங்க வரவு செலவுத திட்ட அறிக்கை, செலவு முனமொழிவுகளை மிக விவரமான முறையில தந்த போதிலும, வருவாய முறைகளைப பொறுத்த அளவில் மிகக குறை

வான கவனத்தையே செலுத்துகிறது. அத்தகைய முறைகளைத் தனியான சட்டமன்ற ஆய்வுக்கு விட்டுவிடுகிறது. செலவுகளின் மிக விவரமான பட்டியலைப் பரிந்துரை செய்வதன்மூலம், அரசாங்க நடவடிக்கைகள் எந்த அளவில் மேற்கொள்ளப்படுவது விரும்பத் தக்கது என்பதை அது நடைமுறையில் பரிந்துரை செய்கிறது என்று கூறலாம். குடியரசுத் தலைவர் அரசாங்க நடவடிக்கைகளை மாற்ற விரும்பினால், அதாவது புதிய அரசாங்கப் பணிகளைச் சேர்க்கவோ அல்லது இருக்கிற பணிகளில் சிலவற்றை அகற்றிவிடவோ விரும்பினால், அம் மாற்றங்கள்பற்றிய அவருடைய பொதுக் கொள்கைகள் வரவு செலவுத் திட்டத்தில் காட்சியளிக்கும். அம் மாற்றங்கள் சார்பான அவருடைய வாதங்கள், வரவு செலவுத் திட்டச் செய்தி உரையில் (budget message) காணப்படும். இவ்வாறாக வரவு செலவுத் திட்டம், நிதிக் கொள்கை முழுவதையும் ஒருசேரக் காட்டும் கண்ணாடியாகத் திகழ்கிறது.

**வரவு செலவுத் திட்டத்தை ஆயத்தப்படுத்தல் (Preparation of the Budget):**

ஜூலைத் திங்கள் முதல் நாளிலிருந்து தொடங்குகிற நிதியாண்டிற்கான கூட்டரசாங்க வரவு-செலவுத் திட்டத்தை ஆயத்தப் படுத்தும் பணி, முந்திய ஆண்டின் இளவேனிற் பருவத்தின் (spring season) பிற்பகுதியில் பெரும்பாலும் தொடங்கிவிடுகிறது. மே, ஜூன் ஆகிய திங்கள்களில், நடப்பு முன்மதிப்பீடுகளை (current-forecasts) அடிப்படையாகக்கொண்டு, வரவு செலவுத் திட்டத்தின் பொதுவான எல்லைக் கோடுகள் வகுக்கப்படுகின்றன. இச் சமயத்தில், தலைமை நிர்வாகி, திட்டமிடப்பட்டுள்ள செலவுகள், எதிர்பார்க்கப்படுகிற வருவாய்கள் ஆகியவற்றின் பொதுவான அளவுகள், எந்தத் தலையாய துறைகளின் வரவுகளிலும் செலவுகளிலும் உயர்வு அல்லது குறைவு ஏற்படுவது விரும்பத்தக்கது என்பதுபற்றிய விவரங்கள், எதிர்பார்க்கப்படுகிற வருவாய்களின் அடிப்படையில் பொதுவான வரிக்கொள்கை எவ்வாறு அமைய வேண்டும் என்பதுபற்றிய கருத்து ஆகியவற்றை எடுத்துக்காட்டும் பொதுவான கொள்கை விளக்கங்களை அளிப்பாரானால், அச் செயல், வரவு செலவுத் திட்டத்தைத் தயாரிக்கும் பணிக்கு மட்டற்ற துணை புரிந்ததாக அமையும். ஜூன் இறுதிக்குள், ஒவ்வொரு பெரிய ஏஜன்சிக்கும், அது செலவிடக்கூடிய தொகையின் உச்ச அளவு அறிவிக்கப்படவேண்டும். அப்போதுதான், அது அந்த வரையறைக்குள் தன் செலவுகளின் பங்கீட்டைப்பற்றிய திட்டத்தைத் தீட்டமுடியும். வரவு செலவுத் திட்டக் கழகத்தின் ஆராய்வாளர்கள் (Examiners of the Bureau of the Budget) ஒவ்வொருவரும், ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட ஏஜன்சிகளின் நடவடிக்கைகள்

பறறிய நுணணறிஞாகளாக (specialists) இருபபாாகள, வரவு செலவுத திடடததை உருவாககும பணியில ஏஜெனசிகளுககுத துணைபுரிவாாகள ஏறததாழ செபடமபா திஙகளிலிருநது விசாரணைகள (hearings) தொடஙகுகினறன இவ விசாரணைகளின போது, ஏஜெனசிகள தஙகளுடைய முனமொழிவுகளை ஆராயவாளாகள முன வைககினறன அவவாறு வைககபபடும ஏஜெனசி வரவு செலவுத திடடஙகளபறறிய தஙகள பரிநதுரைகளை, அநத ஆராயவாளாகள வரவு செலவுத திடட நெறியாளருககு (Director of the Budget) அனுபபுகிறாாகள அகடோபா, நவமபா ஆகிய மாதஙகளில நடைபெறுகிற நெறியாளரின மறு ஆயவில, நிாவாகத திடடததிறகும கொளகைககும ஏறற முறையில, ஏஜெனசி வரவு செலவுத திடடஙகள கூடியவரை ஒழுஙகுபடுததபபடுகினறன பெருமபாலும டிசமபா 15 ஆம நாளுககுள, குடியரசுத தலைவா வரவு செலவுத திடடததை மறு ஆயவு செயது, ஒவவொரு முனமொழிவைபபறறியும இறுதி முடிவைச செயது விடுவதால, வரவு செலவு திடட ஆயததததின இறுதிக கடடம அநதத தேதியோடு முடிவடைகிறது எனறு கூறலாம பல சமயஙகளில, ஏஜனசி முனமொழிவுகளை விழிபபாக ஆராயநதுபாாககும போது, அநத ஏஜெனசிகள செயயககூடிய செலவுகளமீது விதிககபபடட உசச அளவுகள மிகக குறைநத மடடததில இருபபது தெரிய வருகிறது வரவு செலவுத திடட ஆயததததின இறுதிக கடடததில, நடைமுறை நிலைமைகளுககு ஏறற வகையில அநதத திடடததின பொதுவான எலலைககோடுகளைத திருததியமைககவேணடிய நிலை உணடாகிறது எடுததுககாடடாக, 1957-ன இறுதிப பகுதிவரை வெளளை மாளிகையும (The White House), வரவு செலவுத திடடக கழகமும நிதியாணடு 1959-ன மொததச செலவுத தொகை 70 பிலலியன டாலராக இருககும எனறு இயமபிககொணடிருநதன சோவியத ரஷியாவின செயறகைக கோளகளின (satellites) வெறறிமிகக உலகச சுறறுபபயணம உருவாககிகொணடிருநத பினனிறககம ஆகிய நிலைமைகள ஏறபடட, நிதியாணடு 1958-ன மொததச செலவுத தொகையாக மதிபபிடபபடடதைவிட 2 பிலலியன டாலா குறைவாகவே இருநதது இரணடு மாதஙகளுககுப பினனா, வரவு செலவுத திடடததில, உணமையாககக குறிககபபடட செலவுத தொகை 70 பிலலியன டாலராக இலலை, 73 9 பிலலியன டாலராக உயாநதுவிடடது நிதியாணடு 1959-ன தொடககததில (அதாவது, 1958 ஜுலை முதல தேதியனறு), அநத நிதியாணடுககான செலவு 78 முதல 80 பிலலியன டாலராக இருககும எனறு மதிபபிடபபடடது

குடியரசுத் தலைவருடைய வரவு செலவுத் திட்டத்தில் புதிய வருவாய்ச் சட்டங்களுக்கான பரிந்துரைகள் அடங்கியிருந்தால், அவை, கருவூலம் அல்லது பிற அறிவுரையாளர்கள் (advisers), காங்கிரசின் உறுப்பினர்கள், பொதுமக்கள் ஆகியோரிடமிருந்து அவருக்கு வந்தவையாக இருக்கும் டிசம்பர் மாத இறுதியில் வரவு செலவுத் திட்டமானது இறுதியாக முடிக்கப்பட்டு, அச்சகத்திற்கு அனுப்பப்பட்டுவிடுகிறது ஏறத்தாழ ஜனவரி மாத இடைப்பகுதியில், அது, குடியரசுத் தலைவரின் வரவு செலவுத் திட்டச் செய்தியுரையின் (message) மூலமாகக் காங்கிரசின்முன் வைக்கப்படுகிறது

## வரவு செலவுத் திட்டத்தைச் சட்டமாக்குதல் (Legislation of the Budget)

நிதி ஒதுக்கங்கள் (Appropriations) குடியரசுத் தலைவரின் வரவு செலவுத் திட்டம் காங்கிரசுக்குக் கிடைத்ததும், அதன் செலவு முன்மொழிவுகள் காங்கிரசின் செனெட் அவை (Senate House), பிரதிநிதிகள் அவை (House of Representatives) ஆகியவற்றின் நிதி ஒதுக்கக் குழுக்களுக்கு (Appropriations Committee) அனுப்பப்படுகின்றன அங்கே பலவேறு ஏஜென்சிகளுக்கான வரவு செலவுத் திட்ட வேண்டுகோள்கள், நுணுக்கமான ஆய்வுக்காகப் பலவேறு துணைக்குழுக்களிடம் பிரித்துத்தரப்படுகின்றன இந்தத் துணைக்குழுக்கள் விசாரணைகளை நடத்தலாம், அந்த விசாரணைகளில், குறிப்பிட்ட ஏஜென்சிகளை அழைத்து, அவற்றினுடைய வேண்டுகோள்களின் நியாயத்தை எடுத்துரைக்கும்படிக் கேட்கலாம் இறுதியாக நிதி ஒதுக்க மசோதாக்கள், குழுக்களிலிருந்து அறிக்கை வடிவில் வெளிவருகின்றன வந்ததும், காங்கிரசின் இரு அவைகளும் அவற்றின்மீது விவாதம் நடத்தி வாக்களிக்கின்றன குறிப்பிட்ட மசோதாக்களைப்பற்றி இரண்டு அவைகளுக்கிடையே கருத்து வேறுபாடுகள் இருக்குமானால், அவை மாநாட்டுக் குழுவில் (Conference Committee) நீக்கப்பட்டு ஒழுங்குசெய்யப்படுகின்றன இவ்வாறு இரண்டு அவைகளாலும் நிறைவேற்றப்பட்டபின், நிதி ஒதுக்க மசோதாக்கள், குடியரசுத் தலைவருடைய கையொப்பத்தைப் பெறுவதற்காக அவரிடம் அனுப்பப்பட்டு, அவர் கையொப்பம் இட்டதும், சட்டங்களாக மாறிவிடுகின்றன வரவு செலவுத் திட்டம் காங்கிரசின்முன் வைக்கப்பட்டதற்கும், நிதி ஒதுக்க மசோதாக்களில் குடியரசுத் தலைவர் கையொப்பம் இடுவதற்கும் இடையே உள்ள காலத்தின் அளவு, அம் மசோதாக்களைக் காங்கிரசில் நிறைவேற்றுவதற்கு ஆகும் காலத்தின் அளவைப் பொறுத்திருக்கிறது வரவு செலவுத் திட்டம் காங்கிரசின்முன் ஜனவரி மாதத்தில் வைக்கப்படுவதாலும், நிதி ஒதுக்கங்கள் ஜூலை முதல் நாளில்

தொடங்குகிற நிதியாண்டிற்காகச் செய்யப்படுவதாலும், நிதி ஒதுக்க வேலையானது ஏறத்தாழ ஐந்து மாத காலத்திலேயே செய்துமுடிக்கப்பட வேண்டியிருக்கிறது இதன் விளைவாக, நடப்பு நிதியாண்டு முடிவின் கடைசிச் சிலமணி நேரங்களில் நிதி ஒதுக்கங்களைச் சட்டங்களாக்குவதில் எப்பொழுதும் ஓர் அவசரம் சாப்படுகிறது பல சமயங்களில், முக்கியமான ஏஜென்சிகள், நிதி ஒதுக்கச் சட்டத்தில் தங்களுக்கு எவ்வளவு தொகை ஒதுக்கப்படும் என்பதைத் தெரிந்துகொள்ளாமலே புதிய நிதியாண்டைத் தொடங்கவேண்டிய நிலை ஏற்பட்டுவிடுகிறது[3]

குடியரசுத் தலைவரின் வரவு செலவுத் திட்டத்தை முழுவதுமாகக் காங்கிரஸ் முறையாக ஏற்றுக்கொள்வது அல்லது தள்ளிவிடுவது என்பது கிடையாது தலைவரின் வரவு செலவுத் திட்டத்தை எந்த அளவுக்குக் காங்கிரஸ் ஒத்துக்கொண்டிருக்கிறது என்பது, காங்கிரசால் நிறைவேற்றப்பட்ட வருவாய், மற்றும் நிதி ஒதுக்க மசோதாக்களின் தொகைகள், தலைவரின் வரவு செலவுத் திட்டத்தில் பரிந்துரை செய்யப்பட்டுள்ள தொகைகளோடு ஒப்பிடப்படுவதன்மூலம் காட்டப்படுகிறது இங்கிலாந்தில், வரவு செலவுத் திட்டம், தலைமை அமைச்சரின் அரசாங்கச் சார்பில் நிதி அமைச்சரால் (The Chancellor of the Exchequer) பாராளுமன்றத்தின்முன் வைக்கப்படுகிறது வரவு செலவுத் திட்டம் மக்கள் அவையால் (House of Commons) சட்டப்படி நிறைவேற்றப்படுகிறதா இல்லையா என்பதைப் பொறுத்தே அரசாங்கம் (அமைச்சர் அவை) அங்கே நிலைத்திருப்பது அல்லது வீழ்வது அமைந்திருக்கிறது

**வருவாய் ஏற்பாடுகள் (Revenue Measures)** வருவாயை எழுப்புவதற்கான எல்லா மசோதாக்களும் பிரதிநிதிகள் அவையில்தான் தோற்றுவிக்கப்பட வேண்டும் என்பது அரசியல் அமைப்புக்குத் தேவையாகிறது[4] குடிமக்களின் நலனுக்காக உள்ள இத்தகைய முக்கியமான ஏற்பாடுகள், சட்டமாக நிறைவேற்றப்படுவதற்கு முன்னால், அளவிலும் தன்மையிலும் மிகப் பெரிய மக்கள் பிரதிநிதியாக விளங்கும் அவையால்தான் முதலில் நிறைவேற்றப்பட வேண்டும் என்பதே இதில் அடங்கியுள்ள கோட்பாடு ஒரு வருவாய் மசோதா, முதலில் பிரதிநிதிகள் அவையின்முன், அந்த அவையின் வழிவகைகள்பற்றிய குழுவால் (Committee on Ways and Means) வைக்கப்படுகிறது அந்த மசோதாவை அந்த அவை நிறைவேற்றிவிட்டால், மசோதா செனெட் அவைக்குச் செல்கிறது அங்கே அம் மசோதாவைப்பற்றி நிதிக்குழு (Finance Committee) விசாரணைகள் நடத்தக்கூடும் அதன்பின் மசோதா, செனெட்

அவையில் மீண்டும் வைக்கப்பட்டு, விவாதிக்கப்படுகிறது. ஒருவேளை திருத்தி அமைக்கப்படவுங்கூடும். செனெட் அவையால் நிறைவேற்றப்பட்ட மசோதா, பிரதிநிதிகள் அவையால் நிறைவேற்றப்பட்ட வடிவத்திலிருந்து மாறுபட்டிருந்தால், இரண்டு அவைகளாலும் நிறைவேற்றப்படும் வகையில் இரண்டு அவைகளின் உறுப்பினர்களையும்கொண்ட மாநாட்டுக் குழுவில் அந்த மாறுபாடுகள் நீக்கப்பட்டு, மசோதாவுக்கு இறுதி வடிவம் தரப்படுகிறது. அதன்பின், மசோதா, குடியரசுத் தலைவரின் கையொப்பத்திற்கு அனுப்பப்படும்.

வரவு செலவுத் திட்டமானது, தொடக்கநிலை மதிப்பீடுகளிலிருந்து இறுதியான நிதிஒதுக்கங்கள், மற்றும் வருவாய் ஏற்பாடுகள்வரை எவ்வாறெல்லாம் பயணம் செய்கிறது என்பதைப் பற்றிய நம்முடைய கருத்தாய்வில், வரவு செலவுத் திட்டத்தின் விதிமுறைத் தன்மைகளைப்பற்றி (formal aspects) நாம் அளவுக்கு மீறிக் கவனம் செலுத்தியிருக்கக்கூடும். நாம் இப்படிச் செய்ததற்கான காரணம், செலவுகள் அல்லது வரவுகளின் மொத்தத் தொகைகள், காங்கிரசின் ஒன்றோடொன்று தொடர்பற்ற தனித் தனி நடவடிக்கைகளின் விளைவாக முற்றிலும் ஒழுங்கீனமான முறையில் உருவாக்கப்படுகின்றன என்று மிகப் பரவலான முறையில் கருதப்படுகிற எண்ணம் தவறானது என்பதை எடுத்துக் காட்டுவதற்கே ஆகும். ஆனால், அதே சமயத்தில், நிதி ஒதுக்கங்கள் செய்யப்படும்போது, அவற்றைச் செய்யும் குழுக்கள் விதிப்படி இல்லாத பலவகை வற்புறுத்தல்களுக்கு (informal pressures) உள்ளாக வேண்டியிருக்கிறது. சட்டமன்றத்தோடு அழுத்தமான நடைமுறைத் தொடர்புகளை வைத்திருந்தால் அதிக நிதி ஒதுக்கங்களைப் பெறமுடிகிறது என்பதை, நெடுநாளாக இருக்கிற அரசாங்க ஏஜன்சிகள் நன்றாக உணர்ந்திருக்கின்றன. ஏதேனும் விவரங்கள் தேவை என்று சட்டமன்ற உறுப்பினர்கள் குறிப்பாகக் கேட்டால், அவற்றை ஆர்வத்தோடும் உடனடியாகவும் இந்த ஏஜன்சிகள் தந்து உதவுகின்றன. அப்படி உதவுவதன்மூலம் இந்த ஏஜன்சிகளைப்பற்றித் தலையாய சட்டமன்ற உறுப்பினர்களுக்கு உள்ள அறிவைப் பேணி வளர்ப்பது இந்த ஏஜன்சிகளின் பணியில் ஒரு பகுதியாக இருக்கிறது. ஏஜன்சிகள் தங்களோடு தொடர்புடைய ஆட்களோடும் குழுக்களோடும் நல்ல முறையில் பழகுவதால், தங்களுக்குத் தேவையான அளவில் நிதி ஒதுக்கங்களைப் பெற்றுத் தருவதற்காக அந்த ஆட்களின் ஆதரவையும் குழுக்களின் ஆதரவையும் பெறமுடிகிறது. ஆனால், புதிதாகவும் விவரம் தெரியாமலும் உள்ள ஏஜன்சியானது, நண்பர்களைப் பெறுவது எப்படி என்பதையும், சட்டமன்ற உறுப்பினர்கள்மீது தன் செல்வாக்கைப்

பயன்படுத்துவது எவ்வாறு என்பதையும் அறிந்துகொள்ளாமல் இருக்கிற காரணத்தால், போதிய அளவில் நிதி ஒதுக்கங்களைப் பெருமல் இருக்கக்கூடும்.

**கூட்டரசாங்கத்தின் 'சட்டமன்ற வரவு செலவுத் திட்டம்' (The Federal 'Legislative Budget'):**

1946-ல் நிறைவேற்றப்பட்ட சட்டமன்ற மறு அமைப்புச் சட்டமானது (The Legislative Reorganisation Act), 'சட்ட மன்ற வரவு செலவுத் திட்டம்' என்று அதிகாரபூர்வமாக அழைக் கப்பட்ட ஒரு விந்தையான அமைப்பைக் கூட்டரசாங்க நிதித் துறையில் புதிதாக ஏற்படுத்திற்று. அது ஓர் உண்மையான வரவு செலவுத் திட்டம் அன்று. ஏனென்றால், 'ஒரு குறிப்பிட்ட ஆண்டில் நிதி ஒதுக்கம் செய்யப்படக்கூடிய உச்ச அளவுத் தொகையைமட்டுமே' அது வரையறுத்ததே தவிர, அந்த மொத்தத் தொகையின் பல்வேறு பகுதிகளை எவ்வாறு செல வழிப்பது என்பதுபற்றிய பரிந்துரைகளை அது தன்னகத்தே கொண் டிருக்கவில்லை. ஒவ்வொர் ஆண்டும் பிப்ரவரி மாதம் 15ஆம் தேதிக்குள் (குடியரசுத் தலைவர் தன் வரவு செலவுத் திட்டத்தைக் காங்கிரசின்முன் வைத்த நாளிலிருந்து ஒரு மாதத்தைவிடக் குறைந்த காலத்தில்), சட்டமன்ற அவைகளின் ஒரு கூட்டுக் குழு வானது (Joint committee), அந்த ஆண்டில் செய்யப்படக்கூடிய மொத்தச் செலவுகளுக்கு ஓர் உச்சவரம்பை அமைக்கவேண்டும் என்றும், பல்வேறு ஏஜன்சிகளுக்குத் தனித்தனியாகச் செய்யப் படுகிற நிதி ஒதுக்கங்களின் மொத்தத் தொகை இந்த உச்ச வரம்புக்குள் அடக்கப்படவேண்டும் என்றும் சட்டமன்ற மறு அமைப்புச் சட்டம் விதி அமைத்தது.

இந்தச் 'சட்டமன்ற வரவு செலவுத் திட்டம்' வழக்கமாக உருவாக்கப்படுகிற நிர்வாக வரவு செலவுத் திட்டத்திற்குப் பதிலாக ஏற்படுத்தப்பட்டதல்ல என்பதையும், அதனோடுகூட அதற்கு இணைப்பாக இருக்கும் வகையில் ஏற்படுத்தப்பட்டதே என்பதையும், 'குடியரசுத் தலைவரின் வரவு செலவுத் திட்டப் பரிந்துரைகளைக் கவனமாக பரிசீலித்த பிறகே' மொத்தச் செலவின் உச்ச வரம்பு முடிவுசெய்யப்பட வேண்டும் என்று மேற் குறிப்பிட்ட சட்டம் எதிர்பார்க்கிறது என்பதையும் இச் சமயத்தில் நினைவில் நிறுத்துவது நல்லது. காங்கிரசின் தனித்தனி நிதி ஒதுக் கங்களின் கூட்டுத்தொகை, அதன் உறுப்பினர்களால் எதிர்பார்க்கப் பட்ட அளவைவிட ஏறத்தாழ ஒவ்வொன்றும் கூடுதலாகவே இருப்பதால், அந்த உறுப்பினர்களிடம் இடையீடின்றி இருக்கிற மனச்சோர்வின் விளைவாகவே சட்டமன்ற வரவு செலவுத் திட்ட

ஏற்பாடு உருவாயிற்று. மொத்தச் செலவின் உச்சவரம்பை ஏற்படுத்தியபிறகு நிதி ஒதுக்க நடவடிக்கைகள் தொடங்கப்பட்டால், தனித்தனி நிதிஒதுக்க மசோதாக்களின் தொடர்பாகச் சட்டமன்ற உறுப்பினர்கள் நடவடிக்கை எடுக்கும்போது தங்களைத் தாங்களே கட்டுப்படுத்திக்கொள்வது அவர்களுக்கு எளிதாக இருக்கும் என்று பொதுவாக நம்பப்பட்டது.[5]

ஆனால், இந்தத் திட்டத்தில் அடங்கியிருந்த இரண்டு குறைபாடுகளின் விளைவாகத் திட்டம் முழுத் தோல்வியை அடைவது தவிர்க்க முடியாததாகிவிட்டது. ஒரு மொத்தத்தில் (a total) அடங்கியுள்ள பல்வேறு பகுதிகளைப்பற்றிய தெளிவான அறிவைப் பெறுவதற்கு முன்னரே அந்த மொத்தத்தின் அளவை முடிவுகட்ட வேண்டும் என்கிற—இயலாத செயலைச் செய்ய முயன்றதே, இந்தத் திட்டத்தின் முதலாவது குறைபாடும், தலையாய குறைபாடும் ஆகும். இந்தத் திட்டத்தை நடைமுறைப்படுத்தத் தொடங்கிய முதல் முயற்சியின்போதே, இரண்டு அரசியல் கட்சிகளின் பிரதிநிதிகளும், செலவின் உச்ச வரம்பானது ஓர் 'அறிவார்ந்த ஊகமாகவே' ('intelligent guess') இருக்கமுடியும் என்றும், வெறும் கற்பனையின் அடிப்படையிலேயே தாங்கள் அந்த எண்ணிக்கையைக் கண்டறியவேண்டியிருக்கிறது என்றும் ஒப்புக்கொண்டார்கள். அரசியல் கண்ணோட்டத்தில் பார்த்தால், சிக்கல் நிறைந்ததாக இருக்கிறது என்பதே இத் திட்டத்தின் இரண்டாவது குறைபாடாகும். இது முதல் குறைபாட்டோடு ஓரளவு தொடர்புடையதே. காங்கிரசானது, அரசாங்கச் செலவில் சிக்கனம் ஏற்பட வேண்டும் என்கிற விழைவு இடையறாது காணப்படுகிற ஒரு சூழ்நிலையில், மக்களால் பெரிதும் விரும்பப்படக்கூடிய அளவில் செலவின் உச்சவரம்பை அஞ்சாமல் ஏற்படுத்திவிட்டாலும், கூட்டத்தொடர் முடியும்போது, தான் ஏற்படுத்திய உச்ச வரம்பைத் தானே மீறியிருக்கிற நிலையைத்தான் காணமுடியும். அத்தகைய நிலையில், ஆளும் கட்சி பணத்தை வீணாகச் செலவழிக்கிறது என்னும் குற்றச்சாட்டை எழுப்புவதற்கான ஒரு வாய்ப்பு எதிர்க் கட்சிக்கு எளிதாக ஏற்பட்டுவிடும். ஆகவே, காங்கிரசில் உள்ள பெரும்பான்மைக் கட்சி, 'வெறும் கற்பனையின் அடிப்படையில் அமைந்த' எந்த உச்சவரம்புத் தொகைக்கும் பொதுவாகத் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள விரும்பாது என்றே கூறிவிடலாம்.[6]

'சட்டமன்ற வரவு செலவுத் திட்ட' உச்சவரம்பு ஏற்பாட்டில் பொதிந்துள்ள இந்தக் குறைபாடுகளின் விளைவாக அந்த ஏற்பாடு மிக விரைவில் கைவிடப்பட்டுவிட்டது. இந்த ஏற்பாடு கையாளப்பட்ட முதல் ஆண்டில், காங்கிரசின் இரண்டு அவைகளும், எந்த ஓர்

எண்ணையும் உச்சவரம்புத் தொகையாக ஒருமுகமாக ஏற்றுக் கொள்ள முடியவில்லை. செலவின் உச்சவரம்பு என்பதன் அடிப் படையே பொருளற்றதாக இருக்கும் நிலையில், அத்தகைய உச்ச வரம்பு எதுவாக இருக்கலாம் என்பதுபற்றி இரண்டு அவைகளுக்கு இடையே ஏற்பட்ட கருத்து வேறுபாட்டைத் தீர்த்துவைப்பதற் கான முயற்சியை அவை கைவிட்டுவிட்டன. நடைமுறைக்குப் பொருத்தமான ஒரு தொகையைச் செலவின் உச்ச அளவாக ஏற் படுத்துவதற்கு வசதியாக இருக்கும் வகையில், உச்ச அளவை ஏற்படுத்துவதற்கான தேதியைக் கூட்டத்தொடரின் பிற்பகுதிக்குத் தள்ளிவைக்கலாம் என்பதாக, சிறிது காலத்திற்குப் பிறகு, ஒரு முயற்சி செய்யப்பட்டது. ஆனால், நிதி ஒதுக்கங்கள் செய்து முடிக்கப் பட்ட பிறகு உள்ள காலத்தில் அந்தத் தேதியை அமைப்பதால், உச்ச அளவுத் திட்டத்தின் நோக்கமே தகர்க்கப்பட்டுவிடுகிறது. இத் திட்டத்தின் நோக்கம், நிதி ஒதுக்கங்கள் காங்கிரசால் நிறை வேற்றப்படும்போது அந் நிதி ஒதுக்கங்களின் தொகைகளைக் கட்டுப் படுத்தும்படி அக் காங்கிரசைத் தூண்டும் கருவியாக இத் திட்டம் இருக்கவேண்டும் என்பதே அல்லவா? மிக அண்மைக் காலமாக, அனைவருடைய ஒப்புதலின் விளைவாக, இத் திட்டம் கையாளப்படுவ தில்லை.

செலவுகள்பற்றி விழிப்பான முறையிலும், அறிவார்ந்த வகை யிலும் எடுக்கப்படும் சட்டமன்ற நடவடிக்கைகளுக்கு ஆதரவு கொடுக்கும் முறையில் அல்லது அந் நடவடிக்கைகளை ஈடுசெய்யும் வகையில் உருவாக்கப்பட்ட பல்வேறு அமைப்புகளின் தோல்வி வரிசையில், கூட்டரசாங்கத்தின் 'சட்ட மன்ற வரவு செலவுத் திட்டத்தின்' தோல்வியும் ஒன்றாக அமைந்துவிட்டது.[7]

விரும்பத்தக்க பணிகளை நிறைவேற்றுவதற்குத் தேவையான தனித்தனி நிதி ஒதுக்கங்களின் கூட்டுத் தொகையே, நிதி ஒதுக் கங்களின் மொத்தத் தொகையாகும் என்பதுதான் செலவைப் பற்றிய வரவு செலவுத் திட்டத்தின் உயிர்நாடியாகும். தனித்தனி நிதி ஒதுக்கங்கள் பொருத்தமானவையாக இருந்தால், நிதி ஒதுக் கங்கள் அனைத்தினுடைய மொத்தத் தொகையும் பொருத்தமான தாகவே இருக்கும். ஆனால், கூட்டரசாங்கத்தின் 'சட்டமன்ற வரவு செலவுத் திட்டக்' கருத்தானது, சட்டப்படி நிறைவேற்றப் பட்ட 'பொருத்தமானதாகக் காணப்படுகிற' — மொத்தத் தொகை ஒன்றை முதலில் முடிவுசெய்துவிட்டு, அதன்பின் தனித்தனி நிதி ஒதுக்கங்களை அந்த மொத்த அளவுக்குள் அடக்கி வைக்கப் பார்க்கிறது. 1947-ல் செலவின் உச்சவரம்பை முடிவு செய்வதுபற்றிய தொடக்கநிலைப் பணிகளை நிறைவேற்றிய

குழுக்கள், அந்த வரம்பானது ஓர் இறுதி நோக்கமே தவிரக் காங்கிரசின்மீது அழுத்தந்திருத்தமான முறையில் சுமத்தப்பட்டுவிட்ட கட்டாயத் தன்மை பொருந்திய ஒரு வரையறை அன்று என்பதைத் தெளிவாக எடுத்து விளக்கின. உச்சவரம்பு ஏற்பாட்டைத் தாராளமான கண்ணோட்டத்திலிருந்து பார்த்தால், காங்கிரசின் நேரமும் முயற்சியும் வீணுவதுதான் அந்த ஏற்பாட்டின் விளைவு என்பது தெரியவரும். அந்த ஏற்பாட்டைக் கண்டிப்பான கண்ணோட்டத்திலிருந்து பார்த்தால், நாட்டின் நலனை உச்ச அளவில் ஏற்படுத்துவதற்கு ஏற்ற வகையில் அரசாங்க நிதிகளின் செலவுப் போக்குகளை அமைக்கவேண்டும் என்னும் வரவு செலவுத் திட்ட நோக்கத்தை அது தகர்த்துவிடுகிறது என்பது விளக்கமாகத் தெரியும். எந்த வகைத் திட்டத்திலும், குடியரசுத் தலைவரின் வரவு செலவுத் திட்டத்தை ஒரு வழிகாட்டியாகக்கொண்டு, நிதி ஒதுக்கங்களை முடிவுசெய்யும் பொறுப்பைப் பெற்றிருப்பது காங்கிரஸ்தான். இந்த நிலையில், 'சட்டமன்ற வரவு செலவுத் திட்டச்' சிக்கலால் எத்தகைய உண்மையான நன்மையும் ஏற்படுவதாகத் தெரியவில்லை.

## வரவு செலவுத் திட்டம்பற்றிய சிக்கல்கள் (Problems of The Budget):

நிர்வாக வரவு செலவுத் திட்டம் (The Executive Budget) உருவாக்கப்படும் நடைமுறைகளைப்பற்றியும், அரசாங்கத்தின் சட்டமன்றப் பிரிவால் அது நிதிச் சட்டமாக மாற்றப்படுவது பற்றியும் இந்த அத்தியாயத்தின் தொடக்கத்தில் நாம் கருத்தாய்வு புரிந்துள்ளோம். அரசாங்கத்தின் வரவுகள், செலவுகள் ஆகியவற்றைச் சீரிய சிந்தனையையும் சிறந்த நோக்கத்தையும் அடிப்படையாகக் கொண்ட முறையில் உச்ச அளவில் கட்டுப்பாடு செய்வதற்காகவே, வரவு செலவுத்திட்ட முறை ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இந்த முறையோடு தொடர்புடைய அரசாங்கத்தின் நிர்வாகப் பிரிவு, சட்டமன்றப் பிரிவு ஆகிய இரண்டு பிரிவுகளுக்கும் இந்தக் கட்டுப்பாட்டுப் பணியை ஆற்றுவதற்குரிய தகுதி இருக்கிறது என்று இந்த முறையானது பாவித்துக்கொள்கிறது. ஆனால், வரவு செலவுத் திட்ட முறையானது, நிதிக் கொள்கையை வகுப்பதில் பொருத்தமான முடிவுகளைச் செய்வதற்குத் தேவையான எளிதில் மாற்றக்கூடிய தன்மையும், அகன்ற பரப்பும் உடையதாக இருந்த போதிலும், ஒருதலைச் சார்பான போக்கு, தகுதியின்மை ஆகிய இயல்புகளுக்கும் அது தாராளமான வாய்ப்புகளை அளித்துவிடுகிறது. அரசாங்கத்தில் ஜனநாயகக் கோட்பாட்டைக் கையாள்வது பொருத்தமான போக்காக இருந்தால், ஜனநாயக முறையில் அமைந்த நிதித்திட்டத்தின் ஒரு கருவியாக வரவு செலவுத் திட்டத்தைக் கையாள்வதும் பொருத்தமான கருத்தே ஆகும்.

இவ்வாறு இயம்புவதால், ஒரு குறிப்பிட்ட வரவு செலவுத் திட்ட நடைமுறையில் குறைபாடே இருக்கமுடியாது என்பதோ, வரவு செலவுத் திட்டத்தின் ஒரு வகை நடைமுறை மற்றொரு வகை நடைமுறையைவிட உயர்ந்ததாக இராது என்பதோ பொருளாகாது. வரவு செலவுத் திட்டத்தோடு தொடர்பு உடையதாகவும், தொடர்ந்து இருந்துவருவதாகவும் உள்ள சில சிக்கல்களும், சிறந்த முறையில் வரவு செலவுத் திட்டம் தீட்டுவதைத் தடுக்கும் தன்மை படைத்த சில நடைமுறைகளும் கீழே உள்ள பத்திகளில், சுருங்கிய முறையில் ஆராயப்பட்டுள்ளன.

**நிர்வாகத் திறமையை அளந்தறிதல் (Measurement of Administrative Efficiency):**

அரசாங்கம் எந்தப் பணியை ஆற்றினும் அதனைத் திறமையான முறையில் ஆற்ற வேண்டும் என்னும் கருத்தை ஏற்காதவர்கள் யாரும் இருக்கமுடியாது. அரசாங்கப் பணிகளின் தரம் குறையாமல் அவற்றை முடிந்த அளவு குறைந்த செலவில் ஆற்றவேண்டும் என்பதுதான் இந்தக் கருத்தின் பொதுவான பொருளாகும். நேர்முக நிவாரண உதவியைப் பெறுகிற ஓர் ஆளுக்குச் செலுத்தப்படுகிற தொகை, அவரைப் பட்டினி கிடப்பதிலிருந்து தடுப்பதற்குத் தேவையான அளவுக்கே இருக்கவேண்டும் என்பது இக் கருத்தின் பொருள் அன்று. ஆனால், நிவாரணத்திற்காக நிதி ஒதுக்கம் செய்யப்பட்டுள்ள தொகையில் முடிந்த அளவு மிகுதியான தொகை, யாருக்கு நன்மை செய்வதற்காக இது ஒதுக்கம் செய்யப்பட்டுள்ளதோ, அவர்களையே சென்று அடையவேண்டும் என்பதும், நிர்வாகச் செலவுக்காகவும், வீணாகும் வகையிலும் மிகக் குறைந்த தொகையே எடுத்துக்கொள்ளப்பட வேண்டும் என்பதும் இக் கருத்தின் பொருளாகும். அதுபோலவே, வாங்கும் திறனைப் பொருளாதாரத்தில் செலுத்துவதற்காக மாபெரும் அளவில் செலவிடும் ஒரு திட்டத்தை அரசாங்கம் தொடங்குமானால், உச்ச அளவில் விளைவுகள் ஏற்படும் முறையில் நிதிகள் செலவிடப்படவேண்டும். இந்தத் திட்டத்தைப் பொறுத்த அளவில், திறமையான முறையில் செலவிடுவது என்றால், செலவிடப்படும் தொகையானது விளைவுகளைத் தரக்கூடிய இடங்களைச் சென்று அடையத்தக்கதாக இருக்கவேண்டுமே தவிரச் செல்லும் வழியிலேயே வீணாகச் சிதறுண்டுபோவதாக இருத்தல் ஆகாது என்பதே பொருளாகும்.

திறமையாகச் செலவிடப்படவேண்டும் என்னும் நோக்கத்தை ஒப்புக்கொண்டால், வரவு செலவுத் திட்ட அதிகாரிகள் அல்லது சட்டமன்ற அதிகாரிகள் நிர்வாகத் திறமையை எவ்வாறு அளந்தறிய முடியும் என்னும் கேள்வி எழுகிறது. அரசாங்க நடவடிக்கை

கள் இக் காலத்தில் இருப்பதைப்போல மிகக் கூடுதலான சிறப்புத் தேர்ச்சி உடையனவாகவும், தொழில்நுட்பம் பொருந்தியனவாகவும் உள்ளபோது, பல்வேறு நடவடிக்கைகளின் நிர்வாகத்தில் காணப்படுகிற திறமையைக் குடியரசுத் தலைவரோ, வரவு செலவுத் திட்டக் கழகமோ, காங்கிரசோ எவ்வாறு அளக்க முடியும்? ஒரு நடவடிக்கையை நிர்வாகம் செய்பவருக்கே அந் நிர்வாகத்தைப்பற்றி வேறு எவரையும்விட மிகுதியான அறிவு இருக்குமாதலால், அந் நிர்வாகத்தில் திறமையை ஏற்படுத்தத்தக்க நிலையில் இருப்பவர் அவரே. அதே காரணத்தை முன்னிட்டு, திறமையை அளந்தறிவதற்கான சிறந்த நிலையில் இருப்பவரும் அவரே என்பது தெளிவு. ஆனால், அவருடைய ஏஜன்சியானது பெரும்பாலும், அவரால் உருவாக்கப்பட்டதாகவே இருப்பதால், அதனுடைய திறமையின்மைகளை அவரால் கண்டறிய முடியாது; அல்லது கண்டறியும் விருப்பம் அவருக்கு இருக்காது. இந்த நிலைமையின் விளைவாக அவருடைய ஏஜன்சியின் நிர்வாகத் திறமை பற்றி அவர் தரக்கூடிய தீர்ப்பு முற்றிலும் நடுநிலை பொருந்தியதாக இருக்க முடியாது. ஒவ்வொரு நிர்வாகிக்கும் அவருடைய ஏஜன்சியின் திறமையைப் பற்றியும் தேவைகளைப்பற்றியும் இறுதித் தீர்ப்பு அளிக்கும் நிலைமை தரப்படுமானால், செலவிடும் துறைகளின் திருத்தப்படாத மூலமதிப்பீடுகளின் அடிப்படையிலேயே வரவு செலவுத் திட்டம் உருவாக்கப்படும். இவ்வாறு உருவாக்கப்பட்டால், வரவு செலவுத் திட்ட அதிகாரிகள் தங்களுடைய பொறுப்புகளை முற்றிலும் துறந்துவிட்டார்கள் என்றே பொருளாகும்.

வரவு செலவுத் திட்டத் துறை அல்லது கழகம் (The Budget Department or Bureau), குறிப்பிட்ட ஏஜன்சிகளின் நடவடிக்கைகளைப்பற்றி நெருக்கமான முறையில் அறிந்துள்ள—திறமையும், சிறப்புத் தேர்ச்சியும் படைத்த—வல்லுனர்களைப் பெற்றிருக்க வேண்டியது இன்றியமையாத ஒன்றாகும். எடுத்துக்காட்டாக, ஒரு மாநில அரசாங்கத்தின் வரவு செலவுத் திட்டத் துறையானது, நெடுஞ்சாலைப் பொறியியலிலும், நெடுஞ்சாலைத் துறை நிர்வாகத்திலும் வல்லுநராக உள்ள வரவு செலவுத் திட்ட ஆராய்வாளர் (budget examiner) ஒருவரையாவது குறைந்த அளவில் பெற்றிருக்க வேண்டும். அந் நிலையில் அந்த ஆராய்வாளர், நெடுஞ்சாலைத் துறையின் உறுப்பினராக இல்லாமல், அந்தத் துறையின் நடவடிக்கைகள்பற்றிய சிறப்புத் தேர்ச்சியாளராக அமைந்துவிடுகிறார். எனவே, அவர் அந்தத் துறையின் நிதிகள் திறமை பொருந்திய முறையில் செலவிடப்படுகின்றனவா என்பதைக் கண்டறியவல்ல நடுநிலைமையும் தகுதியும் படைத்த 'நீதிபதி'யாக ஆகிவிடுகிறார்.

அவருடைய தலைமைஅதிகாரியின் மூலமாக அவர், அந்தத் துறையின் செலவுகளில் விரும்பத்தக்க மாறுதல்களை ஏற்படுத்த வல்ல நிதி ஒதுக்கங்களின் குறிப்பிட்ட பங்கீட்டு முறைகளைப் (specific allocation of appropriations) பரிந்துரை செய்யலாம். அவர் தம்முடைய பணியைச் சிறப்பான முறையில் நிறைவேற்ற வேண்டுமானால், அவருக்கு இரண்டு தகுதிகள் இருந்தாகவேண்டும். எந்த ஏஜன்சியின் வரவு செலவுத் திட்டத் தேவைகளை அவர் ஆராய வேண்டியிருக்கிறதோ அந்த ஏஜன்சிபற்றிய நுணுக்கமான அறிவு, அந்த ஏஜன்சியின் தலைவரைச் சாராமல் இருக்கும் முழுச் சுதந்திர நிலை ஆகிய இரண்டுமே அந்தத் தகுதிகள் ஆகும். அளவில் பெரிதாக உள்ள செலவிடும் ஏஜன்சிகள் ஒவ்வொன்றிற்கும், தகுதியும் சிறப்புத்தேர்ச்சியும் படைத்த அத்தகைய ஆராய்வாளர் அல்லது அலுவலர் ஒருவர் இருப்பது இன்றியமையாதது. சிறிய அளவில் செலவிடும் ஏஜன்சிகளையும் அதே அளவில் ஆராய்வது, இயலாத செயல்மட்டும் அல்ல; அத்துணை முக்கியமல்லாத செயலும் ஆகும்.

ஆனால், அதே சமயத்தில் அரசாங்கத்தின் சட்டமன்றப் பிரிவும் நிர்வாகத் திறமையின் அளவைப்பற்றித் தகுதிமிக்க பரிசீலனை செய்யவேண்டியது இன்றியமையாதது ஆகும். அத்தகைய தகுதி, நிதி ஒதுக்கக் குழுக்கள் அல்லது துணைக் குழுக்களிடம் அமைந்திருக்கவேண்டும். கூட்டரசாங்க மட்டத்தில், நிதி ஒதுக்கத் துணைக்குழுக்கள், நிர்வாகத் திறமையைப் பரிசீலிப்பதில் குறிப்பிடத்தக்க கவனம் செலுத்துகின்றன. அந்தக் குழுக்களால் நடத்தப்படுகிற விசாரணைகளின்போது, தங்களுடைய ஏஜன்சியின் அமைப்புமுறை, நடைமுறை ஆகியவற்றின் நியாயத்தை எடுத்துக்கூறும்படி ஏஜன்சிகளின் தலைவர்கள் அடிக்கடி அழைக்கப்படுகிறார்கள். அந்த விசாரணைகளின்போது, பல சட்டமன்ற உறுப்பினர்கள், நிர்வாகத்தில் காணப்படுகிற திறமைக் குறைவுகளை எடுத்துக்காட்டுவதில் பேரார்வம் காட்டுகிறார்கள். திறமைக் குறைவானவை என்று கருதப்படுகிற ஏஜன்சிகளுக்கு அல்லது திட்டங்களுக்குத் தரவேண்டிய நிதிகளை நிறுத்திவைக்கும் அதிகாரம் சட்டமன்றப் பிரிவுக்கு இருப்பதால், அந்தப் பிரிவால் அந்த ஏஜன்சிகளில் அல்லது திட்டங்களில் முன்னேற்றத்தை ஏற்படுத்தமுடிகிறது. நிதி ஒதுக்கத் துணைக்குழுக்களின் தலையாய உறுப்பினர்கள், எந்த ஏஜன்சிகளுக்கான நிதி ஒதுக்கங்களைச் செய்வதில் அந்தக் குழுக்கள் மிகுந்த அதிகாரம் படைத்தவையாக இருக்கின்றனவோ, அந்த ஏஜன்சிகளின் நடவடிக்கைகளில் மிக உயர்ந்த சிறப்புத் தேர்ச்சி பெற்றவர்களாக இருப்பது, வழக்கமாக இருந்துவருகிறது.

## வரவுசெலவுத் திட்ட முன்மொழிவுகள்பற்றிய இடர்ப்பாடுகள் (Difficulties with Budget Projections)

ஒரு குறிப்பிட்ட எதிர்காலத்தில் கிடைக்கக்கூடிய வரவுகள் பற்றிய மதிப்பீடுகளேயும், அந்தக் காலத்தில் செலவுசெய்வதற்காகப் பரிந்துரைக்கப்பட்ட செலுத்தல்களேயும் தன்னகத்தே கொண்டிருப்பது ஒரு வரவு செலவுத் திட்டத்தின் இயல்பாகும். கூட்டரசாங்கத்தைப் பொறுத்த அளவில், ஜனவரி மாதத்தில் காங்கிரசின்முன் வைக்கப்படுகிற வரவு செலவுத் திட்ட அறிக்கையில் காணப்படுகிற மதிப்பீடுகள், அந்த அறிக்கை அவ்வாறு வைக்கப்படுவதற்குச் சிறிது முன்னதாகத் தயாரிக்கப்படுகின்றன. ஆனுல், அம் மதிப்பீடுகள், ஏறத்தாழப் பதினெட்டு மாதங்களுக்குப் பின்னர் முடிய இருக்கிற ஒரு காலப் பிரிவைப்பற்றியனவாக இருக்கின்றன. கூட்டரசாங்க வருவாய்களில் பெரும் பகுதி, நிகரத் தனியார் வருமானம், நிகரக் கார்ப்பொரேஷன் வருமானம் ஆகிய வற்றின்மீது விதிக்கப்படும் வரிகளிலிருந்தே பெறப்படுவதாலும், நிகர வருமானமானது குறுகிய காலங்களில் குறிப்பிடத்தக்க மாறுதலுக்கு ஆளாகக்கூடிய இயல்பை உடையதாக இருப்பதாலும் கூட்டரசாங்க வருவாய் மதிப்பீடுகள் பெரும் அளவில் தவற்றை உடையனவாக இருக்கக்கூடும். இந்த உண்மை செலவு பற்றிய மதிப்பீடுகளுக்கும் பொருந்தும். ஆனுல், குடியரசுத் தலேவரால் காங்கிரசின்முன் வைக்கப்படும் வரவு செலவுத் திட்டச் செலவு முன்மொழிவுகளில் மாறுதல் ஏற்படுவதற்கான ஒரு தலேயாய காரணம், பரிந்துரை செய்யப்பட்டதைவிட மிகுதியாக அல்லது குறைவாகச் செலவிடுவது என்று காங்கிரஸ் செய்கிற முடிவே ஆகும்.

குறிப்பிட்ட நிதி ஆண்டின் வரவு செலவுத் திட்ட அறிக்கையில் தரப்பட்டுள்ள வரவுகள், செலவுகள், உபரி அல்லது பற்ருக்குறை ஆகியவைபற்றிய மதிப்பீடுகளுக்கும், அந்த நிதி ஆண்டு முடிந்த பிறகு, அந்த ஆண்டில் நடைமுறையில் கிடைத்த வரவுகள், நடைமுறையில் செய்யப்பட்ட செலவுகள், ஏற்பட்ட உபரி அல்லது பற்ருக்குறை ஆகியவைபற்றிய புள்ளிவிவரங்களுக்கும் உள்ள வேறுபாடுகளேக் கீழேயுள்ள பட்டியல் எடுத்துக்காட்டுகிறது. வேறுபாடுகள் பில்லியன் டாலர்கள் கணக்கில் தரப்பட்டுள்ளன. எதிர்மறை (—) எண்கள் மதிப்பீட்டைவிடக் குறைவாக உள்ள வரவுகள் அல்லது செலவுகளேயும், மதிப்பீட்டைவிடக் குறைவாக உள்ள உபரி (surplus) அல்லது கூடுதலாக உள்ள பற்ருக்குறையையும் (deficit) குறிப்பிடுகின்றன.

| | 1954 | 1955 | 1956 | 1957 | 1958 | 1959[8] |
|---|---|---|---|---|---|---|
| வரவு செலவுத் திட்ட வரவுகள் | —4.0 | —2.3 | 8.1 | 4.7 | —4.5 | —7.4 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| வரவு-செலவுத் திட்டச்செலவுகள் | —10.8 | —1.0 | 3.9 | 3.6 | 0.1 | 5.3 |
| உபரி அல்லது பற்றுக்குறை | 5.8 | —1.3 | 4.2 | 1.2 | —4.6 | —11.8 |

செலவுகள்பற்றிய மதிப்பீடுகளுக்கும் நடைமுறைச் செலவுகளுக்கும் உள்ள வேறுபாட்டைவிட வரவுகள்பற்றிய மதிப்பீடுகளுக்கும் நடைமுறை வரவுகளுக்கும் உள்ள வேறுபாடே பொதுவாக மிகக் கூடுதலாக இருப்பதைக் காணலாம். இப்படி இருப்பதற்கான முக்கியமான காரணம், எதிர்பார்க்கப்பட்டபடி வாணிப நிலைமைகள் உருவாகாததே ஆகும். வரி மாறுதல்கள்பற்றிய முன்மொழிவுகளால் வரவுகளில் 1954, 1955 ஆகிய ஆண்டுகளில் ஏற்படக்கூடும் என்று எதிர்பார்க்கப்பட்ட விளைவுகள்பற்றிய மதிப்பீடுகளின் தவறுகளும் இதற்கு ஓரளவு காரணமாகும்.

வரவு செலவுத் திட்டத்தின் செலவு மதிப்பீடுகளிலிருந்து ஏற்பட்ட வேறுபாடுகள் அனைத்தும், நிர்வாக வரவு செலவுத் திட்டத்தின் பரிந்துரைகளிலிருந்து மாறுபட்ட நடவடிக்கைகளைக் காங்கிரஸ் மேற்கொண்டதால் ஏற்பட்டவையே என்று கூறுவது எளிது. ஆனால், அத்தகைய வேறுபாடுகள் ஏற்பட்டதற்கான பல காரணங்களில் இதுவும் ஒன்று என்பதுதான் உண்மை. தற்போதுள்ள சட்டத்தின்படி செலுத்தல்களைப் பெறுவதற்குரிய தகுதி படைத்தவர்களின் எண்ணிக்கை மிகுதியானாலும் அவர்கள் யாவருக்கும் செலுத்தல்களைத் தரவேண்டும் என்பது காங்கிரசின் கொள்கையாக நிலைநாட்டப்பட்டுள்ளதால், சில வரவு செலவுத் திட்டச் செலவுகள் வளரக்கூடிய தன்மை உடையனவாக இருக்கின்றன என்பதையும் நாம் இங்கே கவனிக்கவேண்டும். வேளாண்மைப் பொருள்களின் விலை ஆதாரத் திட்டங்கள் (agricultural price support programmes) மாநிலங்களுக்குத் தரப்படுகிற பொது உதவிக் கொடைகள் (public assistance grants) ஆகியவை இதற்கு உரிய எடுத்துக்காட்டுகள் ஆகும். முதலில் குறிபிட்ட திட்டத்தின்படி, விற்பனைக்கு வைக்கப்படுகிற ஒரு வேளாண்மைப் பொருளின் எந்த அளவையும் வாங்குவதற்கு அரசாங்கம் உறுதிதருகிறது (நடைமுறையில், முதலில் கடன்களைத் தருவதற்கான உறுதியாக இது அமைகிறது). இரண்டாவதாகக் குறிப்பிட்ட திட்டத்தின்படி, கூட்டரசாங்கம் ஒரு மாநில அரசாங்கத்திற்குத் தருகிற உதவிக் கொடையின் அளவு, அந்த மாநில அரசாங்கத்தின் செலவுத் தொகையையும் பொறுத்திருக்கிறது. நிதி ஆண்டு 1959-ல் 1958 ஆம் ஆண்டின் ஜனவரி மாதத்தில் மதிப்பிடப்பட்ட செலவுத் தொகைக்கும் அதே ஆண்டின் செப்டம்பர் மாதத்தில் மதிப்பிடப்பட்ட செலவுத் தொகைக்கும் இடையே இருந்த வேறுபாட்டில்

ஏறத்தாழப் பாதி, வளரக்கூடிய செலவுத் திட்டங்களின் (open-ended programmes) செலவு முன்மொழிவுகள் துல்லியமாக இல்லாததன் விளைவாக ஏற்பட்டதே ஆகும்.

மாறுதலடைகிற நிலைமைகளின் விளைவாக மதிப்பீடுகளுக்கும் நடைமுறை எண்களுக்கும் இடையே வேறுபாடுகள் ஏற்பட்டால், அப்படி ஏற்படுவது தவறு என்று யாரும் கூறமுடியாது. உண்மையைச் சொல்வதானால், எந்த நிலையிலும் மாறுமல் இருக்கிற ஏற்பாடுகள் விரும்பத்தக்கனவாக இருக்கமுடியாது. ஆனால், வரவு செலவுத் திட்டமானது நிதியைத் திட்டமிடுவதற்கான கருவியாக விளங்கவேண்டுமானல், கூடியவரையில் தவருன முன்மொழிவுகளைத் தவிர்க்கவேண்டியது இன்றியமையாதது ஆகும். ஏனென்றால், தவருன முன்மொழிவுகளின் விளைவாக நிதித்திட்டமானது நடைமுறைக்கு மாறுபட்டதாக அமைந்துவிடுகிறது. வரவு செலவுத் திட்ட முன்மொழிவுகளை மேலும் துல்லியம் உடையவையாக (accuracy) மாற்றக்கூடிய எந்த ஏற்பாட்டிலும், நிதிகளைத் திட்டமிடுவதற்கான கருவி என்னும் முறையில் வரவு செலவுத் திட்டத்திற்கு உள்ள ஆற்றலைக் கூடுதலாக்க முடியும். ஆனால், அவ்வாறு துல்லியம் உடையவையாக மாற்றக்கூடிய குறிப்பிட்ட ஏற்பாடுகளைச் சுட்டிக்காட்டுவது கடினமான செயல்தான். நிதி ஒதுக்க நடவடிக்கைகளுக்காகக் காங்கிரசுக்கு ஒரு குறிப்பிட்ட கால அளவு தேவைப்படுவதால், வரவு செலவுத் திட்டம் எந்தக் காலத்திற்கு உரியதோ அந்தக் காலத்திற்கு மிக அருகில் இருக்கும்படி அத்திட்டத்தை முன்வைக்கும் தேதியை (the date of presenting the budget) முடிவுசெய்வது, நிர்வாக முறைப்படி இயலாத செயலாக இருக்கிறது. ஆனால், பல சமயங்களில், வரவு செலவுத் திட்ட எண்கள் அரசியல் கண்ணோட்டத்துடன் அமைக்கப்படுகின்றன; அதாவது, நிதிபற்றிய நடைமுறைகளை அடிப்படையாகக்கொள்ளாமல் நிதிபற்றிய குறிக்கோள்களை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட ஆண்டில் ஒத்தநிலை வரவு செலவுத் திட்டம் (balanced budget) நிதிக் குறிக்கோளாக இருக்குமானல், வரவு செலவுத் திட்ட அறிக்கையில் திட்டமிட்ட பற்ருக்குறையை அமைத்துக்காட்டுவதைவிட, ஒத்த நிலை வரவு செலவுத் திட்டத்தை முன்மொழிந்துவிட்டு, பின்னர் வரும் மாதங்களில் நிலைமை பற்ருக்குறையாக மாறிக்கொள்ளட்டும் என்று விட்டுவிடுவதே, அரசியல் கண்ணோட்டப்படி பாதுகாப்பான முறையாகும்.

## ஆண்டுச் செலவுகளின் கட்டுப்பாடு (Control of Annual Expenditures)

நிதி ஒதுக்கச் சட்டங்கள், ஒரு குறிப்பிட்ட ஆண்டில் நடைமுறையில் செய்யப்படுகிற செலவுக்கான பணத்தை ஒதுக்குகின்றன என்று கூறமுடியாது. அவை குறிப்பிட்ட ஓர் ஆண்டில்

குறிப்பிட்ட நோக்கங்களுக்காகக் குறிப்பிட்ட அளவு செலவுக்கான பொறுப்பை ஏற்றுக்கொள்வதற்கான அதிகாரத்தைமட்டுமே ஒதுக்குகின்றன (தருகின்றன). அவ்வாறு ஒதுக்கித்தரப்பட்ட அதிகாரத்தைப் பெறுகிற ஏஜன்சியானது, அதன்பின் ஒதுக்கப்பட்ட நிதிகளின் அளவுக்குச் செலவுத் திட்டங்களுக்குப் பணம் தரும் பொறுப்பை ஏற்றுக்கொள்ளலாம். அத் திட்டங்களுக்குப் பணம் செலுத்தவேண்டிய சமயம் வரும்போது, கருவூலம் தொகையைச் செலுத்தும். பெரும்பாலான ஏஜன்சிகள், அந்தந்த ஆண்டில் சட்டமன்றப் பிரிவால் அவற்றிற்கு ஒதுக்கப்பட்ட நிதிகளைக்கொண்டே அந்தந்த ஆண்டின் நடவடிக்கைகளை மேற்கொள்கின்றன. அதாவது, குறிப்பிட்ட ஆண்டின் செலவுகள் அந்த ஆண்டிற்காக ஒதுக்கப்பட்டுள்ள தொகைக்கு ஒப்பாக இருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.[9] ஆனால், சில இன்றியமையாத நிலைமைகளில், ஓர் ஏஜன்சிக்கு ஓர் ஆண்டில் ஒதுக்கப்பட்ட நிதிகளை அடுத்து வரும் ஆண்டுகளிலும் பயன்படுத்திக்கொள்ளும் அதிகாரம் அந்த ஏஜன்சிக்குத் தரப்படுகிறது. ஓர் ஏஜன்சியானது குறிப்பிட்ட ஒரு நடவடிக்கையை ஒன்றுக்கு மேற்பட்ட ஆண்டுகளில் தொடர்ந்து மேற்கொள்ளவேண்டிய நிலை இருக்கும்போது, இத்தகைய அதிகாரம் வழங்கப்படுகிறது. ஏனென்றால், அத்தகைய நிலையில், அந்த ஏஜன்சியானது இப்போது திட்டமாக அறியமுடியாத எதிர்காலத் தேதி ஒன்றில் தரப்படவேண்டிய பொருள்களுக்காக இப்போதே ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டிய இன்றியமையாமை இருக்கும். ஒப்பந்தங்கள் அல்லது உடன்பாடுகள் செய்யப்படுவதற்கு முன்னாலேயே அவற்றிற்கான தொகையை நடைமுறையில் செலுத்தவேண்டிய நிலைமை எதிர்கால நிதி ஆண்டு ஒன்றிலேயே ஏற்படும் என்றபோதிலும், அந்தத் தொகையைச் செலுத்துவதற்கான பொறுப்பை ஏற்றுக்கொள்ளும் அதிகாரம் (இப்போதே) ஏஜன்சிக்குத் தரப்படுவது இன்றியமையாதது. இவ்வாறாக, ஒரு குறிப்பிட்ட ஆண்டில், அந்த ஆண்டின் நடப்புச் செலவுக்குத் தேவையான அளவிலும், பிந்திய ஆண்டுகளில் தரப்படக்கூடிய பொருள்களுக்காகவும் ஊழியங்களுக்காகவும் ஒப்பந்தம் செய்துகொள்வதற்குத் தேவையான அளவிலும், பொறுப்பை ஏற்கும் அதிகாரம், குறிப்பிட்ட ஏஜன்சிகளுக்கு வழங்கப்படுகிறது.

எடுத்துக்காட்டாக 1958 ஆம் ஆண்டிற்குரிய கூட்டரசாங்க வரவு செலவுத் திட்ட அறிக்கை, அந்த ஆண்டில், அதிகார அளிப்புகளிலிருந்து (authorisation) நடைமுறையில் தரப்படவேண்டிய செலுத்தல்கள் பின்வருமாறு இருக்கும் என்று மதிப்பிட்டிருக்கிறது.

| | | |
|---|---|---|
| நடப்பு அதிகார அளிப்புகளிலிருந்து (From current authorisations) | 40.4 | பில்லியன் டாலர்கள் |
| நிலையான அதிகார அளிப்புகளிலிருந்து (From permanent authorisations) | 7·6 | ,, |
| ஒப்பந்த அதிகார அளிப்புகளைத் தீர்ப்பதற்கான நிதி ஒதுக்கங்களிலிருந்து (From appropriations to liquidate contract authorisations) | 0.1 | ,, |
| மீளும் நிதிகளிலிருந்தும் மேலாண்மை நிதிகளிலிருந்தும் (From revolving and management funds) | —0·5 | ,, |
| முந்திய அதிகார அளிப்புகளின் இருப்புகளிலிருந்து (From balances of prior authorisations) | 24·2 | ,, |
| நிகர வரவு செலவுத் திட்டச் செலவுகள் | 71.8 | பில்லியன் டாலர்கள் |

நிதியாண்டு 1958 வரவு செலவுத் திட்டச் செலவுகளில் ஏறத்தாழ 55 சதவீதம் மட்டுமே, அந்த ஆண்டிற்குரிய இயல்பான நிதி ஒதுக்கங்களிலிருந்து (ordinary appropriations), அதாவது 'நடப்பு அதிகார அளிப்புகளி'லிருந்து (current authorisations) தரப்படும் என்று எதிர்பார்க்கப்பட்டன என்பது இந்தப் பட்டியலிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. நிலையான அதிகார அளிப்புகள் என்பவை, சட்டமன்றத்தின் தெரிவுக்கு (choice) உட்படாத சிலவகைச் செலவுகளுக்காகத் தாமாகவே செய்யப்படுகிற நிதி ஒதுக்கங்களைக் குறிக்கின்றன. நிதியாண்டு 1958-ல், 7.6 பில்லியன் டாலர் அளவுள்ள அத்தகைய அதிகார அளிப்புகளில் ஏறத்தாழ முழுத் தொகையுமே, அரசாங்கக் கடனின் வட்டிக்காகச் செலுத்தப்பட்ட தொகையே ஆகும். 'ஒப்பந்த அதிகார அளிப்புகளைத் தீர்ப்பதற்கான நிதி ஒதுக்கங்கள்' என்பவை, இப்போது குறிப்பிடத்தக்க அளவில் கையாளப்படாமல் உள்ள, ஆனால் கடந்த காலத்தில்கையாளப்பட்ட,ஒரு முறையின்கீழ் அக் காலத்தில் செய்யப்பட்ட ஏற்பாடுகளைத் தொடர்ந்து நிறைவேற்றவேண்டிய தேவையைக் குறிக்கின்றன. கடந்த ஆண்டுகளில், காங்கிரசானது, எதிர்காலச் செலுத்தலுக்காக ஒப்பந்தம் செய்துகொள்ளும் அதிகாரத்தை ஏஜன்சிகளுக்கு அளித்தது. அத்தகைய ஒப்பந்தங்களுக்

காகத் தொகைகளைச் செலுத்தவேண்டிய நாள் வருகிறபோது அத் தொகைகளுக்காக நடப்பு நிதி ஒதுக்கங்கள் செய்யப்படும் என்னும் அடிப்படையிலேயே அத்தகைய அதிகாரம் அளிக்கப் பட்டது. 'மீளும் நிதிகளும் மேலாண்மை நிதிகளும்' என்பவை, பல்வேறு ஏஜன்சிகளுக்காக அமைக்கப்பட்டன. இந் நிதிகளில் தொடக்கத்தில் உள்ள தொகையிலிருந்து ஏஜன்சிகள் முன்பணம் பெற்றுக்கொள்ளலாம். ஆனல், அந்த முன்பணத்தை அவை பின்னர் திருப்பித் தந்துவிடவேண்டும். 1958-ல் அவ்வாறு இந் நிதிகளுக்குத் திரும்பிவந்த தொகை, முன்பணமாகத் தரப்பட்ட தொகையைவிட அரை பில்லியன் டாலர் கூடுதலாக இருக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது.

மேலே தரப்பட்ட பட்டியலில் உள்ள இனங்களில், நம்முடைய தற்போதைய கருத்தாய்வுக்கு இன்றியமையாத இனமாக இருப்பது, 'முந்திய அதிகார அளிப்புகளின் இருப்புகளிலிருந்து செய்யப்படும் செலவுகள்' என்பதே ஆகும். பெரும்பாலும் பாதுகாப்புக்காகவும், வெளிநாடுகளுக்கான உதவிக்காகவும் முந்திய ஆண்டுகளில் செய்யப்பட்ட நிதி ஒதுக்கங்களின் இருப்பு களையே இந்த இனம் குறிக்கிறது. இந்த இனத்தின் கீழ் வரும் செலவுகள், 1958ன் மொத்த வரவு செலவுத் திட்டச் செலவு களில் ஏறத்தாழ மூன்றில் ஒரு பகுதியாக இருக்கின்றன. குறிப் பிட்ட செலுத்தல்களைக் குறிப்பாக எந்தச் சமயத்தில் செலுத்த வேண்டியிருக்கும் என்பதை உணரமுடியாத தன்மை படைத்த நீண்ட காலத் திட்டங்களை மேற்கொள்ளவேண்டிய தேவையையே இந்த நிலைமை எடுத்துக்காட்டுகிறது.

அதே சமயத்தில் முந்திய ஆண்டுகளில் செய்யப்பட்ட ஒப்பந் தங்களுக்காக இந்த ஆண்டில் செலவிடும் அதிகாரம் ஏஜன்சிகளுக்கு இருப்பதால், ஒரு குறிப்பிட்ட காலத்தின் செலவுத் தொகையைக் கட்டுப்படுத்துவதற்கான தன்னுடைய அதிகாரம் குறைந்து விடுகிறது என்று காங்கிரஸ் கருதுவது இயல்பே. ஏஜன்சிகள் தங்களுடைய நடப்புச் செலவுகளுக்காக நடப்பு அதிகார அளிப்பு களை எதிர்பார்க்க வேண்டியநிலையில் இல்லாததால், செலவுகளைக் குறைப்பது சட்டமன்றக் கொள்கையாக இருக்கும் ஒரு சமயத்தில், ஏஜன்சிகளின் நடவடிக்கைகளால் செலவுகள் உயரக்கூடும். இத் தொடர்பில் அண்மையில் செய்யப்பட்ட ஒரு முன்மொழிவு என்ன வென்றல், ஒவ்வோர் ஆண்டின் இறுதியிலும், நிதி ஒதுக்கம்செய்யப் பட்ட அதிகார அளிப்புகள் அனைத்தையும் முடித்துவிடுவதன் மூலம் (termination) அடுத்த ஆண்டில் அவை தொடர்ந்து பயன்படுத்தப்படுவதைத் தடுத்துவிட வேண்டும் என்பதே. ஓர்

ஆண்டைவிட நீண்ட காலத்தில் முடிக்கப்படக்கூடிய திட்டங்கள் அனைத்தினுடைய நிலைமையைக் காங்கிரசானது ஒவ்வோர் ஆண்டும் மறு ஆய்வு செய்யவேண்டும் என்பதும், அந்தத் திட்டங்களைத் தொடர்ந்து நிறைவேற்றுவதற்குத் தேவைப்படுகிற தொகைகளை அந்தந்த ஆண்டில் நிதி ஒதுக்கம் செய்யவேண்டும் என்பதுமே இந்த முன்மொழிவின் பொருளாகும். அந்தந்த ஆண்டிற்குரிய செலவுத் தொகைகளை நிதி ஒதுக்கம் செய்வதே இதன் விளைவாக இருக்குமே தவிர, ஒரு குறிப்பிட்ட திட்டத்திற்கான செலவுப் பொறுப்பை ஏற்கும் அதிகாரத்தை அளிப்பதாக இது இருக்க முடியாது. தற்போதைய முறையில் காங்கிரசால் செலவைக் கட்டுப்படுத்தமுடிகிற அளவைவிட இந்த முறையில் இன்னும் மிகுதியான அளவில் (நெருக்கமான முறையில்) கட்டுப்படுத்த முடியும். ஆனால், அதே சமயத்தில், இந்த முறையால் நீண்ட காலத் திட்டங்களைக் கையாள்வதற்கான தங்களுடைய சுதந்தரம் கடுமையான முறையில் குறைக்கப்பட்டுவிடும் என்று ஏஜன்சிகள் கருதுகின்றன. ஒரு திட்டம் முடிவடைவதற்கு முன்னாலேயே, சட்ட மன்ற அமைப்பு விரும்பினால், அந்த அமைப்பால் அந்தத் திட்டத்தை நிறுத்திவிடமுடியும் என்னும் பொருளில் இந்தக் கருத்து உண்மையானதே. நடைமுறைக் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது, திட்டங்களை இவ்வாறு ஆண்டுதோறும் நெருக்கமான முறையில் பரிசீலனை செய்வது விரும்பத்தக்கதா என்பது, காங்கிரசானது ஆண்டுதோறும் நிதி ஒதுக்கங்களை எத்தகைய முறையில் செய்கிறது என்பதைப் பொறுத்திருக்கிறது.

**பொதுவான நிதி ஒதுக்கங்களா? குறிப்பான நிதி ஒதுக்கங்களா? (General vs. Specific Appropriations) :** தன் நிதிகளைக் குறிப்பிட்ட எந்த எந்தத் திட்டங்களுக்கு ஒதுக்குவது என்பதை முடிவு செய்யும் சுதந்தரத்தை ஏஜன்சிகளுக்கு வழங்குகிற பொதுவான நிதி ஒதுக்கங்களுக்கும், மாறுகிற நிலைமைகளுக்கு ஏற்ப நிதிப்பங்கீடுகளை மாற்றியமைக்க முடியாதவகையில் குறிப்பிட்ட திட்டங்களுக்கே நிதிகளை ஒதுக்கியுள்ள குறிப்பான நிதி ஒதுக்கங்களுக்கும், நிதி ஒதுக்கச் சட்டங்களில் பொருத்தமான இடம் அளிக்கப்படவேண்டும். நிதிகளைப் பொருத்தமான முறையில் பங்கிடுவதற்கு அனுகூலமான நிலைமையைக் காங்கிரசைவிட நிர்வாகியே கூடுதலான அளவில் பெற்றிருக்கிறார் என்பதே, பொதுவான நிதி ஒதுக்கங்களுக்கு ஆதரவாக உள்ள முதன்மையான வாதம் ஆகும். பொதுவாக நிதி ஒதுக்கங்கள் ஓரளவு சட்டமன்ற அதிகாரத்தை நிர்வாகிக்குத் தந்துவிடுகின்றன என்பதும், இந்த அதிகாரம் மிகுதியான அளவில் தரப்படும் நிலை ஏற்பட்டால், வரவு செலவுத் திட்டக்

கோட்பாடுகளுக்கே இடையூறு ஏற்படும் என்பதுமே, குறிப்பான நிதி ஒதுக்கங்களின் சார்பான வாதமாகும். பொருத்தமான நிதி ஒதுக்க முறையானது, இந்த இரு துருவங்களுக்கு இடையே, எங்கோ ஓர் இடத்தில் அமைந்திருக்கிறது என்றே கூறவேண்டும். இந்த இரு முறைகளில் எந்த முறைக்கு அருகே அது இருக்கிறது என்பதைச் சூழ்நிலைதான் முடிவுசெய்ய முடியும். ஆனால், பொதுவாக, நிதி ஒதுக்கச் சட்டமானது, ஊதியங்கள், போக்கு வரத்து, அச்சிடுதல், வழங்கு பொருள்கள் (supplies), தளவாடங் கள் முதலிய பொதுவான தலைப்புகளின்கீழ் மொத்தத் தொகையைப் பிரித்துக் காட்டுகிற அளவுக்காவது குறிப்புத் தன்மை உடைய தாக இருக்கவேண்டும்.

வரவு செலவுத் திட்ட அறிக்கை காங்கிரசின்முன் வைக்கப் படுகிற வடிவத்தை மாற்றியமைத்து, அப்படி அமைப்பதன் மூலமாக அதனை ஒரு 'பணிமுறை அல்லது சாதனை வகை வரவு செலவுத் திட்ட'மாக (Performance budget) ஆக்கவேண்டும் என்பதில் அண்மை ஆண்டுகளில் பேரார்வம் காட்டப்படுகிறது. அத்தகைய வரவு செலவுத் திட்டத்தில் காணப்படும் இனங்கள் (items), குறிப்பிட்ட ஏஜன்சியால் நிறைவேற்றப்பட இருக்கிற பணிகளை அல்லது மேற்கொள்ளப்பட இருக்கிற நடவடிக்கைகளைச் சட்டமன்றப் பிரிவுக்கும் பொதுமக்களுக்கும் விளங்கும் வகையில் போதுமான விவரங்களோடு எடுத்துக் காட்டுவனவாக இருக்கும். கடந்த ஆண்டுகளில் உருவாக்கப்பட்ட அதே முறையிலும், கையாளப்பட்ட அதே தலைப்புகளின் கீழும் வரவு செலவுத் திட்டத்தை உருவாக்கும் இயல்பே இக் காலத்தில் ஆழமாக வேரூன்றி யிருக்கிறது. நாளடைவில், இந்த நடைமுறையின் விளை வாக, முன் மொழியப்படுகிற ஒரு செலவின் நோக்கம் இன்னது என்பது தெளிவாகத் தெரியமுடியாத வகையில் பல்வேறு நடவடிக்கைகள் ஒரே தலைப்பின்கீழ் இணைந்துவிடுகின்றன. இதற்கு மாறாக, குறிப்பிட்ட பணிகளுக்காக முன்மொழியப்படுகிற செலவுகள் பல்வேறு தலைப்புகளின்கீழ்ச் சிதறுண்டுபோவதால், நிதி ஒதுக்க அமைப்புகளால் செலவுகளை அறிவு செழுமிய முறையில் இயக்குவது இயலாத ஒன்றாக ஆகிவிடுகிறது.

பணிமுறை வரவு செலவுத் திட்ட நடைமுறையை ஏற்றுக் கொள்வதால், தற்போதைய வரவு செலவுத் திட்ட முறைகளில் புரட்சிகரமான மாறுதல்கள் ஏற்படும் என்று கூற முடியாது. வரவு செலவுத் திட்ட அறிக்கையைப் புதிய வடிவத்தில் அமைப்பதன் மூலமாக அந்த முறை, எந்தப் பணியை நிறைவேற்றுவதற்காக ஒரு நிதி ஒதுக்கம் விரும்பப்படுகிறது என்பதைத் தெள்ளத்

தெளிவாக எடுத்துக்காட்டும். பணியின் அடிப்படையில் அமைந்த அத்தகைய பாகுபாட்டின் கீழ் (classification), தனியாள் ஊழியங்கள் (Personal services), பொருள்களும் வழங்கு பொருள்களும் (Materials and supplies), மூலதனச் செலவுகள் முதலிய பிரிவுகளைக் கொண்ட துணைப் பாகுபாட்டைச் செய்வது நிதிகளை அறிவார்ந்த முறையில் பங்கீடு செய்வதற்கு உதவியாக இருக்குமானால், அத்தகைய துணைப் பாகுப்பாட்டைச் செய்வதற்குத் தாராளமாக இடம் இருக்கிறது.[10]

போர்க் காலத்தில், அரசாங்கத்தின் படைப் பிரிவுகளுக்கான நிதி ஒதுக்கங்கள் மிகப் பொதுவான முறையிலேயே செய்யப் படுகின்றன. அத்தகைய நிதி ஒதுக்கங்களில் பெரும்பகுதி, நிதி ஒதுக்கச் சட்டம் நிறைவேற்றப் பட்டதற்கு ஏறத்தாழ ஓர் ஆண் டிற்குப் பின்னர்தான் செலவிடப்படுகிறது. போர் எத்தகைய திசைகளிற் செல்லக் கூடும் என்பதைத் துல்லியமாக முன் அறிந்து கூறுவது, எந்தக் காங்கிரசாலும் இயலாத செயலாகும். போர்க் களத்தின் இடம் மாறியதால், அல்லது நம் போர்க் கருவிகளுக்கு எதிர்க் கருவிகளை மாற்றார் கண்டுபிடித்துவிட்டதால், ஒரு குறிப் பிட்ட போர்க் கருவி முற்றிலும் பயனற்றதாகிவிட்டது என்று படைத்துறையின் பொது அலுவலர்கள் (General staff) கருதக் கூடும். அதுபோலவே முற்றிலும் புதியதான ஒரு கருவி மாபெரும் வெற்றியை ஈட்டித்தர முடியும் என்று கருதப்படும் நிலை ஏற்பட்டு விட்டதால், இதனை மிகப் பெரிய அளவில் உற்பத்தி செய்ய வேண்டிய தேவை ஏற்படலாம். அது மட்டும் அன்று. அனைவரும் படித் தறியத்தக்க அறிக்கைகளில், படைத் துறை பற்றிய நிதி ஒதுக்கங்களை விரிவான முறையில் எடுத்துக்காட்டுவது, பாது காப்புக் காரணங்களை முன் வைத்துப் பார்க்கும்போது, அறிவு சான்ற செயலாகாது. அண்மை ஆண்டுகளில் ஏவுகணைகளின் (Missiles) வளர்ச்சிக்காக ஒதுக்கப்பட்ட நிதிகள் எந்தெந்த தலைப்பு களில் ஒதுக்கப் பெற்றுள்ளன என்ற விபரத்தைக் காங்கிரசானது விரிவான முறையில் பேசுமானால் அதைவிட அறிவுக்கு மாறான செயல் வேறு இருக்க முடியாது.

ஆனால் அதே சமயத்தில், சட்டமன்றப் பிரிவானது, தலைமை நிர்வாகியின் அல்லது நிர்வாக ஏஜன்சியின் அதிகாரத்தை மட்டுப் படுத்துவதற்கான ஒரு கருவியாகக் குறிப்பான நிதிஒதுக்கத்தை அடிக்கடிப் பயன்படுத்தியிருக்கிறது. ஏஜன்சியின் விதிகள், சட்ட மன்ற அதிகாரத்தைப் பறிக்கும் தன்மை படைத்தனவாகவோ, காங்கிரசின் நோக்கத்திற்குத் தவறான விளக்கம் தருகிற இயல் புடையனவாகவோ இருக்குமானால், அந்த ஏஜன்சிபற்றிய நிதி

ஒதுக்கச் சட்டத்தில் காணப்படும் குறிப்பீடுகள் (Specifications) அந்த ஏஜன்சியை வழிக்குக் கொண்டுவந்துவிடும். நிர்வாகப் பிரிவைப்பற்றிக் காங்கிரசுக்கு அச்சம் இருந்தால், அல்லது நம்பிக்கை இல்லாமலிருந்தால், அல்லது அதனோடு நல்லுறவு இல்லாமலிருந்தால், நிதி ஒதுக்கம் செய்யப்பட்ட தொகைகளை எந்த எந்தச் செயல்களுக்குப் பயன்படுத்தலாம் அல்லது பயன் படுத்தக்கூடாது என்பதை, மிக விரிவான வகையில் காங்கிரசானது நிதி ஒதுக்கச் சட்டத்தில் அமைத்துவிடக் கூடும்.[11]

**நிறைவற்ற மறுப்பு ஆணை** (Inadequate Veto Power): ஒரு சட்டமன்ற மசோதாவைக் காங்கிரசின் இரண்டு அவைகளும் குறைந்தது, சற்றை மிகுதிப் பெரும்பான்மையால் (Simple majority) நிறை வேற்றிவிட்டால், அந்த மசோதாவானது குடியரசுத் தலைவரின் ஒப்புதலைப் பெறுவதற்காக அவருக்கு அனுப்பப்படுகிறது. அவர் ஒப்புதல் அளித்துவிட்டால், மசோதா சட்டமாகிவிடுகிறது. அவர் ஒப்புதலை அளிப்பதற்கு மாறாக அவருடைய மறுப்பு ஆணையைப் பயன்படுத்தினால், மசோதா மீண்டும் காங்கிரசுக்கு அனுப்பப்படுகிறது. அந் நிலையில், இரண்டு அவைகளின் மொத்த வாக்குகளில் குறைந்தது மூன்றில் இரண்டு பங்கு வாக்குகளையாவது பெற்று நிறைவேற்றப்பட்டால்தான், மசோதா சட்டமாக முடியும்.[12] ஆனால், குடியரசுத் தலைவர், முழு மசோதாவையும் தான் ஒப்புக்கொள்ளவோ, மறுத்துவிடவோ முடியும். மசோதாவின் சில பகுதிகளை ஒப்புக் கொண்டு, பிற பகுதிகளை மறுத்துவிடும் உரிமை அவருக்கு இல்லை. ஒரு நிதி ஒதுக்க மசோதா விரும்பத் தகாத பகுதிகளைக் கொண்டிருந்தால் இந்தப் பகுதிகளைச் சட்டமாக ஆக்குவதன் விரும்பத்தகாத தன்மையையும், (முழு) நிதி ஒதுக்கத்தை நடைமுறைக்குக் கொண்டுவருவதன் விரும்பத்தக்க தன்மையையும், குடியரசுத் தலைவர், ஒன்றோடு ஒன்று ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும். முழு மசோதாவின்மீது அவர் தன் மறுப்பு ஆணையைப் பயன்படுத்தினாலும், அந்த ஆணைக்குப் பின்னரும் காங்கிரசால் அந்த மசோதாவை நிறை வேற்ற முடியும். இந்த நிலையில் மறுப்பு ஆணையின் விளைவு, நிதி ஒதுக்க மசோதா சட்டமாக ஆகும் காலத்தைத் தாமதப் படுத்துவதாக மட்டுமே இருக்கமுடியும். அவர் மசோதாவை ஒப்புக் கொண்டுவிட்டால், அதன் இனிப்பான பகுதியையும் கசப்பான பகுதியையும் அவர் ஒருங்கே ஏற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது. பெரும்பாலும் மசோதாவோடு தொடர்பு அற்றதாகவும், தன்னுடைய தகுதியைமட்டும் அடிப்படையாகக்கொண்டு நிறைவேற முடியாததாகவும், தேவையுள்ள சட்டத்தின் முதுகில் ஏறிக்

கொண்டு சவாரி செய்து, காங்கிரசையும் நிர்வாகத்தையும் கடந்து செல்ல விரும்புவதாகவும் உள்ள ஒரு துணைப்பகுதி ('Rider') தலையாய மசோதாவோடு இணைந்திருப்பது, தலைவரின் மறுப்பு ஆணை பற்றிய கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, மிகவும் வருந்தத்தக்க ஒன்றாகவே இருக்கிறது.

வேறு கண்ணோட்டங்களிலிருந்து பார்க்கும்போது கிடைக்கின்ற தீர்ப்புகள் எத்தகையனவாக இருந்தாலும், மசோதாக்களின் சில பகுதிகளை மட்டும் மறுத்துவிட்டு ஏனைய பகுதிகளை ஒப்புக் கொள்கிற அதிகாரம் குடியரசுத் தலைவருக்கு இருக்குமானால், பயன் விளைக்கும் ஆற்றல் வரவு செலவுத் திட்டத்திற்கு மிகுதியாகும் என்பதில் ஐயமில்லை. [அமெரிக்க அரசுகளின் கூட்டிணைப்பின் அரசியல் அமைப்பு (The constitution of the Confederate States of America) ஏனைய துறைகளைப் பொறுத்தவரை ஐக்கிய அமெரிக்காவின் அரசியல் அமைப்பைப் போலவே இருந்தாலும், மசோதாக்களின் குறிப்பிட்ட பகுதிகளைமட்டும் மறுக்கும் அதிகாரத்தை அது குடியரசுத் தலைவருக்கு அளித்திருந்தது.] இத்தகைய அதிகாரம் குடியரசுத் தலைவருக்கு இருப்பதன் விளைவாக, அவருடைய வரவு செலவுத் திட்டத்தைச் சட்டமாக நிறைவேற்றிவிட அவருக்கு உள்ள ஆற்றல் கூடுதலாகும்; அதே சமயத்தில் இந்த ஏற்பாட்டின் விளைவாகச் சட்டமன்றத்தின் அதிகாரத்தில் பெரும் குறைவு எதுவும் ஏற்பட்டுவிடாது. ஏனென்றால் இந்த ஏற்பாடு நடைமுறையில் இருக்கும்போதுகூட, குடியரசுத் தலைவரால் மறுக்கப்பட்ட மசோதாக்களின் பகுதிகளை, அந்த மறுப்புக்குப் பின்னரும், சட்ட மன்றத்தால் நிறைவேற்றிவிட முடியும். ஆனால், குடியரசுத் தலைவரால் தெளிவாகத் தெரிவிக்கப்பட்ட எதிர்ப்புக்குப் பின்னரும் அந்தப் பகுதிகளை நிறைவேற்றச் சட்டமன்றம் முனைவதனால், தன் விருப்பங்களைப்பற்றி அம் மன்றம் திட்டவட்டமான முடிவுக்கு வந்துள்ளபோது மட்டுமே, மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மை படைத்த வாக்குகள் மூலம் அவ்வாறு செய்ய முடியும்.

**துணை அல்லது பற்றாக்குறை நிதி ஒதுக்கங்கள் (Supplementary or Deficiency Appropriations):** ஓர் ஏஜன்சிக்காக ஒரு பொது நிதி ஒதுக்கம் நிறைவேற்றப்பட்ட சிறிது காலத்திற்குப் பின்னர் ஒரு துணை நிதி ஒதுக்கம் அல்லது பற்றாக்குறை நிதி ஒதுக்கம் செய்யப்படுகிறது. பொது நிதி ஒதுக்கத்தால் ஒதுக்கப்பட்ட நிதிகள், குறிப்பிட்ட திட்டங்கள் அல்லது நடவடிக்கைகளை ஒரு குறிப்பிட்ட அளவில் நிறைவேற்றுவதற்குத் தேவையான அளவுடையனவாக இல்லை என்று தெரியும்போது, இந்தத் துணை அல்லது பற்றாக்குறை நிதி ஒதுக்கம்

செய்யப்படுகிறது. வரவு செலவுத் திட்ட ஏஜன்சியானது, குறிப் பிட்ட திட்டத்தை நிறைவேற்றும் ஏஜன்சியால் நிதிகள் செலவிடப் படுவதை, நிதி ஒதுக்கம் செய்யப்பட்ட நிதிகளைக் கால் ஆண்டுக்கு ஒரு முறை அல்லது வேறு முறைகளால் பங்கிடுவதன் மூலமாகத் தக்க முறையில் கட்டுப்படுத்துமானால், துணை நிதி ஒதுக்கத்திற்கான வேண்டுகோளைக் காங்கிரசானது அனுதாபத்தோடு ஏற்றுக் கொள்ளும். குறிப்பிட்ட திட்டமானது தொடர்ந்து நிறைவேற்றப் படுவதற்கு ஏற்றதாக இருந்தால்தான் அந்தத் திட்டச் செலவுக் கான துணை நிதி ஒதுக்கத்தைக் காங்கிரசானது ஏற்றுக்கொள்ளும். ஓர் ஏஜன்சியானது, தன் செலவுகளைத் தவருன முறையில் திட்ட மிட்டுவிட்டு, அதன்பின், போதுமான துணைநிதி ஒதுக்கங்கள் தனக்குத் தரப்படாவிட்டால், எந்தெந்தத் துறைகளில் அல்லது பகுதிகளில் செலவைக் குறைப்பது மக்களால் விரும்பப்படாத தாகவும், கடுமையான விளைவுகளை உண்டாக்கவல்லதாகவும் இருக்குமோ அந்தந்தத் துறைகளில் செலவைக் குறைத்துவிடுவ தாகப் பயமுறுத்துவதன் மூலம், துணை நிதி ஒதுக்கமுறையைத் தவருகப் பயன்படுத்தக்கூடும்.

முதலில் திட்டமிட்டதைவிடக் கூடுதலான வீதத்தில் செலவிட வேண்டிய எதிர்பாராத நிலைமைகள் சில ஏற்படுவது உண்டு. அத்தகைய நிலைமைகளில், மாற்ற முடியாத அளவில் அமைக்கப் பட்ட செலவுப் பட்டியல்களுக்குப் பதிலாக, இடைக்காலப் பகுத்தாய்வு, மதிப்பீடு, தெரிவு (Choice) ஆகியவற்றைக் கையாள் வதுதான், தலைசிறந்த வரவு செலவுத் திட்ட நடைமுறை ஆகும். இந்தக் காரணத்தால்தான், சில சமயங்களில் தவருன முறையில் பயன்படுத்தக்கூடும் என்றபோதிலும், பற்ருக்குறை நிதிஒதுக்க மானது, சிறந்த முறையில் அமைந்த நிதி நடவடிக்கையின் இன்றி யமையாத பகுதியாகக் கருதப்படுகிறது.

இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை கூடுகிற சட்டமன்றக் கூட்டத் தொடரை உடைய மாநில அரசாங்கங்களில், இரண் டாண்டுக் காலத்திற்கு நிதி ஒதுக்கங்கள் செய்யப்படுகின்றன. அத்தகைய நிலைமையில், இரண்டு கூட்டத் தொடர்களுக்கு இடைப் பட்ட காலத்தில் நிதிகளை அளிக்கவேண்டிய தேவை அடிக்கடி ஏற்படலாம். ஆனல், கூட்டரசாங்கத் துணை நிதிஒதுக்கங்கள் எந்தக் கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்துள்ளனவோ அதே அடிப்படையில்தான் மாநில அரசாங்கத் துணை நிதி ஒதுக்கங்களும் அமைந்துள்ளன. நிர்வாக அமைப்புகளும் சட்ட மன்றங்களும் முற்றறிவு உடையனவாக மாறும் வரையில், பற்ருக்குறை நிதி ஒதுக்கங்களுக்கான தேவை தொடர்ந்து இருக்கும் என்பது உறுதி.

ஒரு வரவு செலவுத் திட்டத்திற்குரிய இரண்டாண்டுக் காலத்தில் சிறிது காலத்திற்கு மட்டுமே மாநில சட்டமன்றங்களின் கூட்டங்கள் நடைபெறுவதால், பற்றுக்குறைகளையும், நெருக்கடிகளையும் சரிக் கட்டுவதற்குக் கீழ்க் கண்ட இரண்டு முறைகளில் ஏதேனும் ஒன்று பின்பற்றப்படுகிறது: (1) சட்டமன்றக் கூட்டங்கள் நடைபெறாத காலங்களில் நிதி ஒதுக்கங்களைவிடக் கூடுதலாக உள்ள நெருக்கடிச் செலவுகளை ஒப்புக்கொள்ளும் அதிகாரத்தை ஆளுநருக்கு (Governor) அல்லது வரவு செலவுத் திட்ட அலுவலருக்கு (Budget officer) அளிப்பது. (2) மொத்தத் தொகையாக உள்ள எதிர்பாராச் செலவு நிதி (A lump sum Contingent Fund) ஒன்றை நிதி ஒதுக்கம் செய்து, அதனை நிர்வாகம் செய்யும் பொறுப்பை, ஆளுநர், நிதி அலுவலர்கள் அடங்கிய ஒரு குழு ஆகிய இரு சாராரில் ஒருவரிடம், அல்லது இரு சாராரிடமும் அளிப்பது.

நெருக்கடிக் கால நிதி ஒதுக்கங்களுக்கான ஏற்பாடுகளைச் செய்வது வரவு செலவுத் திட்ட முறையின் ஓர் இன்றியமையாத பகுதியாக இருந்தாலும், அத்தகைய நிதி ஒதுக்கங்களைத் தாராளமான முறையிலும் பொறுப்பற்ற வகையிலும் பயன்படுத்துவதால் வரவு செலவு திட்ட முறைக்கே ஆபத்து ஏற்படக்கூடும். ஊதாரித்தனம் அல்லது தவறான நிர்வாகத்தைத் தவிர நியாயமான காரணம் எதுவும் இல்லாத நிலையில், வரவு செலவுத் திட்டத்தால் தங்களுக்கு ஒதுக்கப்பட்ட தொகையைவிட மிகுதியாக செலவழித்து விடுகிற ஏஜன்சிகளைக் காப்பாற்றுகிற முறையில் பற்றுக்குறை நிதி ஒதுக்கங்கள் பயன்படுத்தப்படுமானால், வரவு செலவுத் திட்டம் தன் பணியை நிறைவேற்றத் தவறிவிட்டது என்றே கூறவேண்டும். கட்டுக்கோப்பு அற்ற முறையிலும் தாராளமான வகையிலும் பற்றுக்குறைகளுக்காக நிதி ஒதுக்கம் செய்யும் முறையின் விளைவாக நன்மையைவிட தீமையே மிகுதியாக ஏற்படக்கூடும்.

**நிதி ஒதுக்கம் செய்யப்பட்ட நிதிகளின் ஒதுக்கீடு (Allotment of Appropriated Funds):** கூட்டரசாங்க வரவு செலவுத் திட்டமும், பெரும்பாலான மாநில அரசாங்கங்களின் வரவு செலவுத் திட்டங்களும், நிதி ஒதுக்கம் செய்யப்பட்ட நிதிகளை, அவற்றைச் செலவிடற்கு உரிய ஏஜன்சிகளுக்கு, மூன்று மாதங்களுக்கு ஒருமுறை, அல்லது மாதந்தோறும் அல்லது வேறு முறைகளில் ஒதுக்கீடு செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்துள்ளன. அப்படிச் செய்திருப்பதற்கான தலையாய காரணம், வரவு செலவுத் திட்டக்காலம் முழுவதிலும், ஏஜன்சிகளின் நடவடிக்கைகளை நிலைபேறான அளவில் அல்லது அந்தந்தப் பருவங்களுக்கு (Seasons) ஏற்ற அளவில் நிலைநாட்ட வேண்டும் என்பதே. நிதி ஒதுக்கத்திற்கு உரிய காலத்தின் தொடக்

கப் பகுதியிலேயே செலவுகளை மிக வேகமாகச் செய்துவிட்டு அதன் பிற்பகுதியில் பணமின்மை காரணமாக நடவடிக்கையை நிறுத்த வேண்டிய கட்டாயமோ, அல்லது குறிப்பிட்ட ஏஜன்சியானது பற்றுக்குறை நிதி ஒதுக்கத்தை நாடி நிற்கும் நிலைமையோ ஏற் படாமல் தடுப்பதற்காகவே, இத்தகைய ஏற்பாடு செய்யப்படுகிறது. அதே சமயத்தில், இந்த ஏற்பாடு தொடக்கக் காலத்தில், அச்சத் தால் உருவாக்கப்பட்ட— அளவுக்கு மீறிய சிக்கனமுறை கையாளப் பட்டு, பிற்பகுதியில் வேக வேகமாக வீணான முறையில் செலவழிக் கும் நிலை ஏற்படுவதையும் தடுத்துவிடுகிறது.

ஒதுக்கீடுகள் (Allotments) பொதுவாக வரவு செலவுத் திட்டத் துறையாலேயே (The Budget department) நிர்வாகம் செய்யப் படுகின்றன. வரவு செலவுத் திட்டக் காலத்தில் குறிப்பிட்ட ஏஜன்சிக்குத் தரப்படுகிற ஒதுக்கீடுகளின் பட்டியல், அந்த ஏஜன் சியின் இயல்பான தேவைகளை நிறைவேற்றும் தன்மை படைத்த தாக இருக்கவேண்டும் என்பது தெளிவாகத் தெரிகிற உண்மை. நெடுஞ்சாலைகளை அமைப்பதும் பழுது பார்ப்பதும் ஆகிய பணிகள் ஆண்டின் ஒரு பகுதியில் மட்டுமே மேற்கொள்ளப்படக்கூடிய நிலைமை இருக்கும்போது, ஒரு நெடுஞ்சாலை நிதி ஒதுக்கத் தொகையை ஒத்த அளவுள்ள மாதத்தவணைகளில் தருவது, பொருத்தமற்ற ஏற்பாடாகும். நிதி ஒதுக்கீடுகள், குறிப்பிட்ட நடவடிக்கையின் பருவகால அளவுகளுக்கு ஏற்ற முறையில் வழங்கப்படுவனவாக இருக்கவேண்டும்.

**வருவாய்களைச் சிறப்பு நிதிகளுக்கு உரிமைப்படுத்தல் (Dedication of Revenues to Special Funds):** மாநில அரசாங்கங்களின் வரவு செலவுத் திட்ட நடைமுறைக்கு ஏற்படக்கூடிய மிக மோசமான ஆபத்து, குறிப்பிட்ட வருவாய்களைக் குறிபிட்ட நிதிகளுக்காகவே உரிமைப்படுத்தி, அந் நிதிகள் குறிப்பிட்ட நடவடிக்கைகளுக்கே செலவழிக்கப்பட வேண்டும் என்று செய்யப்படுகிற ஏற்பாடு ஆகும். இந்த ஏற்பாட்டின்படி, அரசாங்க வருமானம், பெரியனவும் சிறியனவுமாகத் தனித் தனியாக உள்ள எத்தனையோ கணக்குகளில், ஒன்றிலிருந்து ஒன்றிற்கு மாற்றப்படுவதற்கான வாய்ப்பு இல்லாத முறையில், செலுத்தப்பட்டு விடுகிறது. இத்தகைய நிலையில், அரசாங்கக் கருவூலமானது, அரசாங்க வரவுகள் யாவற்றையும் பெற்றுக்கொள்ளக் கூடியதும், வரவு செலவுத் திட்டப்படி ஏற்படுத்தப்பட்டுள்ள பங்கீட்டு முறைக்கு இணங்கத் தன்னிடத்தி லிருந்தே செலுத்தல்கள் (Payments) யாவும் செய்யப்படுவதும் ஆகிய ஒரு தனிக் கருவூலமாக இல்லை. ஏறத்தாழச் சுயேச்சையாக உள்ள பல்வேறு கருவூலங்களின் ஒரு தொகுப்பாகவே அது இருக்கிறது.

அந்தத் தொகுப்பின் மையத்தில் பொதுநிதி (General fund) இருக்கிறது. அரசாங்கத்தின் பொதுவான பணிகளை ஆதரிப்பதும், நெருக்கடிச் செலவுகளைப் பெரும்பான்மையான அளவுக்கு ஆதரிப் பதும், ஏனைய நிதிகளில் ஏற்படக்கூடிய பற்றுக்குறைகளை நிறை செய்ய ஆயத்தமாக இருப்பதும் இந்த நிதியே ஆகும். இந்தப் பொது நிதிக்கு அடுத்தபடியாக இருப்பது, நெடுஞ்சாலை நிதி (Highway fund) ஆகும். இந்த நிதிக்கான தொகைகள், பெட்ரோல் வரிகள், மோட்டார் ஊர்திப் பதிவுக் கட்டணங்கள் (Motor vehicle registration fees), இயக்குவோருக்கான லைசென்ஸ் கட்டணங்கள் (Operators' license fees), மோட்டார்கார் வணிகர்கள் - பழுது பார்ப்போர் ஆகியோர்மீதான கட்டணங்களிலிருந்து கிடைக்கும் பலதிற வரவுகள் ஆகியவற்றிலிருந்து கிடைக்கின்றன. நெடுஞ் சாலைகளை அமைப்பதும் பராமரிப்பதும், மாநில போலீஸ், பல்வேறு மோட்டார் ஊர்திக் கட்டுபாட்டு நடவடிக்கைகள் ஆகியவற்றிற் கான செலவுகள், இந்த நெடுஞ்சாலை நிதியிலிருந்து செய்யப்படு கின்றன.

இந்த இரண்டு மாபெரும் நிதிகளின் தொடர்ச்சியாக, பல்வேறு அளவுகள் உள்ள ஐம்பது அல்லது அறுபது சிறப்பு நிதிகள் இருக் கின்றன. இந் நிதிகளிற் சில மிகச் சிறியனவாக இருக்கின்றன; அவற்றால் ஆதரிக்கப்படும் நடவடிக்கைகள் ஆண்டுக்கு ஆயிரம் டாலரைவிடக் குறைந்த செலவை உடையனவாக இருக்கக்கூடும். இந் நிதிகளிற் பெரியவை, முதிய வயது உதவி (old age assistance) முதலிய நல்வாழ்வு நடவடிக்கைகளுக்கான செலவுத் தொகை யையும், மாநிலப் பல்கலைக் கழகங்களுக்கும் கல்லூரிகளுக்கும் உரிய செலவுத் தொகையையும் தருவதற்காக உரிமைப்படுத்தப் பட்டிருக்கக்கூடும். சிறிய நிதிகள், நாவிதர்கள், முடிதிருத்துவோர், ஒப்பனை செய்வோர் (Cosmeticians), நறுநெய் பூசுவோர் (Embalmers) ஆகியோரைப் பரிசோதிப்பதற்கானச் செலவுத் தொகையை அளிக்கக்கூடும்.

குறிப்பிட்ட வருவாய்களைப் பெறுவதற்கான உரிமை பெற் றுள்ள குறிப்பிட்ட விதிகள் மூலம் குறிப்பிட்ட நடவடிக்கைகளுக் கான செலவைச் செய்யும் முறையானது, இரண்டு திசைகளிலிருந்து வந்த வற்புறுத்தல்களின் விளைவாக ஓங்கி வளர்ந்திருக்கிறது என்று கூறலாம். உதவிக் கொடைகளின் (Grants-in-aid) தொடர்பாகக் கூட்டரசாங்கத்திடமிருந்து வரும் வற்புறுத்தல் ஒரு வகை. குறிப் பிட்ட வரி செலுத்தும் வகுப்பினரிடமிருந்தும் கட்டணம் செலுத்தும் வகுப்பினரிடமிருந்தும் வரும் வற்புறுத்தல் மற்றொரு வகை. நெடுஞ்சாலை அமைப்புக்காக மாநில அரசாங்கங்கட்குக்

கூட்டரசாங்கம் தருகிற கொடைகளின் தொடர்பாக, (இந்தக் கொடைகளுக்கு நேர் ஒப்பான தொகையை மாநில அரசாங்கங்கள் தருகின்றன) மாநில அரசாங்கங்கள் தங்களுடைய பெட்ரோல் வரி வருவாய்களை நெடுஞ்சாலை அமைப்புக்கும் பராமரிப்புக்குமே பயன் படுத்தவேண்டும் என்று கூட்டரசாங்கம் வன்மையாக வற்புறுத்த லாயிற்று. மாநில அரசாங்கங்கள் உண்மையாகவே விரும்பினால், குறிப்பிட்ட வருவாய்களைக் குறிப்பிட்ட நடவடிக்கைகளுக்காக ஒதுக்கும் இந்த ஏற்பாட்டை மாற்றுவதற்கான வழிகளை வகுக்க முடியும். ஆனால் அத்தகைய வழிகளை மாநில அரசாங்கங்கள் கையாண்டால், மோட்டார்கார் பற்றிய வரி செலுத்துவோர்-கட்டணம் செலுத்துவோர் ஆகியோரிடமிருந்து எழக்கூடிய கடுமை யான எதிர்ப்பை அவை தாங்க வேண்டியிருக்கும்.

பெட்ரோல் வரிகள், மோட்டார்கார் கட்டணங்கள் ஆகிய வற்றின் வருவாயை நெடுஞ்சாலையின் வளர்ச்சிக்காகப் பயன் படுத் துவதிலிருந்து பொதுவான முறையில் பயன்படுத்துவதற்குத் 'திருப்பி விடுவதை' எதிர்த்து, கேலிச் சித்திரங்கள், சுவரொட் டிகள், ஒலி பெருக்கிகள், கட்டுரைகள் ஆகியவற்றின் வாயிலாக நடத்தப்படும் மக்களின் கிளர்ச்சிகள் இந் நாடு முழுவதிலும் பரவ லாகக் காணப்படுகின்றன. அக் கிளர்ச்சிகள், மிகுந்த எண்ணிக்கை யிலும் சிறந்த முறையிலும் உள்ள - நெடுஞ்சாலைகளால் இலாபம் பெறக்கூடிய - மோட்டார் ஊர்தி வணிகர்கள், பெட்ரோல் வணி கர்கள், மோட்டார்கார் சங்கங்கள் முதலிய வாணிபக் குழுவினரால் ஆர்வம் ஊட்டப்பட்டவையாகும். குடிமக்களில் மிகப் பெரும் பாலோருடைய ஆதரவைப் பெறும் அளவுக்கு அக் குழுவினருடைய வாதங்களில் பொருள் இருக்கிறது. இந்தத் தொடர்பில் 'வருவாயைத் திருப்பி விடுவது' என்பதற்கு, மிக அதிக வருமானத்தைத் தரக்கூடிய வருவாய் மூலங்களில் ஒன்றைப் பொதுவாகப் பயன்படுத்துவதிலிருந்து மோட்டார் வகுப்பினரின் குறிப்பிட்ட நன்மைக்காகத் திருப்பிவிடுவது என்பதுதான் உண்மையான பொருளாக் இருக்கவேண்டும். ஆனால் தற் போது அந்தச் சொற்றொடர், மோட்டார் வகுப்பினருக்கு உரிய வருவாயைப் பொதுத்துறைக்கு அரசாங்கம் திருப்பிவிடுவது என்னும் பொருளில் பயன்படுத்தப்படுகிறது.[13] ஒரு மாநிலத்தில், ஆளுநர் (Governor) தன்னுடைய வரவு செலவுத் திட்டச் செய்தி யுரையில், பல்வேறு தொழில்களில் புதிதாக ஈடுபட விரும்புவோர் களின் தகுதிகளைப் பரீட்சித்து அறியும் மாநிலக் கழகங்கள் (State Boards) பலவற்றை ஒன்றாக இணைத்துவிடலாம் என்றும், மேற்படி தேர்வுகளை ஏற்படுத்துவதும் மதிப்பீடு செய்வதும் குறிப்பிட்ட தொழில்களைச் சேர்ந்தவர்களாலேயே செய்யப்படலாம் என்றும்,

ஆனால் அத் தேர்வுகள்பற்றிய நிர்வாகம் மட்டும் ஓர் ஆணையாள ரிடமே (Commissioner) இருக்கலாம் என்றும் முன்மொழிவு செய் திருந்தார். இந்த ஆய்வுரையானது உடனடியாகத் தோற்கடிக்கப் பட்டுவிட்டது. அப்படித் தோற்கடிக்கச் செய்ததில் முன்னணியில் இருந்தது மாநில மருத்துவச் சங்கமாகும். மருத்துவர்களின் தகுதிகளை முடிவு செய்வதில் 'அரசியல்' குறுக்கீடு இருப்பது அறம் ஆகாது என்று அச் சங்கம் வெளிப்படையாகவே கண்டனம் எழுப்பிற்று. ஆனால் இந்தச் சிக்கலில் ஏற்பட்ட அடிப்படைக் கேள்வி, தொழில்களுக்கான கட்டணங்கள் (Professional fees) பொதுநிதியில் சேர்க்கப்பட்டு, வரவு செலவுத்திட்ட முறையின்கீழ் நிர்வாகம் செய்யப்படவேண்டுமா அல்லது தனி நிதியாக இருக்க வேண்டுமா என்பதுதான்.

குறிப்பிட்ட வரவுகளைத் தனிமைப் படுத்தி, அவற்றைக் குறிப் பிட்ட செயல்களுக்காகவென்றே ஒதுக்கி வைப்பது, வரவு செலவுத் திட்ட நடைமுறை எந்தக் காரணத்திற்காக அமைந்திருக்கிறதோ அந்தக் காரணத்தையே அகற்றிவிடும் தன்மை பொருந்தியதாக இருக்கிறது ; அதாவது, செலவுகளை அறிவார்ந்த முறையில் கட்டுப் படுத்துவதை அகற்றிவிடுவதாக இருக்கிறது. அவற்றிற்காக வென்றே ஒதுக்கி வைக்கப்பட்டுள்ள (Earmarked) வரவுகளை உடைய ஏஜென்சிகளைப் பொறுத்தவரை, நிதி ஒதுக்கம் என்பது வெறும் விதிமுறையாகவே இருக்கிறது. ஏனென்றால், அந்த ஏஜென்சிகளுக்காக ஒதுக்கி வைக்கப்பட்டுள்ள வருவாய் முறைகளி லிருந்து கிடைக்கக்கூடிய தொகைகள் அவற்றிற்கு உரியவை என்பது ஏற்கெனவே முடிவு செய்யப்பட்டுவிட்ட ஒன்று. இத் தகைய சிறப்பு நிதிகளில் ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குப் பணத்தை மாற்றுவது, பொதுவாக மிகவும் கடினமான ஒரு செயலாகும். மாநில அரசாங்கச் செலவுகளில் மூன்றில் ஒரு பங்கிலிருந்து பாதிப் பங்குவரையில் உள்ள செலவுகட்குத் தேவையானப் பணத்தைத் தருவதும், அது ஒன்றுமட்டுமே வலுவான வரவு செலவுத்திட்டக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட நிதியாக இருப்பதும் ஆகிய பொது நிதி யானது, சிறப்பு நிதிகளில் ஏற்படக்கூடிய பற்றுக்குறைகளை நிறை செய்ய வேண்டிய சமயங்கள் பல ஏற்படக்கூடும். ஆனால் இந்தச் சிறப்பு நிதிகளில் உபரி ஏற்படும்போது அந்த உபரியானது பொது நிதிக்கு மாற்றப்படுவதே யில்லை. இந்த முறையின் சில விளைவுகளைப் பல மாநிலங்களில் இரண்டாம் உலகப் போருக்குப்பின் காண முடிகிறது. பள்ளிக்கூடம் செல்லும் பிள்ளைகளின் எண்ணிக்கை வியக்கதக்க அளவில் உயர்ந்துவிட்ட காரணத்தால், பொதுப் பள்ளிக்கூட வசதிகள் ஏறத்தாழ எல்லா இடங்களிலுமே மிகப் பெரிய பற்றுக்குறை உடையனவாக அமைந்துவிட்டன. பெரும்

பாலான மாநிலங்களில், வட்டாரக் கல்விக்கான மாநில அரசாங்க உதவி, பொது நிதிகளிலிருந்தே தரப்படுகிறது. ஆனால் அந் நிதிகள் மிகக் குறைந்த அளவுடையனவாக இருந்த காரணத்தால், அவற்றிலிருந்து அளிக்கப்பட்ட கல்விக் கொடைகள் (Educational Grants) போதுமானவையாக இல்லை. அதே சமயத்தில், நெடுஞ்சாலை அமைப்புக்காகவும் பராமரிப்புக்காகவும் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த நிதிகளின் வருவாய்கள் பெரும் அளவில் உயர்ந்துவிட்ட காரணத்தால், கல்விப் பணியோடு ஒப்பிடும்போது, நெடுஞ்சாலைப் பணி தனிப்பெருஞ் சிறப்புடன் நடக்கலாயிற்று என்றே கூறவேண்டும். பொதுக்கல்வி, நெடுஞ்சாலை ஆகிய இந்த இரண்டு துறைகள் பற்றிய பொது மக்களின் வாழ்க்கைத் தரங்களில் இந்த அளவு வேறுபாடு இருப்பது, பகுத்தறிவின் அடிப்படையில் பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட நிலைமை என்று கூறமுடியாது. அவற்றிற்கென்றே ஒதுக்கப்பட்ட வருவாய்களை உடைய சிறப்பு நிதிகளை உருவாக்கியதன் மூலம், செலவுகள்மீது இருக்க வேண்டிய வரவு செலவுத்திட்டக் கட்டுப்பாட்டைக் கைவிட்டதன் விளைவாகவே பெரும்பாலும் அந்த நிலைமை ஏற்பட்டது என்று கூறவேண்டும். அதாவது செலவுகளின் அளவு, குறிப்பிட்ட வரி வருவாய்களின் அளவால் முடிவுசெய்யப்படும்படி விடப்பட்டதன் விளைவே என்று கூறலாம்.

செலவுகட்கான தொகைகள் சிறப்பு நிதிகள்மூலம் தரப்படும் ஏற்பாட்டின் பயனாக, ஒரு குறிப்பிட்ட ஆண்டின் நிதி நடவடிக்கையின் விளைவுகள் என்ன என்பதைச் சட்டமன்றமும் பொது மக்களும் அறிந்துகொள்ள முடியாத நிலை ஏற்பட்டிருக்கிறது. ஒரு குறிப்பிட்ட நிதியாண்டில் அரசாங்கம் பெற்றிருந்தது உபரியா அல்லது பற்றுக்குறையா என்பதை எவ்வாறு அறிவது? எல்லா நிதிகளுடைய உபரிகளையும் பற்றுக்குறைகளையும் கூட்டிப் பார்ப்பதன் மூலமாக இந்தக் கேள்விக்கு உரிய ஒரு விடையைக் கண்டறிய முடியும். அப்படிக் கண்டறிந்தாலும், ஒரு நிதியின் உபரியை இன்னொரு நிதிக்கு மாற்ற முடியாத நிலை இருக்கும்போது, அந்த விடைக்குப் பொருள் என்ன இருக்க முடியும்? பொதுநிதியின் உபரி அல்லது பற்றுக்குறையை மட்டும் அளந்துபார்ப்பதும், அந்த நிதியின் வரவுகளையும் செலவுகளையும் ஒத்த நிலைப்படுத்த முயல்வதுமே, பொதுவான போக்காக இருந்துவருகிறது. ஆனால் இப்படிச் செய்வதால், மாநில நிதி நடவடிக்கைகளின் ஒரு சிறு பகுதி மட்டுமே அறிவுகெழுமிய கட்டுப்பாட்டுக்கு உள்ளாகிறது என்பது வெள்ளிடைமலை.[14]

இந்தச் சிக்கலுக்கான தீர்வு இத் தன்மையது என்பது தெளிவாகத் தெரிகிறது. அதே சமயத்தில் பொதுமக்களின் கருத்து அத் தீர்வுக்கு மாறாக இருக்கும் என்பதும் அதே அளவுக்குத் தெளி

வாகப் புலனுகிறது. கொள்கை அளவில் பார்க்கும்போது, ஆற்றல் நிறைந்த வரவு செலவுத் திட்டம் தேவை என்பதை அனைவருமே ஏற்றுக்கொள்கிருர்கள். ஆனுல் அத்தகைய வரவு செலவுத் திட்டம் தீட்டுவதை இயலாத செயலாக ஆக்குகிற ஒரு நடைமுறையைக் கைவிட வேண்டும் என்பதற்கு மிகச் சிலருடைய ஒப்புதலே கிடைக்கிறது. எல்லாச் சிறப்பு நிதிகளையும் அகற்றிவிட முடியும் என்று நாம் கூறவில்லை. சில சிறப்புக் காரணங்களை முன்னிட்டு, கடன் கழிவு நிதி (Sinking Fund)—அதாவது கடனைத் தீர்ப்பதற்கான நிதி, தனியாகத்தான் இருந்தாக வேண்டும். சட்ட விதிகளின்படிச் சில பொறுப்பு நிதிகள் (Trust Funds) தனியாக இருக்கவேண்டிய நிலை இருக்கிறது. முதிய வயது ஈட்டுறுதி (Old age Insurance) வேலையின்மை இழப்பு ஈடு முதலிய சிறப்புப் பணிகளை, அவை தற்போது நடைமுறையில் உள்ள தன்மையில், பொதுப் பணிகளிலிருந்து தனிமைப்படுத்துவதுதான் முறை. ஏனென்ருல், இத்தகைய திட்டங்களில் திரட்டப்படும் தண்டல்கள் (Collections), ஒரு குறிப்பிட்ட காப்பிருப்பு நிதிக்குச் (Reserve Fund) செலுத்தப்படும் தவணைத் தொகைகளாக (Premium payments) இருக்கின்றன. இவற்றைத் தவிர்த்த ஏனைய வரவுகள் யாவும் பொது நிதியிலேயே சேர்க்கப்படவேண்டும்; ஏனைய செலுத்தல்கள் யாவும் பொது நிதியிலிருந்தே கொடுக்கப்பட வேண்டும். அப்படிச் செய்தால்தான் வரவு செலவுத் திட்ட ஒருமையை (Unity) அடைய முடியும்.

பெட்ரோல் வரிகளை நெடுஞ்சாலை அமைப்புக்கும், டாக்டர்களுடைய கட்டணங்களை மருத்துவத் துறையினரின் நன்மைக்கும், முடிதிருத்துவோரின் கட்டணங்களை முடிதிருத்துவோரின் நன்மைக்குமாக உரிமைப்படுத்தும் முறையை, அதே தர்க்க முறைப்படி மேலும் விரிவாகக் கையாள்வதாலுல், புகையிலை வரிகளைக் குறிப்பாகப் புகை பிடிப்போரின் நன்மைக்காகவும், மதுவின் மீதான வரிகளை மது அருந்துபவர்களின் நன்மைக்காகவும், சொத்து வரிகளைச் சொத்தை மேம்பாடுறச் செய்வதற்காகவுமே உரிமைப்படுத்தவேண்டும் (ஒதுக்கி வைக்க வேண்டும்). இத்தகைய ஒதுக்கீட்டைத் தொடர்ந்து செய்துகொண்டே போனுல், இறுதியில், அரசாங்கமானது வறியவர்களுக்கான நிவாரணச் செலுத்தல்களை (Relief payments) அளிக்கவே முடியாது. ஏனென்ருல், வறியவர்கள், அந்தத் தொகைகளைப் பெறுவதற்கான வரி எதனையும் செலுத்தவில்லை அல்லவா? இதே தர்க்க முறைப்படி, சட்டமன்றங்களும் நீதிமன்றங்களும் நிர்வாக அமைப்பும் தொடர்ந்து இருக்க வேண்டுமானுல், விலைக்கு விற்கத்தக்க ஊழியங்களை அவை உற்பத்தி செய்தாகவேண்டும். இந்தத் தர்க்க முறையின் விளைவாக வரவு

செலவுத் திட்டத் துறையைக் (Budget department) கலைத்துவிட வேண்டியதுதான். ஏனென்றால் அந்தந்த வரிகளின் வருவாய்களை அந்தந்த வரிகளைச் செலுத்துவோரின் நன்மைக்கே ஒதுக்கிவிடுவது என்னும் முறை எல்லா வரிகளுக்கும் கையாளப்பட்டால் வரவு செலவுத் திட்டத்தைத் தீட்டவேண்டிய கடமை அந்தத் துறைக்கு எப்படி இருக்க முடியும்?

## ஒரு வரவு செலவுத் திட்டம் எப்போது ஒத்த நிலைப்படுத்தப்படுகிறது? (When is a Budget Balanced?)

**ஒத்தநிலை என்பது ஒரு கணக்கிடும் கருத்து (Balance, an Accounting concept):** வரவு செலவுத் திட்டத்தை ஒத்தநிலைப் படுத்துவதைப்பற்றி ஏராளமான அளவில் கருத்தாய்வு செய்யப்பட்டு வருகிறது என்ற போதிலும், ஒரு குறிப்பிட்ட வரவு செலவுத் திட்டத்தின் புள்ளி விவரங்கள் அனைத்தையும் கண்டறிந்த பிறகும் அத் திட்டம் ஒத்தநிலை உடையதா அல்லவா என்பதை முடிவு செய்வதில் மிகுந்த கருத்து வேறுபாடு காணப்படுகிறது. வரவு செலவுத் திட்டத்தின் 'ஒத்த நிலை' என்பது, ஒரு கணக்கிடும் கருத்தே ஆகும். ஆகவே 'ஒத்த நிலை'யைப் பற்றி ஆராய்வதற்கு முன்னால், அரசாங்கக் கணக்குகளின் நோக்கத்தையும் அடிப்படை இயல்புகளையும் பற்றிய ஓரளவு அறிவாவது நமக்கு இருக்க வேண்டியது இன்றியமையாதது ஆகும்.

நிதிக் கொள்கையை வகுக்கும் பொறுப்புள்ளவர்களுக்கும் பொது மக்களுக்கும், கடந்த கால நிதி நடவடிக்கைகளின் விளைவுகளை எடுத்துக் காட்டுவதே, அரசாங்கக் கணக்குகளின் முதன்மையான பணியாகும். கடந்த கால மதிப்பீடுகள் அல்லது கணக்குகளில் எந்தக் கணக்கீட்டுப் பாகுபாடுகளும் (Accounting classifications) அறிவிப்புப் பாகுபாடுகளும் (Reporting classifications) கையாளப்பட்டனவோ, அதே பாகுபாடுகளைத்தான் எதிர்காலம் பற்றிய மதிப்பீடுகளுக்கும் கையாளவேண்டும். இப்படிச் சொல்வதன் பொருள், நிதி அறிக்கைகள் புரியக்கூடிய வடிவத்தில் ஆயத்தப்படுத்தப்படவேண்டும் என்பதும், பல்வேறு இனங்களைப் (Items) பொருத்தமான முறையில் பாகுபாடு செய்வதில் வரவு செலவுத் திட்டமிடும் ஏஜன்சிகளும், கணக்கிடும் ஏஜன்சிகளும் மிக விழிப்பாக இருக்கவேண்டும் என்பதுமே ஆகும். நிதி நடவடிக்கைகளின் விளைவாக ஏற்படுகிற நிதி நிலைமைகளைத் தெள்ளத் தெளிவாக எடுத்துக் காட்டுவதே கணக்கிடுதல், அறிவித்தல், ஆகியவற்றின் குறிக்கோள் என்பதை எப்போதும் நினைவில் நிறுத்துவதுதான், பொருத்தமான பாகுபாட்டின் அடிப்படை எனலாம்.

அரசாங்கத்தின் சொத்துகளையும் (Assets) பொறுப்புகளையும் (Liabilities) எடுத்துக் காட்டுகிற ஐந்தொகைக் குறிப்பு முறையால் (Balance sheet approach) இந்த நோக்கத்தை நிறைவேற்ற முடியாது. அரசாங்கத்தின் தலையாய பொறுப்பு, செலுத்தப்பட வேண்டியுள்ள அதனுடைய கடனேயாகும். இந்தக் கடனானது, கருவூலத்தின் மீது மற்றவர்களுக்கு உள்ள சட்டமுறை உரிமைகளையே (legal claims) குறிக்கிறது. அரசாங்கத்தின் கையில் உள்ள ரொக்கம் (cash) அதன் சொத்துகள் என்னும் தலைப்பில் அடங்கும் என்பதில் ஐயமில்லை. ஆனால் ரொக்கத்தைத் தவிர்த்த அரசாங்கத்தின் ஏனைய சொத்துக்களுக்கு, நம்முடைய இப்போதைய கருத்தாய்வைப் பொறுத்தவரை, பொருள் எதுவும் இல்லை என்றே கூறவேண்டும். அரசாங்கக் கட்டிடங்களுக்கும் அரசாங்க உடைமையாக உள்ள தளவாடங்களுக்கும் உரிய பணமதிப்பைக் கணக்கிட முடியும் என்பது உண்மையே. ஆனால் இந்த 'சொத்துக'ளிலிருந்து வருமானம் எதுவும் கிடைப்பதில்லை. சொத்துகள் என்னும் சொல் வழக்கமாக எந்தப் பொருளில் கையாளப்படுகிறதோ, அந்தப் பொருளில் இவற்றை உண்மையான சொத்துகள் என்று கூறமுடியாது. இவை, அரசாங்க நுகர்வுக்காகவே இருக்கின்றன. ஆகவே இவற்றை அரசாங்கக் கடன் பொறுப்புகளுக்கு எதிரான சொத்துகள் என்று கணக்கிட்டு, அந்த அடிப்படையில் கருவூலத்தின் நிதி நிலைமையை விளக்கமுடியாது. குடிமக்களின் வரி செலுத்தும் திறனை அரசாங்கத்தின் ஒரு சொத்தாகக் கணக்கிடுவோர் சிலர் இருக்கிறார்கள். இந்தச் 'சொத்தின்' மதிப்பீடானது, ஒருதலை (arbitrary), முடிவாகவும் கணக்கீட்டின் எந்த நோக்கத்தை நிறைவேற்றுவதற்கும் பயனற்றதாகவுமே இருக்க முடியும். அரசாங்கம் என்பது ஊழியம் புரிகிற ஓர் அமைப்பே தவிர பொருள்களை உற்பத்தி செய்கிற வாணிபம் அல்ல. ஆகவே ஐந்தொகைக் குறிப்பிலிருந்து பயனுள்ள செய்தி எதையும் அறிந்துகொள்ள முடியாது.

ஆனால் ஒரு குறிப்பிட்ட காலத்தில் வருமானத்திற்கும் செலவுக்கும் உள்ள உறவைத் தெரிந்துகொள்வது இன்றியமையாதது. நிதிக் கொள்கையின் விளைவாக ஏற்பட்டிருப்பது உபரியா அல்லது பற்றாக்குறையா என்பதையும், கருவூலத்தின் போக்கு எந்தத் திசையில் சென்றுகொண்டிருக்கிறது என்பதையும், அந்த உறவிலிருந்து நாம் அறிந்துகொள்ள முடியும். எதிர்கால நிதிக் கொள்கையை வகுப்பதற்கு இத்தகைய உண்மைகள்தான் தேவைப்படுகின்றன.

**அடிப்படைக் கருத்துகளின் இலக்கணங்கள் (Definition of Basic concepts):** ஒரு குறிப்பிட்ட காலப் பகுதியில் நிகரச் செலவுகளை விட நிகர வரவுகள் மிகையாக இருக்குமானால், கருவூலத்தின் நிலைமை முன்னேறியிருக்கிறது என்று பொருள்.

வரவு, செலவு ஆகியவற்றின் அடிப்படைப் பிரிவுகளுக்குப் பின்வருமாறு இலக்கணம் வகுக்கலாம்:

1. கருவூலத்தின் கடன் பொறுப்புகளை அதிகப்படுத்தாமல், பயன்படுத்தக்கூடிய அதன் நிதிகளை மட்டும் அதிகப்படுத்துகிற வரவுகளோ, அல்லது, அதன் பயன்படுத்தக்கூடிய நிதிகளைக் குறைக் காமல் கடன் பொறுப்புகளை மட்டும் குறைக்கிற வரவுகளோ, வருவாய் வரவுகளாகும் (Revenue Receipts).இத்தகைய வரவுகள், கருவூலத்தின் நிகர நிலைமையை முன்னேற்றம் அடையச் செய்கின்றன.

2. கருவூலத்தின் கடன் பொறுப்புகளைக் குறைக்காமல் அதன் பயன்படுத்தக்கூடிய நிதிகளை மட்டும் குறைக்கிற செலுத்தல்களே, செலவுச் செலுத்தல்கள் (Cost payments) ஆகும். இவை, கருவூலத்தின் நிகர நிலைமையைப் பின்னேற்றம் அடையச் செய் கின்றன.

3. கருவூலத்தின் பயன்படுத்தக்கூடிய நிதிகளை உயர்த்தி, அதன் கடன் பொறுப்புகளையும் அதே அளவு உயர்த்துகிற வரவு களே, வருவாய் அல்லாத வரவுகள் (Non-revenue receipts) ஆகும். இந்த வரவுகளால், கருவூலத்தின் நிகர நிலைமையில் எத்தகைய மாறுதலும் ஏற்படுவதில்லை.

4. கருவூலத்தின் பயன்படுத்தக்கூடிய நிதிகளைக் குறைத்து, அதன் கடன் பொறுப்புகளையும் அதே அளவு குறைக்கிற செலுத் தல்களே, செலவு அல்லாத செலுத்தல்கள் (Non-cost payments) ஆகும். இந்தச் செலுத்தல்களால் கருவூலத்தின் நிகர நிலைமையில் எத்தகைய மாறுதலும் ஏற்படுவதில்லை.

வருவாய் வரவுகளின் பெரும்பாலான இனங்கள், மேலே தரப் பட்டுள்ள முதல் இலக்கணத்தின் முதற்பகுதியில் அடங்கிவிடுப வையே. கருவூலக் கடன் பத்திரங்களை அரசாங்கத்திற்குத் திருப்பித் தருவதன் மூலமாகச் செலுத்தப்படுகிற வரிகளால் கிடைக்கும் வரவுகளைச் சுட்டிக்காட்டுவதற்கே, அந்த இலக்கணத்தின் இரண் டாம் பகுதி இணைக்கப்பட்டிருக்கிறது.[15] கருவூலக் கடன் பத்திரங்களை விற்பதன் மூலமாகப் பெறப்படுகிற கடன் வரவு களையும், பதவி ஓய்வு நிதிகள்— ஈட்டுறுதி நிதிகள் (Insurance funds) முதலிய சிறப்புப் பொறுப்பு நிதிகளில் (Special Trust funds) சேர்க் கப்படுவதற்காகக் கருவூலத்திற்கு வந்து, உடனடியாக அந் நிதி களுக்கு மாற்றப்பட்டுவிடுகிற வரவுகளையும் தவிர்த்த ஏனைய எல்லா வரவுகளும்,. பெரும்பாலும், வருவாய் வரவுகளில் அடங்கி

விடுகின்றன. இப்போது குறிப்பிடப்பட்ட—வருவாய் வரவுகளில் அடங்காத—இரு வகை வரவுகளும், வருவாய் அல்லாத வரவுகள் ஆகும்.

கடனைத் திருப்பித் தருவதற்கான செலுத்தல்களையும், சென்ற பத்தியில் குறிப்பிடப்பட்டதைப் போன்ற சிறப்புப் பொறுப்பு நிதிகளுக்கு மாற்றப்படுகிற செலுத்தல்களையும் தவிர்த்த ஏனைய எல்லாச் செலுத்தல்களும், செலவுச் செலுத்தல்களில் அடங்கும். அரசாங்கக் கடனுக்காகச் செலுத்தப்படுகிற வட்டித்தொகை ஒரு செலவுச் செலுத்தலாக இருந்தாலும், அக் கடனின் அசலைத் திருப்பித் தருவது ஒரு செலவு அல்லாத செலுத்தலே என்னும் உண்மை, குறிப்பிடத்தக்க ஒன்று. நாம் மேலே தந்துள்ள இலக்கணங்களின்படி இந்த வேறுபாடு ஏற்படுகிறது.

கருவூலத்தின் நிகரநிலைமையில் வரவுகளால் ஏற்படும் விளைவின் தன்மையை அடிப்படையாகக் கொண்டே, அவ் வரவுகளை, வருவாய் வரவுகள் என்றும், வருவாய் அல்லாத வரவுகள் என்றும் பாகுபாடு செய்கிறோம். கருவூல நிதிகளை உயர்த்தி, அதே அளவுக்கு அதன் கடன் பொறுப்புகளை உயர்த்தாமலிருக்கிற வரவுகளே, வருவாய் வரவுகள் எனப்படும். ஏனைய வரவுகள், வருவாய் அல்லாத வரவுகள் எனப்படும். அதுபோலவே, கலவூலத்தின் நிகர நிலைமையில் செலுத்தல்களால் ஏற்படும் விளைவுகளை அடிப்படையாகக் கொண்டே, அச் செலுத்தல்களை, செலவுச் செலுத்தல்கள் என்றும், செலவு அல்லாத செலுத்தல்கள் என்றும் பாகுபாடு செய்கிறோம். கருவூல நிதிகளைக் குறைத்து, அதே அளவுக்குக் கடன் பொறுப்புகளைக் குறைக்காமலிருக்கிற செலுத்தல்களே, செலவுச் செலுத்தல்கள் எனப்படும். ஏனைய செலுத்தல்கள் செலவு அல்லாத செலுத்தல்கள் எனப்படும். இந்தப் பாகுபாடுகளைச் செய்யும் போது, பெறப்படுகிற அல்லது செலுத்தப்படுகிற நிதிகளின் மூலத்தைப்பற்றி நாம் கவனிக்க வேண்டியதில்லை. அந்த வரவுகள் அல்லது செலவுகளால் கருவூலத்தில் எத்தகைய விளைவுகள் ஏற்படுகின்றன என்பதைத்தான் நாம் கவனிக்கவேண்டும். எடுத்துக் காட்டாக, வருமான வரிகள் மூலம் எழுப்பப்பட்ட நிதிகள் (வருவாய் வரவுகள்) கடனைத் தீர்ப்பதற்காகப் பயன்படுத்தப் படலாம் (செலவு அல்லாத செலுத்தல்கள்). அதுபோலவே, கடன் வாங்கப்பட்ட நிதிகள் (வருவாய் அல்லாத வரவுகள்), அலுவலகப் பொருள்களை வாங்குவதற்குப் பயன் படுத்தப்படலாம் (செலவுச் செலுத்தல்கள்).

இந்தக் கருத்துகளையெல்லாம் தெளிவாக உணர்ந்துகொண்டால், 'ஒரு வரவு செலவுத் திட்டம் எப்போது ஒத்தநிலை உடையதாக இருக்கிறது?' என்னும் கேள்விக்குக் கீழ்க்கண்ட முறையில் அமைந்த சரியான விடைகளைத் தரமுடியும்:

ஒரு வரவு செலவுத் திட்டத்தின் காலத்தில் வருவாய் வரவுகள் செலவுச் செலுத்தல்களுக்குச் சரி நிகராக இருக்குமானால், அந்த வரவு செலவுத் திட்டம் ஒத்த நிலை உடையதாகும் (Balanced budget).

வரவு செலவுத் திட்டக் காலத்திற்கான வருவாய் வரவுகள் செலவுச் செலுத்தல்களைவிடக் கூடுதலாக இருக்குமானால், அந்த இரண்டிற்கும் உள்ள வேறுபாடு, வரவு செலவுத்திட்ட உபரி (Budget surplus) ஆகும்.

வரவு செலவுத் திட்டக் காலத்திற்கான வருவாய் வரவுகள் செலவுச் செலுத்தல்களைவிடக் குறைவாக இருக்குமானால், அந்த இரண்டிற்கும் உள்ள வேறுபாடு, வரவு செலவுத் திட்டப் பற்றுக்குறை (Budget deficit) ஆகும்.

கடன் எழுப்புவதன் மூலம் கிடைக்கும் வரவுகள், சிறப்புப் பொறுப்பு நிதிகளில் சேர்க்கப்படுவதற்காகக் கிடைக்கும் வரவுகள் ஆகிய இரண்டு பொதுவான வருவாய் அல்லாத வரவுகளின் வகைகளை முன்னரே நாம் குறிப்பிட்டுள்ளோம். இந்த இருவகை வரவுகளில், இரண்டாவது வகை வரவால், வரவு செலவுத் திட்டம் ஒத்தநிலை உடையதாக இருப்பதா, உபரி உடையதாக இருப்பதா அல்லது பற்றுக்குறை உடையதாக இருப்பதா என்பதை முடிவு செய்ய முடியாது என்னும் உண்மையைப் பொது அறிவுக் கண்ணோட்டத்திலிருந்தே தெரிந்து கொள்ளலாம். ஏனென்றால் இந்த வகை வரவுகள்மீது கருவூலத்திற்கு எத்தகைய உண்மையான உரிமையும் கிடையாது. ஆகவே இவ் வரவுகளால் கருவூலத்தின் பயன்படுத்தக்கூடிய நிதிகளைக் கூடுதலாக்க முடியாது. கடன் வாங்குவதன் மூலம் பெற்ற வரவுகள், வரவு செலவுத் திட்டப் பற்றுக்குறையின் விளைவாக ஏற்பட்டவை. ஆகவே அவ் வரவுகளால் அப் பற்றுக்குறை உருவாக்கப்படுகிறது என்று கூறமுடியாது. வருவாய் அல்லாத வரவுகள் இரண்டைக் குறிப்பிட்டதைப் போலவே, செலவு அல்லாத செலுத்தல்களில் இரண்டு பொது வகைகளைக் குறிப்பிட்டிருந்தோம். அச் செலுத்தல்களாவன : 1. கடனைத் திருப்பிச் செலுத்துதல். 2. சிறப்புப் பொறுப்பு நிதிகளுக்குப் பணத்தை மாற்றுதல். இந்த இரண்டாவது வகைச் செலுத்தலில் அடங்கியுள்ள பணத்தின்மீது கருவூலத்திற்கு உண்மையான உரிமை எதுவும் கிடையாது. இந்தப் பணத்தை மாற்றுவதால் கருவூலத்தின் நிலைமை பின்னேற்றம் அடையாது. ஆகவே, இந்த மாற்றலால், உபரியா அல்லது பற்றுக்குறையா என்பதை முடிவு செய்ய முடியாது என்பது தெளிவு. இந்தப் பணம், தொடக்கத்தி

லிருந்தே, பொறுப்பு நிதிகளுக்காக உரிமைப் படுத்தப்பட்டது ஆகும். ஆகவே அது எப்போதுமே பயன்படுத்தக்கூடிய நிதியாக இருந்தது கிடையாது. நிகரக் கடன் தீர்த்தலானது (Net repayment of debt)[16] கருவூல உபரியின் விளைவாக ஏற்பட்டது ஆகும். ஆகவே அதனுல் உபரியை அல்லது பற்றுக்குறையை உருவாக்க முடியாது என்பது தெளிவு.

மொத்த வரவுகளை (வருவாய் வரவுகள், வருவாய் அல்லாத வரவுகள் ஆகியவற்றின் கூட்டுத் தொகையை) மொத்தச் செலுத்தல் களோடு (செலவுச் செலுத்தல்கள், செலவு அல்லாத செலுத்தல்கள் ஆகியவற்றின் கூட்டுத் தொகையோடு) ஒப்பிட்டுப் பார்ப்பதால், வரவு செலவுத் திட்ட ஒத்த நிலையைப் பற்றிய உண்மைகள் எவற்றையும் தெரிந்துகொள்ள முடியாது. மொத்த வரவுகளும் மொத்தச் செலுத்தல்களும் ஒன்றை ஒன்று சரிக்கட்டுவதில் ஏற்படுகிற குறுகிய கால, சிறிய தாமதங்களைத் தவிர்த்துவிட்டுப் பார்த்தால், உண்மையான உபரி அல்லது பற்றுக்குறை எத்துணைப் பெரும் அளவினதாக இருந்தாலும், வரவு செலவுத் திட்டம் எப்போதும் ஒத்த நிலையில் இருப்பதாகவே அந்த ஒப்பீடு எடுத்துக் காட்டும். ஏற்பட்டிருப்பது உபரியா அல்லது பற்றுக்குறையா என்பதை முடிவு செய்வதில், வருவாய் அல்லாத வரவுகள் அல்லது செலவு அல்லாத செலுத்தல்களில் எவையாவது நுழைந்து விடுமானுல், அவை நுழைந்த நிலையில் முடிவு செய்யப்படுகிற உபரி அல்லது பற்றுக்குறையின் தொகை, சரியல்லாததாகவும் சீர்கேடான தாகவுமே இருக்கும்.

## பல்வகை வரவு செலவுத் திட்டங்கள் (Multiple Budgets)

நிதிக் கட்டுப்பாட்டையும், திட்டமிடுவதையும் இயலக் கூடிய தாக ஆக்குவதுதான், வரவு செலவுத் திட்டத்தின் பணியாகும். ஒரு வரவு செலவுத் திட்டம், எந்த அளவுக்கு எல்லாவற்றையும் தன்னுள் அடக்கியதாக இருக்கிறதோ, எந்த அளவுக்குக் கடந்த கால நிதி நடவடிக்கையையும் எதிர்கால நிதித் திட்டங்களையும் ஒரே கட்டுக்கோப்புக்குள் அமைத்துக் காட்ட முடிகிறதோ, அந்த அளவுக்குத்தான் அதனுடைய கட்டுப்பாட்டுப் பணியை அதனுல் சிறப்பாக நிறைவேற்ற முடியும். ஒன்றுக்கு மேற்பட்ட வரவு செலவுத் திட்டங்களை உருவாக்கலாம் என்றும், வெவ்வேருன சிறப்புப் பணிகளின் செலவுக்குரிய நிதிகள் பற்றிய உண்மைகளையும் பரிந்துரைகளையும் வெவ்வேறு வரவு செலவுத் திட்டங்களில் அமைத்துக் காட்டலாம் என்றும், அவ்வப்போது பலர் ஆய்வுரை தந்திருக்கிருர்கள். அத்தகைய ஆய்வுரைகளில் இரண்டு மட்டும் கீழே எடுத்துரைக்கப்பட்டு ஆராயப்பட்டுள்ளன.

**வழக்கமான வரவு செலவுத் திட்டங்களும் நெருக்கடி வரவு செலவுத் திட்டங்களும் (Ordinary and Emergency Budgets):** போர், மந்தம் (Depression), இன்ன பிற நெருக்கடிக் காலங்களில், வரவுகள் செலவுகள் ஆகியவை பற்றிய முறைகள் பெரும் மாறுதலுக்கு உள்ளாவது தவிர்க்க முடியாதது. எனவே அத்தகைய காலங்களில் இரண்டு வரவு செலவுத் திட்டங்களைத் தயாரிக்கலாம் என்று சில சமயங்களில் பரிந்துரை செய்யப்படுகிறது. தராதரக் கோணத்திலிருந்து பார்க்கும்போது நிலையாக இருக்கக்கூடிய பணிகளுக்கான—அப்படி இருப்பதால் 'வழக்கமான பணிகள்' என்று அழைக்கப்படக் கூடிய பணிக்களுக்கான—வரவு செலவை 'வழக்கமான வரவு செலவுத் திட்டத்'தில் அமைக்கலாம். நெருக்கடித் தன்மை பொருந்தியனவாகவும், ஆகவே பெரும்பாலும் குறுகிய காலத்திற்கு மட்டுமே இருக்கக்கூடியனவாகவும் உள்ள பணிகளுக்கான விவரங்களை 'நெருக்கடி வரவு செலவுத் திட்டத்'தில் அமைக்கலாம்.

தன்னுடைய வரவுசெலவுத் திட்டச் சுருக்கங்களில் 'பொதுச்' செலவுகளையும், 'நெருக்கடிச்' செலவுகளையும் தனித்தனியே பிரித்துக்காட்டுகிற நடைமுறையை, ஐக்கிய அமெரிக்காவின் கூட்டரசாங்கம், 1933ல் தொடங்கியது.[17] இவ்வாறு பிரித்துக் காட்டுவது, 'வீணான' செலவுகளின் அளவை மறைப்பதற்காக அரசாங்க நிர்வாகத்தினர் கையாளும் 'தந்திரம்' என்று சிலர் குறை கூறினர். நிர்வாகத்தினர் நிலையான தன்மை படைத்த சில செலவுகளை நெருக்கடிச் செலவுகள் என்னும் பிரிவில் மாற்றிக் காட்டிவிட்டதாகக் கருதியே அவர்கள் அவ்வாறு கூறினர். மாற்றிக் காட்டினார்கள் என்பது உண்மையாக இருந்தாலும் இல்லாவிட்டாலும்,—அவ்வாறு மாற்றிக் காட்டி ஏமாற்றும் எண்ணம் அரசாங்கத்திற்கு இருக்கவில்லை என்று சண்டல்சென் (Sundelson) என்பார் கருதுகிறார்[18]—இவ்வாறு செலவுகளை இரண்டு பிரிவுகளாக வகுத்துக்காட்டும் முறை, இரண்டு வரவு செலவுத் திட்டங்களை உருவாக்கும் முறையாகாது. எனவே இந்த எடுத்துக்காட்டு, பல வகை வரவு செலவுத் திட்டங்களுக்கான எடுத்துக்காட்டாக இருக்க முடியாது. இந்த முறை, ஒரே வரவு செலவுத் திட்டத்தின் சுருக்கங்களிலும் நிதி அறிக்கைகளிலும், நிதிக் கொள்கையைத் தெளிவாக அறிந்து கொள்ளும்படிச் செய்வதற்காக, செலவுகளை, வழக்கமான செலவுகள் என்றும், நெருக்கடிச் செலவுகள் என்றும் இரண்டு பகுதிகளாகப் பிரித்துக்காட்டும் ஏற்பாடே ஆகும். மற்றபடி, இந்த முறையிலும், எல்லாச் செலவுகளும் வழக்கம் போல ஒரே வரவு செலவுத் திட்டத்தில் தான் அமைக்கப்பட்டன,

நெருக்கடிக் காலங்களில் இரண்டு அல்லது பல வரவு செலவுத் திட்டங்களை உருவாக்குவதால் எத்தகைய நன்மையும் ஏற்படுவதாகத் தெரியவில்லை. வழக்கமான செலவுகளையும் வழக்கத்திற்கு மாறான செலவுகளையும் தனித்தனியாகப் பிரித்துக் காட்டுவதால் ஏதாவது நன்மைகள் ஏற்படுமானால், எல்லாச் செலவுகளையும் தன்னுள் அடக்கிய ஒரு வரவு செலவுத் திட்டத்தில், சிலவகைச் செலவுகளின் வழக்கத்திற்கு மாறான தன்மை தெளிவாக விளங்கும் வகையில் பல்வேறு செலவினங்களைச் சுருக்கித் தருவதன் மூலம், அந்த நன்மைகளைப் பெறமுடியும். இதற்கு மாறாக, பல வரவு செலவுத் திட்டங்கள் இருப்பதால் ஏற்படும் தீமைகள் பலவாகும். வழக்கமான வரவு செலவுத் திட்டம் என்றும், நெருக்கடி வரவு செலவுத் திட்டம் என்றும் இருவகை வரவு செலவுத் திட்டங்கள் உருவாக்கப்படுவதால், பொதுவாக வரவு செலவுத் திட்டங்களால் அளிக்கப்படுவதாகக் கருதப்படுகிற திறமையை வளர்ப்பதற்கான தூண்டுதல்கள், வழக்கமான வரவு செலவுத் திட்டத்தில் மட்டுமே காணப்படக் கூடும். இரு வகை வரவு செலவுத் திட்டங்கள், அத் திட்டங்களை உருவாக்கும் அதிகாரிகளின் உள்நோக்கம் பற்றிய ஐயப்பாடுகள் நிறைந்த ஒரு சூழ்நிலையை உருவாக்கி விடுகின்றன. அச் சூழ்நிலையின் விளைவாக, அரசாங்கத்தின் பல பகுதிகளுக்கிடையே மனக் கசப்பும், நேரமும் முயற்சியும் வீணாகும் நிலையும் ஏற்படக் கூடும். இவைமட்டும் அல்ல. பல்வேறு வரவு செலவுத் திட்டங்கள் இருப்பதால், நிதி நடவடிக்கைகளின் உண்மையான விளைவுகள், பல் வேறு அறிக்கைகளில் சிதறிய வடிவத்தில் சித்திரிக்கப்படுகின்றன. ஆகவே அவ் விளைவுகளின் உண்மை உருவத்தை உணர முடியாத நிலை ஏற்பட்டுவிடுகிறது. பல வரவு செலவுத் திட்டங்களைக் கொண்ட ஜெர்மானிய முறையைப் பற்றி, அழிவு ஈடுகளுக்கான பொது முகவர் (The Agent General for Reparations), 19:7ல் பின்வருமாறு குறிப்பிட்டார் :

> 'வரவு செலவுத் திட்டங்கள், அறிவுத் தெளிவுள்ள வாசகர்கள்கூட, மிக விரிவான முறையில் படித்துப் பகுத்தாய்வு செய்தாலொழியப் பின்பற்ற முடியாத வகையில், முன் வைக்கப்படுகின்றன. முழு வரவு செலவுத் திட்ட அமைப்பானது, ஒரு வரவு செலவுத் திட்டத்திலிருந்து மற்றொரு வரவு செலவுத் திட்டத்திற்கு மாற்றப்படுகிற பல தொகைகளைக் கொண்டதாக இருக்கிறது. இவற்றின் விளைவாகக் குழப்பம் ஏற்படுவதோடு, கணக்கிடும் செயல் சிக்கல் மிகுந்ததாக ஆகிவிடுகிறது.'[19]

**வழக்கமான வரவு செலவுத் திட்டங்களும், மூலதன வரவு செலவுத் திட்டங்களும் (Ordinary and Capital Budgets) :** நடப்பு வரவுகளையும் செலவுகளையும் பற்றிய வழக்கமான நடவடிக்கை வரவு செலவுத்

திட்டத்தோடுகூட, மூலதன வரவு செலவுத் திட்டத்தை அரசாங்கங்கள் தனியாகத் தயாரிக்க வேண்டும் என்று சிலர் அடிக்கடி பரிந்துரை செய்கிருர்கள். அரசாங்கக் கட்டுமானத்தின் (public construction) தலையாய இனங்கள்பற்றிய மூலதனச் செலவுகளும், அரசாங்க உடைமையாகவுள்ள வாணிப நிறுவனங்களின் மூலதனச் செலவுகளும், மூலதன வரவு செலவுத் திட்டத்தில் அடங்கியிருக்கும், ஆனால், கண்டிப்பான முறையில் பேசுவதானால், ஓர் அரசாங்கக் கட்டிடத்தை, ஒரு மூலதனப் பொருள் என்று கூறுவதைவிட ஒரு நீடித்த நுகர்வுப் பொருள் (durable consumer's good) என்று புகல்வதே பொருத்தமாக இருக்கும்.

கட்டுமானத் தன்மை படைத்த அரசாங்க நடவடிக்கைகளைத் தனியாக ஒரு வரவு செலவுத் திட்டத்தில் அமைத்துக்காட்ட வேண்டும் என்னும் பொதுவான கோட்பாடு, அத்தகைய நடவடிக்கைகளுக்கான செலவுகள் மீளா இயல்பு (non-recurring nature) படைத்தவை என்னும் காரணத்திலிருந்து பிறந்ததே ஆகும். அந்தச் செலவுகள், வழக்கத்திற்கு மாருன செலவுகளாகவும் (extra ordinary expenditures), பெரும்பாலும் கடன் வாங்கப் படுகிற நிதிகள் மூலமாகவே சரிக்கட்டப்படுபவையாகவும் இருப்பதால், அவற்றின் விளைவாகப் பொது வரவு செலவுத் திட்டத்தில் ஒரு பற்றுக்குறை ஏற்பட அனுமதிப்பது முறையாகாது என்று கருதப்படுகிறது. வழக்கமான வரவு செலவுத் திட்டம் மட்டும் ஒத்தநிலை உடையதாக இருந்தால் போதும் என்னும் உணர்ச்சி இந்தக் கருத்தில் அடங்கியிருக்கிறது என்பது தெளிவு. வழக்கமான வரவு செலவுத் திட்டம் ஒத்தநிலை உடையதாக இருந்துவிட்டால், அரசாங்கப் பணிகளை நிறைவேற்றுவதற்காகக் கடன் வாங்குவது தவறுகாது என்னும் ஒரு கருத்து எவ்வாறே ஏற்பட்டுவிட்டிருக்கிறது. இந்தக் கருத்தானது, ஒத்த நிலை வரவு செலவுத் திட்டத்தின் முக்கியத்துவத்தை மிக அதிகமாக உயர்த்தி விடுகிறதே தவிர, வரவு செலவுத் திட்டம் என்பது ஒரு நிதித் திட்டமே என்னும் எளிய உண்மையைப் புறக்கணித்து விடுகிறது. ஆகவே, அரசாங்கக் கட்டுமானச் செலவுகள் விரும்பத் தக்கவையாக இருக்குமானுல், அவற்றைப் பொது வரவு செலவுத் திட்டத்தின் மூலமாக நடைமுறைப் படுத்துவதால் அந்தத் திட்டத்தில் பற்றுக்குறை ஏற்பட்டாலும், அவ்வாறே திட்டமிடுவதுதான் சிறந்த முறையாகும். மூலதனச் செலவினங்களைப் பிரித்தெடுத்துத் தனி வரவு செலவுத் திட்டத்தில் அமைத்துக் காட்டுவதால், எத்தகைய உண்மையான நன்மையும் ஏற்படுவதாகத் தெரியவில்லை. நன்மை ஏற்படாதது மட்டுமல்ல. அவ்வாறு மூலதனச் செலவுகளைத் தனிமைப்படுத்துவதால், வழக்கத்திற்கு மாருன இச் செலவுகளிலிருந்து பொதுவான

நிதித் திட்டம் தீட்டுவோரின் கவனமும், பொது மக்களின் கவனமும் வேறு திசைக்குத் திருப்பப்படுகிற ஆபத்தும், வழக்கமான வரவு செலவுத் திட்டம் ஒத்த நிலை உடையதாக இருக்கும் 'மகிழ்ச்சி நிரம்பிய' நிலைமையைப் பார்த்து அந்த இருசாராரும் மன நிறைவோடு 'உறங்கி விடுகிற' ஆபத்தும் ஏற்பட்டுவிடும்.

தண்ணீர்த் திட்டம் (water system), விளக்குத் திட்டம் (light system) முதலிய அரசாங்க உடைமையாகவுள்ள வாணிப நிறுவனங்களுக்காகத் தனியான மூலதன வரவு செலவுத் திட்டங்களை உருவாக்கும் ஆய்வுரை பற்றியும் இதே வகையான முடிவுகளுக்குத் தான் நாம் வரமுடியும். ஆனல் குறிப்பிட்ட நிறுவனத்தில், அந்த நிறுவனத்தின் வரவுகளுக்கும், செலவுகளுக்கும் உள்ள தொடர்பை விரிவான முறையில் எடுத்துக் காட்டுவதற்கும், அந்த நிறுவனத்தின் வரவுகள் செலவுகளுக்குச் சரி நிகராக இருக்கவேண்டுமா, அல்லது உபரியாக இருக்கவேண்டுமா, அல்லது பற்றுக் குறையாக இருக்க வேண்டுமா என்பதைப்பற்றிய அரசாங்கக் கொள்கை எந்த அளவுக்கு நடைமுறையில் செயலாற்றப்பட் டிருக்கிறது என்பதைத் தெரிந்துகொள்வதற்கும், தனியான கணக்கு வைக்கப்படுவது, பொருத்தமான ஏற்பாடேயாகும். எது எப்படியிருந்தாலும், அரசாங்க வாணிபத்தின் வருவாய்கள், அரசாங்க வருவாய்களே; அதன் செலவுகள், அரசாங்கச் செலவுகளே. அரசாங்க வாணிபத் தொழில் துணிவுகளுக்கான செலவுகள், பொது வரவு செலவுத் திட்டத்தில் தெளிவாகத் தெரியும்படிக் குறிக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதைத்தவிர, மற்றபடி அரசாங்கத்தின் ஏனைய வரவுகளும் செலுத்தல்களும் எந்த வகையிலும் அளவிலும் திட்டமிடப் படுகின்றனவோ, அதே வகையிலும் அளவிலும் தான், அரசாங்கத் தொழில் துணிவுகளின் வரவுகளும் செலவுகளும் கூடத் திட்டமிடப்படவேண்டும்.

**நிதி நிர்வாகம் பற்றிய ஏனைய ஏஜன்சிகள்**

வரவு செலவுத் திட்டமானது, நிதி நிர்வாகத்தில் திட்டமிடுவதற்கும் கட்டுப்பாடு செய்வதற்கும் உரிய தலைசிறந்த கருவியாகத் திகழ்வதால், நிதி அமைப்புகள் பற்றிய ஒரு கருத்தாய்வில் அத் திட்டத்திற்குத் தலையாய இடம் தரப்படுவது, முறையான செயலே. என்றாலும், நிதி நடவடிக்கைகளில் பங்கெடுத்துக் கொள்கிற வேறு அமைப்புகளும் இருக்கின்றன என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. ஆனல் இந்த அமைப்புகளின் பங்கு, பெரும்பாலும் வாலாயமான நிர்வாகத்தன்மை உடையதாக இருக்கிறதே தவிர, பொதுவான கொள்கையை வகுக்கும் இயல்பு உடையதாக இல்லை.

**கருவூலம்** (The Treasury): அரசாங்க நிதிகளைப் பெறுவதும், செலுத்துவதும், பாதுகாப்பாக வைத்திருப்பதும், அவற்றிற்கான கணக்குகளை வைத்திருப்பதுமே, கருவூலத்துறையின் முதன்மையான பணிகள் ஆகும். கீழ் மட்டங்களில் உள்ள அரசாங்கங்களைப் பொறுத்தவரை, ஒரு கருவூலத்தின் பணிகள், பெரும்பாலும் வாலாயமாக உள்ளவையும், கணக்கு வைக்கும் பணிகளுமே ஆகும். ஆனால் ஐக்கிய அமெரிக்காவின் கூட்டரசாங்கத்தைப் போன்ற பெரிய அரசாங்கங்களைப் பொறுத்தவரை, கருவூலமானது; விரிவான ஆராய்ச்சி, கொள்கைகளை முன்மொழிதல், கொள்கைகளை முடிவு செய்தல் ஆகிய பணிகளில் ஈடுபடவேண்டியிருக்கிறது. வரிக் கொள்கையைப்பற்றிக் குடியரசுத் தலைவருக்கு அறிவுரை கூறும் தலையாய அமைப்பு கருவூலமே ஆகும். பொதுவான நிதிக்கொள்கை பற்றிக் குடியரசுத் தலைவருக்கு அறிவுரை கூறுவதில், கருவூலத்தின் செயலாளர் (The secretary of the Treasury), வரவு செலவுத் திட்டக் கழகத்தின் நெறியாளர் (The Director of the Bureau of the Budget), பொருளாதார அறிவுரையாளர்களின் மன்றத்தலைவர் (The chairman of the council of Economic Advisers) ஆகியோரின் துணையுடன், மிகுந்த அதிகாரம் உடையவராக விளங்குகிறார்.

வரி வசூல் பணிக்காக ஒரு பெரிய நிர்வாக அமைப்பு தேவைப் படுகிறது. இந்த அமைப்பானது, வருவாய்களைப் பெற்றுக் கொள் வதற்கும் கணக்கிடுவதற்கும் மட்டும் தேவைப்படவில்லை; சட்டத் திற்கு உரை விளக்கம் தருகிற நிர்வாக விதிகளை வகுப்பதற்கும், குடிமக்கள் சட்டத்திற்கும் விதிகளுக்கும் இணங்கி நடக்கும் நிலைமையைப் பேணி வளர்ப்பதற்கும், கருத்து வேறுபாடுகள் ஏற்படும்போது நிர்வாக மட்டத்தில் அவற்றிற்கு உரிய தீர்ப்பை அளிப்பதற்கும் கூடத் தேவைப்படுகிறது. நிகரப் புதுக் கடனை எழுப்பவேண்டிய தேவை இல்லாதபோதும், தவணை முடிவடைகிற கடன் பத்திரங்களை ஈடு செய்வதற்காகப் (to replace securities maturing) பண அங்காடியிலிருந்து நிதிகளைக் கடன் பெறவேண்டி யிருக்கிறது. இந்தக் கடன் வாங்கும் பணியானது சிறப்பாக நடை பெற வேண்டுமானால், பண அங்காடிகள், மூலதன அங்காடிகள் ஆகியவற்றின் நடவடிக்கையைப் பற்றிய தலைசிறந்த அறிவும் நுண்ணிய உணர்வும் இருந்தாக வேண்டும். அவை இருந்தால்தான், அரசாங்கத்திற்கு மிகவும் சாதகமான முறையிலும், நாட்டின் பொருளாதாரத்திற்கு அல்லது குறிப்பிட்ட சமயத்தில் கையாளப் படுகிற பணக்கொள்கைக்கு மிகக் குறைந்த இடர்ப்பாடு ஏற்படுகிற வகையிலும், ஏராளமான அளவில் அரசாங்கக் கடனை எழுப்ப முடியும்.

ஐக்கிய அமெரிக்கக் கருவூலத்தின் செலுத்தல்கள் கீழ்க்கண்ட முறைப்படித் தரப்படுகின்றன: காங்கிரசால் நிதி ஒதுக்கங்கள் செய்யப்பட்ட பிறகு, செலவிடும் உரிமையுடைய குறிப்பிட்ட ஏஜன்சிக்கு, எந்த அளவு தொகை நிதி ஒதுக்கம் செய்யப்பட்டிருக்கிறது என்பதைக் கருவூலமானது அறிவிக்கிறது. அந்த அறிவிப்புக் கிடைத்த பின், அந்த ஏஜன்சியானது, அந்த நிதி ஒதுக்கத் தொகையை ஆண்டு முழுவதும் ஒதுக்கீடு செய்யும் முறையைக் கொண்ட ஒரு பட்டியலை உருவாக்கி, அதனை வரவு செலவுத் திட்டக் கழகத்திற்கு அனுப்பிவைக்கிறது. அந்தப் பட்டியல் ஒப்புக் கொள்ளப்பட்டபிறகு, ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு அந்த ஏஜன்சிக்கு ஒதுக்கீடு (allotment) செய்யப்பட்டுள்ள தொகையின் அளவுக்கு, ஏஜன்சியானது பொறுப்புகளை ஏற்றுக்கொள்ளலாம். இந்தப் பொறுப்புகள் (obligations) செலுத்தப்படுவதற்கு முன்னால், அவற்றைச் செலுத்துவதற்கான ஒப்புதல், கட்டுப்பாட்டுப் பேரதிகாரியிடமிருந்து (the Comptroller General) பெறப்பட வேண்டும். அந்த ஒப்புதல் கிடைத்ததும், கருவூலத்தின் பிரித்துக் கொடுக்கும் ஓர் அலுவலர் (a disbursing officer), ஐக்கிய ரிசர்வ் பாங்குகளில் உள்ள அரசாங்கத்தின் இருப்புகளுக்கு எதிராகச் ‘செக்’குகளை வரைவதன் மூலம், செலுத்தலைச் செய்யலாம்.

**கட்டுப்பாட்டுப் பேரதிகாரி** (The comptroller): ஒரு செலுத்தலுக்கான ‘செக்’ வரையப்படுவதற்கு முன்னால் அந்தச் செலுத்தல் கட்டுப்பாட்டுப் பேரதிகாரியால் ஒப்புக்கொள்ளப்பட வேண்டும் என்பது சென்ற பத்தியில் எடுத்துக் காட்டப்பட்டது. நிதி ஒதுக்கம் எந்த நோக்கத்திற்காகச் செய்யப்பட்டதோ அந்த நோக்கத்திற்காகவே செலவு செய்யப்படுகிறது என்பதை உறுதிப்படுத்திக் கொள்வதுதான், கட்டுப்பாட்டுப் பேரதிகாரியின் முதன்மையான பணியாகும். இவ்வாறு அவருடைய பணி, நிதி ஒதுக்கச் சட்டங்களின் நோக்கத்தை உரை விளக்கம் செய்யவேண்டிய—ஓரளவு நீதிமன்றத் தன்மை பொருந்திய (quasi-judicial) பணியாக இருக்கிறது. அவருடைய பணியில் உள்ள இந்த நீதிமன்றத்தன்மை காரணமாக, அவர், குடியரசுத் தலைவரால் பதினைந்து ஆண்டுக் காலத்திற்கு நியமிக்கப்படுவதோடு, நியமிக்கப்பட்டபிறகு, தலைமை நிர்வாகிக்குக் (குடியரசுத் தலைவருக்கு) கட்டுப்படாத சுயேச்சை நிலை அவருக்குத் தரப்படுகிறது. மாநில அரசாங்கங்களில், கட்டுப்பாட்டுப் பேரதிகாரியின் பணிகளை நிறைவேற்றும் அலுவலர், பொதுவாக, ஆளுநரின் (governor) ஆட்சிக் காலத்திற்கு ஒத்த ஒரு காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்.

கட்டுப்பாட்டுப் பேரதிகாரி நிர்வாகத் துறைக்குக் கட்டுப்படாத சுயேச்சை அலுவலராக இருப்பதால், அவருடைய அலுவலகமானது, பல்வேறு ஏஜன்சிகளிடையே கணக்குக் கட்டுப்பாட்டைச்

செய்கிறது; அடிப்படையான அரசாங்கக் கணக்குகளைப் பராமரிக்கிறது; நிதி அலுவலர்கள், நிதி ஏஜன்சிகள் ஆகியோரின் கணக்குகளைத் தணிக்கை செய்கிறது. நம் கூட்டரசாங்கத்தில், பொதுக் கணக்கீட்டு அலுவலகமானது (General Accounting office), கட்டுப்பாட்டுப் பேரதிகாரியின் நிர்வாக அதிகாரத்தின் கீழேதான் இருக்கிறது.

**பாங்குகள் (The Banks)**[20]: பாங்குகள் அரசாங்கத்தின் ஏஜன்சிகள் அல்ல என்ற போதிலும், கருவூலத்திற்குத் தேவையான பல பணிகளை அவை நிறைவேற்றுகின்றன. ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் கருவூலத்தின் வைப்புகளை (deposits) வைத்திருக்கின்றன.[21] ஆகவே அவை, கருவூலத்தால் வசூலிக்கப்பட்ட பணத்தைப் பெற்றுக்கொள்கின்றன; கருவூலத்தால் வரையப்பட்ட 'செக்'குகளைச் செலுத்துகின்றன. அரசாங்கக் கடனைப் பொறுத்தவரை, ஐக்கிய ரிசர்வ் பாங்குகள், பாங்குகள், வணிகர்கள், மற்றவர்கள் ஆகியோரிடமிருந்து அரசாங்கக் கடன் பத்திரங்களின் புதிய வெளியீடுகளை (new issues of government securities) வாங்குவதற்கான விண்ணப்பங்களைப் பெற்றுக்கொள்கின்றன; கருவூலத்தின் கட்டளைகளுக்கு ஏற்பக் கடன் பத்திரங்களை இவ் வாங்குவோரிடம் ஒதுக்கீடு செய்கின்றன. கடன் பத்திரங்களின் விற்பனைத் தொகைகள், கருவூலத்தின் வைப்புக் கணக்குகளில் வரவு வைக்கப்படுகின்றன. இந்தப் பணிகளை நிறைவேற்றுவதோடு, ஐக்கிய ரிசர்வ் பாங்குகள், உரிய காலத்தில் அரசாங்கக் கடன் பத்திரங்களை மீட்கின்றன; கூப்பன்களுக்கான (coupons) வட்டியைச் செலுத்துகின்றன; இத் தன்மைத்தான பிற பணிகளையும் ஆற்றுகின்றன. ஆனால் ஐக்கிய ரிசர்வ் பாங்குகள், இந்தப் பணிகளை, குறிப்பிடத்தக்க அளவு, உறுப்பினர் பாங்குகள் (member Banks) மூலமாக நிறைவேற்றுகின்றன என்பது உண்மையே. பண அங்காடிகளோடு (money markets) ஐக்கிய ரிசர்வ் பாங்குகளுக்கு உள்ள தொடர்பின் விளைவாக அந்தப் பாங்குகளால், அரசாங்கக் கடன் பத்திரங்களின் புதிய வெளியீடுகளின் நிபந்தனைகளை முடிவு செய்வதில் கருவூலத்திற்குத் தலைசிறந்த அறிவுரை அளிக்க முடிகிறது.

---

அத்தியாயம் 2-ன் பின் இணைப்பு

# நிதி நடவடிக்கைகளின் மாற்று அளவைகள் : வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டம், ரொக்க வரவு செலவுத் திட்டம், நாட்டு வருமானக் கணக்குகள்

இந்த அத்தியாயத்தில், நாம், வரவு செலவுத் திட்டம் என்னும் சொல்லமைப்பை, அரசாங்கத்தின் வரவுகளையும் செலவுகளையும் பற்றிய—தரம் மிகுந்த—தெளிவாக வரைவறுக்கப்பட்ட ஒரு தனிக் கணக்குத் தொகுப்பு என்னும் பொருளில் பயன்படுத்தி யிருக்கிறோம். இருப்பினும் வரவுகள், செலவுகள், உபரி ஆகியவை வெவ் வேறு வகையான பகுத்தாய்வுகளுக்குப் பயன்படுத்தப்படக் கூடும். ஆதலால், நிதி விவரங்களைத் தயாரித்துத் தருவதில் பல்வேறு முறைகள் உள்ளன என்பதே உண்மையாகும். ஏதாவது ஒரு ஆண்டின் வரவுகள் அல்லது செலவுகள் அல்லது உபரியை, மற்ற ஆண்டுகளில், அதே பாகுபாடுகளுடன் அவை வரவு செலவுத் திட்ட அறிக்கையில் வழக்கமாக அமைத்துக் காட்டப்படுகின்ற நிலையோடு ஒப்பிட்டுப் பார்ப்பதில் சிலர் அக்கறை காட்டக்கூடும். கருவூலம், ஏனைய அரசாங்க அமைப்புகள் ஆகியவை பொது மக்களிடம் கொண்டுள்ள நிதித் தொடர்புகளை, வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டத்தைவிட இன்னும் முழுமையான அளவில் கண்டறிய வேண்டுமென்று வேறு சிலர் விரும்பக்கூடும். இறுதியாக, அரசாங்கத் தேவையின் (demand) விளைவாக, வேலையின் அளவு, (the size of employment), வாணிப நடவடிக்கையின் அளவு ஆகிய வற்றில் நேர் முகமாக ஏற்படுகிற உயர்வைக் கண்டறிய வேண்டும் என்பதில் மற்றும் சிலர் ஆர்வம் காட்டக்கூடும். இந்த மூவகை விருப்பங்களையும் நிறைவேற்றக்கூடிய அளவு முறைகள் தற்காலத் தில் விரிவான வகையில் கையாளப்படுகின்றன. அந்த முறை களுக்கு இடையே இருக்கின்ற துறை நுணுக்க வேறுபாடுகள்

(technical distinctions) சிலவற்றை எடுத்துக் காட்டுவதும், அந்த முறைகளில் ஒவ்வொன்றையும், எந்தெந்தப் பணிகளுக்குப் பயன் படுத்தலாம் என்பது பற்றிய ஆய்வுரையைக் கூறுவதுமே, இந்தப் பின் இணைப்பின் நோக்கங்கள் ஆகும்.

## 1. வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டம் (The Conventional Budget)

நாம் இந்த அத்தியாயத்தில் விரிவாக எடுத்துக்காட்டி யிருப் பதே, ஐக்கிய அமெரிக்காவின் 'வழக்கில் உள்ள' அல்லது 'நிர்வாக' வரவு செலவுத் திட்டம் ஆகும். பொதுவாக வரவு செலவுத்திட்டம் என்னும் சொல்லமைப்பு பயன்படுத்தப்படும்போதெல்லாம், அந்தச் சொல்லமைப்பு, இந்த வகையான வரவு செலவுத் திட்டத்தையே குறிக்கிறது. இந்த வரவு செலவுத் திட்டம்தான், குடியரசுத் தலைவர் ஆண்டுதோறும் அளிக்கிற வரவு செலவுத் திட்டச் செய்தியுரையின் பொருளடக்கம் ஆகும். இந்த வரவு செலவுத் திட்டத்தின், வரவு களின் மதிப்பீடுகள், அதிகார அளிப்புகள், செலவுகள் ஆகியவை இனவாரியாகப் பிரிக்கப்பட்டு, விரிவான முறையில் பாகுபாடு செய்யப் பட்டிருக்கின்றன. ஆனால், வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டமானது, அரசாங்க வரவுகள், அரசாங்கத்தாலும் அரசாங் கத்தின் மூலமாகவும் செய்யப்படும் செலுத்தல்கள் ஆகியவற்றின் பெரும்பகுதியைத் தன்னகத்தே கொண்டதாக இருந்தாலும், வரவுகள், செலுத்தல்கள் ஆகியவை பற்றி இவ் வரவு செலவுத் திட்டத்தில் உள்ள பட்டியல், நீண்ட கால நடைமுறையை ஒட்டி வழக்கப்படித் தயாரிக்கப்படும் ஒன்றாகும். ஒரு குறிப்பிட்ட நட வடிக்கைக்கான நிதியை அளிக்கும் முறையைக் காங்கிரஸ் மாற்றுகிற சில சமயங்களில் மட்டும் தான்-அச்சமயங்கள் அடிக்கடி வருவதில்லை—இந்த நடைமுறையில் திருத்தங்கள் செய்யப்படு கின்றன.

வரிகளை விதிப்பதும், வரிகளின் வருவாய்கள் கருவூலத்தின் பொது நிதியில் சேர்க்கப்படுவதும், அந்தப் பொது நிதியிலிருந்து செலுத்தல்கள் செய்யப்படுவதுமே, திட்டங்களுக்கான நிதியைத் தரும் வழக்கமான முறையாகும். ஆகவே, இந்த வழக்கமான முறைப்படி நிதி அளிக்கப்படுகிற திட்டங்களின் கட்டுக்கோப்புக்குள் ஏற்படுத்தப்படுகிற கணக்குகளின் ஒரு தொகுப்பே, வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டமாக அமைகிறது. பொறுப்பு நிதிகளின் (Trust funds) மூலமாக நிர்வாகம் செய்யப்படுகிற வரவுகளும் செலுத்தல் களும், இந்த வரவு செலவுத் திட்டக் கணக்குகளில் சேர்க்கப்படுவ தில்லை. ஏனென்றால், இந்தப் பொறுப்பு நிதிகளுக்கு, சில குறிப்பிட்ட நோக்கங்களை நிறைவேற்றுவதற்காகச் சில குறிப்பிட்ட வரவுகள்

ஒதுக்கி வைக்கப்படுவதால், அந்த வரவுகள், கருவூலத்தின் பொது நிதிகளைச் சேர்ந்தவையாகக் கருதப்படுவதில்லை. அதுபோலவே, அந்தப் பொறுப்பு நிதிகளிலிருந்து அந்தக் குறிப்பிட்ட நோக்கங்களுக்காகச் செலுத்தல்கள் செய்யப்படுவதால், அவையும் வரவு செலவுத் திட்டத்தில் சேர்க்கப்படுவதில்லை. பொறுப்பு நிதிகளின் வரவுகளும் செலுத்தல்களும் அரசாங்க வரவுகளும் செலுத்தல்களும்தான் என்றபோதிலும், வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டத்தின் மூலமாக அவை கையாளப்படாததால், துறை நுணுக்கப்படி (technically) அவை 'வரவு செலவுத் திட்ட' வரவுகளாகவும் செலுத்தல்களாகவும் கருதப்படுவதில்லை. வழக்கமான முறையில் வரவுசெலவுத் திட்டத்தின் மூலமாக முன்னர் கையாளப்பட்டுவந்த வரவுகளையும் செலவுகளையும் கையாள்வதற்காகக் காங்கிரசால் புதிதாகப் பொறுப்பு நிதிகள் ஏற்படுத்தப்பட்டால், பல ஆண்டுகளின் வரவு செலவுத் திட்டங்களை ஒன்றோடு ஒன்று ஒப்பிட்டுப் பார்ப்பது, இடர்ப்பாடு மிகுந்த செயலாக மாறிவிடுகிறது என்பது உண்மையே. குறிப்பாக இத்தகைய ஒரு நிலைமை 1956-ல் ஏற்பட்டது. சில ஆய வரிகளின் (excise taxes) வருவாயைப் பெறுவதற்காகவும், நெடுஞ்சாலைகளை அமைப்பதற்காக மாநில அரசாங்கங்களுக்குக் கொடைகளை (grants) அளிப்பதற்காகவும் அந்த ஆண்டில், காங்கிரசால் நெடுஞ்சாலைப் பொறுப்பு நிதி (Highway Trust fund) உருவாக்கப்பட்டது. அந்த ஆண்டிற்கு முன் வரை, இந்தப் பணிகள், வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டத்தின் பகுதிகளாகவே இருந்தன.

ஆகவே, வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டத்தைப்பற்றிக் கூறப்படக்கூடிய தலையாய குறைபாடுகள், அரசாங்கம், அதன் அமைப்புகள் ஆகியவற்றின் நிதி நடவடிக்கைகள் யாவற்றையும் எடுத்துக்காட்டக்கூடிய முழுமை படைத்தனவாக அதன் கணக்குகள் இல்லை என்பதும், சில சமயங்களில் சில இனங்கள் அதிலிருந்து விலக்கப்படுவதால் அல்லது இணைக்கப்படுவதால் பல்வேறு ஆண்டுகளின் வரவு செலவுத் திட்டங்கள் பற்றிய ஒப்பீடு துல்லியமாக இருக்க முடிவதில்லை என்பதும் ஆகும்.

## 2. ரொக்க வரவு செலவுத் திட்டம் (The 'Cash Budget')

'பொது மக்களிடமிருந்து பெறப்படுகிற வரவுகளும் அவர்களுக்குத் தரப்படுகிற செலுத்தல்களும்'[22] என்று பொருள் தெளிவுடன் குறிக்கப்படும் ரொக்க வரவு செலவுத் திட்டமானது வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டத்தின் இரண்டு தலையாய குறைபாடுகளைப் போக்குகிற தன்மையில் அமைக்கப்படுவதாகும். ரொக்க

வரவு செலவுத் திட்டத்தின் நோக்கங்கள் இரண்டு வகைப்படும். வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டத்தின் வரவுகளையும் செலுத்தல்களையும், பொறுப்பு நிதிகளின் வரவுகளையும் செலுத்தல் களையும் ஒரே அறிக்கையில் இணைத்து அமைப்பது, ஒருவகை நோக்க மாகும். இந்த வரவுகளையும் செலுத்தல்களையும், அரசாங்கத் திற்கும் பொது மக்களுக்கும் இடையே நடைபெறும் உண்மையான ரொக்க நடவடிக்கைகளை எடுத்துக்காட்டும் வகையில் அமைப்பது, இரண்டாவது நோக்கமாகும். இவ்வாறாக, எந்த நிதியாண்டைப் பொறுத்த அளவிலும், பொது மக்களிடமிருந்து அரசாங்கத்திற்குக் கிடைக்கிற வரவுகள், பொது மக்களுக்கு அரசாங்கம் தருகிற செலுத்தல்கள் ஆகியவற்றைப் பற்றிய அறிக்கையானது, பொருளா தாரத்தில் நடைபெறும் நிதிகளின் ஓட்டத்தில் கூட்டரசாங்கத்தின் பங்கு எத்தகையது என்பதைப்பற்றிய மிகத் துல்லியமான ஓவிய மாகத் திகழ்கிறது. பொருளாதாரத்திலிருந்து நிதிகள் எடுக்கப்படு வதும், பொருளாதாரத்தில் நிதிகள் சேர்க்கப்படுவதும், வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டத்தால் விளக்கப்படுவதைவிடத் திட்ட வட்டமான முறையில், ரொக்க வரவு செலவுத் திட்டத்தால் விளக்கப்படுகின்றன.[23]

கீழே உள்ள படமானது, 1953 முதல் 1959 வரை உள்ள ஆண்டுகளின் ரொக்க வரவு செலவுத் திட்டத்தின் உபரியையும் பற்றுக் குறையையும், அதே ஆண்டுகளின் வழக்கில் உள்ள வரவு செலவுத்திட்டத்தின் உபரியோடும் பற்றுக்குறையோடும் ஒப்பிட்டுக் காட்டுகிறது. வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டத்தில் சேர்க்கப் படாமல், ரொக்க வரவு செலவுத் திட்டத்தில் மட்டும் சேர்க்கப் பட்டுள்ள இனங்களின் விளைவாக, படத்தில் குறிப்பிடப்பட்டுள்ள ஆண்டுகளில் ஏறத்தாழ எல்லா ஆண்டுகளிலுமே, வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டத்தின் உபரிகளைவிட ரொக்க உபரிகள் கூடுதலாக இருப்பதையும், வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டத்தின் பற்றுக்குறைகளைவிட ரொக்கப் பற்றுக் குறைகள் குறைவாக இருப்பதையும், படத்திலிருந்து தெளிவாக உணர்ந்து கொள்ளலாம். எல்லாப் பொறுப்பு நிதிகளுமாகச்சேர்ந்து உபரிகளை உருவாக்குகின்றன என்பதே, இதற்கான பொதுக் காரணமாகும். ரொக்க வரவு செலவுத்திட்டத்தின் உபரி அல்லது பற்றுக்குறைக்கும், வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டத்தின் உபரி அல்லது பற்றுக் குறைக்கும் இடையே உள்ள வேறுபாடு மாறக்கூடிய ஒன்று என்பதையும், அந்த வரவு செலவுத் திட்டங்களின் பகுதிகளை விழிப்பாக ஆராய்வதன் மூலமே அந்த வேறுபாட்டிற்கான காரணங்களைக் கண்டறிய முடியும் என்பதையும் கவனித்து உணர்வது மிக இன்றியமையாதது.




வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டத்தின் உபரி, பற்றுக்குறை ஆகிய வற்றிற்கும் ரொக்க வரவு செலவுத் திட்டத்தின் உபரி, பற்றுக்குறை ஆகியவற்றிற்குமான ஒப்பீடு **(comparison)—1953.**

வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டத்திற்கும், ரொக்க வரவு செலவுத் திட்டத்திற்கும் இடையே உள்ள தலையாய துறை நுணுக்க வேறுபாடுகளை (technical differences) அறிய வேண்டுமானால், நாம் மேலே தரப்பட்ட படத்தில் அடங்கியுள்ள நிதியாண்டுகள் 1953—1959 க்கான புள்ளி விவரங்களைக் கூர்ந்து கவனிக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட கால அளவில் (இந்த இடத்தில், ஓர் ஆண்டின் ஜூலை முதல் தேதியிலிருந்து, மறு ஆண்டின் ஜூன் 30 ஆம் தேதி வரையுள்ள நிதி ஆண்டில்) பொதுமக்களிடமிருந்து கூட்டரசாங்கத் திற்குக் கிடைக்கிற வரவுகளையும், கூட்டரசாங்கத்திடமிருந்து பொதுமக்களுக்குத் தரப்படுகிற செலுத்தல்களையும், முடிந்த அளவு துல்லியமாக எடுத்துக் காட்டக்கூடிய ஓர் அறிக்கையைப் பெறுவதில் நாம் அக்கறை கொண்டுள்ளோம். இதை நினைவில் வைத்துக் கொண்டு, ரொக்க வரவுகளிலும் ரொக்கச் செலுத்தல்களிலும் மிகப்பெரிய இனமாகக் காட்சி தருகிற—வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்ட வரவுகள் செலவுகள் ஆகியவற்றிலிருந்து நம் கருத்தாய்வைத் தொடங்குவோம். ரொக்க ஓட்டத்தைப்பற்றிய (cash flow) முழுமையான கணக்கைப் பெறவேண்டுமானால், வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டப் புள்ளி விவரங்களோடு சில இனங்களைச் சேர்க்கவேண்டும். அதுபோலவே, அப் புள்ளி விவரங் களில் சில சரிக்கட்டல்களைச் (adjustments) செய்தால்தான், அப் புள்ளி விவரங்கள், தூய ரொக்க அடிப்படை (pure cash basis)

பொதுமக்களிடமிருந்து கூட்டரசாங்கத்திற்குக் கிடைக்கிற வரவுகளும்,
கூட்டரசாங்கத்தால் பொதுமக்களுக்குத் தரப்படுகிற செலுத்தல்களும்,
1953—1959 (அ)

(நிதி ஆண்டுகள் ; பில்லியன் டாலர்களில்)

| வரவுகள் (Receipts) : | 1953 | 1954 | 1955 | 1956 | 1957 | 1958 | 1959 |
|---|---|---|---|---|---|---|---|
| வழக்கில் உள்ள வரவு செலவுத்திட்ட வரவுகள் | 64·8 | 64·7 | 60·4 | 68·2 | 71·0 | 69·1 | 68·3 |
| பொறுப்பு நிதி வரவுகள் | 8·9 | 9·2 | 9·5 | 11·7 | 14·4 | 16·6 | 17·1 |
| இவ் வரவுகளிலிருந்து கழிக்கப்பட வேண்டியவை : | | | | | | | |
| அரசாங்கத்திற்குள் நடைபெறும் நடவடிக்கைகள் | 2·2 | 2·1 | 2·1 | 2·7 | 3·2 | 3·7 | 3·7 |
| பண அதிகாரத்தைப் பயன்படுத்துவதன் மூலம் கிடைக்கும் வரவுகள் | ·6 | ·7 | ·3 | ·2 | * | ·1 | * |
| மொத்த வரவுகள் | 71·5 | 71·6 | 67·8 | 77·1 | 82·1 | 87.3 | 81·7 |
| செலுத்தல்கள் (Payments) : | | | | | | | |
| வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டச் செலவுகள் | 74·3 | 67·8 | 64·6 | 66·5 | 69·4 | 71·9 | 80·7 |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| பொறுப்பு நிதிச் செலவுகள் | 5·3 | 7·2 | 8·5 | 9·4 | 13·0 | 16·4 | 18·6 |
| அரசாங்கத்தால் தொடங்கப்பட்ட நிறுவனச் செலவுகள் (நிகரம்) | —·1 | —·4 | ·1 | ·3 | * | ·3 | 1·3 |
| இச் செலவுகளிலிருந்து கழிக்கப்பட வேண்டியவை : | | | | | | | |
| அரசாங்கத்திற்குள் நடை பெறும் நடவடிக்கைகள் | 2·2 | 2·1 | 2·1 | 2·7 | 3·2 | 3·7 | 3·7 |
| சேர்ந்துள்ள வட்டியும் (accrued interest), ஏனைய ரொக்கம் அல்லாத செலவுகளும் | ·5 | ·6 | ·6 | ·9 | —·8 | ·5 | 2·1 |
| **மொத்தச் செலுத்தல்கள்** | 76·8 | 71·9 | 70·5 | 72·6 | 80·0 | 83·3 | 94·1 |
| ரொக்க வரவுகளின் மிகை (+) அல்லது ரொக்கச் செலுத்தல்களின் மிகை (—) | —5·3 | —·2 | —2·7 | 4·5 | 2·1 | —1.5 | 13·1 |

(அ) வரவு செலவுத் திட்ட அறிக்கைகளிலிருந்து.
*_50 மில்லியன் டாலரைவிடக் குறைவான தொகை

உடையவையாக மாறமுடியும். இவ்வாறு சேர்ப்பதைப்பற்றியும் சரிக்கட்டுவதைப்பற்றியும் மூன்று தலைப்புகளின்கீழ் நாம் ஆராயலாம். அவ்வாறு நாம் ஆராயும்போது, மேலே தரப்பட்ட பட்டியலைப்பற்றி அடிக்கடிக் குறிப்பிடவேண்டியிருக்கும்.

1. கணக்குகளில் கூடுதலாகச் சேர்க்கப்படவேண்டிய இனங்கள்: வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டத்தில் குறிப்பிடப்படும் அரசாங்க வரவுகள், செலுத்தல்கள் ஆகியவற்றோடு, கூடுதலாக இரண்டு வகையான அரசாங்க வரவுகளையும் செலுத்தல்களையும் சேர்க்கவேண்டும். பொறுப்பு நிதிகள், இவற்றில் முதலாவது வகையாகும். பல்வேறு வகையான இந் நிதிகளில் சமூகப் பாதுகாப்பு நிதிகளும், நெடுஞ்சாலைப் பொறுப்பு நிதியும் மிகப் பெரியவை ஆகும். கூட்டரசாங்க வைப்பு ஈட்டுறுதிக் கார்ப்பரேஷன் (Federal Deposit Insurance Corporation), கூட்டரசாங்க வீட்டுக் கடன் பாங்குகள் (Federal Home Loan Banks) முதலிய 'அரசாங்கத்தால் தொடங்கப்பட்ட தொழில் துணிவு'களின் வரவுகளும் செலுத்தல்களும், இரண்டாவது வகையாகும். இவற்றின் நிகரச் செலுத்தல்கள் மட்டுமே, செலுத்தல்கள் என்னும் பிரிவில் சேர்க்கப்படுகின்றன. [இந்தத் தொழில் துணிவுகளின் கூட்டுத் தொகைகள் நிகர வரவுகளாக இருக்குமானால், நிகரத் தொகையானது எதிர் மறைச் செலுத்தலாகக் (negative payment) குறிக்கப்படும்.]

2. அரசாங்கத்திற்கு உள்ளாக நடைபெறும் பண நடவடிக்கைகளை அகற்றுதல்: பல்வேறு அரசாங்கக் கணக்குகளுக்கு இடையேயும், அவற்றிற்கு உள்ளேயும் பல பண நடவடிக்கைகள் நடைபெறுகின்றன. ஆனால் இந்த நடவடிக்கைகளைப் பொறுத்தவரை, பொதுமக்கள், செலுத்துவோராகவும் (payor) இல்லை; பெறுவோராகவும் (payee) இல்லை. எடுத்துக்காட்டாக, வேலையின்மைப் பொறுப்பு நிதியால் (Unemployment Trust Fund) வாங்கப்பட்டுள்ள கருவூலக்கடன் பத்திரங்களுக்காக, அந்த நிதிக்குக் கருவூலமானது வட்டி செலுத்துகிறது. இத்தகைய பண நடவடிக்கைகளின் தொகைகள், பொதுமக்களுக்குத் தரப்படுகிற ரொக்கச் செலுத்தல்கள், அவர்களிடமிருந்து பெறப்படுகிற ரொக்க வரவுகள் ஆகிய இரண்டு இனங்களிலிருந்தும் கழிக்கப்படுகின்றன. அரசாங்கத்திற்குள் நடைபெறும் வரவுகள், அரசாங்கத்திற்குள் நடைபெறும் செலுத்தல்கள் ஆகியவை, சரி சமமாக இருக்கும் என்பது தெளிவு.

3. ஒரு ரொக்க அடிப்படையை அடைவதற்கான சரிக்கட்டல்கள் (adjustments to a cash basis): நாணய அச்சுத் தீர்வை இலாபத்தை (seigniorage profit)—அதாவது, தங்கம், வெள்ளி

ஆகியவற்றின் பண்ட மதிப்புக்கும் பண மதிப்புக்கும் உள்ள வேறு பாட்டை, வரவு செலவுத் திட்டத்தின் ஒரு வரவாகச் சேர்த்துக் கொள்வதும், சேமிப்புப் பத்திரங்கள் (Savings Bonds), கருவூல உண்டியல்கள் (Treasury Bills) ஆகியவற்றிற்காகச் சேர்ந்துள்ள ஆனல் செலுத்தப்படாமல் உள்ள வட்டியை (accrued but not paid interest) வரவுசெலவுத் திட்டத்தின் ஒருசெலவாகச் சேர்த்துக் கொள்வதும், வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டத்தின் நடை முறை ஆகும். ஆனல், முன்னது, பொதுமக்களிடமிருந்து பெறப் படுகிற ஒரு ரொக்க வரவு அன்று. பின்னது, பொதுமக்களுக்குச் செலுத்தப்படுகிற ஒரு ரொக்கச் செலுத்தலும் அன்று. ஆகவே, ரொக்க வரவு செலவுத் திட்டத்தைப் பெறவேண்டுமானல், வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டத்தில் காணப்படும் வரவு களிலிருந்து 'பண அதிகாரத்தைப் பயன்படுத்துவதன் மூலம் கிடைக்கும் வரவுகளை'க் கழித்துவிட வேண்டும். அதுபோலவே, அவ் வரவு செலவுத் திட்டத்தில் காணப்படும் செலுத்தல்களி லிருந்து 'சேர்ந்துள்ள வட்டி'யைக் (accrued interest) கழித்துவிட வேண்டும்.

செலுத்தல்களிலிருந்து கழிக்கப்பட வேண்டிய 'ஏனைய ரொக்கம் அல்லாத செலவுகள்' என்னும் தலைப்பில், நழுவித்தப்பும் தன்மை படைத்த பல இனங்கள் இருக்கின்றன. தூய ரொக்கப் புள்ளி விவரங்களைப் பெறவேண்டுமானல், இந்த இனங்களுக்காகப் பல சரிக்கட்டல்கள் செய்யப்படவேண்டும். சில சமயங்களில் அரசாங்கம், செலுத்தல்களை ரொக்கமாகத் தருவதற்கு மாருகக் கடன் பத்திரங்களாகத் தருவதுண்டு. பன்னாட்டுச் செலாவணி நிதியின் (International Monetary Fund) மூலதனத்திற்கு ஐக்கிய அமெரிக்கா செலுத்திய பங்குத்தொகை, இரண்டாம் உலகப் போருக்குப் பின் வெளியிடப்பட்ட படை வீரர்கள் விடுமுறைப் பத்திரங்கள் (Armed Forces Leave Bonds) ஆகியவை, இதற்கு உரிய எடுத்துக்காட்டுகள் ஆகும். இவை வரவு செலவுத் திட்டச் செலவுகளாகக் கணக்கிடப்பட்டாலும், ரொக்கச் செலவுகள் ஆக மாட்டா. மற்றெரு புறத்தில், இந்தக் கடன் பத்திரங்கள் ரொக்கம் கொடுத்து மீட்கப்படும்போது (1957-ல் பன்னாட்டுச் செலாவணி நிதி நோட்டுகள் இவ்வாறுதான் மீட்கப்பட்டன) ஒரு ரொக்கச் செலுத்தல் செய்யப்பட்டாலும், அது வரவு செலவுத் திட்டச் செலவில் ஓர் இனமாகக் குறிக்கப்படுவதில்லை. அது, எதிர் மறை யான ரொக்கம் அல்லாத செலுத்தலாகக் குறிக்கப்படவேண்டும். அல்லது, ஏனைய செலுத்தல்களோடு சேர்க்கப்படவேண்டும். இறுதி யாக, கருவூலச் செக்குகள் தரப்படுவதற்கும் அவை தீர்க்கப்படு வதற்கும் (clearance) இடையே ஓரளவு கால இடைவெளி இருக்

கிறது செக்குசளுக்கும் செலுத்தப்படவேண்டிய வட்டிக் கூப்பன் களுக்குமான தீர்வுக் கணக்குசள் (clearing accounts) சென்ற ஆண்டின் முடிவில் இருந்ததைவிட இந்த ஆண்டின் முடிவில் கூடுத லாக இருக்குமானுல் அக் கூடுதல் இந்த ஆண்டின் நடைமுறை ரொக்கச் செலுத்தல்கள் வரவு செலவுத்திட்டமும் ஏனைய செலவுக் கணக்குகளும் சுட்டிக்காட்டுகிற அளவுக்கு உயர்வாக இல்லை என்பதை எடுத்துக்காட்டுகிற ஓர் உண்மையாகும் ஆகவே செல வுகளை ஓர் உண்மையான ரொக்க அடிப்படைக்கு மாற்றவேண்டு மானுல் தீர்வுக் கணக்குகளில் இருக்சக்கூடிய உயர்வை வரவு செலவுத் திட்டத்தில் குறிக்கப்பட்டுள்ள செலவுகளிலிருந்து கழித்து விடவேண்டும் அதுபோலவே தீர்வுக் கணக்குகளில் குறைவு ஏற்பட்டிருந்தால் அந்தக் குறைவை மேற்படி செலவுகளோடு சேர்த்துவிடவேண்டும்

பல கோணங்களிலிருந்து பார்க்கும்போது வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டத்தின் உபரி அல்லது பற்ருக்குறையைவிட பொதுமக்களிடமிருந்து கிடைக்கிற வரவுகள் அல்லது அவர் களுக்குத் தரப்படுகிற செலுத்தல்களின் மிகையானது (excess) மிகுந்த பொருள்படைத்த புள்ளி விவரமாகக் காணப்படுகிறது அந்த மிகையானது ஒரு குறிப்பிட்ட காலஅளவில் பொதுமக்களிட மிருந்து பெறப்படுகிற மொத்த ரொக்கத்திற்கும் பொது மக்களுக்குத் தரப்படுகிற மொத்த ரொக்கத்திற்கும் இடையே உள்ள வேறுபாட்டை எடுத்துக்காட்டுகிறது இவ்வாருக அது அரசாங்க நிதி நடவடிக்கைகளின் பொருளாதார விளைவுகளைப் பற்றிய பகுத்தாய்வு செய்வதற்கு ஓர் அடிப்படையாக விளங்கு கிறது (வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டத்தின் உபரியும் பற்ருக்குறையும் இவ்வளவு சிறப்பான முறையில் இத்தகைய அடிப் படையாகத் திகழமுடியாது) கருவூலத்தின் உண்மையான ரொக்க நிலைமையை பாதிக்கிற காரணிகளைப்பற்றிய (factors) பகுத்தாய்வு செய்வதற்கான ஓர் அடிப்படையாகவும் அது திகழ்கிறது

### 3 நாட்டு வருமானக் கணக்குகளில் அரசாங்க வரவுகளும் செலவுகளும்

அரசாங்க வரவுகளும் செலவுகளும் கருவூலம் வரவு செலவுத் திட்டக் கழகம் ஆகியவற்றின் வழக்கமான நிதி அறிக்கைகளில் காணப்படுவதோடு நாட்டு வருமானக் கணக்குசளிலும் காணப் படுகின்றன பொருள்களுக்கும் ஊழியங்களுக்கும் பொருளா தாரத்தில் உள்ள தேவையில் (demand) அரசாங்க நடவடிக்கை யால் ஏற்படும் விளைவுகளை அளந்து அறிவதே நாட்டு வருமானக் கணக்குகளைப் பொறுத்தவரை நம்முடைய நோக்கமாகும் இந்த

நோக்கத்தை நிறைவேற்றவேண்டுமானால் வழக்கமான வரவு செலவுத் திட்ட விவரங்கள் அல்லது ரொக்க விவரங்களில் சில மாறுதல்களைச் செய்யவேண்டும்.

நாட்டின் மொத்த ஆக்கம் (gross national product) பற்றிய புள்ளி விவரங்களில் பொருள்களையும் ஊழியங்களையும் அரசாங்கம் வாங்குதல் என்னும் இனம் நடப்புக்காலத்தில் உற்பத்தி செய்யப் பட்ட பொருள்களையும் ஊழியங்களையும் அரசாங்கமும் அவற்றின் ஏஜன்சிகளும் நேர்முகமாக வாங்கியதைமட்டுமே குறிக்கின்றது. எடுத்துக்காட்டாக, நிதி ஆண்டு 1957ல் கூட்டரசாங்க வரவு செலவுத் திட்டச் செலவுகள் 69.4 பிலியன் டாலராகவும், பொது மக்களுக்குத் தரப்பட்ட ரொக்கச் செலுத்தல்கள் 80 பிலியன் டாலராகவும் இருந்தன. ஆனால் அதே ஆண்டில் நாட்டின் மொத்த ஆக்கம்பற்றிய கணக்குகளில் கூட்டரசாங்கத்தால் வாங்கப் பட்ட பொருள்கள் ஊழியங்கள் ஆகியவற்றின் மதிப்பாகக் குறிப் பிடப்பட்டிருந்தது 49.3 பிலியன் டாலரே ஆகும். இந்த வேறு பாட்டிற்கு உரிய தலையாய காரணங்கள் இரண்டாகும். குறிப் பிட்ட ஆண்டில் கைக்கு வராத நிலங்கள், சொத்துகள் ஆகிய வற்றிற்காகச் செய்யப்படும் வரவு செலவுத் திட்டச் செலவுகள் அல்லது ரொக்கச் செலவுகள் நாட்டின் மொத்த ஆக்கம் பற்றிய கணக்குகளிலிருந்து விலக்கப்படுகின்றன என்பது முதல் காரண மாகும். வரவு செலவுத் திட்டச் செலவுகள் அல்லது ரொக்கச் செலவுகளில் ஒரு பெரும்பகுதி நேர்முகமாக வாங்கப்பட்ட பொருள் களையும் ஊழியங்களையும் குறிக்காமல் மாற்றுச் செலுத்தல்களைக் குறிக்கின்றது என்பது இரண்டாவது காரணம் ஆகும்; மிக முக்கிய மான காரணமும் ஆகும். மாநில அரசாங்கங்களுக்குத் தரப்படுகிற கடன்கள் அல்லது கொடைகள், அரசாங்கக் கடன் பத்திரங்களை வைத்திருப்பவர்கட்குத் தரப்படுகிற வட்டிச் செலுத்தல்கள், பண்டக் கடன் கார்ப்பரேஷனால் (Commodity Credit Corporation) உழவர்களுக்குத் தரப்படுகிற கடன்கள், வீடுகட்டும் ஏஜன்சிகள் தரும் அடைமானக் கடன்கள், போர் வீரர்களுக்கும் சமூகப் பாது காப்புத் திட்டங்களின் கீழ் நன்மை பெறுவோருக்கும் தரப்படும் நன்மைச் செலுத்தல்கள் (benefit payments)—இவற்றையும் இவை போன்ற செலவுகளையும் பொறுத்தவரை கூட்டரசாங்கமானது பொருள்களையும் ஊழியங்களையும் நேர்முகமாக வாங்கும் அமைப் பாக இல்லாமல் நிதிகளை ஏனையோருக்கு மாற்றும் அமைப்பாகவே இருக்கிறது.

வரவுகளைப் பொறுத்தவரையிலும்கூட ஓரளவுக்கு இதே வகையான வேறுபாடுகள் இருக்கின்றன. வரவு செலவுத் திட்டக் கணக்குகளில் அல்லது ரொக்கக் கணக்குகளில் உள்ள வரவுக

ளானவை, முதலீடுகள்-கடன்கள் ஆகியவற்றிலிருந்து கிடைக்கும் இலாபங்கள்—வட்டிகள் முதவிய மாற்றுச் செலுத்தல்களின் வடிவத்தில் உள்ள சில வரவுகளையும், சொத்து விற்பனையின் விளைவாக ஏற்பட்ட—ஆனால் நடப்பு ஆண்டில் கைக்கு வராத சில வரவுகளையும், தம்மகத்தே கொண்டவையாக இருக்கின்றன. இத்தகைய வரவுகள், நாட்டு வருமானக் கணக்குகளிலிருந்து விலக்கப்பட்டு விடுகின்றன. அதோடு, நாட்டு வருமானக் கணக்குகள், அரசாங்க வரி வரவுகளை, ரொக்க வசூல் அடிப்படையில் அளக்காமல், சேர்ந்துள்ள வரிப் பொறுப்புகளின் (accrued tax liabilities) அடிப்படையில் அளக்கின்றன. நடப்புக் காலத்தில் உற்பத்தி செய்யப்படுகிற பொருள்களுக்கும் ஊழியங்களுக்குமான அரசாங்க நேர்முகத் தேவையை (direct demand) அளந்து அறிவதும், நாட்டின் நடப்பு வருமானத்திலிருந்து—பெரும்பாலும் சேர்ந்துள்ள வரிகளின் மூலமாக—அரசாங்கத்திற்குக் கிடைக்கிற தொகையை அளந்து அறிவதுமே நாட்டு வருமானக் கணக்குகளின் நோக்கங்கள் ஆகும்.[24] இதுதான், நாட்டு வருமானக் கணக்குகளுக்கும், வரவு செலவுத் திட்டக் கணக்குகள்—ரொக்கக் கணக்குகள் ஆகியவற்றிற்கும் இடையே உள்ள பொதுவான வேறுபாடு ஆகும்.

## மேலும் படித்தற்கு உரியவை

**வரவு செலவுத் திட்டம்**

1. The Budget of the United States, ஆண்டு வெளியீடு, வாஷிங்டன், அரசாங்க அச்சக அலுவலகம் (Government Printing Office)

வரவு செலவுத் திட்டச் செய்தியுரையிலிருந்து (The Budget Message), ஒரு குறிப்பிட்ட வரவு செலவுத் திட்டத்தில் அடங்கியுள்ள நிதிக் கொள்கைகளை ஓரளவு அறிந்துகொள்ளமுடியும். அந்தச் செய்தியுரை, நிர்வாகத்தின் நோக்கங்களைச் சுருக்கித் தருகிறது. சுருக்கமான அட்டவணைகள் அடங்கிய அதன் பகுதியைப் பார்ப்பதன்மூலம், கூட்டரசாங்கத்தின் பல்வேறு நடவடிக்கைகளைப்பற்றித் தெரிந்துகொள்ளலாம். இந் நூலின் சிறப்புப் பகுத்தாய்வுகள் (special analyses) பயன்மிக்க உரை விளக்கங்களையும் இனங்களைப் பிரித்தமைக்கும் முறைகளையும் கொண்டுள்ளன.

2. ஏ. எச். ஹான்சன் (A. H. Hansen), Fiscal Policy and Business cycles, நியூ யார்க், நார்டன் (Norton), 1941, அத்தியாயம் 10.

இந்தப் பொருள்பற்றிச் சுருக்கமான முறையில்—ஆனால் மிகச் சிறந்த வகையில் செய்யப்பட்டுள்ள பகுத்தாய்வு இது. இந் நூல், வரவு செலவுத் திட்டக் கோட்பாட்டையும் பலதிற வரவு செலவுத்

திட்டங்களையும் பற்றிய இலக்கியத்தைக் கருத்தாய்வு செய்வதோடு, வரவு செலவுத் திட்டக் கோட்பாடு பற்றிய அண்மைக் காலக் கண்ணோட்டத்தை அறிமுகம் செய்கிறது.

3. ஆர்தர் ஸ்மிதீஸ் (Arthur Smithies), The Budgetary Process in the United States, நியூ யார்க், மக்ரா ஹில் (McGraw-Hill), 1955, அத்தியாயங்கள் 1, 2.

இந்த இரு அத்தியாயங்கள், வரவு செலவுத் திட்டத்தின் நோக்கங்களையும் முறைகளையும்பற்றிய பொதுக் கருத்தாய்வாக விளங்குவதோடு, இந்தப் பெரிய, முக்கியமான பொருளைக் குறைந்த அளவில் பயன்படுத்தும் தன்மை உடையனவாகவும் இருக்கின்றன. இப் பொருள்பற்றி மிக விரிவாக அறியவேண்டின், இந் நூலின் 2வது, 3 வது பாகங்களைப் படிக்கவும்.

4. ஜே. டபள்யூ. சன்டல்சன் (J. W. Sundelson), 'Aspects of Budgetary Procedure'—இது, எச். எம். க்ரோவ்ஸ் (H.M. Groves) என்பாரின் Viewpoints on Public Finance என்னும் நூலில் (நியூ யார்க், ஹோல்ட், 1947, பக்கங்கள் 661—68) உள்ளது.

இது, வரவு செலவுத் திட்டத்தின் மிக விரிந்த தன்மை பற்றிய ஒரு சிறிய கருத்தாய்வு.

**நிதி நிர்வாகம்**

1. ஈ. எப். பார்ட்லெட் (E. F. Bartlet), Accounting Procedures of the United States Government, சிகாகோ, பொது நிர்வாக ஊழியம் (Public Administration Service), 1940.

அரசாங்க நிதிகள் எவ்வாறு நிர்வாகம் செய்யப்படுகின்றன என்பது பற்றிய ஏராளமான விவரங்கள் கொண்ட நூல்; வாசகரின் பயிற்சித் துறைக்குத் தேவையான அத்தியாயங்களைத் தேர்ந்தெடுத்துப் படிக்கவும்.

2. ஈ. எல். ஸ்மீட் (E. L. Smead), Banking Studies என்னும் நூலில் உள்ள 'Operations of the Reserve Banks' என்னும் கட்டுரை, வாஷிங்டன், ஐக்கிய ரிசர்வ் முறையின் ஆளுநர் குழு (Board of Governors), 1941, பக்கங்கள் 260—65.

கருவூலத்திற்காக ரிசர்வ் பாங்குகள், நிதி ஏஜன்சிகளாகவும், பாதுகாவலராகவும், வைப்புப் பணிகளை நிறைவேற்றும் அமைப்புகளாகவும் இருப்பதைப்பற்றிய விளக்கம், இது. பணம், பாங்கு முறை ஆகியவைபற்றிய பெரும்பாலான பாட நூற்களில், ரிசர்வ் பாங்குகளுக்கும் கருவூலத்திற்கும் உள்ள தொடர்புகளை விளக்கும் அத்தியாயங்கள் காணப்படும்.

## இரணடாம அததியாயததிறகான அடிககுறிபபுகள

1 67 ஆவது காஙகிரஸ முதல கூடடத தொடா அததியாயம 18 ஒபபுக கொளளபபடடது ஜ ன 10 1921

2 1939 ல நிறைவேறறபபடட சீரமைபபுச சடடததினபடி (Reorganisation Act) ஏறபடுததபபடட சீரமைபபுத திடடம 1 னபடி

3 1946 ன சடடமனறச சீரமைபபுச சடடம(Legislative Reorganisation Act) நிறைவேறறபபடுவதறகு முனபு பலவேறு நிதி ஒதுகக மசோ தாககள ஒவவொரு சடடமனற அவையிலும இருநத ஏறததாழப பனனிரணடு குழுக களால உருவாககபபடடன இநதச சடடம ஒவவோா அவையிலும ஒரே ஒரு நிதி ஒதுககக குழுவை உருவாககிறறு முழுப பொறுபபையும ஒரே குழுவிடம ஒபபடைபபதால சடட மனற டவடிககையில கூடுதலான திறமை ஏறபடும எனபதும அரசாஙகததின பலவேறு பணிகளுககு இடையே செயயபபடும நிதிப பஙகீடானது மிகக அறிவாாநத முறையில செயயபபடும எனபதுமே இநத மாறறம செயயபபடடதறகான காரணஙகளாகும ஆனால நடைமுறையில இநத மாறறததால எததகைய விளைவும ஏறபடடதாகத தெரியவிலலை நிதி ஒதுககக குழுககளின துணைக குழுககளே தறபோது தனிததனி நிதி ஒதுகக மசோத ககளை ஆராயநது பரி துரை செயகினறன 1946 ககு முனனால சுயேசசையாகப பணியாறறிய நிதி ஒதுககக குழுககள ஒனறிலிருநது ஒனறு எவவளவு சுயேசசைய கப பணிய றறினவோ அதே அளவு சுயேசசையே டு தான தறபோது துணைக குழுககள பணி புரிகினறன நிதி ஒதுககக குழுவே மிகப பெரியதாக இருபபதால அதனுடைய கருததாயவுகள முழுச சடட மனற அவையின சொறபோாகளபே ல ஆகிவிடுகினறனவே தவிர ஒரு பணிக குழுவின கருததாயவுகளபோல இருபபதிலலை

4 விதி 1 பிரிவு 7

5 சீரமைபபுச சடடததிறகுச செனனெடடில முன மொழியபபடட ஒரு திருததம ஒபபுககொளளபபடட ஒரு மொததத தொகையில தனிததனி நிதி ஒதுககஙகளை இணைபபது எபபடி எனனும சிககலைப பினவரும முறையில தீா ததுவிடடிருககும சடடமாக நிறைவேறறபபடட நிதி ஒதுககஙகளின மொததத தொகையை அவவபபோது கணககிடடுககொணடே வருவதும அநதத தொகை உசச அளவுத தொகையை அடைநததும மேறகொ ணடு நிதி ஒதுககஙகள செய யாமல இருபபதுமே அநத முறையாகும [ஜான டி மாரிஸ (John D Morris) New Budgeting System Undergoes First Test The New York Times மாாச 2 1947 ]

6 ஆனால சடடமனற வரவு செலவுத திடட முறையானது நடை முறைககு வநத 1947 ல இருநததைப போல சடடமனறம ஓா அரசியல கடசியின கடடுபபாடடில இருநது குடியரசுத தலைவா மறறொரு கடசியைச சோநதவராக இருநதால இ து அவவளவு உணமைய க இருபபதிலலை அநத ஆணடில நி வாக வரவு செலவுத திடடததில பரி துரை செயயபபடட மொததத தொகையைவிட மிகக குறைவான ஓா உசச அளவை ஏறபடுததுவதாகக காங கிரஸ உறுதிகூறிறறு இபபடிச செயததனமூலம காஙகிரசானது வரவு செலவுத திடட உசச அளவை குடியரசுத தலைவருககு மிகப பெரிய அரசியல சிககலை உணடாககுவதறகான ஒரு கருவியாகப பயனபடுததிக்கொணடது

7. 1951-ல், நிதி ஒதுக்கங்கள்பற்றிய அவைக் குழுவானது (The House Committe on Appropriations), முந்திய ஆண்டில் அதனுல் கையாளப்பட்ட 'ஒரே கட்டில் எல்லா நிதி ஒதுக்கங்களும்' என்னும் முறையைக் கைவிட்டு விட்டது. ஏறத்தாழப் பன்னிரண்டு நிதிஒதுக்க மசோதாக்களைத் தனித் தனியாக ஆராய்வதன் விளைவாகச் செலவின்மீது இருக்கவேண்டிய கட்டுப் பாட்டின் அளவு குறைந்துவிட்டது என்றும், எல்லா நிதி ஒதுக்கங்களையும் ஒரே கட்டில் (package) இணைப்பதன் மூலம் சேமிப்பை எப்படியோ ஏற்படுத்திவிட முடியும் என்றும், சில வட்டாரங்களில் நீண்ட காலமாகக் கருதப்பட்டுவந்தது. ஆனுல், இந்த ஒரே கட்டு முறையை ('One package' System) ஓர் ஆண்டில் கையாண்டு பார்த்ததில், எத்தகைய சேமிப்பும் விளைந்ததாகக் குழுவின் பெரும் பாலான உறுப்பினர்களுக்குப் புலனுகவில்லை. அதோடு, இந்த முறையில், எல்லா ஏஜன்சிகளுக்கும் உரிய தொகைகள் முடிவு செய்யப்படும் வரையில், எந்த ஏஜன் சிக்கு உரிய நிதி ஒதுக்கமும் சட்டமாக நிறைவேற்றப்பட முடியாது. இந்த நிலையின் விளைவாக, கூட்டத் தொடரின் பெரும்பாலான காலம் முழுவதிலும், செலவிடும் ஏஜன்சிகள், மிகத் துன்பமான நிலைக்கு உள்ளாகவேண்டி யிருக் கிறது. அதுமட்டும் அன்று. செனெட்டின் கூட்டத் தொடர் முடிகிற நேரத்தில் மாபெரும் அளவுள்ள நிதி ஒதுக்கக் கட்டு அதன்முன் வைக்கப்படுவதைக்கண்டு செனெட் மகிழ்ச்சியடைய முடிவதில்லை.

8. நிதியாண்டு 1959 ஐப் பொறுத்தவரை, ஒப்பீடானது, ஆண்டின் நடுவில் செய்யப்பட்ட மதிப்பீடுகளுடன் செய்யப்படுகிறதே தவிர, இறுதி விளைவு களுடன் அல்ல.

9. செலுத்தல்கள் செய்வதற்கான உடன்படிக்கைகள், நிதி ஒதுக்கச் சட்டங்களின்படித் தரப்பட்டுள்ள பொறுப்பேற்கும் அதிகாரத் தொகைகளைவிட (amounts of obligational authority) மிகுதியாக இருத்தலாகாது. ஆனுல், நடை முறைச் செலவுகள் (கருவூலச் செக்குகள்மூலம் தரப்படும் செலுத்தல்கள்), உடன்படிக்கைகளைவிட ஓரளவு குறைவாகவே இருக்கும். இவ்வாருக, முந்திய ஆண்டின் நிதி ஒதுக்கங்கள், உடன்படிக்கைகளிலிருந்து ஒரு குறிப்பிட்ட ஆண்டில் செலுத்தல்கள் செய்யப்படக்கூடும்.

10. கூட்டரசாங்க மட்டத்தில் பணிமுறை வரவு செலவுத்திட்டம் கையாளப் படுவதற்கான வாதங்கள், 1949-ல் ஹுவர் குழுவால் (The Hoover Commission) சுருக்கமான முறையில் தரப்பட்டன. அந்தத் திட்டத்தைத் தயாரிப் பதற்காக வழக்கில்உள்ள வரவு செலவுத் திட்டத்தில் செய்யப்படவேண்டிய திருத்தங்களையும் அந்தக் குழு எடுத்துக் காட்டியுள்ளது. 'The Commission on Organisation of the Executive Branch of the Government' என்னும் குழுவால் காங்கிரசுக்கு அளிக்கப்பட்டுள்ள 'Budgeting and Accounting' என்னும் அறிக் கையைக் காண்க. பிப்ரவரி 1949, பக்கங்கள் 7–13; மற்றும் இணைப்பு I.

11. எடுத்துக்காட்டாக, நிதியாண்டு 1945-க்கான, விலை நிர்வாக அலுவலக நிதி ஒதுக்கச் சட்டத்தின் (The Office of the Price Administration Appropriation Act) கீழ்க்கண்ட விதிகளைக் காண்க:

'இந்த நிதி ஒதுக்கத்தின் எந்தப் பகுதியும், விலைக் கொள்கையையோ உச்ச விலையையோ நிர்ணயிக்கும் பணியை இயக்கும் எந்த ஆளுடைய ஊதியத் தையோ செலவுகளையோ தருவதற்காக.........அந்த ஆள் வியாபாரம், தொழில்

அல்லது வாணிபத்தில் அனுபவம் உடையவராக இருந்தாலொழிய, நேர்முகமாகவோ மறைமுகமாகவோ பயன்படுத்தப்படக் கூடாது..........' (இந்த விதியானது, விலை நிர்வாக அலுவலகத்தில் உள்ள 'பேராசிரியர்க'ளுக்கு எதிராக ஏற்படுத்தப்பட்டது.)

'..........இந்தச் சட்டப்படி நிதி ஒதுக்கம் செய்யப்பட்ட எந்த நிதிகளும், குறிப்பீடுகள் (specifications) அல்லது தரங்களின் (standards) அடிப்படையில் விவரிக்கப்படுகிற பக்குவப்படுத்தப்பட்ட (processed) பழங்கள் அல்லது காய்கறிகளின் பல்வேறு வகைகள், பிரிவுகள் அல்லது பகுப்புகளின் உச்ச விலைகளை முடிவு செய்யும் எந்த ஆளுடைய ஊதியத்தை அல்லது செலவைத் தருவதற்கு, அத்தகைய குறிப்பீடுகள் அல்லது தரங்கள், அந்த உச்சவிலை உத்தரவுக்கு முன்னுலேயே பொதுவான உபயோகத்தில் இருந்தாலொழிய, பயன்படுத்தப் படக்கூடாது.' [இந்த விதியானது, தரம் பிரித்துப் பெயரிடும் முறையை (grade labeling) எதிர்த்து ஏற்படுத்தப்பட்டது.] U. S. State., 78-ஆவது காங்கிரஸ், 2-ஆவது கூட்டத்தொடர், அத்தியாயம் 304, ஜுன் 23, 1944, பக்கம் 601.

12. ஆனல், பாக்கெட் மறுப்பாணையில் (Pocket Veto) இப்படி நடப்பதில்லை. இந்த மறுப்பாணையைப் பயன்படுத்தும்போது, குடியரசுத் தலைவர், ஒரு மசோதா தன் கைக்குக் கிடைத்த நாளிலிருந்து பத்து நாட்களுக்குள் எத்தகைய நடவடிக்கையையும் எடுப்பதில்லை. இந்தப் பத்து நாட்கள் முடிவதற்குள் காங்கிரஸ் ஒத்திவைக்கப்படுகிறது. இந்த நிலையில் மசோதா 'மரணம்' அடைந்துவிடுவதோடு, பின்னர் தொடங்கும் கூட்டத் தொடரில் புதிதாக இம் மசோதா கொண்டுவரப்பட்டாலொழிய மரணம்அடைந்த நிலையிலேயே தொடர்ந்து இருக்கும்.

13. ஆனல், பல மாநிலங்களில், பெட்ரோல் வரிகளும், மோட்டார் கார்களை உடையவர்கள்மீது விதிக்கப்படும் கட்டணங்களும், அவற்றின் வருவாய்கள் நெடுஞ்சாலைகளுக்காகவே பயன்படுத்தப்படும் என்னும் வாக்குறுதியுடன்தான் முதன்முதலில் சட்டமாக்கப்பட்டன. அத்தகைய நிலைமைகளில், 'வருவாய்கள் திசைதிருப்பப்படுவது' பற்றிய கண்டனம் நியாயமான அடிப்படையைக் கொண்டதாகவே இருக்கிறது.

14. பொறுப்பு நிதிகளிலே மிக முக்கியமானவை சமூகப் பாதுகாப்பு வரி வரவுகள், இவை போன்ற சில பொறுப்பு நிதிகளின் வகையில் தவிர மற்றபடி, தன் வருவாய்களைக் குறிப்பிட்ட செலவுகளுக்கு ஒதுக்கிவைக்கும் முறையைக் கூட்டரசாங்கம் இதுவரை கையாளாமல் இருப்பது அதன் அறிவுடைமையைக் குறிக்கிறது. இந்த அறிவார்ந்த நடைமுறை தொடர்ந்து பின்பற்றப்படவேண்டும் என்பதுதான் நம் விருப்பமாக இருக்கமுடியும். ஆனல், கடற்கரைக்கு அப்பால் உள்ள கூட்டரசாங்க எண்ணெய்ச் சாதனங்களுக்கான உரிமைத் தொகைகளைப் (Royalties) பொதுக் கல்விக்காக ஒதுக்கி வைக்கவேண்டும் என்று அண்மைக் காலமாகத் தெரிவிக்கப்படுகிற ஓர் ஆய்வுரையானது, இந்த அறிவுசார்ந்த போக்கிலிருந்து முற்றிலும் மாறுபட்டதாக இருக்கிறது. முன்மொழியப்பட்டுள்ள செலவின் நோக்கம் பெரிதும் விரும்பத்தக்க ஒன்ருக இருப்பதால், அந்தச் செலவுக்கான தொகையை ஒதுக்கும் முறை, நுட்பமான ஆராய்ச்சிக்கு உள்ளாகாமல் தப்பிவிடக்கூடும் என்பதுதான் இந்த ஆய்வுரையில் உள்ள ஆபத்து.

15. கருவூலவரி வரிசைப் கைப்பத்திரங்கள் முதன் முதலில் 1941-ல் விற்பனை செய்யப்பெற்றன. வருமானவரி, சன்மானவரி, மரணவரி ஆகியவற்றிற்கு பதிலாக இப் பத்திரங்கள் கஜானவில் பெற்றுக்கொள்ளப்பட்டன.

இதன் மூலம் இரண்டு காரியங்கள் நிறைவேறின. (1) வரி செலுத்துவோர் தம்மிடம் சேர்ந்துள்ள பணத்தை பிற்காலத்தில் செலுத்தவேண்டிய வரிகளை உத்தேசித்து முற்கூட்டியே வட்டியுடன் சேமித்துவைக்கும் வாய்ப்பைத் தந்தது. (2) கஜானாவிலும் வரிசெலுத்தப்பெறும் நாளுக்கு மிகவும் முற்கூட்டியே நிதி கிடைக்க ஏதுவாயிற்று. (Cf) கருவூலச் செயலாளரின் வருடாந்தர அறிக்கை 1943, பக்கம் 55. அரசாங்கக் கடன்பத்திரங்கள் மத்திய அரசு விதிக்கும் மரணவரிக்குப் பதிலாக மாமூலாக ஏற்றுக்கொள்ளப்பெற்றன.

16. பல தடவைகளில் நிகழ்வதுபோல் ஒவ்வோர் ஆண்டும் கஜானா, தன் கடன்களில் ஒரு பகுதியை அடைக்கவேண்டும் என்ற சட்டத்தின்படி, பற்றாக் குறை ஏற்படும் வருடங்களில் குறிப்பிட்ட சில கடன் பத்திரங்களை அடைத்து விடுவதுண்டு. பற்றாக்குறை ஏற்படும் ஒரு குறிப்பிட்ட ஆண்டிலேயே கடன்களும் காலாவதி ஆவதாக இருந்தால் புதிய கடன்களை எழுப்புவதன் மூலமாய் இப் பழைய கடன்களை அடைக்க முடியும். இம்மாதிரி சந்தர்ப்பங்களில் பழைய கடனை அடைக்கப் புதிய கடன்களை கஜானா எழுப்பும்பொழுது எந்த அளவுக்கு இவ்வாறு கடன் எழுப்பப்படுகிறதோ அந்த அளவுக்கு 'கடன் அடைப்பு' நடைபெறுவதில்லை. வருமானமாகக் கருதப்படாத வரவுகளைகொண்டு செலவு என்று கூறப்பெறமுடியாத கொடுக்கல்களைச் செய்கிறது.

17. இயல்பல்லாத நெருக்கடிக் கால வரவுசெலவுத் திட்டங்களைப் பற்றிய மிகச் சிறந்த கருத்துகளைத் தெரிந்துகொள்ளவேண்டின், ஜே. டபள்யூ. சண்டல்சன் (J. W. Sundelson) என்பாரின் Budgetary Methods in National and State Governments (Special Report of the New York State Tax Commission, எண் 14, அல்பனி, 1938) என்னும் நூலைக் காண்க. (அத்தியாயங்கள் 132ம் 142ம்).

18. முன்னர் குறிப்பிட்ட நூல், பக்கம் 180.

19. ஹ்யூ டால்டன் மற்றும் பிறரால் எழுதப்பட்ட Unbalanced Budgets, A Study of the Financial Crisis in Fifteen Countries, (லண்டன், ரட்லெஜ், 1934, பக்கம் 23) என்னும் நூலில் மேற்கோளாகத் தரப்பட்டுள்ளது.

20. ஐக்கிய ரிசர்வ் கழகத்தின் (Federal Reserve Board) The Federal Reserve System, Its Purposes and Functions, வாஷிங்டன், 1939, பக்கங்கள் 35, 36.—காண்க.

21. இரண்டாம் உலகப் போருக்கு முன்னர், கருவூல வைப்புக் கணக்கு களில் பெரும்பகுதியை, ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் வைத்திருந்தன. போர்க் காலத்தில், தலையாய கடன் பத்திரங்களின் விற்பனை வரவுகள், தற்காலிகமாக வாணிப பாங்குகளில் (Commercial banks) வைப்புகளாக வைக்கப்பட்டிருந்தன. போருக்குப் பிறகும், கடன் பத்திர விற்பனைமூலமாகவும் வரி வசூல்மூலமாகவும் கிடைக்கிற தொகைகளில் குறிப்பிடத்தக்க பகுதியைக் கருவூலமானது, வாணிப பாங்குகளில் தொடர்ந்து வைத்திருக்கிறது. ஆனால், கருவூலமானது ஐக்கிய ரிசர்வ் பாங்குகளில் உள்ள அதனுடைய வைப்புகளுக்கு எதிராகத்தான் செக்கு களை வரைகிறது. வாணிப பாங்குகளிலிருந்து வைப்புகளை அந்த பாங்கு களுக்கு அடிக்கடி மாற்றுவதன்மூலம் அந்த பாங்குகளில் அதனுடைய இருப்பு (balance) நிலைநாட்டப்படுகிறது. வாணிப பாங்குகளில் உள்ள கருவூல வைப்புகளைப்பற்றி 8ஆவது அத்தியாயத்தில் மேலும் ஆராயப்பட்டுள்ளது.

22. இந்தப் பட்டியல்கள், ஆண்டுதோறும், வரவு செலவுத் திட்டக் கழகத்தால் (Bureau of the Budget), வரவு செலவுத் திட்ட அறிக்கையின் ஒரு சிறப்புப் பகுத்தாய்வாக வெளியிடப்படுகின்றன. இப் பட்டியல்கள், மாதந்தோறும் கருவூலத் துறையால் 'Treasury Bulletin' என்னும் இதழில் வெளியிடப்படுகின்றன.

23. ரொக்க வரவு செலவுத் திட்டத்தில் நிகர எண்களைப் (net figures) பயன்படுத்துவதற்கு மாறாக மொத்த எண்களைப் (gross figures) பயன்படுத்துவதன்மூலமாக,இதைப்பற்றிய இன்னும் முழுமையான ஓவியத்தைப் பெறமுடியும். எடுத்துக்காட்டாக, ரொக்க வரவு செலவுத் திட்டம் (வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டத்தைப் போலவே) அஞ்சல் நடவடிக்கைகளைப் பொறுத்தவரை, நிகர எண்களையே பயன்படுத்துகிறது. அஞ்சல் செலவுகள் அஞ்சல் வரவுகளை விட மிகுதியாக இருக்கும்போது அந்த நிகர வேறுபாடானது செலவாகக் குறிக்கப்படுகிறது. இதற்கு நேர் எதிரான நிலையில், இருவகை வரவு செலவுத் திட்டங்களிலும் எதிர்மறையான நிகரச் செலவு குறிக்கப்படுகிறது. வேறுபல இனங்களும் நிகர அடிப்படையிலேயே இவற்றில் குறிக்கப்படுகின்றன. ஆகவே, இப் பட்டியல்கள், வரவுகள் செலுத்தல்கள் ஆகியவைபற்றிய முற்றிலும் மொத்தமான (gross) ஓவியங்களாக இல்லை. இதற்கான காரணம், ரொக்க வரவு செலவுத் திட்ட எண்களைப் பயன்படுத்துபவர்கள், எ:து எப்படியிருந்தாலும் ரொக்க உபரி அல்லது பற்றுக்குறையை அறிவதிலேயே மிகுந்த அக்கறை காட்டுவதுதான்.

24. நாட்டு வருமானக் கணக்குகளின் கூட்டரசாங்க வரவுகள், செலவுகள் ஆகியவற்றைப் பொதுமக்களுக்குக் கூட்டரசாங்கத்தால் தரப்படுகிற செலுத்தல்கள் — பொதுமக்களிடமிருந்து கூட்டரசாங்கத்திற்குக் கிடைக்கிற வரவுகள் ஆகியவற்றோடும், வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்ட வரவுகள், செலவுகளோடும், பொருத்திக்காட்டுகிற ஓர் அட்டவணை, 1958-க்குரிய குடியரசுத் தலைவரின் பொருளாதார அறிக்கையின் (Economic Report of the President)பின் இணைப்புப் பட்டியல் F 54-ல், தரப்பட்டுள்ளது. இந்த மூன்று வகை வரவு செலவுத் திட்டங்களுக்கும்இடையே உள்ள வேறுபாட்டை மிகத் துல்லியமாக அறிந்துகொள்ள விழைபவர்கள், இந்த அட்டவணையைக் காணலாம்.

---

# 3 அரசாங்கச் செலவின் போக்குகளும் அவற்றின் சிறப்பும்

## செலவின் போக்குகள்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த அடால்ப் வாக்னர் (Adolph Wagner) என்னும் ஜெர்மானியப் பொருளறிஞர் அவருடைய புகழ்பெற்ற அரசாங்க நடவடிக்கைகளின் பெருக்கம் பற்றிய விதியைக் கீழ்க்கண்டவாறு வெளியிட்டார்.[1]

பல்வேறு நாடுகளையும் பல்வேறு காலங்களையும் விரிவான அளவில் ஒப்பிட்டுப் பார்க்கும்போது முன்னேற்றம் அடைந்த மக்கட் சமுதாயங்களில் (அச் சமுதாயங்களை மட்டுமே நாம் தற்போது ஆராய முற்பட்டுள்ளோம்) மைய அரசாங்கங்கள், தல அரசாங்கங்கள் இரண்டின் நடவடிக்கைகளுமே தொடர்ச்சியாக வளர்ந்து வருகின்றன என்பது தெளிவாகத் தெரிகிறது. இந்த வளர்ச்சி அகலமானதாகவும் ஆழமானதாகவும் இருக்கிறது. மைய அரசாங்கங்களும் தல அரசாங்கங்களும் தொடர்ந்து புதிய பணிகளை மேற்கொள்வதோடு பழைய பணிகளையும் புதிய பணிகளையும் முன்னிலும் திறமையாகவும் முழுமையாகவும் ஆற்றிவருகின்றன. இந்த வகையாக அந்த இருவகை அரசாங்கங்களும் மக்களின் பொருளாதாரத் தேவைகளை விரிவான அளவிலேயும் முன்னைவிட மனநிறைவு அளிக்கத்தக்க முறையிலேயும் நிறைவேற்றி வருகின்றன.

நவீன கால அரசாங்கச் செலவுகள்பற்றிய புள்ளி விவரங்களை ஆராய்ந்து பார்க்கும்போது வாக்னர் எடுத்துக்காட்டியுள்ள இந்த உண்மையை ஒரு பொருளாதார விதியாக ஏற்றுக் கொள்வது நியாயம் என்றே தோன்றுகிறது. பல்வேறு நாடுகளின் கடந்த

காலச் செலவுகளை, ஏற்கத்தக்க புள்ளி விவரங்கள் கிடைக்கின்ற காலம் வரையில் ஆராய்ந்து பார்த்த நிட்டி[2] (Nitti) என்பவர், அதிகாரக் குவிப்பு உடைய அரசாங்கங்கள் (centralised governments) அல்லது அதிகாரப் பரவல் உடைய அரசாங்கங்கள் (decentralised governments), போர் ஆர்வம் ததும்பும் நாடுகள் அல்லது அமைதியில் நாட்டம் உடைய நாடுகள், பெரிய நாடுகள் அல்லது சிறிய நாடுகள்—எல்லா வகையான அரசாங்கங்களிலும், நாடுகளிலும், செலவுகளின் குறிப்பிடத்தக்க வளர்ச்சி, ஏறத்தாழ ஒரே வகையான போக்கையே கொண்டதாக இருக்கிறது என்று தெரிவித்துள்ளார். பல நூற்றுண்டுகளாகக் காணப்படுகிற இந்தப் போக்கு பத்தொன்பதாம் நூற்றுண்டில் முனைப்பாகக் காணப்படுகிறது என்றும் அவர் தெரிவித்துள்ளார். அவருடைய ஆராய்ச்சியில் இருபதாம் நூற்றுண்டின் முதல் பாதியையும் அவர் சேர்த்துக் கொண்டிருக்க முடியுமாஞல், அரசாங்கச் செலவுகளின் வளர்ச்சி இந்த நூற்றுண்டிலும் தொடர்ந்து இருந்துவருகிறது என்பதை மட்டுமல்ல, அதன் வேகம் முன்னிலும் கூடுதலாகியிருக்கிறது என்பதையும் அவர் விளக்கிக் காட்டியிருப்பார்.

## அட்டவணை 1

**அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கூட்டு அரசாங்கம், மாநில அரசாங்கங்கள், தல அரசாங்கங்களின் செலவு—1902 முதல் 1958 வரையுள்ள சில குறிப்பிட்ட ஆண்டுகளுக்கு**

(மில்லியன் டாலர் கணக்கில்)

| ஆண்டு | கூட்டரசாங்கம் (அ) | மாநில அரசாங்கங்கள் (ஆ) | தல அரசாங்கங்கள் (ஆ) | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1902 | 485 | 177 | 823 | 1485 |
| 1913 | 724 | 372 | 1,670 | 1,766 |
| 1922 | 3,373 | 1,217 | 3,866 | 8,456 |
| 1927 | 2,974 | 1,818 | 5,215 | 10,007 |
| 1932 | 4,659 | 2,498 | 4,989 | 12,146 |
| 1936 | 8,493 | 2,550 | 3,775 | 14,818 |
| 1940 | 9,062 | 3,659 | 4,482 | 17,203 |
| 1944 | 95,059 | 3,528 | 4,327 | 1,02,914 |
| 1948 | 33,069 | 7,750 | 7,997 | 51,816 |
| 1952 | 65,408 | 11,213 | 12,163 | 88,784 |
| 1954 | 67,772 | 12,904 | 14,660 | 95,336 |
| 1956 | 66,540 | 15,292 | 17,493 | 99,352 |
| 1958 | 71,936 | 19,095 | 21,287 | 1,12,328 |

(அ) கூட்டரசாங்கம்பற்றிய எண்கள், நிகர வரவு செலவுத் திட்டச் செலவுகள் ஆகும். இவை, கருவூலச் செயலாளரின் ஆண்டு அறிக்கை 1956-லிருந்தும் (Annual Report of the Secretary of the Treasury), நிதி ஆண்டு 1958க்கு ஆன அமெரிக்க ஐக்கிய நாடுகள் அரசாங்கத்தின் வரவுகள்-செலவுகள் பற்றிய இறுதி அறிக்கையிலிருந்தும் எடுக்கப்பட்டவை. இவற்றில், ஏனைய அரசாங்கங்களுக்கு அளிக்கப்பட்ட கொடைகள் சேர்க்கப்பட்டுள்ளன; பொறுப்பு நிதிச் செலவுகளும் (Trust fund expenditures) கடனைத் திருப்பித் தந்த செலவுகளும் சேர்க்கப்படவில்லை.

(ஆ) மாநில, வட்டார அரசாங்கங்களின் செலவுகள், யு. எஸ். வணிகத் துறை, குடிக் கணக்குக் குழுவின் மாநில, தல அரசாங்கங்களின் நிதிகள்பற்றிய வரலாற்றுப் புள்ளி விவரங்கள் 1902–1953-லிருந்தும் (Historical Statistics on State and Local Government Finances), அரசாங்க நிதிகளின் சுருக்கம்1954, 1956, 1958-லிருந்தும் (Summary of Governmental Finances) எடுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு வகை அரசாங்கத்தின் மொத்தச் செலவுகளிலிருந்தும் இரண்டு வகைத் தொகைகள் கழிக்கப்பட்டுள்ளன. சாராயக் கடைகள், பயன் வகைகள் (utilities), ஈட்டுறுதிப் பொறுப்பகங்கள் (Insurance Trusts) ஆகியவற்றின் செலவுகள் ஒரு வகைக் கழிவு, ஏனைய வகை அரசாங்கங்களிடமிருந்து கிடைத்த வரவுகள், மற்றொரு வகைக் கழிவு. தன்னைத் தானே தீர்த்துக்கொள்ளும் வணிக வகைச் செலவுகள் என்னும் முறையில் முதல் வகைத் தொகைகள் கழிக்கப்பட்டுள்ளன. இறுதியில் செலவழிக்கும் அரசாங்கத்தின் கணக்கில் காட்டாமல், நிதிகளை அளிக்கும் அரசாங்கத்தின் கணக்கில் செலவுகளைக் காட்டுவதற்காக இரண்டாவது வகைக் கழிவு செய்யப்பட்டுள்ளது.

1ஆவது அட்டவணையில் அடங்கியுள்ள கால அளவு, ஐம்பத்தாறு ஆண்டுகளுக்குள், முதலாவது உலகப் போர், 1930ஐத் தொடர்ந்து வந்த ஆண்டுகளின் பொருளாதார மந்தம், இரண்டாவது உலகப்போர், போருக்குப் பிந்திய ஆண்டுகளின் பண வீக்க நிலைமை ஆகிய இத்தனையையும் தன்னகத்தே கொண்டிருக்கிறது என்றும், எனவே அது ஓர் அசாதாரணமான காலம் என்றும் சிலர் வாதாடக்கூடும். பலவகை நெருக்கடிகளைக் கொண்டிருந்த காலம் அது என்பது உண்மைதான். ஆனால் இந்த நெருக்கடிகள் அசாதாரணமானவை என்பதை நாம் எளிதில் ஏற்றுக்கொள்ள முடியாது. எடுத்துக்காட்டாகப் போர் என்பது, இருபதாம் நூற்றாண்டின் முதல்பாதியில் மட்டுமே காணப்பட்ட இயல்புக்கு மாறான ஒரு தன்மையாக இருக்கவேண்டும் என்பது நம்முடைய விருப்பமாக இருக்கலாம். ஆனால் அதுதான் நடைமுறை உண்மை என்று சொல்லிவிட முடியுமா? ஆனால் ஒன்று. மாநில-தல அரசாங்கங்களின் செலவுகளைப் போர் நேரடியாகப் பாதிப்பதில்லை என்றாலும் அச் செலவுகள் இந்தக் காலத்தில் உயர்ந்தே இருக்கின்றன. 1929 முதல் 1936 வரை உள்ள ஆண்டுகளில் அரசாங்கங்கள் மேற்கொண்ட புதிய நடவடிக்கைகள் முன்னரே காணப்பட்ட ஒரு வகைப் போக்கை மேலும் விரைவுபடுத்தும் தன்மையிலேயே அமைந்திருந்தன. அரசாங்கம் முறைப்படிச் செய்யவேண்டிய

செலவுகளே இவை என்னும் கருத்து இப்போது மிகப் பரவலான அளவில் ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதால், எதிர்காலத்தில் இந்தச் செலவுகள் குறிப்பிடத்தக்க அளவில் குறையலாம் என்று எதிர் பார்ப்பது முறையாகாது.

போராலும், போர் அச்சத்தாலும் மிக அதிகமாகப் பாதிக்கப் பட்டிருப்பது கூட்டுஅரசாங்கத்தின் செலவே என்பதை 1ஆவது அட்டவணை விளக்கிக் காட்டுகிறது. இந்த அட்டவணையில் அடங்கி யுள்ள காலத்தில், கூட்டு அரசாங்கத்தின் செலவு 1919-லும் ($18.5 பில்லியன்), 1945-லும் ($98.4 பில்லியன்) உச்ச நிலையை அடைந்துள்ளது. 1928-ல் அச் செலவு, முதல் உலகப் போருக்குப் பிந்திய காலத்தின் மிகக் குறைந்த அளவை ($3பில்லியன்) அடைந்தபோதிலும், அச் செலவு, 1916-ல் நாம் போரில் இறங்க இருந்த நேரத்தில் இருந்த செலவைவிட நான்கு மடங்குக்கும் அதிக மாகவே உயர்ந்திருக்கிறது. இரண்டாம் உலகப்போருக்குப் பிந்திய காலத்தின் மிகக் குறைந்த செலவு 1948-ல் இருந்திருக்கிறது ($33 பில்லியன்). இந்தச் செலவும் 1939-ல் இருந்த செலவை விட, ஏறக் குறைய நான்கு மடங்கு அதிகமாக இருந்திருக்கிறது. நிதி ஆண்டு 1958-லோ, உலகில் நடைபெறும் பனிப் போரின் (cold war) காரணமாகக் கூட்டு அரசாங்கத்தின் செலவு $71.9 பில்லியனுக உயர்ந்துவிட்டது.

போர் முடிந்து அமைதி ஏற்பட்டபிறகும்கூட அரசாங்கச் செலவு போருக்கு முன் இருந்த அளவுக்குக் குறையாமல் இருப்ப தற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. போரோடு இணைந்து நின்ற விலை வீக்கமானது (price inflation) போருக்குப் பின்னரும் தொடர்ந்து இருப்பது ஒரு காரணம். பொதுக்கடனுக்குரிய வட்டிச் செலவு மற்றொரு காரணம். போர்க் காலங்களில் இந்தச் செல வானது குறிப்பிடத்தக்க அளவு உயர்ந்துவிடுகிறது என்பதை அனுபவ வாயிலாக நாம் நன்கு உணர்ந்திருக்கிறோம். போர் வீரர் களுக்கும் அவர்களைச் சார்ந்து வாழ்பவர்களுக்கும் அளிக்கவேண்டிய வசதிகள், அரசாங்கச் செலவின் உயர்வுக்கான வேறொரு காரணம். போர் வீரர்களின் பெருந் தொண்டைப் பாராட்டும் பொது மக்களின் தாராளத்தன்மை காரணமாகவும், அவ் வீரர்களின் செல் வாக்குக் காரணமாகவும், அவர்களுக்குச் சிறந்த வசதிகள் அளிக்க வேண்டியது இயல்பான கடமையாகிவிடுகிறது. இவை அனைத் திற்கும் மேலாக, போரின் விளைவாக அரசாங்கம் மிக விரிவான அளவில் மேற்கொள்ளவேண்டிய சிக்கலான நடவடிக்கைகள் பல இருக்கின்றன. போரின் காரணமாக ஏற்பட்ட பொருளாதாரச் சீர்கேடுகளை அகற்றும் முறையில் வேளாண்மை உற்பத்தியைத்

திருத்தியமைப்பதற்காக அல்லது பிற நாடுகளுக்கு உதவி புரிவதற்காக ஏராளமான தொகையைச் செலவழிக்கவேண்டிய தேவை ஏற்படலாம். போருக்குப் பின்னர் குறிப்பிடத்தக்க அளவு படைபலக் குறைப்பு இருந்தபோதிலும், இராணுவ முறைகளில் போரின் போது ஏற்பட்ட மாறுதல்கள் காரணமாக இராணுவச் செலவுகள் தொடர்ந்து அதிக அளவிலேயே இருந்துவருகின்றன. போர்க் காலத்தில் அரசாங்கமும் பொது மக்களும் எளிதாகச் செலவழிக்கப் பழகிவிடுகிறார்கள் அல்லவா? இந்தப் பழக்கம் காரணமாகச் சமூக மேம்பாட்டுக்காகவும் பொருளாதார முன்னேற்றத்திற்காகவும் பல புதிய திட்டங்களை நடைமுறைப்படுத்தவேண்டிய தேவையும் ஏற்பட்டுவிடுகிறது. இந்த நிலைமைகளையெல்லாம் நினைவில் நிறுத்திப் பார்த்தால், போரின் விளைவாக உயர்ந்துள்ள அரசாங்கச் செலவு இனிக் குறைந்துவிடும் என்று எதிர்பார்ப்பது பொருளற்றது என்பது வெள்ளிடைமலை.

மாநில-தல அரசாங்கங்களின் செலவுகளும் குறிப்பிடத்தக்க அளவு உயர்ந்திருக்கின்றன என்பது 1ஆவது அட்டவணையிலிருந்து நாம் தெரிந்துகொள்ளக்கூடிய மற்றோர் உண்மையாகும். விலை மட்டத்தின் (price level) உயர்வு இதற்கு ஒரு காரணமாகும். மற்றபடி மாநில-தல அரசாங்கங்கள், போரினால் அதிகமாகப் பாதிக்கப்படவில்லை. அந்த அரசாங்கங்களின் செலவில் ஏற்பட்டுள்ள உயர்வுக்குக் காரணம், பெரும்பாலும், அந்த அரசாங்கங்களின் வாழ்க்கைத் தரத்தில் ஏற்பட்டுள்ள உயர்வே ஆகும். வாக்காளரின் சொற்களில் கூறுவதானால், ‘மக்களின் பொருளாதாரத் தேவைகளை விரிவான அளவிலேயும் முன்னைவிட மனநிறைவு அளிக்கத்தக்க முறையிலேயும்’ அரசாங்கங்கள் நிறைவேற்றி வருவதே, அவற்றின் செலவு உயர்வுக்குக் காரணமாகும். அரசாங்க நடவடிக்கைகளின் எல்லை விரிந்துகொண்டு வருவது, நவீனகாலப் போக்குகளில் தலையாய ஒன்றாகும்.

1ஆவது அட்டவணையை விலை மட்ட மாறுதல்களுக்கும் மக்கள் தொகை வளர்ச்சிக்கும் ஏற்ற முறையில் திருத்தி, மெய்யான தலா செலவு (real per capita expenditure) இவ்வளவு என்கிற வகையில் மாற்றியமைத்தால், அரசாங்க நடவடிக்கைகளின் பரப்பளவு பற்றிய தெளிவான அறிவை நாம் பெற இயலும். அரசாங்கச் செலவை நாட்டின் மொத்த ஆக்கத்தோடு (gross national product) ஒப்பிட்டுப் பார்ப்பதன்மூலம், அரசாங்கப் பணிகளின் விரிவானது, எந்த அளவுக்குத் தனியார் பொருளாதாரம் இது வரை ஆற்றிவந்த அல்லது ஆற்றுதற்குரிய பணிகளை அகற்றி விட்டு அவற்றின் இடத்தை நிரப்பியிருக்கிறது என்பதையும்

ஓரளவுக்கு நாம் உணர இயலும். அவ்வாறு ஒப்பிட்டுப் பார்ப்பதால், அரசாங்கப் பணிகளின் விரிவானது, நாட்டின் வாழ்க்கைத் தர உயர்வுக்கு ஈடாக வளர்ந்திருக்கிறதா என்பதைப் பொதுப்படையான முறையில் நாம் அறிந்துகொள்ளவும் முடியும். 1ஆவது அட்டவணையில் தரப்பட்ட புள்ளி விவரங்களை இந்த மூன்று வகையாக மாற்றியமைத்தால் அவை கீழே உள்ள 2ஆவது அட்டவணையில் குறிப்பிட்டுள்ளபடி அமைகின்றன.[3]

## அட்டவணை 2

**அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உள்ள எல்லா அரசாங்கங்களின் செலவுகள்—நற்போதைய டாலர்களிலும் (Current dollars) நிலையான டாலர்களிலும் (Constant dollars); தலா செலவுகள்; நாட்டின் மொத்த ஆக்கத்தில் அரசாங்க மொத்தச் செலவுகளின் சதவிகிதம்—நற்போதைய டாலர்களில்.**

| ஆண்டு | 1 அ<br>மொத்த செலவுகள் தற்போதைய டாலர்களில் மில்லியன் கணக்கில் | 2 ஆ<br>மொத்தச் செலவுகள் நிலையான டாலர்களில் மில்லியன் கணக்கில் | 3 இ<br>தலா செலவு, நிலையான டாலர்களில் | 4 ஈ<br>செலவுகள், நாட்டின் மொத்த ஆக்கத்தின் இத்தனை சத விகிதம் என்கிற முறையில் |
|---|---|---|---|---|
| 1902 | 1,485 | 3,877 | 48·85 | |
| 1913 | 2,766 | 6,093 | 63·13 | |
| 1922 | 8,456 | 13,467 | 122·57 | 12·4 |
| 1927 | 10,007 | 16,140 | 136·55 | 11·2 |
| 1932 | 12,146 | 23,266 | 186·32 | 20·8 |
| 1936 | 14,818 | 25,398 | 198·34 | 17·9 |
| 1940 | 17,203 | 29,623 | 224·47 | 17·9 |
| 1944 | 102,914 | 135,503 | 981.32 | 50·7 |
| 1948 | 51,816 | 47,923 | 326.83 | 21·1 |
| 1952 | 88,784 | 73,316 | 466·89 | 26·3 |
| 1954 | 95,336 | 76,978 | 473·95 | 26·5 |
| 1956 | 99,325 | 73,587 | 437·77 | 24·8 |
| 1958 | 112,328 | 77,090 | 442·88 | 25·0 |

(அ) 1–ஆவது அட்டவணையிலிருந்து

(ஆ) 1902—1927-ன் மொத்தச் செலவுகள், B. L. S. மொத்த விலைகள் குறியீட்டெண்படித் திருத்தி யமைக்கப்பட்டது. (1947–1949=100). 1932-முதல் உள்ள மொத்தச் செலவுகள், வணிகத் துறையினரின் விலைச் சுருக்க அளவுகோல்களின்படி (1947=100) (Price deflators of the Department of Commerce) திருத்தி யமைக்கப்பட்ட கூட்டரசாங்க-மாநில, தல அரசாங்கங்களின் செலவுத் தொகைகளின் தொகுப்பாகும்.

(இ) இரண்டாவது பத்தியில் உள்ள மொத்தச் செலவுகளை அந்தந்த ஆண்டின் ஜூலை முதல் தேதிக்கு உரிய மக்கள்தொகையால் வகுத்துப் பெற்ற தொகைகள்.

(ஈ) இவை, முதல் பத்தியில் உள்ள செலவுகளை, நாட்டின் மொத்த ஆக்கத்தில் இத்தனை சதவிகிதம் என்று கணக்கெடுத்துப் பெற்றவை. 1940 வரை நிதி ஆண்டின் அடிப்படையில் நாட்டின் மொத்த ஆக்கத்தை நிர்ணயிக்கக் காலாண்டுப் புள்ளி விவரங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. 1940க்கு முன்பு, கால் ஆண்டுப் புள்ளி விவரங்கள் இல்லாததால் காலண்டர் புள்ளி விவரங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. 1927-க்குப் பிறகு வணிகத்துறையின் நாட்டின் மொத்த ஆக்கம்பற்றிய புள்ளிவிவரங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. 1922க்கும் 1927க்கும், நாட்டின் மொத்த ஆக்கம்பற்றிய புள்ளி விவரங்கள், சைமன் குஸ்னெட்ஸ் அவர்களால் எழுதப்பட்டு, தேசியப் பொருளாதார ஆராய்ச்சிக் குழுவினரால் (National Bureau of Economic Research) வெளியிடப்பட்டுள்ள '1869 முதல் நாட்டின் ஆக்கம்' (National Product since 1869) என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டன. 1922க்கு முந்திய விவரங்கள் கிடைக்கவில்லை.

2ஆவது அட்டவணையின் 2ஆவது பத்தி, குறிப்பிட்ட ஆண்டுகளின்மொத்த அரசாங்கச் செலவுகளை நிலையான டாலர் கணக்கில் மாற்றித் தந்திருக்கிறது. எடுத்துக்காட்டாக, 1913-ல் அரசாங்கங்கள் மேற்கொண்ட நடவடிக்கைகளுக்காக, 1913-ல் இருந்த விலைகளுக்கு மாறாக 1947–1949-ல் இருந்த விலைகளின்படிச் செலவழிக்கவேண்டி இருந்திருந்தால், அவை, $ 2766 மில்லியன் செலவழித்ததற்கு மாறாக $ 6093 செலவழிக்கவேண்டி இருந்திருக்கும். இவ்வாறு மாற்றியமைக்கப்பட்ட செலவுகளில் ஏற்பட்டுள்ள உயர்வு, மாற்றியமைக்கப்படாத செலவுகளில் உள்ள உயர்வைவிட மிதமானதாகவும் முறையானதாகவும் இருப்பதைக் காணலாம். தற்காலச் செலவின் அளவை முற்காலச் செலவின் அளவோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போதெல்லாம் பண மதிப்பின் மாறுதல்கள் எத்துணை முக்கியமானவை என்பதை மறவாமல் இருப்பது நல்லது.

2ஆவது அட்டவணையின் 3ஆவது பத்தி, மேலே விளக்கிக் கூறியுள்ளபடி, விலையின் மாறுதலால் அரசாங்கச் செலவில் ஏற்படுகிற மாற்றங்களை நீக்கியிருப்பதோடு, மக்கள் தொகைப் பெருக்கத்தால் நேரடியாக ஏற்படுகிற மாற்றங்களையும் நீக்கியிருக்கிறது. இயல்பான காலம் என்று கருதப்படுகிற 1920 முதல் 1930 வரை உள்ள ஆண்டுகளில்கூட மெய்யான தலா செலவில் (real per capita expenditure)குறிப்பிடத்தக்க பெருக்கம் இருந்திருக்கிறது. அரசாங்கத்தின் எல்லா நிலைகளிலும் (மைய அரசாங்கம், மாநில அரசாங்கம், தல அரசாங்கம் ஆகிய அனைத்திலும்) இந்தச் செலவுப் பெருக்கம் இருந்திருக்கிறது என்பதை 1ஆவது அட்டவணையிலிருந்து தெரிந்துகொள்ளலாம். 1930 முதல் 1940 வரை இருந்த மக்கள் தொகைப் பெருக்க விகிதமானது, அதற்கு முந்திய

பத்தாண்டுகளில் இருந்த பெருக்க விகிதத்தில் பாதிக்கும் குறைவானது தான். ஆகவே தலா செலவைக் கணக்கிட்டுப் பார்த்தால், 1930 முதல் உள்ள பத்தாண்டுகளில் ஏற்பட்ட மெய்யான செலவின் பெருக்கம் இன்னும் அதிகமாக ஆகிவிடுகிறது. ஆனால் மொத்தச் செலவுகளின் எண்கள், விலை மாறுதல், மக்கள் தொகை மாறுதல் ஆகிய இரண்டிற்கும் ஏற்றபடி திருத்தியமைக்கப்பட்டால் இரண்டாம் உலகப் போருக்குப் பிந்திய காலத்தின் மெய்யான தலா செலவு, வியக்கத்தக்க அளவு குறைவாக இருப்பதைக் காணலாம். இந்தப் போருக்குப் பிறகு இந்தச் செலவானது ஓரளவு கூடுதலாகியிருந்தாலும், அந்தக் கூடுதலானது, ஒரு சராசரி வாசகர் எதிர்பார்க்கக் கூடியதைவிடக் குறைவான அளவின்தாகவே உள்ளது.

அரசாங்கச் செலவுக்கும் நாட்டின் மொத்த ஆக்கத்துக்கும் இடையே உள்ள தொடர்பை ஆராய்ந்து பார்த்தால், நாட்டின் பொருளாதாரத்தில் அரசாங்க நிதி நடவடிக்கைகள் நாளுக்கு நாள் கூடுதலான அளவில் பெற்றுவருகிற முக்கியத்துவத்தை நாம் உணர முடியும். அப்படி ஆராய்ந்து பார்ப்பதால், பொதுவான (மக்களின்) வாழ்க்கைத் தரப் பெருக்க விகிதத்திற்கும், அரசாங்கத்தின் வாழ்க்கைத் தரப் பெருக்க விகிதத்திற்கும் உள்ள தொடர்பையும் ஓரளவு நாம் உணரமுடியும். இந்தக் கண்ணோட்டத்தில், அந்த ஆராய்ச்சியானது, பொது மக்களின் விருப்ப நிறைவின் அளவோடு அரசாங்கத்தின் ஊழிய அளவை (the scale of government service) ஒப்பிட்டு அறிவதற்கு வழி செய்கிறது. 2ஆவது அட்டவணையின் 4ஆவது பத்தி, 1922க்கும் 1927க்குமிடையே, நாட்டின் மொத்த ஆக்கத்தில் அரசாங்கச் செலவின் சத விகிதம் சிறிய அளவில் குறைந்திருப்பதை எடுத்துக்காட்டுகிறது. இந்தச் சத விகிதம், 1932-ல் ஏறத்தாழ இரண்டு மடங்காகப் பெருகிவிடுகிறது; இரண்டாம் உலகப்போரின் போது சற்றே குறைகிறது. 1932க்கும் 1940க்கும் இடையே இந்தச் சத விகிதம் சற்றுக் குறைந்திருப்பது, டாலர் செலவைவிட நாட்டின் வருமானம் சற்று அதிக வேகத்தோடு உயர்ந்திருக்கிறது என்பதையே சுட்டிக் காட்டுகிறது. 1944-ல் நாட்டின் மொத்த ஆக்கத்தில் மிக உயர்ந்த வீதாச்சாரம் அரசாங்கச் செலவாக அமைந்திருப்பது, போர்க் காலத்தில் இயல்பாக அமைந்திருக்கக் கூடிய ஒரு நிலைமையையே படம் பிடித்துக் காட்டுகிறது. அந்த ஆண்டில் அரசாங்கத்தால் வாங்கப்பட்ட பொருள்கள் மற்றும் ஊழியங்களின் அளவு, நாட்டின் மொத்த ஆக்கத்தில் பாதியாக இருக்கிறது. இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர், நாட்டின் மொத்த ஆக்கத்தில் அரசாங்கச் செலவின் வீதாச்சாரமானது, போருக்கு முந்திய ஆண்டுகளில் இருந்த வீதாச்சாரத்தைவிடச்

சற்றே உயர்ந்த அளவில் நிலேத்து நிற்கிறது. இந்த உண்மையை 4ஆவது பத்தியில் 1948க்குத் தரப்பட்டுள்ள புள்ளி விவரத்தி லிருந்து நாம் தெரிந்துகொள்ள முடிகிறது. 1940 முதல் உள்ள பத்தாண்டுகளில் நாட்டின் மொத்த ஆக்கத்தில் மாபெரும் வளர்ச்சி இருந்ததால், நாட்டின் வருமானத்தில் அரசாங்கச் செலவின் வீதாச்சாரம் சிறப்பான அளவுக்கு உயராமலேயே அச் செலவின் தொகை மட்டும் குறிப்பிடத்தக்க அளவு உயர முடிந்திருக்கிறது. நான்காவது பத்தியில் உள்ள புள்ளி விவரங்களிலிருந்து நாம் அவசரப்பட்டு எத்தகைய பொது முடிவுக்கும் வந்துவிடல் ஆகாது. நாட்டின் வருமானம் என்பது, நாடு முழுவதற்கும் உரிய வருமானத் தைக் குறிக்கிறது என்பதையும், அரசாங்கச் செலவு என்பது, அரசாங்கம் முழுவதற்கும் உரிய செலவைக் குறிக்கிறதென்பதையும், புள்ளி விவரங்கள், குறிப்பிட்ட தனியாட்களின் அல்லது குழுவினரின் வருமானத்திற்கும் அந்தத் தனியாட்கள் அல்லது குழுவினருக்கு அரசாங்கம் செய்யும் செலவுகட்கும் உள்ள தொடர்பைக் குறிக்க வில்லே என்பதையும் நாம் மறத்தல் ஆகாது. அதுபோலவே, அந்தத் தனி ஆட்கள் அல்லது குழுவினரின் வருமானத்திற்கும், அவர்கள் அரசாங்கத்திற்குத் தருகிற வரிகள் அல்லது கடன்களுக்குமிடையே எத்தகைய நேரடித் தொடர்பும் இல்லே என்பதையும் நாம் நினேவில் நிறுத்திக்கொள்ளுதல் வேண்டும். எனவே மக்களிடையே உள்ள பல்வேறு பொருளாதாரப் பிரிவுகள்பற்றிய தனிபட்ட வசதிகள் அல்லது தனிப்பட்ட செலவுகள்பற்றிய எத்தகைய முடிவையும் 4ஆவது பத்தியில் உள்ள புள்ளி விவரங்களிலிருந்து எடுப்பது, சிறிதளவும் பொருந்தாத ஒன்றுகும்.

அரசாங்க மொத்தச் செலவுகளின் அசல் புள்ளி விவரங்களேத் திருத்தி அமைத்ததன் விளேவாக நாம் கீழ்கண்ட முடிவுகளுக்கு வர முடிகிறது :

1. செலவுபற்றிய புள்ளி விவரங்கள் விலே மட்டத்தின் மாறு தலுக்கு ஏற்ப மாற்றி யமைக்கப்பட்டதால், போருக்கு முந்திய ஆண்டுகளில் ஏற்பட்டதைவிட 1920 முதல் உள்ள பத்தாண்டு களில் ஏற்பட்ட மெய்யான செலவின் அதிகரிப்பு விகிதம், அசல் புள்ளி விவரங்களில் காணப்பட்டதைவிடச் சற்றுக் குறைவாக இருக்கிறது. ஆனுல், 1930முதல் உள்ள பத்தாண்டுகளில் ஏற்பட்ட மெய்யான செலவின் அதிகரிப்பு விகிதம், அசல் புள்ளி விவரங் களில் காணப்பட்டதைவிடக் கூடுதலாக இருக்கிறது.

2. மெய்யான மொத்தச் செலவு சென்றுள்ள அதே திசையில்தான் மெய்யான தலா செலவும் சென்றிருக்கிறது. குறிப் பிட்ட நீளம் உடைய எந்தக் கால அளவிலும், மக்கள் தொகையின் வளர்ச்சியால் மெய்யான செலவின் அளவு சுருங்கவில்லே.

3. நாட்டின் மொத்த ஆக்கத்தில் அரசாங்கச் செலவின் வீதாச்சாரமானது, அட்டவணையில் அடங்கியுள்ள காலம் முழுவதிலும் உயர்ந்துகொண்டே வந்திருக்கிறது. அமைதிக்காலத்திலும் இந்த உயர்வு இருக்கிறது. போர்க் காலத்திலோ இந்த உயர்வு மாபெரும் அளவினதாக அமைந்துவிடுகிறது.

ஆம்! வாக்னர் எடுத்துக் காட்டியிருப்பதைப்போல, அரசாங்க நடவடிக்கைகள், ஆழமான முறையிலும் வளர்ந்திருக்கின்றன; அகலமான முறையிலும் வளர்ந்திருக்கின்றன. நவீன காலம் முழுவதிலும், அரசாங்கம், பழைய பணிகளைத் தொடர்ந்து செய்துவந்திருக்கிறது; அதோடு, தானாக முன்வந்தோ அல்லது தேவையின் நெருக்கம் காரணமாகவோ, பல்வேறு புதிய பணிகளையும் அவ்வப்போது மேற்கொண்டு வந்திருக்கிறது.. மக்கள் சமுதாயத்தின் நிறுவனங்கள் மாறிக்கொண்டிருப்பதாலும், வாழ்க்கைத் தரம் உயர்ந்துகொண்டிருப்பதாலும் அதன் தேவைகளும் மாறிக் கொண்டிருக்கின்றன. வளர்ந்து வரும் அத் தேவைகளுக்கு ஏற்ப, அரசாங்கத்தின் பழைய பணிகளைக்கூட, முன்னைவிட மிகுந்த அளவிலும் உயர்ந்த தரத்திலும் நிறைவேற்ற வேண்டியிருக்கிறது. அரசாங்கப் பணிகளின் ஆழமான வளர்ச்சியையும் அகலமான வளர்ச்சியையும் நாம் தனித்தனியே ஆராய்வோம்.

## அரசாங்கப் பணிகளின் ஆழ்ந்த வளர்ச்சி (Intensive Expansion of Govermental Functions)

பகைவர்களின் தாக்குதலிலிருந்து நாட்டைப் பாதுகாப்பதற்கான இராணுவ ஏற்பாடுகளைச் செய்தல், சாலைகளையும் நெடுஞ்சாலைகளையும் அமைத்தல்-அவற்றைப் பராமரித்தல், பொது மக்களுக்குக் கல்வியை அளித்தல் இந்த மூன்றும், நெடுங்காலமாக இருந்து வருகிற அரசாங்கப் பொறுப்புகள் ஆகும். ஒரு குறிப்பிட்ட கால அளவில் அரசாங்கச் செலவு பெருகுவதற்கான தலைசிறந்த காரணங்களாக இருப்பவை இந்த மூன்று பணிகளுமே எனலாம். அரசாங்கத்தால் தற்போது நிறைவேற்றப்படுகின்ற பாதுகாப்புப் பணி, சாலைப்பணி, கல்விப்பணி ஆகியவற்றின் வடிவம் ஒரு நூற்றாண்டுக்குமுன் நிறைவேற்றப்பட்டபோது அதே பணிகளுக்கு இருந்த வடிவத்திலிருந்து பேரளவுக்கு மாறுபட்டிருப்பதால் அவற்றை அதே பணிகள்தாம் என்று சொல்லுவதுகூடச் சற்று சங்கடமாகத்தான் இருக்கிறது என்றாலும் அந்தப் பணிகளின் வடிவத்தில் ஏற்பட்டுள்ள மாற்றம் வழிவழியாக ஆற்றப்பட்டு வருகிற அப் பணிகள் முன்னிலும் சிறப்பான முறையில் ஆற்றப்பட வேண்டுமென்று எழுகின்ற கோரிக்கைகளுக்கு அரசாங்கம் இசைந்துள்ளதன் விளைவே ஆகும்.

**பாதுகாப்புச் செலவு:** பாதுகாப்புச் செலவு—அதாவது போரோடு தொடர்புடைய எல்லா வகைச் செலவும்—வரலாற்றுக் காலம் முழுவதிலும் மாபெரும் அளவில் உயர்ந்திருக்கிறது. போர்களின் போதும் போர்களுக்கு இடையிலேயும் போரோடு தொடர்புடைய மனிதர்களுக்காகவும் பொருள்களுக்காகவும் அம் மனிதர்கள்-பொருள்களின் பராமரிப்புக்காகவும் செலவிடப்படும் தொகை மட்டும் அல்ல; போர் வீரர்களுக்குத் தரப்படுகிற ஒய்வு ஊதியமும் (pension) பிறவகை உதவிகளும், போர்ப்பணிகளுக்காக அரசாங்கம் எழுப்பிய கடனுக்காகத் தரப்படவேண்டிய வட்டிச் செலவும்கூடப் பாதுகாப்புச் செலவு என்னும் தலைப்பில் அடங்கும். போர்க் காலத்தில் குடிமைப் பொருளாதாரத்திற்குத் (civilian economy) துணைபுரியவும் அதனைக் கட்டுப்படுத்தவும் செலவழிக்கப்படுகிற படைத்துறையைச் சாராத செலவுகளும் பாதுகாப்புச் செலவில் தான் அடங்கும்.

தற்போது படைத்துறைக் கலைகள் மற்றும் அறிவியல்களின் முன்னேற்றம் மிக விரைவாக நிகழ்ந்துவிடுவதால் போர்கருவிகள்-பொறிகளின் விலைகள் விரைவில் அளவுகடந்து உயர்ந்துவிட்டது மட்டுமல்ல; அவை மிக விரைவில் காலத்திற்கு ஒவ்வாத பழைமைத் தன்மை படைத்தனவாகவும் மாறிவிடுகின்றன. போரில் காய மடைந்த வீரர்களுக்கும் அவர்களுடைய குடும்பத்தினருக்கும் உதவி புரிவதும், அவர்களுக்கு ஒய்வு ஊதியம், கல்வி, மறுவாழ்வு வசதிகள் முதலிய நன்மைகளைச் செய்வதும் தன்னுடைய கடமைகள் என்று அரசாங்கம் கருதுவதாலும் போர்த் தொடர்பான அரசாங்கச் செலவுகள் மிகப் பெரிய அளவுக்கு உயர்ந்துவிட்டன.

பகைவர்களின் தாக்குதலிலிருந்து நாட்டைத் தகுந்த முறையில் பாதுகாப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்யவேண்டியது அரசாங் கத்தின் அடிப்படைக் கடமைகளில் ஒன்று என்பதை எவரும் மறுக்க முடியாது. அமெரிக்க அரசியல் திட்டத்தின் பாயிரத்தில் (preamble) குறிப்பிட்டிருப்பதைப்போல, கூட்டு அரசாங்கம் ஏற்பட்டதற்குரிய காரணங்களில் ஒன்று, நாடு முழுவதற்கும் பொதுவான பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்வது ஆகும். தற்காப்புப் போரைக்கூட நம்முடைய எல்லைகளுக்கு அப்பால் கொண்டுசென்று, நம்முடைய எல்லைகளிலிருந்து எவ்வளவு நீண்டதூரத்திற்கு அப்பால் எதிரிகளைச் சந்திக்கமுடியுமோ அந்தத் தூரத்தில் சந்திக்கும்படி யான நிலையில் நம்மை வைத்துக்கொள்வதும் பாதுகாப்பு என்ற சொல்லின் தற்காலக் கண்ணோட்டத்தில் அடங்கும். எனவே இக் காலத்தில், போதுமான பாதுகாப்பு அமைப்பு என்பது, மாபெரும் தாக்கும் சக்தியையும், எல்லா வகைக் கருவிகளைக் கொண்ட

முன்னணிப் படைத்தளங்களையும் தன்னகத்தே பெற்றதாய், மிகப்பெரிதாய், விரைந்து இடம்விட்டு இடம் பெயரக் கூடியதாய் இருந்தாகவேண்டும்.

கீழே உள்ள 3-ஆவது அட்டவணையில் விரைந்து வளர்ந்துவரும் போர்ச் செலவின் தன்மை சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

## அட்டவணை 3

### முதன்மையான அமெரிக்கப் போர்களின் செலவு

(மில்லியன் டாலர்களில்)

| | | |
|---|---|---|
| புரட்சி (1775-1783) அ | $ | 113·6 |
| 1812 ஆம் ஆண்டுப் போர் (1812-1815) ஆ | | 99·8 |
| உள்நாட்டுப் போர் (1861-1879) இ | | 6190·0 |
| ஸ்பானிய அமெரிக்கப்போர் (1898-1901) ஈ | | 275·0 |
| முதல் உலகப்போர் (1919 அக்டோர் 31 முடிய உள்ள 31 மாதங்கள்) உ | | 32,830·0 |
| இரண்டாம் உலகப்போர் (1940-1946) ஊ | | 345,885·0 |

(அ) ஷல்ட்ஸ் (Shultz), கெய்ன் (Caine) ஆகியோர் இயற்றிய Financial Development of the United States (நியூயார்க், பிரென்டிஸ்ஹால், 1637, பக்கங்கள் 46, 47) என்னும் நூலிலிருந்து.

(ஆ) டி. ஆர். டீவியின் (D. R. Dewey) Financial History of the United States, (12ஆவது பதிப்பு, நியூயார்க், லாங்மன்ஸ், 1934, பக்கம் 141) என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்ட புள்ளி விவரம் இது. போருக்காகவும், கடற்படைக்காகவும் செய்யப்பட்ட செலவுகளும், 1812-ல் வட்டியாகத் தரப்பட்டச் செலவை விட மிகுதியாகச் செய்யப்பட்ட செலவுச் செலுத்தல்களும் இப் புள்ளி விவரத்தில் அடங்கியுள்ளன,

(இ) டீவி, மேலே குறிப்பிட்ட நூல், பக்கம் 329.

(ஈ) டீவி, மேலே குறிப்பிட்ட நூல், பக்கம் 467, 1894-1897-ல் போருக்காகவும், கடற்படைக்காகவும் செய்யப்பட்ட செலவைவிட, 1898-1901-ல் அவற்றிற்காகச் செய்யப்பட்ட செலவின் மிகை மட்டும் இந்தப் புள்ளி விவரத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

(உ) Annual Report of the Secretary of the Treasury, 1919, பக்கம் 26.

(ஊ) மேலே குறிப்பிட்ட நூல், 1946, பக்கம் 400. போர் நடவடிக்கை பற்றிய மொத்தச் செலவுகள், 1940-ல் போர் வீரர்களுக்காகச் செய்யப்பட்டதைவிட ஆண்டுதோறும் கூடுதலாகச் செய்யப்பட்ட செலவுத்தொகை, 1940-ல் செய்யப்பட்ட வட்டிச் செலுத்தலைவிட ஆண்டுதோறும் கூடுதலாகச் செய்யப்பட்ட வட்டிச் செலுத்தல் தொகை ஆகியவற்றின் கூட்டுத்தொகை இது.

இந்த அட்டவணையில் தரப்பட்டுள்ள புள்ளி விவரங்களில், போர்களுக்கு இடைப்பட்ட காலத்தில் படைத்துறைத் தயாரிப்புக்காகச் செலவழிக்கப்பட்ட தொகைகள் சேர்க்கப்படவில்லை. ஓரளவுக்கு உள்நாட்டுப்போரில் தவிர, மற்றபடி, அப் புள்ளி விவரங்களில், 'போரின் பின்விளைவுகள்' என்று கருதத்தக்க வகையில் போருக்குப்பின் செலவழிக்கப்பட்ட தொகையும் சேர்க்கப்படவில்லை. போருக்குப் பிந்திய இச் செலவுகளில் சிறப்பாகக் குறிக்கத் தக்கவை பணியாட்களுக்கான செலவு (mustering out payments), போனஸ் செலுத்தல்கள், ஓய்வு ஊதியம் ஆகியவை ஆகும். நாடு ஒரு போரிலிருந்து இன்னொரு போருக்குச் சென்றுகொண்டிருந்த காலத்தில் இந்தப் பெரிய செலவினம் வளர்ந்தபடி இருந்திருக்கிறது. தற்போதைய போர்கள் 'முழுமூச்சுப்' போர்களாக இருப்பதன் காரணமாக மேலே குறிப்பிட்ட போனஸ் முதலிய செலுத்தல்களைப் (payments) பெறுவதற்குரிய படைத்துறைப் பணியாளர்களின் எண்ணிக்கை மிகவாகப் பெருகியிருக்கிறது. கூட்டு அரசாங்க நிலையிலும் சரி, மாநில அரசாங்க நிலையிலும் சரி, இத்தகைய செலுத்தல்களை மேலும் மேலும் ஏராளமான அளவில் தருகின்ற போக்கே காணப்படுகின்றது. 1919 அக்டோபர் முடிய முதல் உலகப் போருக்கான (அமெரிக்க அரசாங்கச்) செலவு 33 பில்லியன் டாலராக இருந்தது என்பதை 3ஆவது அட்டவணை தெரிவிக்கிறது. சரிப்படுத்தப்பட்ட ஊழிய இழப்புத்தொகை (adjusted service compensation), மற்ற 'பிற போரின் பின்விளைவுச்' செலவுகள் ஆகியவற்றைச் செலுத்திய பின்னர் முதல் உலகப்போரின் மொத்தச் செலவு, 45 பில்லியன் டாலராக மதிப்பிடப்பட்டிருக்கிறது.[4]

நாட்டுத் தொழிலியல் மாநாட்டுமன்றம் (The National Industrial Conference Board), 1789-க்கும் 1920-க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் கூட்டரசாங்கத்தின் மொத்தச் செலவில் 78·9 சதவீதம் போருக்காகச் செலவிடப்பட்டிருக்கிறது என்று கணக்கிட்டிருக்கிறது.[5] போர் முழுமையாக அகற்றப்பட்டுவிட்டால் கூட்டரசாங்கத்தின் செலவு பெரிய அளவு குறைந்துவிடும் என்பது இதிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. ஆனால் வேடிக்கை என்னவென்றால் 'சிக்கன உணர்ச்சி படைத்த' பிடிவாத குணமுள்ள சட்டமன்ற உறுப்பினர்கள், 'பணித்துறை ஆட்சி' யையும் (bureaucracy) அரசாங்க சிவிலியன் ஊதிய பட்டியலின் அளவு பெருகிவருவதையும்தான் ஓயாமல் தாக்கிவருகிறார்களே தவிர (போரை அகற்றி) அமைதியை வளர்பதற்கான திட்டங்களில் அவர்கள் கவனம் செலுத்தக்காணோம்! போர்ச் செலவுகள் தவிர்க்கமுடியாதவை என்னும் கருத்துக்கு மாறாக அமைதியை நிலைநாட்டும் பணியில் ஈடுபட்டிருப்பவர்கள் 'இலட்சியவாதிகள்' எனப்படும் சட்டமன்ற உறுப்பினர்களே ஆவர்.

**நெடுஞ்சாலைகள் (Highways):** முதல் உலகப் போருக்குப்பின் மோட்டார் கார்களின் வளர்ச்சி காரணமாக நெடுஞ்சாலைகளின் நீளத்திலும் தரத்திலும் முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. அது போலவே அம் முன்னேற்றம் காரணமாக மோட்டார் கார்களின் வளர்ச்சியும் கூடுதலாகியிருக்கிறது. கிராமச் சாலைகளின் வளர்ச்சி, குடிவாழும் பகுதிகளையும், வணிகப் பகுதிகளையும் விலக்கிச் செல்வதற்காக அமைக்கப்படும் சுற்றி வளைத்த நெடுஞ்சாலைகள் (cut-off highways) கிரேட் கிராசிங்குகளை அகற்றுதல் (elimination of grade crossings) ஆகியவை சாலை வளர்ச்சியின் முக்கியமான கூறுகளே என்றாலும் மாபெரும் நெடுஞ்சாலைகள், நெடுந்தூரம் செல்லும் பெருவழிகள் ஆகியவற்றின் வளர்ச்சியிலே வியக்கத்தக்க அளவு இருக்கிறது. மிகுந்த எடையும் விரைவும் படைத்த் ஊர்திகளின் அழுத்தம் சாலைகளின்மீது மிகுதியாக விழுவதால் புதிய சாலைகளை மிகவும் அழுத்தமாக அமைக்கவேண்டியிருக்கிறது; முன்னிலும் அடிக்கடி பழுதுபார்க்க வேண்டியிருக்கிறது; போதிய அளவு இல்லாத பழைய சாலைகளைக் கைவிட வேண்டிய தேவையும் ஏற்படுகிறது. மிக்க அகலத்தையுடைய சாலைகளை மட்டுமே பயன்படுத்தக்கூடிய ஊர்திகளின் எண்ணிக்கை பல்கிப் பெருகி வருவது, சாலை அமைப்பின் செலவை மேலும் கூடுதலாக்கி யிருக்கிறது.

சாலைப்பணியானது, மாநில தல அரசாங்கங்களால், கூட்டர சாங்கத்திடமிருந்து குறிப்பிடத்தக்க உதவியைப் பெற்று நடத்தப் பட்டு வருகிறது. 1919-ல் மாநில-தல அரசாங்கங்களின் சாலைப் பணிக்கான மொத்தச் செலவானது, 390மில்லியன் டாலராக இருந்தது[6]. அச் செலவு, 1921-ல் ஏறத்தாழ 1000 மில்லியன் டாலராகவும், 1930-ல் 1900 மில்லியன் டாலராகவும் உயர்ந்து விட்டது. 1937-ல் மாநில-தல அரசாங்கக் கருவூலங்கள் மிகுந்த நெருக்கடிக்கு உள்ளானபோதுகூட அந்த அரசாங்கங்களின் சாலைச் செலவு கிட்டத்தட்ட 1930-ல் இருந்த அளவிலேயே (1800 மில்லியன் டாலர்) இருந்தது[7]. நெடுஞ்சாலைகள் மற்றும் சாலைகளின் அமைப்புக்காகவும் பராமரிப்புக்காகவும், கூட்டரசாங்கம் மாநில அரசாங்கங்களுக்கும், மாநில அரசாங்கம் தல அரசாங்கங்களுக்கும் மிகுந்த கொடைகள் வழங்கவேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. கூட்டரசாங்கம் மாநில அரசுகளுக்குத் தன் கொடைகளை வழங்கிய போது சாலை அமைப்பிலும் பராமரிப்பிலும் குறிப்பிட்ட தரம் இருத்தல் வேண்டுமென்று நிபந்தனை விதித்திருக்கிறது. மோட்டார் வாகன வருவாய் முழுவதையும் நெடுஞ்சாலைச் செலவுக்கே ஒதுக்கவேண்டும் என்ற கொள்கையை அழுத்தமாக வலியுறுத்தும் வகையிலேயே கூட்டரசாங்கத்தின் போக்கு இருந்து

வருகிறது. 1930 வரையில் தான் தருகிற அதே அளவு தொகையை மாநில அரசு தன் வருவாயிலிருந்தும் செலவிடவேண்டும் என்கிற அடிப்படையிலேயே, கூட்டரசாங்கம், மாநில அரசுகளுக்குச் சாலைச் செலவுக்கான கொடைகளை அளித்துவந்தது. 1930 முதல் கூட்டர சாங்கக்கொடைகளுக்குஒத்த அளவுதொகையைத்தங்கள்வருவாயி லிருந்து சாலைச் செலவுக்கு ஒதுக்கமுடியாத சங்கடமான நிலையில் மாநில அரசுகள் இருந்த காரணத்தால் கூட்டரசாங்கத்தின் கொடைகளை அவற்றால் பெற இயலவில்லை. எனவே கூட்டர சாங்கம், மாநில அரசுகளுக்கு உரிய எதிர்காலச் சாலைக் கொடை களை முன் கூட்டியே தந்து, அத் தொகைகளைக்கொண்டு தற்காலக் கொடைகளுக்கு ஈடாக அந்த அரசுகள் தாங்கள் செலவிடவேண்டிய தொகையைச் செலவிட உதவியது. இந்தக் கொள்கையானது முதலில் திட்டமிட்டவாறே பிந்திய ஆண்டுகளில் கையாளப்பட் டிருக்குமானால் மாநில அரசுகள் சாலைச் செலவுக்குரிய முழுத் தொகையையும் தங்கள் நிதிகளிலிருந்தே திரட்டவேண்டிய நெருக்கடி ஏற்பட்டு, சாலைப் பணியானது மிகப் பெரிய அளவுக்குக் குறைக்கப்பட்டுவிட்டிருக்கும். எனவேதான் 1934-ல் அமெரிக்கக் காங்கிரஸ், மாநில அரசுகள் பெற்றிருந்த இந்த முன் பணத் தொகை களைத் திருப்பித் தரவேண்டியதில்லை என்று அறிவித்தது. அப்படி அறிவித்ததன் விளைவாக, கூட்டரசாங்கத்தின் கொடைகள் ஒத்த அளவு மானியங்களாக (matching grants) இல்லாமல் முழு நன்கொடைகளாகவே அமைந்துவிட்டன[7]. 1930 ஐத் தொடர்ந்த ஆண்டுகளில் பொருளாதார மந்த நிவாரணத்திற்காகவும் வியாபார மீட்சிக்காகவும் பொதுப் பணிகளை மேற்கொள்வது என்று கூட்டரசாங்கம் கொண்டிருந்த கொள்கைக்கு 1934-ல் அமெரிக்கக் காங்கிரஸ் செய்த மேற்படி முடிவு முற்றிலும் பொருத்தமானதாக இருந்தது.

இரண்டாவது உலகப் போர் நடைபெற்ற காலத்தில் சாலை களுக்கான செலவு மிகவும் குறைந்துவிட்டது. இதற்கு ஒரு காரணம் பங்கீட்டு முறை நடைமுறையில் இருந்த காலம் அது. ஆதலால் சாலைகளுக்கான தேவை குறைவாக இருந்தது என்பதாகும். மற்றொரு காரணம், சாலை அமைப்புக்கான பொருள்களும் தொழி லாளர்களும் அக் காலத்தில் கிடைக்கவில்லை என்பதாகும். எனவே மாநில அரசுகளைப் பொறுத்தவரையில், போர் முடிந்தபோது, செய்யப்பட்டிருக்க வேண்டிய—ஆனால் இதுவரை செய்யப்படாத சாலை அமைப்பு மற்றும் பழுது பார்க்கும் பணிகள் ஒரு புறம் குவிந்துபோயிருந்தன. மற்றோர் புறம், சாலை நிதிகளில் ஏராளமான அளவில் உபரித்தொகை நிறைந்திருந்தது. ஆனால், நெடுஞ்சாலைகளை உடனடியாக நவீனமயப்படுத்தவேண்டிய நெருக்கடி இருந்த

காரணத்தாலும், நெடுஞ்சாலைகளை அமைப்பதற்கும் பராமரிப்ப தற்கும் உரிய செலவுகள் விரைந்து பெருகிவிட்ட காரணத்தாலும், மேற்படி உபரித் தொகைகள் மிக விரைவில் கரைந்துவிட்டன. 1940 முதல் 1950 வரை உள்ள காலத்தின் இறுதிக்குள், மாநில— தல அரசாங்கங்கள், தங்கள் சாலைச் செலவைச் சரிக்கட்டுவதற் காகக் கூடுதல் வருவாய்களைத் தேடவேண்டிய நெருக்கடிக்கு உள்ளாகிவிட்டன. இது இப்படி இருந்தபோதிலும், தாராளமான கூட்டரசாங்கச் சாலைக் கொடைகள் காரணமாகவும், மோட்டார் வாகன வருவாய்கள் முழுவதும் சாலைப் பணிக்காக ஒதுக்கப்படுகிற காரணமாகவும், சாலைப் பணிக்கான நிதிகளுக்கு வருவாய் வழிகள் சிறப்பாக அமைந்துள்ளன.

இரண்டாவது உலகப் போருக்குப் பிந்திய காலத்திற்கான சாலைச் செலவுகள் 4ஆவது அட்டவணையில் தரப்பட்டிருக்கின்றன. இந்த அட்டவணையில் நடைமுறையில் எந்த அரசாங்கம் செலவைச் செய்கிறதோ அந்த அரசாங்கத்தின் கணக்கில்தான் செலவு சேர்க்கப்பட்டுள்ளது. அதாவது ஒரு நிலையில் உள்ள அரசாங்கத் தால் மற்றொரு நிலையைச் சேர்ந்த அரசாங்கத்திற்குச் சாலைக் கொடை வழங்கப்பட்டிருந்தால், பிந்திய அரசாங்கத்தின் நேரடிச் செலவாகவே அந்தத் தொகை காட்டப்பட்டிருக்கிறது.

## அட்டவணை 4

நெடுஞ்சாலைக்கான அரசாங்கங்களின் நேரடிச் செலவு
1946, 1950, 1956, 1958 (அ) நிதி ஆண்டுகள்
(மில்லியன் டாலர் கணக்கில்)

| | 1946 | 1950 | 1956 | 1958 |
|---|---|---|---|---|
| கூட்டு அரசாங்கம் | 21 | 59 | 82 | 135 |
| மாநில அரசாங்கம் | 613 | 3,803 | 4,367 | 5,507 |
| தல அரசாங்ம் | 1,059 | 2,058 | 2,586 | 3,187 |

(அ) சென்சஸ் பீரோவின் Statistical Abstract of the United States, 1951, Historical Statistics on State and Local Government Finances, 1902–1953, Summary of Governmental Finances in 1956, 1958 ஆகியவற்றிலிருந்து எடுக்கப்பட்ட புள்ளி விவரங்கள்.

நெடுஞ்சாலைச் சட்டம் 1956-ன்படி நெடுஞ்சாலை அமைப்பில் கூட்டரசாங்கத்தின் பங்கு பெரிய அளவில் விரிவாக்கப்பட் டிருக்கிறது. இந்தச் சட்டத்தின்படி நெடுஞ்சாலைகளுக்கான ஒரு புதிய தேசீயத்திட்டம்—மாநில இணை நெடுஞ்சாலைகள் மற்றும் பாதுகாப்பு நெடுஞ்சாலைகள்(The Interstate and Defense Highways) என்னும் பெயரில் அமைக்கப்பட்டது. இந்தத் திட்டத்தில்,

கூட்டரசாங்கத்தின் கொடைகளுக்கு ஒத்த அளவில் மாநில அரசுகள் சாலைச் செலவுக்குத் தொகை ஒதுக்கவேண்டும் என்னும் முறை கைவிடப்பட்டது ; சாலை அமைப்புச் செலவில் கூட்டரசாங் கத்தின் பங்கு 90 சதவீதத்திற்கு உயர்த்தப்பட்டது. இந்த சட்டத்தின்படித் தரப்படும் கூட்டரசாங்க உதவி, நெடுஞ்சாலைப் பொறுப்புநிதி (Highway Trust Fund) என்னும் ஒரு தனி அமைப்பின் மூலம் நிர்வகிக்கப்படும். மோட்டார் எரிபொருள்கள், டயர்கள், பளுவான ஊர்திகள் ஆகியவற்றின் மீதுள்ள வரிகளின் வருவாய் இந்த நிதிக்குள் செலுத்தப்பட்டு, மாநில அரசுகளுக்குரிய கூட்டர சாங்கக் கொடைகள் இந்த நிதியிலிருந்தே அளிக்கப்படும். 28 பில்லியன் டாலர் செலவில் 13ஆண்டுகளில் 2300மைல் நீள முள்ள பெரிய ஒன்ஞெடு ஒன்று தொடர்புள்ள நெடுஞ்சாலைகளை அமைத்து, அவற்றைப் பல மாநிலச் சாலைகள் திட்டத்தில் இணைப்பதும் ஏனைய நெடுஞ்சாலைகளைப் பொறுத்த அளவில் சாலைச் செலவைக் கூட்டரசாங்கமும் மாநில அரசுகளும் பாதிப் பாதியாக ஏற்றுக்கொள்வது என்கிற அடிப்படையில் தாராளமாகக் கூட்டரசாங்கக் கொடைகளை வழங்குவதும் இந்தத் திட்டத்தின் நோக்கங்களாகும். இந்தப் புதிய திட்டத்தின்படிச் செய்யப்படும் செலவில் ஒரு பகுதியை இந்தத் திட்டம் இல்லாதிருந்தாலும் மாநில அரசுகள் செய்திருக்கும் என்பது உண்மையே என்றாலும், 1956 ஆம் ஆண்டுச் சட்டத்தால், இந்தச் சட்டம் இல்லாதிருந்தால் ஆகக் கூடியதைவிட மிக அதிகமான அளவில், சாலைகளுக்கான செலவு ஏற்படும் என்பது உறுதி. எல்லா அரசாங்கங்களின் சாலைச் செலவின் மொத்தத் தொகை 1960-ன்போது அநேகமாக பத்து பில்லியன் டாலர் என்னும் எல்லையையும் தாண்டிவிடும் என்று தோன்றுகிறது.

**கல்வி :** அடிப்படைக் கல்வியும் நடுத்தரக் கல்வியும் நடை முறையில் தல அரசாங்கங்களின் பணிகளாக இருக்கின்றன. உயர்நிலைக்கல்வியோ பெரும்பாலும் மாநில அரசாங்கத்தின் பணியாக இருந்து வருகிறது. தல அரசாங்கங்களின் நிதி வருவாய்த் துறைகளில் பெரிய அளவில் ஏற்றத்தாழ்வுகள் இருப்பதால், அந்த அரசாங்கங்களால் நிர்வகிக்கப்படுகிற பள்ளிக்கூடங்கள் பல ஒருங்கு இணைக்கப்படவேண்டும் என்பதையும், அப் பள்ளி நிலையங் களில் தரப்படுகிற கல்வி ஒரே தரத்ததாக இருக்கவேண்டும் என்பதையும், வற்புறுத்தவேண்டிய நிலை ஏற்படுகிறது. பள்ளிக்கூட முன்னேற்றமும் கல்வித் தர ஒருமைப்பாடும் பெரும்பாலும் மாநில அரசின் கட்டுப்பாட்டின் மூலமாகவே ஏற்பட்டிருக்கின்றன. இதன் விளைவாக மாநில அரசுகள் தல அரசாங்கங்களுக்குப் பெருந் தொகைகளைக் கல்விக் கொடைகளாக வழங்கவேண்டிய நிலையும் ஏற்பட்டிருக்கிறது. தல அரசாங்கங்களின் வருவாய்க்குத்

தலையாய, ஊற்றுக்காலாக உள்ள சொத்துவரியிலிருந்து அவற்றிற்குப் போதுமான வருவாய் கிடைக்காத காரணத்தால், மாநில அரசுகளின் உதவி இன்றியமையாததாக ஆகிவிடுகிறது. சில மாநிலங்களில், தல அரசுகளின் சொத்து வரிக்கு மாறாக மாநில அரசுகளின் வேறு சில வரிகள் விதிக்கப்பட்டு, அத்தகைய வரிகளின் வருவாயை மாநில அரசுகளும் தல அரசாங்கங்களும் பங்கிட்டுக் கொள்கின்றன.[9]

## அட்டவணை 5

### மாநில-தல அரசாங்கங்களின் நேரடிக் கல்விச் செலவு—சில குறிப்பிட்ட ஆண்டுகளுக்கு

| ஆண்டு | மாநில அரசாங்கம் மில்லியன் டாலரில் | மாநில அரசாங்கம் மாநில மொத்தச் செலவில் சதவீதம் | தல அரசாங்கம் மில்லியன் டாலரில் | தல அரசாங்கம் வட்டார மொத்தச் செலவில் சதவீதம் |
|---|---|---|---|---|
| 1913 | 55 | 18·5 | 522 | 21·6 |
| 1927 | 218 | 15·0 | 2,017 | 31·7 |
| 1938 | 347 | 16·9 | 2,144 | 30·8 |
| 1948 | 1,081 | 13·7 | 4,298 | 32·9 |
| 1952 | 1,494 | 13·8 | 6,824 | 34·0 |
| 1956 | 2,138 | 17·3 | 11,082 | 45·4 |
| 1957 | 2,459 | 17·8 | 12,042 | 45·2 |
| 1958 | 2,873 | 18·4 | 12,909 | 43·8 |

இப் புள்ளி விவரங்கள்; சென்சஸ் பீரோவின் Historical Statistics on State and Local Finances *1902–1953*, Summary of Governmental Finances in *1957–1958* ஆகிய நூல்களிலிருந்து எடுக்கப்பட்டவை. நடைமுறையில் கல்விக்கான செலவை எந்த அரசாங்கம் செய்கிறதோ அந்த அரசாங்கத்தின் கணக்கில் செலவுத் தொகை சேர்க்கப்பட்டிருக்கிறதே தவிர, நிதிகளைத் தருகிற அரசாங்கத்தின் கணக்கில் அத் தொகை சேர்க்கப்படவில்லை நினைவில் நிறுத்திக் கொள்வது இன்றியமையாதது. எடுத்துக் காட்டாக, 1956–ல் தல அரசாங்கங்களால் கல்விக்காகச் செலவழிக்கப்பட்ட தொகையில், 3·5 பில்லியன்டாலர், அவற்றிற்கு மாநில அரசுகளால் தரப்பட்டது ஆகும். இத்தகைய தொகைகளை மாநில அரசுகளின் கணக்கிலேயே சேர்த்துப் பார்த்தால், அண்மை ஆண்டுகளில் மாநில அரசுகளால் கல்விக்குச் செலவழிக்கப்பட்ட தொகைகளும் வீதாச்சாரங்களும் குறிப்பிடத்தக்க அளவு உயர்ந்து காணப்படும்; தல அரசுகளின் தொகைகளும் வீதாசாரங்களும் குறைந்து காணப்படும்.

இந்த அட்டவணையில் அடங்கியுள்ள காலத்தில் மாநில—தல அரசாங்கங்கள் இரண்டின் கல்விச் செலவிலுமே குறிப்பிடத்தக்க உயர்வு இருக்கிறது என்பது, அட்டவணையிலிருந்து தெளிவாக விளங்குகிறது. ஆனால் அட்டவணையிலிருந்து தெளிவாகத் தெரியாத சில உண்மைகளை விளக்கிக் கூறுவது நலம் பயப்பதாகும். அட்டவணையில் உள்ள புள்ளி விவரங்களில் நேரடிச் செலவுகள் மட்டுமே தரப்பட்டிருக்கின்றன. தல அரசாங்கங்களுக்குக் கல்விக் கொடைகள் தருவதன்மூலமாக அந்த அரசுகளின் கல்விச் செலவை மாநில அரசுகளே ஏற்றுக்கொண்டிருந்தாலும் தல அரசாங்கங்களின் கணக்கிலேயே அந்தச் செலவு காட்டப்பட்டிருக்கிறது. ஆனால் இத்தகைய கொடைகளின் தொகை பெரிய அளவினதாக இருப்பதோடு ஆண்டுக்கு ஆண்டு வளர்ந்து கொண்டும் இருக்கிறது. இத் தொகையின் அளவு 1958-ல் 4·5 பில்லியன் டாலராக உயர்ந்துவிட்டது. பள்ளிக்கூடங்களின் வளர்ச்சியில் பொதுமக்கள் அனைவருக்கும் தெரிந்த பல்வேறு காரணங்களால், பேரார்வம் ஏற்பட்டிருக்கிறது. பல்வேறு மாநிலங்களிலும் நகரங்களிலும் கல்வித் துறையினர் மிகுந்த விறுவிறுப்போடு பள்ளிக்கூடங்களுக்கான ஆதரவைத் திரட்டி வருகின்றனர். ஆனால் அதே நேரத்தில், கூட்டரசாங்கமானது, கல்விப் பணியில் பெரிய அளவில் பங்கெடுக்காமல் தொடர்ச்சியாக ஒதுங்கியே இருந்திருக்கிறது. வேளாண்மைக் கல்வி, ஜி. ஐ. பட்டியல் (G. I. Bill) திட்டத்தின்கீழ் வரும் கல்விச் செலுத்தல்கள், கூட்டரசாங்க நடவடிக்கைகளின் அழுத்தம் அதிகமாக உள்ள பகுதிகளில் இருக்கும் தலப் பள்ளிக்கூடங்களுக்குக் கொடைகள், கல்லூரிக் கட்டிடம், ஆராய்ச்சி முதலிய இனங்களுக்கான கொடைகளும் கடன்களும்—ஆகிய இவற்றிற்கும் இன்ன பிற சிறப்புத் திட்டங்களுக்கும் உதவுகிற அளவோடு, கூட்டரசாங்கம், கல்வித் துறையில் தன்னை நிறுத்திக் கொண்டிருக்கிறது.

1930ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளின் தொடக்கப் பகுதியிலும் நடுப்பகுதியிலும் மாநில-தல அரசாங்கங்களின் கல்விச் செலவு குறைந்திருக்கிறது. இதற்குப் பல காரணங்கள் உண்டு. (1) மாநில—தல அரசாங்கங்களின்—குறிப்பாக தல அரசாங்கங்களின் வருந்தத்தக்க நிதி நிலைமை காரணமாக மிகப்பெரிய செலவினமாகிய கல்விக்கு ஒதுக்கப்படும் தொகை பெரிதும் குறைந்துவிடுவது இயற்கைதான். (2) பள்ளிக்கூடக் கட்டிடங்கள் கட்டுவதற்காக வேலை நிவாரண நிதிகளிலிருந்து (work relief funds) ஒதுக்கப்பட்ட தொகை தவிர, ஏனைய கூட்டரசாங்க நிதிகள் எவற்றிலிருந்தும் கல்விக்காகப் பணம் தரப்படவில்லை. எனவே மாநில—தல அரசுகள், போதுமான அளவில் இல்லாத தங்களுடைய வருவாய்ச் சாதனங்

களை மட்டுமே நம்பிப் பணிகளை மேற்கொள்ள வேண்டியிருக்கிறது. (3) சாலைப் பணிகளுக்காகவென்றே தனியாக ஒதுக்கப்பட்டு ஏராளமான நிலையான வருவாய் இருப்பதைப்போல அல்லாமல், கல்விச் செலவுகளைப் பொதுவாகப் பொது வருவாய்களிலிருந்தே செய்யவேண்டியிருக்கிறது. ஆனால், 1930ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளில், பொது வருவாய் நிதிகளுக்குப் புதிய வருவாய்ச் சாதனங்கள் எவையும் இல்லாமல் இருந்தும், அந் நிதிகளிலிருந்து பல இயல்பல்லாத செயல்களை செய்யவேண்டியிருக்கிறது. (4) இயல்பான வரவு செலவுத்திட்டம் ஒத்தநிலை உடையதாய் இருக்க வேண்டும் என்றும் (the 'ordinary' budget must be a balanced one) ஆனால் நெடுக்கடிக் கால வரவு-செலவுத் திட்டம் ஒத்த நிலையிலிருந்து மிக மாறுபட்டதாகக்கூட இருக்கலாம் என்றும் பொருளாதார மந்த காலத்தில் கொள்ளப்பட்ட கருத்து, கல்விச்செலவின் குறைவிற்கான மற்றொரு காரணம் ஆகும். கல்விச் செலவானது, இயல்பான நீண்டகாலச் செலவுகளில் ஒரு பகுதியாகும். அரசாங்கத்தின் வருவாய் குறைந்து, நெடுக்கடிச் செலவுக்கான தேவை உயரும்போது, இயல்பான செலவுகளைக் குறைப்பதும், நெருக்கடி நிலைமைகளைச் சமாளிப்பதற்காகமட்டும் கடன் வாங்குவதும் பொதுவாக ஏற்படக்கூடிய அரசாங்கப் போக்குகள் ஆகும். அத்தகைய சமயங்களில், நெருக்கடியைச் சார்ந்த பணிகள் இன்றியமையாதவையே என்றாலும், அவற்றைப்போலவே இன்றியமையாததாக உள்ள கல்விப் பணிக்கு அதே அளவு கவனம் செலுத்தப்படவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது.

இரண்டாவது உலகப் போரின் காலத்திலிருந்து மாநில அரசுகளின் கல்விச் செலவு திடுக்கிடத்தக்க அளவு உயர்ந்திருக்கிறது என்பதையும் இச் சமயத்தில் நாம் எடுத்துக் காட்டவேண்டும். இந்த உயர்வுக்குக் காரணமாக இருந்த மூன்று நிலைமைகள் நாடு முழுவதிலும் காணப்பட்டவை ஆதலால் அவற்றை இங்கே விரிவாக எடுத்துக் கூறாமல் சுட்டிக் காட்டினாலே போதும். செலவு உயர்வுக்கான முதற் காரணம், 1945 முதல் விலைகளும் ஊதியங்களும் உயர்ந்திருப்பது. இரண்டாவதாகப் பள்ளிக்கூடக் கட்டிடங்களும் வசதிகளும் போருக்கு முன்னரே போதுமான அளவில் இல்லை. போர்க்காலத்திலோ பொருள்களின் பற்றுக்குறை காரணமாகப் புதிய கட்டிடங்களை எழுப்புவதோ பழைய கட்டிடங்களை விரிவுபடுத்துவதோ இயலாது போயிற்று. இவ்வாறு பல ஆண்டுகளாகச் செய்யப்படாமல் இருந்த கட்டிட வசதிகளையெல்லாம் போர் முடிந்ததும் செய்யவேண்டியிருந்தது, செலவு உயர்வுக்கான மற்றொரு காரணம். மூன்றாவது காரணம், போர்க்காலத்தில் பிறப்பு

வீதத்தில் ஏற்பட்ட மாபெரும் உயர்வு ஆகும். இந்த உயர்வின் விளைவாகப் பள்ளிக்கு வரக்கூடிய வயதுடையவர்களின் எண்ணிக்கை கூடுதலானது மட்டுமல்ல; அவர்களின் வயதுத் தொகுதியிலும் மாறுதல் ஏற்பட்டது. 5 முதல் 17வரை உள்ள வயது படைத்தவர்களின் எண்ணிக்கையில், 1946 முதல் 1950-க்குள், ஒரு மில்லியனுக்குமேல் உயர்வு ஏற்பட்டது.

இந்த உயர்வின் பளு முழுவதும் முதலில் தொடக்கப் பள்ளிகளின்மீதே விழுந்தது. ஏனென்றால் 1930ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளில் குறைந்த அளவு பிறப்பு வீதமே இருந்த காரணத்தால் போருக்குப் பிந்திய உடனடி ஆண்டுகளில் உயர்நிலைப் பள்ளிக் கல்வியைப் பெறக்கூடிய வயதுடையோரின் எண்ணிக்கை குறைவாகவே இருந்தது. ஆனால் 1950ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளில் குழந்தைகளாக இருந்தவர்கள் உயர்நிலைப் பள்ளிக் கல்வியைப் பெறக்கூடிய வயதுடையவர்களாக வளர்ந்துவிட்டதால், அந்த ஆண்டுகளில் உயர்நிலைப் பள்ளிகளின் வசதிகளையும் விரைவாக விரிவுபடுத்தவேண்டிய தேவை ஏற்பட்டது. அதே நேரத்தில் தொடக்கப் பள்ளிகளின்மீது சுமத்தப்படவேண்டிய பளுவும் தொடர்ந்து கூடுதலாகியபடி இருந்தது. விரிவான கல்வி வசதிகள் எல்லா வட்டாரங்களுக்குமே தேவையாக இருந்தன என்ற போதிலும், மக்கள் தொகை வளர்ச்சியில் தலத்திற்குத் தலம் ஏற்பட்ட மாறுதல்கள் காரணமாக வெவ்வேறு தலத்திற்குத் தேவைப்பட்ட கல்வி வசதியின் அளவு வெவ்வேறாக இருந்தது. போருக்குப் பிந்திய காலத்தில் பிறப்பு வீதத்தின் உயர்வு தொடர்ந்து இருந்து கொண்டிருப்பதால் உடனடியான எதிர்காலத்தில் கல்விச் செலவின் விரிவும் தொடர்ந்து இருக்கத்தான் செய்யும்.

**நகர்மயமாதல் (Urbanisation):** நகரப்பகுதிகளில் மக்கள் திரண்டு குவிவது, அரசாங்கப் பணிகளில் ஆழமான வளர்ச்சி—அகலமான வளர்ச்சி ஆகிய இரண்டையுமே ஒருசேர உண்டாக்கும் ஒரு பொதுக் காரணமாக அமைந்துவிடுகிறது. பெருந்திரளான மக்களை ஒரே இடத்தில் குவிக்கும் நகர வளர்ச்சியின் காரணமாகத் தல அரசாங்கங்களும் ஏனைய அரசாங்கங்களும் நெடுங்காலமாகச் செய்துவரும் பணிகளுக்கானத் தலாசெலவு உயர்ந்துவிட்டிருக்கிறது. எடுத்துக்காட்டாக ஒரு வட்டாரத்தின் மக்கள்திரள் பெருகிவிடும்போது, சாலை அமைப்புப் பணியையோ, போலீஸ் பணியையோ, பொதுமக்களுக்கானக் கல்விப் பணியையோ சிறிய அளவில் செய்வது, இயலக்கூடிய ஒன்றா? பேரளவில் திரண்டுவிட்ட மக்களிடத்தில் போலீஸ் பணியை அனைவரும் ஏற்கத்தக்க வகையில் ஆற்றவேண்டுமானால் தனிப்பெருந் திறமை

படைத்ததும் பெரிய அளவுடையதுமான ஒரு போலீஸ் பணித்துறை வேண்டும் அல்லவா? அதுபோலவே, கல்வித்துறையும், தொழில் நுணுக்கப் பள்ளிகள், பரிசோதனைப் பள்ளிகள் முதலிய பலவகைக் கல்வி நிலையங்களைக் கொண்டதாகவும் சிறப்பாற்றல் மிக்கதாகவும் ஆகவேண்டும். சாலைகள் முன்னிலும் மிகுந்த எண்ணிக்கையும் சிறந்த தன்மையும் படைத்தனவாகத் தேவைப் படுவதால், போக்கு வரத்துக் கட்டுப்பாடு அவசியமாகிறது. சாலைகளைப் பழுதுபார்த்தல் அடிக்கடி நடத்தப்பட வேண்டியதாகிறது.

நகர வாழ்க்கையின் நிலைமைகள் காரணமாக, அரசாங்கம் தான் வழிவழியாகச் செய்துவரும் இத்தகைய பணிகளை மேலும் விரிவாகச் செய்வதோடு நில்லாமல், பல புதிய பணிகளையும் ஆற்றவேண்டியிருக்கிறது. மக்கள் நெருக்கமாகத் திரண்டு குவியும் பகுதிகளில் புதிய பணிகளை ஆற்றத்தானே வேண்டும்? பொதுமக்களின் உடல்நலத்திற்கும் நல்வாழ்வுக்கும் தேவையான நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டிய கடமை தல அரசுகளுக்கு இயல்பாக ஏற்பட்டுவிடுகிறது. உணவையும் அது வழங்கப்படும் நிலைமைகளையும் பரிசோதிப்பது, மக்கள் உடல்நலத்திற்கான திட்டங்களைப்பற்றி ஆராய்ந்தறிவது, தேவையான திட்டங்களைக் கையாள்வது, மருத்துவ மனைகளை அமைப்பது, நிர்வகிப்பது, வசதியற்ற மக்களுக்குச் சிறிய மருந்தகங்களை ஏற்படுத்துவது, விளையாட்டுத்திடல்கள் அமைப்பது, முறைப்படுத்தப்பட்ட பொழுது போக்கு வசதிகளை உருவாக்குவது, முதியோர்கல்வி அளிப்பது ஆகியவை நகரங்களின் வளர்ச்சி காரணமாக அரசுகள் மேற்கொள்ளவேண்டிய பணிகளுக்கான எடுத்துக்காட்டுகள் ஆகும்.

நகரங்களின் வளர்ச்சி காரணமாகத் தல அரசாங்கங்களின் தலா செலவில் ஏற்படுகிற மாறுதல்களைப் புள்ளிவிவரங்கள் வாயிலாக விளக்கமுடியும்; கீழே உள்ள 6-ஆவது அட்டவணையில் அவ்வாறே விளக்கப்பட்டிருக்கிறது.

## அட்டவணை 6

**பல்வேறு அளவுள்ள நகரங்களின் தலா பொதுச் செலவு—1956**

| மக்கள் தொகுதி | நகரங்களின் எண்ணிக்கை | தலாபொதுச் செலவு (டாலர் கணக்கில்) |
|---|---|---|
| 1,000,000 அல்லது அதற்குமேல் | 5 | 148·21 |
| 500,000 — 1, 000,000 | 13 | 122·69 |
| 250,000 — 500,000 | 23 | 96·74 |
| 100,000 — 250,000 | 65 | 96·53 |
| 50,000 — 100,000 | 126 | 89·16 |
| 25,000 — 50,000 | 649 | 84·70 |
| 25,000 க்குக் கீழ் | 16,297 | 45·98 |

ஐக்கிய அமெரிக்கா சென்சஸ் பீரோவின் Compendium of city Government Finances in 1956 என்னும் நூலிலிருந்து திரட்டப்பட்ட புள்ளி விவரங்கள் இவை. 25,000க்குக் குறைந்த மக்கள் தொகையுடைய நகரங்களின் தலா செலவு குறைந்த அளவில் இருப்பதற்கு மிகுந்த முக்கியத்துவம் தருவதில் விழிப்பாக இருக்கவேண்டியது இன்றியமையாதது. மாதிரிகளை வைத்துக் கணக்கிடுவதில் ஏற்படும் தவறுகளுக்கு (sampling errors) இந்தப் புள்ளி விவரங்கள் உள்ளாகி இருக்கக்கூடும். அதைவிட முக்கியமாக, தலப் பணிகள்—குறிப்பாகக் கல்விப் பணி—தனியாக இருப்பவையும், ஏறத்தாழ தன்னுட்சியுரிமை படைத்தவையு மான சிறப்பு மாவட்ட அமைப்புகளால் (special districts) நடத்தப்படக்கூடும்.

தல அரசாங்கங்களின் அளவு பெருகப் பெருக அவற்றின் தலா செலவு பெருகுவதற்கு இலஞ்சம், ஊழல், திறமையின்மை முதலியவைதான் காரணம் என்று கருதப்படக்கூடாதே என்ப தற்காக ஓர் எச்சரிக்கைமொழி தேவையாகிறது. நகர வளர்ச்சியின் விளைவாகச் செலவு உயர்வதற்கு உரிய உண்மைக் காரணம், வட்டார அரசுகள் வளர்ச்சியின் காரணமாகப் பணிகள் பலவற்றை மிக விரிவான அளவில் செய்யவேண்டியிருப்பதும், புதிய தொண்டுகள் மேற்கொள்ளவேண்டி இருப்பதும்தான். இதில் சிறிதும் ஐயமில்லை. ஒரு பெரிய நகராட்சி மன்றம் தன் குடிகளுக்காகச் செய்யக் கூடிய பணிகள் பல இருக்கின்றன. அப் பணிகளை அம் மன்றம் செய்யாதிருந்தால், குடி மக்கள் அநேகமாக மிகுந்த செலவுடனும், குறைந்த மனநிறைவுடனும் தாமே அவற்றைச் செய்யவேண்டி வரும். பொதுமக்களுக்குத் தண்ணீர் வழங்குதல், சாக்கடைத் திட்டம், பொது நூல்நிலையங்கள், உடல்நல வசதிகள் முதலிய வற்றைத் குடிமக்கள் தனித் தனியே தேடிக்கொள்வதைவிட நகராட்சிமன்றத்தால் அவை நிறைவேற்றப் படும்போது, ஐயமற அவற்றால் சமுதாயத்திற்கு ஏற்படும் செலவு குறைகிறது என்பதுடன் அவற்றின் நோக்கங்களும் மிகுந்த அளவில் நிறைவேறுகின்றன. ஓர் அரசாங்கம் எந்த அளவுக்கு அதிகத் தொகைகளைக் கையாள வேண்டி நேரிடுகிறதோ அந்த அளவுக்கு ஊழலுக்கும் திறமையின் மைக்கும் அதிக வாய்ப்புகள் ஏற்படுகின்றன என்பதில் ஐயமில்லை. ஆனால் அதே நேரத்தில் அதிகத் தொகைகளைக் கையாள்கிற நிலைமை இருப்பதால் அத்தகைய அரசுகள் பல்வேறு துறைகளிலும் வல்லுநர்களை வேலைக்கு அமர்த்திக்கொள்ள முடிகிறது என்பதை யும் நாம் நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும். அது மட்டும் அல்ல, அரசாங்கப் பணியினரைத் தேர்ந்தெடுத்தற்குரிய திட்ட முறைகளையும் தர அளவுகளையும் உருவாக்குகிற நிலைமையும் தேவையும் அத்தகைய அரசுகளுக்குத்தான் ஏற்படுகிறது. செய்தித் தாள் களில் பரபரப்பாக வெளியிடப்படுகிற நகராட்சிமன்ற ஊழல் கள் பெரிய நகராட்சி மன்றங்களில்தான் பெரும்பாலும் நெளி கின்றன. ஆனால் அவ்வாறு ஊழல்களுக்கு உள்ளாகிற நிதிகளின்

தொகை, சில சமயங்களில் அதிகமாக இருந்தாலும், நகராட்சி மன்றங்களின் மொத்தச் செலவோடு ஒப்பிடும்போது அது பெரும்பாலும் சிறிய அளவினதாகவே இருக்கிறது. திறமையைப் பொறுத்தவரை பெரிய நகராட்சி மன்றங்களைவிட சிறிய நகராட்சி மன்றங்களில் வீணுவது வீதாச்சாரப்படிக் குறைவாக இருக்கிறது என்று மெய்ப்பித்துக் காட்டுவது கடினம்.

**அரசாங்கப் பணிகளின் அகலமான வளர்ச்சி (Extensive Expansion of Governmental Functions)**

2ஆவது அட்டவணையின் 4ஆவது பத்தியில் சுட்டிக்காட்டப்பட்டிருப்பதற்கு இணங்க, அரசாங்கப் பொருளாதாரத்தின் வாழ்க்கைத் தர உயர்வு, நாட்டின் மொத்த ஆக்கத்தின் உயர்வைவிடக் கூடுதலாகவே இருந்துவருகிறது. எல்லா நிலைகளில் உள்ள அரசாங்கங்களும் தங்களுடைய குடிமக்களுக்கு மேலும் மேலும் வசதிகளைச் செய்து வருகின்றன. கூடுதலான இந்த வசதிகளையெல்லாம், பொதுவாக உயர்ந்த தரத்திலேயே அரசாங்கங்கள் செய்துதருதல் வேண்டுமென்று குடி மக்கள் கேட்டுக்கொண்டிருப்பதால் — அல்லது, இவ்வசதிகளை ஏற்றுக்கொண்டிருப்பதால், தனியாரால் உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்களுக்கும் ஊழியங்களுக்கும் ஏற்பட்டுள்ள விழைவுகளின் வளர்ச்சிவேகத்தைவிட அரசாங்கப் பண்டங்களுக்கும் ஊழியங்களுக்கும் ஏற்பட்டுள்ள விழைவுகளின் வளர்ச்சிவேகம் மிகுதியாக இருக்கிறது என்று நாம் முடிவு செய்யலாம். ஓர் எளிய எடுத்துக்காட்டு, பெட்ரோல் வரிகளைச் செலுத்துபவர்கள், நடைமுறையில், அந்த வரிப் பணத்தைக்கொண்டு அங்காடியில் வாங்கியிருக்கக்கூடிய வேறு பண்டங்களைவிட நெடுஞ்சாலைகளின் பயனைத் தேர்ந்தெடுத்து இருக்கிருர்கள் என்றுதான் கருதவேண்டும். இருப்பினும் நெடுஞ்சாலைகளும் தின் பண்டமும் முழுமையாகத் தெளிவான வரையறுத்தத் தேர்ந்தெடுப்பு அல்ல. ஆனல் நுகர்வோர் (consumers) தங்கள் வருமானத்தைப் பல்வேறு பண்டங்களை வாங்குவதற்காக ஒதுக்கும்போதும் அவர்கள் (குறிப்பிட்ட தொகையைக் கொண்டு) என்னென்ன மாற்றுப் பண்டங்களை வாங்கமுடியும் என்பது அவர்களுக்குத் தெள்ளத் தெளிவாக விளக்கப்படுவதில்லை. கலப்புத் தொகுதியாக உள்ள பல்வேறு மாற்றுப்பண்டங்களிலிருந்துதான் நுகர்வோர் தாங்கள் வாங்கவேண்டிய பண்டங்களைத் தேர்ந்தெடுக்க வேண்டியிருக்கிறது. சில எடுத்துக்காட்டுகள் : பெட்ரோல் வரி செலுத்துபவர், பெட்ரோலோடு சேர்த்து நெடுஞ்சாலைகளையும் (அவற்றின் பயனை) வாங்கவேண்டி யிருக்கிறது. ஒரு வீட்டை வாங்குபவர், அவர் செலுத்துகின்ற சொத்துவரிகள் மூலமாக நெருப்பிலிருந்து வீட்டைப் பாதுகாத்துக்கொள்ளும் ஏற்பாட்டையும் சேர்த்துத்தான் வாங்குகிருர். திருட்டிலிருந்து பாதுகாக்கும்

இன்சூரன்ஸ் பாலிசியை வாங்குபவர், அந்த பாலிசியின் அமைப்பு முறை காரணமாக (அவர் விரும்பாத) வேறு சில பாதுகாப்பு ஏற்பாடுகளையும் சேர்த்து வாங்குகிறார். ஒரு நல்ல திரைப்படத்திற்கான நுழைவுச் சீட்டை வாங்குபவர், அதனோடு சேர்த்து காட்டப்படக் கூடிய துணைப்படம் ஒன்றைப் பார்ப்பதற்கான சலுகையையும் சேர்த்தே வாங்குகிறார். ஒன்றை ஒன்று நிறைவு செய்யும் தன்மை படைத்தனவாக (complementary nature of goods) இருக்கின்ற காரணத்தாலும், வேறு சில காரணங்களாலும் ஒன்றாக இணைக்கப்பட்ட நிலையிலேயே பல பண்டங்களை வாங்கவேண்டியிருக்கிறது. ஆகவே, அரசாங்கப்பண்டங்களை வாங்குவதா தனியார் பண்டங்களை வாங்குவதா என்பதுபற்றிய தேர்ந்தெடுப்பு (choice) தெளிவாகவும் எளிதாகவும் இல்லாவிட்டாலும், பெரும்பாலான மக்கள், அரசாங்க நடவடிக்கைகளின் அளவு விரிந்து கொண்டே வருவதை ஏற்றுக்கொண்டுவிட்டார்கள் என்பது தெளிவு. அப்படிப்பட்ட முடிவுக்கு வருகையில், அவர்கள், ஏறத்தாழ, அங்காடிப் பகுதியில் பண்டங்களை வாங்குவதற்குப் பயன்படுத்துகிற அதே திறமைகளைத் தான் பயன்படுத்துகிறார்கள்.

**பொருளாதார மந்தத்திலிருந்து பிறந்த பணிகள் (Depression–born Functions):** 1930ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளில், அரசாங்கத்தின் ஒத்துக்கொள்ளப்பட்ட பட்டியலில் பல பெரிய இனங்கள் சேர்க்கப் பட்டிருக்கின்றன. அந்தக் காலத்தில் இருந்த கடுமையான நீண்ட பொருளாதார மந்தமானது, பொருளாதாரத் துறையில் அரசாங்கம் தலையிட வேண்டியதன் தேவையை உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளக்கிக் காட்டியதன் வாயிலாகவும், கூட்டரசு, மாநிலஅரசு, தல அரசு ஆகிய மூன்று நிலைகளிலும் தாராளக் கருத்துடைய அரசாங்கங்களை (liberal governments) ஆட்சிக்குக் கொண்டுவந்ததன் மூலமாகவும், அரசாங்கப் பணிகளின் குறிப்பிடத்தக்க விரிவைத் துரிதப்படுத்திய பெருங்கருவியாக விளங்கியது.

தொழில், வேளாண்மை ஆகியவற்றிற்கும், தொழிலாளருக்கும் ஊக்கம் அளித்தல்; நாட்டுப் பொருளாதாரத்தின் மீதுள்ள கட்டுப்பாடுகளை விரிவுபடுத்துதல் ; பொதுநல மேம்பாட்டுக்கான ஏற்பாடுகளைச் செய்தல் — இந்த மூன்று முதன்மையான துறைகளிலும் அரசாங்கங்கள் அந்தக் காலத்தில் புதிய பொறுப்புகளை ஏற்றுக் கொண்டன.

வணிகத் துறை, வேளாண்மைத் துறை, உழைப்பாளர் துறை ஆகியவற்றை நிறுவியதன் வாயிலாக, நாட்டுப் பொருளாதாரத்தின் குறிப்பிட்ட பகுதிகளுக்குப் பொதுப்படையான ஊக்கமூட்டும் ஏற்பாடு, 1930ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளுக்கு முன்னரே

நடைமுறைக்கு வந்துவிட்டது. புள்ளி விவரம் அல்லது தொழில் நுணுக்கம்பற்றிய தகவல் அளிப்புப் பணி நெடுங்காலமாகவே அரசாங்கத்தால் ஆற்றப்பட்டு வந்தது. இத்தகைய பொதுவான பணிகளைத் தவிர்த்துப் பார்த்தால், பொருளாதார வளர்ச்சிக்காக அரசாங்கம் அக் காலத்தில் ஆற்றிய பணிகள், சுங்க வரிகள் மூலம் தொழில்களைப் பாதுகாக்கும் முயற்சியும், வேளாண்மைத் துறையில் ஏற்றுமதி உதவிக் கொடைகளும் (export subsidies) வேளாண்மைக் கல்லூரிகளுக்கு நிலமும் பணமும் கொடையாக வழங்கியதுமே ஆகும்.

1930ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளில், தொழில், வேளாண்மை; தொழிளாலர் ஆகிய துறைகள் ஒவ்வொன்றிலும் அரசாங்கத்தால் மேற்கொள்ளப்பட்ட ஊக்கமூட்டும் ஏற்பாடுகளுக்கு ஏராளமான எடுத்துக்காட்டுகள் தர இயலும். நாட்டின் தொழில் மீட்சிச் சட்டம் (The National Industrial Recovery Act) தொழில் அதிபர்களிடமிருந்து கூலிகளையும் வேலையையும் கூடுதல் ஆக்குவதாக உறுதிமொழியைப் பெற்றுக்கொண்டு, அதற்கு ஈடாக, விற்பனைக் குறைவைத் தடுக்கும் முறையில் முற்றுரிமை நடைமுறைகளைக் (monopolistic practices) கையாளும் உரிமையை அவர்களுக்கு வழங்கியது. முதலின அங்காடிகளில் (capital markets) ஏற்பட்ட பீதி நிலைமையை பாங்குகள் தாராளமாகக் கடன் வழங்கும் ஏற்பாட்டால் தக்க முறையில் மாற்றிவிட முடியும் என்று நம்பப்பட்டது. வியாபாரத்தை இறுக்கிப் பிணிக்கத் தொடங்கிவிட்ட பணச் சுருக்கத்தின் பிடியை (deflationary grip) பாங்குகள், இன்சூரன்ஸ் கம்பெனிகள், இரயில்வேக்கள், ஏனைய தொழில் நிறுவனங்கள் ஆகியவற்றிற்கு மறு அமைப்பு நிதிக் கார்ப்பரேஷன் (Reconstruction Finance Corporation) மூலம் தரப்பட்ட கடன்கள் வாயிலாகத் தளர்த்திவிட முயற்சிசெய்யப்பட்டது. பல்வேறு கட்டிட அமைப்புத் திட்டங்களைப் போலவே, பொதுப் பணித் திட்டங்களும், கட்டுமானத் தொழில்களுக்குக் குறிப்பிடத்தக்க அளவு உதவிபுரிந்துள்ளன. வேளாண்மைக் கடன் நெருக்கடியைத் தணிப்பதற்காகவும், பயிரிடுவதைத் திட்டமிட்டுக் குறைப்பதன் வாயிலாக விலைகளை உயர்த்துவதற்காகவும், நில அரிப்பைக் குறைப்பதற்காகவும் நிறைவேற்றப்பட்ட பல்வேறு வேளாண்மைச் சட்டங்கள், நீண்டகாலத் தொல்லைகளை அல்லது குறுகியகாலத் தொல்லைகளைத் தீர்த்துவிடுவதற்காக அல்லது குறைத்துவிடுவதற்காகவே நிறைவேற்றப்பட்டன. தொழிலாளர் துறையில், தொழிளாலர்களுடைய கூட்டு பேர ஆற்றலைப் பலப்படுத்துவதையும் வளர்ப்பதையுமே நோக்கமாகக் கொண்டு, நாட்டுத் தொழிலாளர் உறவுச் சட்டம் (The National Labour Relations Act) கொண்டு வரப்பட்

டது. அரசாங்க வேலை ஊழியத் திட்டம், வேலையின்மை இழப்பு ஈடு, முதிர்ந்த வயதினர் மற்றும் எஞ்சி இருப்போருக்கான ஆண்டுத் தொகைகள் (old age and survivor annuities) ஆகிய திட்டங்கள், சிறப்பாகத் தொழிலாளரின் நன்மைக்காகவே, ஆனால் மறைமுகமாகத் தொழில்களுக்கும் நன்மை பயக்கத்தக்க வகையில் உருவாக்கப்பட்டன.

1930 ஐத் தொடர்ந்த சில ஆண்டுகளில் காட்சியளித்த பொருளாதார மந்தத்திற்கு முன்னால் அரசாங்கம் மேற்கொண்ட ஒழுங்குபடுத்தும் அல்லது கட்டுப்படுத்தும் பணிகள் பெரும்பாலும் பொருளாதாரத் துறையைச் சாராதனவாகவே இருந்தன. போலீஸ் மற்றும் நீதித்துறைப் பணிகள், பரந்துபட்ட அடிப்படைச் சமூக உரிமைகளைப் பாதுகாக்கும் தன்மையனவாகவே இருந்தன. பொருளாதாரத் துறையைப் பொறுத்தஅளவில், இரயில்வேக்கள் மற்றும் பொது வசதி நிறுவனங்களின் (public utility concerns) கட்டண விகிதங்களையும் கட்டுப்படுத்துதல், உணவுப் பொருள்கள், மருந்துகள் ஆகியவற்றின் தூய்மையை நிலைநாட்டும் நிர்வாகம், உணவுக் கண்காணிப்பு, முற்றுரிமைகளைத் தடுப்பதற்கும் அழிப்பதற்கும் எடுத்துக்கொள்ளப்பட்ட அவ்வளவாகப் பயன்தராத முயற்சிகள் ஆகிய இந்த அளவில்தான் அரசாங்கக் கட்டுப்பாடு இருந்தது. ஆனால், பொருளாதாரமந்த காலத்தில் கட்டுப்பாட்டுப் பணி பெரிய அளவில் விரிவடைந்தது. அரசாங்கத்தின் பொருளாதார மந்த எதிர்ப்புக் கொள்கையின் நோக்கம் பொருளாதார மீட்சியா அல்லது சீர்திருத்தமா என்கிற கேள்வி பலருடைய உள்ளங்களைக் குடைகிற அளவுக்கு அரசாங்கக் கட்டுப்பாடுகள் மிகப் பல துறைகளில் படையெடுத்தன; மிக விரைவாக ஓங்கி வளர்ந்தன. தங்கள் தொழிலாளர்கள்மீது தொழில் அதிபர்களுக்கு இருந்த அதிகாரங்கள் பெரிய அளவில் குறைக்கப்பட்டன. கார்ப்பரேஷன்கள் புதிய பங்குகளை வழங்குவதில் கண்டிப்பான கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. பங்கு மார்க்கெட்டில் வணிக பாங்குகள் தலையிட முடியாதபடி நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டன. பல மாநிலங்களுக்கிடையே ஓடும் மோட்டார்வண்டிகளின் போக்குவரத்துக் கட்டணங்கள் பல மாநில வணிகக் கமிஷனின் (Interstate commerce commission)கட்டுப்பாட்டின்கீழ்க்கொண்டுவரப்பட்டன. அயல்நாட்டு வாணிபத்தில் ஈடுபட்டுள்ள கப்பல்களுக்கும் கட்டுப்பாட்டுத் திட்டம் ஒன்று வகுக்கப்பட்டது. தந்தி வழியாகவும், வானொலி வழியாகவும் பல மாநிலங்களுக்கு இடையேயும், வெளிநாடுகளோடும் செய்தி அறிவிப்பில் (communications) நிகழும் வாணிபத்தைக் கட்டுப்படுத்தும் உரிமை கூட்டரசாங்கச் செய்தித் தொடர்புக் கமிஷனுக்குத் (The Federal Communications Commis-

sion) தரப்பட்டது. பல மாநிலங்களுக்கிடையே வாணிபம் செய்து வந்த மின்சாரவசதி நிறுவனங்கள் மீதும் கூட்டரசாங்கக் கட்டு திட்டம் உருவாக்கப்பட்டது.[10]

அரசாங்கக் கட்டுப்பாடுகளின் விரிவானது, பொதுவாகப் பொருளாதாரச் சுரண்டலைத் தடுக்கும் முறையிலேயே அமைந்திருந்தது. எங்கெங்கே பொருளாதாரச் சக்தியானது பொது மக்களின் நன்மைக்கு மாறுன முறையில் பயன்படுத்தப்பட்டதோ அல்லது எங்கெங்கே அச் சக்தி, மக்கள் சமூகங்களின் அல்லது வகுப்புகளின் நலனுக்கு ஊறு தேடத்தக்க வகையில் கையாளப் பட்டதோ அங்கங்கே அரசாங்கம் தலையிட்டு, ஒழுக்க விதிகளை உருவாக்கவேண்டிய தேவை ஏற்பட்டது. பொருளாதாரச் சுரண்டல் இருந்த ஒவ்வோர் இடத்திலும் அரசு தலையிட்டது என்று சொல்லமுடியாவிட்டாலும், பொருளாதாரக் கொந்தளிப்பு மிகுந்த அந்தக் காலத்தில் (1930ஐத் தொடர்ந்த ஆண்டுகளில்) அரசாங்கத்திற்கு விறு விறுப்பு மிகுந்த பொருளாதார உணர்ச்சி ஏற்பட்டுவிட்டது என்பது உண்மை.

பிற அரசாங்கப் பணிகளோடு ஒப்பிடும்போது கட்டுப்பாட்டுப் பணிகளின் செலவு குறைவானதே. அவற்றை நிறைவேற்று வதற்குத் தேவையான நிர்வாகப் பணியாளர் தொகுதி விரிவான தாக இருக்கலாம். ஆனுல் பொருள்களுக்காகச் செலவிடவேண்டிய தொகையோ, பணக் கொடையாக வழங்கவேண்டிய தொகையோ குறைவுதான். கட்டுப்பாட்டிற்குரிய செலவின் பெரும்பகுதியைக் கட்டுப்பாட்டிற்கு ஆளாகிற நிறுவனமே ஏற்றுக்கொள்கிறது என்பதையும் இச் சமயத்தில் நாம் நினைவுகூர்தல் வேண்டும்.[11] ஆனுல் தொழில், வேளாண்மை முதலியவற்றை மேம்படுத்துவதற்கும், வளர்ப்பதற்கும் ஆன பணிகளுக்குக் கடன்கள், நலனுக்காக செலுத்தல்கள் (benefit payments), பண்டங்களை வாங்குதல் ஆகிய முறைகளில் ஏராளமாகச் செலவிடவேண்டி யிருக்கிறது. அண்மைக் காலத்தில் வளர்ச்சிபெற்றுள்ள அரசாங்கத் துறைகளில் மூன்ருவதாகிய பொதுநலனை மேம்படுத்துதல் என்பதற்கு, பணக் கொடைகளை அளிப்பதும், பொதுப் பணிகளை நிறைவேற்றுவதும் இன்றியமையாதன ஆகும். நேரடியாக உதவிபெறும் ஆட்களின் எண்ணிக்கையை வைத்துப் பார்த்தால், பொதுநல மேம்பாட்டுப் பணிகள், பொதுவாக மிகுந்த செலவுடையவையே.

ஏதாவது ஒரு வகையில் வசதிக் குறைவாக வாழும் மக்கள் தொகுதிக்கு அல்லது வகுப்புக்கு வசதிகளைச் செய்துதருவதே பொதுநல மேம்பாட்டுப் பணியின் நோக்கம். மேற்படி வசதிக் குறைவானது, அம் மக்களின் வருமானம் மிகக் குறைவாக இருப்ப

தால் ஏற்பட்டிருக்கலாம். அல்லது போதுமான கல்வியறிவு அல்லது தொழிற்பயிற்சி இல்லாமை, தற்காலிக வேலையின்மை, வயது முதிர்ச்சி—உடல் உறுப்புகளின் ஊனம்—முதலிய காரணங்களால் சம்பாதிக்கும் ஆற்றலை இழந்திருத்தல், தன் தற்காலச் செலவுக்குத் தேவையான ஏற்பாடுகளை முந்தைய ஆண்டுகளில் செய்து வையாமை முதலிய காரணங்களில் ஏதேனும் ஒன்றால் ஏற்பட்டிருக்கலாம். 1933க்கு முன்னால் பொதுநல மேம்பாட்டுப் பணியைப் பெரும்பாலும் மாநில—வட்டார அரசாங்கங்களே செய்து வந்தன. இத் துறையில், அந்த அரசுகள், பொழுதுபோக்கு வசதிகளை அமைத்தல், தொழிலாளரின் இழப்பு ஈட்டுத் திட்டங்களை நடத்துதல் (workmen's compensation plans), 'வயது முதிர்ந்தோர் இல்லங்களில்' (old folks homes) வாழும் சில ஏழை முதியவர்களுக்கு நிவாரணம் அளித்தல் ஆகிய பணிகளை நெடுங்காலமாக ஆற்றி வந்தன. 1931-ல் வேலையின்மை நெருக்கடிக் கட்டத்தை அடைந்தபோது வேலையில்லாதோரின் நேரடி நிவாரணத்திற்காக, மாநில அரசாங்கங்களும் தல அரசாங்கங்களும் அதற்கு முன்னர் எப்போதும் செலவிடாத அளவு பெருந்தொகைகளைச் செலவிட்டன. 1930ஐத் தொடர்ந்த உடனடி ஆண்டுகளில் அத்தகைய நிவாரணச் செலவில் பெருத்த உயர்வு ஏற்பட்டதாலும், அதே சமயத்தில் மாநில, தல அரசுகளின் வருவாயில் பெருங் குறைவு ஏற்பட்டதாலும், அந்த இரு வகை அரசுகளின் (குறிப்பாக தல அரசுகளின்) நிதிநிலையில் நெருக்கடி ஏற்பட்டு, நிவாரணச் செலவின் பெரும் பகுதியைக் கூட்டரசாங்கமே ஏற்கவேண்டிய நிலைமை உருவாகிவிட்டது. நேரடியாக வகுத்து நடத்தப்பட்ட கூட்டரசாங்கத் திட்டங்கள் வாயிலாகவும் மாநில அரசுகளுக்கு அத்தகைய பணிகளுக்கான கொடைகளை வழங்குவதன் வாயிலாகவும், கூட்டரசாங்கம் நிவாரணப் பணியை நடத்தத் தொடங்கியது. கூட்டரசாங்க நல மேம்பாட்டுத் திட்டங்கள், தற்காலிக நிவாரணம் அளிப்பதோடு நில்லாமல், பல நெடுங்கால சமூகப் பாதுகாப்பு ஏற்பாடுகளையும் உருவாக்கின. முதிர்ந்த வயது ஆண்டுத் தொகைகள் (old age ammunities), வேலையின்மை இழப்பீட்டுத் திட்டம் முதலிய சில நிலையான நலமேம்பாட்டுத் திட்டங்களை நடத்துவதற்கு, அத்திட்டங்களில் பங்கேற்பவர்கள் அவர்கள் வேலையிலிருக்கும் காலத்தில் செலுத்துகிற தவணைக் கட்டணங்களால் (premiums) ஓரளவு தொகை கிடைத்தது. உதவிக் கொடைகளாக உள்ள வேறு சில திட்டங்கள் பொது வரிகளால் எழுப்பப்பட்ட நிதிகளிலிருந்தே முற்றிலும் நிறைவேற்றப்பட்டன. அத்தகைய திட்டங்களால் நலனடைவோர், நடைமுறையில், அரசாங்கத்தால் பேணிக் காப்பாற்றப்படுபவர்களாகவே (wards of the state) இருக்கிறார்கள்.

1930ஐத் தொடர்ந்த ஆண்டுகளில் உருவாகிய மூதன்மையான சமூக நலத் திட்டங்களை (social welfare programmes) இரண்டு பொதுப் பிரிவுகளில் அடக்கலாம். (1) வேலையில்லாதோருக்கும் வறுமையில் உழல்வோருக்கும் தனியார் பொருளாதாரத்தில் மீண்டும் வேலை கிடைக்கும்வரை அவர்களுடைய குறைந்த அளவுத் தேவைகளை நிறைவேற்றுவதற்காக அமைக்கப்பட்ட தற்காலிக நிவாரணத் திட்டங்கள் (2) 1935-ல் நிறைவேற்றப்பட்ட சமூகப் பாதுகாப்புச் சட்டத்தில் (Social Security Act) அடங்கிய நீண்ட காலத் திட்டங்கள். இரண்டாவது வகைத் திட்டங்களின் மூலம், குறிப்பிட்ட மக்கள் தொகுதியினருக்கு, அரசாங்கத்தில் நிர்வகிக்கப்படும் இன்சூரன்ஸ் ஏற்பாடுகள் செய்யப்பட்டன; அல்லது நேர்முகமான உதவிமானியங்கள் வழங்கப்பட்டன.

**நிவாரணத் திட்டங்கள் (Relief Programmes):** உதவியைப் பெற்றே வாழவேண்டிய நிலையில் உள்ள தனியாட்களுக்கும் குடும்பங்களுக்கும், சில சமயங்களில் நேரடிக் கொடைகளாகவும், சில சமயங்களில் அரசாங்கப் பணிகளை ஆற்றியதற்கான கூலியாகவும், நிவாரணம் அளிப்பதற்காக .ஏற்படுத்தப்பட்ட நல் வாழ்வுத் திட்டங்களின் மூலம் (welfare programmes) செய்யப்பட்ட செலுத்தல்கள் (payments) கீழே உள்ள 7ஆவது அட்டவணையில் தரப்பட்டுள்ளன.

## அட்டவணை 7

**சமூகப் பாதுகாப்புத் திட்டங்கள் தவிர்த்த பிற கூட்டரசாங்க வேலைத் திட்டங்களின்கீழ்ப் பணிபுரிவோர் பெற்ற ஊதியமும் நிவாரணச் செலுத்தல்களும் (1933—1939 ஆண்டுகளுக்கு *)**

(ஆயிரங்களில்)

| திட்ட விவரம் | மொத்தச் செலுத்தல்கள் (டாலர்களில்) |
|---|---|
| பொது நிவாரணம் (1933—39) | 63,82,259 |
| பண்ணைப் பாதுகாப்பு நிர்வாகம் (பிழைப்பு) (1935–39) | 1,00,437 |
| சிவிலியன் கன்சர்வேஷன் கோர் (1933–39) | 17,33,528 |
| நாட்டு இளைஞர் நிர்வாகம் (1935–39) | 2;53,834 |
| வேலைத் திட்ட நிர்வாகம் (1933–39) | 63,32,222 |
| ஏனைய கூட்டரசாங்க வேலை மற்றும் கட்டுமானத் திட்டங்கள் (1933–39) | 30,21,219 |

* மூலம் : சமூகப் பாதுகாப்பு மன்றத்தின் (Social Security Board) Trends in Public Assistance, 1933-29 என்னும் நூல் (வாஷிங்டன், 1940), பக்கம் 3.

இந்தப் புள்ளிவிவரங்கள் இந்தத் திட்டங்களில் பங்கு பெறும் கூட்டரசாங்கம், மாநில அரசாங்கங்கள், தல அரசாங்கங்கள் ஆகிய எல்லா நிலை அரசாங்கங்கள் செய்யும் செலுத்தல்களையும் குறிக்கின்றன. நிர்வாகம், பொருள்கள், கருவிகள் ஆகியவைகளுக்கான செலுத்தல்கள் இந்தப் புள்ளிவிவரங்களில் சேர்க்கப்படவில்லை.

பல நிலைகளில் உள்ள அரசாங்கங்களால், பல திட்டங்களின் கீழ், உதவித் தேவை உள்ளவர்களுக்குத் தரப்பட்ட செலுத்தல்கள் யாவும் 7ஆவது அட்டவணையில் உள்ள ‘பொது நிவாரணம்’ என்ற இனத்தின்கீழ் வருகின்றன. இந்தச் செலுத்தல்கள் அனைத்தும் தனியாட்களின் தேவைக்கு ஏற்பத் தரப்பட்டிருப்பதால், இவை, வேலை நிவாரணச் செலுத்தல்களிலிருந்து மாறுபட்ட நேர்முக நிவாரணச் செலுத்தல்களாக அமைகின்றன (direct relief payments as distinguished from work relief payments). பண்ணைப் பாதுகாப்பு நிர்வாகத்தின் சான்றிதழ் பெற்ற பிழைப்புச் செலுத்தல்களும் (subsistence payments) இதே தன்மையை உடையன. அட்டவணையில் உள்ள பிற இனங்கள் யாவும் வேலை நிவாரணத் திட்டங்களே. பிற்குறித்த திட்டங்களில், தனியாட்களுக்குத் தரப்பட்ட செலுத்தல்கள், ஏறத்தாழ அவரவர்களின் உதவித் தேவைக்கு ஏற்றபடி அவர்களுக்குத் தரப்பட்டுள்ள வேலை நேரத்தையும், கூலி வீதத்தையும் அடிப்படையாகக் கொண்டு நிர்ணயிக்கப்பட்டுள்ளன. வேலைத் திட்ட நிர்வாகம் மேற்கொண்ட வேலை நிவாரணத் திட்டங்களிலிருந்து மாறுபட்ட பொதுக் கட்டுமான திட்டங்களையே பெரும்பாலும் கொண்டதாக அமைந்திருப்பது, அட்டவணையில் உள்ள இறுதி இனம்.

1935ஆம் ஆண்டின் சமூகப் பாதுகாப்புச் சட்டத்தின் பல்வேறு தலைப்புகளின்கீழ் கீழ்க்கண்ட நீண்டகால நல்வாழ்வுத் திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டன:

முதிய வயது மற்றும் எஞ்சியிருப்போர் ஆண்டுத் தொகைகள் (old-age and survivor's annuities)

வேலையின்மை இழப்பு ஈடு

முதிய வயது உதவி

பிறரைச் சார்ந்திருக்கும் குழந்தைகளுக்கான உதவி

கண்பார்வை இழந்தோர்க்கான உதவி

இவற்றில் முதல் இரண்டு ஏற்பாடுகளின் செலவுக்காகத் தனி வரிகள் விதிக்கப்பட்டுள்ளன. முதியவயது மற்றும் எஞ்சியிருப்போர் ஆண்டுத்தொகைத் திட்டம் கூட்டரசாங்கத்தால் நிர்வகிக்கப் படுகிறது. வேலை தருவோர், வேலை செய்வோர் ஆகிய இரு சாரா ரிடமிருந்தும் பெறப்பட்ட வரிகள்மூலம் உருவாக்கப்பட்ட காப் பிருப்பு நிதியிலிருந்து (Reserve Fund)உதவிகள் (benefits) கொடுக்கப் படுகின்றன. வேலையின்மை இழப்பீட்டுத் திட்டம் மாநில அரசு களால் நிர்வகிக்கப்படுகிறது. அதற்குரிய செலுத்தல்கள், வேலை தருவோர் மீதுள்ள வரிகளின் தொகையிலிருந்து தரப்படுகின்றன. இறுதி மூன்று இனங்களும், பொது உதவித் திட்டங்களாகும். அவற்றை, மாநில அரசுகள், தங்கள் நிதிகளிலிருந்தும் கூட் டரசாங்கம் தருகின்ற நிதியிலிருந்தும் கிடைக்கிற தொகையைக் கொண்டு நிர்வகிக்கின்றன. இந்தத் திட்டங்கள் ஒவ்வொன்றின் நிர்வாகச் செலவில் ஏறத்தாழப் பாதி பங்கு கூட்டரசாங்கத்தால் ஏற்கப்படுகிறது. கூட்டரசாங்கத்தின் உதவியுடன் தரப்படுகிற உச்ச அளவு உதவிச் செலுத்தல்கள், மாதம் ஒன்றுக்குக் கீழ் கண்டவாறு அமைந்துள்ளன. முதியவயது உதவி பெறுநர் (recipient) ஒவ்வொரு வருக்கும் 50 டாலர். கண்பார்வை அற்றோருக்கும் அதுபோலவே தலா 50 டாலர். பிறரைச் சார்ந்துள்ள குழந்தைகளுக்கான உதவி— ஒரே குடும்பத்தில் உள்ள முதல் குழந்தைக்கு 27 டாலர்; கூடுதலாக உள்ள ஒவ்வொரு குழந்தைக்கும் 18 டாலர். இவ்வாறு உச்ச அளவு அமைக்கப்பட்டுள்ள ஒவ்வோர் உதவியிலும் கூட்டரசாங்கத்தின் பங்கு 50 சதவீதத்தைவிடச் சற்றே உயர்வாக உள்ளது (குறைந்த அளவு தொகைக்கு 75 சதவீதமும் அதற்குமேல் உள்ள தொகை கட்கு 50 சதவீதமும்).

மேலே குறிப்பிடப்பட்ட சமூகப் பாதுகாப்புத் திட்டங்கள் ஐந்தின்கீழும் தரப்பட்ட உதவிகளின் (benefits)அளவைக் கீழே உள்ள 8ஆவது அட்டவணை தெளிவுபடுத்துகிறது. முதிய வயது மற்றும் எஞ்சியிருப்போருக்கான இன்சூரன்ஸ் திட்டமும் வேலையின்மை இழப்பீட்டுத் திட்டமும் நாடு முழுவதற்குமான அளவில் நிதி ஆண்டு 1936—37 வரையில் தொடங்கப்படவில்லை என்பதை இச் சமயத்தில் நாம் நினைவில் நிறுத்தவேண்டும். சமூகப் பாதுகாப்புச் சட்டம் நிறைவேறுவதற்கு முன்னரே சில மாநில—தல அரசாங்கங் களால் வறுமைவாய்ப்பட்ட முதியோர், பிறரைச் சார்ந்துள்ள குழந்தைகள், பார்வையிழந்தோர் ஆகியோருக்கு உதவிகள் தரப் பட்டுவந்தன என்றாலும், இந்தச் சட்டம்தான் அந்த உதவித் தொகைகளின் அளவைப் பெரிதும் உயர்த்தி, அத் திட்டங்கள் நாடு முழுவதிலும் நடைமுறைக்கு வரும்படிச் செய்தது.

## அட்டவணை 8

### முதிய வயது இன்சூரன்ஸ், வேலையின்மை இழப்பு ஈடு, முதிய வயது உதவி, பிறரைச் சார்ந்து வாழும் குழந்தைகளுக்கு உதவி, பார்வையற்றோருக்கு உதவி ஆகிய ஏற்பாடுகளுக்கான கூட்டரசாங்க—மாநில அரசாங்கத் திட்டங்களின்படித் தரப்பட்ட உதவிச் செலுத்தல்கள் (Benefit Payments)—1936—1956க்கு*

| ஏற்பாட்டின் வகை | செலுத்தப்பட்ட மொத்த உதவிகள் (மில்லியன் டாலரில்) |
|---|---|
| முதிய வயது மற்றும் எஞ்சியிருப்போர் இன்சூரன்ஸ் (கூட்டரசு) | 25,396 |
| வேலையின்மை இழப்பு ஈடு (கூட்டரசும்-மாநில அரசும்) | 17,198 |
| முதிய வயது உதவி (கூட்டரசும் மாநில அரசும்) | 20,265 |
| பிறரைச் சார்ந்துள்ள குழந்தைக்கு உதவி (கூட்டரசும் மாநில அரசும்) | 6,674 |
| பார்வையற்றோருக்கு உதவி (கூட்டரசும் மாநில அரசும்) | 823 |

*இப் புள்ளி விவரங்கள், Statistical Supplement to the Social Security Bulletin, 1956 என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டவை.

முதிய வயது மற்றும் எஞ்சியிருப்போருக்கான இன்சூரன்ஸ் திட்டப்படி 1950 வரை கொடுக்கப்பட்ட மொத்த உதவிச் செலவு ஏறத்தாழ 5 மில்லியன் டாலராக மட்டுமே இருந்தது. ஆனால், 1950க்குப் பிறகோ அச் செலவு மடமடவென உயர்ந்துவிட்டது. இத் திட்டம் முழுவதும் ஆக்சுவேரியல் அடிப்படையில் (actuarial basis) அமைக்கப்பட்டுள்ளது. உழைப்பாளர்கள்மீதும், அவர்களுக்கு வேலை தருவோர்மீதும் இத் திட்டச் செலவிற்கென்றே குறித்து விதிக்கப்பட்டுள்ள வரிகள்மூலம் தற்கால உதவிகள் தரப்படுவது மட்டுமன்றி, எதிர்காலத்திற்காகக் காப்பிருப்பு நிதி ஒன்றும் உருவாக்கப்படுகிறது. மக்களின் சராசரி வயது உயர்வு காரணமாக மக்கள் தொகையில் 65க்கு மேற்பட்ட வயதுடையோரின் சதவீதம் உயர்ந்துகொண்டே வருவதாலும், தாராளமாக உதவிகளை அளிக்கும் கடந்தகாலப் போக்கு தொடர்ந்து இருந்து வருவதாலும், இனி வரும் ஆண்டுகளில், இத் திட்டத்தின்படித் தரவேண்டிய உதவிகளின் தொகை சிறப்பான அளவில் உயர்வது உறுதி.

வேலையின்மை இழப்புஈட்டுச் செலுத்தல்களின் தொகை, வேலை கிடைப்பதின் நிலைமையைப் பொறுத்து மாறக்கூடிய ஒன்றாகும். முதிய வயது உதவியோ, தொடக்கத்திலிருந்தே ஓர் இடைக் கால ஏற்பாடாகவே கருதப்பட்டுவந்தது. காலப் போக்கில், முதிய வயது மற்றும் எஞ்சியிருப்போரின் இன்சூரன்ஸ் திட்டத்தில் சேர்ந்துள்ள தனியாட்களின் தொகை விரிவடைந்து, பதவியிலிருந்து விலகும் வயதடைந்த ஒவ்வொரு பாட்டாளியும் அத் திட்டத்திலிருந்து ஒழுங்காக உதவித் தொகைகளைப் பெறுகிற நிலை உருவாகும். அந் நிலையில் அந்தத் திட்டத்திலே இணைந்திராத முதியவர்கட்கு மட்டுமே முதிய வயது உதவித் திட்டம் தேவைப்படும். அப்படியிருந்தும் பிற்குறித்த திட்டத்தின் கீழ் வருவோரின் எண்ணிக்கை தற்சமயம் சற்று உயர்ந்தே இருக்கிறது. உதவித் தொகைகளின் அளவு உயர்த்தப்பட்டாலொழிய, பார்வையிழந்தோருக்கும் பிறரைச் சார்ந்து வாழும் குழந்தைகளுக்கும் தரப்படும் உதவிகளின் மொத்தத் தொகை சிறிது காலத்திற்கு இப்போதுள்ள நிலையிலேயே தான் இருக்கும். ஒருக்கால் சமூகப் பாதுகாப்புச் சட்டத்தின் ஏனைய ஏற்பாடுகளால் பிறரைச் சார்ந்த குழந்தைகளின் எண்ணிக்கையே குறையுமானால் மேற்படி மொத்தத் தொகையும் குறைய நேரிடும்.

அரசாங்கத்தின் பொருளாதார மந்த நிவாரண நடவடிக்கைகளும் சமூகப்பாதுகாப்பு ஏற்பாடுகளும் அண்மைக்கால் ஆண்டுகளில் நம் கவனத்தை ஈர்க்கத்தக்க பெருநிகழ்ச்சிகளாக அமைந்த போதிலும் அரசாங்கத்தின் நல்வாழ்வு நடவடிக்கைகள் அவற்றின் அளவோடு முடிந்துவிடவில்லை. 1929-லேயே மாநில அரசுச் செலவில் 10 சத வீதமும், தல அரசுத் செலவில் 4·5 சதவீதமும், அறங்கள், மருத்துவ மனைகள் ஆகியவற்றிற்காகவும், குற்றவாளிகளைத் திருத்தும் பணிக்காகவும் ஒதுக்கப்பட்டிருந்தது. அதற்குப் பின்னரோ, வறியவர்களுக்கான குடும்ப நிவாரணம், உடல்நலம் மற்றும் மருத்துவமனை வசதிகள், உயர்ந்த தரத்தில் உள்ள சாக்கடை வசதிகள் மற்றும் பொழுதுபோக்கு ஏற்பாடுகள் முதலியவற்றை மிக விரிவான அளவில் மாநில—தல அரசாங்கங்கள் மேற்கொண்டிருக்கின்றன. இத் திட்டங்கள் அனைத்திற்கும் கூட்டரசாங்கம் அளித்துவரும் உதவி, குறிப்பிடத்தக்க அளவினதாகும். அதே நேரத்தில் சமூகப் பாதுகாப்புச் சட்டத்தின் பல்வேறு திட்டங்கள், நல்வாழ்வு ஏற்பாடுகள் யாவற்றையும் முறைப்படுத்தி அமைத்திருப்பதோடு, அவற்றின் செலவில் ஒரு பகுதியைக் கூட்டரசாங்கம் ஏற்கும்படியும் செய்திருக்கிறது.

**அரசாங்கச் செலவின் வளர்ச்சிபற்றிய கருத்துகள்**

அண்மைக் காலத்தில் அரசாங்கச் செலவில் ஏற்பட்டுள்ள வளர்ச்சிபற்றிய விவரங்கள் திகைப்பூட்டுவனவாக இருக்கின்றன. பலருக்கு அவை உண்மையிலேயே மனக் கலக்கத்தைத் தருவன வாகவும் இருக்கின்றன. அத்தகைய மனக்கவலை பெரும்பாலும் கீழ்க்கண்ட காரணங்களால் ஏற்படுகிறது :

1. அரசாங்கச் செலவுகள் சமூகத்தின் ஆக்கத்தை வீணாக்கும் தன்மையை இயற்கையிலேயே பெற்றிருக்கின்றன என்னும் ஒரு பொதுக் கருத்து.

2. அரசாங்க நிதியை வாரி வழங்குவதன் வாயிலாக ஆளும் கட்சி தன்னை ஆட்சிப் பீடத்தில் நிலைநாட்டிக் கொள்ளுமோ என்று சிறுபான்மைக் கட்சிக்கு ஏற்படுகிற அச்சம்.

3. அரசாங்கப் பணிகளின் வளர்ச்சியால் தனியார் உரிமை யிலும் தனியார் பொருளாதாரத் துறையிலும் அரசாங்கத்தின் குறிக்கீடு மிகுதியாகிவிடுமோ என்கிற பயம்.

முதலாவது காரணத்தைப் பொறுத்த அளவில், கவலை இரண்டு முனைகளிலிருந்து எழுகிறது. ஒன்று, அரசாங்க நிர்வாகம் இயற்கை யிலேயே திறமையற்றதாகவும் வீணாக்கும் தன்மை படைத்த தாகவும் இருக்கிறது என்பது. மற்றொன்று, எவ்வளவுதான் திறமை யாக நடத்தப்பட்டாலும், அரசாங்க இயந்திரம், இயற்கையாகவே வருமானத்தை அளிக்க முடியாததாகவும் சமுதாயத்திற்கு ஒரு 'சுமை'யாகவுமே இருக்கமுடியும் என்னும் நம்பிக்கை.

வீணாதல், திறமையின்மை ஆகியவற்றைப்பற்றி மிகுதியாகக் கூறவேண்டிய தேவையில்லை. அரசாங்கம் முழுவதிலும் நீக்கமற நிறைந்துள்ள 'மீண்டும் மீண்டும் சரிபார்த்தல்—தடுத்தல்—ஒத்த நிலைப்படுத்தல்' என்னும் ஏற்பாடானது, ஆணை பிறப்பிக்கும் அதிகாரத்தைப் பல அடுக்குகளில் பிரித்து அமைத்து, அதன் விளை வாகச் 'சிவப்பு நாடா' முறையை ஏற்படுத்திவிடுகிறது. சமூகம், சமயம், வாணிபம், அரசாங்கம் ஆகிய எந்தத் துறையைச் சேர்ந்த அமைப்பாக இருப்பினும், அமைப்பு பெரிய அளவுடையதாக இருந்தால் இந்த நிலை ஏற்பட்டுவிடுகிறது. மற்றோர் அதிகாரியைக் கலந்து ஆலோசிக்காமல் ஒருவரே விரைந்து செயலாற்றும் திறமை, சர்வாதிகார அமைப்பு முறையின் தன்மைகளில் ஒன்று. பல பகுதிகளைக் கொண்ட சிக்கலான நிர்வாக இயந்திரத்திலும், நிர்வாகப் போக்கின் ஒவ்வொரு கட்டத்திலும் கணக்குக் காட்ட வேண்டிய நிலையிலும், 'சிவப்பு நாடா', தடுக்க முடியாத ஓர் இயல்பாகவே விளங்கும்.[12]

நாட்டுப் பொருளாதாரத்தின்மீது சுமத்தப்பட்ட ஒரு வீண் சுமையே (dead weight) அரசாங்கம் என்னும் எண்ணம், அரசாங்கம் என்பது பொருளாக்கம் புரியமுடியாத (unproductive) ஓர் அமைப்பு என்னும் நெடுங்காலக் கருத்தின் விளைவே ஆகும். அரசாங்கப் பணிகளில் பெரும்பகுதி, சமுதாயத்திற்குப் பயன் பாட்டைத் தருகின்ற ஊழியங்களை உருவாக்கினாலும், அவற்றால் அரசாங்கத்திற்கு நேரடியாகப் பணவருமானம் ஏற்படுவதில்லை. இந்தக் காரணத்தால்தான், அரசாங்கச் செலவுகள், நாட்டின் வருமானத்திற்கு ஏற்படும் இழப்பு என்று கருதப்படுகிறது. ஆனால், நெடுஞ்சாலைகளுக்காக அரசாங்கம் செலவிடும் தொகைக்குக் குறையாத அளவு வருமானம், அச் செலவால் ஏற்படும் போக்கு வரத்தின் முன்னேற்றத்தாலும் தானியங்கித் தொழில்களின் (auto motive industries) வளர்ச்சியாலும் சமுதாயத்திற்குக் கிடைத்து விடுகிறது. கல்வி வளர்ச்சிக்காக அரசாங்கம் செலவிடும் தொகையி லிருந்து சமுதாயத்திற்குக் கிடைக்கும் வருமானம் இந்த அளவு கூட நேர்முகமாக இல்லாவிட்டாலும் வருமானம் கிடைக்கிறது என்பதில் சிறிதளவும் ஐயமில்லை. பெரும்பாலும் அரசாங்கச் செலவுகள் எல்லாவற்றிலிருந்தும் நாட்டுக்கு வருமானம் கிடைக் கிறது என்னும் உண்மை அடுத்த அத்தியாயத்தில் விளக்கப் படுகிறது.

அரசாங்கச் செலவு வளர்ச்சியின் அரசியல் தன்மைகள், அந்த வளர்ச்சியைப்பற்றி அவரவர்கள் கொண்டுள்ள அரசியல் கண் ணோட்டத்தின்படி வெவ்வேறுபட்ட மதிப்பீட்டுக்கு ஆளாகும். ஆட்சிப் பீடத்தைக் கைப்பற்றத் தவறிய அரசியல் கட்சியினர், அடுத்த தேர்தலில் வாக்குகளைத் திரட்டுகிற நோக்கத்தோடுதான் ஆளும் கட்சியினர் அரசாங்கச் செலவுகளைக் கூட்டியபடி உள்ளனர் என்று அழுத்தந்திருத்தமாகக் கூறுவது வழக்கம். எல்லா நிலைகளில் உள்ள அரசாங்கங்களிலும், தங்களுக்கு வேண்டியவர்களுக்குப் பதவிகளை வழங்கும் வழக்கம் இருந்துவருகிறது என்பதில் ஐயம் இல்லை. ஆளும் கட்சியின் கொள்கைகளில் நம்பிக்கை உள்ளவர் களுக்குப் பதவிகளை வழங்குவதால், அக் கட்சியின் ஒற்றுமை கட்டிக் காக்கப்படுவது மட்டுமல்ல; அரசாங்க நிர்வாகத்தின் பல கட்டங் களிலும் ஒத்த கருத்துள்ள மனிதர்களை அமர்த்தவும் முடிகிறது. அப்படி அமர்த்துவதால் நிர்வாக இயந்திரத்தில் ஏற்படக்கூடிய பூசல்களையும் மிகக் குறைந்த அளவோடு கட்டுப்படுத்த முடிகிறது. 'புதுமுறைத்' திட்டத்தில் ('New Deal' Programme) அமைந் திருந்த வெளிப்படையான செலவுக் கோட்பாடுகள், அடுத்த தேர் தலில் வெற்றிபெற வேண்டும் என்கிற அடிப்படை நோக்கத்திற் காகவே கொண்டுவரப்பட்டன என்கிற மிக வன்மையான குற்றச்

சாட்டுக்கு ஆளாயின. ஆனால் நடுநிலைக் கண்ணோட்டத்திலிருந்து இந்தச் சிக்கலை ஆராய்ந்து பார்த்தால், பொதுமக்கள் ஏற்றுக் கொள்கிற கோட்பாடுகளைக் கையாள்வதன் வாயிலாகத்தான் எந்தக் கட்சி நிர்வாகமும் தன்னை நிலைநாட்டிக்கொள்ள முடியும் என்கிற உண்மை தெளிவாகும். பொதுமக்களால் விரும்பப்படுகிற ஒரு கோட்பாட்டைக் கையாள்வதால் மிகுந்த செலவு ஏற்படுகிறது என்றால், அந்தத் திட்டத்திற்குப் பொதுமக்களிடமிருந்து கிடைக்கிற ஒப்புதலுக்கு ஏராளமான வாக்குகளைத் திரட்டுகிற ஆற்றல் இருக் கிறது என்றுதான் பொருளேதவிர, குறிப்பிட்ட கோட்பாட்டுக்கு எதிராக உள்ள சக்தியை விலைகொடுத்து வாங்க அரசாங்கக் கருவூலம் பயன்படுத்தப்படுகிறது என்று கூறுவது முறையாகாது.

அதே சமயத்தில், அரசாங்கச் செலவால் உருவாகிற 'சமூக முதல்' (social capital), தனியார் பொருளாதார வளர்ச்சிக்குக் கிடைத்துள்ள ஒரு குறிப்பிடத்தக்க நன்கொடை அல்லது பரிசு ஆகும். போதுமான நெடுஞ்சாலைகளும் வானூர்தி நிலையங்களும் அமைத்தல், ஆற்றல் மிக்க பொதுக்கல்வித் திட்டத்தைச் செயல் படுத்தல், பகைத் தாக்குதலைத் தகர்த்தெறிவதற்கான பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்தல், உலக அங்காடியை நிர்வகிப்பதற்கு உதவி புரிதல், இயற்கைச் சாதனங்களைத் திட்டமிட்டு முறையாகப் பாது காத்தல், மின்சாரம் முதலிய சக்திச் சாதனங்களையும் அணு ஆற்ற லையும் பெருக்குதல், மக்கள் உடல் நலனைப் பேணுவதற்கான ஏற் பாடுகள், ஏராளமாகப் பணம் ஒதுக்கி ஆராய்ச்சிகளை நடத்துதல் இவையும், இவைபோன்ற இன்னும் பலதிற அரசாங்கப் பணிக ளும் தனியார் பொருளாதார வளர்ச்சிக்குப் பேருதவி புரிகின்ற சிறப்பியல்பு படைத்தன ஆகும்.

அரசாங்கப் பணிகளின் விரிவால் சில தனியாட்களின் செயல் உரிமை கட்டுப்பட்டிருப்பது உண்மையே. ஒழுங்குபடுத்தும் பணி கள் (regulatory functions) இயற்கையாகவே இத்தகைய சில உரிமைகளை அழிக்கும் தன்மை படைத்தனவாக உள்ளன. ஆனால் அத்தகைய கட்டுப்பாடுகள் பெரும்பாலும், சில மனிதர்களுக்கு இருந்த சுரண்டுகின்ற உரிமையைக் கட்டுப்படுத்தி, அவர்களால் இதுவரை சுரண்டப்பட்டு வந்தவர்களுக்குக் கூடுதலான செய லாற்றும் உரிமையை அல்லது தெரிவு செய்யும் உரிமையை (freedom of choice) அளிப்பனவாகவே இருக்கின்றன. வேலை செய்வோரை அடக்கி ஆள்வதில் வேலைதருவோருக்கு இருந்த உரிமையைக் கட்டுப் படுத்தியதால், அமைப்பு முறையின்கீழ் இயங்கும் வேலை செய் வோரின் செயலுரிமை பெரிதும் வளர்ந்திருக்கிறது. சில சமயங் களில் அத்தகைய கட்டுப்பாடுகளால் முன்னர் சுரண்டிக்கொண்

டிருந்தவர்களின் நிலை தற்போது வருத்தத்தக்கதாக மாறியிருக்கக் கூடும். ஆனால் இதனால் கட்டுப்பாட்டைக் கையாள்வதே தவறு என்கிற முடிவுக்கு நாம் வந்துவிடமுடியாது. அரசாங்கத்தின் வரி விதிக்கும் அதிகாரமேகூட, வருமானத்தைப் பயன்படுத்துவது, சில பண்டங்களை வாங்குவது, வாழும் இடத்தைத் தேர்ந்தெடுப்பது, செய்யவேண்டிய முதலீட்டின் வகை ஆகியவற்றில் தனியாட்களுக்கு இருக்கவேண்டிய உரிமையைக் கட்டுப்படுத்திவிடுகிறது. சமூகத்தின் மொத்தமான நல் வாழ்வில் தனியாளின் உரிமை ஒரு பகுதியாக இருப்பதால், அரசாங்க நடவடிக்கைகளால் சமூக நல் வாழ்வு மேம்படுத்தப்படும்வரையில், அரசாங்கம் தன் திட்டவட்டமான கடமையைச் செய்கிறது என்பதை நாம் மறுப்பதில்லை.

அரசாங்கப் பணிகளின் பெருக்கம், சமதர்மத்தை (Socialism) நோக்கி நாட்டை அழைத்துச் செல்லும் தன்மையதாக இருக்கிறது என்று சிலரால் சித்திரிக்கப்படுகிறது. இந்தக் குற்றச்சாட்டில் உண்மை இருக்கிறதா இல்லையா என்பது, சமதர்மம் என்னும் சொல்லுக்கு நாம் வகுக்கிற இலக்கணத்தைப் பொறுத்திருக்கிறது. அரசாங்கம் சமூக நல்வாழ்வுக்கு அடுத்த அல்லது கீழ்ப்பட்ட நிலையிலேயே தனியாள் நல் வாழ்வை நிறுத்துகிறது. இந்தக் கண்ணோட்டத்தில் அரசாங்கம் நாட்டைச் சமூகமயமாக்குகிறது என்பது உண்மைதான். வளர் வீத வரிகளில் (progressive taxes) கிடைக்கும் வருமானத்தைக்கொண்டு அரசாங்கம் சமூக நல்வாழ்வு ஏற்பாடுகளை நிறைவேற்றும்போது வருமானத்தைச் சமூகமயமாக்கும் (சமதர்மம் ஆக்கும்) நிலைமையின் ஒரு கூறு உறுவாகத்தான் செய்கிறது. ஏனென்றால் மேற்படி வரிகளின் பெரும்பகுதி உயர் வருமானத் தொகுதியினராலேயே செலுத்தப்படுகிறது. ஆனால் சமூக நல்வாழ்வு ஏற்பாடுகளின் நேர்முக நலன்களின் பெரும்பகுதி தாழ்ந்த வருமானத் தொகுதியினருக்கே செல்கிறது. அதுபோலவே தனியாள் வருமான வரி, கார்ப்பரேஷன் வருமானவரி, மரணவரி முதலிய வரிகள் விதிக்கப்படுவதால் இலாப ஏற்பாட்டிலிருந்து (profit system) குறிப்பிடத்தக்க அளவு இலாபம் சமூக மயமாக்கப்படுகிறது. ஆனால் இத்தகைய கோணத்திலிருந்து நிலைமையைக் கவனிக்காமல், உற்பத்திச் சாதனங்கள் எந்த அளவுக்குச் சமுதாயத்தின் உடைமை ஆக்கப்பட்டுள்ளது என்கிற கண்ணோட்டத்துடன் கவனித்தால், முதலாளித்துவ முறைக்கு உரியது என்று நெடுங்காலமாகக் கருதப்படுகிற வாணிப எல்லைக்குள் அரசாங்கத்தின் தலையீடு அற்ப அளவினதாகவே இருக்கிறது என்பதை உணரமுடியும். 1930ஐத் தொடர்ந்த ஆண்டுகளில் அரசாங்கம் விரிவான அளவில் மேற்கொண்ட பொதுப்பணித் திட்டங்கள் ஏராளமான கட்டுமான வேலைகளை முடித்திருக்கின்றன. என்றாலும், அந்தத் திட்டங்கள்

யாவும் பெரும்பாலும் தனியார் பொருளாதாரத்தோடு போட்டி யில்லாத் துறைகளிலேயே கையாளப்பட்டன. டி.வி.ஏ. திட்டமும், பொருளாதார மந்த காலத்திலும் போர்க்காலத்திலும் தோற்று விக்கப்பட்ட நெருக்கடிக் காலக் கடன் வழங்கும் நிறுவனங்களும் தனியார் தொழில்களோடு போட்டியிடும் சிற்சில தன்மைகளைப் பெற்றிருந்தது உண்மையே. ஆனால் அந்தக் காலத்தில் அரசாங்கப் பணிகளில் ஏற்பட்ட மாபெரும் வளர்ச்சியோடு இத்தகைய சில குறுக்கீடுகளின் அளவை ஒப்பிட்டுப் பார்த்தால், தனியார் துறையோடு போட்டியிடாத அரசாங்கத் திட்டங்களின் அளவு மிகப் பெரிது என்பது திட்டவட்டமாகத் துலக்கமாகும்.

உற்பத்திச் சாதனங்கள் தனியாரின் உடைமையாக இருப்ப தற்கு மாறாகச் சமூகத்தின் உடைமையாக இருக்கும் நிலைமையையே 'சமதர்மம்' என்னும் சொல் சிறப்பாகக் குறிக்கிறது. ஆனால் அர சாங்கம், நாம் மேலே எடுத்துக்காட்டியுள்ளதைப் போல, கட்டுப் பட்ட முதலாளித்துவப் (controlled capitalism) பாதையில் நெடுந் தொலைவு பயணம் செய்திருக்கிறதே தவிர, சமதர்மப் பாதையில் சென்றுள்ள தொலைவு மிக மிகக் குறைவே எனலாம். உண்மையில் அரசாங்கக் கொள்கைகளில் முதலாளித்துவத்தைப் பலப்படுத்துகிற நோக்கம் இருப்பது தெள்ளத் தெளிவாகத் தெரிகிறது. வருமான ஏற்றத்தாழ்வைக் குறைப்பது (reduction in inequality of incomes) முதலாளித்துவத்தை வலுப்படுத்துவதற்கான ஒரு சீர்திருத்தமே என்பது நெடுங்காலமாகச் சுட்டிக் காட்டப்பட்டுவருகிறது. வாணிபச் சுழலால் (business cycle) ஏற்பட்டுள்ள அழிவுகளை மாற்றி அமைப்பதற்கும், சமூக வாழ்க்கைத் தரத்தை உயர்த்து வதற்கும் அரசாங்கத்தின் நிவாரணப் பணிகளும் நல்வாழ்வுப் பணி களும் இன்றியமையாதன ஆகும். பொருளாதார மந்த காலத்தில் ஏற்பட்ட பொதுப் பணித் திட்டங்களும் கடன் வழங்கும் ஏற்பாடு களும், கட்டுப்பாடற்ற முதலாளித்துவத்தின் மிக மோசமான இயல் பால்—அதாவது அடிக்கடி முறிந்து விழக்கூடிய அதன் தன்மை யால்—ஏற்படக்கூடிய விளைவுகளின் கடுமையைக் குறைப்பதற் காகவே உண்டாக்கப்பட்டன. குழாய் நிரப்புகை (Pump–priming) அதாவது, வாணிபச் சுழலின் பின்னிறக்கத்தின்போது (recession) தனியார்செலவு பற்றுக்குறையால் ஏற்படும் காலி இடத்தை நிரப்புவதற்காக அரசாங்கச் செலவை மேற்கொள்ளும் ஏற்பாட்டின் குறிக்கோள் முதலாளித்துவம் முறிந்து விழக்கூடிய ஆபத்தைத் தடுப்பதேயாகும். தனியார் பொருளாதாரத்தை, அத னிடத்திலேயே செறிந்து கிடக்கும் அழிவுச் சக்திகளிலிருந்து காப் பாற்றுவதற்காகவே முற்றுரிமை எதிர்ப்பு ஒழுங்குபாடுகள் (anti-monopoly regulations) கொண்டுவரப்பட்டன. இவற்றையெல்லாம்

சிந்தித்துப் பார்த்தால், அரசாங்கப் பணிகளின் வளர்ச்சியானது, முதலாளித்துவத்தை வலுப்படுத்தும் நோக்கத்தையே மிகுதியாகக் கொண்டுள்ளதேயன்றி, பொருளாதாரத்தைச் சமதர்மப்படுத்தும் குறிக்கோள் காணப்படவில்லை என்பது நன்ருக விளங்கும்.

அரசாங்கக் கடன்கள் வளர்ந்துவருவதால் ஏற்படும் அச்சம், அரசாங்கத்தின் பெருக்கத்தால் தனியாள் உரிமைக்கு ஊறு விளைந்துவிடும் என்னும் அச்சத்தோடு நெருங்கிய தொடர்புடையது. இந்த அச்சம் இரண்டு வழிகளில் வெளிப்படுகிறது. (1) ஏராளமான அளவில் அடிக்கடிக் கடன் வாங்கித் தீரவேண்டிய முறையில் வகுக்கப்படுகிற அரசாங்கக் கொள்கைகளால் பழமைக் கருத்துகளுக்கு ஏற்பட்டுள்ள அதிர்ச்சி (2) அரசாங்கக் கடனுனது, வட்டியைத் தற்போது செலுத்தவேண்டிய வகையிலும் எதிர் காலத்தில் அசலைத் திருப்பித் தரவேண்டிய முறையிலும் பளுவைச் சுமத்துவதோடு, அப் பளுவைத் தாங்குவதற்காக, நிகழ்காலத்தில் தொடங்கி எதிர்காலத்திலும் தொடர்ந்து விதிக்கப்படவேண்டிய பல புதிய வரிகளையும் உண்டாக்கிவிடுகிறது என்னும் உண்மையை அறிந்த உணர்ச்சி. கடன்பற்றிய சிக்கல்களை விரிவாக ஆராயவேண்டியிருப்பதால் அவற்றை வேறு ஓர் அத்தியாயத்தில் ஆராய்வோம்.

அரசாங்கச் செலவை விரிவுபடுத்தலாம் அல்லது விரிவுபடுத்தக் கூடாது என்னும் இரண்டுவகை வாதங்களிலும், வெறுப்புணர்ச்சி, பிடிவாதம், நடுநிலையற்ற தன்மை ஆகியவை செறிந்து கிடக்கின்றன. திறமையான முறையிலும் அறிவுக்குப் பொருந்திய கொள்கையுடனும் தன்னுல் செயலாற்ற முடியும் என்பதை மெய்ப்பித்தால் தான் ஜனநாயகத்தால் தொடர்ந்து வாழமுடியும். எதையுமே பெரிய அளவில் செய்யும்போது அதில் திறமையின்மை, குழப்பம், வேண்டியவர்கட்குச் சலுகையளித்தல் முதலிய குறைபாடுகள் தோன்றுவது இயற்கை. ஆனுல் அந்தக் குறைப்பாடுகளைக் குறிக்கோள், பகுத்தறிவு, அமைப்புமுறை ஆகிய கருவிகளால் தகர்த்தெறிவதே முறை. தேவையான குறிக்கோள்களை நிறைவேற்றவல்ல திசையில் நிதிக்கொள்கையைச் செலுத்தத்தக்க அமைப்பு முறை ஒன்று உருவாக்கப்படவேண்டும் என்னும் கருத்தை, இரண்டாவது அத்தியாயத்தில் வரவு செலவுக் கட்டுப்பாட்டைப்பற்றி விளக்கிய சமயத்தில் நாம் அடிக்கடி வற்புறுத்திக் கூறியிருக்கிறோம்.

### அரசாங்கச் செலவுக் கட்டுப்பாடு (Control of Public Expenditure)

வரவு செலவுத் திட்டத்தைத் திறமையாக வகுப்பதன் மூலமாகத்தான் அரசாங்கச் செலவை உண்மையில் கட்டுப்படுத்த இயலும். செலவுக் கட்டுப்பாடு என்பது எல்லாச் சமயங்களிலுமே

செலவுக் குறைப்பாகத்தான் இருக்கவேண்டும் என்கிற கட்டாயம் இல்லை. சமூகத்தின் மொத்த நல்வாழ்வை மிகுதிப்படுத்துவதாகவும், அரசாங்கத்திற்குக் கிடைத்துள்ள நிதி வசதிகளுக்கு ஏற்ற அளவிலும் செலவு இருக்கவேண்டும் என்பதுதான் செலவுக் கட்டுப் பாடு என்பதன் பொருள். சிக்கனமாகச் செலவழிப்பதே கட்டுப் பாட்டின் நோக்கம். சமூகத்திற்குக் கிடைத்துள்ள சாதனங்கள் ஓர் அளவுக்கு உட்பட்டனவாக இருப்பதால், அவற்றை, அவற்றால் கிடைக்கக்கூடிய முழுப் பயனையும் பெறத்தக்க முறையில் தனியாரும் அரசாங்கமும் பயன்படுத்தவேண்டும் என்பதுதான் சிக்கனமுறைச் செலவழிப்பின் பொருள். ஆகவே, ஒரு குறிப்பிட்ட அளவுக்கே கிடைக்கிற உற்பத்திச் சாதனங்களைத் தனியார் துறையைவிட அரசாங்கத் துறையில் பயன்படுத்தினால் மிகுதியான மனநிறைவை அல்லது நாட்டு வருமானத்தைக் கொடுக்கும் என்கிற நிலைமை இருக்கும்போது மட்டுமே அவற்றை அரசாங்கத் துறைக்குச் செலுத்தத்தக்க முறையில் வரவு செலவுத் திட்டத்தை உருவாக்கு வதுதான், அரசாங்கச் செலவில் சிக்கனம் என்பதன் பொருளாகிறது. அதோடு, அரசாங்கத்தால் பயன்படுத்தப்படும் சாதனங்களை, அரசாங்கக் குறிக்கோளை மிக அதிகமான அளவு நிறைவேற்றத் தக்க முறையில், பல்வேறு அரசாங்கப் பணிகளுக்கிடையே ஒதுக்கு வதும் அரசாங்கச் செலவில் சிக்கனம் என்று கருதப்படும்.

வரவு செலவுத் திட்டத்தை—அதாவது சட்டமன்றத்தின் தற்போதைய உறுப்பினர்கள், நிர்வாகத் துறையின் தற்போதைய அதிகாரிகள் ஆகியோரின் பொது அறிவை, அரசாங்கக் கட்டுப் பாட்டிற்குரிய இறுதிக் கருவியாகக் கருதுவதே, கூட்டரசாங்கத்தின் செலவுக் கட்டுப்பாட்டுக் கொள்கையாகும். குடியரசுத் தலைவரும், காங்கிரசும், அரசியல் திட்டப்படி அல்லது சட்டப்படி உள்ள அழுத் தந் திருத்தமான கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டே தங்களுடைய நிதி நடவடிக்கைகளை வைத்துக்கொள்கிறார்கள் என்று இயம்ப முடியாது. ஆனால் மாநில—தல அரசுகள், விதிமுறைக் கட்டுப்பாடுகளுக்கு (formal controls) உட்பட்டே பெரும்மாலும் செலவிடவேண்டி யிருக்கிறது. தல அரசுகள் மீதுள்ள இத்தகைய கட்டுப்பாடுகள் மாநில அரசுகளால் விதிக்கப்படுகின்றன. மாநில அரசுகள் மீதுள்ள கட்டுப்பாடுகளோ, அரசியல் திட்டங்களால் விதிக்கப்படுகின்றன; அல்லது அந்த அரசுகள் நிறைவேற்றுகின்ற சட்டங்கள் மூலமாகத் தங்களுக்குத் தாங்களே அத்தகைய கட்டுப்பாடுகளை விதித்துக் கொள்கின்றன. விதிப்படி அமைந்த கட்டுப்பாடுகள் பல பரிந்துரை செய்யப்பட்டிருக்கின்றன ; சில கையாளப்பட்டும் வருகின்றன. பொதுவாக அத்தகைய கட்டுப்பாடுகள், போதுமான வரவுசெலவுத்

திட்ட நடைமுறை இல்லாத சமயங்களிலும், அந் நடைமுறைக்குப் பதிலிகள் (substitutes) என்கிற முறையிலும்தான் உருவாக்கப்பட்டுள்ளன. வரி வீத வரம்பீடு (tax rate limits), கடன் வரம்பீடு (debt limits), வரவுக்கு ஏற்ற செலவு (pay-as-you-go requirements) ஆகிய மூன்றும் விரிவாகப் பயன்படுத்தப்படும் விதிமுறைக் கட்டுப்பாடுகள் ஆகும்.

**வரி வீத வரம்பீடு** (Tax Rate Limitation) : வரி வீதங்களுக்கு வரம்பிடுவதன்மூலம் வருவாய்களுக்கு வரம்பிட்டு, அதன் வாயிலாகச் செலவுக்கு வரம்பு கட்டுவது இத் திட்டத்தின் நோக்கமாகும். தங்கள் எல்லையில் உள்ள மாவட்ட அரசுகள்மீதும் (County governments) நகராட்சி மன்றங்கள்மீதும் மாநில அரசுகளால் இத்தகைய கட்டுப்பாடு விரிவாக விதிக்கப்பட்டிருக்கிறது. மாநில அரசாங்கங்கள் மீது அவற்றின் அரசியல் திட்டத்தால் இதே வகைக் கட்டுப்பாடு விதிக்கப்பட்டுள்ளது. வரிவீத வரம்பீட்டுக் கட்டுப்பாடு பெரும்பாலும் சொத்துவரியின்மீதே விதிக்கப்பட்டிருக்கிறது. இதில் வியப்பு ஏதும் இல்லை. ஏனென்றால், சொத்துவரிதான், மாநில-தல அரசாங்கங்களின் தலைசிறந்த வருவாய் ஏற்பாடாகத் தொடர்ந்து இருந்துவருகிறது.[13]

இரண்டு வகையான வரி வீத வரம்பீடுகள், தல அரசாங்கங்கள் மீது விரிவான அளவில் விதிக்கப்பட்டுள்ளன. முதலாவது வகை இரண்டாவது வகையைவிட நேர்முகமானது. சொத்து மதிப்பில் 2 அல்லது 3 சதவீதம் என்பதுபோன்ற ஒரு குறிப்பிட்ட உச்ச அளவுக்குமேல் வரி வீதம் இருத்தல் ஆகாதுஎன்று விதிக்கப்படுவதே இந்த முதல் வகை வரம்பீடு.[14] முறைப்படிப் பார்த்தால், இது வரி வீதத்தின்மீது விதிக்கப்பட்ட வரம்பீடு அல்ல. ஏனென்றால், சொத்தின் மதிப்பீட்டை மாற்றிக் கணிக்கமுடியும். குறிப்பிட்ட ஆண்டின் சொத்து வரி வருவாயானது, அதன் முந்திய ஆண்டு வரி வருவாயில் இத்தனை சதவீதமாக இருக்கவேண்டும் என்று வரையறுக்கப்படுவதே இரண்டாவது வகை வரம்பீடு. நடப்பு ஆண்டின் சொத்துவரி வருவாய், சென்ற ஆண்டின் வருவாயில் 105 சதவீதத்திற்கு மேல் இருத்தலாகாது என்பது போன்ற வரம்பீடு நடைமுறையில் அடிக்கடிக் காணப்படுகின்ற ஒன்று. அத்தகைய நடைமுறை உண்மையில் சொத்துவரி வீதத்தின்மீது விதிக்கப்பட்ட வரம்பீடாக இருக்கக்கூடும்.[15] எத்தகைய வரம்பீடு கையாளப்பட்டாலும், உண்மையான நெருக்கடிகளின்போது குறிப்பிட்ட வரம்புகளை மீறுவதற்குரிய வசதிகள் செய்யப்பட்டுள்ளன. இத்தகைய வரம்புகளை விதிக்கிற அரசியல் திட்டங்கள் அல்லது சட்டங்கள், மாநில வரி ஆணைக் கழகத்தின் (State Tax Commission)

அனுமதியைப் பெற்ருே, வாக்காளர்களின் பெரும்பான்மை வாக்குகளைப் பெற்ருே, அவ் வரம்புகளை மீறலாம் என்கிற ஏற்பாட்டையும் செய்திருக்கின்றன. வரம்பை மீறமுடியும்; ஆனுல் மீறுவது எளிது அல்ல.

ஆனுல் வரிவீத வரம்பீடு, செலவைக் கட்டுப்படுத்துவதற்குத் தேவையான முழு ஆற்றலைப் பெருத ஒருவகைக் கருவியே ஆகும். சொத்து வரி வீதங்களை வரம்பிடுவதன் மூலமாக மொத்தச் செலவை வரம்பிடும் திட்டம், அந்தத் திட்டத்திலிருந்து தப்பிச் செல்வதற்குரிய பல முக்கியமான வழிகளைத் தன்னகத்தே கொண்ட ஓர் ஏற்பாடாகவே இருக்கிறது. கணிக்கப்பட்ட சொத்தின் மதிப்பைச் (assessed value of porperty) சொத்துவரி வீதத்தால் பெருக்குவதன்மூலமாகத்தான் சொத்து வரிகளின் கணிக்கப்பட்ட தொகை (assessed property tax amounts) கிடைக்கிறது. ஆனுல் கணிக்கப்பட்ட சொத்தின் மதிப்பு, வரி வீதம், இரண்டுமே மாறக்கூடிய இயல்புடையன. வரி வீதத்திற்கு வரம்பு கட்டப்பட்டிருந்தால், கணிக்கப்பட்ட மதிப்பீட்டை உயர்த்திக் காட்டுவதன் மூலமாகச் சொத்து வரி வருவாயை உயர்த்தமுடியும். அதுமட்டும் அல்ல. சொத்துவரியை மட்டுமே நம்பியிராமல் வேறு பல வருவாய்த் திட்டங்களை வகுத்து அவற்றின்மூலம் கிடைக்கும் தொகையைக் கொண்டும் செலவை உயர்த்தமுடியும். கடன் வரம்பீடு இல்லாமலிருந்தால், வரி வரம்பீட்டுக்கு உட்பட்ட தல அரசுகள் கடன் வாங்குவதன் மூலமாகவும் அதிகமாகச் செலவிடமுடியும். செலவைக் கட்டுப்படுத்தும் தன் முயற்சியில், வரி வரம்பீடானது, பெரிய நகரங்களைவிடச் சிறிய கிராமங்களில் மிகுந்த வெற்றி பெற முடிகிறது. இதற்குக் காரணம், சிறிய தல அரசுகள், ஏறத்தாழத் தங்கள் வருமானம் முழுவதற்குமே சொத்து வரியைத்தான் நம்பியிருக்கின்றன. வருவாய்க்குரிய பிற சாதனங்கள் எவையும் இருப்பதில்லை. ஒருவேளை இருந்தால், அவற்றிற்குப் போதிய நெகிழ்ச்சி (elasticity) இருப்பதில்லை. சிறு நகரங்களில் சொத்து மதிப்பீடுகள் நெடுங்காலத்திற்கு ஒரே அளவில் நிலைத்து நின்றுவிடுகின்றன. அதனுல் அந் நகரங்களில் சொத்து வரிக் கணிப்பை உயர்த்துவது இயலாத ஒன்ருக ஆகிவிடுகிறது. அதோடு, வரி வீத வரம்பீட்டோடு இணைத்து கடன்வரம்பீட்டையும் விதிப்பது பொதுவான வழக்காருக இருந்து வருகிறது.

மொத்தமாகப் பார்க்கும்போது, வரி வீதத்திற்கு வரம்பிடும் நடைமுறைக்கு நாம் அதிக ஆதரவு தருவதற்கில்லை என்கிற முடிவுக்கே வரமுடியும். தாராளக் கண்ணேட்டத்தோடு பார்த்தால் கூட, சிறந்த முறையில் வரவு செலவுத் திட்டத்தை வகுப்பதற்குப்

பதிலாகக் கையாளப்படுகிற பரிதாபமான ஓர் ஏற்பாடு என்கிற அளவில்தான் அந் நடைமுறைக்கு நாம் மதிப்புத் தரமுடியும். ஏனென்றால், தல அரசாங்கங்கள் தங்கள் நடவடிக்கைகளின் அளவைத் தகுந்த முறையில் கட்டுப்படுத்திக்கொள்ள இயலாதவை என்கிற தத்துவத்தின் அடிப்படையில் அந்த வரிவீத வரம்பீடு அமைந்துள்ளது. அந்த வரம்பீடு, செலவைக் கட்டுப்படுத்துகிற நோக்கத்தில் வெற்றி பெற்றாலும், அந்த வெற்றி, உயர்ந்த தரமுள்ள பணிகள் தங்கள் பகுதிகளில் நடைபெறவேண்டும் என்பதற்காக அதிக அளவில் வரி செலுத்தத் தயாராக உள்ள வட்டாரங்களை அப்படிச் செய்யாமற் தடுக்கிற ஏற்பாடாகத்தானே அமைகிறது! அண்மைக் காலத்தில் பல வட்டாரங்களில் ஏற்பட்டதைப்போல கல்வி வசதிப் பெருக்கம் காரணமாக மிகுந்த செலவிடவேண்டிய தேவை ஏற்பட்டால், வரி வீத வரம்பீடு உள்ள வட்டாரங்களில் வருவாயைப் பெருக்கிக்கொள்ள மூன்று வழிகள்தான் உள்ளன. கடன் வரம்பு மீறப்படாமல் இருந்தால் புதுக் கடன்களை எழுப்பலாம். அல்லது, சொத்தின் மதிப்பை உயர்த்திக் கணிக்கலாம். ஆனால் இம் முறை வசதியற்றது; மிகுந்த செலவுடையது; தேவையில்லாதது. வருவாய் மிகுதிக்கான மூன்றாவது வழி, செலவின் அளவைச் சமுதாயம் விரும்புகின்ற அளவைவிடக் குறைத்து அமைப்பது. இந் நிலைகளையெல்லாம் சீர்தூக்கிப் பார்த்தால், தங்களுடைய நடவடிக்கைகளின் அளவையும், அவற்றிற்கு உரிய நிதிகளைத் திரட்டும் முறைகளையும் முடிவுசெய்யும் உரிமையை அந்தந்த வட்டாரங்களுக்கு அளித்துவிடுவதே அறிவுக்குப் பொருத்தமான ஏற்பாடு என்பது தெளிவாகும்.

**கடன் வரம்பீடு (Debt Limitation):** கடன் வாங்குவதற்கு ஓர் உச்ச அளவை வரையறுப்பதன் மூலம், நடப்பு ஆண்டின் வருவாயைவிட நடப்பு ஆண்டின் செலவு ஒரு குறிப்பிட்ட அளவை மீறிப்போகாதபடித் தடுப்பதே இத் திட்டத்தின் அடிப்படை ஆகும். எல்லா மாநில அரசுகளும், தங்கள் தல அரசுகள் அனைத்தின்மீதோ சிலவற்றின் மீதோ கடன் வரம்புகளை விதிக்கின்றன. பெரும்பாலான மாநிலங்களின் அரசியல் திட்டங்களிலேயே இக் கடன் வரம்புகள் குறிக்கப்பட்டிருப்பதால் இவற்றை எளிதில் மாற்றமுடிவதில்லை. அதுபோலவே, மாநில அரசாங்கங்கள் எழுப்பக்கூடிய கடன்களின் வரம்பு, அவற்றின் அரசியல் திட்டங்களால் அல்லது சட்டங்களால் வரையறுக்கப்பட்டுள்ளது. அமெரிக்கச் சட்ட மன்றத்தால் (Congress) விதிக்கப்பட்டு, அதனாலேயே மாற்றப்படக் கூடிய சட்டப்படியான கடன் வரம்பு ஒன்றிற்கு உட்பட்டே கூட்டரசாங்கமும் தன் கடன் நடவடிக்கைகளை மேற்கொள்கிறது.

தல அரசாங்கங்களின் கடன் வரம்பானது, பெரும்பாலும் சொத்து மதிப்பீட்டில் இத்தனைச் சதவீதம் என்கிற முறையிலும் சில சமயங்களில் ஆண்டு வருவாயின் சதவீதக் கணக்கிலும், வரையறுக்கப்பட்டுள்ளது. அதுபோலவே, மாநில அரசாங்கங்களின் கடன் வரம்பானது, பொதுவாக இத்தனை டாலர்கள் என்கிற முறையில் விதிக்கப்பட்டிருந்தாலும், சில சமயங்களில் சொத்து மதிப்பீட்டின் சதவீதக் கணக்கிலும் வேறு சில சமயங்களில் அண்மைக்கால வருவாயின் சதவீதக் கணக்கிலும் வரையறுக்கப்பட்டுள்ளன. கூட்டரசாங்கக் கடன் வரம்பு இத்தனை டாலர்கள் என்கிற முறையில் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.[16]

பெரும்பாலான மாநிலங்கள் மற்றும் வட்டாரங்களின் கடன் வரம்புகளிலிருந்து, விளக்கு, தண்ணீர் மற்றும் புதைசாக்கடைத் திட்டங்கள்—நெடுஞ்சாலைகள் மற்றும் பாலங்கள் அமைக்கும் திட்டங்கள் முதலியவற்றிற்காக எழுப்பப்படுகிற கடன்களுக்கு அதாவது தங்களைத் தாங்களாகவே தீர்த்துக்கொள்ளக்கூடிய கடன்களுக்கு (self liquidating loans) விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. நிவாரணம் அளித்தல், வீதிகளின் வளர்ச்சி, வட்டார அரசுகளுக்கான கட்டிடங்கள் எழுப்புதல், தவணைமுடிவுற்ற கடன்களைத் திருப்பித்தருதல் முதலிய சிற்சில காரணங்களுக்காக எழுப்பப்படுகிற கடன்களுக்கும் அதுபோன்ற விலக்கு தரப்பட்டிருக்கிறது.

தலஅரசுகளின்மீது கடன் வரம்பு விதிக்கப்படுவதால், அவை தங்களுடைய நடப்புச் செலவுகளைக் (current expenditures) குறைத்துத் தீரவேண்டியிருக்கிறது. இல்லாவிட்டால், அச் செலவுக்காகப் புதிய வரிகளை விதித்தாகவேண்டியிருக்கிறது. முன் நாளில் தல அரசுகள் பெற்ற கடனை உற்ற காலத்தில் திருப்பித்தரத் தவறியுள்ளதால், மாநில அரசுகள் கடன் வரம்புகளை விதிப்பது நியாயமாகவே இருக்கிறது. குறிப்பாகச் சிறிய நகராட்சி மன்றங்களுக்கு இத்தகைய வரம்புகள் வரையறுக்கப்படுவது இன்றியமையாததே. ஆனால் கடன் வரம்பீடுமூலம் செலவைக் கட்டுப்படுத்தும் இத் திட்டத்தில் நெகிழ்ச்சிக்குரிய கூறுகள் இருக்கின்றன. சொத்து மதிப்புக் கணிப்பின் அடிப்படையில் கடன் வரம்பு விதிக்கப்படும்போது, அந்த வரம்பை மீறாமலே, சொத்து மதிப்பை உயர்த்திக் கணிப்பதன் வாயிலாக அதிகத் தொகையுள்ள கடனை எழுப்பமுடியும். சில வகைக் கடன்களுக்குக் கடன் வரம்பீட்டிலிருந்து விலக்கு அளிப்பதாலும் தேவையான நெகிழ்ச்சியின் ஒரு பகுதியைப் பெறமுடிகிறது. ஆனால் கடன் வரம்பீட்டுக் கட்டுப்பாட்டின் பெரிய குறைபாடு என்னவென்றால், கூடுதலான வரிவிதிப்பின்மூலம் கூடுதலாகச் செலவழிப்பதைத் தன்னளவில் அதனால் கட்டுப்படுத்தமுடியாது.

வரி வீத வரம்பீட்டைப் போலவே, கடன் வரம்பீடும், வரவு செலவுத் திட்டத்தைப் போல் அவ்வளவு சிறப்பாகச் செலவைக் கட்டுப்படுத்த முடியாது. கடன் வரம்பீடானது, மொத்தச் செலவின் அளவைத்தான் கட்டுப்படுத்துகிறதே தவிர, அந்த உச்ச அளவுக்கு உட்பட்டு நடத்தப்படுகிற பலதிறப் பணிகளின் வெவ்வேறு அளவுள்ள முக்கியத்துவத்தைப்பற்றி அது கவலைப்படுவதேயில்லை. இன்றியமையாமல் தேவைப்படுகிற நெருக்கடிக் காலப் பணிகள் பலவற்றை அது தடுத்துவிடக் கூடும். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் பல பகுதிகளில் வட்டாரக் கடன் வரம்புகள், தல அரசாங்கங்கள் திறமையாகப் பணியாற்றுவதைத் தடுக்கும் முட்டுக்கட்டைகளாகவே அண்மைக் காலத்தில் இருந்திருக்கின்றன. குறிப்பாகப் பள்ளிக்கூடக் கட்டிடத் தேவைகளைப் பொறுத்த அளவில் இத்தகைய நிலை இருந்திருக்கிறது. நடப்புக்கால முதலினச் செலவுத் தேவைகளை (current capital expenditure requirements) முன்னிட்டு மாநில அரசுகள் தங்கள் கடன் வரம்பு நடவடிக்கைகளைத் திருத்தி அமைத்துக் கொள்வது நல்லது என்று பல ஆண்டுகளாகக் குடியரசுத் தலைவரின் பொருளாதார அறிக்கை (The Economic Report of the President) ஆய்வுரை புகன்று வருகிறது. சில சமயங்களில், கடன் வரம்புகள், செலவுகளைக் குறைப்பது என்னும் அவற்றின் நோக்கத்தை நிறைவேற்றியிருக்கின்றன. வேறு சில சமயங்களில் அவை வட்டார வருவாய்க்குரிய வேறு வழிகளைத் தேடிப் பெறுவதற்கானத் தூண்டுகோலாக அமைந்திருக்கின்றன. மற்றும் சில நேரங்களில் அவை கட்டுப்பாடுகளை ஒதுக்கிக்கொண்டு செல்வதற்குரிய சில விசித்திரமான நடைமுறைகளைக் கையாளும்படிச் செய்திருக்கின்றன. எடுத்துக்காட்டாகச் சில தல அரசாங்கங்கள், பள்ளிக்கூடக் கட்டிடங்களைக் கட்டுவதற்சாகத் தன்னைத்தானே தீர்த்துக்கொள்ளும் கடன்களை எழுப்பவல்ல சில அமைப்பு முறைகளை உருவாக்கி, கட்டிடங்களை எழுப்பவைத்து, அவ்வாறு தோன்றிய கட்டிடங்களைப் பின்னர் குத்தகைக்கு எடுத்துக்கொண்டு ஆண்டுதோறும் வாடகை செலுத்துகின்றன. வட்டாரக் கல்விக்கான மாநில அரசுகளின் உதவி அதிகரித்துவருவதற்குரிய பல காரணங்களில் கடன் வரம்பீடும் ஒன்று என்பதில் சற்றும் ஐயமில்லை.

கூட்டரசாங்கக் கடன் வரம்பு அமெரிக்கச் சட்டமன்றத்தால் வறையறுக்கப்பட்டிருப்பது; அம் மன்றத்தால் எப்போது வேண்டுமானாலும் மாற்றப்படக்கூடியது. இந் நிலையில் அக் கடன்வரம்பால் ஏதாவது பயன் இருக்குமானால், அது, செலவுத் திட்டங்களை மேற்கொள்வதில் விழிப்போடு இருக்கும்படி அவ்வப்போது எச்சரிக்கை செய்வதுபோல அது அமைந்திருப்பதே ஆகும். ஆனால் கூட்டரசாங்கக் கடன் வரம்பானது செலவைக் கட்டுப்படுத்துவ

தில் அதிக வெற்றியைப் பெற முடியவில்லை என்பதுதான் கடந்த கால அனுபவத்திலிருந்து கிடைக்கும் முடிவு. ஒழுங்குபட்ட நியாய மான நிதி நிர்வாகத்திற்கு இடையூறு விளைவிப்பதே அதன் தலை யாய விளைவாக இருந்துவருகிறது. ஏனென்றால், என்ன காரணத் தாலோ, கடன் வரம்பை நியாமான அளவுக்கு உயர்த்தித் தரும் படி அமெரிக்கச் சட்டமன்றத்துக்கு வேண்டுகோள் விடுப்பதில் நிர்வாகத் துறைகள் மிகுந்த காலதாமதம் செய்துவருகின்றன. எதிர்காலத்தில் கூடுதல் வருவாய் கிடைக்கும் என்பதை எதிர் பார்த்து அதிகச் செலவுள்ள—ஆனால் அதிக நியாயமில்லாத—நடை முறைகளையெல்லாம் மேற்கொள்ளும் ஆசாங்க நிர்வாகத் துறை யினர் கடன் வரம்பைப் பொறுத்தவரை தாமாக முன்வந்து அதனை உயர்த்துமாறு கேட்பதற்கு மாறாக ஏதாவது அற்புதங்கள் நிகழ்ந்து அது உயரட்டும் என்று மிகப் பொறுமையோடு காத்திருக்கின்றனர். 1954-ல் நடப்பு உண்டியல்களுக்குப் (current bills) பணம் தருவதற் காகக் கருவூலத்தின் கட்டுப்பாடற்ற தங்க சாதனங்கள் (free gold resources of the Treasury) பயன்படுத்தப்பட்டன; தனியார் துறையில் உள்ள வாங்குவோர்க்கு பயிர்க் கடன்களில் உள்ள அரசாங்க உரிமைகளை விற்பதன் மூலம் அரசாங்க நிதிகளின் இடத் தில் தனியார் நிதிகள் அமர்த்தப்பட்டன. மீண்டும் 1957-ல், தேவை யான செலவுகளைச் சரிக்கட்டுவதற்கு ஏற்ற அளவு உயர்ந்ததாகக் கடன் வரம்பு இல்லாத காரணத்தால் இவற்றையும் இவைபோன்ற பிற ஏற்பாடுகளையும் கையாளலாமா என்று அரசாங்க நிர்வாகம் சிந்தித்துப் பார்த்தது. இந்த முறை இறுதியில் அந்த ஏற்பாடுகள் எவையும் கையாளப்படவில்லை. அதே நேரத்தில் கட்டாயமாக உயர்ந்திருக்கவேண்டிய கடன் வரம்பு, நடைமுறையில் உள்ள திட்டங்களுக்காகப் பணம் செலுத்தும் வீதத்தைக் குறைத்ததன் வாயிலாக, உயராமல் தடுத்து நிறுத்தப்பட்டது. பகுத்தறிவுள்ள அரசாங்கம் ஒன்றிற்கு இருக்கவேண்டியதைவிட மிகக் குறைந்த அளவில் உள்ள கடன் வரம்புக்கு உட்பட்டுப் பணியாற்றுவதன் விளைவாக ஏற்படுகின்ற இழப்பின் அளவை மதிப்பிடுவது செயற்கரிய செயல்தான். ஆனால் அந்த இழப்பு பெரிய அளவின தாக இருக்கும் என்பதைமட்டும் நாம் தாராளமாக நம்பலாம்.

முழு உரிமையுள்ள அரசாங்கங்களுக்குக் கடன் வரம்புகளால் நன்மையைவிடத் தீமையே மிகுதியாக விளைகிறது என்பதே அனுபவ வாயிலாக விளங்குகிற உண்மை. தகுதிமிக்க வரவு செலவுத் திட்ட நடைமுறைகளைக் கொண்டுள்ள அரசுகளைப் பொறுத்தஅளவில் இது முற்றிலும் உண்மையாகும். கடன் வரம்பு அழுத்தந் திருத்தமாக அமைக்கப்பட்டால் அதற்கு இரண்டு வகையான பொருளைத்தான் நாம் கொள்ளமுடியும். பின்னிறக்கம் (recession)

காரணமாக வருவாய் குறைவது முதலிய நெருக்கடிகள் ஏற்பட மாட்டா என்பதும், வானமண்டலத்தில் செயற்கைக் கோள்கள் வெற்றிகரமாகச் சுழல்வது முதலிய காரணங்களால் பாதுகாப்புச் செலவு உயராது என்பதும் ஒரு பொருள். வரவு செலவுத் திட்டத்தில் உள்ள சில செலவினங்களைக் குறைக்கமுடியும் என்றும், அப்படிக் குறைப்பதால் ஏற்படுகிற மிச்சத்தொகையைக்கொண்டு நெருக்கடிச் செலவுகளைச் சரிக்கட்டமுடியும் என்றும் கருதுவது மற்ெறுரு பொருள். இந்த இருவகைப் பொருளுமே முறையான பொருள் ஆகாது. கடனுக்கான உச்ச வரம்பு மாற்றமுடியாத வகையில் அழுத்தமாக அமைக்கப்பட்டு, அதனைத் தளர்த்துமாறு கேட்கும் நிர்வாகத்துறையின் வேண்டுகோள் ஓர் அரசியல் சுமையாகக் கருதப்படுமானுல், நிதி நிர்வாகத்தின்மீது தாங்கமுடியாத பளு சுமத்தப்பட்டிருக்கிறது என்றே முடிவாகும். அவ்வாறில்லாமல், கடன் உச்சவரம்பை மீருமலே செலவுக்கு ஏற்றபடியெல்லாம் பணம் எழுப்பமுடியும் என்ருல், உச்ச வரம்பால் எத்தகைய பயன் விளையவேண்டுமென்று அதன் ஆதரவாளர்கள் எதிர்பார்க் கிருர்களோ அது விளையாமலே போய்விடும்.

**வரவுக்கு ஏற்ற செலவு** (Pay As You Go): கடன் வாங்குவதைத் தடுப்பதே இந்தக் கட்டுப்பாட்டு முறையின் நோக்கமாகும். நடப்பு வருவாயைக்கொண்டே நடப்புச் செலவைச் சரிக்கட்டிக் கொள்ள வேண்டும் என்கிற கட்டாய நிலைமையை இந்த முறை நிதி அதிகாரிகள் மீது சுமத்துகிறது. நீண்டகாலக் கோட்பாடு என்னும் முறையில்—சிறப்பாக தல அரசுகளைப் பொறுத்த அளவில்—வரவுக்கு ஏற்ற செலவு என்னும் இக் கொள்கையானது நியாயமானதாக இருக்கலாம். பொதுப்படையாக அமைந்துள்ள ஒரு சட்டத்தின் மூலமாக இக் கொள்கையைத் திணிப்பது அறிவுடைமையாகாது. ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு இக் கொள்கை ஏற்புடையதாகத் தோன்றிஞல், அதனை அவ்வாறு முடிவுசெய்யும் பொறுப்பும், வரவு செலவுத் திட்டத்தில் அம் முடிவைத் தகுந்த முறையில் அமைத்துக்காட்டும் உரிமையும் நிதி அதிகாரிகட்குத் தரப்பட வேண்டும். அவ்வாறின்றிச் சட்டத்தின்மூலமாக எல்லாக் காலத்திற்கும் பொருந்துமாறு இக் கொள்கையை அமைத்து விட்டால், நெருக்கடிக் காலங்களில் வரவு செலவுத் திட்டத்தின் சிறந்த நடைமுறைகளைக் கையாளமுடியாத நிலை ஏற்படும்.

தனியாட்களையும் வியாபார நிறுவனங்களையும்போல அரசாங் கங்களும் கடன் வாங்கவேண்டிய காலங்கள் இருக்கின்றன. கடன் வாங்குவது, நிதி நிர்வாகத்தின் இன்றியமையாத ஒரு பகுதியாகும். உடனடியாக அறுவை மருத்துவம் செய்துகொள்ளவேண்டிய ஒரு

தனியாள், அதற்குத் தேவையான பணம் கையில் இல்லாத காரணத்தால், போதுமான வரவு வந்தபிறகே அம் மருத்துவத்தைச் செய்து கொள்வது என்று இருப்பாராயின், அதன் விளைவு விபரீதமாகவே இருக்கும். வியாபார நிறுவனங்களை எடுத்துப் பார்த்தாலோ, வியாபார வளர்ச்சியின் பெரும்பகுதி கடன் வாங்கப்பட்ட தொகையாலேயே ஏற்பட்டிருக்கிறது என்பதை வரலாறு விளக்கமாகத் தெரிவிக்கிறது. மிகப் பெரும்பாலான சமயங்களில், கடன் வாங்கி வாணிபம் செய்வதே, சிறந்த வாணிப முறையாக அமைகிறது. இதே காரணத்தால்தான், அரசாங்கங்களும் (கடன் வாங்காமல் நெருக்கடிக் காலத்தில்) நிவாரண வேலைகளை மேற்கொள்வதற்காக, அவற்றால் நடத்தப்படும் பள்ளிக்கூடங்களை மூடிவிட முடியாது. தனிப்பட்ட திட்டங்களைப் பொறுத்தஅளவில், வரவுக்கேற்ற செலவு என்னும் கொள்கை, மிகுந்த செலவையே உண்டாக்கு கிறது. ஒரு புதிய அரசாங்க மாளிகையைக் கட்ட முடிவு செய்த மாநில அரசாங்கம் ஒன்று, அப்படிக் கட்டுவதற்கான பணத்தை அந்தந்த ஆண்டின் நடப்பு வருவாயிலிருந்தே செலவிடுவது என்கிற கொள்கையை வகுத்துக்கொண்டது. கட்டிடம் கட்டப்பட்ட ஆண்டுகளில், வரவுசெலவுத் திட்ட உபரி (Budget surplus) போதுமான அளவில் இல்லாததால், அக் கட்டிட வேலையை முடிப்பதற்குப் பிடித்த காலம், கடன் வாங்கி அவ் வேலையை முடித்திருந்தால் பிடிக்கக்கூடிய காலத்தைவிட இரண்டு மடங்குக்கு மேற்பட்டதாக இருந்தது என்று தெரிகிறது. இறுதியில் கட்டிடத்தின் மொத்தச் செலவானது, திட்டமிடப்பட்ட செலவைவிட இரண்டு மடங்குக்கு மேலாக அமைந்துவிட்டது. கடன் வாங்கி அவ் வேலையை விரைவில் முடித்திருந்தால் திட்டமிடப்பட்ட அளவிலேயே செலவு நின்றிருக்கும். விரைவில் கட்டிடத்தை முடித்து அதனைப் புழக்கத்திற்குக் கொண்டுவராததால் ஏற்பட்ட (வாடகை) இழப்பும், திட்டமிட்ட அளவுக்குமேல் ஏற்பட்ட பல மில்லியன் டாலர் கூடுதல் செலவுமே, வரவுக்கு ஏற்ற செலவு என்னும் 'புனிதமான' கொள்கையால் ஏற்பட்ட விளைவுகள் !

பெரும்பாலான மாநில—தல அரசாங்கங்கள் இன்னமும், வரவுக்கு ஏற்ற செலவு என்னும் கொள்கையையே நிதித்துறையில் தங்களுடைய குறிக்கோளாகக் கொண்டிருக்கின்றன என்றாலும், நல்ல வேளையாக அக் குறிக்கோளைச் சட்டத்தின் மூலம் திணிப்பதற்கான முயற்சிகள் நவீன காலத்தில் மிகுதியாக நடைபெறுவதில்லை. மாநிலஅரசாங்கமும் தலஅரசாங்கங்களும் சென்ற ஆண்டில் எந்த அளவுக்குக் கடனைத் தீர்த்துள்ளனவோ அந்த அளவில், மூன்றில் இரண்டு பங்குக்குமேல் நடப்பு ஆண்டில் கடன் வாங்கக்கூடாது என்று வட கரோலினா மாநில அரசியல் திட்டம்

தெரிவிக்கிறது[17]. இதன் விளைவு யாதெனில், அம் மாநிலத்தில் ஓர் ஆண்டில் வரவுசெலவுத்திட்ட உபரி இருந்தாலொழிய மறு ஆண்டில் அம் மாநில அரசாங்கம் கடனே வாங்க முடியாது. எனவே மாநிலத்தின் மொத்தக் கடன்அளவு, இருக்கிற நிலையிலேயே தொடர்ந்து இருக்கமுடியும் அல்லது குறையமுடியுமேதவிர, எப் போதுமே மேல்நோக்கிச் செல்ல முடியாது. வரவுக்கு ஏற்ற செலவு என்னும் கொள்கையை அரசியல் திட்டத்தின் ஒரு விதியாகவே அமைத்து அளவற்ற பிடிவாதத்தோடு அதனைக் கையாளும் முறை இது. இயல்பான காரணங்களுக்காகக் (for ordinary purposes) கடன் வாங்கக்கூடாது என்றுதடை விதிப்பதன் மூலம், சில மாநிலங்கள், பொது நிதியைப் (general fund) பொறுத்த அளவில், இக் கொள் கையைக் கடைபிடிக்கின்றன. பெரும்பாலும் இதன் விளைவாக, வழக்கத்திற்கு மாறான புதுச் செலவுகளை இயல்பல்லாத காரணத் திற்காக என்று அரசாங்கம் அறிவிக்கக்கூடும். அல்லது, வழக்கத்திற்கு மாறான அச் செலவுகளைச் சரிக்கட்டுவதற்காக அரசாங்கத்தின் வழக்கமான சில பணிகளைக் குறைத்துவிடக்கூடும். எப்படி யிருந்தாலும், ஓர் அரசாங்கம் அனுமதிக்கப்பட்ட அளவுக்குக் கடன் வாங்கி முடித்தபின்னர், வரவுக்கு ஏற்ற செலவு என்னும் கொள்கையைத்தான் கையாண்டு தீரவேண்டும். அந் நிலையில் கடன் வரம்பீட்டிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டுள்ள செயல்களுக்கு மட்டுமே கடன் வாங்கமுடியும்.

விதிமுறைச் செலவுக் கட்டுப்பாடுகள் (formal controls of expenditure), வரவு செலவுத் திட்டத்தைச் சிறந்த முறையில் வகுக்கமுடியாத நிலைமைகளில் பெரும்பாலும் பயன் தருவனவாக இருக்கலாம். ஆனால் அவ்வாறு வகுக்கக்கூடிய நிலைமைகளில், அத்தகைய கட்டுபாடுகளால் நற்பயன் இராது என்பது மட்டுமல்ல, தீமைகூட ஏற்படலாம். இதுதான், விதிமுறைக் கட்டுப்பாடுகள் பற்றி நாம் ஏற்கக்கூடிய பொதுவான முடிவு. ஆனால் ஒன்று, ஏறத் தாழ எல்லாச் சூழ்நிலைகளிலுமே வரவு செலவுத் திட்டத்தைச் சிறந்த முறையில் தீட்டமுடியும். எனவே, நிதி அதிகாரிகள் பொறுப் பற்ற முறையில் நடந்துகொள்ளும் போதும், அரசாங்கப் பணிகளின் இன்றியமையாமையை மதிக்கத் தவறுகிறபோதுமே விதிமுறைக் கட்டுப்பாடுகளுக்குத் தேவை ஏற்படும்.

**உதவி மானியங்கள் (Grants–in–Aid)**

ஒரு நிலையில் உள்ள அரசாங்கங்கள் மற்றொரு நிலையில் உள்ள அரசாங்கங்கட்குத் தரும் பண உதவியே உதவி மானியங்கள் **என்பன.** கொடுக்கும் அரசாங்கத்திற்கு உரிமையுள்ள நிதிகளி லிருந்தே உதவி மானியங்கள் கொடுக்கப்படுவதால், ஓர் அரசாங்கம்

மற்ருேர் அரசாங்கத்தின் சார்பில் வசூலித்துத் தருகிற நிதிகள், உதவி மானியங்கள் ஆகமாட்டா.[18] மாநில—தல அரசாங்கங்களுக்குக் கூட்டரசாங்கம் தருகிற மானியங்கள் குறிப்பிட்ட செயல்களுக்காகத் தரப்படுகின்றன. ஆனுல் மாநில அரசாங்கங்களுக்குத் தருகிற மானியங்களில் சில, அத்தகைய குறிப்பிட்ட காரணங்கள் இல்லாதனவாகவும் இருக்கும்.

மானியங்கள் வழங்கப்படுவதற்குப் பொதுவாக இரண்டு முக்கியமான காரணங்கள் இருக்கின்றன.[19] (1) கீழ்நிலையில் உள்ள அரசாங்கங்களின் வருவாய்ச் சாதனங்கள் உயர்ந்த தரமுள்ள பணிகளை ஆற்றுவதற்குப் போதியனவாக இல்லாமையால், மிகுதியான வருவாய்ச் சாதனங்களைக் கொண்ட மேல்நிலை அரசாங்கங்கள் நிதிஉதவி செய்யவேண்டியிருக்கிறது. (2) மேல்நிலையில் உள்ள அரசாங்கத்தால் சில பணிகள் இன்றியமையாதன என்று கருதப்படலாம். ஆனுல் அந்தப் பணிகளை அந்த அரசாங்கம், அரசியல் திட்ட அமைப்புக் காரணமாகத் தானே செய்யமுடியாத நிலையில் இருக்கலாம் ; அல்லது நிர்வாகக் காரணங்களால் தானே செய்யக்கூடாத நிலையில் இருக்கலாம். எடுத்துக்காட்டாக, நாடு முழுவதற்குமான மந்த நிவாரணத்திட்டம் நாடுநெடுக ஒரே வகையாகச் செயற்படுத்தப்படவேண்டும் என்ருலும் அந்தந்த தல அரசுகளால் தனித்தனியாகத்தான் நிர்வகிக்கப்படவேண்டி உள்ளது.

கூட்டரசாங்கத்தின் மானியங்களைவிட மாநில அரசுகள் தல அரசுகளுக்குத் தருகிற மானியங்களே, ஏராளமாகவும் நெடுங்காலமாக நிலைத்திருப்பனவாகவும் உள்ளன. இது இயற்கைதான். ஏனென்ருல் தல அரசாங்கங்கள், மாநில அரசுகளால் உண்டாக்கப்பட்டவை மட்டுமல்ல, மாநில அரசுகளின் தொழிற் பிரதிநிதிகளாகவும் (agencies) இருக்கின்றன. 1958-ல் மாநில உதவி கீழ்க்கண்ட காரணங்களுக்காகத் தரப்பட்டுள்ளன.[20]

| | மில்லியன் டாலர்களில் |
|---|---|
| கல்வி | 4452·5 |
| நெடுஞ்சாலைகள் | 1166·7 |
| பொது நல்வாழ்வு (அ) | 1094·3 |
| உடல்நலமும் மருத்துவமனைகளும் | 303·0 |
| வீடுகட்டுதலும் சமுதாய மறுவளர்ச்சியும் (Housing and Community Redevelopment) | 21·4 |
| குறிப்பிடப்படாத காரணங்கள் | 687·2 |
| பிற மற்றும் ஒதுக்கப்படாதவை | 220·2 |
| மொத்தம் | 7943·4 |

(அ) இந்த இனத்தில் முக்கியமாக முதிய வயது உதவியும் பிறரைச் சார்ந்த குழந்தைகளுக்கான உதவியும் சேர்க்கப்பட்டுள்ளன.

மாநில அரசுகளால் தல அரசாங்கங்களுக்குத் தரப்படும் பொது நல்வாழ்வு மானியங்கள் பெரும்பாலும் கூட்டரசாங்கத்திடமிருந்து மாநில அரசுகள் மானியங்களைப் பெறும் அதே செயல்களை நிறைவேற்ற அமைந்தனவே. முதியவயது உதவி, பிறரைச் சார்ந்த குழந்தைகட்கான உதவி, குருடர்கள், உடல் ஊனமுற்றோர் ஆகியோர்க்கான உதவி ஆகியவை பொது நல்வாழ்வு மானியங்களில் அடங்கும். மேற்படி பட்டியலில் உள்ள ஏனைய மானிய வகைகள், தம் அளவில் தொடர்ச்சியாக வளர்ந்துவந்தாலும், இப்போது குறிப்பிட்ட வகைகளைவிட நெடுங்காலமாக இருந்துவருபவை. அத்தகைய வகைகளில், வட்டாரக் கல்விக்கான மாநில உதவி, சிறப்பாகக் குறிக்கத்தக்கதாகும். தல அரசுகள் தம் இச்சையாகப் பணியாற்றினால் தாமாக அமையாத அல்லது அமைக்கமுடியாத ஒரே வகைக் கல்வித்தரம் மாநிலம் முழுவதிலும் இருக்கவேண்டும் என்பதற்காகவே கல்விக்கான மாநிலக் கொடை வழங்கப்படுகிறது. அத்தகைய மானியம் வழங்கப்படாவிட்டால், தல அரசுகளின் ஏழ்மை அல்லது அரசாங்கத்தின் அடிப்படைப்பணிகளில் ஒன்றாகிய கல்வி அளித்தல் என்பது தக்க முறையில் நிறைவேற்றப்பட முடியாமல் போகலாம்.

1957-ல் கூட்டரசாங்க மானியங்கள் பின்வருமாறு வழங்கப்பட்டன.

## அட்டவணை 9

### மாநில, தல அரசாங்கங்களுக்குக் கூட்டரசாங்கத்தின் மானியங்கள்—1957*

(மில்லியன் டாலர்களில்)

| | |
|---|---|
| பொது உதவி | 1556 |
| நெடுஞ்சாலைகள் | 955 |
| வேளாண்மை | 382 |
| வேலையின்மை இழப்பீடும் வேலை ஊழியமும் (Unemployment Compensation and Employment Service) | 319 |
| கல்வி | 302 |
| பொது உடல் நலம், துப்புரவு, மற்றும் மருத்துவ மனைகள் கட்டுதல் | 134 |
| வீடு கட்டுதலும் சமுதாய வளர்ச்சியும் | 118 |
| தாய்-சேய் நல்வாழ்வு | 38 |

| | |
|---|---|
| தொழில்முறை மறுவசதி (Vocational Rehabilitation) | 34 |
| இயற்கை வளங்கள் | 27 |
| வானூர்தி நிலையங்கள் | 21 |
| கொலம்பியா மாவட்டம் | 20 |
| போர்வீரர்களுக்கான ஊழியங்களும் நன்மைகளும் | 8 |
| பிற | 49 |
| மொத்தம் | 3943 |

* 1959 ஜூன் 30ஆம் நாளோடு முடிகிற நிதிஆண்டுக்கான அமெரிக்க ஐக்கிய நாட்டு அரசாங்கத்தின் வரவு செலவுத் திட்டம்—சிறப்புப் பகுத்தாய்வு–ஜி. (Special Analysis G.) என்னும் நூலிலிருந்து எடுக்கப் பட்டவை.

பொது உதவி மானியங்கள், பெரும்பாலும் ஏறத்தாழ ஒத்த அளவுக்கு மாநில நிதிகளிலிருந்தும் செலவு செய்யப்படவேண்டும் என்னும் நிபந்தனையோடு கூடிய இணை மானியங்களே (matching grants) ஆகும். சமூகப் பாதுகாப்புச் சட்டத்தின் விளைவாகத் தோன்றிய அந்த மானியங்கள், முதிய வயது உதவிக்காகவும், பிறரைச் சார்ந்த குழந்தைகள், குருடர்கள், ஊனமுற்றோர் ஆகியோருக்கான உதவிக்காகவும் தரப்படுகின்றன. தேசிய நெடுஞ் சாலைகளை அமைக்கும் முயற்சியில் மாநில அரசுகளுக்கு உதவி புரிவதற்காகவும், கிராமச் சாலைகளை அபிவிருத்தி செய்வதற்காகவும் 1917ஆம் ஆண்டுச் சட்டத்தில்தான் முதன் முதலில் நெடுஞ்சாலை மானியங்கள் தருவதற்கான வசதிசெய்யப்பட்டது. பலபத்தாண்டுகளாக அவை இணை மாநிலங்களாக இருந்தன. ஆனால் 1946ஆம் ஆண்டுச் சட்டப்படி, கூட்டரசாங்கமானது, சில குறிப்பிட்ட வகைச் சாலைகளின் அமைப்புச் செலவில் 90 சதவீதத்தை மானியங்களாக வழங்குவதன்மூலம் பாதுகாப்புக்கான ஒருங்கிணைக்கப்பட்ட தேசிய நெடுஞ்சாலை ஏற்பாடு ஒன்றை விரிவுபடுத்த முனைந்தது. 1957 வரையில் இந்தத் திட்டத்தின் தொடக்கக் கட்டம்கூட முடியவில்லை. ஆனால், பழைய இணை மானியத்தை நெடுஞ்சாலைத் திட்டத்தோடு சேர்த்துப் பார்த்தால், நெடுஞ்சாலை வளர்ச்சிக்கான மொத்த மானியம் ஆண்டுக்கு 3 மில்லியன் டாலராக உயரும் அளவுக்கு, அடுத்த பத்தாண்டுகளில் இந்தத் திட்டம் விரிவுபடுத்தப் படவேண்டும் என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. கல்விக்கான கூட்டரசாங்க மானியங்கள் ஒரு சிறப்பு வகையைச் சேர்ந்தவை; கூட்டரசாங்க நடவடிக்கைகளால் சமுதாயத்தின்மீது வழக்கத்தை விட மிகுதியான பளு சுமத்தப்படும் பகுதிகளில் பள்ளிக்கூடக்

கட்டிடங்களைக் கட்டவும் அப் பள்ளிகளை நடத்தவுமே, கூட்டரசாங்கக் கல்விக் கொடைகளிற் பெரும்பகுதி செலவிடப்படுகிறது. வட்டாரக் கல்விக்காக மிகுந்த அளவில் கூட்டரசாங்க மானியங்களைப் பெறவேண்டும் என்பதற்கான முயற்சிகள் தொடர்ந்து செய்யப்பட்டு வந்தாலும், மேற்படி சிறப்பு வகைக்குத் தந்தது போக எஞ்சியுள்ள கல்வி மானியங்கள் பெரும்பாலும் உயர்தரக் கல்விக்காகவும் ஆராய்ச்சிக்காகவுமே அளிக்கப்படுகின்றன. வேளாண்மை மானியங்களின் பெரும்பகுதி மதிய உணவுத் திட்டத்திற்கான செலுத்தலேயாகும். வரவு செலவுத் திட்டக் கழகம் (The Bureau of the Budget) இச் செலவினத்தை வேளாண்மை என்னும் தலைப்பின்கீழ்க் குறித்திருந்தாலும் கல்வி என்னும் தலைப்பின்கீழ் இதனை இணைத்துவிடுவதே பொருத்தமான முறையாகும். இதனைத் தவிர, வேளாண்மை விரிவுத் திட்டம் (Agricultural Extension Programme), வேளாண்மைப் பரிசோதனை நிலையங்கள் (Agricultural Experiment Stations) ஆகியவற்றை நடத்துவதற்காகவும் வேளாண்மை மானியங்கள் வழங்கப்படுகின்றன. 9ஆவது அட்டவணையில் உள்ள பிற பெரிய இனங்கள் எளிதில் விளங்கக் கூடியவையே.

உதவி மானியங்கள் என்னும் ஏற்பாடானது, மிக விரிவான வருவாய்ச் சாதனங்களும் கடன் வாங்கும் ஆற்றலும் படைத்த மைய அரசாங்கங்களின் நிதிகளை, குறிப்பிட்ட வட்டாரங்களோடு மிக நெருக்கமான தொடர்புடைய—கீழ்நிலையில் உள்ள—சிறிய அரசாங்கங்கள் மூலமாகச் செலவிடவைத்து, அப்படிச் செலவிடுவதன் மூலம் சில அரசாங்கப் பணிகளைச் சிறப்பாக நிறைவேற்றி வருகிறது. இப் பணிகளிற் சிலவற்றை அரசியல் திட்ட விதிகளின் படிக் கூட்டரசாங்கத்தால் மேற்கொள்ள முடியாது. ஆனால் இப் பணிகளை நிறைவேற்றவேண்டும் என்னும் நிபந்தனையோடு கீழ்நிலை அரசாங்கங்கட்குக் கூட்டரசாங்கத்தால் தரப்படும் மானியங்கள், இப் பணிகளை, விரும்பத்தக்க வகையில் நிறைவேற்றிவிடுகின்றன. ஆனால், இந்த உதவிமானியம் ஏற்பட்டால், இந்த மானியத்தைப் பெறுகிற அரசாங்கங்களுக்குச் சில ஆபத்துகள் ஏற்படக்கூடும். ஒரு டாலருக்குப் பதிலாக இரண்டு டாலர் உதவி தருவதாக மேல்நிலை அரசாங்கம் முன் வருமானால் அந்த உதவியை வேண்டாம் என்று மறுத்துவிடுவது அத்துணை எளிய செயல் அன்று. ஆனால் அத்தகைய பெருந்தொகையைத் தகுந்த முறையில் செலவிடுவது, அதனைப் பெற்றுக்கொண்ட அரசாங்கத்தின் ஆற்றலுக்கு மீறிய செயலாக இருக்கக்கூடும். அதோடு, அத்தகைய செலவுகள், இரண்டு வகையான வரவு செலவுத் திட்டக் கண்ணோட்டங்களுக்கு ஆளாகின்றன. ஒரு குறிப்பிட்ட பணியின் மொத்தச் செலவில் 50 சதவீத

அளவுக்கு அது மதிப்புடையது என்று மானியம் கொடுக்கும் அரசின் வரவு செலவுத் திட்டம் கருதக்கூடும். அதுபோலவே மானியத்தைப் பெறுகின்ற அரசின் வரவு செலவுத் திட்டமும் கருதக்கூடும். ஆனால், அந்த இரு வரவு செலவுத் திட்டங்களும் அப்படிக் கருதுவதாலேயே வரி செலுத்துவோருக்கு அத் திட்டத்தால் ஏற்படுகிற மொத்தச் செலவின் அளவுக்கு அது மதிப்புடையதாகத்தான் இருக்கவேண்டும் என்னும் கட்டாயம் இல்லை அல்லவா? உதவி மானியங்களால் இன்னோர் ஆபத்தும் ஏற்படக்கூடும். மானியம் கொடுக்கும் அரசாங்கம் மானியத்தை நிறுத்திவிட்டால், ஒன்று மானியத்தைப் பெறுகின்ற அரசாங்கமே, குறிப்பிட்ட பணிக்கான முழுச் செலவையும் ஏற்கவேண்டிவரும், அல்லது அந்தப் பணியையே நிறுத்திவிடும்—கசப்பான முடிவுதான்.

**அரசாங்கச் செலவுகளும் பொருளாதார நிலைமைகளும்**

அரசாங்கச் செலவின் போக்கு, அச் செலவால் நிறைவேற்றப் படுகிற முக்கியமான பணிகள், செலவுக்கட்டுப்பாடு ஆகிய பொருள் களைப்பற்றி இந்த அத்தியாயத்தில் இதுவரை நாம் ஆராய்ந்துள்ளோம். அரசாங்கச்செலவைப் பற்றி ஆராய்வதற்கு நெடுங்காலமாகக் கையாளப்பட்டுவரும் முறை இதுதான். அரசாங்கம் தன் பணத்தை எவ்வாறு செலவிடுவது என்பதைப்பற்றித் தெரிந்து கொள்வதற்கு, இத்தகைய ஆராய்ச்சிமுறை கட்டாயமாக வேண்டற்படுவது ஆகும். இது உண்மைதான் என்றாலும், அரசாங்கச் செலவின் பொருளாதாரத் தன்மைகளின் ஒரு பகுதியை மட்டுமே இந்த ஆராய்ச்சி முறையால் நாம் தெரிந்துகொள்ள முடியும். பெரும்பாலான அரசாங்கப் பணிகள் இன்றியமையாத அடிப்படைப் பணிகள் ஆகும். அந்தப் பணிகளால் ஏற்படும் நன்மைகள் பொருளாதார வாழ்க்கையின் எல்லாப் பிரிவுகளுக்கும் கிடைக்கின்றன. இந்த உண்மையைப் பலர் மறந்துவிடுவதால் இதனை வற்புறுத்திச் சொல்லவேண்டியிருக்கிறது. பாதுகாப்பு, நெடுஞ்சாலை அமைப்பு, கல்வி, தகவல் அளிப்பு ஏற்பாடுகள், பணப் பாதுகாப்புக்கான ஏற்பாடுகள் முதலிய அரசாங்கப் பணிகளால் வாணிப சமுதாயமும் தனி ஆட்களும் எவ்வளவு அதிகமாகப் பணம் ஈட்டமுடிகிறது என்பதை ஒரு கணம் சிந்தித்துப்பாருங்கள். இந்தப் பணிகளெல்லாம் இல்லாவிட்டால் நாட்டின் பொருளாதாரத்தால் எந்த அளவுக்குப் பண்டங்களை உற்பத்தி செய்யமுடியும்? தனியார் சொத்துக்குப் பாதுகாப்பு இல்லாமலிருந்தால், தனியார் பொருளாதாரத்தின் தொழில் வளர்ச்சிக்குத் தேவையான முதல் திரட்சி (capital accumulation) எவ்வாறு ஏற்பட்டிருக்கமுடியும்? நெடுஞ்சாலைப் போக்குவரத்தானது இப்போது உள்ள அளவுக்கு வளராமல் இருந்திருந்தால், நாட்டின் பொருள் உற்பத்தியும் பங்கீடும்

(national production and distribution) எவ்வளவு குறைந்த அளவில் இருந்திருக்கும்? பொருள் உற்பத்திபற்றிய அறிவு வளர்ச்சிக்கும் செய்திப் போக்குவரத்தின் வளர்ச்சிக்கும் பொதுக் கல்வியானது எந்த அளவுக்கு உதவி புரிந்திருக்கிறது என்பதை நாம் அளந்து அறிய முடியுமா? வேளாண்மை உற்பத்தி முறைபற்றிய தகவல்கள் பரப்பப்பட்டதால் எந்த அளவுக்கு வேளாண்மையின் உற்பத்தி அதிகமாகியிருக்கிறது? அதுபோலவே எந்த அளவுக்கு வேளாண்மையின் உற்பத்திச் செலவு குறைந்திருக்கிறது? சொத்துக்குத் தரப்பட்டுள்ள பாதுகாப்புக் காரணமாக இந்தக் காலத்தில் ஏற்படுகின்ற பொருளாதார நன்மைகள் அளவிறந்தன அல்லவா? இவ்வாறெல்லாம் நாட்டின் பொருளாதாரத்திற்குப் பலவகையிலும் நன்மை புரிவதே அரசாங்கப் பணிகளின் அடிப்படைத் தன்மையாக இருக்கிறது. எனவேதான், அரசாங்கச் செலவால் நாட்டின் பொருளாதாரத்துக்கு ஏற்படும் நன்மைகள், அச் செலவைவிடப் பல மடங்கு அதிகமாக இருக்கின்றன என்றும், அமைதிக் காலத்தில் அரசாங்கம் செய்யும் செலவின் பெரும்பகுதி இயற்கையாகவே உற்பத்தியை அதிகப்படுத்தும் தன்மை படைத்ததாக இருக்கிறது என்றும் நாம் முடிவுசெய்ய வேண்டியிருக்கிறது.

அரசாங்கச் செலவின் விளைவுகளை ஆராய்ந்துபார்க்கும் பழைய, குறுகிய கண்ணோட்டமுள்ள முறை, அரசாங்கம் நடத்துகின்ற நேர்முகத் துய்ப்பு ஊழியங்களின் சமூக மதிப்பை மட்டுமே (Social value of direct consumer services performed by government) அலசிப் பார்க்கிறது. நாம் மேலே சுட்டிக்காட்டியிருப்பதைப் போல, அரசாங்கப் பணிகளிற் பெரும் பகுதி, நாட்டுப் பொருளாதாரத்தின் உற்பத்தித் திறமையை அதிகப்படுத்துகிறது என்பது உண்மைதான். ஆனால் அரசாங்கச் செலவுபற்றிய புதிய - விரிவான கண்ணோட்டம், அந்தச் செலவால் ஏற்படுகிற விளைவை அல்ல, அந்தச் செலவுக்கு, செலவு என்கிற நிலையிலேயே முக்கியத்துவத்தை விரிவாக ஆராய்கிறது.

பணம் செலவிடப்படும் பணியின் பயனை ஒரு கணம் மறந்துவிட்டு, செலவுசெய்வது என்கிற அந்தச் செயலாலேயே, நாட்டின் பொருளாதாரத்தில் உள்ள வருமான ஓட்டம் எவ்வாறு பாதிக்கப் படுகிறது என்பதைக் கவனித்துப் பார்ப்போம். கல்விக்கான செலவால் கல்வி பரவுகிறது என்பது உண்மைதான். ஆனால் புத்தகங்களை வாங்குவது, ஆசிரியர்களுக்கு ஊதியம் வழங்குவது, பள்ளிக்கூடக் கட்டிடங்களைக் கட்டுவது முதலிய செலவுகளால், பொருளாதார நடவடிக்கையின் பொதுஅளவு எவ்வாறு பாதிக்கப்படுகிறது? வேலையின் அளவும் (the level of employment) வருமானப் பங்கீடும்

(the distribution of income) எவ்வாறு பாதிக்கப்படுகின்றன? புத்தக வெளியீட்டாளர்களும், பள்ளிக்கூட ஆசிரியர்களும், கட்டிடத் தொழிலாளர்களும், கட்டிட ஒப்பந்தக்காரர்களும் அரசாங்கத்திடமிருந்து பணத்தைப் பெற்றதும் அவர்கள் அந்தப் பணத்தை என்ன செய்கிறார்கள்? அவர்களுடைய அச் செயலால் நாட்டின் பொருளாதாரத்தில் ஏற்படும் மாறுதல் யாது?

நாட்டின் பொருளாதாரத்தில், வருமானங்கள், ஒருவரிடமிருந்து இன்னொருவரிடம் மாறிமாறிச் சென்றபடி இருக்கின்றன. 'அ' என்பவரின் வருமானம் செலவு செய்யப்பட்டவுடன், அது, 'ஆ' என்பவரின் வருமானமாக ஆகிவிடுகிறது. மளிகைக் கடைக்காரரின் வருமானம், அவருடைய வாடிக்கைக்காரர்கள் தங்களுடைய வருமானத்தை மளிகைப் பொருள்களுக்காக எந்த அளவு செலவழிக்கிறார்கள் என்பதைப்பொறுத்திருக்கிறது. புத்தகவெளியீட்டுத் துறையில் வேலை எந்த அளவு இருக்கும் என்பது, அரசாங்கமும் தனியாட்களும் எந்த அளவு புத்தகங்களை வாங்குகிறார்கள் என்பதைப் பொறுத்திருக்கிறது. கட்டிடவேலைத் தொழிலாளர்களுக்கும், பொருள்களுக்கும் எந்த அளவு தேவை இருக்கும் என்பது அரசாங்கத் துறையிலும் தனியார் துறையிலும் மேற்கொள்ளப்படுகிற கட்டிடவேலைகளின் அளவைப் பொறுத்திருக்கிறது. அரசாங்கத்தால் செய்யப்படுகிற செலவானாலும், தனியாட்களால் செய்யப்படுகிற செலவானாலும், எந்தச் செலவுக்கும், வருமானத்தை உண்டாக்குகிற ஆற்றல் இருக்கிறது. புதிய தொழில்களையும், படைமுகாம்களையும், பல்வேறு பொதுப் பணித் திட்டங்களையும் தங்கள் வட்டாரங்களில் இடம்பெறும்படிச் செய்வதில் வட்டார வணிக மன்றங்கள் (local chambers of commerce) காட்டுகின்ற பேரூக்கத்திலிருந்து இவ் வுண்மை தெளிவாக விளங்குகிறது. இத்தகைய உண்மைகளைத்தான் செலவைப்பற்றிய பழையகாலக் குறுகிய கண்ணோட்டம் அலட்சியம் செய்திருக்கிறது.[21] ஆனால் பொருளாதார நல்வாழ்வின் அளவை நிர்ணயிப்பதில் இத்தகைய உண்மைகள் பேராற்றல் படைத்தனவாக இருப்பதால் இவற்றைப் பற்றி நுணுக்கமான முறையில் ஆராய்வது, இன்றியமையாத செயலாக இருக்கிறது.

## மேலும் படித்தற்கு உரியவை

**பொது:**

*1.* ஜான் எப்., ட்யூ (John F. Due), 'Government Expenditures and their Significance for the Economy'. இது, கே. ஈ. பூல் (K. E. Poole) என்பாரைப் பதிப்பாசிரியராகக் கொண்ட **Fiscal Policies and the American Economy** (நியூயார்க், ப்ரென்டிஸ் ஹால், *1951*, அத்தியாயம் 5) என்னும் நூலில் உள்ளது.

அரசாங்கச் செலவுகளின் வளர்ச்சியில் அடங்கியுள்ள பொருளாதார உள்ளுறைபற்றி ஆரம்ப நிலையில்இருந்து செய்யப் பட்டுள்ள ஒரு பொதுக் கருத்தாய்வு.

2. சாலமன் ஃபேப்ரிகன்ட் (Solomon Fabricant, The Trend of Government Activity in the United States since 1900, நியூயார்க், National Bureau of Economic Research, 1952.

அண்மையில் வெளியான மிக அருமையான கருத்தாய்வு. படிப்பதற்குச் சுவையானதாக இருப்பதோடு சிறப்புமிக்க பகுத்தாய் வாகவும் விளங்குகிறது. இந் நூலின் 153 பக்கங்களையும் படிப்பது மிகுந்த பயன்தரவல்லது. போதிய நேரம் இல்லாவிட்டால், 1, 2, 3, 4, 6, 7 ஆகிய அத்தியாயங்களைப் படிக்கவும். அவை நம் புத்தகத் தின் இந்த அத்தியாயத்திற்கு மிகவும் பொருத்தமானவை.

3. எம். ஸ்லேடு கெண்ட்ரிக் (M. Slade Kendrick), A Century and a half of Federal Expenditures, Occasional Paper 48, நியூயார்க், National Bureau of Economic Research, 1955.

நீண்ட காலக் கோணத்திலிருந்து செய்யப்பட்டுள்ள ஒரு சிறிய (54 பக்கங்கள் கொண்ட) உரை விளக்க ஆராய்ச்சி.

4. ஜே. ஏ. மாக்ஸ்வெல் (J. A. Maxwell), The Fiscal Impact of Federalism in the United States, கேம்ப்ரிட்ஜ் ஹார்வார்ட், 1946, பாகம் 1.

இந்தப் பாகத்தின் பல்வேறு அத்தியாயங்கள், தலையாய செலவுகள் செய்யப்பட்டு வருகிற பணிகளைப்பற்றி ஆராய்கின்றன. இந் நூலின் போக்கு, பகுத்தாய்வுத் தன்மை, வரலாற்றுத்தன்மை இரண்டையும் உடையதாக விளங்குகிறது.

**உதவி மானியங்கள்:**

1. எச். ஜே. பிட்டர்மான் (H. J. Bittermann), State and Federal Grants in Aid, நியூயார்க், மென்ட்சர் (Mentzer), புஷ் (Bush), 1937.

இந்தப் பொருள்பற்றிய மிக விரிவான கருத்தாய்வு. 1, 2, 3 ஆகிய அத்தியாயங்கள், பொதுவானவை. பிற அத்தியாயங்கள் உதவிக் கொடைகள், குறிப்பிட்ட நோக்கங்களுக்காகவும், பல்வேறு மட்டங்களில் உள்ள அரசாங்கங்களாலும் கையாளப்படும் முறை பற்றி விளக்குகின்றன.

2. ஆர். ப்ளௌ (R. Blough) 'Federal and State Grants in Aid.' இது எச். எம். க்ரோவ்ஸ் (H, M. Groves) என்பாரின் Viewpoints on Public Finance என்னும் நூலில் (நியூயார்க், ஹோல்ட், (Holt) 1947, பக்கங்கள் 600—608) உள்ளது.

நல்ல, சிறிய கருத்தாய்வு, சமநிலைப் படுத்தும் நோக்கத்திற்காகக் கொடைகள் பயன்படுத்தப்படுவதுபற்றிச் சிறப்பாக ஆராயப்படுகிறது.

3. ஜே. ஏ. மாக்ஸ்வெல் (J. A. Maxwell), Federal Grants and the Business Cycle, நியூயார்க், National Bureau of Economic Research, 1952

இது, கூட்டரசாங்க மானியங்களின் வரலாறுபற்றிய மிக அருமையான சுருக்கமாகத் திகழ்வதோடு, மாநிலப் பணிகளின் தரங்களை ஒத்தநிலை உடையதாக ஆக்குவதற்கும், பொருளாதாரத்தை நிலைபேருக்கம் செய்வதற்கும் கொடைகள் எவ்வாறு பயன்படும் என்பதைப்பற்றிய அறிவில் சிறந்த பகுத்தாய்வாகவும் விளங்குகிறது.

## 3ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. Grundlegung der politischen Oekonomie. புத்தகம் 6, அத்தியாயம் 3 (3ஆவது பதிப்பு, 1893). இதன் மொழிபெயர்ப்பு, சி. ஜே. புல்லக் (C. J. Bullock) என்பாரின் Selected Readings in Public Finance என்னும் நூலில் (3ஆவது பதிப்பு, நியூயார்க், ஜின் (Ginn) 1924, பக்கம் 32), மேற்கோளாகத் தரப்பட்டுள்ளது.

2. எப், எஸ். நிட்டி (F. S. Nitti), Principi di scienza delle finanze, 1903, பக்கங்கள் 64–100. சி. ஜே. புல்லக் என்பாரால் மொழிபெயர்க்கப்பட்டு, முன்னர்க் குறிப்பிட்ட நூலில் 32 ஆம் பக்கத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

3. தனியாரின் வாழ்க்கைத்தரத்தோடு ஒப்பிடும்போது, நாட்டின் வருமானத்தில் அரசாங்கச் செலவுகளின் பங்கானது, அரசாங்க வாழ்க்கைத் தரத்தை அளவிடுவதற்கான ஒரு சுமாரான கருவியாகவே இருக்கமுடியும் என்பதற்கான காரணங்கள், 4ஆவது, 5ஆவது அத்தியாயங்களைப் படித்தபின், வெள்ளிடை மலையெனத் தெளிவாகும். அரசாங்கச் செலவால் நாட்டின் வருமானம் எந்த அளவு படைக்கப்படுகிறது என்பதில் அடங்கியுள்ள முக்கியத்துவம், இந்த அத்தியாயத்தைப் பொறுத்தவரை, இன்றியமையாததல்ல என்பதை, இப்போதைக்கு நாம் கூறலாம், எடுத்துக்காட்டாக, அரசாங்கச் செலவில் ஏற்படுகிற 100 சத வீத உயர்வால் நாட்டின் வருமானத்தில் 5 சதவீத உயர்வு ஏற்படுமானால், இந்த வீதங்கள், தலை சிறந்த சிறப்பு உடையன என்பது உண்மையே. ஆனால், இந்த அத்தியாயத்தில், நாம் அரசாங்கச் செலவால் ஏற்படுகிற விளைவுகளைப்பற்றி அக்கறை காட்டமுடியாது. அரசாங்க ஊழியங்களிலிருந்து நேர்முகமாகப் பெறக்கூடிய பயன்பாட்டு நன்மைகளைப்பற்றிப் (direct benefits in utilities)

பொதுமக்கள் கொண்டுள்ள கருத்து அரசாங்கச் செலவில் எந்த அளவு நிழலாடுகிறது என்பதைப்பற்றியே நாம் இந்த அத்தியாயத்தில் அக்கறை கொண்டுள்ளோம்.

4. ஆல்பிரட் ஜி. ப்யூலரின் (Alfred G. Buehler) Public Finance, நியூயார்க் மெக்ரா ஹில் (McGraw Hill) 1936, பக்கம் 53—காண்க.

5. நாட்டின் தொழில்மாநாட்டுக் கழகத்தின் (National Industrial Conference Board) Tax Burdens and Public Expenditure, நியூயார்க், 1925, பக்கம் 4.

6. ஹென்றி ஜே. பிட்டர்மான், State and Federal Grants in Aid, நியூயார்க், மென்ட்சர், புஷ், 1938, பக்கம் 98.

7. ஆல்வின், எச். ஹான்சன் (Alvin H. Hansen), Fiscal Policy and Business Cycles, நியூயார்க், நார்டன், 1941, பக்கம் 123.

8. பிட்டர்மான், முன்னர்க் குறிப்பிட்ட நூல், பக்கம் 99.

9. பொதுக் கல்விக்கான கூட்டரசாங்கத்தின் உதவியின் முக்கியத்துவம் வளர்ந்துகொண்டிருப்பதால், அதனை முற்றிலும் புறக்கணிக்கமுடியாது, தொடக்கத்தில் கூட்டரசாங்கத்தால் மாநில அரசாங்கங்கட்குத் தரப்பட்ட நிலங்களில் பெரும்பகுதி, பள்ளிக்கூடங்களுக்கென்றே குறிப்பிட்டுத் தரப்பட்டன. பின்னர், நில மானியமும் பண மானியமும் 'நில மானியக் கல்லூரிகளை' (Land grant colleges) உருவாக்குவதற்காகத் தரப்பட்டன. இவையே அன்றி, பொறித்துறைக் கல்வியையும் வேளாண்மைக் கல்வியையும் பெருக்குவதற்காக, கூட்டரசாங்கத்தால் பல்வேறு சட்டங்களின்படி, நிதிகள் வழங்கப்பட்டன. 1930ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளில், ஏழை மாணவர்களின் பள்ளிக்கூட—கல்லூரிச் செலவுகளுக்கு உதவுவதற்காக, நாட்டின் இளைஞர் நிர்வாகத்தால் (National Youth Administration) பெருந்தொகைகள் செலவிடப்பட்டன. பள்ளிக்கூடங்களுக்கான பணியை நிறைவேற்றுவதற்காக இந்தச் செலுத்தல்கள் பொதுவாகத் தரப்பட்டன. இரண்டாம் உலகப்போருக்குப் பிந்திய காலத்தில், பள்ளிக்கூடம், கல்லூரி, வேலைக்கான பயிற்சி ஆகிய செலவுகளுக்காகப் போர் வீரர்களுக்குக் கூட்டரசாங்கத்தால் ஏராளமான தொகைகள் வழங்கப்படுகின்றன. இந்தத் தொகைகளால் அவ் வீரர்கள்மட்டுமின்றிப் பள்ளிக்கூடங்களும் நன்மையடைகின்றன. உயரும் செலவுகள், பணிசெய்வோரின் பற்றுக்குறை ஆகியவற்றின் காரணமாகப் போருக்குப் பிந்திய காலத்தில் பொதுக் கல்வி உள்ள நிலையானது வட்டாரக் கல்விக்குக் கூட்டரசாங்கமானது பெரும் அளவில் நேர்முக உதவியைத் தரக்கூடும் என்பதை எடுத்துக்காட்டும் தன்மையாக விளங்குகிறது.

10. விலைக் கட்டுப்பாடு, பங்கீடு (rationing), முதன்மைகள் (priorities), ஒதுக்கீடு (allocation) ஆகியவை எல்லாவற்றையும்விட அழுத்தந்திருத்தமான பொருளாதாரக் கட்டுப்பாடுகளைக் குறிக்கின்றன. அவை, 'போரின் விளைவாகப் பிறந்த' கட்டுப்பாடுகளே தவிர, இந்தப் பிரிவில் கருத்தாய்வு செய்யப்படுபவை போன்ற 'மந்தத்தின் விளைவாகப் பிறந்த' கட்டுப்பாடுகள் அல்ல என்றபோதிலும், அவற்றைப் புறக்கணிக்கக்கூடாது.

11. நிறுவனத்திற்கு ஏற்படுகிற இந்தச் செலவுகள், இரண்டு வகைப் படும். (1) சட்ட ஊழியங்கள், கணக்கிடுதல் அறிவித்தல் பொது இணக்கம் (compliance) ஆகியவைபற்றிய நிர்வாகச் செலவுகள். (2) ஒழுங்குபாட்டு நோக்கத்தை (regulatory objective) நிறைவேற்றுவதன் விளைவாக ஏற்படக் கூடிய கூடுதல் செலவுகள். எடுத்துக்காட்டு : பொது வசதிக் கட்டண ஒழுங்கு பாட்டின் (Public utility rate regulation) விளைவாக இலாபத்தில் ஏற்படும் குறைவு.

12. 'பணித்துறை ஆட்சி' (Bureaucracy) என்னும் சொல்லமைப்பின் சரியான பொருள், விதிகளின்படி நடைபெறுகிற நிர்வாக முறை என்பதே. பெரிய அளவிலோ சிறிய அளவிலோ சிவப்பு நாடா (Red tape) அமைந்திருப்பது, அதனுடைய இயல்புகளில் ஒன்றாகும். ஆனால், 'பணித்துறை ஆட்சி' என்பது, இப்போது, அன்றாடப் பேச்சு வழக்கில், திறமையின்மை, ஊழல், ஏராளமான வேலைகளை உருவாக்குவதற்காக, அல்லது குறிப்பிட்ட துறையின் தலைவருடைய நிலைமையை உயர்த்துவதற்காக அளவுக்கு மீறிப் பெரிதாக உள்ள அமைப்பை ஏற்படுத்துவது முதலியவற்றைக் குறிக்கும் சொல்லமைப்பாக ஆகிவிட்டது. இந்தப் பொருள்பற்றிய ஒரு தலையாய கருத்தாய்வை, Bureaucracy and Trusteeship in Large Corporations என்னும் நூலில் (Temporary National Economic Committee, நூல் 11, வாஷிங்டன், 1940) காணலாம்.

13. பல மாநிலங்கள், தலை வரிகள் நாய் வரிகள், பல்வேறு லைசென்சுகள் ஆகியவற்றின்மீது ஏதோ ஒருவகைக் கட்டண வரையறைகளை விதித்துள்ளன. அத்தகைய சிறிய வருவாய்க் கருவிகள்மீதான கட்டுப்பாடுகள் பொதுச் செலவுகளைக் கட்டுப்படுத்துவதற்காக ஏற்பட்டவை அல்ல என்பதால், இந்தக் கருத்தாய்வில் அவற்றைப்பற்றி நாம் ஆராயவில்லை.

14. மாநில அரசாங்கங்கள்மீதும் தல அரசாங்கங்கள்மீதும் விதிக்கப் படுகிற இந்த வகையான மொத்த வரிக்கட்டண வரையறையானது (Over-all tax rate limitation), 1943-ல் ஒன்பது மாநிலங்களில் கையாளப்பட்டது. வரி வரையறைக்கு எதிரான வாதங்கள் சிறப்பாக விளக்கப்பட்டிருப்பதைக் காண வேண்டின், ஜி. எம். மாரிஸ் (G. M. Morris) என்பாரின் Tax Limitation Laws என்னும் நூலைக் [சிகாகோ, அமெரிக்க நகராட்சிச் சங்கம் (American Municipal Association), 1943] காண்க.

15. சில மாநிலங்களில் செய்யப்படுவதைப்போல, ஒரு தல அரசாங்கத்தின் மொத்தச் செலவுகள்மீது ஓர் உச்சஅளவு ஏற்படுமானால், நடைமுறையில், சொத்துவரிக் கட்டணத்தின்மீது உச்சஅளவு ஏற்பட்டதாகவே ஆகும். ஏனென்றால், தலஅரசாங்க வருவாய்களில் சொத்து வரிகளுக்கு உள்ள முக்கியத்துவம், தல வரவுசெலவுத் திட்டம் ஒத்தநிலை உடையதாக இருக்கவேண்டும் என்னும் மரபு, மதிப்பீடுகள் (assesments) மெதுவாகத் திருத்தியமைக்கப்படும் நிலை ஆகியவற்றின் விளைவாக சொத்துவரிக் கட்டணமானது, வேறுபடும்போது அதனை ஒட்டி வேறுபடுகிற முதன்மையான மாறியாக (principal variant) ஆகிவிடுகிறது.

16. 1945 ஏப்ரலில், கூட்டரசாங்கக் கடனின் அளவு 300 மில்லியன் டாலராக உயர்ந்துவிட்டது. அதுமுதல், சட்டமன்ற நடவடிக்கையின் விளைவாகக் கீழ்க்கண்ட மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன ;

| தேதி : | கடன் அளவின் தொகை (பில்லியன் டாலரில்) | நிலையானது (நி) தாற்காலிகமானது (தா) |
|---|---|---|
| 26—6—1946 | 275 | நி |
| 28—8—1954 | 281 | தா |
| 1—7—1956 | 278 | தா |
| 1—7—1957 | 275 | நி |
| 26—2—1958 | 280 | தா |
| 2—9—1958 | 288 | தா |
| 1—7—1959 | 295 | தா |
| 1—7—1960 | 285 | நி |

17. விதி 5, பிரிவு 4. விதிவிலக்குகள் பின்வருமாறு: 'செல்லுபடியாகும் தற்போதைய ஒரு கடனை நிதியாக்குவது அல்லது மறு நிதியாக்குவது குறிப்பிட்ட நிதி ஆண்டிற்கு உரிய—அந்த ஆண்டிலேயே செலுத்தப்படவேண்டிய வரி வசூலை எதிர்பார்த்து, அந்த வசூலில் 50 சதவீதத்திற்கு மேற்படாத ஒரு தொகையைக் கடன் வாங்குவது, தற்செயலாக ஏற்படுகிற ஒரு பற்றுக்குறையை நிரப்புவது, கலகங்கள் அல்லது ஆட்சிக்கு எதிரான கிளர்ச்சிகளை அடக்குதல், படையெடுப்புகளை முறியடித்தல்'.

18. மாநில அரசாங்கங்களால் வசூலிக்கப்பட்டு, தல அரசாங்கங்களால் பங்கிட்டுக்கொள்ளப்படுகிற வரிகள், அண்மை ஆண்டுகளில் பலவாகப் பெருகிவிட்டன. ஆனால் இவை உதவிக்கொடைகள் ஆகமாட்டா. ஏனென்றால், வட்டார அரசாங்கங்களுக்குப் பங்கிட்டுத் தரப்படுகிற இவ் வரித் தொகைகள், எந்தக் காலத்திலும் மாநில அரசாங்க நிதிகளாக இருந்ததில்லை.

19. கீழ் மட்டத்தில் உள்ள ஓர் அரசாங்கத்திலிருந்து மேல் மட்டத்தில் உள்ள ஓர் அரசாங்கத்திற்கு மாற்றப்படுகிற—சிறிய அளவுடைய—தொகைகள் இதில் சேர்க்கப்படவில்லை. கீழ்க்கண்ட வகைகளில் தல அரசாங்கங்கள், நிதிகளை மாநில அரசாங்கங்களுக்கு மாற்றுகின்றன : மாநில அரசாங்கத்திடமிருந்து அவற்றிற்குக் கிடைத்த கடன்களைத் திருப்பித் தருதல், மாநில ஓய்வுக்கால ஊதிய நிதிக்குத் (State Pension Funds) தங்கள் ஊழியர்களின் சார்பில் அவை தருகிற செலுத்தல்கள், பின்னர் மாநில–தல–இணைப்பு நிவாரணமாகத் தரப்படுவதற்காக நிவாரண நிதிகளை மாநில அரசாங்கத்திற்கு மாற்றுதல், மாநில–வட்டாரங் நெடுஞ்சாலைகளை அமைப்பதற்காகத் தல அரசுகளால் மாநில அரசுகட்குத் தரப்படும் முன்பணங்கள் ஆகியவை இவற்றைப்போலவே, மாநில அரசுகள், கூட்டரசாங்கத்திற்கு முந்திய பொதுப்பணிகளுக்கான கடன்களைத் திருப்பித் தருகின்றன. இவற்றில் எந்தச் செலுத்தலையும் கொடையாகக் கருதமுடியாது. காண்க : ஐக்கிய அமெரிக்க சென்சஸ் பீரோ, Financing Federal, State and Local Governments : 1941, 1942; பக்கங்கள் 55-56.

20. Compendium of State Government Finances in 1958, பக்கம் 25.

21. நீண்ட காலமாக இருந்துவருகிற குறுகிய கருத்தாக இங்கே தெரிவிக்கப்பட்டிருப்பது வெறும் கற்பனை அல்ல. ஆடம்ஸ்மித் (Adam Smith) (1776) காலத்திலிருந்து இந்தத் தலைமுறை வரையில் பொதுநிதிஇயல் பற்றி எழுதியுள்ள எல்லாத் தலையாய எழுத்தாளர்களும், நிதிநடவடிக்கைகளை, நுகர்வு ஊழியங்களை நிறைவேற்றுவதற்காகத் தனியார் வருமானத்தைப் பொது

உபயோகத்திற்கு எடுத்துக்கொள்ளும் நிதி ஒதுக்கங்களாகவே கருதிவந்திருக்கிறார்கள். அந்த அரசாங்கச்செலவு, அதைப் பெறுபவர்களுடைய வருமானம் என்னும் முறையில் எத்தகைய விளைவுகளைத் தருகிறது என்பதை ஆராய்ந்து அறிய அவர்களில் யாரும் முயற்சி செய்யவில்லை. இவ்வாறாக அவர்கள், வரி விதிப்பை, நாட்டின் வருமானத்திலிருந்து கழிக்கப்படுகிற ஒரு தொகையாக மட்டுமே கருதினார்களே தவிர, வருமானத்தை உருவாக்கும் இயல்பு செலவுக்கு இருப்பதைப்பற்றி அவர்கள் சிறிதளவும் உணர்ந்திருந்ததாகத் தெரியவில்லை.

ஆடம் ஸ்மித், (Wealth of Nations என்னும் அவருடைய நூல், நவீன நூல்நிலையப் பதிப்பு, 1937) அரசாங்கச் செலவுகள், 'பயன்தரா உழைப்புக்' கான செலுத்தல்களே என்றும் (பக்கங்கள் 877-78), 'ஒரு குறிப்பிட்ட ஆண்டில் (அந்த ஆண்டின் உற்பத்தியில் அல்லது நாட்டு வருமானத்தில்) பயன்தரா உழைப்பாளிகளுக்காகக் குறைந்த அளவு செலவிடப்பட்டால் அதிக அளவு தொகையும், மிகுந்த அளவு செலவிடப்பட்டால் குறைந்த அளவு தொகையும், பயன்தரும் உழைப்பாளிகளுக்குச் செலவிடுவதற்காக எஞ்சியிருக்கும்; அப்படி எஞ்சியிருக்கும் தொகையின் அளவுக்கு ஏற்பவே அடுத்த ஆண்டின் உற்பத்தியின் அளவு அமைந்திருக்கும்; ஓர் ஆண்டின் முழுஉற்பத்தி என்பது பயன்தரும் உழைப்பின் விளைவே' என்று (பக்கம் 315) குறிப்பிட்டுள்ளார். பயன்தரும் உழைப்புக்கும் பயன்தரா உழைப்புக்கும் இடையே இருப்பதாக ஆடம் ஸ்மித்தால் எடுத்துக்காட்டப்படும் வேறுபாட்டைப்பற்றிய கருத்துவேறுபாடுகளைப்பற்றி நமக்கு இப்போது கவலையில்லை. அரசாங்கச் செலவால் நாட்டின் வருமானத்தை உயர்த்தமுடியாது என்றும், அந்தச் செலவால் அது குறையுமா என்பது, முந்திய ஆண்டின் வருமானத்தில் வரிகளாக எடுத்துக்கொள்ளப்பட்ட பகுதி தனியாரிடமே இருந்திருந்தால் அது பயன்தரும் உழைப்புக்காகச் செலவிடப்பட்டிருக்குமா என்பதையே பொறுத்திருக்கிறது என்றும், ஆடம் ஸ்மித் கருதினார் என்பதுதான், நம்மால் இங்கே கவனிக்கப்பட வேண்டிய செய்தியாகும்.

ஆடம் ஸ்மித்தைப்போலவே, ரிகார்டோ (Ricardo), ஜே. எஸ். மில் (J. S. Mill), பாஸ்டபில் (Bastable), எச். சி. ஆடம்ஸ் (H. C. Adams) ஆகியோரும், வரிகளைத் தனியார் வருமான ஓட்டத்திலிருந்து எடுக்கப்பட்ட நிதிகளாக மட்டுமே கருதி, அந்த நிதிகள் மீண்டும் அந்த ஓட்டத்தில் சேர்க்கப்படுவதால் ஏற்படுகிற வருமானத் தூண்டல் விளைவுகளைப் புறக்கணித்திருக்கிறார்கள். இந்தக் குறுகிய கருத்து, ஆடம்ஸ் (Adams) என்பாரின் Science of Finance (1906) என்னும் நூலில் பின்வருமாறு காணப்படுகிறது: 'நாட்டின் கையில் இருக்கிற முழுச்செல்வமே தொடக்கக் கட்டம் ஆகும். தனியாள் வாழ்க்கையையும் நாட்டின் வாழ்க்கையையும் மிகச்சிறந்த வளர்ச்சி அடையச் செய்வது எப்படி என்பதே நம் குறிக்கோள் ஆகும். மக்களுடைய வாழ்க்கைக்கு ஊட்டத்தையும், நாட்டின் உறுப்புகளுக்கு வளர்ச்சியையும், அவை மிக அதிகமாகத் தேவைப்படுகிற இடங்களில் கிடைக்கத்தக்க முறையில், நுகர்வின் பல்வேறு வகைகளுக்கு இடையே செலவைப் பொருத்தமாகப் பங்கிடுவது எப்படி என்பதே, நம்மால் தீர்க்கப்படவேண்டிய சிக்கல் ஆகும்.' (பக்கம் 29).

இதே கருத்துத்தான் பேராசிரியர் எச். எல். லட்ஸ் (Professor H. L. Lutz) அவர்களின் கீழ்க்கண்ட வாசகங்களில் அமைந்துள்ளது: 'அறிவார்ந்த குடிமக்களை உருவாக்குவதில் கல்வியின் முயற்சி வெற்றிபெறுகிறதா என்பது தான், பொதுக்கல்விக்கான செலவின் பயனைக் கண்டறிவதற்கான சோதனை ஆகும்.....................' 'நிவாரணச் செலவானது, தன்மான உணர்ச்சியையும்,

தன்னைத்தானே காப்பாற்றிக்கொள்ளும் உணர்வையும் அழிக்காமல் துயரங்களைத் தடுக்குமானால், அது பயனுள்ள செலவாகும். (productive expenditure). (பக்கம் 164). 'நாட்டில் உற்பத்தியாகிற மொத்தச் செல்வத்தின் அளவு ஓரளவுக்கு, அரசாங்கச் செலவால் நேர்முகமாகக் கூடுதலாகக்கூடும். சிறந்த முறையில் நடத்தப்படுகிற அரசாங்க வாணிபத் தொழில்துணிவுகள், காடுகளை வளர்க்கும் திட்டங்கள், நிலமீட்சித் திட்டங்கள், பிறவகை அரசாங்க வாணிபங்கள் ஆகியவை, இதற்கான எடுத்துக்காட்டுகள் ஆகும். இயல்பான ஊழியங்களுக்கான செலவின் விளைவாகக்கூட, சமுதாயத்தின் மொத்தச் செல்வத்தைப் பெருக்கக்கூடிய அரசாங்கக் கட்டிடங்கள் போன்ற சில சொத்துகள் ஏற்படக் கூடும், (பக்கம் 167). (இவ் வாக்கியங்கள், பேராசிரியர் லட்ஸ் அவர்களின் Public Finance என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டவை. 3-வது பதிப்பு, நியூயார்க், ஆப்பில்டன் சென்ச்சரி, 1936).

பேராசிரியர் லட்சின் கண்ணோட்டத்தில், WPA நாடகக் குழுவால் நடத்தப்படுகிற ஒரு நாடகம், உற்பத்தியைப் பெருக்குவதாகக் கருதப்படமாட்டாது என்றாலும், நிவாரணப் பட்டியலிலிருந்து எடுக்கப்பட்ட நடிகர்கள், தங்கள் ஊதியத்தை ரொட்டிக்காகச் செலவிடும்போது, அந்தச் செலவால், சில்லறைக் கடை, ரொட்டி உற்பத்திக்கடை, மாவுமில்கள் ஆகியவற்றில் வேலையும் வருமானமும் ஏற்படுகின்றன; கோதுமையை விளைவிக்கும் உழவர்கட்கும் வருமானம் ஏற்படுகிறது. பாரமௌண்ட் பிக்சர்சின் நடிகர் ஒருவர் ரொட்டி வாங்குவதால் நாட்டின் வருமானத்தில் ஏற்படுகிற விளைவுகள், மேற்படி விளைவுகளிலிருந்து குறிப்பிடத்தக்க அளவு வேறுபட்டிருக்குமா ?

இந்தக் கருத்தோட்டங்களுக்கு மாறாக, 1820-ல் வெளியான டேனியல் ரேமாண்ட் (Daniel Raymond) என்பார் 'Thoughts on Political Economy' என்னும் நூலில், அரசாங்கச் செலவின் பொதுவான பொருளாதார விளைவுகள் அறிந்துள்ள போக்கு அமைந்திருப்பதைக்கண்டு நாம் மகிழ்ச்சியடையலாம். ரேமாண்ட், ஓர் அமெரிக்க வழக்கறிஞர், தன்னைத்தானே மகிழ்வித்துக் கொள்வதற்காகவும், பெரும்பெரும் சட்ட நூல்களைப் படித்துப்படித்துக் களைப்பு அடைந்திருந்ததாலுமேதான், இந்தப் புத்தகத்தை எழுதியதாக அவர் கூறுகிறார். அவருடைய கருத்துக்களை (அக் காலத்தில்) யாரும் ஏற்றுக்கொண்டதாகத் தெரியவில்லை என்றபோதிலும், அவை புதுமை படைத்தனவாகவும், அறிவைத் தூண்டியெழுப்பும் ஆற்றல் மிகுந்தனவாகவும் இருக்கின்றன. அவருடைய நூலிலிருந்து எடுக்கப்பட்ட கீழ்க்கண்ட வாசகம், நாம் இந்த அத்தியாயத்தில் தெரிவித்துள்ள விரிவான கருத்தின் அடிப்படையில் அமைந்திருப்பதைக் காணலாம்: 'இயற்கையான உடலைப்போலவே அரசியல் உடலும் சில சமயங்களில், சோம்பலும் மந்தமும் உடைய ஒரு நிலையை அடையக்கூடும். அத்தகைய சமயங்களில், சில தூண்டுதல்களைப் பயன்படுத்துவதன்மூலமாக, உறங்கிக் கிடக்கும் அதன் ஆற்றல்களைத் தட்டியெழுப்பவேண்டிய இன்றியமையாமை ஏற்படுகிறது. பொதுப்பணிகளில் அரசாங்கப் பணத்தைச் செலவிடுவதால், பல சமயங்களில், இத்தகைய விளைவை ஏற்படுத்தமுடியும்.' (பக்கம் 294)

# 4. நிதிக் கொள்கையும் பொருளாதார நடவடிக்கையின் அளவும்

சென்ற அத்தியாயத்தில் நாம், கூட்டரசாங்கம், மாநில அரசாங்கங்கள், தல அரசாங்கங்கள் ஆகியவற்றின் செலவுகளில், ஒரு குறிப்பிட்ட காலஅளவில் காணப்படுகிற போக்குகளை ஆராய்ந்து அறிந்தோம். பொருளாதார வளப்பொருள்கள் (Economic resources) அரசாங்கப் பணிகளுக்கும் தனியார் பணிகளுக்கு மிடையே எவ்வாறு பங்கிடப்படுகின்றன என்பதுபற்றிய உண்மைகளும், அரசாங்கத் துறையிலேயே அத் துறையின் பல்வேறு பணிகளுக்கிடையே அவை எவ்வாறு பங்கிடப்படுகின்றன என்பது பற்றிய உண்மைகளும் மேற்படி போக்குகளில் பொதிந்து கிடக்கின்றன. அரசாங்கச் செலவின் நீண்டகாலப் போக்குகளில் கூட்டரசாங்கத்தின் பாதுகாப்புச் செலவே தலைசிறந்த இடத்தைப் பெற்றிருக்கிறது. எனவே அப் போக்குகளின் தன்மை, பல நாடுகளுக்கு இடையே உள்ள உறவைப் பொறுத்திருக்கிறது. பாதுகாப்புச் செலவோடுகூட, நெடுஞ்சாலை அமைப்பு, பொதுக்கல்வி அளித்தல், வளப்பொருள்களின் வளர்ச்சி முதலான பொருளாதாரச் செழிப்புக்கான பணிகளை ஆற்றுவதிலும் அரசாங்கம் பெருந் தொகைகளைச் செலவிடுகிறது. ஆகவே, நாட்டுப் பாதுகாப்பு, தனியார் பாதுகாப்பு, பொருளாதாரச் செழிப்பு முதலிய சமூகக் குறிக்கோள்களை நிறைவேற்றுவதற்காக அரசாங்கம் எடுத்துக்கொள்கிற முயற்சிகளையே அரசாங்கச் செலவு படம்பிடித்துக் காட்டுகிறது என்று கூறலாம்.

ஆனல் அரசாங்கச் செலவுப் போக்குகளில் தெளிவாகக் காணப்படாத மற்ருெரு குறிக்கோளும் இருக்கிறது. பொருளாதார நிலைபேறு (economic stability) என்னும் அக் குறிக்கோள், முக்கியத்துவம் உடையது. அரசாங்க நிதி நடவடிக்கையால் பொருளாதார நிலைபேற்றில் ஏற்படக்கூடிய மாறுதல்களை ஆராய்ந்தறிவதே இந்த அத்தியாயத்தின் நோக்கம்.

**மொத்தப் பொருளாதார நடவடிக்கையை அளந்தறிதல் (Measurement of Aggregate Economic Activity)**

பொருளாதார நடவடிக்கையை அளந்தறிவதற்கான ஒரு முறை வகுக்கப்பட்டால்தான், பொருளாதார நிலைபேறு அல்லது நிலைபேறின்மையைப் (Economic Stability or instability) (அல்லது பொருளாதார வளர்ச்சியைப்) பற்றிய ஆராய்ச்சியை நடத்த முடியும். நிலைபேறின்மை என்பது, மீக்கோள்தரம் (norm) ஒன்றிலிருந்து எந்த அளவுக்கு அல்லது எந்த வீதத்தில் தற்போதைய நிலைமை மாறியிருக்கிறது என்பதை அளந்தறியும் தன்மையை உடைய கருத்து (quantitative concept) ஆகும்.

உற்பத்தியின் (வருமானத்தின் அல்லது வேலையின்) நிலைபேறின்மை (instability of output or of income or employment), விலைகளின் நிலைபேறின்மை (instabitiy of prices)—ஆகிய இரண்டுமே, மொத்தப் பொருளாதார நிலைபேறின்மை வகைகளில் மிகுந்த முக்கியத்துவம் உடையன ஆகும். விலைகளின் நிலைபேறின்மையை அளக்க விலைகளின் குறியீட்டெண்கள் (Index numbers of prices) நீண்ட நாட்களாகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

மொத்த உற்பத்திக்கான(வருமானத்திற்கான) அளவுகோல்கள் அண்மைக் காலத்திலேயே உருவாக்கப்பட்டன என்றாலும், பொருளாதார நடவடிக்கைகளை ஆராய்ந்தறிவதற்கான தரமுள்ள கருவிகளாக அவை இப்போது பயன்படுகின்றன.[1] நாட்டின் மொத்த ஆக்கமானது (gross national product) ஒரு குறிப்பிட்ட காலத்தில் நாட்டில் உற்பத்தியாகிற பொருள்கள், ஊழியங்கள் ஆகியவற்றின் மொத்த அங்காடி மதிப்பை (aggregate market value) அளந்தறியப் பயன்படுகிறது. நாட்டின் நிகர ஆக்கம் (net national product), நாட்டின் வருமானம் (national income), தனியாள் வருமானம் (personal income), செலவிடக்கூடிய தனியாள் வருவானம் (disposable personal income) முதலிய வேறு சில அளவுகோல்களை நாட்டின் மொத்த ஆக்கத்திலிருந்து நாம் உருவாக்கமுடியும். இந்த அளவைகளில் ஒவ்வொன்றும், குறிப்பிட்ட பொருளாதாரப் பிரச்சினைகளை ஆராய்வதற்குத் தேவையான திட்டமும் நுட்பமும் செறிந்ததாக அமைந்துள்ளது.

மொத்த உற்பத்தியை நாம் பணத்தின் மூலமாகத்தான் அளக்கமுடியும். ஆகவே; மொத்த உற்பத்தியின் அளவானது அந்த உற்பத்தியை வாங்குவதற்காக ஆகும் செலவின் அளவாகவும் அமைந்துவிடுகிறது. அந்த இருவகை அளவைகளும் ஒரே உற்பத்தி முறையின் இரண்டு பக்கங்களாக (அல்லது இரண்டு

தன்மைகளாக) இருப்பதால் அவை இரண்டுமே, வருமானத்தையும் அளக்கும் திறம் உடையனவாக உள்ளன. ஆகவே, உற்பத்தி அல்லது ஆக்கம் (output or product), அந்த உற்பத்தி அல்லது ஆக்கத்தின்மீது செய்யப்படும் செலவு, வருமானம் ஆகிய மூன்றும் ஒரே வகைப் புள்ளிவிவரங்களைக் குறிக்கும் மூவகைக் கருத்துகள் ஆகும். பொருளாதார நடவடிக்கையின் அளவினைக் கண்டறிவதற் கான—ஒன்றை ஒன்று முற்றிலும் ஒத்த—அளவுகோல்களே அவை. மற்றொரு மாறி (variable) ஆகிய வேலையும் (employment) இந்த மூன்றோடு ஒத்த அளவுபோலவே பொதுவாகப் பயன்படுத்தப் படுகிறது. ஆனால் சற்று சிந்தித்துப் பார்த்தால், இந்த மூன்றைப் போல—இவற்றை முற்றிலும் ஒத்ததாக—அது இருப்பதில்லை என்பதும், ஆனால் குறுகிய காலங்களில் இவற்றின் மாறுதல் எந்தப் போக்கில் செல்லுகிறதோ அதே போக்கில்தான் அதன் மாறுத லும் அமைகிறது என்பதும் விளங்கும்.

**பொருளாதார நடவடிக்கையின் வீதத்தைத் தீர்மானிப்பவை (Determinants of the Rate of Economic Activity)**

இந்த அத்தியாயத்தைக் கண்ணுறும் வாசகர்களில் பலர் வருமானம், வேலை ஆகியவற்றின் அளவு எவ்வாறு நிர்ணயிக்கப் படுகிறது என்பதுபற்றிப் பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டுள்ள ஆராய்ச்சியை வேறு நூல்கள் வாயிலாக ஓரளவு அறிந்திருக்கக் கூடும். அங்காடிப் பொருளாதாரத்தில், ஒரு பொருளுக்குச் செலவு (தேவை) இருக்கும் என்று தெரிந்தால்தான் அந்தப் பொருள் உற்பத்தியாகிறது. நடப்பு உற்பத்தி (current output) மூன்று வகையாகச் செலவாகக் கூடும். 1. நுகர்ச்சிப் பொருள்களையும் ஊழியங்களையும் (consumption goods and services) தனியாட்கள் வாங்குதல். 2. முதலீட்டுப் பொருள்களையும் ஊழியங்களையும் (investment goods and services) தனியாரின் வாணிப நிறுவனங்கள் வாங்குதல். 3. அரசாங்கங்கள் அவற்றிற்குத் தேவையான பொருள்களையும் ஊழியங்களையும் வாங்குதல். இந்த மூன்று வகைச் செலவுகளும் சேர்ந்து, நடப்பு உற்பத்திக்கான மொத்தச் செலவுக ளாக ஆகின்றன.[2] விலைக்கு வாங்கப்பட்ட பொருள்கள்—ஊழியங் களின் மொத்த அளவு, நடப்பு உற்பத்தியின் மொத்த அளவைப் பிரதிப்பலிக்கிறது. ஆனால், அரசாங்க நிதி நடவடிக்கைகள் யாவும் இந்த ஆராய்ச்சியிலிருந்து விலக்கப்பட்டுள்ளன என்பது உண்மை தான். நன்கொடைகள், அறவழிச் செலுத்தல்கள் (charitable payments), இன்சூரன்ஸ் தவணைத் தொகைகள் மற்றும் நன்மைகள் (premiums and benefits), வரிகள், பாங்குக் கணக்குகளின் வைப்பு களும் திரும்பப் பெறல்களும் (deposits and withdrawals) பங்குத்

தொகுப்புகள் மற்றும் பத்திரங்கள் பற்றிய நடவடிக்கைகள் (stock and bond transactions)முதலிய நிதிமாற்றங்கள் (transfers of funds), பொருள்களேயும் ஊழியங்களேயும் நேர்முகமாக வாங்கும் நடவடிக்கைகள் ஆகமாட்டா. அதுபோலவே, ஏற்கெனவே பயன்படுத்தப் பட்ட பொருள்களை வாங்குவதும் மொத்தச் செலவில் (உற்பத்தியில்) சேராது. ஏனென்ருல் அந்தப் பொருள்கள் நடப்பு உற்பத்தியில் சேர்ந்தவை அல்ல. (அவை முன்னரே உற்பத்தி செய்யப்பட்டவை.)

மொத்தமாகப் பார்க்கும்போது (in the aggregate) பொருளாதார நடவடிக்கை என்பது, உற்பத்தியை வாங்குவதற்கான செலவின் வட்டச் சுழற்சி ஆகும். உற்பத்தியை வாங்குவதற்காகச் செய்யப்படும் செலவு, உற்பத்தியில் ஈடுபட்டுள்ளோருக்கு, அதே அளவு வருமானத்தை ஏற்படுத்துகிறது. அந்த வருமானம், உற்பத்தியை வாங்குவதற்காக மீண்டும் செலவிடப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட காலத்தில் மொத்தச் செலவின் வீதமானது (rate of aggregate spending) மாருமல் இருக்குமாளுல், அந்தக் காலத்தில், பொருளாதார நடவடிக்கையின் அல்லது உற்பத்தியின் வீதமும் நிலேயாகவே இருக்கும்.[3] அந்தக் காலத்தில் மொத்தச் செலவின் வீதமானது அதிகரிக்குமாளுல் அக் காலப் பொருளாதார நடவடிக்கையின் அளவும் கூடுதலாகும். அவ்வாறின்றி மொத்தச் செலவின் வீதமானது குறையுமாளுல் பொருளாதார நடவடிக்கையின் அளவும் சுருங்கிவிடும்.

நாட்டுப் பொருளாதாரத்தின் மொத்தச் செலவில் ஏற்படுகிற நிலேபேறின்மையிலிருந்துதான் உற்பத்தி அல்லது வேலேயின் நிலேபேறின்மை உருவாகிறது. இத்தகைய பிறழ்ச்சியை உண்டாக்குகின்ற மீக்கோள்தரம் (norm) வேலே நிறைவு (full employment) என்று பொதுவாக அழைக்கப்படுகிறது. தொழிலாளர்கள், முதல் ஆகிய உற்பத்திச் சக்திகளின் முழு ஆற்றலேயும், தொழில் நுண்ணியலின் தற்போதைய நிலேயின் உச்ச அளவில் பயன்படுத்துவதால் ஏற்படுகிற உற்பத்தி அளவையே வேலேநிறைவு என்று அழைக்கிருேம்.[4] பயன்படுத்தப்படாத உற்பத்தித் திறமை, உற்பத்தி செய்யப்படாத பொருள்களே—அதாவது சமூகத்தின் இழப்பைக் குறிக்கிறது என்னும் உண்மையை உணர்ந்ததால் ஏற்பட்ட விளேவுதான் வேலேநிறைவு என்னும் குறிக்கோள். மேலும், விருப்பமற்ற வேலேயின்மை (involuntary unemployment) தனியாட்களுக்கு இடுக்கண் விளேக்கிறது என்பதும் பெரும்பாலும் விருப்பமற்ற வேலேயின்மை உண்டாவதற்கு சிறிதுகூடப் பொறுப்பாளியாகாதவர்களே மிகவும் துன்பப்படுத்துகிறது என்பதும் உணரப் படுகின்றன. உற்பத்தித் திறமைக்கு மீறிய அளவில் மொத்தச்

செலவு இருக்குமானால், விலைப் பணவீக்கம் (price inflation) ஏற்பட்டு, அப் பணவீக்கத்தால் உண்மை வருமானங்களின் பங்கீட்டில் மாறுதலும், பின்னிறக்கத்தையோ (recession) மந்தத்தையோ (depression) உண்டாக்கவல்ல பொருளாதாரச் சீர்குலைவுகளும் உண்டாகலாம்.

செலவில் ஏற்படும் நிலைபேறின்மையே, பொருளாதார நடவடிக்கையில் ஏற்படும் நிலைபேறின்மைக்குக் காரணமாக இருப்பதால், மூன்று பெரிய செலவினங்களாகிய நுகர்ச்சிச் செலவு, தனியார் முதலீட்டுச் செலவு, அரசாங்கச் செலவு ஆகியவற்றைப் பாதிக்கும் காரணிகளை (factors) ஆராய்ந்து அறிவது இன்றியமையாத செயலாக அமைகிறது. நாட்டின் மொத்த ஆக்கம், அதனுடைய தலையாய செலவுப் பகுதிகள் (major expenditure components) ஆகியவை 1929-லிருந்து எவ்வாறு மாறுதல் அடைந்துள்ளன என்பதைக் கீழே உள்ள படம் விளக்குகிறது.

படம் 1

**நாட்டின் மொத்த ஆக்கமும் அதன் தலையாய செலவுப் பகுதிகளும்**
*1929—1959**




Billions of Dollars - பில்லியன் டாலர்கள்; gNP - நாட்டின் மொத்த ஆக்கம்; Personal consumption Expenditure - தனியாள் நுகர்வுச் செலவுகள்; Government Purchases - அரசாங்க வாங்குதல்கள்; Private Domestic Investment - தனியார் உள் நாட்டு முதலீடு.

* வாணிபத் துறையில் நாட்டுவருமானம் ('National Income') 1954, நடப்பு வியாபாரத்தின் சர்வே ('Survey of current Business') ஜூலை 1958, பொருளாதார இண்டிகேடர்கள் ('Economic Indicators') ஏப்ரல் 1960 ஆகியவற்றிலிருந்து எடுக்கப்பட்டவை. நிகர அயல்நாட்டு முதலீடு, இத்தப் படத்தில் பயனுள்ள முறையில் காட்ட முடியாதபடி மிகச் சிறியதாக இருப்பதால் படத்தில் காட்டப்படவில்லை.

காரணம் எது, விளைவு எது என்பது பற்றிய கேள்விகளைத் தற்போதைக்கு ஒதுக்கிவைத்துவிட்டுப் பார்த்தால், 1930-ஐத் தொடர்ந்த பத்து ஆண்டுகளின் பொருளாதார மந்தத்தின்போது, வியாபார நடவடிக்கைகளின் வீழ்ச்சி ஏற்பட்டதைப் போலவே, ஏறத்தாழ அதே அளவில் தனியார் நுகர்விலும் தனியார் முதலீட்டிலும் வீழ்ச்சி ஏற்பட்டது என்பதை அறியலாம். பொருள்களையும் ஊழியங்களையும் அரசாங்கம் வாங்கியதன் விளைவாக இந்த வீழ்ச்சி மிகச் சிறிய அளவிலேயே தடுக்கப்பட்டது. இரண்டாவது உலகப் போரின்போது நாட்டின் மொத்த ஆக்கத்தில் குறிப்பிடத்தக்க உயர்வு ஏற்பட்டதற்கான தலையாய காரணம், கூட்டரசாங்கத்தின் செலவு உயர்வே. ஏனென்றால் அந்தக் காலத்தில் தனியாரின் முதலீடு, நுகர்வு இரண்டுமே செயற்கையான முறையில் தடுக்கப்பட்டிருந்தன. போரைத் தொடர்ந்த உடனடி ஆண்டுகளில், தனியார் நுகர்வுச் செலவில் ஏற்பட்ட மாபெரும் உயர்வும், தனியார் முதலீட்டில் ஏற்பட்ட உயர்வும், அரசாங்கச் செலவில் ஏற்பட்ட விரைவான வீழ்ச்சியையும் மீறிக்கொண்டு நாட்டின் மொத்த ஆக்கம் வளர்வதற்கு வழிவகுத்தன. 1950ஐத் தொடர்ந்த ஆண்டுகளில் நாட்டின் மொத்த ஆக்கம் வளர்ந்ததற்கும் தனியார் நுகர்வு உயர்வே தலைசிறந்த காரணமாகும். ஆனால், தனியார் முதலீட்டில் பொதுவாக ஏற்பட்ட உயர்வும், கொரியாப் போர், பனிப்போரின் (cold war) வளர்ச்சி, கல்வி—நெடுஞ்சாலைத் தேவைகளின் வளர்ச்சி ஆகிய காரணங்களால் அரசாங்கச் செலவில் ஏற்பட்ட பெருக்கம், நாட்டின் மொத்த ஆக்கத்தை உயர்த்துவதில் தனியார் நுகர்வுக்குத் துணையாக இருந்தன என்பது உண்மை.[5]

மேலே சொல்லப்பட்ட தனியார் நுகர்வு, தனியார் முதலீடு, அரசாங்கச் செலவு ஆகியவற்றின் மாறுதல்களை இன்னும் தெளிவாகக் கீழே உள்ள 2ஆவது படம் விளக்குகிறது. அம் மூன்றையும் இப் படம், நாட்டின் மொத்த ஆக்கத்தின் சதவீதக் கணக்கில் காட்டுகிறது. இந்தப் படத்தில் காட்டப்பட்டுள்ள வீதாச்சாரம் பொதுவாக உயர்ந்துவருகிற நாட்டின் மொத்த ஆக்கத்தின் வீதாச்சாரம் என்பதையும், இப் படத்தில் விளக்கப்படும் மாறுதல்கள், நாட்டுச் செலவின் மேற்படி மூன்று பகுதிகளின் ஒப்பீட்டு முக்கியத்துவத்தில் ஏற்படும் மாறுதல்கள் என்பதையும் நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும்.

படம் 2

**நுகர்வு, தனியார் உள்நாட்டு முதலீடு, அரசாங்க வாங்குதல்கள், ஆகியவை—நாட்டின் மொத்த ஆக்கத்தில் இத்தனை சதவீதம் என்னும் கணக்கில்***




Percent - *சதவீதம்* ; Consumption - *நுகர்வு* ; government Purchases— *அரசாங்க வாங்குதல்கள்* ; Private Domestic Investment - *தனியார் உள்நாட்டு முதலீடு*.

* *1ஆவது படத்தின் அடிக்குறிப்பில் தரப்பட்டுள்ள புள்ளி விவரங்களிலிருந்து கணக்கிடப்பட்டவை.*

**தனியார் நுகர்வுச் செலவுகளின் போக்கு (Behaviour of Private Comsumption Expenditures:** தனியார் நுகர்வுச் செலவுகளே, மொத்தச் செலவுகளின் மிகப் பெரும் பகுதியாக விளங்குகிறது என்னும் உண்மையை—மிக நன்ருகத் தெரிந்த உண்மையை 1 ஆவது படம் சித்தரிக்கிறது. இரண்டாவது உலகப் போரின்போது ஏற்பட்டதைப்போல நுகர்வின் மீது செயற்கைத் தடைகள் விதிக்கப்படும்போதும், 1930ஐத் தொடர்ந்த ஆண்டுகளின் பொருளாதார மந்தத்தின்போது ஏற்பட்டதைப் போலத் தனியார் முதலீட்டில் இயல்புக்கு மாருன வீழ்ச்சி (abnormal decline in private investment) ஏற்படும் போதும் தவிர, மற்ற சமயங்களில், நுகர்வுச் செலவானது, நாட்டின் மொத்த ஆக்கத்தில் கிட்டத்தட்ட மூன்றில் இரண்டு பங்காக இருந்துவருகிறது. 1957-ல் நுகர்வுச் செலவு, நாட்டின் மொத்த ஆக்கத்தில் 64·7 சதவீதமாக இருந்தது. இது அந்த ஆண்டினுடைய சராசரி நுகர்வு நாட்டம் (average propensity to consume) ஆகும்; அதாவது, நாட்டின் மொத்த ஆக்கத்தினுடைய சராசரி டாலரில் நுகர்வுக்குச் செலவாகும் வீதாச்சாரம் ஆகும். 2ஆவது படத்தில் உள்ள நுகர்வுச் செலவுக் கோட்டின் பல்வேறு புள்ளிகள் (points) அந்தந்த ஆண்டுகளின் சராசரி நுகர்வு நாட்டத்தைக் குறிப்பவை.[6] சராசரி நுகர்வு நாட்டமானது, நாட்டின் மொத்த ஆக்கத்தின் வீதாச்சாரக் கணக்கில் தெரிவிக்கப்படும் போது, அது மொத்தப் பொருளாதார நடவடிக்கையானது எந்த அளவுக்கு நுகர்வோரின் உடனடி விருப்பங்களை (wants) நிறைவேற்றும் தன்மையதாக இருக்கிறது என்பதை அளப்பதற்கான கருவியாகப் பயன்பட முடியும். விரைந்து வளரும் பொருளாதாரங்களில் (rapidly developing economics) இருப்பதைவிடக் குறைந்த உற்பத்திப் பொருளாதாரங்களில் (low productivity economics) இந்த சராசரி நுகர்வு நாட்டம் அதிகமாக இருக்கும் என்று நாம் எதிர் பார்க்கலாம். ஏனென்ருல் விரைந்து வளரும் பொருளாதரங்களில், நடப்பு உற்பத்தியின் பெரும்பகுதி உற்பத்திக்கான வசதிகளிலும் ஊழியங்களிலும் முதலீடு செய்யப்பட்டுவிடும்.

நிதிக் கோட்பாடுகளை வகுப்பதற்கும் ஆராய்ச்சிக்கும் சராசரி நுகர்வு நாட்டத்தைவிட இறுதிநிலை நுகர்வு நாட்டமே (marginal propensity to consume) மிகவும் பொருத்தமாக இருக்கும். இதற்குக் காரணம், வருமான மாறுதல்கள் பெரும்பாலும் இறுதிநிலையில் நிகழ்வதே ஆகும்; அதாவது சற்றே அதிகமாக அல்லது சற்றே குறைவாக நிகழ்வதே ஆகும். அரசாங்கச் செலவில் ஏற்படும், ஒரு சிறு உயர்வு, நாட்டின் மொத்த வருமானத்தில் சிறிதாகவே ஏற்படும் உயர்வு போன்றதே. அதுபோலவே வரி வீதங்களில்

ஏற்படும் ஒரு மாறுதல் தனியாரிடமும் வாணிபங்களிடமும் விடப் பட்டுள்ள வரிக்கு முந்திய வருமானத்தில் ஒரு சிறு மாறுதலை ஏற்படுத்தலாம். (நாட்டின் மொத்த ஆக்கத்தோடு தொடர்புடைய) இறுதிநிலை நுகர்வு நாட்டம் என்பது, நாட்டின் மொத்த ஆக்கத்தில் ஏற்படுகிற மாறுதலுக்கும் நுகர்வில் ஏற்படுகிற மாறுதலுக்கும் உள்ள விழுக்காட்டை (ratio) குறிப்பதாகும். நாட்டின் மொத்த ஆக்கத்தில் ஏற்படுகிற ஒரு மாறுதலின் விளைவாக நுகர்வுச் செலவில் எத்தகைய மாற்றம் ஏற்படும் என்பதையே அது குறிக்கிறது.[7] பொதுவாக வழக்கத்தில் உள்ள நுகர்வோரின் மனப்போக்குகளை வைத்துப் பார்த்தால் வருமானங்கள் உயர உயர, நுகர்வுச் செலவின் உயர்வுவீதம் குறைந்துகொண்டே வரும் என்று எதிர்பார்க்கலாம். அதாவது, வருமானங்கள் உயரும்போது ஏனைய நிலைகள் யாவும் மாறுதலின்றி இருக்குமானால், வருமான உயர்வைவிட அதிக வீதத்தில் சேமிப்புகள் உயர்கின்றன. தாழ்ந்த வருமானப் பெறுபவர்களைவிட உயர்ந்த வருமானம் பெறுபவர்களிடம் நுகர்வு நாட்டம் குறைந்த அளவினதாகவும் சேமிப்பு நாட்டம் (propensity to save) மிகுந்த அளவினதாகவும் இருக்கின்றன. உயர்ந்த வருமானப் பிரிவினரிடமிருந்து தாழ்ந்த வருமானப் பிரிவினருக்கு வருமானமானது மாற்றிப் பங்கிடப்படுமானால், சராசரி நுகர்வு நாட்டம் இறுதிநிலை நுகர்வு நாட்டம் ஆகிய இரண்டுமே உயர்வு அடையும் என்பது இதிலிருந்து தெளிவாகின்றது. வருமானம் பங்கீட்டு முறையில் ஏற்படும் மாறுதலால், நுகர்வுப் பணி (consumption function) யின் நிலைமையில் அல்லது சாய்வில் (slope) அல்லது இரண்டிலும் மாறுதல் ஏற்படுகின்றது.

நாட்டின் மொத்த ஆக்கத்தின் மொத்தச் செலவில் பெரும் பகுதி நுகர்வுச் செலவாக இருப்பதால், அரசாங்க நிதிக்கொள்கை களின் பொருளாதார விளைவில் பெரும்பகுதி, தனியார் நுகர்வில் ஏற்படும் விளைவாகவே இருக்கிறது. இப்படிச் சொல்லும்போது நாம் பெருக்கும் எண் (multiplier) என்னும் கருத்தையே குறிப்பிடு கிறோம். அரசாங்கச் செலவால் அல்லது வரி வீத மாறுதலால், ஒரு குறிப்பிட்ட காலஅளவில், நுகர்வில் ஏற்படுகிற விளைவையே பெருக்கும் எண் குறிப்பிடுகிறது. K (பெருக்கும் எண்) என்பது,

$$\frac{1}{1 - \text{இறுதிநிலை நுகர்வு நாட்டம்}^{8}}$$

என்பதற்குச் சமமாக இருக்கிறது.

பெருக்கும் எண் விளைவைச் (multiplier effect) சில எடுத்துக் காட்டுகள்மூலம் கீழ்க்கண்டவாறு விளக்கலாம். நாட்டின் வருமான ஓட்டத்தில் (National income stream) 100 டாலர்

அளவுள்ள புதிய கூடுதல் செலவை அரசாங்கம் நுழைக்கிறது என்று வைத்துக்கொள்வோம். இந்த நுழைப்பால் ஒரு குறிப்பிட்ட கால அளவில் ஏற்படும் விளைவு எத்தகையதாக இருக்கும்? அது, அந்த வருமானத்தைப் பெற்ற தனியார் பொருளாதாரம், அதனை மறு செலவு செய்வதில் எத்தகைய நாட்டத்தைக் கொண்டிருக்கிறது என்பதைப் பொறுத்திருக்கிறது. தற்போதைக்கு நாம், நுகர்வு வாயிலாக ஏற்படுகிற மறுசெலவைமட்டுமே கவனிக்க முனைந்துள்ளோம். கூடுதல் வருமானத்தில் மூன்றில் இரண்டு பங்கு மட்டுமே நுகர்வுக்காக மறுசெலவு செய்யப்படுகிறது என்று வைத்துக்கொள்வோம். நாட்டு வருமானத்தில் அரசாங்கம் நுழைத்த 100 டாலரின் நீண்ட கால விளைவு பின்கண்டவாறு இருக்கும்:

$$\$100 + \$66{\cdot}67 + \$44{\cdot}44 + \$29{\cdot}63 + \ldots\ldots = \$300.$$

இந்த வரிசையில் பெருக்கும் எண் (multiplier) 3 ஆக இருப்பதைக் காணலாம். அதாவது அரசாங்கம் நுழைத்த செலவால் நீண்ட கால அளவில் ஏற்படுகிற நாட்டின் மொத்த ஆக்கம், அப்படி நுழைக்கப்பட்ட செலவைப்போல மூன்று மடங்காக இருக்கிறது.

ஆனால் நிதிக் கொள்கையின் நடைமுறையைப் பொறுத்த அளவில், அக் கொள்கையால் முடிவற்ற நெடுங்காலத்தில் ஏற்படுகிற மொத்த விளைவைவிடக் குறுகிய காலத்தில் ஏற்படுகிற விளைவைப்பற்றியே நாம் மிகுந்த கவனம் செலுத்தவேண்டியிருக்கிறது. இறுதிநிலை நுகர்வு நாட்டம் 0·67 ஆகவும், பெருக்கும் எண் 3 ஆகவும் இருக்கும்போது, முடிவற்ற நெடுங்காலத்தில் உருவாக்கப்படுகிற மொத்த வருமானத்தில் மூன்றில் இரண்டு பங்குக்குமேல், செலவு வரிசையின் முதல் மூன்று கட்டங்களிலேயே உருவாகிவிடுவதை, மேலே தரப்பட்ட செலவு வரிசையிலிருந்து நாம் தெரிந்துகொள்ளலாம். இறுதி நிலை நுகர்வு நாட்டம் 0·5 ஆகவும், பெருக்கும் எண் 2 ஆகவும் இருக்குமானால், மொத்த விளைவின் 87·5 சதவீதம், முதல் மூன்று கட்டங்களிலேயே உருவாகிவிடும். எனவே, குறுகிய கால விளைவுகளை மட்டுமே நாம் கவனித்துப் பார்த்தால்கூட, நுகர்வுக்கான மறுசெலவின் வாயிலாக ஏற்படும் பெருக்கும் எண் விளைவு (the multiplier effect through re - spending for consumption), நடைமுறையில் மிகுந்த முக்கியத்துவம் உடையதாக விளங்குகிறது.

இதனாலேயே, பொருத்தமான நிதிக் கொள்கையை உருவாக்குவதில் பெருக்கும் எண் விளைவுக்குக் குறிப்பிடத்தக்க இன்றியமையாமை இருக்கிறது. பல்வேறு செலவுத் திட்டங்களின் தராதரத்தைப் பற்றி ஆராயும்போது, உண்டாக்கப்படுகிற வேலை அல்லது

பண வீக்கத்தின் அளவைப் பொறுத்தமட்டில் பொருளாதாரத்தின் எந்தெந்தப் பகுதிகளில் என்னென்ன விளைவுகள் ஏற்படும் என்பது பெருக்கும்எண் விளைவைப் பொறுத்ததாக அமைகிறது. ஏற்கெனவே வேலை நிறைவைப் பெற்றுள்ள தொழிற்பகுதியில் அரசாங்கச் செலவை அதிகப்படுத்துவதால் ஏற்படும் விளைவுகள், பயன்படுத்தப்படாத வளப்பொருள்கள் உள்ள பொருளாதாரப் பகுதியில் அரசாங்கச் செலவை மிகுவிப்பதால் உண்டாகும் விளைவுகளிலிருந்து பெரிதும் வேறுபட்டிருக்கும். இறுதிநிலை நுகர்வு நாட்டத்தைக் குறைவாகப் பெற்றுள்ள தனியாட்களுக்கு அரசாங்கம் தருகின்ற மாற்றல் செலுத்தல்களால் (transfer payments) ஏற்படுவதைவிட, அந் நாட்டத்தை மிகுதியாகப் பெற்றுள்ள தனியாட்களுக்குத் தரப்படும் செலுத்தல்களால் ஏற்படுகின்ற பெருக்கும் எண் விளைவுகள் அதிகமாகவே இருக்கும். [முன்வகைச் செலுத்தல்களுக்கு ஓர் எடுத்துக்காட்டு : உயர்ந்த வருமானக்காரர்களுக்கு அரசாங்கத்தால் தரப்படுகின்ற வட்டிச் செலுத்தல்கள். பின்வகைச் செலுத்தல்களுக்கு ஓர் எடுத்துக்காட்டு : வேலையின்மை வசதிகள் (unemployment benfits).] வரிக்கோட்பாட்டிலும் இதே வகை நிலைமைதான் இருக்கும். வரி நிவாரணமானது (tax relief) அந்த நிவாரணத்தைப் பெறுகின்ற வரிசெலுத்துவோரின் மொத்த வருமானத்தில், நிவாரணத்திற்குமுன் விடப்பட்டிருப்பதைவிட மிகுதியான வீதாச்சாரத்தை, அவர்களிடம் விட்டுவைக்கிறது. இத்தகைய வரி நிவாரணமானது, இறுதிநிலை நுகர்வு நாட்டத்தை மிகுதியாகக் கொண்டவர்களுக்குத் தரப்படுமானால், நுகர்வுப் பொருள் துறையில் உருவாகும் புதுவேலையின் அளவு மிகுதியாக இருக்கும்.

**தனியார் முதலீட்டின் போக்கு (Behaviour of Private Investment):** முதலீட்டுப் பணிகளுக்காக வாணிப நிறுவனங்கள் செய்யும் செலவு, குறுகிய காலத்தில், நுகர்வுச் செலவைவிட மிக அதிகமான மாறுதலுக்கு உள்ளாகிறது. இந்த மாறுதல், படம் 3-ல் விளக்கப்பட்டுள்ளது. 1948–49, 1953–54, 1957–58 ஆகிய மூன்று பின்னிறக்கக் காலங்களில், ஒரு கால் ஆண்டிலிருந்து மற்றொரு காலாண்டிற்கு இடையே, நுகர்வு, தனியார் குடும்ப முதலீடு (private domestic investment), நாட்டின் மொத்த ஆக்கம் ஆகியவற்றில் ஏற்பட்ட சதவீத மாறுதல்களை இந்தப் படம் தெளிவுபடுத்துகிறது.

படம் 3.

அண்மையில் ஏற்பட்ட மூன்று பின்னிறக்கங்களின்போது, நாட்டின் மொத்த ஆக்கம், நுகர்வு, தனியார் உள்நாட்டு முதலிடு ஆகியவற்றில் காலாண்டுக்குக் கால் ஆண்டு ஏற்பட்ட சதவித மாறுதல்கள் *



Per cent - *சதவீதம்* ; consumption - *நுகர்வு* ; Private Domestic Investment - *தனியார் உள்நாட்டு முதலீடு* ; GNI - *நாட்டின் மொத்த ஆக்கம்* ; Lowest Quarter as measured by GNP - *மிகக் குறைவான காலாண்டு - நாட்டின் மொத்த ஆக்கத்தால் அளக்கப்பட்ட படி.* IQ'49 - ' 49-ன் *முதல் காலாண்டு* ; II Q'49 - '49-ன் *இரண்டாம் காலாண்டு*; III Q'49 - '49-ன் *மூன்றும் காலாண்டு*; IV Q'49 - '49-ன் *நான்காம் காலாண்டு* ; IQ'50 - '50-ன் *முதல் காலாண்டு*; II Q'50 - 50-ன் *இரண்டாம் காலாண்டு* ; IQ'53 - '53-ன் *முதல் காலாண்டு* ; II Q'53 - 53'-ன் *இரண்டாம் காலாண்டு* ; III Q'53 - '53-ன் *மூன்றும் காலாண்டு* ; IV Q'-53 - '53-ன் *நான்நாம் காலாண்டு* ; I Q'54 - '54-ன் *முதல் காலாண்டு* ; II Q '54 - '54-ன் *இரண்டாம் காலாண்டு* ; III Q '57 - 57-ன் *மூன்றும் காலாண்டு* ; IV Q '57 - '57ன் *நான்காம் காலான்டு* ; I Q 58 - '58-ன் *முதல் காலாண்டு*; II Q'58- '58-ன் *இரண்டாம் காலாண்டு* ; III Q' 58 - '58-ன் *மூன்றும் காலாண்டு.*

* வணிகத் துறையின் புள்ளி விவரங்களிலிருந்து கணக்கிடப்பட்டவை.

பின்னிறக்கக் காலங்களும் மீட்சிக் காலங்களும் (periods of recession and recovery) ஏன் எடுத்துக்கொள்ளப்பட்டன என்ருல், பொருளாதாரம் முழுவதும் நிலைபேறு அற்றதாக இருக்கும் காலத்தில் செலவின் தலையாய பகுதிகளில் உள்ள நிலைபேறின்மையின் அளவை அவை எடுத்துக் காட்டுகின்றன என்பதால்தான். முதலீட்டின் அளவில் ஏற்படுகிற மாறுதலை விளக்குவதற்கு முதலீட்டுத் தொகையில் இத்தனை டாலர் மாறுதல் ஏற்பட்டுள்ளது என்று சுட்டிக்காட்டுவதைவிட, இத்தனை சதவீத மாறுதல் ஏற்பட்டுள்ளது என்று எடுத்துக்காட்டுவதே மிகவும் ஏற்புடைய முறையாக இருக்கிறது. ஏனென்ருல் நுகர்வுச் செலவுகளின் மொத்த அளவைவிட முதலீட்டுச் செலவின் அளவு மிகவும் குறைவாகும். ஆனுல் முதலீட்டுத் தொகை மாறுதலை எடுத்துக்காட்டுகிற முறை எதுவாக இருந்தாலும், தனியார் பொருளாதாரத்தில் ஏற்படுகிற நிலைபேறின்மையின்போது, தனியார் நுகர்வில் ஏற்படுகிற நிலைபேறின்மையின் அளவைவிடத் தனியார் முதலீட்டில் ஏற்படுகிற நிலைபேறின்மையின் அளவு மிகுதியாகவே இருக்கும்.[9]

தனியார் முதலீட்டு நிலைபேறின்மை இவ்வாறு மிகுதியாக இருப்பதற்கான காரணங்களைக் கண்டறிவது, எளிதில் இயலக் கூடியதே. முதலீட்டின் ஒரு பகுதியானது 'தானுக இயங்குவது' (autonomous). எதிர்பார்க்கப்படுகிற நுகர்வு அளவைத் தவிர்த்த ஏனைய காரணங்களால் இயங்கும் தன்மை படைத்தது இப் பகுதி. முதலினப் பொருள்கள்பற்றிய துறையின் கண்டுபிடிப்புகள், பொருள்கள் அல்லது உழைப்பின் விலையில் ஏற்பட்டுள்ள அல்லது எதிர்பார்க்கப்படுகிற மாறுதல்கள், உற்பத்திக் கருவிகளைத் திருத்தி அமைக்கவேண்டிய அளவுக்குப் பொருள்களில் ஏற்படும் முன்

னேற்றம், குறிப்பிட்ட பொருள்களின் விலையில் அல்லது பொதுவான விலை மட்டத்தில் எதிர்பார்க்கப்படுகிற மாறுதல்கள், பிறருடன் போட்டியிடத்தக்க வல்லமையை நிலைநாட்டுவதற்காக உற்பத்தி முறையை 'நவீனமயமாக்கவேண்டிய தேவை ஆகிய இவை, 'தானுக இயங்கும்' முதலீட்டிற்கான சில காரணங்களாகும். முதலீட்டின் ஏனைய பகுதி, 'தூண்டப்பட்டது' (induced) ஆகும். நுகர்வு வீதத்தில் எதிர்பார்க்கப்படுகிற மாறுதலால் தூண்டப்படும் தன்மையானது இப் பகுதி. தனியார் வருமானத்தில் ஏற்பட்டுள்ள உயர்வு காரணமாக, அல்லது நுகர்வுப் பணி (consumption function) மேல்நோக்கி உயர்ந்ததன் காரணமாக ஏற்பட்டுள்ள அல்லது எதிர்பார்க்கப்படுகிற நுகர்வுவீத உயர்வு, இருப்புக்களிலும் (invetories) கூடுதலாகியுள்ள நுகர்வைத் திருப்திப்படுத்துவதற்குத் தேவையான வசதிகளிலும் செய்யப்படும் முதலீட்டை உடனடியாக உயர்த்தும். இதற்கு மாறுக, நுகர்வில் ஏற்பட்டுள்ள அல்லது ஏற்படக்கூடிய குறைவால், முதலீட்டுத் திட்டங்கள் கைவிடப்படக்கூடும்; தேய்மானம் அடைந்த முதலினக் கருவிகளைப் புதுப்பித்தலின் வேகம்கூடக் குறையக்கூடும். நாம் இங்கே குறிப்பிடுவது 'வேக வளர்ச்சி விதி' (the principle of acceleration) ஆகும். இந்த விதி, நடந்துமுடிந்த அல்லது எதிர்பார்க்கப்படுகிற விற்பனையின் ஒரு சிறு மாறுதலால், உற்பத்திக் கருவிகளுக்கும் இருப்புகளுக்கும் செய்யப்படும் செலவில், வீதாசாரத்தைவிட மிகுதியான மாறுதல் ஏற்படும் என்று தெரிவிக்கிறது. தானே இயங்கும் முதலீடு, தூண்டப்பட்ட முதலீடு என்னும் இரண்டு வகைப்பட்ட முதலீட்டின் விகிதம், பல்வேறு காரணங்களால் நிர்ணயிக்கப்படுகிறது. அக் காரணங்கள் அனைத்தையும் மொத்தமாகத் தொகுத்துப் பார்த்தால், அவை, முதலினக் கருவிகளை இலாபகரமான முறையில் வேலையில் ஈடுபடுத்துவதற்கான சாத்தியக்கூறுகள் என்னும் தலைப்பில் அடங்கும். தானே இயங்குவதாயினும், தூண்டப்பட்டதாயினும், முதலீடானது 'மொத்த' (lumpy) மாகவே இயங்குகிறது. இவ் வுண்மை படம் 3-ல் காட்டப்பட்டுள்ளது. இந்த மொத்தத் தன்மையானது, (lumpiness) பொருளாதார நிலைபேறின்மைக்கான தலையாய காரணங்களில் ஒன்ருகும்.

ஒரு பொருளாதாரத்தில் செய்யப்படுகிற முதலீட்டின் அளவை அப் பொருளாதாரத்தின் மொத்த ஆக்கத்தோடு (அல்லது நாட்டு வருமானம்பற்றிய வேறு அளவோடு) தொடர்பு படுத்தி, முதலீட்டு நாட்டம் என்னும் முறையில் அறிவிக்கலாம். நுகர்வு நாட்டத்தை எவ்வாறு சராசரி நுகர்வு நாட்டமாகவோ அல்லது இறுதிநிலை நுகர்வு நாட்டமாகவோ அளவிடுகிருேமோ, அதுபோலவே, முதலீட்டு நாட்டத்தையும் சராசரியாகவோ இறுதி நிலையாகவோ

அளவிட இயலும். முதலீட்டு நாட்டமும் சேமிப்பு நாட்டமும் ஒரே வகையான வருமான அளவையால் அளவிடப்படும்போது ஒன்றிற் கொன்று சமமாக இருக்குமானுல், வருமான அளவு சமநிலையில் இருக்கும். (The level of income will be in equilibrium.) வருமானத் தைப் பெறுவது—வருமானத்தைச் செலவிடுவது என்னும் வட்டச் சுழற்சியில், வருமான அளவை மிகுவிப்பதற்கோ அல்லது குறைப்பதற்கோ தேவையான சக்திகள் எவையும் பணியாற்ற வில்லை.[10] தனியாட்கள் நிறுவனங்களின் மற்றும் வாணிப நிறுவனங் களின் நுகர்வுத் திட்டங்களும் (சேமிப்புத் திட்டங்களும்) முத லீட்டுத் திட்டங்களும் நடைமுறைக்கு வருகின்றன. சேமிப்பு வீதத்தைவிட முதலீட்டு வீதம் அதிகமாகவோ அல்லது குறை வாகவோ இருக்குமானுல், வருமானம் உயர்ந்துகொண்டிருக்கும் அல்லது தாழ்ந்துகொண்டிருக்கும். சேமிப்பை மிஞ்சிய முதலீட்டுத் தேவையான நிதி, இயல்பான நேரங்களில், பாங்குகளின் பண உற்பத்தியிலிருந்தே ஏற்படுகிறது. முதலீட்டை மிஞ்சிய சேமிப்பு இருக்குமானுல் அதனுல் பதுக்கல் (hoarding) (அதன் இயல்பான பொருளில்) ஏற்படும், அல்லது அநேகமாக பாங்குக் கடன்கள் நிகர முறையில் திருப்பித் தரப்படும் (net repayment of bank loans); பாங்குகளில் தேவை வைப்புகள் (Demand deposits) என்னும் வடிவத்தில் உள்ள பணம் அழிக்கப்படும்.

நுகர்வு வீதத்தில் ஏற்படுகிற உயர்வால் அல்லது முதலீட்டு வீதத்தில் ஏற்படுகிற உயர்வால் அல்லது இரண்டு வீதங்களிலும் ஏற்படுகிற உயர்வால் பொருளாதார நடவடிக்கை நடைபெறுகிற சமநிலை அளவில் (equilibrium level) உயர்வு ஏற்படும். (தற்போ தைக்கு நாம் அரசாங்க நடவடிக்கையால் ஏற்படுகிற விளைவைக் கவனிக்கவில்லை.) சமநிலை அளவின் இம் மாறுதல் நுகர்வுச் செலவின் மாறுதலால் ஏற்படுமானுல், நுகர்வுப் பணி மேல்நோக்கிச் செல்லும். ஏனென்றுல் நுகர்வுச்செலவு உயர்வு ஏற்பட்டால், குறிப்பிட்ட வருவானத்திலிருந்து அதிக அளவு நுகர்வுச் செலவு ஏற்படுவது இயற்கை. போர்க் காலத்தின்போது அல்லது போர் முடிந்த பிறகு, நுகர்வின்மீதுள்ள செயற்கைத் தடைகள் நீக்கப் படுவதன் விளைவாகக் குறுகிய காலத்தில் நுகர்வுப்பணியின் மேலேற்றம் (an upward shift of consumption function) நிகழக் கூடுமானுலும், பொதுவாகக் குறுகிய காலத்தில் அது நிகழ்வதில்லை. நுகர்வோர்க்கான செலவாணியின் தாராளத் தன்மையில் (liberality of consumer credit)ஏற்படும் குறிப்பிடத்தக்க மாறுதல்களால் அல்லது, விலை மட்டத்தில் உயர்வு ஏற்படக்கூடும் என்று பரவலான முறையில் கருதப்படுவதால் நுகர்வுப் பணியின் மேலேற்றம் அல்லது கீழிறக்கம் நிகழக்கூடும். ஆனுல் பெரும்பாலான சமயங்

களில், நுகர்வானது, இறுதிநிலை நுகர்வு நாட்டம்—பெருக்கல் எண் ஆகியவற்றின் மூலமாகத்தான் வருமான மாறுதலை உண்டாக்கும். அப்படி உண்டாகும்போது, நுகர்வுக்காக பல்வேறு கட்டங்களில் ஒன்றன்பின் ஒன்றாகச் செய்யப்படுகின்ற மறுசெலவுகளின் வாயிலாக, மூலச் செலவானது (original expenditure) பெருக்கப்படுகிறது. ஒவ்வொரு கட்டத்திலும் செய்யப்படுகிற மறுசெலவின் அளவானது, இறுதிநிலை நுகர்வு நாட்டத்தைப் பொறுத்திருக்கிறது. பொதுவாக எதிர்பார்க்கப்படுவது என்னவென்றால், நுகர்ச்சிப் பணியானது வழக்கம்போல இருக்குமானால், வருமானம் உயர உயர இறுதிநிலை நுகர்வுநாட்டம் குறைந்துகொண்டே வரும்; வருமானம் குறையக் குறைய இறுதிநிலை நுகர்வுநாட்டம் உயர்ந்துகொண்டே செல்லும் என்பதே. எனவே, (மாறாத நுகர்வுப்பணியோடு கூடிய) வருமான உயர்வானது, உயர்ந்து செல்லும் இறுதிநிலைச் சேமிப்பு நாட்டத்தை (a rising marginal propensity to save) எதிர்த்தே நடைபெறவேண்டியிருக்கிறது. அப்படி நடைபெறவேண்டுமானால், இந்த சேமிப்புக்கு மாற்றாக இருக்கக்கூடிய முதலீட்டு உயர்வு இருந்தாகவேண்டும். அதேபோல, வருமானக் குறைவானது, உயர்ந்துசெல்லும் இறுதிநிலை நுகர்வு நாட்டத்தை எதிர்த்து நடைபெறவேண்டியிருக்கிறது. இவ்வாறாக நுகர்வுப்பணியின் சாய்வானது (the slope of the consumption function) வருமான நிலைபேறின்மை அளவுகடந்து செல்வதைத் தடுப்பதற்கான குறுக்கீடுகளை உண்டாக்குகிறது.

இதே முறையில், வருமான மாறுதல்களின் முதலீட்டிற்கு உள்ள பங்கு என்ன என்பதுபற்றியும் நாம் ஆராயமுடியும். முதலீட்டு வீதத்தில் ஏற்படுகிற தானே இயங்கும் மாறுதல்கள், பெருக்கல் நடவடிக்கையைத் தொடங்கிவைக்கின்றன. இந் நடவடிக்கைகளின் முழு விளைவு, முதலீட்டின் அளவையும் பெருக்கல் எண்ணின் அளவையும் பொறுத்திருக்கிறது. ஆனால் பெருக்கல் எண் நடவடிக்கையானது நுகர்வை (வருமானத்தையும்) உயர்த்தும்போது, வேக வளர்ச்சியின் (accelerator) மூலமாக முதலீட்டில் மேலும் ஓர் உயர்வு ஏற்படுத்தலாம். ஆகவே, முதலீட்டில் அல்லது நுகர்வில் ஏற்படுகிற சுயேச்சையான மாறுதலின் மொத்த விளைவின் காரணமாக, முதலீடு–நுகர்வு இரண்டிலும், அடுத்தடுத்துத் தொடர்ச்சியாகச் செலவுகள் நிகழ்கின்ற ஒரு நிலை தொடங்கப்படுகிறது. இந்த இரு வகைச் செலவுகளுமாகச் சேர்ந்து, ஒரு குறிப்பிட்ட கால அளவில் வருமான அளவில் ஏற்படுகிற மொத்த மாறுதலை நிர்ணயிக்கின்றன. பேராசியர் ஹான்சன் (Hansen) அந்த மொத்த மாறுதலை லீவரேஜ் விளைவு (leverage effect) என்று குறிப்பிடுகிறார். பெருக்கல் எண் விளைவு, வேக வளர்ச்சி விதி—இரண்டும் இணைந்த ஒன்றே லீவரேஜ் விளைவு ஆகும்.[11] லீவரேஜ் குணகம் (Leverage Co-efficient) என்பது,

$$\frac{1}{1-\left(\frac{\Delta c}{\Delta y}+\frac{\Delta I}{\Delta y}\right)}$$

ஆகும். இந்த லீவரேஜ் குணகம், முடிவற்ற வரிசைகளின் கூட்டுத் தொகைபற்றிய விதியை (The principle of the sum of an infinite series) நுகர்வு, முதலீடு ஆகிய இரண்டின் தொடர்ந்து வரும் செலவுக் கட்டங்கள்மீது பயன்படுத்துகிறது. எடுத்துக்காட்டாக, இறுதிநிலை நுகர்வு நாட்டம் $\frac{75}{100}$ ஆகவும், இறுதிநிலை முதலீட்டு நாட்டம் $\frac{20}{100}$ ஆகவும் இருந்து, தானே இயங்கும் முதலீடாக 100 டாலர் பொருளாதாரத்தில் நுழைக்கப்பட்டால், தொடர்ந்து ஏற்படும் மறு செலவுகளின் வாயிலாக வருமானத்தில் ஏற்படும் மொத்த விளைவு பின்வருமாறு இருக்கும் :

| | தூண்டப்பட்ட நுகர்வுச் செலவு | முதலீட்டுச் செலவு தானே இயங்குவதும், தூண்டப்படுவதும் | செலவின் இந்தக் கட்டத்தில் ஏற்படும் வருமான உயர்வு | மொத்த வருமான உயர்வு |
|---|---|---|---|---|
| முதல் கட்டம் | | 100 | 100 | 100 |
| 2ஆம் கட்டம் | 75 | 20 | 95 | 195 |
| 3ஆம் கட்டம் | 71·25 (அ) | 19 (ஆ) | 90·25 | 285·25 |
| 4ஆம் கட்டம் | 67·69 | 18·05 | 85·74 | 370·99 |
| முடிவற்ற நிலையில் (at infinity) | 0 | 0 | 0 | 2000 |
| மொத்தம் | 1500 | 500 | 2000 | |

(அ) மூன்றாவது கட்டத்தில் உள்ள நுகர்வுச்செலவானது (91·25), இரண்டாவது கட்டத்தின் வருமான உயர்வில் (95) 75 சதவீதம் ஆகும். இந்த 75 சதவீதமானது, இரண்டாவது கட்டத்தின் நுகர்வில் (75) 75 சதவீதம்— இரண்டாவது கட்டத்தின் முதலீட்டில் (20) 75 சதவீதம் ஆகிய இரண்டின் கூட்டுத்தொகை ஆகும். இவ் வகையில், ஒரு கட்டத்தில் உள்ள நுகர்வுச் செலவானது, அதன் முந்திய கட்டத்தின் நுகர்வுச்செலவு, முதலீட்டுச் செலவு ஆகிய இரண்டிலுமிருந்து பெறப்படுகிறது. இந்த அட்டவணையில் உள்ள எல்லா புள்ளிவிவரங்களும் இரண்டு தசமப்புள்ளியில் முழு எண்களாக்கப்பட்டுள்ளன.

(ஆ) மூன்றாவது கட்டத்தில் உள்ள முதலீட்டுச் செலவானது (19), இரண்டாவது கட்டத்தின் வருமான உயர்வில் (95) 20 சதவீதமாகும். இந்த 20 சதவீதமானது, இரண்டாவது கட்டத்தின் நுகர்வில் (75) 20 சதவீதம்—இரண்டாவது கட்டத்தின் முதலீட்டில் (20) 20 சதவீதம் ஆகிய இரண்டின் கூட்டுத் தொகை ஆகும். இவ்வகையில், ஒரு கட்டத்தில் உள்ள முதலீட்டுச் செலவானது, அதன் முந்திய கட்டத்தின் நுகர்வுச் செலவு-முதலீட்டுச் செலவு ஆகிய இரண்டின் மீதும் இறுதிநிலை முதலீட்டு நாட்டத்தைப் (20) பயன்படுத்துவதால் பெறப்படுகின்றது.

மேலே தரப்பட்டுள்ள எடுத்துக்காட்டில், எல்லையற்ற காலம் முழுவதும் (throughout the infinite period) நுகர்வு நாட்டமும் முதலீட்டு நாட்டமும் மாறுமல் இருப்பதாகப் பாவிக்கப்பட்டிருக் கிறது. நடைமுறை வாழ்க்கையில் இந்த நாட்டங்கள் மாறுமல் தான் இருக்கும் என்பதால் அல்ல—அளவின் கணக்கில் அமைந்த விடைகளைப் (quantitative answers) பெறவேண்டும் என்பதற் காகவே இந்தப் பாவனை (assumption) செய்யப்பட்டிருக்கிறது. நுகர்வு நாட்டம், முதலீட்டு நாட்டம் ஆகிய இரண்டில் எதில் மாறுதல் ஏற்பட்டாலும் மொத்த வருமான விளைவில் மாறுதல் ஏற்படும். ஆனுல் இச் சமயத்தில் நாம் கவனித் தறியவேண்டிய முக்கியமான செய்தி என்னவென்ருல், தனியார் நுகர்வு, தனியார் முதலீடு, அரசாங்க நுகர்வும் முதலீடும் ஆகிய எந்த வகைச் செல வானுலும் அச் செலவு தனியார் பெருளாதாரத்தில் அலைஅலையாக ஏற்படுகிற மறுசெலவுகளின் வாயிலாகத் தொடர்ந்து செல்கிறது என்பதும், அத் தொடர்ச்சி காரணமாக, நுகர்வு, முதலீடு ஆகிய இரண்டுமே பாதிக்கப்படுகின்றன என்பதுமே ஆகும். தொடர்ந்து வரும் நுகர்வுச்செலவு அலைகளோடு கதை முடிந்துவிடவில்லை. வருமான விளைவானது, நுகர்வு, முதலீடு ஆகிய இரண்டின் மூல மாகவும் ஏற்படுகிறது.[12]

இந்த அத்தியாயத்தில் இதுவரை நாம் பொருளாதார நடவடிக்கையின் அளவை நிர்ணயிக்கும் காரணங்களை அலசி ஆராய்ந்து பார்த்திருக்கிருேம். தனியார் பொருளாதாரத்தின் நிலைபேற்றையும் வளர்ச்சியையும் நிதிக்கொள்கைகள் எவ்வாறு பாதிக்கின்றன என்பதை ஆராய்ந்தறிவதற்கான அடிப்படையை அமைக்கவே நாம் இதுவரை மேற்படி காரணங்களைப்பற்றி விரிவாக ஆராய்ந்தோம். பொருளாதாரத்தின் தனியார் துறையில் தனியாட்களும் வாணிப நிறுவனங்களும் எவ்வாறு நடந்துகொள் கின்றனர் என்னும் அடிப்படையிலேயே நம்முடைய பகுத்தாய்வு இதுவரை அமைந்திருந்தது. பொதுத்துறையின்—அதாவது, அரசாங் கத்தின் நடத்தையைப்பற்றி எப்போதோ ஒருமுறை இருமுறை மட்டுமே நாம் குறிப்பிட்டிருக்கிருேம். இது பொருத்தமான முறை தான். ஏனென்ருல், தனியார் வியாபாரச் சுதந்தரமுள்ள பொருளா தாரத்தில், அரசாங்க நிதிக்கொள்கையின் விளைவின் தன்மை அந்தக் கொள்கையால் தனியார் துறையில் ஏற்படுகிற மறுவிளை வையே பொறுத்திருக்கிறது. ஐக்கிய அமெரிக்க நாட்டுப் பொருளா தாரத்தில் பொருள்கள் அரசாங்கத்தால் உற்பத்தி செய்யப்படுவ தில்லை. அவை அரசாங்கத்தால் தனியார் துறையிலிருந்து விலைக்கு வாங்கப்படுகின்றன. அப்படி வாங்கப்படுவதால் தனியார் துறையில் வருமானங்கள் உண்டாகின்றன. அதுபோலவே, அரசாங்கத்தின்

வரவுகள், தனியார் வருமானங்களிலிருந்து எடுத்துக்கொள்ளப் படுபவையே. அப்படி எடுத்துக்கொள்ளப்படுவதால் ஏற்படுகிற தலையாய பொருளாதார விளைவுகள், தனியார் துறையில் உள்ள வரி செலுத்துவோர் வரிசெலுத்தியபிறகு நடந்துகொள்ளும் போக்கி லேயே காணப்படுகின்றன.

## நிதிக்கொள்கையின் வருமானத்தைத் தூண்டும் விளைவுகள் (Income Inducing Effects of Fiscal Policy) :

அரசாங்கச் செலவுகளை, இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்க லாம். ஒன்று பொருள்களையும் ஊழியங்களையும் நேர்முகமாக வாங்குதல், மற்றொன்று மாற்றல் செலுத்தல்கள் (transfer payments), போர்க் கருவிகள், மோட்டார் கார்கள், தட்டெழுத்துப் பொறிகள் முதலிய புதிதாக ஆக்கப்பட்ட பண்டங்களை விலைக்கு வாங்குவதும், அரசாங்க ஊழியர்கட்கு ஊதியம் அளிப்பதும், முதல் பிரிவில் அடங்கும். நிதி ஆண்டு 1960க்கான மதிப்பீட்டின்படி, கூட்டரசாங்கத்தால் நேர்முகமாக விலைக்கு வாங்கப்படும் பொருள் கள், ஊழியங்கள் ஆகியவற்றின் மதிப்பு 54 பில்லியன் டாலர் ஆகும். (மொத்த வரவு செலவுத் திட்டச் செலவு 77 பில்லியன் டாலர்.) அரசாங்கச் செலவின் மிச்சப் பகுதி, மாற்றல் செலுத்தல் களைக் கொண்டதாகும். அச் செலுத்தல்களில் நல்வாழ்வுச் செலுத் தல்கள், ஏனைய அரசாங்கங்களுக்குத் தரப்படும் கொடைகள், அர சாங்கக் கடன்களுக்கான வட்டி, அரசாங்கக் கடன்கள், நிலங்களை வாங்குதல் முதலிய செலவுகள் அடங்கும். இத்தகைய மாற்றல் செலுத்தல்களைப் பொறுத்தவரையில், அச் செலுத்தல்களைப் பெறு கின்றவர்களே, நடப்புக் காலத்தில் ஆக்கப்பட்ட பொருள்களையும் ஊழியங்களையும் உண்மையில் வாங்கமுடியும்.

அரசாங்கம் வாங்குகிற பொருள்களுக்கும் ஊழியங்களுக்கும் அது தருகிற பணத்தை உடனடியாகப் பெறுபவர்கள், முக்கியமாக வாணிப நிறுவனங்களும் அரசாங்க ஊழியர்களுமே ஆவர். பொது வாக அந்த ஊழியர்களின் ஊதியம் உயர்ந்த அளவினதாக இருக்கு மாஞல், வரவுகளை மறு செலவு செய்வதில் உள்ள நாட்டம் குறைந்த அளவினதாக இருக்கும் என்று நாம் கருதலாம். சேமிப்பின் மிகச் சிறு பகுதியே நடப்பு முதலீட்டில் செலுத்தப்படும் தன்மை படைத்த தளர்ச்சி நிலை (conditions of slack) பொருளாதாரத்தில் நிலவும்போது இது சிறப்பாகக் காணப்படும் உண்மையாகும்.

சமூகப் பாதுகாப்பு ஓய்வு வசதிகள், வேலையின்மை வசதிகள், நல்வாழ்வைப் பேணும் தன்மை படைத்த அரசாங்கப் பணிகளுக் கான கொடைகள், கல்வி வசதிகள், நெடுஞ்சாலை அமைப்புக்காக

மாநில அரசுகளுக்கு முன் கூட்டியே தரப்படும் தொகைகள், ந அடைமான நிதிகளின் பற்றுக்குறை காரணமாக குடியிருப்பு வீடு களின் கட்டுமானம் குறையும்போது அக் குறைவைத் தடுக்க அரசாங்கம் தரும் அடைமான நிதிகள் முதலிய மாற்றல் செலுத் தல்களால் ஏற்படும் மறுசெலவுக்கான நாட்டம் உயர்ந்த அளவின தாக இருக்கும். ஆனால் இந்த உயர்வுக்கு எதிராக, அரசாங்கத் திற்குத் தாங்கள் தந்துள்ள கடன்களுக்காகப் பெற்ற வட்டித் தொகையை மறு செலவு செய்வதில் சேமிக்கும் மக்களிடம் உள்ள குறைந்த நாட்டத்தை நாம் கணக்கில் எடுத்துக்கொள்ளவேண்டும். நடப்புக் காலத்தில் ஆக்கப்பட்ட பொருள்களுக்கும் ஊழியங்களுக் கும் செலவழிக்கப்படும் சராசரி டாலரால் ஏற்படும் லீவரேஜ் விளைவைவிட, மாற்றல் செலுத்தல்களுக்காகச் செலவழிக்கப்படும் சராசரி டாலரால் ஏற்படும் லீவரேஜ் விளைவு, கூடுதலாகவே இருக் கும்.

**அரசாங்கச் செலவின் வருமானத்தைத் தூண்டும் விளைவுகள் (Income-Inducing Effects of Government Expenditure):** தற்போதைக்கு நாம், நிதி நடவடிக்கையின் வருவாய்ப் பகுதியால் பொருளாதாரத்தின் மொத்தச் செலவில் ஏற்படும் மாற்றத்தை ஒதுக்கி வைத்துவிட்டு, செலவுப் பகுதியால் ஏற்படும் மாற்றத்தைமட்டும் கவனிக்கலாம். பொதுமக்களிடம் உள்ள நிதியால் மொத்தச் செலவின் வட்டச் சுழற்சியில் ஏற்படும் மாறுதலைவிட, அரசாங்கத்திடம் உள்ள நிதியால் அச் சுழற்சியில் ஏற்படும் மாறுதல் வேறுபட்டதாக இருக்குமா என்பதையும், வேறுபட்டதாக இருக்குமானால் எந்த வகையில் வேறுபடும் என்பதையும் நாம் தற்போது ஆராய்ந்து அறியலாம். அரசாங்க நிதிகள் அத்தகைய வேறுபாட்டை இரண்டு வகைகளில் ஏற்படுத்தலாம்.

தனியார் கைகளில் உள்ள நிதிகளைவிட அரசாங்கத்திடம் உள்ள நிதிகள், செலவின் முதல் கட்டத்தில், அதிகமான அளவில் செலவு செய்யப்படலாம். இதுதான் முதல் வகை வேறுபாடு. அரசாங் கத்திடம் 100 டாலர் நிதி இருக்கிறது என்றும், தனியாரிடம் 100 டாலர் நிதி இருக்கிறது என்றும் வைத்துக்கொள்வோம். அதோடு, பொருளாதாரத்தில் பின்னிறக்கம் இருக்கிறது என்றும், நுகர்வு—முதலீடு—இரண்டிலுமாகச் சேர்த்து மறுசெலவு செய்வதற்கான இறுதிநிலை நாட்டம், தனியார் துறையில் 0·9 ஆக இருப்பதாகவும் வைத்துக்கொள்வோம்.[13] இந் நிலையில், தனியார் கைகளில் உள்ள நிதிகள், வரிசையான மறு செலவுகளின் வாயிலாக, நீண்டகால அளவில், கீழ்க்கண்ட விளைவை உண்டாக்கும் என்று நாம் எதிர் பார்க்கலாம் :

(I) $ 90+81+72.9+65.61+........... =$ 900

குறுகிய கால அளவில் பார்த்தால்கூட, முதல் மூன்று கட்டங்களில் உற்பத்தியாகும் வருமானம் 243.90 டாலராக இருப்பதைக் காணலாம்.

அரசாங்கமானது, தன்னிடம் உள்ள 100 டாலர் நிதியையும் செலவழிக்கிறது என்று வைத்துக்கொண்டால் (அப்படி வைத்துக் கொள்வது நியாயமான முடிவே) அரசாங்கச் செலவால் நீண்ட கால அளவில் உண்டாகும் மறுசெலவு விளைவுகள் பின்கண்டவாறு இருக்கும். (அரசாங்கச் செலவு செய்யப்பட்டபிறகு, அடுத்த செலவுக் கட்டத்திலிருந்து, தனியாரின் இறுதிநிலைச் செலவு நாட்ட மாகிய 0.9 நடைமுறையில் இருக்கும்.)

(II) $ 100+90+81+72.9+........... =$ 1,000

இந் நிலையில் முதல் மூன்று கட்டங்களில் உற்பத்தியாகும் வருமானம் 271 டாலராக இருக்கிறது. தனியார் செலவால் உண்டாகும் வருமானத்திற்கும் அரசாங்கச் செலவால் உண்டாகும் வருமானத் திற்கும் இடையே உள்ள இந்த வேறுபாடு, மந்திரத்தாலோ தந்திரத் தாலோ உண்டாகிவிடவில்லை. தனியார் துறையின் மறுசெலவு நாட்டத்தைவிட அரசாங்கத்தின் மறுசெலவு நாட்டம் அதிகமாக இருப்பதால், அரசாங்கச் செலவு வரிசையின் முதல் கட்டத்தில் ஒழுக்கல் (leakage) எதுவும் இல்லாமல் இருக்கிறது. இதே உண்மையை மற்ெருரு வகையாகக் கூறுவதானுல், (நம் எடுத்துக் காட்டில் நாம் ஏற்றுக்கொண்ட பாவனைகளை அப்படியே கொண்டு) ஒரு குறிப்பிட்டகால அளவில், தனியார் கைகளில் உள்ள 111.10 டாலர்களால் ஏற்படக்கூடிய அதே அளவு வருமானத் தூண்டல் விளைவுகள், அரசாங்கத்திடமுள்ள 100 டாலர்களாலேயே ஏற்பட்டு விடும் என்று இயம்பலாம். ஆனுல் தனியாரின் இறுதிநிலை நுகர்வு நாட்டம் 1·0 ஆக இருக்குமானுல் [வாணிப எழுச்சிக் காலத்தில் (business. boom period) அப்படித்தான் இருக்கிறது] அரசாங்கச் செலவின் விளைவுக்கும் தனியார் செலவின் விளைவுக்கும் இடையே உள்ள இந்த வேறுபாடு மறைந்துவிடும்.

வருமானத்தை மிகுந்த அளவில் உற்பத்தி செய்யக்கூடிய துறைகளைத் தேர்ந்தெடுத்து அவற்றிற்காகத் தன் நிதிகளைச் செல வழிக்கக்கூடிய திறமை அரசாங்கத்திற்கு இருப்பது (அல்லது இருப் தாகக் கருதப்படுவது) அரசாங்கச் செலவில் உள்ள இரண்டாவது வகை நன்மை. பொதுமக்களிடத்தில் உள்ள 100 டாலர், 0.9 அளவுள்ள மறுசெலவு நாட்டத்திற்கு மட்டுமே உள்ளாகும்போது,

மிக உயர்ந்த மறுசெலவு நாட்டம் படைத்த மக்கட் பகுதியினரைத் தேர்ந்தெடுத்து அவர்களிடத்தில் தன் நிதிகளைச் செலவிடுவதன் மூலம், அரசாங்கத்தால், மறுசெலவின் முதல் கட்டம் 0.9க்குமேல், ஒரு வேளை 0.95 என்பது போல இருக்கும்படியாகச் செய்யமுடியும். அரசாங்கத்தின் செலவு நாட்டம் 1.0 ஆக இருக்கிறது என்றால், அரசாங்கம் செலவிடும் தொகை, 0.95ஐ மறுசெலவு நாட்டமாகக் கொண்ட குறிப்பிட்ட மக்களை வந்தடைகிறது. அவர்களிடத்தி லிருந்த அது 0.9ஐ மறுசெலவு நாட்டமாகக்கொண்ட பொதுப் பொருளாதாரத்தில் சேர்ந்துவிடுகிறது. இந்த நிலைமைகளில் அரசாங்கச் செலவால் ஏற்படும் செலவு வரிசை பின்கண்டவாறு இருக்கும்:

(III) $ 100+95+85.5+76.95+..........=$ 1050.

இவ் வரிசையில் முதல் மூன்று கட்டங்களில் ஏற்படும் வருமானத்தின் அளவு, 275·50 டாலராக இருக்கிறது. மிக உயர்ந்த இறுதிநிலைச் செலவு நாட்டம் படைத்தவர்களாகிய வேலையில்லாதோருக்குத் தரப்படும் அரசாங்க நிதிகள், இந்த வகையான செலவு வரிசையை ஏற்படுத்தக்கூடும். மேலே தரப்பட்டுள்ள இரண்டு வகையான அரசாங்கச் செலவுகளிலும், அலகுப் பெருக்கும் எண்ணே (unit multiplier) கையாளப்பட்டாலும், இரண்டாவது வகைச் செலவால் ஏற்படுகிற மொத்த வருமானம் முதல் வகைச் செலவால் ஏற்படுகிற மொத்த வருமானத்தைவிட, மிகுதியாக இருக்கிறது. ஏனென்றால், இரண்டாவது வகைச் செலவில், அரசாங்கமானது, உயர்ந்த மறு செலவு நாட்டம் உடையோரைத் தேர்ந்தெடுத்து, அவர்களிடத்தில் தன் நிதிகளைச் செலவழித்திருக்கிறது. தனியார் துறையில் அத்தகையோரின் உயர்ந்த செலவு நாட்டத்தால் போதிய வருமான உயர்வு ஏற்படாததற்குக் காரணம், அவர்களிடத்தில் செலவிடக்கூடிய வருமானம் இல்லாததே ஆகும். மற்றோர் உண்மை யையும் நாம் இங்கே குறிப்பிடவேண்டும். பொருளாதாரத்தில் காணப்படுவதைவிடக் குறைந்த அளவு செலவு நாட்டம் படைத்த மக்கட் பகுதியினரிடம் அரசாங்கச் செலவுகள் சேருமானால், அவற்றின் வருமானத்தைத் தூண்டும் விளைவுகள் குறைந்துவிடும். எடுத்துக்காட்டாக அரசாங்க நிதிகள் 0·8ஐ இறுதிநிலை மறு செலவு நாட்டமாகக்கொண்ட அரசாங்கக் கடன்பத்திரங்களின் உரிமை யாளர்களை அடையுமானால், அரசாங்கச் செலவால் ஏற்படும் செலவு வரிசை பின்கண்டவாறு அமையும்.

(IV) $ 100+80+72+64·8+............. = $ 900

இவ் வரிசையில் முதல் மூன்று கட்டங்களில் ஏற்படும் வருமானத்தின் அளவு 252 டாலராக இருக்கிறது.

நிதிக்கோட்பாட்டின் வரிவிதிப்பு முதலியவருவாய்களின்விளைவுகளைக் கவனிக்காமல் அரசாங்கச் செலவுகளைமட்டும் கவனித்துப் பார்த்தால் அச் செலவுகளால் நாட்டின் வருமானத்தின்மீது பலம் பொருந்திய லீவரேஜ் விளைவுகளை ஏற்படுத்தமுடியும் என்கிற முடிவுக்கு நாம் வரலாம். பொதுவாகத் தனியார் பொருளாதாரத்திற்கு உள்ள செலவு நாட்டத்தைவிட அரசாங்கத்தின் செலவு நாட்டமும் அரசாங்க நிதிகளைப் பெறுவோரின் செலவு நாட்டமும் அதிகமாக இருக்கின்ற நிலைகளில் எல்லாம் இந்த முடிவு பொருந்தும். ஆனால் எந்தக் குறிப்பிட்ட காலத்திலும் இந்த நிலைகள் இருந்தே தீரும் என்று கூறமுடியாது. வாணிப எழுச்சிக் காலங்களில் (boom periods) தனியாரின் செலவு நாட்டமும், அரசாங்கத்தின் செலவு நாட்டமும், அரசாங்க நிதிகளை முதலில் பெறுவோரின் செலவு நாட்டமும் இருக்கின்ற உயர்வுக்குக் குறையாத நிலையில் இருக்கக்கூடும்.

**வரி விதித்தல்—செலவிடல்—ஆகிய இரண்டும் இணைந்த நிலையில் ஏற்படும் வருமானத்தைத் தூண்டும் விளைவுகள்** (Income inducing effects of combined taxing and spending): இனி நாம், வருவாய்களின் வரவு (receipt of revenues)-செலவு செய்தல்—ஆகிய நிதிக் கோட்பாட்டின் இரண்டு பகுதிகளையும் கவனத்தில் எடுத்துக்கொண்டு, நம் பகுத்தாய்வைத் தொடர்ந்து நடத்தலாம். இதுவரையில் செய்யப்பட்ட பகுத்தாய்வில் நாம், செலவு செய்வதற்காக ஒரு குறிப்பிட்ட தொகை அரசாங்கத்திடம் இருப்பதாகப் பாவித்துக் கொண்டோம். ஆனால் அரசாங்கம் தன் நிதிகளைத் திரட்டுகிற முறையாலும் பொருளாதார விளைவுகள் ஏற்படும். இப்படி ஏற்படும் விளைவுகள், அரசாங்கச் செலவால் ஏற்படும் விளைவுகளுக்கு நேர் மாறானவையாக, அவற்றை அழிக்கவல்லனவாக இருக்கலாம். இங்கே நாம் செய்ய விருக்கிற பகுத்தாய்வைப் பொறுத்தவரை, அரசாங்க நிதிகள், வரிகள், கட்டணங்கள், விலைகள், வட்டிவீதங்கள், நன்கொடைகள் முதலான எந்த வகையில் திரட்டப்படுகின்றன என்பதுபற்றி நாம் கவலைப்படத்தேவையில்லை என்றாலும், அரசாங்க நிதிகள், வரிகள் மூலம் கிடைக்கின்றன என்றே வைத்துக்கொள்வோம். வரிகள் அரசாங்கத்திற்குச் செலுத்தப்படும்போது, வரி செலுத்துவோரின் வருமானத்தில், நுகர்வுக்கு அல்லது முதலீட்டுக்குக் கிடைக்கக்கூடிய பகுதி குறைந்துவிடுகிறது. அப்படிக் குறைந்துவிட்ட பகுதி தனியார் துறையிலேயே செலவிடப்பட்டிருந்தால் அதனால் அத் துறையில் ஏற்பட்டிருக்கக்கூடிய மறுசெலவுகளின் வரிசை இப்போது ஏற்படாது. அரசாங்கச் செலவால் ஏற்படும் வருமானத்தைத் தூண்டும் விளைவுகளுக்கும், தனியார் துறையிலிருந்து செலவிடப்படக்கூடிய வருமானத்தை எடுத்துக்கொண்டதால் ஏற்படும் வருமானத்தைக்

குறைக்கும் விளைவுகளுக்கும் இடையே உள்ள வேறுபாடுதான், நாட்டு வருமானத்தின்மீது அரசாங்க வரிவிதிப்பு–செலவு—ஆகிய இரண்டாலும் ஏற்படுகிற நிகர விளைவாகும்.

அரசாங்கச் செலவால்மட்டும் நாட்டுவருமானத்தில் ஏற்படுகிற விளைவுகளை ஆராய்வதற்குப் பயன்படுத்திய அதே எடுத்துக்காட்டு களின்மூலம் அரசாங்கச் செலவு, வருவாய் ஆகிய இரண்டாலும் ஏற்படக்கூடிய விளைவுகளையும் விளக்கிக் காட்டலாம். முன்னர் நாம் எடுத்துக் காட்டிய செலவு வரிசை 1-ல், இறுதிநிலைச் செல்வு நாட்டம் 0·9 ஆகக் கொள்ளப்பட்டது. அந் நிலையில், தனியாட்களிடமும் வாணிப நிறுவனங்களிடமும் உள்ள 100 டாலர் நிதியானது, நீண்ட கால அளவில் 900 டாலர் வருமானத்தை உண்டாக்குகிறது என்பதை அறிந்தோம். ஆகவே இந்தத் தனியாட்களிடமிருந்தும் வாணிப நிறுவனங்களிடமிருந்தும் 100 டாலரை அரசாங்கம் எடுத்துக் கொண்டால், தனியார் துறையில் உற்பத்தியாகும் வருமானத்தில் 900 டாலர் குறைந்துவிடும். ஆனால் அரசாங்கத்திற்குக் கிடைக்கும் அந்த 100 டாலர் வரவானது, வரி செலுத்துவோருக்கு உள்ள அதே அளவு செலவு நாட்டம் படைத்த மக்களிடம் செலவிடப் படுமானல், செலவுவரிசை 11-ல் காட்டப்பட்டுள்ளதைப்போல அதனால் ஏற்படும் வருமானம் 1000 டாலராக இருக்கும். அரசாங்க வரியாலும் செலவாலும் சமூக வருமானத்தில் எத்தகைய மறு பங்கீட்டு விளைவும் ஏற்படாமல் இருக்கும்போதே—அதாவது, ஒரு வருமானப் பிரிவினரிடமிருந்து வரிகள் தண்டப்பட்டு மற்றொரு வருமானப் பிரிவினருக்குச் செலவுகள் செய்யப்படும் நிலை இல்லாத போதே, இந்தக் கூடுதல் வருமானம் ஏற்படுகிறது. அதாவது இந்த நிலையிலேயே, நிதி நடவடிக்கையின் காரணமாக, அந் நடவடிக்கை இல்லாதபோது இருப்பதைவிட மிகுதியான வருமானத்தைத் தூண்டும் விளைவுகள் ஏற்படுகின்றன. அரசாங்கச்செலவால் ஏற்படும் வருமானம் 100 டாலர் அளவுக்கு மிகுதியாக இருப்பதற்குக் காரணம் வரியின்மூலம் கிடைக்கும் 100 டாலர் முழுவதையும் அரசாங்கம் செலவிட்டுவிடுகிறது. ஆனால் அந்த 100 டாலர் வரியாகத் தீண்டப்படாமல் தனியாரிடமே விடப்பட்டிருந்தால் செலவின் முதல் கட்டத்தில் 90 டாலர் மட்டுமே அத் தனியாரால் செலவிடப்பட்டிருக்கும். தனியார் செலவிலிருந்து தப்பியிருக்கக் கூடிய இந்த 10 டாலரை லீவரேஜ் குணகத்தால்[14] பெருக்கினால் 100 டாலர் என்னும் தொகை கிடைக்கிறது.

ஆனால், வரி விதிப்பாலும், செலவழிப்பதாலும் சமூக வருமானத்தில் மறு பங்கீட்டு விளைவுகள் ஏற்படலாம். அப்படி ஏற்பட்டால், நிதி கோட்பாட்டின் வருமானத்தைத் தூண்டும் விளைவுகள்

இன்னும் மிகுதியாக அமையும். உயர்ந்த செலவு நாட்டம் படைத்த மக்களிடம் நிதிகள் சென்று அடையும் முறையில் அரசாங்கம் தன் செலவுத் திட்டங்களை வகுத்துக்கொண்டால், வருமான விளைவுகள் மிகுதியாகும் என்பதைச் செலவு வரிசை III-ல் நாம் கண்டோம். தனியார் கைகளில் உள்ள 100 டாலரால் ஏற்படக்கூடிய வருமானத்தைச் செலவுவரிசை I-ல் நாம் காணமுடிந்தது. எனவே 0·9ஐ இறுதி நிலைச் செலவு நாட்டமாகக்கொண்ட மக்களிடமிருந்து100 டாலரை வரியின் மூலமாக எடுத்துக் கொண்டால், பொருளாதாரத்திற்கு ஏற்படக்கூடிய வருமான இழப்பையும் செலவு வரிசை I-லிருந்து நாம் அறியமுடிகிறது. நீண்டகால அளவில் இந்த இழப்பின் அளவு 900 டாலராக அமைகிறது. உயர்ந்த செலவுநாட்டம் படைத்தவர்களைத் தேர்ந்தெடுத்து அரசாங்கம் அவர்களுக்காகச் செலவிடும்போது ஏற்படுகிற மொத்த வருமானம் 1050 டாலராக இருப்பதைச் செலவு வரிசை III எடுத்துக்காட்டியுள்ளது. இரண்டிற்கும் இடையே உள்ள வேறுபாடான 150 டாலர், நிதி நடவடிக்கையால் நாட்டின் வருமானத்தில் ஏற்பட்டுள்ள உயர்வாகும்.

குறைந்த செலவுநாட்டம் படைத்த மக்கட் பிரிவினரைத் தேர்ந்தெடுத்து அவர்களிடமிருந்து வரிகளைப் பெற்றால், நாட்டு வருமானத்தின் உயர்வு இன்னும் மிகுதியாக இருக்கும். அப்படிச் செய்வது, மறு பங்கீட்டு விளைவைச் சென்ற பத்தியில் காட்டப்பட்ட அளவைவிட இன்னும் சற்று அதிகமான அளவில் உண்டாக்குவதாக அமையும். அப்படிச் செய்யும்போது, குறைந்த செலவுநாட்டம் படைத்தோரிடமிருந்து வரிகள் தண்டப்படுகின்றன; மிகுந்த செலவு நாட்டம் உடையோருக்கு நிதிகள் தரப்படுகின்றன. பொதுவான மறுசெலவு நாட்டம் 0.9 ஆக இருக்கும்போது ஒரு குறிப்பிட்ட வரி செலுத்தும் பிரிவினரின் மறு செலவு நாட்டம் 0·8 ஆக இருந்து, அவர்களிடமிருந்து 100 டாலர் வரியாகத் திரட்டப்படுமானால் நீண்டகால அளவில், பொருளாதாரத்திற்கு ஏற்படும் வருமான இழப்பு பின்வருமாறுஇருக்கும்:

(V) $ 80+72+64·8+58·32+ ................. =$ 800

0·95 என்னும் உயர்ந்த அளவு செலவு நாட்டம் படைத்தோரிடம் நிதிகள் சேரும்படிச் செலவு செய்யப்படுமானால், இந்த வரித் தொகையைச் செலவிடுவதால் நீண்டகாலத்தில் ஏற்படும் வருமானம் 1050 டாலராக இருக்கும். வரி விதிப்பால் ஏற்படும் வருமான இழப்புக்கும் செலவழிப்பால் ஏற்படும் வருமான உயர்வுக்கும் இடையே உள்ள வேறுபாடு பெரிய அளவினதாக (250 டாலர்)

இருக்கிறது. எனவே மறுபங்கீட்டு நிதிக்கொள்கை உயர்ந்த அளவுடைய லீவரேஜ் விளைவை உண்டாக்கவல்லது என்பது தெளிவாகிறது.

**ஒத்தநிலை வரவுசெலவுத் திட்டத்தின் வருமானத்தைத் தூண்டும் விளைவுகள் (Income-creating effects of a balanced bubget) :** அரசாங்கத்தின் ஒத்தநிலை வரவு செலவுத் திட்டத்தால் வேலை, வருமானம் ஆகியவற்றின் அளவிலோ விலை மட்டத்தின் அளவிலோ எத்தகைய மாறுதலும் ஏற்படுவதில்லை என்று பொதுவாக கருதப்படுகிறது. ஓர் ஒத்தநிலை வரவு செலவு திட்டத்தின்கீழ்[15] அரசாங்கச் செலவால் உருவாகும் வருமானம், வரி செலுத்துவோர் வரித்தொகையைச் செலுத்தாமற் செலவு செய்திருந்தால் ஏற்பட்டிருக்கக்கூடிய — ஆனால் இப்போது ஏற்படாமற் போய்விட்ட வருமானத்திற்குச் சரிநிகர் சமானமாக இருக்கும் என்னும் முடிவிலிருந்து பிறந்ததே இந்தக் கருத்து.[16] ஆனால் பெரும்பாலும் அவ் வருமானமும் வருமானஇழப்பும் அவ்வாறு ஒத்த நிலையில் இருப்பதில்லை. தெளிவாகச் சொல்வதானல், ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் மட்டுமே ஓர் ஒத்தநிலை வரவு செலவுத்திட்டம், வருமான அளவில் எத்தகைய மாறுதலையும் ஏற்படுத்தாது. கடந்த சில பக்கங்களில் நாம் கையாண்டுள்ள எடுத்துக்காட்டுகள், ஒத்தநிலை வரவு செலவுத் திட்டத்தின் அடிப்படையில் அமைந்தவையே. ஒவ்வோர் எடுத்துக் காட்டிலும் அரசாங்கத்தால் முதலில் செய்யப்படும் செலவு,பொது மக்களிடமிருந்து திரட்டப்பட்ட வரிகளுக்குச் சரிநிகராகவே இருக்கிறது. இதிலிருந்து நாம் தெரிந்துகொள்ளக்கூடிய உண்மை என்னவென்றால் நிதிநடவடிக்கையில் மறுபங்கீட்டு விளைவு அமைந்திராவிட்டால்கூட, அதாவது — யாரிடமிருந்து வரிகள் வாங்கப்படுகின்றனவோ அவர்களுக்கே அரசாங்க நிதிகள் தரப்பட்டால் கூட, ஓர் ஒத்தநிலை வரவுசெலவுத் திட்டத்தால் நாட்டின் பொருளாதாரத்தில் ஓரளவுக்காவது விரிவு விளைவு (expansive effect) ஏற்படும் என்பதே. குறிப்பிட்ட நிலைமையில், ஒரு சிறிய ஒத்த நிலை வரவு செலவுத் திட்டத்தால் ஏற்படும் விரிவு விளைவைவிட ஒரு பெரிய வரவுசெலவுத் திட்டத்தால் ஏற்படும் விரிவுவிளைவு மிகுதியாக இருக்கும். இறுதிநிலைச் செலவு நாட்டம் 1-க்குக் கீழே இருக்கும் போது தனியார் செலவில் ஏற்படும் ஒழுக்கல்(leakage) அரசாங்கச் செலவில் ஏற்படாததாலேயே இந்த விரிவுத்தன்மை (expansiveness) உருவாகிறது. தனியாரின் இறுதிநிலைச் செலவு நாட்டம் 1 ஆகவோ 1-க்கு மேலாகவோ இருக்குமானல் இந்த முடிவைத் தக்கபடி மாற்றி அமைக்கவேண்டிவரும். அதாவது நுகர்வதற்கும் முதலீட்டுக்குமான இணைந்த இறுதிநிலை நாட்டம் 1க்குச் சமமாக இருக்கக்கூடிய

பணவீக்கக் காலத்தைவிடப் பொருளாதாரப் பின்னிறக்கமும் குறைந்த முதலீட்டு நாட்டமும் உள்ள காலத்தில்,ஒத்த நிலை வரவு செலவுத் திட்டமானது, கூடுதலான விரிவு விளைவைப் பெற்றிருக்கும்.

சென்ற பத்தியில் நாம் செய்துள்ள முடிவுகள், வரி விதித்துச் செலவு செய்யும் ஏற்பாட்டால் பொதுமக்களிடம் உள்ள செலவிடக் கூடிய நிதிகளில் எத்தகைய மறு பங்கீடும் ஏற்படாமல் இருக்கும் நிலைமைகளுக்குமட்டுமே பொருந்தும். அத்தகைய நிலைமைகளில் கூட விரிவுப்போக்கு இருக்கும் என்றும், தனியார் செலவுநாட்டம் உயர்வாக இருக்கும்போது ஏற்படும் விரிவைவிட அது குறைவாக இருக்கும்போது மிகுந்த விரிவு ஏற்படும் என்றும் முன்னரே தெரிந்துகொண்டோம். ஆனால் வரி விதித்துச் செலவிடும் திட்டத்தால் பொருளாதாரத்தில் ஓரளவுக்காவது மறுபங்கீடு ஏற்படக் கூடும் என்று எதிர்பார்க்கலாம். அரசாங்க வருவாயின் பெரும் பகுதி, தாழ்ந்த வருமானங்களிலிருந்து எடுப்பதைவிட உயர்ந்த வருமானங்களிலிருந்து அதிக வீதாச்சாரத்தில் தொகை எடுத்துக் கொள்ளும் வளர்வீத வரிகள் (progressive taxes) மூலமாகப் பெறப் பட்டு, செலவானது தேய்வு வீதத்தில் (regressive) இருக்குமானால் (அதாவது, குறைந்த வருமானக்காரர்களுக்கு அதிகமாகச் செல விடப்படுமானால்), செலவிடக் கூடிய வருமானம் கீழ் நோக்கிய முறையில் மறுபங்கீடு செய்யப்படும் நிலை உருவாகும் (down ward redistribution of disposable income). இதற்கு நேர்மாறாக தேய்வுவீத வரிகள்மூலம் மிகுதியான வருவாய் பெறப்பட்டு, வளர்வீத முறையில் செலவு செய்யப்படுமானால், செலவிடக்கூடிய வருமானம் மேல்நோக்கிய முறையில் மறுபங்கீடு செய்யப்படும் நிலை உருவாகும் (upward redistribution of disposable income). லீவரேஜ் குணகத்தைக் பாதிக்கக்கூடிய காரணிகளில் வருமானப் பங்கீடும் ஒன்றாக இருப்பதால், வருமானப்பங்கீட்டை மாற்றி அமைக்கவல்ல நிதிநடவடிக்கை, வருமான உற்பத்தி அளவையும் மாற்றி அமைக்கும்.

வரி விதித்துச் செலவு செய்யும் முறையால் அந்த முறை இல் லாதபோது ஏற்படக்கூடியதைவிட, அதிகமான அளவில் ஒத்தநிலை வருமானப்பங்கீடு ஏற்படுகிற ஒரு நிலைமையை நாம் ஆராய்ந்து பார்க்கலாம். உயர்ந்த வருமான மட்டத்தில் இருப்பதைவிடக் குறைந்த வருமான மட்டத்தில் மறுசெலவு நாட்டம் ஓரளவு கூடுதலாக இருக்கும் என்று வைத்துக்கொள்ளலாம். சமூகம் முழுவதற்குமான இறுதிநிலை மறுசெலவு நாட்டம் 0.9 ஆக இருக்கும் போது 0·8ஐ இறுதிநிலை மறுசெலவு நாட்டமாகக் கொண்டுள்ள

குறிப்பிட்ட வரி செலுத்துவோரிடமிருந்து 100 டாலர் வரியாகத் திரட்டப்பட்டால், அந்த வரி விதிப்பின் காரணமாக வருமான அளவில் ஏற்படுகிற எதிர்மறை விளைவு (negative effect) பின்வருமாறு இருக்கும் :

$$\$ 80 + 72 + 64{\cdot}8 + 58{\cdot}32 + \ldots \ldots \ldots = \$ 800.$$

ஆனால், வரி விதிப்பால் அரசாங்கத்திற்குக் கிடைத்துள்ள 100 டாலர் வருவாயைச் செலவிடுவதால் நாட்டின் வருமானத்தின் அளவில் பின்கண்ட நேர்நிலை விளைவு (positive effect) ஏற்படும் :

$$\$ 100 + 90 + 81 + 72{\cdot}9 + \ldots \ldots \ldots = \$ 1{,}000.$$

இரண்டு விளைவுகளுக்கும் இடையே உள்ள வேறுபாடு ($ 200), பொருளாதார நடவடிக்கைக்குக் கிடைத்த குறிப்பிடத்தக்க அனுகூலம் ஆகும். இந்த அனுகூலத்தை முன்னிட்டுத்தான், பொருளாதார மந்த காலத்தில், அரசாங்கச் செலவுக்கு நிதி திரட்டுவதற்காகப் பாதுகாக்கப்பட்ட பணத்தின்மீது (hoarded money) வரிவிதிக்கப்படவேண்டும் என்னும் கிளர்ச்சி தோன்றுகிறது. அரசாங்கச் செலவானது முதல் கட்டத்தில் 0·95ஐ இறுதிநிலைச் செலவு நாட்டமாகக் கொண்ட மக்கட் தொகுதியினரை அடையுமானல், செலவு வரிசை பின்கண்டவாறு அமையும் :

$$\$ 100 + 95 + 85{\cdot}5 + 76{\cdot}95 + \ldots \ldots \ldots = \$ 1050.$$

இப்போது, மறைமுக விளைவுக்கும் நேர்நிலை விளைவுக்கும் இடையே உள்ள வேறுபாடு (+250 டாலர்) இன்னும் அதிகமானதுதான்.

வரிவிதித்துச் செலவிடும் முறையால் வருமானமானது மேல் நோக்கி மறுபங்கீடு செய்யப்பட்டு, அம் முறைக்கு முன் இருந்ததை விட மிகுதியான ஒத்த நிலையின்மைப் பங்கீட்டுத் திட்டத்தை (a more unequal pattern of distribution) உருவாக்குகிற நிலைமையை இனி பரிசீலனைக்கு எடுத்துக்கொள்வோம். சமூகம் முழுவதற்குமான இறுதிநிலை நாட்டம் 0·9 ஆக இருக்கையில் தங்களுடைய இறுதிநிலை நாட்டத்தை 0·95 ஆகக் கொண்டுள்ள குறிப்பிட்ட ஆட்களிடமிருந்து 100 டாலர் வரியாகத் திரட்டப்படுகிறது என்று வைத்துக்கொள்வோம். இந் நிலையில், செலுத்தப்பட்ட வரி காரணமாகக் கைவிடப்பட்ட தனியார் செலவு, மொத்த வருமானத்தில் ஏற்படுத்துகிற எதிர்மறை விளைவு (negative effect) பின்கண்டபடி இருக்கும் :

$$95 + 85{\cdot}5 + 76{\cdot}95 + \ldots \ldots \ldots = \$ 950.$$ [17]

செலவானது, முதல் கட்டத்தில் 0·8ஐ இறுதிநிலை நாட்டமாகக் கொண்ட தனியாட்களிடம் சென்று, அடுத்த கட்டத்திலிருந்து 0·9ஐ இறுதிநிலை நாட்டமாகக் கொண்ட பொருளாதாரத்தில் சென்றுவிடுமானால், செலவு வரிசை, பின்கண்டவாறு அமையும் :

$$\$ 100 + 80 + 72 + 64{\cdot}8 + \ldots \ldots \ldots = \$ 900.$$

இந்த எடுத்துக்காட்டில், தனியார்துறைச் செலவுக்குப் பதிலாக அரசாங்கச் செலவை ஏற்படுத்தியதன் விளைவாக வருமானத்தில் நிகர இழப்பு (50 டாலர்) ஏற்படுவதைக் காண்கிறோம்.

சுருக்கமாகக் கூறுவதானால், ஓர் ஒத்தநிலை வரவு செலவுத் திட்டத்தில்—அல்லது, வரவு செலவுத் திட்டத்தில் ஓர் ஒத்தநிலை ஏற்படுகையில், வருமான ஓட்டத்திலிருந்து (income stream) எடுக்கப்பட்ட வரித் தொகை, வருமான ஓட்டத்தில் நுழைக்கப்பட்ட அரசாங்கச் செலவுத் தொகைக்கு நேர் சமமாக இருக்கும்போது கூட, பொருளாதாரத்தின் வருமான அளவு விரிவடைகிற விளைவு ஏற்படுகிறது. வரி விதித்துச் செலவிடும் முறையால் பொருளாதாரத்தின் வருமானப் பங்கீட்டு நிலையில் எத்தகைய மாறுதலும் ஏற்படாமல் இருக்கும்போதுகூட இந்த வருமான விரிவு உண்டாகிறது. ஆனால் வரி விதித்துச் செலவிடும் முறையால், வருமானமானது, உயர்ந்த வருமானப் பிரிவினரிடமிருந்து குறைந்த வருமானப் பிரிவினருக்கு மறு பங்கீடு செய்யப்படுமானால், இந்த வருமான விரிவானது, இன்னும் மிகுதியான அளவில் உண்டாகிறது. (எந்த அளவுக்கு வருமானம் குறைவாக இருக்கிறதோ அந்த அளவுக்குச் செலவு நாட்டம் அதிகமாக இருக்கும் என்று வைத்துக் கொண்டால்) கீழ்நோக்கிச் செய்யப்படும் மறுபங்கீடு எந்த அளவுக்கு அதிகமாக இருக்கிறதோ அந்த அளவுக்கு வருமானத்தின்மீது ஏற்படும் லீவரேஜ் விளைவும் அதிகமாக இருக்கும். வரி விதித்துச் செலவழிக்கும் முறை மூலமாக சமூகத்தின் செலவிடக் கூடிய வருமானத்தை மேல்நோக்கி மறுபங்கீடு செய்து, அப்படிச் செய்வதன் மூலமாக மொத்த வருமானத்தின் அளவைச் சுருக்க முடியும் என்றாலும், பொதுவாக இவ்வாறு நிகழ்வதில்லை. சாதாரணமாக அரசாங்க வருவாயானது, மிகுந்த அளவுக்கு, தனியார் வருமானத்தின்மீது விதிக்கப்படும் வளர்வீத வரிகள், கார்ப்பரேஷன்களின் நிகர வருமானத்தின்மீது விதிக்கப்படும் வரிகள், வசதிப் பொருள்கள் (comforts) மீதும், போகப்பொருள்கள் (luxuries) மீதும் விதிக்கப்படும் ஆயத்தீர்வைகள் (excise duties) ஆகியவற்றிலிருந்தே பெறப்படுகிறது. அரசாங்கச் செலவானது, மிகுந்த அளவில், கூலியாகவும் ஊதியமாகவும் மாற்றல் செலுத்தல்க

ளாகவுமே அமைகின்றது. ஓர் ஒத்தநிலை வரவு-செலவுத் திட்டமானது வருமான அளவில் எத்தகைய மாறுதலையும் ஏற்படுத்தாமல் இருக்கும் என்பதுதான் இயல்பானநிலை என்பதை நாம் ஏற்றுக் கொள்ள முடியாது. அதற்கு மாறாகப் பெரும்பாலானசமயங்களில், வரிவிதித்துச் செலவிடும் முறையால் மொத்தச் செலவு—வருமானம் ஆகியவற்றின் அளவு ஓரளவுக்காவது உயர்வடைவதே இயல்பான நிலையாக இருக்கிறது.

**ஒவ்வாத நிலை வரவு செலவுத் திட்டத்தால் வருமானத்தில் ஏற்படும் விளைவு (Effect of an unbalanced budget upon Income) :** இதுவரை நம்முடைய பகுத்தாய்வு ஒத்தநிலை உடைய ரொக்க வரவு செலவுத் திட்டம் நடைமுறையில் உள்ளது என்னும் அடிப் படையில், அதாவது—தனியார் வரவிலிருந்து வரி முதலிய முறைகளால் எடுத்துக்கொள்ளப்படும் தொகையும் அரசாங்கத்தால் செலவிடப்படும் தொகையும் நேர்சமமாக இருக்கின்றன என்னும் அடிப்படையில் அமைந்திருந்தது. இனி, நாம் அரசாங்க வரவுகளும் செலவுகளும் ஒவ்வாத நிலையில் இருக்கும்போது, அதாவது பற்றுக்குறையோ (deficit) உபரியோ (surplus) இருக்கும்போது, எத்தகைய விளைவுகள் ஏற்படும் என்பதை ஆய்ந்து அறிவோம்.

**பற்றுக்குறை நிலைமை (The case of a Deficit) :** அரசாங்கத்தின் வரவைவிடச் செலவு அதிகமாக இருக்கும்போது, நாட்டின் வருமான ஓட்டத்திலிருந்து அரசாங்கத்தால் எடுக்கப்படும் தொகையைவிட அந்த ஓட்டத்தில் அரசாங்கத்தால் நுழைக்கப்படும் தொகை அதிகமாக இருக்கிறது. இந்த இரண்டு தொகைகளின் வேறுபாடுதான், அதாவது பற்றுக்குறைதான், அரசாங்கத்தின் நிகர செலவு ஆகும். இந்த நிகர செலவை லீவரேஜ் குணகத்தால் (co - efficient of leverage) பெருக்கிவரும் தொகையே, அரசாங்கத்தால் நீண்டகால அளவில் நாட்டின் வருமானத்தில் ஏற்படும் விளைவாகும். ஒத்தநிலை வரவு செலவுத் திட்டம்பற்றிய பகுத்தாய்வில் நாம் கையாண்ட அதே எடுத்துக்காட்டுகளை இங்கும் கையாளலாம். வரி செலுத்துவோரின் செலவு நாட்டமும் அரசாங்கச் செலுத்தல்களைப் பெறுவோரின் செலவு நாட்டமும் ஒரே அளவினதாக இருந்து, (நம் எடுத்துக்காட்டில் அது 0·9 ஆக இருக்கிறது) அரசாங்க வரவு 100 டாலராகவும் அரசாங்கச் செலவு 110 டாலராகவும் இருந்தால், கீழ்க்கண்ட விளைவுகள் ஏற்படும் :

வரி வரவின் எதிர்மறை வருமான விளைவு :

— ($ 90 + 81 + 72·9 ... ...) = — $ 900

செலவின் நேர்நிலை வருமான விளைவு :

$ 110 + 99 + 89·1 + 80·2 + ... ... ... = $ 1,100

நிகர வருமான உற்பத்தி + $ 200

இந்த எடுத்துக்காட்டில், 10 டாலர் பற்றுக்குறை இருக்கும் போது, நிகர வருமான உற்பத்தி 200 டாலராக இருப்பதைக் காண்கிறோம். இந்த எடுத்துக்காட்டில் நாம் மேற்கொண்ட பாவனைகள் (assumptions) யாவும் இதே நிலையில் இருந்து, வரவு செலவுத் திட்டம் மட்டும் ஒத்த நிலையினதாக இருக்குமானால், நிகர வருமான உற்பத்தி 100 டாலராக இருக்கும் என்பதை, 'அரசாங்கச் செலவின் வருமானத்தைத் தூண்டும் விளைவுகள்' என்னும் தலைப் பின்கீழ் நாம் ஏற்கெனவே ஆராய்ந்து அறிந்துள்ளோம். இந்த இரண்டு நிலைகளின் நிகர வருமான உற்பத்தியில் உள்ள வேறுபாடு ($ 200—100=100), ஒவ்வாத நிலை வரவு செலவுத் திட்டத்தில் உள்ள அதிகப்படி செலவை ($ 10) லீவரேஜ் குணகத்தால் (இறுதி நிலை நாட்டம் 0·9 ஆக இருக்கும்போது இது 10 ஆக இருக்கும்) பெருக்கிவந்த தொகையாகும்.

இதுவரை நாம் தெரிந்துகொண்ட உண்மைகளிலிருந்து, ஒரு குறிப்பிட்ட அளவுள்ள ஒத்தநிலை வரவு செலவுத் திட்டத்தால் மொத்த வருமானத்தில் ஏற்படும் விரிவுவிளைவைவிட அதே அளவுள்ள பற்றுக்குறை வரவுசெலவுத் திட்டத்தால் ஏற்படும் விரிவு விளைவு அதிகமாக இருக்கும் (அல்லது குறைந்த சுருக்க விளைவு உடையதாக இருக்கும்[18]) என்கிற முடிவுக்கு நாம் வரமுடிகிறது. நிதி நடவடிக்கையால் இறுதிநிலை நாட்டங்களில் மாறுதல் எதுவும் ஏற்படாமல் இருந்தாலும் அல்லது செலவிடக்கூடிய வரவுகளில் மறுபங்கீடு ஏற்பட்டாலும் இந்த முடிவு ஏற்புடையதாகவே இருக் கிறது. (ஆனால் நாம் ஒப்பிட்டுப் பார்க்க எடுத்துக்கொள்ளும் ஒத்த நிலை வரவு செலவுத் திட்டம், ஒவ்வாத நிலை வரவு செலவுத் திட்டம்—இரண்டிலும் ஒரே அளவுள்ள நாட்டமே இருப்பதாக வைத்துக்கொள்ளவேண்டும்.)

பற்றுக்குறை இருக்கிறது என்னும் உண்மையேகூடச் செலவு நாட்டத்தில் மாறுதலை ஏற்படுத்தக்கூடும் என்பதை இச் சமயத்தில் சுட்டிக்காட்டுவது நல்லது. தனியார்துறையானது, பற்றுக்குறை நிதியாக்கத்தை (deficit financing) அச்சத்தோடும் வெறுப்போ டும் பார்க்கிற பழமையான நிதிச் சிந்தனையின் பிடியில் சிக்கியிருக் கக் கூடும். இப் பழமைப் போக்குக்கு மாறான கொள்கை (பற்றுக்

குறைக் கொள்கை) கையாளப்படுவதால், தனியார் துறையின் இறுதி நிலை முதலீட்டு நாட்டம் குறையலாம். அப்படிக் குறைவதால், செலவு வரிசையின்மீது பிரயோகிக்கக்கூடிய நுகர்வு, முதலீடு ஆகியவற்றின் இணைப்பான நாட்டமும் குறையலாம். அதனால் விரிவு விளைவும் குறைவுபடலாம். 1930ஐத் தொடர்ந்த ஆண்டுகளின் மாபெரும் பொருளாதார மந்தகாலத்தில், ஐக்கிய அமெரிக்க நாடு, பற்றுக்குறை நிதியாக்கத்தை வருமான உற்பத்திக் கருவியாக முதன்முதலில் பயன்படுத்திய நேரத்தில், பழமைக்கு மாறான அத்தகைய நிதி நடவடிக்கையால் தனியார் முதலீட்டு நாட்டம் குறைந்துவிடலாம் என்றும், ஆகவே அந் நடவடிக்கையால் எதிர்பார்க்கப்படுகிற வேலைஅளவின் உயர்வு ஏற்படாமற் போகலாம் என்றும் பலர் கவலைப்பட்டார்கள். ஆனால் அக் காலத்திற்கும் இக் காலத்திற்கும் இடைப்பட்ட காலத்தில், இரண்டாம் உலகப்போரின்போது கையாளப்பட்ட பற்றுக்குறைச் செலவால் (deficit spending) ஏற்பட்ட வியக்கத்தக்க விரிவு விளைவு, அப் போருக்குப் பிந்திய அமைதிக்காலத்தில் பெருந்தொழில்கள் பல அரசாங்கத்தால் பொருள்களும் ஊழியங்களும் வாங்கப்படுவதையே மிகுந்த அளவில் நம்பிக்கொண்டிருக்கும் நிலை, பொருளாதார நிலைபேற்றை உருவாக்குவதில் அரசாங்கத்திற்கு உள்ள பங்கை முன்னிலும் தெளிவாக உணரும் தன்மை ஆகிய காரணங்களால் முன்னர் காணப்பட்ட அச்ச உணர்ச்சி பெரிதும் குறைந்துவிட்டது. வரவுசெலவுத் திட்டங்கள் ஆண்டுதோறும் ஒத்தநிலை உடையனவாக ஆக்கப்படவேண்டும் என்னும் பழமைச் சிந்தனை கருத்தளவில் இன்றும் மிகப் பலரிடம் காணப்படுகிறது. ஆனால், மொத்தத் தேவையின் பகுதிகள் (components of aggregate demand) அரசாங்கத்திடமிருந்து புறப்பட்டாலும் சரி, அல்லது தனியாரிடமிருந்து தோன்றினாலும் சரி, அந்தத் தேவை விறுவிறுப்புள்ளதாக ஆக்கப்படவேண்டும் என்னும் குறிக்கோள், தற்போது, பழமை சிந்தனையை விடப் பலமுள்ளதாக மாறிவிட்டது.

**உபரி நிலைமை (The case of a surplus):** அரசாங்க வரவுகள், செலவுகளைவிட மிகுதியாக இருக்கும்போது, ரொக்க உபரி (a cash surplus) ஏற்படுகிறது. இதன் பொருள் என்னவென்றால், தனியார் துறையிலிருந்து வரி முதலிய முறைகளால் அரசாங்கம் எடுக்கின்ற தொகை, அரசாங்கம் செலவிடுகின்ற தொகையைவிட அதிகமாக இருக்கிறது என்பதாகும். இருவகை வரவுசெலவு திட்டத்தின்போதும் செலவு நாட்டம் ஒரே அளவினதாக இருக்குமானால், ஒத்த நிலை வரவு செலவுத் திட்டத்தால் ஏற்படும் மொத்தத் தேவையைவிட உபரி வரவுசெலவுத் திட்டத்தால் ஏற்படும் மொத்தத் தேவை குறைவாக இருக்கும் என்பது, இதில் அடங்கி

யுள்ள உண்மையாகும். பொருளாதாரத்தின் இறுதிநிலைச் செலவு நாட்டம் 0·9 ஆக இருந்து, அரசாங்கத்தின் வரி வரவு 100 டால ராகவும் செலவு 90 டாலராகவும் இருந்து, 10 டாலர் உபரி ஏற்படு மானல், அதனல் நீண்டகால அளவில் நாட்டு வருமானத்தில் ஏற்படும் விளைவு கீழ்க்கண்டபடி இருக்கும் :

வரி வரவுகளின் எதிர்மறை வருமான விளைவு :
— ($ 90+81+72·9+ ...........)— $ 900

செலவின் நேர்நிலை வருமான விளைவு :
$ 90+81+72·9+ ........... = $ 900

நிகர வருமான விளைவு $ 0

10 டாலர் உபரியால் மொத்தத் தேவையில் ஏற்படும் பூஜ்ய விளைவை (அல்லது நடு நிலை விளைவு), வரி வீதம் இதே அளவில் இருந்து பற்றுக்குறை 10 டாலராக இருக்கும்போது மொத்தத் தேவையில் 200 டாலர் உயர்வு ஏற்படுகிற நிலைமையோடு ஒப்பிட்டுப் பார்க்கலாம். (அந்த நிலைமையைப் ‘பற்றுக்குறை நிலை’ என்னும் தலைப்பின்கீழ் விளக்கியுள்ளோம்.) மேற்படி பூஜ்ய விளைவை, வரவு செலவுத் திட்டம் ஒத்த நிலையில் இருக்கும்போது மொத்தத் தேவையில் 100 டாலர் உயர்வு ஏற்படுகிற நிலைமையோடும் ஒப் பிட்டுப் பார்க்கலாம். (அந்த நிலைமையை ‘அரசாங்கச் செலவின் வருமானத்தைத் தூண்டும் விளைவுகள்’ என்னும் தலைப்பின்கீழ் விளக்கியுள்ளோம்.)

ஆனல் ஒன்று, மேலே தரப்பட்டுள்ள எடுத்துக்காட்டில், உபரியாக உள்ள 10 டாலர் என்ன ஆகிறது என்பதை நாம் விளக்க வில்லை. ஒரு சாத்தியக்கூறு என்னவென்ருல், கருவூலத்தின் ரொக்க இருப்பில் (cash balance of the treasury) 10 டாலர் உயர்வு ஏற்படும்படி விடப்படலாம். இது, உபரி நிதியை வருமான ஓட்டத் தில் நுழைய விடாமல் பதுக்கிவைக்கும் ஏற்பாடாகும். இந்த ஏற்பாடு ஒரு ஜனநாயக சமூகத்தில் நெடுங்காலத்திற்கு அனுமதிக் கப்படும் என்று கூறமுடியாது. இரண்டாவது சாத்தியக்கூறு யாதெனில், உபரியை முன்னிட்டுச் செலவுக் கட்டுப்பாடுகள் தளர்த்தப்படலாம் ; அல்லது வரிகள் குறைக்கப்படலாம். இந்த இரண்டில் எது நடந்தாலும், ஒத்தநிலை வரவு செலவுத் திட்டத் தால் ஏற்படக்கூடிய விளைவுகளே உருவாகும்.

உபரித் தொகையானது அரசாங்கக் கடன்களைத் திருப்பித் தருவதற்குப் பயன்படுத்தப்படலாம் என்பது, மூன்ருவது சாத்தியக் கூறு. பெரும்பாலும் நடைமுறையில் கையாளப்படக்கூடிய சாத்தி

யக்கூறு. இதுவே. இந்த முறை கையாளப்பட்டால், உபரியானது, வருமான ஓட்டத்தில் மீண்டும் இணைந்துவிடுவது உறுதி. திருப்பித் தரப்படும் கடன் தொகைகளைப் பெறுவோரின் இறுதி நிலைச் செலவு நாட்டமும், பொருளாதாரத்தின் பொதுவான செலவு நாட்டமும் ஒன்ருக இருக்குமாளுல், ஒத்தநிலை வரவுசெலவுத் திட்டத்தால் ஏற்படக்கூடிய அதே வகையான வருமான விளைவே, கடன் தொகைகளைத் திருப்பித் தருவதாலும் ஏற்படும். ஆனுல், பெரும்பாலும் கடன்களைத் திரும்பப் பெறுவோரின் செலவு நாட்டம், பொருளாதாரத்தின் பொதுவான செலவு நாட்டத்தை விடக் குறைவாக இருக்கக்கூடும். ஏனெனில் பெரும்பாலும், அரசாங்கக் கடன்பத்திரங்களின் உரிமையாளர்கள், மற்றவர்களை விட அதிகமான வருமானமும் அதிகமான சேமிப்பு நாட்டமும் உடையவர்களாக இருப்பது இயற்கை. இந் நிலையில் கடனைத் திருப்பித் தருவதற்காக உபரித்தொகை பயன்படுத்தப்படுவதால், பொருளாதாரத்தின் செலவிடக்கூடிய வரவில் ஓரளவுக்கு மேல் நோக்கிய மறுபங்கீடு ஏற்படும். பொதுவாக உள்ள இறுதிநிலைச் செலவு நாட்டம் 0.9 என்றும், கடன் பத்திர உரிமையாளர்களின் இறுதிநிலைச் செலவு நாட்டம் 0·7 என்றும் வைத்துக்கொண்டால், கடனைத் திருப்பித் தருவதற்காக உபரித் தொகையைப் பயன்படுத்துவதால் ஏற்படும் விளைவு கீழ்க்கண்டவாறு இருக்கும் :

100 டாலர் வரி வரவால் ஏற்படும் எதிர்மறை வருமான விளைவு :

— ($ 90 + 81 + 72.9 + ........) = — $ 900

90 டாலர் வரவு செலவுத் திட்டச் செலவால் ஏற்படும் நேர்நிலை வருமான விளைவு :

$ 90 + 81 + 72·9 + ...... = $ 900

கடனைத் திருப்பித் தர 10 டாலரைப் பயன்படுத்துவதால் ஏற்படும் நேர்நிலை வருமான விளைவு :

$ 10 + 7 + 6.3 + ......... = $ 80

$ 980

நிகர வருமான விளைவு $ 80

ஓரே அளவுள்ள வரவு செலவுத் திட்டத்தின் உபரித் தொகையாகிய 10 டாலரைக் கடனைத் திருப்பித் தருவதற்குப் பயன்படுத்துவதால் ஏற்படும் 80 டாலர் அளவுள்ள இந்த நிகர வருமான விளைவை, அந்த 10 டாலரைப் பதுக்கிவைப்பதால் ஏற்படும் நிகர வருமான விளைவாகிய பூஜ்யம் டாலரோடும், வரவு செலவுத் திட்டம் ஒத்த நிலையினதாக (balanced budget) இருக்கும்போது ஏற்படும் நிகர வருமான விளைவாகிய 100 டாலரோடும் ஒப்பிட்டுப் பார்க்க.

ஒத்த நிலை வரவுசெலவுத் திட்டத்தாலும் ஒவ்வாத நிலை வரவுசெலவுத் திட்டத்தாலும் நாட்டு வருமானத்தில் ஏற்படும் விளைவுகள்பற்றிய பகுத்தாய்வின் இந்த முடிவுகளை, வருமானப் பகுத்தாய்வுபற்றிய வழக்கமான வரைபடங்கள் (diagrams) மூலமாகச் சித்திரித்துக் காட்டமுடியும்.




படம் 4.

**ஒத்தநிலை வரவு செலவுத் திட்டத்தால் வருமானத்தில் ஏற்படும் விளைவு**

மேலேஉள்ள 4ஆவது படத்தில் ஒத்தநிலை வரவுசெலவுத் திட்டத்தின் விளைவு காட்டப்பட்டிருக்கிறது. படத்தின் விளக்கம் தெளிவாக இருப்பதற்காகப் படத்தில் காட்டப்பட்டுள்ள எண்களின் அளவுகள் (numerical magnitudes) நாம் முன்னர் தந்த எடுத்துக்காட்டில் உள்ள எண்களிலிருந்து சிறிதளவு மாற்றப்பட்டிருக்கின்றன. நுகர்வுப் பணி (C) என்பது, நாட்டின் மொத்த ஆக்கத்தின்(Y) பல்வேறு நிலைகளில் காணப்படக்கூடிய நுகர்வுச் செலவுகளின் தொகைகளைக் குறிப்பதாகும். அதனுடைய சரிவு (slope) $\frac{2}{3}$ ஆகும். எல்லா நிலைகளிலும் இறுதிநிலை நுகர்வு நாட்டம் $\frac{2}{3}$ ஆக இருக்கிறது என்பது இதன் பொருள். முதலீட்டுப்பணியின் (the investment function-I) சரிவு $\frac{1}{12}$ ஆகும். தானே இயங்கும் முதலீடு, தூண்டப்பட்ட முதலீடு — இரண்டும் இதில் அடங்கியுள்ளன. எனவே, இறுதிநிலை நுகர்வுநாட்டம், இறுதிநிலை முதலீட்டு

நாட்டம்—ஆகியவற்றின் கூட்டுத்தொகை $\frac{3}{4}$ ஆகிறது. படத்தின் வரிப் பகுதி, செலவுப் பகுதி, இரண்டிலும் இதே நாட்டங்கள் பயன்படுத்தப்படுவதால், வரி விதித்துச் செலவிடும் முறையால் வருமான மறுபங்கீடு எதுவும் ஏற்படவில்லை என்னும் பாவனை படத்தில் அமைந்திருக்கிறது என்பது தெளிவு.

நிதி நடவடிக்கை எதுவும் இல்லாமலிருந்தால் — அதாவது அரசாங்க நடவடிக்கை இல்லாமலிருந்தால், நாட்டு வருமானத்தின் சமநிலை அளவு $OY_1$ ஆக இருக்கும். ஆனால் நாம் அரசாங்க நிதி நடவடிக்கைகளால் ஏற்படக்கூடிய விளைவுகளைப்பற்றி ஆராயும் போது, அந் நடவடிக்கையால் இரண்டு வகை மாறுதல்கள் ஏற்படுவதை அறியலாம். முதலாவது மாறுதல் தனியாரிடமுள்ள செலவிடக் கூடிய நிதிகளை வரிகள்மூலம் எடுத்துக்கொள்வதால் ஏற்படுகிற வருமானக் குறைவு விளைவு C., I. ஆகிய இரண்டையும், அல்லது இரண்டில் ஒன்றை, வரிகள் குறைத்துவிடுகின்றன. ஆகவே, C+I பணியானது C′+I′ என்னும் நிலைக்கு வீழ்ந்துவிடுகிறது. இந்த வீழ்ச்சியின் அளவு, வரித்தொகையின் அளவுக்குச் சமமாக இராது. வரி செலுத்துவோர், வரித் தொகையிலிருந்து உடனடியாகச் செய்திருக்கக்கூடிய செலவின் அளவுக்குத்தான் சமமாக இருக்கும். அதாவது C+I பணியின் வீழ்ச்சி, வரித்தொகையை இறுதி நிலைச் செலவுநாட்டத்தால் (இது, இப் படத்தில் 0·75 ஆக இருக்கிறது) பெருக்கி வந்த தொகையின் அளவுக்கே இருக்கும். வரித் தொகையின் மிச்சப் பகுதி, சேமிப்பிலிருந்து எடுத்துச் செலுத்தப்பட்டிருக்கும்.

இரண்டாவது மாறுதல், பொருள்களுக்கும் ஊழியங்களுக்கும் அரசாங்கம் செலவிடுவதால் ஏற்படுவது ஆகும். ஒத்த நிலை வரவுசெலவுத் திட்டத்தில், இந்த அரசாங்கச் செலவு (G) மொத்த வரி வரவுத்தொகைக்குச் சமமாக இருக்கும். இந்த (G)யை C + I உடன் சேர்த்தால் Y-ன் பல்வேறு நிலைகளில் ஏற்படும் பொருளாதாரத்தின் மொத்தச் செலவின் அளவை நாம் பெறமுடியும். C′ + I′ + G என்பதே அந்த அளவாகும். இருவகை மாறுதல்களாலும் ஏற்படும் நிகர விளைவு, $Y_2$-ல் உள்ள புதிய சமநிலை வருமான அளவு ஆகும். C + Iஐ விட C′ + I′ + G எந்த அளவு மிகுதியாக உள்ளது என்பதைக் கண்டறிந்து, அந்த அளவை, லீவரேஜ் குணகத்தால் பெருக்கினுல் கிடைக்கும் தொகையே, வரி விதித்துச் செலவிடும் நடவடிக்கையால் ஏற்படும் வருமான உயர்வு ஆகும். 4ஆவது படத்தில், இறுதி நிலைச் செலவுநாட்டம் $\frac{3}{4}$ ஆக இருப்பதால், லீவரேஜ் குணகம் 4 ஆகவும், வருமான உயர்வு முதலில் ஏற்பட்ட நிகர செலவு உயர்வைப் போல [(C′+I′+G) — (C+I)] நான்கு மடங்காகவும் இருக்கின்றன.

கீழே உள்ள படம் 5, மொத்தத் தேவையைக் [aggregate demand $(C'+I'+G)$] குறைக்கும் அளவுக்கு வரவு செலவுத்திட்ட உபரி பெரிதாக உள்ள ஒரு நிலையை விளக்கிக் காட்டுகிறது.




படம் 5.

**வரவு செலவுத் திட்ட உபரியால் வருமானத்தில் ஏற்படும் விளைவு**

முந்திய பட விளக்கத்தில் நாம் தெரிவித்ததைப்போலவே, இங்கும், தனியார் செலவுப் பணி $C+I$ ஆக இருக்கிறது என்றும், நிதி நடவடிக்கை எதுவும் இல்லாமல் இருந்தால் இச் செலவுப் பணியால் ஏற்படும் சமநிலை வருமான அளவு $OY_1$-ல் இருக்கும் என்றும் வைத்துக்கொள்வோம். ஆனல், அரசாங்க நடவடிக்கை இருக்கும் போது, வரி விதிப்பின் விளைவாக, $C+I$ பணி, $C'+I'$ பணியாக வீழ்ந்துவிடுகிறது. இந்த வீழ்ச்சியின் அளவு, வரி வரவை, நுகர்வுக்கும் முதலீட்டுக்குமான இறுதிநிலைச் செலவு நாட்டத்தால் (0·75) பெருக்கி வரும் தொகையின் அளவாகும். ஆனல், அரசாங்கச் செலவு G, திரட்டப்பட்ட வரிகளின் அளவைவிடக் குறைவாகவும், வரி விதிப்பால் $C+I$-ல் ஏற்பட்ட குறைவைவிடக் குறைவாகவும் இருக்கிறது. புதிய சமநிலை அளவு $OY_2$-ல் இருக்கும். மொத்தத் தேவையின் நிகர வீழ்ச்சி அளவை $[(C+I)-(C'+I'+G)]$ லீவரேஜ் குணகத்தால் (4) பெருக்கிவந்த தொகையே, புதிய சமநிலை அளவு. எனவே, நிதி நடவடிக்கை இல்லாத நிலையில் இருந்திருக்கக்

கூடிய நாட்டின் மொத்த ஆக்க அளவைவிட ($OY_1$), உபரி வரவு செலவுத் திட்டத்தால் ஏற்படும் நாட்டின் மொத்த ஆக்க அளவு ($OY_2$) குறைவாக இருப்பது, தெளிவாகத் தெரிகிறது. வரவு செலவுத் திட்ட உபரித் தொகையை மறு செலவு செய்வதால் ஏற்படக்கூடிய விளைவுகள் எவையும் இப் படத்தில் காட்டப்படவில்லை.

இறுதியாக, படம் 6-ல் வரவு செலவுத் திட்டப் பற்றுக்குறையால் ஏற்படும் நிலைமை விளக்கிக் காட்டப்பட்டிருக்கிறது.




படம் 6.

**வரவு செலவுத் திட்டப் பற்றுக் குறையால் வருமானத்தில் ஏற்படும் விளைவு**

இப் படத்தில், நுகர்வுப் பொருள்களுக்கும் முதலீட்டுப் பொருள்களுக்குமான மொத்தத் தனியார் தேவையில் வரி விதிப்பால் ஏற்படும் குறைவை $C' + I'$ சித்திரிக்கிறது. இப் படத்தால் விளக்கப்படும் நிலைமையில், வரியால் ஏற்படும் எதிர்மறை விளைவை விட அரசாங்கச் செலவால் ஏற்படும் நேர்நிலை விளைவு, குறிப்பிடத் தக்க அளவு அதிகமாக இருக்கிறது. $C + I$ ஐ விட $C' + I' + G$ உயர்ந்த மட்டத்தில் இருக்கிறது. வருமானத்தின் சமநிலை அளவு, $OY_1$-லிருந்து $OY_2$ க்கு உயர்கிறது. இந்த உயர்வு, $C'+I'+G$ க்கும் $C + I$ க்கும் உள்ள வேறுபாட்டை லீவரேஜ் குணகத்தால் (4)

பெருக்கி வந்த தொகையாகும். படம் 5-ல் எவ்வாறு நாம் உபரித் தொகையானது வருமான ஓட்டத்தில் மீண்டும் சேரவில்லை என்று பாவித்துக்கொண்டோமோ, அவ்வாறே இங்கும், பற்றுக் குறையானது, தனியாட்கள், வியாபார நிறுவனங்கள் ஆகியோரின் செலவிடக்கூடிய சாதனங்களிலிருந்து பெறப்படவில்லை என்றும், பாங்கு முறையால் புதிதாக ஆக்கப்பட்ட பணத்தைக்கொண்டு சரிக்கட்டப்பட்டது என்றும் வைத்துக்கொண்டுள்ளோம். எனவே, நடப்பு வருமானத்திலிருந்து தனியார் செய்யக்கூடிய நுகர்வையோ முதலீட்டையோ பாதிக்காத முறையிலேயே பற்றுக்குறைக்குத் தேவையான நிதி பெறப்படுகிறது.

## முடிவுரை

நிதி நடவடிக்கையால் பொருளாதார நடவடிக்கையின் அளவில் எத்தகைய விளைவுகள் ஏற்படுகின்றன என்பதுபற்றிய முடிவெடுப்புக்குத் தேவையான பகுத்தாய்வு அடிப்படையை நாம் இந்த அத்தியாயத்தில் அமைத்துள்ளோம். நிதிக் கோட்பாடானது, விரும்பத்தக்க ஓர் அளவில் பொருளாதாரத்தை நிலைபெறுக்குவதற்கான கருவியாக, வேண்டுமென்றே பயன்படுத்தப்படும்போது மட்டுமே இந்தப் பகுத்தாய்வு பொருந்தும் என்று நினைக்கத் தோன்றும். ஆனால், அஃது உண்மை அன்று. நிலைபெறுக்குதல் அல்லாத ஏனைய குறிக்கோள்களுக்காகக் கையாளப்படும் நிதி நடவடிக்கைகளின் பொருளாதார விளைவுகளைப்பற்றி அறிவதற்கும், இந்தப் பகுத்தாய்வு இதே அளவுக்குப் பொருந்தும். மொத்தத் தேவை அளவுகடந்து இருப்பதை, அல்லது பற்றுக்குறையாக இருப்பதைத் திருத்தி அமைப்பதற்காக எத்தகைய நிதி நடவடிக்கையைக் கையாளவேண்டும் என்பதை, நமக்கு அறிவிக்கும் வழிகாட்டியாக மட்டும் இந்தப் பகுத்தாய்வு விளங்கவில்லை. எதிர்பார்க்கப்படுகிற போரின் காரணமாகப் போர்க் கருவிகளுக்கான செலவு உயர்தல் முதலிய குறிப்பிட்ட நிதி நடவடிக்கைகளால் பொருளாதாரத்தில் ஏற்படும் விளைவுகளைக் கண்டறியவும், இந்தப் பகுத்தாய்வு வழி வகுத்துத் தருகிறது.

நிதி நடவடிக்கையால் நாட்டின் பொருளாதாரம் விரிவடையுமா, சுருங்குமா அல்லது முன் இருந்தபடியே மாறுமல் இருக்குமா என்பது, பல்வேறு சூழ்நிலைகளைப் பொறுத்திருக்கிறது. வருமானத்தில் ஏற்படக்கூடிய எந்த நிகர மாறுதலும், அடிப்படையில், பொருள்களுக்கும் ஊழியங்களுக்குமான மொத்தத் தேவையில் நிதி நடவடிக்கையால் ஏற்படும் மொத்த விளைவையே பொறுத்திருக்கிறது. இந்த மொத்த விளைவின் ஒரு பகுதி, பொருள்களையும்

ஊழியங்களையும் வாங்குவதற்காக வரவு செலவுத் திட்டச் செலவு வாயிலாக அரசாங்கம் எழுப்பும் தேவையின் நேரடிப் பயன் ஆகும். மொத்த விளைவின் மற்றொரு பகுதி, பொருள்களையும் ஊழியங்களையும் வாங்குவதற்கான தனியார் செலவில் நிதி நடவடிக்கையால் ஏற்படும் மறைமுக விளைவாகும். இத்தகைய மறைமுக விளைவுகளில் முக்கியமானது, தனியாரின் செலவிடக்கூடிய வருமானத்திலிருந்து வரிகள்மூலமாக ஓரளவு தொகை எடுத்துக்கொள்ளப்படுவது ஆகும். எதிர்காலத்தில் எத்தகைய இலாபம் கிடைக்கும் என்று வணிகர்கள் எதிர்பார்க்கும் நிலைமை, எதிர்காலத்தில் எத்தகைய விலைகள் இருக்கும் என்று நுகர்வோர் எதிர்பார்க்கும் நிலைமை, வாணிபச் சூழ்நிலையில் பொதுவாகக் காணப்படும் மனப்போக்கு ஆகியவற்றில் அரசாங்கச் செலவுத் திட்டங்களால் ஏற்படும் மாறுதலாலும் தனியார் செலவில் மாற்றங்கள் ஏற்படக்கூடும்.

இவை எல்லாம் தனியார் பொருளாதாரத்தில் அரசாங்க நிதி நடவடிக்கையால் ஏற்படக்கூடிய விளைவுகளின் வகைகளைமட்டுமே குறிக்கின்றன. ஆனால், அந்த விளைவுகளின் அளவை நாம் கணக்கிடறிய வேண்டுமானால், செலவு நாட்டங்களின் தன்மையை நாம் கவனித்தாகவேண்டும். பெரும்பாலான நேரங்களில் செலவு நாட்டங்களின் அளவை வரையறுத்துக் கணக்கிடுவது இயலாத செயலே என்றாலும், ஒரு கொள்கையால் (policy) ஏற்படும் விளைவு, மற்றொரு கொள்கையால் ஏற்படும் விளைவைவிட மிகுதியாகவோ குறைவாகவோ இருக்கும் என்று முடிவு செய்வது இயலக்கூடிய செயலே ஆகும்.

## மேலும் படித்தற்கு உரியவை

1. ஆல்வின் எச். ஹான்சன் (Alvin H. Hansen), 'Fiscal Policy and Business Cycles', நியூயார்க், நார்ட்டன், 1941.

இது, வாணிபச் சுழல் கோட்பாட்டோடு நிதிக் கொள்கையைத் தொடர்புபடுத்தும் தலைசிறந்த நூல். இந்த அத்தியாயத்தைப் பொறுத்தவரை, இந் நூலின் 2, 6 ஆகிய அத்தியாயங்கள் பெரிதும் பயன்படும். சிறப்புத் தேர்ச்சிபெற விழைவோர், தம் நோக்கங்களுக்கு ஏற்ப பிற அத்தியாயங்களைத் தேர்ந்தெடுத்துப் படிக்கலாம்.

2. பால் ஏ. சாமுவேல்சன் (Paul A. Samuelson), 'Fiscal Policy and Income Determination', Quarterly Journal of Economics, 1942, பக்கங்கள் 575–605.

நிதிக் கொள்கை, நிலைபேறு ஆகிய பொதுப் பொருள்கள்பற்றி மிகவும் பரிந்துரைக்கப்படும் கட்டுரை, ஓரளவு, வேலைக்குறைவின் கோணத்திலிருந்து அப் பொருள்களை ஆராய்வதோடு, குறிப்பிட்ட காலத்தின் தலையாய கொள்கைச் சிக்கல்களைப்பற்றியும் ஆராய்கிறது.

3. ஹென்ரி சி. வால்லிச் (Henry C. Wallich), 'Income-Generating Effects of a Balanced Budget', Quarterly Journal of Economics, *1944*, பக்கங்கள் *78–91.*

ஓர் ஒத்தநிலை வரவுசெலவுத் திட்டத்தின் பெருக்க ஆற்றல் பற்றித் துணிவுடன் எழுதப்பட்ட கட்டுரை இது. இந்த அத்தியாயத்தில் கருத்தாய்வு செய்யப்பட்ட கோட்பாட்டின் ஓர் இயல்பைப்பற்றிய மிக விரிவான ஆராய்ச்சி இது.

## 4ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. ஐக்கிய அமெரிக்காவின் நாட்டின்ஆக்கம் (national product), நாட்டின் வருமானம் (national income) ஆகியவைபற்றிய புள்ளிவிவரங்கள், வாணிபத்துறையால் (Department of Commerce), 'Survey of Current Business' என்னும் மாத வெளியீட்டில், முறையாக வெளியிடப்படுகின்றன. இன்னும் விரிவான முறையில் அப் புள்ளிவிவரங்கள், அப் பத்திரிகையின் ஜூலை மாத இதழில் ஆண்டுதோறும் வெளியிடப்படுகின்றன. அந்தப் பத்திரிகையின் பிற்சேர்க்கையாகச் சில சமயங்களில் வெளியிடப்படுகிற 'National Income Supplement' என்பது, இத் துறைபற்றிய கருத்துகளையும் முறைகளையும் கருத்தாய்வு செய்வதோடு, நாட்டு வருமானம்பற்றிய புள்ளிவிவரங்களைக் குறிப்பிட்ட ஆண்டிலிருந்து 1929 வரை பின்நோக்கிச் சென்று, திருத்தியமைத்துத் தருகிறது.

2. தெளிவாக இருக்கவேண்டும் என்பதற்காக, இனங்களை இந்த மூன்று வகையாகப் பாகுபாடு செய்யும்போது, துல்லியமானது (accuracy) ஓரளவு கைவிடப்பட்டிருக்கிறது. அயல்நாட்டு முதலீடு இரண்டாவது பிரிவில் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஆனால், அப் பிரிவைச் சேர்ந்த சில பொருள்களும் ஊழியங்களும் நுகர்வு வகையைச் சேர்ந்தவையாகும். குடியிருப்பு வீடுகள் முதலிய சில நீடித்த நுகர்வுப் பொருள்களும், அதிகாரபூர்வமான புள்ளிவிவரங்களில் முதலீட்டோடு சேர்த்தே வெளியிடப்படுகின்றன.

3. இப்படிச் சொல்லும்போது, நாம், செலவு, உற்பத்தி ஆகிய இரண்டுமே, பணத்தின் அடிப்படையில் (in money terms) அல்லது உண்மையின் அடிப்படையில் (in real terms) அளவிடப்படுகின்றன என்றும், விலைகள் மாறாமல் இருக்கின்றன என்றும் பாவித்துக்கொள்கிறோம்.

4. 'வேலை நிறைவு' என்னும் கருத்து, நடைமுறையில் ஓர் இயக்கநிலைப் பொருளாதாரத்தில் (dynamic economy) எந்தக் குறிப்பிட்ட நேரத்திலும், சில தொழிலாளர்கள் ஒரு வேலையிலிருந்து இன்னொரு வேலைக்கு மாறிக்

கொண்டிருப்பார்கள் என்பதையும், சில மூலதனச் சாதனங்கள், வீழ்ந்து கொண்டிருக்கிற அல்லது கலைக்கப்படுகிற நிறுவனங்களின் உடைமையாக இருக்கும் என்பதையும் ஒப்புக்கொள்கிறது. ஆகவே, வேலைநிறைவு (full employment) என்ருல், தன் விருப்புஅற்ற வேலையின்மை (involuntary unemployment) இல்லாமலிருத்தல் என்பதே பொருளாகும். நடைமுறையில், மொத்த உழைப்பாளர்களின் 2 அல்லது 3 சதவீதத்தினர் வேலையில்லாமல் இருந்தாலும், ஒரு பொருளாதாரமானது வேலைநிறைவுடன் பணியாற்றுவ தாகவே கருதப்படும். 'தொழில் நுண்ணியலின் (technology) தற்போதைய நிலையில்' ஒரு குறிப்பிட்ட தரமுள்ள வேலை வாரம் (work week) அமைந்திருக் கிறது. வாரத்திற்கு 60 மணிநேரம் வேலை செய்யக்கூடிய் உடல் வன்மையைத் தொழிலாளர்கள் பெற்றிருந்தாலும் அவர்கள் 40 மணி நேரமே வேலை செய் கிருர்கள் என்னும் உண்மைக்கும், வேலைநிறைவு அளவுக்கும் எத்தகைய தொடர்பும் இல்லை.

5. இந்தப் படமானது, இரண்டாண்டுக் காலங்களை அடிப்படையாகக் கொண்டிருப்பதால், 1948–49, 1953–54 ஆகிய ஆண்டுகளின் பின்னிறக் கங்கள் இதில் ஓரளவுக்குத்தான் புலனுகின்றன என்பதை விழிப்பாக உள்ள வாசகர் உணர்ந்திருக்கக்கூடும்.

6. நுகர்வு நாட்டம் என்பதை, நாட்டு வருமானத்தின் ஏதாவது ஒரு அளவுக்கும் நுகர்வுக்கும் உள்ள விகிதமாகக் குறிப்பிடலாம். 1957–ல், நாட்டின் மொத்த ஆக்கத்தைப் பொறுத்த சராசரி நுகர்வு நாட்டமானது 64·7/100 ஆக இருக்கையில், அதே ஆண்டில் தனியார்வருமானத்தைப் பொறுத்த சராசரி நுகர்வு நாட்டமானது 284·4/347·9 ஆக, அல்லது 81·9/100 ஆக இருந்தது. செலவிடக்கூடிய தனியார் வருமானத்தில் சராசரி நுகர்வு நாட்டம், 284·4/305·1 ஆக, அல்லது 93·3/100 ஆக இருந்தது.

7. நுகர்வுப் பணியை ஒரு வளைகோடாகக் (curve) காட்டினுல், அந்த வளைகோட்டின் புள்ளிகள், ஒரு குறிப்பிட்ட நேரத்தில், நாட்டின் மொத்த ஆக் கத்தின் (அல்லது வருமானம்பற்றிய வேறு அளவையின்) பல்வேறு மட்டங் களில் நிகழக்கூடிய நுகர்வுச் செலவின் அளவுகளை எடுத்துக்காட்டுகின்றன. ஆகவே, அந்த வளைகோடு, சராசரி நுகர்வுநாட்ட வளைகோடாக ஆகிறது. இந்த வளைகோட்டின் இரண்டு புள்ளிகளுக்கு இடையேஉள்ள சாய்வானது (slope), இறுதிநிலை நுகர்வு நாட்டம் ஆகும். அதாவது,

$$\text{இறுதி நிலை நுகர்வு நாட்டம்} = \frac{\text{நுகர்வில் உயர்வு}}{\text{வருமானத்தில் உயர்வு}}$$

வருமானத்தின் அளவு மாறியபோது, நுகர்வுப் பணியானது நிலையாக இருந்தது என்கிற உறுதி நமக்குத் தரப்பட்டால், நாம், இறுதிநிலை நுகர்வு நாட்டத்தை, ஒரு குறிப்பிட்ட காலத்தில் நுகர்விலும் வருமானத்திலும் ஏற்படுகிற உயர்வுகளை அடிப்படையாகக்கொண்டு அளவிடமுடியும். ஆனுல், நடைமுறையில், நுகர்வுப் பணியானது மேல்நோக்கியோ கீழ்நோக்கியோ மாறித்தான் இருக்கும். அத்தகைய நிலையில், நாம், நுகர்வில் ஏற்படும் உயர்வை, ஒரு நுகர்வுப் பணியின் ஒரு புள்ளியிலிருந்து மற்ரெரு நுகர்வுப் பணியின் ஒரு புள்ளி வரையில் அளந்துகொண்டிருப்போம். எடுத்துக்காட்டாக, ஆண்டு வீதங்களில், 1958-ன் இரண்டாவது காலாண்டிலிருந்து மூன்ருவது காலாண்டில், நாட்டின் மொத்த ஆக்கமானது, 10 பில்லியன் டாலர் அளவும், நுகர்வுச் செலவு 4 பில் லியன் டாலர் அளவும் உயர்ந்துள்ளன. இந் நிலையில், நுகர்வுப் பணியானது

நிலையாக இருப்பதாக வைத்துக்கொண்டால், இறுதிநிலை நுகர்வு நாட்டம் 4/10 ஆக அமைகிறது. ஆனால் அது பின்னிறக்கத்திலிருந்து மீண்டுகொண்டிருந்த காலம். ஆகவே, அந்தக் காலத்தில் நுகர்வுப் பணியானது மாறாமல் இருந்திருக்கும் என்று கூறமுடியாது.

8. ஓர் எல்லையற்றத் தொடரின் கூட்டுத்தொகைக்கான வாய்பாடானது (the formula for the sum of an infinite series), சிறப்பான முறையில் இங்குப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. $S=A/(I-r)$ என்னும் இந்த வாய்பாட்டில், A என்பது, வரிசையின் முதல் கட்டத்தையும், r என்பது வரிசையின் ஏதேனும் ஒரு கட்டத்திற்கும் (term) அதன் முந்திய கட்டத்திற்கும் உள்ள விகிதத்தையும் குறிக்கின்றன. ஒரு புதிய கூடுதலான அரசாங்கச் செலவு செய்யப்படுமானல், அந்தச் செலவால், நுகர்வு மறுசெலவின் மூலமாக, நாட்டின் வருமானத்தில் ஏற்படுகிற மொத்த விளைவுகளை $\triangle y=k \times \triangle G$ என்னும் வாய்பாட்டின் மூலம் குறிப்பிடலாம், இந்த வாய்பாட்டில், $\triangle y$ என்பது நாட்டு வருமானத்தில் ஏற்படுகிற உயர்வையும், k என்பது பெருக்கும் எண்ணையும், $\triangle G$ என்பது அரசாங்கச் செலவின் உயர்வையும் குறிக்கின்றன. இவ்வாறாக,

$$\triangle y = \frac{1}{1-\triangle c/\triangle y} \times \triangle G \text{ அல்லது } \frac{\triangle G}{1-\triangle c/\triangle y}$$

9. 'Federal Spending and the Stability of the Postwar Economy' என்னும் மிக முக்கியமான கட்டுரையில், பெர்ட் ஜி. ஹிக்மான் (Bert G. Hickman) என்பார், இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு, தனியார் முதலீட்டைவிட அரசாங்கச் செலவுகள் குறைந்த அளவு நிலைபேறு உடையனவாகவே இருக்கின்றன என்பதை விளக்கிக்காட்டியுள்ளார். [பொருளாதார இணைப்புக் குழு (Joint Economic Committe): Federal Expenditure Policy for Economic Growth and Stebility — Papers submitted by Panelists Appearing before the Sub committee on Fiscal Policy, வாஷிங்டன், 1957, பக்கங்கள் 357 – 81.] ஆனல், இந்தப் பிரிவில், பொருளாதாரத்தின் தனியார் துறையின் போக்கிலேயே நாம் அக்கறை கொண்டுள்ளோம்.

10. வருமானத் தீர்மானங்களைப் (income determinants) பற்றிய இந்தக் கருத்தாய்வில், அரசாங்கத்தின் பங்கு, சேர்க்கப்படவில்லை என்பதையும் தனியார் பொருளாதாரத்தின் போக்கைமட்டுமே நாம் ஆராய்கிறோம் என்பதையும் வாசகர் அறிந்திருப்பார் என்று கருதுகிறோம். ஆனல், சேமிப்புகளில் வரிகளைச் சேர்த்துக்கொண்டு, முதலீடுகளில் அரசாங்கத்தால் வாங்கப்படுகிற பொருள்களையும் ஊழியங்களையும் சேர்த்துக்கொண்டால், இந்தக் கருத்தாய்வில், அரசாங்கத் துறையும் இணைந்திருப்பதாகக் கருதமுடியும்.

11. ஆல்வின் எச். ஹான்சன், 'Fiscal Policy and Business', நியூயார்க், நார்டன், 1941, பக்கங்கள் 64–65.

12. ஆனல், இறுதிநிலை நாட்டங்களில் ஒன்று பூஜ்யமாக (zero) இருந்தால் இப்படி நிகழாது என்பது உண்மையே.

13. தனியார் நிதிகளாகிய 100 டாலர், வருமானப் பங்கீட்டு முறையால் முடிவு செய்யப்படுகிற ஆட்களிடம் இருக்கும் என்பதும், அவர்களுடைய இறுதிநிலை நாட்டம் 0.9 ஆக இருக்கும் என்பதும், இதன் பொருளாகும்.

14. நாம், நம் எடுத்துக்காட்டுகளில் நுகர்வுக்கும் முதலீட்டுக்குமான இணைந்த இறுதிநிலைச் செலவு நாட்டம் 0.9 ஆக இருப்பதாகப் பாவித்துக் கொள்கிறோம்.

$$\Delta c./\Delta y/+\Delta I/\Delta y = 0{\cdot}9$$

லிவரேஜ் குணகமானது, $1 - \dfrac{1}{\Delta c/\Delta y + \Delta I/\Delta y}$ ஆக இருப்பதால்,

அது, 1/(1—9) அல்லது 10 ஆக அமைகிறது.

15. இந்தப் பிரிவில், 'வழக்கில் உள்ள வரவுசெலவுத் திட்டத்தை' விட 'ரொக்க வரவுசெலவுத் திட்டம்' இருப்பதாகவே நாம் பாவித்துள்ளோம். ஏனென்றால், பிந்தியதே, நிதி நடவடிக்கையை முழு அளவில் காட்டுவதாகவும், ரொக்க வரவுகள் — ரொக்கச் செலுத்தல்கள் என்னும் அடிப்படையில் அமைந்ததாகவும் இருக்கிறது. (இந்த இரு வரவுசெலவுத் திட்டங்களுக்கும் உள்ள வேறுபாடுகளை அறிய, விரிவாக அத்தியாயம் 2-ன் பின் இணைப்பைக் காண்க.)

16. இந்த வாதம், வரவுசெலவுத் திட்டம் ஒத்தநிலை உடையதாக இருக்கும்வரையில், அந்தத் திட்டத்தின் அளவால், வேலையின் அளவிலோ விலைகளின் அளவிலோ எத்தகைய மாறுதலும் ஏற்படாது என்னும் சுவையான முடிவைத் தருகிறது. எனவே, ஒரு சிறிய ஒத்தநிலை வரவுசெலவுத் திட்டத்தைப் போலவே ஒரு பெரிய ஒத்தநிலை வரவுசெலவுத் திட்டமும், வேலை–விலைகள் ஆகியவற்றைப் பொறுத்தவரை நடுநிலையாக இருக்கும்.

17. இப்படிச் சொல்லும்போது, தன்மறுப்புச் செய்யப்பட்ட முதல் கட்டச் செலவு (first-round spending sacrificed), 9·5 என்னும் இறுதிநிலை நாட்டத்திற்கும், அதன் பிந்திய கட்டங்கள் ·9 என்னும் இறுதிநிலை நாட்டத்திற்கும் உட்பட்டன என்பதை நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும்.

18. வரிவிதித்துச் செலவிடும் முறையின் விளைவாக, வழங்கத்தக்க வரவுகளில் (disposable receipts) மேல் நோக்கிய மறுபங்கீடு குறிப்பிடத்தக்க அளவில் ஏற்படுமானால், ஓர் ஒத்தநிலை வரவு செலவுத் திட்டம் சுருக்க விளைவைப் (contractive effect) பெறக்கூடும் என்பதை முன்னரே நாம் கண்டோம்.

# 5. அரசாங்கச் செலவும் பொருளாதார நிலைபேறின்மையும்

நிலைபேறான பொருளாதார வளர்ச்சி, நம் சமுதாயத்தின் குறிக்கோள்களில் ஒன்றாகும். நிலைபேறின்மை நிலவுகிறது என்றால் நிலைபேறான விலை மட்டத்தில் உள்ள வேலைநிறைவு (full employment at stable price level) என்னும் நிலைமையை நாம் அடையவில்லை என்றே பொருள். உழைப்பாளர்களும் முதல்இன சாதனங்களும் பயன்படுத்தப்படாமல் இருந்தால், அவற்றால் உற்பத்தி செய்திருக்கக்கூடிய பொருள்களையும் ஊழியங்களையும் சமூகம் இழந்து விடுகிறது. இந்த இழப்பானது வெறும் ஒத்திவைப்பு இல்லை; நிலையான இழப்பே ஆகும்.[1] அதோடு, வேலையின்மை என்பது, முற்றிலும் தற்செயலாக அமைந்த வருமான மறுபங்கீட்டைக் குறிக்கிறது. எந்தத் தனியாட்களால் இந்த மறுபங்கீட்டின் விளைவைத் தாங்கமுடியாதோ அத்தகையவர்களிடமே இம் மறுபங்கீடு மிகப் பெரிய அளவில் நடைபெறுகிறது. எனவே, வேலையின்மை என்பது, மனிதத் தன்மையில்லாத — சமுதாய நலனுக்கு மாறான ஒரு நிகழ்ச்சியாக இருக்கிறது. அது அப்படிப்பட்டதாக இருப்பதால் முடிந்தபோதெல்லாம் அதனைத் திருத்தியமைப்பதற்கான கொள்கையைக் கையாள்வது இன்றியமையாத செயலாகிறது.

பணவீக்கத்தாலும் — அதாவது, பொதுவிலைக் குறியீட்டு எண்ணை (general index) உயர்த்தும் அளவுக்கு முக்கியத்துவம் உடையதாகப் பல பண்டங்களின் தனித்தனி விலைகள் உயர்வதாலும்—ஏறத்தாழ மேலே நாம் குறிப்பிட்டதைப்போன்ற சமூக விளைவுகள் ஏற்படும். பணவீக்கத்தால் வேலைஅளவிலும் வாணிப நடவடிக்கையிலும் பொருளாதாரவீக்கம் (boom) ஏற்படலாம் என்றாலும், விலைகள் யாவும் ஒருமித்த முறையில் உயர முடிவதில்லை. பணவீக்கத்தின் விளைவாக முற்றிலும் தற்செயலான முறையிலும் திட்டமிடப்படாத வகையிலும், சமூகத்தில் உண்மை

வருமானங்களின் மறுபங்கீடு ஏற்பட்டுவிடுகிறது. பொருளா தாரத்தின் எந்தப் பகுதிகளில் தாற்காலிகமான தற் போதைய தேவையின் மிகுதி காரணமாக விலைகள் உயர் கின்றனவோ அந்தப் பகுதிகளை அளவுக்குமீறி வளரவைப்பதன் மூலமாகவும், தற்போதைக்கு விலை உயர்வைப் பெற்றிராத பகுதி களைச் சுருங்கவைப்பதன் மூலமாகவும், பணவீக்கமானது, பொரு ளாதாரத்தில் பல கோணல்களை உண்டாக்கலாம். விலை நிலைபே றின்மையால் (price instability), வியாபாரங்களில் திட்டமிட்டு செய லாற்றுவது சிக்கல் நிறைந்த பணியாகிவிடுகிறது. சில உற்பத்தித் துறைகளில் வீணான வளர்ச்சியும் ஏற்பட்டுவிடுகிறது. பின்னிறக் கத்தால்மட்டுமே திருத்தியமைக்கக்கூடிய அமைப்புமுறைக் கோளாறுகளையும், நாட்டின் பொருளாதாரத்தில் அது ஏற்படுத்தக் கூடும்.[2] ஆகையால், நிலைபேறுக்கம் என்னும் சமுதாயக் குறிக் கோளை அடையவேண்டுமானால், வேலையின்மை அல்லது பண வீக்கத்தை உண்டாக்கக்கூடிய போக்கை வெற்றிகரமாக எதிர்த் தாகவேண்டும் என்பது தெள்ளத் தெளிவாக விளங்குகிறது.

தற்காலத்தில் அரசாங்க நடவடிக்கையானது மாபெரும் அள வில் அமைந்துள்ள காரணத்தால் அரசாங்கமானது, எந்தக் குறிப் பிட்ட சமயத்திலும், நாட்டின் வருமான - செலவு நிலைமையை மாற்றி அமைப்பதற்குரிய பெரிய சக்தியாக விளங்குகிறது என் னும் உண்மையை 3ஆவது அத்தியாயத்தில் விளக்கமாகக் கண் டோம். ஆகவே, நிதிக் கொள்கையானது நிலைபேறு அல்லது நிலைபேறின்மையை உண்டாக்க வல்ல ஒரு காரணமாக விளங்குவது தெளிவு. தன்னுடைய நடவடிக்கையால் நிலைபேறின்மை வளர்ந்துவிடாத முறையில் தன் நடவடிக்கையை வகுத்துக் கொள்ளவேண்டிய பொறுப்பிலிருந்து எந்த அரசாங்கமும் நழுவி விட முடியாது. ஆனால், அரசாங்கத்தின் பொறுப்பு இந்த அள வோடு முடிந்துவிடவில்லை. தனியார் துறையையே பெரும்பகுதி யாகக் கொண்டுள்ள பொருளாதாரத்தில், மையநிலைக் கட்டுப் பாட்டுக்கு (centralised control) ஆளாகக்கூடிய ஒரே ஒரு துறை, அரசாங்கத்துறை. அதாவது, அரசாங்கத்துறை இயக்கப்படுகிறது. தனியார் துறையோ இயக்கப்படுவதில்லை. அரசாங்கக் கொள்கை யின் விளைவாகத் தனியார் துறையில் நிலைபேறின்மை தொடங்காத படி அரசாங்கம் பார்த்துக்கொள்ளவேண்டும். அதோடு, அரசாங் கக் கொள்கை தனியார் துறையில் தானாகத் தோன்றுகிற நிலை பேறின்மையை மாற்றி அமைப்பதற்கும் பயன்படுத்தப்பட வேண்டும்.

எந்த வகையான நிதி நடவடிக்கையால் மொத்தத் தேவையை விரிவாக்கமுடியும் அல்லது குறைக்கமுடியும் என்பதையும், அப்படிச் செய்வதன் வாயிலாக நிலைபேறுக்கத்திற்குத் தேவையான

சூழ்நிலையை உண்டாக்கமுடியும் என்பதையும் 4ஆவது அத்தியாயம் தெளிவுபடுத்தியிருக்கிறது. ஆனால் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் நிலைபேறின்மையை உண்டாக்குகிற சக்திகளின் தன்மையை ஓரளவாவது உணர்ந்தாலன்றி நிலைபேறுக்கத்திற்கான கொள்கையைத் தகுந்த முறையில் உருவாக்கமுடியாது.

## வாணிபச் சுழல் (The Business Cycle)

வாணிப நடவடிக்கையில் மீண்டும் மீண்டும் ஏற்படுகிற ஏற்ற இறக்கங்களே வாணிபச்சுழல்கள் ஆகும். இந்த ஏற்ற இறக்கங்களை, உற்பத்தி, வருமானம், வேலை ஆகியவற்றின் புள்ளி விவரங்களைக்கொண்டு அறியலாம். வாணிபச் சுழலானது செழுமையிலிருந்து மந்தத்திற்கும் (from prosperity to depression) மந்தத்திலிருந்து மீண்டும் செழுமைக்குமாக மாறி மாறிச் சுற்றிக் கொண்டிருக்கிறது; இவ்வாறு ஒரு கட்டத்திலிருந்து இன்னொரு கட்டத்திற்கு மாறுவதற்கான காலஅளவு எப்போதும் ஒரே நிலையில் இருப்பதில்லை. அந்த மாற்றத்தின் வேகமும் ஒரே அளவினதாக இருப்பதில்லை. வாணிபச் சுழல்களைத் தோற்றுவிக்கும் காரணங்கள் பலவாகவும் பல வகையினவாகவும் இருக்கின்றன. அக் காரணங்களை விளக்க முயலும் 'கோட்பாடுகள்' (theories) பல உள்ளன.

வாணிபச் சுழல்களுக்கான காரணங்கள் எவை எவை என்பதை எடுத்துக்காட்டுவதிலும், எந்தக் காரணங்கள் மிகுந்த செல்வாக்குடையவை என்பதை வற்புறுத்திக் கூறுவதிலும் இந்தக் கோட்பாடுகள் ஒன்றிற்கு ஒன்று மாறுபடுகின்றன.

இந்தக் கோட்பாடுகள் எந்த அளவுக்கு ஒன்றோடு ஒன்று ஒத்துப் போகின்றன என்பதையும், எந்த அள்வுக்கு மாறுபடுகின்றன என்பதையும் நாம் இங்கே விரிவாக விளக்கவேண்டிய தேவையில்லை. சுழல்களின் காரணங்கள், விளைவுகள் ஆகியவற்றைப்பற்றிய நம்முடைய ஆய்வு, சுழல்பற்றிய கோட்பாடு ஒவ்வொன்றிலும் காணப்படுகிற அந்த அளவு ஆழமாகவும் இல்லாமல் இடைப்பட்ட நிலையினதாக இருந்தால் போதும். உற்பத்தி, வேலை, ஆகியவற்றின் அளவில் ஏற்படுகிற கூடுதலும், தற்செயலாக ஏற்படுகிற நிகழ்ச்சிகள் அல்ல; வேண்டுமென்றே மேற்கொள்ளப்படுகிற தெளிவுகளின் (conscious choices) மொத்தவிளைவு என்பதைக் கொண்டு,அதிலிருந்து ஆரம்பிப்பது,நன்மை பயக்கும். பெரும்பாலும் நெடுந்தொலைவில் உள்ள அங்காடிகளுக்காக உற்பத்தி செய்யும் தொழில்துணிவோர்களால் (enterprisers) உற்பத்திமுறையானது இயக்கப்படுகிற ஒரு பொருளாதாரத்தில், எதிர்காலத்தில்

எந்த அளவு இலாபம் கிடைக்கலாம் என்று தொழில்துணிவோர்கள் எதிர்பார்க்கிறார்களோ அதைப் பொறுத்தே, உற்பத்தியைக் கூட்டுவதற்கான அல்லது குறைப்பதற்கான முடிவுகள் செய்யப்பட முடியும். இந்த இலாப எதிர் நோக்கானது, பெரும்பாலும், பண்டங்களுக்கான எதிர்காலத் தேவைபற்றிய மதிப்பீட்டைப் பொறுத்தே அமைந்திருக்கும். உற்பத்திச் செலவுகள் மாறாமல் இருக்கும்போது தேவை உயருமானால், இலாபத்தின் அளவும் உயரும். விற்பனையின் அளவும் மிகுதியாகும். தேவை குறையுமானால், இதற்கு நேர்மாறான விளைவுகள் உண்டாகும்.

இலாப எதிர்நோக்குகள் (profit expectations) உயரும்போது வளரும் அங்காடியைப் (தேவையை) பயன்படுத்திக் கொள்வதற்காக உற்பத்தியை அதிகப்படுத்தவேண்டும் என்னும் விழைவு உண்டாகிறது. இந்த விழைவின் விளைவாக, தொழிலாளர்கள் மூலதனம், இயற்கை வளங்கள் முதலிய எல்லா வகையான உற்பத்திக் காரணிகளுக்கும் கூடுதலான வேலை கிடைக்கிறது. ஆனால் இலாப எதிர்நோக்குகள் குறையும்போதோ, வேலைக்கு அமர்த்தியுள்ள உற்பத்திக் காரணிகளின் அளவைக் குறைக்கவேண்டும் என்னும் விளைவு உண்டாகிவிடுகிறது. இலாப எதிர்நோக்குகள் மாறாமல் இருக்குமானால் (மிகக்குறுகிய காலத்தில் தவிர ஏனைய காலங்களில் இப்படி இருப்பது அரிது), பயன்படுத்தப்பட்டுவிட்ட இருப்புப் பண்டங்கள் (inventories) அல்லது கருவிகளுக்குப் பதிலாக அதே அளவு பண்டங்களையும் உற்பத்திசெய்கிற விளைவுமட்டுமே ஏற்படும்.

உற்பத்தியை அதிகப்படுத்தலாம், அல்லது குறைக்கலாம், அல்லது பயன்படுத்தப்பட்ட பண்டங்கள், கருவிகளுக்குப் பதிலாக அதே அளவு பண்டங்கள், கருவிகளை உற்பத்தி செய்யலாம் என்று ஏற்படுகிற விழைவுகள், பல்வேறு உற்பத்தி நிலைகளில், பல வகையான ஆனால் முக்கியமான விளைவுகளை உண்டாக்கும். (1) தேய்ந்து போகின்ற மூலதனப் பொருள்களை ஈடுசெய்தல் (replacement), (2) உற்பத்தி அளவில் நிகர உயர்வை உண்டாக்குதல் ஆகிய இரண்டு தேவைகளுக்கான விற்பனையைப் பெற்றுள்ள அங்காடிகளுக்காக, உற்பத்தியாளர் பொருள்கள்பற்றிய தொழில்கள் (the producers' goods industries) உற்பத்தி செய்கின்றன. அந்தத் தொழில்களின் பண்டங்களுக்கான தேவை, 'வழிவந்த' தேவையாகும் (derived demand). அந்தத் தேவையின் அளவு மிகுதியாக இருக்குமா குறைவாக இருக்குமா என்பது, ஏனைய உற்பத்தியாளர்களின் முன்நோக்குகளைப் (anticipations) பொறுத்திருக்கிறது. இவர்களில் பெரும்பாலோர், நுகர்வோர் அங்காடிகளுக்காக உற்பத்தி செய்பவர்கள். உற்பத்தியை அதிகப்படுத்துவதற்கான

(இவர்களுடைய) முடிவுகளால், உற்பத்தியாளர் பொருள்களுக்கான தேவை கூடுதலாகிறது. உற்பத்தியைக் குறைப்பதற்கான இவர்களுடைய முடிவுகளால், உற்பத்திச்சாலை விரிவுக்குத் (plant expansion) தேவைப்படும் உற்பத்தியாளர் பொருள்களுக்கான தேவை மறைந்துவிடும். ஈடுசெய்யும் பொருள்களுக்கான (replacement goods) தேவை குறையும். உற்பத்தியை ஒரு குறிப்பிட்ட அளவிலேயே நிலைநாட்ட இவர்கள் முடிவுசெய்தால், ஈடுசெய்வதற்காகமட்டுமே உற்பத்தியாளர் பொருள்களுக்கான தேவை இருக்கும். நுகர்வோர்அங்காடிக்காக உற்பத்திசெய்வோர், உற்பத்தியையைக் கூட்டலாம் அல்லது குறைக்கலாம் என்று செய்கிற முடிவால், அந்தக் கூட்டுதல் அல்லது குறைத்தலின் அளவு மிகச் சிறியதாக இருந்தால்கூட, உற்பத்தியாளர் பொருள்களுக்கான தேவையில் ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டுவிடுகிறது. ஒரு தொழிலின் உற்பத்தியானது உயர்ந்துகொண்டிருக்கும்போது அந்த உயர்வை நிறுத்திவிடச் செய்யும் முடிவால் மூலதனப் பொருள்களுக்கான தேவை குறைந்துவிடுகிறது. அந்த தேவையில் ஏற்படும் இத்தகைய பெருக்கத்தைப் (magnification of derived demand) பொருளறிஞர்கள் வேக வளர்ச்சி விதி (principle of acceleration) என்று அழைக்கிறார்கள். நுகர்வோர் பொருள்களுக்கான தொழில்களில் ஏற்படுவதைவிட உற்பத்தியாளர் பொருள்களுக்கான தொழில்களில் ஏற்படுகிற ஏற்ற இறக்கங்கள் மிக அதிகமாக இருப்பதற்கான காரணம் இந்த வேக வளர்ச்சி விதியே.

வாணிபச் சுழலில் தன்னைத்தானே உற்பத்தி செய்துகொள்ளும் சக்திகள், சுழலின் செழுமைப் பகுதியை அல்லது மந்தப் பகுதியை முடிக்க முயலும் தன்மை படைத்துள்ளன. மீட்சிக் காலத்தில் அல்லது செழுமைக் காலத்தில் முன்நோக்குகள்[3] உயர்கின்றன; அங்காடிகள் வளர்கின்றன; மந்த காலத்தில் பயன்படுத்தப்படாமல் இருந்த உற்பத்திக் காரணிகளைப் பயன்படுத்துவதால் உற்பத்தி பெருகுகிறது. உற்பத்திச் செலவுகள் உயரும் வேகத்தைவிடப் பொருள்களின் விலைகள் உயரும் வேகம் மிகுதியாக இருக்கின்றது. இலாப அளவுகள் உயர்கின்றன. இவ்வாறு ஏற்படும் இலாப அளவின் உயர்வாலும், அங்காடிகளின் பெருக்கத்தாலும் உற்பத்தியாளர்களின் முன்நோக்குகள் மேலும் உயர்வடைகின்றன. கூடுதலாகியுள்ள வேலையும் கூலியும், மந்தகாலத்தில் வாங்கமுடியாதிருந்த பொருள்களை வாங்குவதில் தற்போது நுகர்வோரிடம் திரண்டு பெருகிக் காணப்படுகிற தேவைகள், விலைகள் உயரக்கூடிய நிலைமை ஆகியவையும் ஒன்றுசேர்ந்து நுகர்வுப் பொருள்களுக்கான தேவையை உயர்த்திவிடுகின்றன.

இந்தச் செழுமை நிலைமையானது என்றென்றும் இவ்வாறே ஏன் பெருகிக்கொண்டே செல்லமுடியவில்லை? இதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. பல்வேறு வாணிபச் சுழல்களில் அவை, பலவகை அளவுகளிலும், பலவகையாக இணைந்தும் நடைமுறைப்படுகின்றன. பொருளாதாரம் உயர்ந்துகொண்டே வரும்போது, ஏதாவது ஒரு கட்டத்தில், இலாப அளவைக் குறைக்கக் கூடிய அளவில் — அல்லது — குறைந்த பட்சம், இலாப அளவை நிலைபேறுக்கக்கூடிய அளவில், உற்பத்திச் செலவுகள் உயர்ந்தே தீரும். உற்பத்திக் காரணிகள் வேலைநிறைவு என்னும் கட்டத்தை நெருங்க நெருங்க, அந்தக் காரணிகளின் விலைகள் முன்னிலும் விரைவாக உயரத்தொடங்குகின்றன. இதனால் உற்பத்தியாளர்களின் முன்னோக்குகள் தளர்ச்சியடையலாம். அதன் விளைவாக உற்பத்தியை அதிகப்படுத்துவதை அவர்கள் நிறுத்திவிடலாம். அப்படி நிறுத்திவிடுவது, உற்பத்தியாளர் பொருள்களுக்கான தேவை குறைந்துவிடுவதற்கு ஒப்பாகும். பாங்கு அமைப்பானது, உற்பத்தியை அல்லது நுகர்வைப் பெருக்குவதற்கான நிதியைத் தருவதில் இறுதி எல்லையை அடைந்துவிட்டதாலும் நெருக்கடி ஏற்படலாம். உற்பத்தியை மேலும் பெருக்குவது சங்கடமான செயலாகவோ அல்லது இயலாத செயலாகவோ இருக்கும்போதும், முதலீட்டு வீக்கத்திற்கு (investment boom) ஏற்ற அளவில் நுகர்வின் உயர்வு வேகமாக இல்லாதபோதும், உற்பத்தியாளர் பொருள்களுக்கான தேவை சுருங்கிவிடுகிறது.

பெருக்க முறையில் (expansion process) ஏற்படுகிற உற்பத்திச் சிக்கல்கள், தடுத்து நிறுத்தும் தன்மைபடைத்த அரசாங்க நடவடிக்கை, நிதி முறைத் தோல்விகள் அல்லது தவறுகளால் தூண்டப்பட்ட அச்சம், பலநாட்டு அங்காடிகளில் ஏற்படும் நிகழ்ச்சிகள் ஆகியவற்றின் காரணமாக முன்னேக்குகளின் உயர்வு நின்றுவிடலாம்; அல்லது அவை வீழ்ச்சியடையத் தொடங்கலாம். இவற்றை எல்லாம் வாணிபச் சுழலின் செழுமையை மாற்றியமைக்கவல்ல புறக் காரணங்கள் என்று அழைக்கலாம். சென்ற பத்தியில் தெரிவிக்கப்பட்ட தாமே உற்பத்தி செய்துகொள்ளும் அகக் காரணங்களிலிருந்து இவை மாறுபட்டவை.

காரணம் அல்லது காரணங்களின் தொகுப்பு எதுவாக இருந்தாலும், பெருக்க வேகம் குறைகின்றது. அக் குறைவால், பொருளாதாரத்தின் சில பகுதிகளில் சுருக்க விளைவுகள் (contractive effects) ஏற்படுகின்றன. இந்தப் பகுதிகளின் முன்னோக்குகள் வீழ்ச்சி அடைவதால், வேலையின்மை, கடனைத் திருப்பித்தருதல், பதுக்குதல் ஆகிய விளைவுகளும், சூழ்நிலைக்கு மாறான ஒரு பொதுப்

போக்கும் ஏற்படுகின்றன. இந்த விளைவுகள் யாவும், திரண்டு பெருகும் தன்மை படைத்தனவாகவும், பொருளாதாரத்தின் பிற பகுதிகளிலும் தொற்றிப் பரவும் பாங்குடையனவாகவும் இருக்கின்றன. இந் நிலைமைதான் பின்னிறக்கம்; இதுவே மந்தமாகவும் மாறக்கூடும்.

பொருளாதாரத்தின் சில பகுதிகளில் ஏற்படும் தேவைச் சுருக்கம் அதன் பிற பகுதிகளிலும் தொற்றிக்கொள்வதால், பணவாட்டமானது (deflation), தன்னைக்கொண்டே பெருக்கிக்கொள்கிறது. விலைகள் குறையாமலிருந்தால் வேலையின்மை உயரும். விலைகள் குறையுமானல், தொடக்க நிலையில், அவை குறையும் வேகத்தைவிட உற்பத்திச் செலவுகள் குறையும் வேகம் குறைவாக இருக்கும். இதனல், இலாபத்தின் அளவு குறையும் அல்லது இழப்பின் அளவு பெருகும். பொருளாதார வீழ்ச்சியின் ஏதாவது ஒரு கட்டத்தில் ஒழுங்குபாடு ஏற்பட்டு, அதன் காரணமாக முன்நோக்குகளின் வீழ்ச்சி தடுக்கப்படலாம். வேலையின்மையாலும் கிடைக்கும் வேலைகளுக்கான போட்டியாலும்; தொழிலாளர்களுக்குத் தரப்படும் கூலி, வேலையின்மை மேலும் பெருகுவதைத் தடுக்கும் அளவுக்குக் குறைந்துபோகலாம். பயன்படாமல் இருக்கும் நிதிகளும், மிகுதியாக உள்ள பாங்கு காப்பிருப்புகளும் (excess bank reserves), கடன்களுக்கான வீதத்தையும், கடன் பெறுவோரிடம் எதிர்பார்க்கப்படுகிற தகுதியளவையும் குறைத்துவிடலாம். பொருள் இருப்புகளின் அளவு மிக மிகக் குறைந்துவிட்டதால் அவற்றை ஈடுசெய்வதற்காக உற்பத்தியை உயர்த்தவேண்டியிருக்கலாம். பொருளாதார வீழ்ச்சி நீண்ட காலம் இருக்குமானல், தேய்மானத்தாலும் (depreciation), வழக்கொழிவாலும் (obsolescence) மூலதனக் கருவிகள் மிகவும் குறைந்துபோய், அவற்றை குறிப்பிடத்தக்க அளவில் ஈடுசெய்யவேண்டிய இன்றியமையாமை ஏற்படலாம். இந்த இன்றியமையாமை காரணமாக மூலதனப்பொருள் தொழில்களின் பண்டங்களுக்குச் சிறப்பான அளவில் புதிய தேவை ஏற்படலாம். அரசாங்க நிவாரணம் மற்றும் பொதுப்பணிக் கொள்கைகள், நுகர்வின் வீழ்ச்சியைத் தடுக்கலாம், அல்லது நுகர்வின் அளவை உண்மையிலேயே அதிகப்படுத்தலாம். அல்லது பணக் கொள்கையின் பிற தன்மைகளால், அல்லது மீட்சித் திட்டங்களால், விரும்பத்தக்க விளைவுகள் ஏற்படலாம். அகக் காரணங்களாக இருந்தாலும், புறக் காரணங்களாக இருந்தாலும், வீழ்ச்சியின் ஏதாவது ஒரு கட்டத்தில் ஒரு திருப்புமுனை அமைகிறது. இத் திருப்புமுனையிலிருந்து எதிர்நோக்குகள் உயரத் தொடங்குகின்றன.

இரண்டாம் உலகப் போரிலிருந்து, மக்கள் தொகை வளர்ச்சி வீதம், தொழில் நுட்பங்களில் ஏற்படும் மாபெரும் மாறுதல், உயர் தரக் கல்வி பெறுவதில் பேரார்வம், வேலைநிறைவை அடைவதற்கான அரசாங்கக் கொள்கைகள் ஆகியவற்றின் விளைவாக ஏற்பட்டுள்ள நிலைமையில், வேகமான மந்தநிலை தொடங்குவதற்கு முன்னுலேயே, பின்னிறக்கநிலை முடிந்துவிடுகிறது. போருக்குப் பிறகு, 1948–49, 1953–54, 1957–58 ஆகிய ஆண்டுகளில் ஏற்பட்ட கீழ்நோக்குத் திருப்பங்கள் (down turns), அடிப்படையில், இருப்புப் பொருள்களின் பின்னிறக்கங்களாகவே இருந்திருக்கின்றன. நுகர்வின் உயர்வுவீதத்தைவிடத் தங்கள் உற்பத்திப் பெருக்கவீதம் மிகுதியாக இருக்கிறது என்னும் உண்மையை வாணிப நிறுவனங்கள் உணரத் தொடங்கியவுடன் செழுமைக் கட்டம் முடிவடைகிறது. இருப்புப் பொருள்களைச் செலவழித்துவிட வேண்டும் என்கிற விழைவே, இம் முடிவின் தொடக்கநிலைஆகும். ஏனென்ருல், இந் நிலையிலும், இருப்புப் பொருள்களின் விரிவு வேகம் முன்போலவே இருந்தால், அவற்றை இருப்பில் வைத்திருப்பதற்கான செலவு மிக அதிகமாக இருக்கும். பண்டங்களின் விற்பனை குறையும்போது வேலையின்மை உண்டாகிறது. வாணிபச் சுழலின் கீழ்நோக்கிய பயணம் மிக விரிவான அளவில் தொடங்குவதற்கு முன்னுல் வேலையின்மையை உண்டாக்கும் இந்தச் சூழ்நிலை முடிவடைந்துவிடுகிறது. நுகர்வானது ஏறத்தாழ நிலைபேருக இருக்கும் தன்மை — அதாவது முதலீட்டு வீக்கம் தொடர்ந்து இருக்கவேண்டிய அளவுக்கு நுகர்வின் உயர்வுவேகம் இல்லாத தன்மை, இந் நிலையில் ஒரு நற்பேருகவே அமைந்துவிடுகிறது. ஏனென்ருல், பொருளாதார வீழ்ச்சியின்போது, நுகர்வானது மிக வேகமாகக் குறையாமல் இருப்பதால், அதிக இடர்ப்பாடு இன்றி இருப்புப் பொருள்களை விற்றுவிட முடிகிறது.

இரண்டாவது உலகப்போரிலிருந்து, பல்வேறு காரணங்களால் குவிவு (cumulative) மிகுந்த பொருளாதார மந்தம் விரிவானஅளவில் ஏற்படவில்லை என்ருலும் இதே காரணங்களால் பணவீக்க அச்சம் தொடர்ந்து ஏற்பட்டுவருகிறது. உற்பத்திச் செலவின் உயர்வால் இலாபஅளவு குறைந்தபோதும், அப்படி அது குறையாதபோதும், விலை உயர்வு ஏற்படவேண்டிய அளவுக்குப் பண வழித் தேவை (monetary demand) இருந்திருக்கிறது. எனவேதான்,பண வழித்தேவையைக் கட்டுப்படுத்துகிற முறையில் பணவழிக் கொள்கைகளும் நிதிக்கொள்கைகளும் அடிக்கடி வகுக்கப்பட்டிருக்கின்றன. நிலைமைகள் யாவற்றையும் கவனமாக அலசிப் பார்த்தால், இரண்டாம் உலகப் போருக்குப்பின், பணவழிக் கொள்கைகளும் நிதிக்கொள்கைகளும், பண வீக்கத்தைத் தடுப்பதைவிட

மந்தத்தைத் தடுப்பதிலேயே மிகுந்த வெற்றி பெற்றுள்ளன என்பதை அறியலாம். ஆனால் அவை எப்போதுமே இப்படிப்பட்ட விளைவைத்தான் உண்டாக்கும் என்று கூறிவிட முடியாது. ஏனென்றால் இந்தக் குறிப்பிட்ட காலம், சில நிலைமைகளைப் பொறுத்த வரை, இயல்பல்லாத ஒரு காலமாக இருந்திருக்கிறது. இரண்டாம் உலகப் போருக்குப்பின் ஏற்பட்ட பொருளாதாரப் பெருக்கத்தின் அடிப்படை வன்மையால், சுருக்கத்திற்கான சக்திகளைவிடப் (forces for contraction) பணவீக்கத்திற்கான சக்திகளே மிகுந்த ஆக்கம் பெற்றுவிட்டன.

அதோடு, பனிப் போர், மக்கள் தொகைப் பெருக்கம் ஆகிய காரணங்களால், வரவு செலவுத் திட்டத்தில், மிக அதிகமான செலவுக்கு வழிவகுக்கவேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது. அப்படி ஏற்பட்டதால், பொருளாதாரத்தை நிலை பேருக்குவதற்குத் தேவையான வளைந்துகொடுக்கும் தன்மை (flexibility) குறைந்துவிட்டது. பண வீக்கத்தைவிட வேலையின்மையையே மிகப் பெரிய குறைபாடாகக் கருதும் சமூக மதிப்பீடு, வேலையின்மையுடன் விலைகளும் உயர்கின்ற சில அனுபவங்கள் ஆகியவை பணவீக்க எதிர்ப்புக் கொள்கைகளைப் பயன்படுத்துவதை மேலும் குறைத்துவிட்டது.

### பொருளாதாரத் தேக்கம் (Economic Stagnation)

1930ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளின் இறுதியில், மந்தநிலை தொடர்ச்சியாக இருந்ததையும், வேலையின்மை மாபெரும் அளவில் தொடர்ந்து இருந்ததையும், ஆனால் அதே நேரத்தில் ஏனைய குறியீட்டு எண்களெல்லாம் குறிப்பிடத்தக்க மீட்சி ஏற்பட்டுவிட்டதற்கான அடையாளங்களாக இருந்ததையும் கண்ட பொருளாதார மாணவர்கள் பலர், நம்முடைய (அமெரிக்கப்) பொருளாதாரத்தைப்பற்றிய ஒரு முடிவுக்கு வந்தார்கள். வேலை நிறைவுக்குப் பதிலாக, தொடர்ந்து வரும் வேலையின்மையோடு கூடிய பொருளாதாரத் தேக்கமே மீக்கோள் தரமாக (norm) அமைந்துவிட்ட ஒரு கட்டத்தை நம்முடைய பொருளாதாரம் அடைந்துவிட்டது என்பதே அந்த முடிவு. பொருளாதாரத் தேக்க நிலை இருக்கும் போது, நாட்டு வருமானம் உயர்ந்த அளவில் இருக்கும்; நுகர்வு நாட்டம் குறைவாக இருக்கும்; சேமிப்பு நாட்டம் மிகுதியாக இருக்கும்; சமூகத்தில் ஏற்படுகிற சேமிப்பு முழுவதையும் பயன்படுத்துகிற அளவுக்கு முதலீட்டுத் தூண்டுதல் வன்மைமிக்கதாக இராது. எனவே, சமநிலை அளவு வருமானம் (equilibrium level of income) வேலைநிறைவு அளவு வருமானத்தைவிடக் (full employ

ment level of income) குறைந்த நிலையிலேயே தொடர்ந்து இருக்கும். பொருளாதார வளர்ச்சியின் வீதம் மிகமிகக் குறைவாக இருக்கும்.

பொருளாதாரத் தேக்க நிலை இருக்கிறது என்றால், புதிய முதலீட்டுக்கான வாய்ப்புகள் குறைவாக உள்ளன என்றே பொருள். ஒரு நாடு பழமை உடையதாக இருக்குமானால், அந் நாட்டில் குடியேறுவதற்கோ வேளாண்மை செய்வதற்கோ புதிய நிலங்கள் கிடைக்காமல் இருக்கலாம். பயன்படுத்துவதற்கு உரிய புதிய இயற்கைவளப் பொருள்கள் இல்லாமல் இருக்கலாம். மக்கள் தொகையும் வளர்ச்சியின்றி ஏறத்தாழ ஒரேயளவில் நின்றுவிடலாம். இத்தகைய நிலைமைகள் இருக்கும்போது, புதிய முதலீட்டுப் பெருக்கத்துக்கான ஒரு வகை வாய்ப்பு இல்லாமல் போய்விடும். அதாவது, இந் நிலைமைகளில், பொருளாதாரமானது, ஆழமான முறையில் வளரமுடியுமே தவிர அகலமான முறையில் வளர இயலாது. பத்தொன்பதாம் நூற்றாண்டில், புதிய நிலங்களையும் வளப் பொருள்களையும் பயன்படுத்துதல், வேகமாக வளர்ந்துவந்த மக்கள் தொகையின் தேவைக்காகப் பொருள் உற்பத்தியை பெருக்குதல் ஆகிய காரணங்களால் அங்காடிகளின் பெருக்கம் உண்டாயிற்று. இப் பெருக்கத்தின் விளைவாக, உற்பத்திக்குத் தேவையான மூலதனம், தொடர்ந்து பற்றாக்குறை நிலையிலேயே இருந்து வந்தது. இத்தகைய சூழ்நிலையில், முதலீட்டுக்கான வாய்ப்புகளின் அளவை விடச் சேமிப்புகளின் அளவு கூடுதலாக இருக்கும் ஆபத்து நெடு நாட்களுக்கு இருக்கமுடியாது. உண்மையில் அந் நூற்றாண்டில், அங்காடிகளையும் வளப்பொருள்களையும் பயன்படுத்துவதற்குத் தேவைப்பட்ட முதலீடு, அமெரிக்கப் பொருளாதாரத்தின் சேமிப்பு அளவைவிட மிகுதியாக இருந்தது. எனவே, பொருளாதாரப் பெருக்கத்துக்குத் தேவையான நிதிகளில் ஒரு குறிப்பிடத்தக்க அளவு பிற நாடுகளிலிருந்து கடனாகப் பெறப்பட்டது.

நிலையான மக்கள் தொகையையும், அகலமான வளர்ச்சிக்குத் தேவையான வாய்ப்புகள் இல்லாத ஒரு நிலையையும் பெற்றுள்ள ஒரு பொருளாதாரத்தில், தொழில் நுண்ணியலின் (technology) முன்னேற்றம், பழைய உற்பத்தி முறைகளுக்கு மாறாகப் புதிய உற்பத்தி முறைகளைக் கையாளுதல், புதிய பண்டங்களைக் கண்டுபிடித்து உற்பத்தி செய்தல், பொதுவாக, மக்களின் வாழ்க்கைத் தர உயர்வு ஆகிய துறைகளிலேயே புதிய முதலீட்டுக்கான வாய்ப்புகளைப் பெறமுடியும். பொருளாதாரப் பண்டங்களால் திருப்தி செய்யப்படாத மனித விருப்பங்கள் ஏராளமாக இருக்கும் வரையிலும், முன்னிலும் திறமையான முறைகளால் உற்பத்தி

செய்வது இயலக்கூடியவரையிலும், பொருளாதாரத்தின் ஆழமான வளர்ச்சி (intensive development) தொடர்ந்து நடைபெறும்.

ஆனால் நிறைவு செய்யப்படாத மனித விருப்பங்களிலும் திறமைக் குறைவான உற்பத்தி முறைகளிலும் மட்டும் கவனத்தைச் செலுத்துவது திருப்திகரமான பதிலாகாது. புதிய பொருள்களை உற்பத்தி செய்வதற்கும், பழைய பொருள்களை முன்னிலும் மிகுதியான அளவில் உற்பத்தி செய்வதற்கும், புதிய உற்பத்திமுறைகளைக் கையாள்வதற்கும் தொழில் துணிவோர்கள் (enterprisers) விரும்பி முன்வந்தாலன்றி, புதிய முதலீட்டுக்கான வாய்ப்புகள் உண்மையில் உருவாகமாட்டா. பழைய பொருளாதாரமானது உயர்ந்த அளவு வருமானத்தை உடைய பொருளாதாரமாக இருக்கலாம் என்பதாலும், அத்தகைய பொருளாதாரத்தில் சேமிப்பு நாட்டம் மிகுதியாக இருக்கும் என்பதாலும், நிலைமை மேலும் சிக்கல் நிரம்பியதாக ஆகிவிடுகிறது. இத்தகைய சூழ்நிலையில் புதிய முதலீட்டுக்கான வாய்ப்புகள் ஏராளமாகவும், வளர்ந்து கொண்டே இருப்பனவாகவும் இருக்கவேண்டும். அப்படி இல்லாவிட்டால், கூடுதலாகியுள்ள சேமிப்புகள் பதுக்கலுக்கு ஆளாகி முழு உற்பத்திக்குத் தேவையான அளவைவிடக் குறைந்த அளவில் வருமான ஓட்டத்தை அமைத்துவிடும்.

அங்காடியில் புதிய நிறுவனங்கள் நுழைவதை உற்பத்தி முறைகளை உரிமைக் காப்பிடல் (patenting the processes) முதலிய வழிகளால் தடுத்தல், பண்டங்களின் விலைகளை வேண்டுமென்றே உயர்த்தி விற்றல், புரட்சிகரமான உற்பத்திமுறைகளை விலைக்கு வாங்கிப் பயன்படுத்தாமல் பதுக்கிவைத்தல் முதலிய முற்றுரிமை முறைகள் (monopolistic practices) பொருளாதாரத்தின் ஆழமான வளர்ச்சிக்குரிய வாய்ப்புகளை அழித்துவிடும் தன்மை படைத்தவை. தேவை ஏற்படும்போது பயன்படுத்தக்கூடிய தொழிலாளர்களை வேலைக்கு வைத்துக்கொள்ளத் தூண்டும் முறையில் வேலையை வளர்த்தல், புதிய பொருள்களின் உற்பத்தியையும் புதிய உற்பத்தி முறைகளையும் தடுத்தல் முதலிய வழிகளில் தொழிலாளர்கள் கையாளும் முற்றுரிமை ஏற்பாடுகளும் அதே வகையான விளைவையே உண்டாக்கும். பொருளாதாரமானது அகலமான முறையில் வளர முடியாமல் இருக்கும் நிலையில் அது வளர்வதற்குரிய ஒரே துறையாக இருக்கும் ஆழமான பெருக்கத்தையும் (intensive expansion) இந்த முற்றுரிமை முறைகள் அழித்துவிடுகின்றன. அப்படி அழிப்பதன் மூலமாக முதிர்ச்சிநிலைத் தேக்கத்தின் (maturity stagnation) தன்மைகள் பலவற்றை அவை வளர்த்துவிடுகின்றன.

வளர்ந்து வரும் பொருளாதாரத்தைப்போலவே தேக்க நிலைப் பொருளாதாரமும் வாணிபச் சுழலின் ஏற்ற இறக்கங்களுக்கு உள்ளாகிறது. ஆனால் இப் பொருளாதாரத்தில் பதுக்கும்நாட்டம் (propensity to hoard) மிகுதியாக இருப்பதால், செழுமைக் கட்டத்தின் உச்சத்தில், வேலை நிறைவு அளவைவிடக் குறைந்த அளவிலேயே சமநிலை ஏற்பட்டுவிடும். செழுமைக் கால அளவுகள் குறைவாக இருப்பதோடு அவை அடிக்கடியும் வரமாட்டா. முதலீடு செய்யப்பட்ட சேமிப்பிலிருந்து கிடைக்கும் தொகையில், முதலீட்டின் ஆபத்திற்கும் முதலீட்டுச் செலவுக்கும் உரிய தொகையைக் கழித்தபிறகு உள்ள நிகரவிளைவு (net returns), சேமிப்போரின் ரொக்க நாட்டத்தை (liquidity preference) ஈடுசெய்கிற அளவுக்கு இருப்பதில்லை. இத்தகைய தன்மைபடைத்த ஒரு பொருளாதாரத்தில் ஏற்படும் மந்தமானது, வளரும் பொருளாதாரத்தின் மந்தத்தைவிடக் கீழான அளவுக்கு வாணிப நடவடிக்கை விளைவு கோட்டை இழுத்துச் செல்வதோடு, அதை அங்கே நீண்டகாலத்திற்கு நிலைத்திருக்கும்படியும் செய்கிறது.

முதிர்ச்சிநிலைத் தேக்கமானது, உயர் வருமானப் பொருளாதாரத்தைப் பெரிய அளவில் பாதிக்கக்கூடிய ஒரு குறைபாடாகும். அரசாங்கச் செலவுக் கொள்கையைப் பொறுத்தஅளவில், அரசாங்கத்தின் முதலீட்டுச் செலவால், பொருளாதாரத் தேக்கத்திலிருந்து பிறந்த வேலைக் குறைவில் (underemployment) ஏற்படும் விளைவானது, வாணிபச்சுழலின் மந்தத்தின்போது அதே வகைச் செலவால் ஏற்படும் விளைவைப்போலவே இருக்கும். ஆனால் பொருளாதாரத் தேக்கத்தின் வேலைக்குறைவைப் போக்க அரசாங்கம் நீண்ட காலத்திற்குச் செலவு செய்யவேண்டியிருக்கும். அச் செலவால் அரசாங்கக் கடன்தொகையும் தொடர்ச்சியாக உயர்ந்துகொண்டே செல்லும். கருவூல உபரிக் (treasury surplus) காலங்களும், கடனைத் திருப்பித்தரும் காலங்களும் குறிப்பிடத்தக்க அளவில் இருக்கமாட்டா.

### வாணிபச் சுழலின்போது கையாளப்படும் ஈடுசெய் செலவு (Compensatory Spending in the Business cycle)

ஈடுசெய் அரசாங்கச் செலவு என்றால், தனியார் செலவில் உள்ள, பற்றுக்குறையை ஈடு செய்வதற்காக அரசாங்கம் செய்யும் செலவு என்று பொருள். பொருளாதாரத்தின் தற்போதைய அளவு வேலைநிறைவு அளவைவிடக் குறைவாக இருந்தால், வேலை நிறைவைப் பெறுகிற அளவுக்கு அரசாங்கச் செலவானது உயர்த்தப் படும். ஆனால் பொருளாதாரத்தின் தற்போதைய நிலைமை பணவீக்க நிலைமையாக இருக்குமானால், மொத்தத் தேவையைக் குறைப்பதற்காக அரசாங்கச் செலவானது குறைக்கப்படும். ஒரு

செலவின் (அல்லது செலவுக் குறைப்பின்) தலையாய விளைவுகள் தொடக்கக் கட்டங்களிலேயே ஏற்படுகின்றன என்பதை லீவரேஜ் முறைபற்றிய நம்முடைய பகுத்தாய்வு முன்னரே தெளிவுபடுத்தியிருக்கிறது. எனவே, தனியார் பொருளாதாரத்தின் செலவு நாட்டம் குறைவான அளவில் இருக்குமானால், தொடக்கக் கட்ட விளைவுகளைத் தொடர்ந்து பெறுவதற்காக அரசாங்கச் செலவைத் தொடர்ந்து செய்தாகவேண்டும். ஆனால் தனியார்செலவு நாட்டம் உயர்ந்த அளவில் இருந்தால், அது அப்படி இருக்கும் கால அளவு வரையில், அரசாங்கச் செலவைக் குறைத்துக்கொண்டே வரவேண்டும்.

குழாய்நிரப்புதல் (pump – priming) என்பது ஈடுசெய் செலவின் ஒரு சிறப்பு வகையாகும். வருமான ஓட்டத்தில் பெரிய அளவில் ஒரே ஒரு முறை நுழைக்கப்படுகிற அரசாங்கச் செலவால், வேலை நிறைவு அளவை மீட்டுக்கொண்டுவந்து அதை நிலைநிறுத்துகின்ற அளவுக்குத் தனியாரின் தேவை உயர்ந்துவிடும் என்னும் நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டிருப்பது இந்த முறை. குழாய் நிரப்புதல் என்னும் இந்த ஈடுசெய் செலவுவகை, சுழல் நிலைபேரின்மையைப்பற்றி, நடைமுறை நிலைமைக்கு மாறான ஒரு கண்ணோட்டத்தைக் கொண்டிருக்கிறது. ஏனென்றால், வேலைநிறைவு அளவில் இயற்கையாக இருக்கவேண்டிய சமநிலையிலிருந்து தற்செயலாகவும் தவறுதலாகவும் ஏற்பட்டுவிட்ட ஒரு பிறழ்ச்சியே வேலைக் குறைவு என்னும் கருத்து இந்தக் கண்ணோட்டத்தில் அமைந்திருக்கிறது. வேலை நிறைவைவிடக் குறைந்த அளவிலோ, மிக உயர்ந்த விலைகளின் அளவிலோ, சமநிலையை ஏற்படுத்தும் போக்குகளைத் தடுத்து வேலைநிறைவு அளவில் சமநிலையை ஏற்படுத்துவதே ஈடுசெய் செலவுக்கொள்கையின் நோக்கம். பெரும்பாலான சமயங்களில் குழாய்நிரப்புதலால் இந்த நோக்கத்தை நிறைவேற்றமுடியாது.

எனவே, தனியார் செலவின் பற்றாக்குறையை ஈடுசெய்வதற்காக அரசாங்கச் செலவைச் செய்து, அப்படிச் செய்வதன் மூலமாக, விரும்பத்தக்க வருமானஅளவை உண்டாக்குவதே, ஈடுசெய் செலவுத் திட்டத்தின் அடிப்படை என்பது தெளிவாகிறது. இந்த ஈடுசெய் செலவுக் கொள்கையைப் பின்னிறக்கத்தின்போதும் மந்த காலத்தின்போதும் கையாள்வதானால் அரசாங்கச் செலவு ஏராளமான அளவில் இருக்கும். மீட்சிக் காலத்தின்போது, ஈடுசெய் செலவின் அளவு, சிறிது சிறிதாகக் குறைந்துகொண்டே வரும். செழுமைக் காலத்தில் தனியார்செலவு வேகமாக உயர்ந்து கொண்டே வரும் அல்லது ஆபத்தான உயரத்தை அடைந்துவிடும்.

எனவே அத்தகைய காலங்களில் அரசாங்க நிகரச் செலவானது எதிர்மறையில் இருக்கவேண்டும். அதாவது, அரசாங்க வரி வரவானது அரசாங்கச் செலவைவிட மிகுதியாக இருக்கவேண்டும். ஈடுசெய் வரி விதிப்பைப் (compensatory taxation) பின்னர் வரும் அத்தியாயங்களில் அலசிப் பார்க்கலாம். தற்போது, ஈடுசெய் செலவைமட்டும் (compensatory expenditure), 1. விழுகின்ற முன்னேக்குகள் (anticipations falling) 2. எழுகின்ற முன்னேக்குகள் (anticipations rising) என்னும் தலைப்புகளின்கீழ் ஆராய்ந்து பார்ப்போம்.

**நிலைமை 1. விழுகின்ற முன்னேக்குகள் :** முன்னேக்குகளைப்பற்றிப் பயில்கின்றபோது, உற்பத்தியாளர்களின் முன்னேக்குகள், நுகர்வோரின் முன்னேக்குகள் ஆகிய இரண்டும் அவற்றில் அடங்கி இருக்கின்றன என்பதை நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும். நுகர்வு, முதலீடு, இரண்டிற்குமான தனியார் செலவுகளின் பெருக்கத்தை (எழுகின்ற முன்னேக்குகள்) அல்லது சுருக்கத்தை (விழுகின்ற முன்னேக்குகள்) உண்டாக்க முயலும் சக்திகளின் தொகுப்பே முன்னேக்குகள் ஆகும்.

வாணிபச் சுழலின் பின்னிறக்கக் கட்டத்திலும் பதுக்கும் நாட்டம் உயர்கிறது. உற்பத்தியாளர்கள், நடப்புத் தேவையின் கண்ணேட்டத்தின்படி உற்பத்திச் செலவை முடிந்த அளவுக்குக் குறைக்கிறார்கள்; கடனைத் திருப்பித் தருவதற்கு வருமானத்தைப் பயன்படுத்துகிறார்கள்; பொருள் இருப்புகளைக் குறைந்த அளவிலேயே வைத்துக்கொள்கிறார்கள். தேய்மானம் அடைந்த உற்பத்திக் கருவிகளை புதுக் கருவிகளால் அவர்கள் ஈடுசெய்வதில்லை. அவர்கள் முன்னிலும் மிகுதியான ரொக்க நிலைமையில் தங்களை வைத்துக் கொள்கிறார்கள். நுகர்பவர்களோ தங்கள் நுகர்வைக் குறைந்தபட்ச அளவுக்குத் தாழ்த்திவிடுகிறார்கள்; முடிந்த அளவுக்குக் கடனைத் திருப்பித்தருகிறார்கள்; தங்களுடைய நடப்பு வருமானமும் வேலையும் இனி குறையக்கூடும் என்பதை எதிர்பார்த்து, அந்த நிலைமைக்குத் தங்களைத் தயாராக்கிக் கொள்வதற்காக, ரொக்க வடிவில் சேமிக்க முயல்கிறார்கள் (பதுக்கல்). உற்பத்தியாளர்கள், நுகர்பவர்கள் — ஆகிய இரு சாராரிடமும் ஏற்படும் பதுக்கும் நாட்டத்தின் விளைவாகக் கடன்கள் (புதிய பணம்) திருப்பித் தரப்படுகின்றன என்பதையும், ரொக்க பாங்கி இருப்புகள் (பதுக்கல்கள்) [liquid bank balances – (hoards)] உயர்கின்றன என்பதையும் நாம் இங்கே குறிப்பாகக் கவனிக்கவேண்டும். தம்மிடமுள்ள நிதிகளைக் கடனாகத் தருதற்குரிய வழிகளைப் பாங்குகள் வகுக்கமுடியாமல் இருக்கும் காரணத்தாலேயே இப் பதுக்கல் பெரும்பாலும் நடைபெறுகிறது.

இந்த சூழ்நிலையில், ஈடுசெய் செலவின் நோக்கம், எந்த ஒரு வருமானக் காலப்பிரிவிலும் (income period) வருமான வட்டச் சுழற்சியிலிருந்து தனியாரால் எடுத்துக்கொள்ளப்பட்ட வருமானத்தை ஈடுசெய்வதற்குத் தேவையான அளவு அரசாங்க நிதிகளைச் செலவு ஓட்டத்தில் (income period) நுழைப்பதே ஆகும். பதுக்கும் நாட்டம் உயர்ந்துகொண்டிருக்கும்வரையில், காலப் பிரிவுதோறும், அரசாங்கச் செலவின் அளவும் பெருகிக்கொண்டே வரவேண்டும் என்பது இதிலிருந்து தெளிவாகிறது. ஏனென்றால், விழுகின்ற முன்னேக்குகளின்போது, தனியார் செலவோடு, அரசாங்க ஈடுசெய் செலவும் உயர்ந்துகொண்டே வரும் பதுக்கும் நாட்டத்திற்கு உள்ளாகிறது. தனியார் செலவு, அரசாங்கச் செலவு ஆகிய இருவகைச் செலவுகளின் லீவரேஜ் விளைவுகளும் குறைவாக இருப்பதோடு, மேலும் மேலும் குறைந்தபடி இருக்கின்றன. எனவே தப்பிச் சென்று பதுக்கலாக மாறும் தொகைகளை மிகக் குறைந்த அளவுடையனவாக ஆக்கும் வகையிலும், பெருக்கும்எண் விளைவுகளை உச்ச அளவுடையனவாக ஆக்கும் வகையிலும், ஈடுசெய் செலவுகள், வருமான ஓட்டத்தில் பாய்ச்சப்படவேண்டும். அத்தகைய ஈடுசெய் செலவின் பல்வேறு இயல்புகள் கீழே தரப்பட்டுள்ளன :

1. நாட்டின் வருமானம் வீழ்ச்சியடையும்போது, குறிப்பிட்ட வரிவீதங்களின்படித் திரட்டப்படும் அரசாங்க வருவாய்களும் வீழ்ச்சியுறும். இந் நிலையில் ஈடுசெய் செலவானது, அரசாங்கத்தின் மொத்தச் செலவில், ஒரு நிகர உயர்வையே ஏற்படுத்தும். அவ் வுயர்வின் விளைவாக ஒரு பற்றுக்குறை உருவாகும். விழுகின்ற முன்னேக்குகளைத் தடுத்து நிறுத்தவேண்டுமானல் செலவில் உயர்வு, வருவாயில் குறைவு ஆகிய இரண்டு நிலைகளும் ஏற்பட்டே தீரும். பதுக்கல்மீதான வரிவிதிப்பின்மூலம் ஈடுசெய் செலவுக்கான நிதிகளைத் திரட்டுவது சிறந்த வழியாகச் சிலருக்குத் தோன்றுகிறது. இந்த வழியைக் கடைப்பிடித்தால், பதுக்கல்கள், அவற்றின் உரிமையாளர்களிடமிருந்து, அரசாங்கத்தின் வழியாக, மிகுந்த செலவுநாட்டம் படைத்த தனியாட்களுக்கு மாற்றப்படும். அப்படி மாற்றப்படுவதால், மாற்றப்படாத நிலையில் இருக்கக் கூடியதைவிட மிகுதியான வருமான மறுசெலவு ஏற்படும். ஆனல் முன்னேக்குகள் தாழ்ந்த நிலையில் இருக்கும்போது, பதுக்கல்கள் பயனுள்ள இரண்டு செயல்களைச் சாதிக்கின்றன. பல சமயங்களில் அவை, ரொக்கச் சேமிப்பு விருப்பத்தைத் திட்டமிட்டு நிறைவேற்றியதன் விளைவுகளாக அமைந்துள்ளன. இந் நிலையில் அவை வரிகள் வாயிலாகப் பறிக்கப்பட்டுவிட்டால், அவற்றை ஈடுசெய்யப் பதுக்கல்கள் ஓரளவுக்காவது ஏற்படுவது உறுதி. அதுமட்டுமல்ல.

பதுக்கல்கள், வட்டி வீதங்களைக் குறைந்த அளவில் நிறுத்திவைக்க உதவிசெய்கின்றன. அப்படி ஏற்படும் குறைந்த வட்டிவீதம் காரணமாக, இலாப முன்னோக்குகள் குறைவாக இருக்கும்போது கூட, மூலதன அங்காடியில் ஓரளவுக்காவது கடன் வாங்கப்படுகிற சூழ்நிலையை அப் பதுக்கல்கள் ஏற்படுத்துகின்றன. எனவே, ஈடு செய் செலவுத்திட்டமானது, வரவு செலவுத் திட்டத்தை உடனடியாக ஒத்த நிலைப்படுத்தும் முயற்சியோடு இணைத்துச் செயலாற்றப்பட்டால், தனியார் செலவில் மேலும் ஒரு நிகரக் குறைவு ஏற்படுவது பெரும்பாலும் உறுதியென்றே சொல்லவேண்டும். அத்தகைய குறைவு ஏற்பட்டால் அரசாங்கச் செலவின் நோக்கம் பாழ்பட்டுவிடுவதும் உறுதியே. ஆகவே, ஈடுசெய் செலவுக்கான நிதிகள் கடன் பெறுவதன் வாயிலாகவே திரட்டப்படவேண்டும் (வரிகள் மூலம் அல்ல).

2. ஈடுசெய் செலவுக்கான நிதிக்காகத் திரட்டப்படும் கடன், தனியாட்களின் சேமிப்பிலிருந்து திரட்டப்படாமல், பாங்குகள் உற்பத்திசெய்யும் 'புதிய பணத்'திலிருந்து திரட்டப்பட்டால், கடன் எழுப்புவதால் தனியார் செலவுநாட்டத்தில் ஏற்படும் எதிர்மறைவிளைவு குறைவாக இருக்கும். அவ்வாறு பாங்குகளால் அரசாங்கத்திற்குக் கடனாகத் தரப்படும் 'புதிய பணம்' மைய பாங்கால் (central bank) கிடைக்கும்படிச் செய்யப்பட்டுள்ள — உறுப்பினர் பாங்குகளின் புதிய காப்பிருப்புகளிலிருந்து (New member bank reserves) உற்பத்தி செய்யப்படவேண்டும். அப்படிச் செய்யப்பட்டால், நுகர்வுக்கோ முதலீட்டுக்கோ தனியார் துறையினர் கடன் வாங்குவதைத் தடுக்கக்கூடிய பாங்குச் செலாவணி இறுக்கம் எதுவும் (பாங்குகள் தரும் கடனுக்கான வட்டிவீத உயர்வு, கடன் பெறுவோர் நிறைவு செய்யவேண்டிய நிபந்தனைகளின் உயர்வு முதலியவை) ஏற்படாமல் இருக்கும். தாமாகக் கடன்தர முன்வருகிற தனியாரின் சேமிப்பிலிருந்துமட்டும் அரசாங்கம் கடன் பெறுமானால், அத்தகைய கடனால் தனியாரின் செலவு அளவு குறையமுடியாதே என்று சிலர் வாதாடக்கூடும். ஆனால் குறைந்த நிலையில் உள்ள முன்நோக்குகள் மேன்மேலும் குறைந்தபடி உள்ள காலத்தில், தனியார் துறையினர் கடன் வாங்க வேண்டுமானால், வட்டிவீதம் குறைவாக இருக்கவேண்டும். ரொக்க நாட்டம் உயர்ந்த நிலையில் இருக்கும்போது, தனியார் சேமிப்பிலிருந்து அரசாங்கம் கடன் வாங்குவதால், தனியார் துறையினர் மிகக் குறைந்த வட்டி வீதத்தில் கடனாகப் பெறக்கூடிய அதே நிதிகள்தான் அரசாங்கத்தை அடைந்துவிடும். அல்லது குறைந்த

பட்சம், வட்டிவீதத்தைத் தாழ்ந்த நிலையில் அழுத்திவைக்கும் சக்தியாகத் தொடர்ந்து விளங்கிவரும் கடனாகத் தரப்படக்கூடிய நிதிகளின் உபரியாவது குறைந்துவிடும்.

3. ஒரு குறிப்பிட்ட செலவிலிருந்து உச்சஅளவு வருமான விளைவுகள் உண்டாகவேண்டுமானால், செலவிலிருந்து தப்பிச் சென்று பதுக்கலாக மாறும் தொகையின் அளவு மிகக்குறைவாக இருக்கும் வகையில் ஈடு செய் நிதிகள் செலவிடப்படவேண்டும். இந்தக் கோட்பாடு நிறைவேற வேண்டுமானால், தங்களுடைய புதிய வருமானத்தைத் தங்களுடைய வேலையின்மை அல்லது குறைந்த வருமானத்தின் காரணமாக உடனே நுகர்வுக்காக மறுசெலவு செய்துவிடும் தன்மை படைத்தவர்களிடம் அரசாங்கச் செலவுப்பணம் சேரக்கூடிய முறையில் வகுக்கப்படும் (நிவாரணம் முதலிய) திட்டங்களுக்கே முதலில் செலவு செய்யப்படவேண்டும். அப்படிச் செய்யப்படுவதால் ஏற்படும் கூடுதல் வருமானத்தால், தேய்மானம் அடைந்த கருவிகளை ஈடுசெய்வதற்கான முதலீடு,அல்லது உற்பத்திச் சக்தியை அதிகப்படுத்துவதற்கான முதலீடு மிகுதியாகும். மற்றோர் புறத்தில், சாலை அமைப்பு, நீர்ப்பாசனம், தண்ணீர் - மின் சக்தித் திட்டங்கள் முதலிய முக்கியமான முன்னேற்றங்களுக்கான செலவால், பண்ட உற்பத்திச் செலவுகள் மிகவும் குறைவடைந்து, ஏராளமான புதிய முதலீடுகள் ஏற்படமுடியும். எந்தெந்த திட்டங்களுக்குச் செலவிட்டால் எந்தெந்த அளவுக்கு லீவரேஜ் விளைவுகள் ஏற்படும் என்பதுபற்றித் தற்போது நாம் பெறக்கூடிய தகவல், லீவரேஜ் அடிப்படையில் திட்டங்களைத் தேர்ந்தெடுத்துத் திட்டமிட உதவுகிற அளவுக்கு இல்லை என்பது உண்மையே. ஆனால் நாம் கையாளவேண்டிய அடிப்படைக் கோட்பாடு தெளிவாக இருக்கிறது. மிக அதிகமான அளவில் மறு செலவுக்கு வாய்ப்பளிக்கக் கூடிய முறையில், அரசாங்கத்தின் ஈடுசெய் செலவு, வருமான ஓட்டத்தில் பாய்ச்சப்படவேண்டும் என்பதே அந்தக் கோட்பாடு. அடுத்த அத்தியாயத்தில் இந்த சிக்கலைப்பற்றி மேலும் சிறிதளவு நாம் ஆராய முற்படலாம். ஆனால் இச் சிச்கல்பற்றி எளிய திட்டவட்டமான விடைகளை எதிர்பார்த்தல் இயலாது என்பதை வாசகர்கள் இப்போதே தெளிவுபடுத்திக்கொள்வது நல்லது.

**நிலைமை 2. எழுகின்ற முன்நோக்குகள் :** முன்நோக்குகள் உயர்ந்துகொண்டிருக்கும்போது, பதுக்கும் நாட்டம் பெரும்பாலும் குறைந்துகொண்டிருக்கும்; பெருக்கும் எண் உயர்ந்துகொண்டிருக்கும் என்று எதிர்பார்க்கலாம். இவற்றின் விளைவாகத் தனியார் முதலீட்டுக்கான வாய்ப்புகள் விரைந்து பெருகும். இத்தகைய

நிலையில், தனியார் பொருளாதாரம் வேலைநிறைவை நோக்கி ஒழுங்கான முறையில் முன்னேறிச் செல்வதற்கு ஏற்றமுறையில் அரசாங்கம் தன் செலவின் அளவைக் கட்டுப்படுத்தவேண்டும்.

மீட்சியின் தொடக்க நிலைகளில், ஈடுசெய் செலவுத்தொகை, ஓரளவுக்கு உயர்ந்த அளவிலேயே இருக்கவேண்டும். வருமான ஓட்டத்தில் அரசாங்கம் பாய்ச்சும் செலவுத் தொகையை மிக விரைவில் நிறுத்திவிட்டால், பின்னிறக்க நிலை ஏற்பட்டுவிடக்கூடும். முன்நோக்குகள் தொடர்ச்சியாக உயர்வதற்கு ஏற்றவகையில் சூழ்நிலை உருவாக்கப்படவேண்டும். செலவைப் பெரிய அளவில் குறைப்பதன் வாயிலாகவோ, வரிகளை உயர்த்துவதன்மூலமாகவோ வரவுசெலவுத் திட்டத்தை சமநிலைப்படுத்துவதற்கான முயற்சிகளை, இந்தக் கட்டத்தில், தீவிரமான அளவில் தொடங்கக்கூடாது.

பொருளாதார மீட்சியானது உறுதியான அடிப்படையில் முன்னேறி வர வர, வருமான ஓட்டத்தில் பாய்ச்சப்படும் அரசாங்கச் செலவு படிப்படியாகக் குறைக்கப்படவேண்டும். வாணிபச் சுழலின் கீழ் நோக்கிய பயணத்தின்போது இந்தச் செலவின் அளவு படிப்படியாக உயர்த்தப்பட்டதைப்போல, அதன் மேல்நோக்கிய பயணத்தின்போது செலவின் அளவு குறைக்கப்படவேண்டும். எஞ்சியுள்ள வேலையின்மையின் அளவோடு ஒப்பிட்டுப் பார்க்கையில் தனியார் செலவின் மீட்சிவேகம் எந்த அளவில் இருக்கிறது என்பதைப் பொறுத்தே, எந்தக் கட்டத்தில், அரசாங்கத்தின் நிகரச் செலவு முழுவதையும் நிறுத்திவிடவேண்டும் என்பதை (அதாவது வரவு செலவுத் திட்டத்தைச் சமநிலைப்படுத்தவேண்டும் என்பதை) முடிவுசெய்ய முடியும். கீழ் நோக்கிய பயணத்தின்போது, பதுக்கும் நாட்டம் உயர்ந்துவந்த காரணத்தால் அடுத்தடுத்துச் செய்யப்பட்ட அரசாங்கச் செலவும் உயர்ந்துவந்தது. ஆனால் மீட்சிக் காலத்தில் செலவுநாட்டம் உயர்ந்து வருவதால், அரசாங்கச் செலவு குறைவதற்கு அனுமதிக்கலாம். இவ் வகையில் மீட்சிக் காலத்தில், வேலை நிறைவு அளவுக்கும் தற்போதைய வேலை அளவுக்கும் நடுவே உள்ள இடைவெளி, இறுதியில், தனியார் செலவால் நிரப்பப்பட்டுவிடும். ஆனால் அந்த இடைவெளி அவ்வாறு தனியார் செலவால் நிரப்பப்படுகிற வேகத்தை அரசாங்கம் தன் செலவால் மிகுதிப்படுத்தலாம்.

செழுமையின் பிந்திய கட்டங்களில் பொருளாதாரமானது வேலை நிறைவு அளவை நெருங்க நெருங்க — ஈடு செய் செலவை அரசாங்கம் முற்றிலும் நிறுத்திவிடவேண்டும். அந் நிலையில் அரசாங்கச் செலவின் அளவானது, தேவையான அரசாங்கப் பணிகளை

நிறைவேற்றுதற்குரிய நடப்புச் செலவின் அளவையே பொறுத்திருக்கும். இந் நிலையில் நாட்டு வருமான உயர்வின் விளைவாக ஏற்படும் இயற்கையான காரணங்களாலும், வரவு செலவுத் திட்ட உபரியை உறுவாக்குவதற்காகவும், கடனைத் திருப்பித்தருவதற்காகவும் உயர்த்தப்பட்ட வரி வீதங்களின் விளைவாகவும், வரித் தொகையின் அளவு உயர்ந்துவிட்டிருக்கும். பொருளாதாரமானது வேலை நிறைவு அளவை நெருங்க நெருங்க, தனியார் துறையில் நம்பிக்கையானது விறுவிறுப்பாக வளர்கிறது; கூடுதலான வரிகளையும் எளிதில் ஏற்றுக்கொள்கிறது. இந்தக் கட்டத்தில், முந்திய பற்றுக் குறைச் செலவுக் கொள்கை காரணமாக ஏற்பட்ட கடனில் ஒரு பகுதியைத் திருப்பித்தர உபரித் தொகை பயன்படுத்தப்படுகிறது.

பொருளாதார வீக்கம் மிக விரைவில் வளர்வதைத் தடுத்து நிறுத்துவதற்கும் பொருளாதார வளர்ச்சி வேகத்தை நிலைபேறுக்குவதற்கும் வரி உயர்வுகள் பெரிதும் பயன்படுகின்றன. வருமானக் காலப்பிரிவு எதிலும்,செலவிடுவோரின் செலவிடக்கூடிய வருமானத்தைக் குறைத்து, அப்படிக் குறைப்பதன் மூலம் தனியார் துறையின் பலம்பொருந்திய தேவையையும் (effective demand) குறைப்பதன் வாயிலாக இந்தப் பணிகள் நடைபெறுகின்றன. தனியாரிடமிருந்து பெற்ற கடன்களைத் திருப்பித் தருவதற்கு வரி வரவுகள் பயன்படுத்தப் படுகிற அளவுக்கு, வரித்தொகையானது, குறைந்த செலவு நாட்டம் படைத்தவர்களின் கைகளை அடைந்துவிடுகிறது. நுகர்வின் வளர்ச்சி வீதமானது நிலைபேறுக்கப்பட்டால், உற்பத்தியாளரின் பொருள்கள்பற்றிய தொழில்களில் ஏற்படும் வேகவளர்ச்சி விளைவுகள் (acceleration effects) குறையத் தொடங்கும்.

வேலை நிறைவு அளவை நெருங்குகின்ற சமயத்தில்அரசாங்கம் தன் செலவைக் குறைக்கத் தவறுமானுல், பொருளாதார வளர்ச்சி முறையில் பல இடர்ப்பாடுகள் உருவாகும். உற்பத்திக் காரணிகள் கிடைப்பது அரிதாக அமையும் அந் நிலையில், அவற்றை விலைக்குப் பெறுவதற்காகத் தனியார் பொருளாதாரத்தோடு அரசாங்கம் தொடர்ந்து போட்டியிடுவது முறையாகாது. எந்த அளவுக்கு அரசாங்கம் அப்படிப் போட்டியிடுகிறதோ அந்த அளவுக்கு இடர்ப்பாடுகளின் வளர்ச்சிக்கு அதுவே காரணமாக அமைந்துவிடுகிறது. அரசாங்கப் போட்டியின் விளைவாக அந்தக் காரணிகளின் விலைகளும் உயர்ந்துவிடும். அரசாங்கத்தின் இத்தகைய நடவடிக்கையால் பணவீக்கம் ஏற்பட்டு, இறுதியில் முன் நோக்குகளில் ஒரு நெருக்கடி நிலையும் உருவாகிவிடலாம்.

முன்நோக்குகள் உயர்ந்துகொண்டிருக்கும் காலத்தில் கையாளப்படவேண்டிய நிதிக் கொள்கை, 1. வேலை நிறைவு அளவு தற்போதைய வேலை அளவிலிருந்து எத்துணைத்தொலைவில் உள்ளது

என்பதையும், 2. தற்போது முன் நோக்குகள் எந்த அளவுக்குப் பற்றுக்குறைச் செலவைப் பொறுத்திருக்கின்றன என்பதையும் எண்ணிப் பார்த்தே உருவாக்கப்படவேண்டும். மீட்சியின் தொடக்கக் கட்டங்களில், இந்த இரண்டு ஆய்வுகளும் பற்றுக்குறைச் செலவின் தொடர்ச்சியைக் காட்டுகின்றன. ஆனால் மீட்சியின் பிந்திய கட்டங்களில், பற்றுக்குறைச் செலவானது (deficit spending) உபரி வரி விதிப்புக்கு (surplus taxation) இடமளித்து ஒதுங்கிவிடுகிறது. இதற்குக் காரணம், மக்கள் வாழ்க்கைத் தர உயர்வுக்குச் சிறிதளவும் பயன்படாத அளவு கடந்த பொருளாதார வீக்கத்தையும், எல்லை மீறிய விலை உயர்வையும் தடுத்து நிறுத்த வேண்டும் என்பதே.

**வாணிப நம்பிக்கைக்கான நிலைமைகள்**

மந்தகால நிதிக்கொள்கையின் வெற்றியானது, நம்பிக்கையின் அடிப்படையில் அமைந்த முன்னோக்குகளின் தன்மையைப் பெரிய அளவில் பொறுத்திருப்பதால், அந் நம்பிக்கையின் வளர்ச்சிபற்றிய சில கருத்துகளைத் தெரிவிப்பது தேவையாகிறது. 'நம்பிக்கை'யை அளவிடுவது மிகவும் கடினம். அடிப்படையில் அது தனி மனிதப் பண்பாகும் (personal). என்றாலும், அது ஒருவரிடமிருந்து மற்றொருவரிடம் மிகுந்த அளவில் பரவிச் செல்லும் தன்மை படைத்தது. அது எளிதில் ஏனையோரைப் பற்றிக்கொள்ளக்கூடியது. எனவே விற்பனையாற்றல் அல்லது பிரசாரத்தின் மூலமாகக் கூடுதலாக்கப் படக்கூடியது அல்லது குறைக்கப்படக்கூடியது. அது எப்பொழுதுமே பகுத்தறிவின் அடிப்படையில்தான் அமைந்திருக்கும் என்று கூறவும் முடியாது. பழமைப் போக்கால் அது சீராட்டப் படுகிறது. பழமையின் எல்லையை மீறும் புத்தமைப்புகளால் அது பலவீனப்படுத்தப்படுகிறது. அதனைப் பகுத்தாய்வது மிகக் கடினமாக இருப்பதால், உண்மையான அந்தப் பொருளை மட்டுமல்ல, அதைப்போன்று காட்சி தரும் வேறு சில போலிப் பொருள்களையும் நாம் கவனிக்கவேண்டி இருக்கிறது.

பற்றுக் குறைச் செலவுக் காலத்தில் சுழல் எதிர்ப்பு நிதிக் கொள்கையானது நம்பிக்கையால் முக்கியமான முறையில் பாதிக்கப்படுகிறது. அக் காலத்தில்தான், மாபெரும் வெற்றியை அளிக்கக் கூடியதாக முதலில் காட்சி அளிக்கும் கொள்கை, நம்பிக்கையைத் தகுந்த முறையில் உருவாக்கத் தவறுவதால், அவ்வளவாகப் பொருந்தாத விளைவுகளையோ அல்லது முற்றிலும் விரும்பத்தகாத விளைவுகளையோ உண்டாக்கிவிடுகிறது. மீட்சியைத் தூண்டுவதற்கான அரசாங்க நடவடிக்கைக்குப் பதிலாகக் கையாளப்படக்கூடிய ஏற்பாடு, பின்னிறக்கம் அல்லது மந்த நிலை முடியும்வரையில் காத்

துக் கிடப்பது ஒன்றே ஆதலால், அரசாங்கச்செலவுக் கொள்கையை வெற்றிபெறச் செய்யவல்ல நிலைகளையும் முறைகளையும்பற்றி ஆராய்ந்து அறிவது இன்றியமையாதது ஆகிறது.

ஒரு கொள்கையை முன்னரே கையாண்டுபார்த்த அனுபவம் நமக்கு இருக்குமானால்—அதிலும் அந்த அனுபவம் வெற்றி பொருந்திய அனுபவமாக இருக்குமானால், அந்தக் கொள்கையின் விளைவுகளைப் பற்றிய அச்சத்தைப் போக்குவதற்கு அது பேருதவியாக இருக்கும் என்பதில் ஐயமில்லை. அந்த அனுபவம் வெற்றிமிகுந்ததாக இல்லாவிட்டால்கூட, அந்த முயற்சியின்போது செய்யப்பட்ட தவறுகளை அடுத்த முயற்சியின்போது தவிர்க்கக்கூடிய அறிவுடைமையை அது நமக்குத் தருகிறது. பொருளாதார மந்த காலத்தில் பற்றுக் குறைச் செலவுத் திட்டத்தைப் பெரிய அளவில் கையாள்வதால் ஏற்படக்கூடிய அச்சத்தை, 1930ஐத் தொடர்ந்த ஆண்டுகளில் இத் துறையில் அமெரிக்கா பெற்ற அனுபவம் பெரிதும் குறைத்துவிட்டது. நிவாரணச் செலவைப் (relief expenditure) பற்றிய மக்களின் மனப்போக்கு, போரைப்பற்றிய அவர்களின் மனப்போக்கைப்போலவே அமைந்துள்ளது. அதாவது, அதனுடைய செலவு எந்த அளவினதாக இருந்தாலும் அது மன உறுதியோடு ஏற்றுக்கொள்ளவேண்டிய ஒரு கடமை என்னும் உணர்ச்சி மக்களிடம் இருக்கிறது. அவ்வப்போது வேலையின்மை உருவாகிற தன்மை படைத்த ஒரு பொருளாதாரத்தைப் பேணிக் காப்பதற்குச் செய்யப்படவேண்டிய செலவுகளில் ஒன்றாக நிவாரணச் செலவு அமைந்திருக்கிறது. நிவாரணச் செலவு, ஈடு செய் செலவாகும். வருமான அளவு குறையும்போது, 'அந்தக் குறைவை ஈடுசெய்வது; முடியுமானால் குறையும் போக்கை மாற்றி, வருமானத்தை உயர வைப்பது' என்னும் குறிக்கோளை நிறைவேற்றுவதற்குத் தகுந்த சூழ்நிலையில், வருமான ஓட்டத்தில் நிவாரணச் செலவானது பாய்ச்சப்படுகிறது. நிவாரணச் செலவை மக்கள் ஏற்றுக்கொண்டிருப்பது, ஓரளவுக்காவது அவர்கள் பற்றுக்குறைச் செலவை ஏற்றுக்கொண்டிருப்பதாகவே பொருள்படும். நிவாரணத்திற்கான அல்லது வேலையின்மைக்கான பற்றுக்குறைச் செலவானது பொதுவாக ஏற்கப்படும் மரபாக ஆகிவிடுமானால், பொருளாதாரத்தில் அரசாங்கம் ஒரு துணைப்பொறி (auxilary motor) என்று கருதும் மனப்போக்கை மக்கள் பெரும்பாலும் பெற்றுவிட்டார்கள் என்று கூறலாம்.

பொருளாதார மந்தத்தின்போது அரசாங்கச் செலவால் விளையக்கூடிய பயனை விளக்கும் பொருளாதார இலக்கியம் ஏராளமான அளவில் தோன்றியிருப்பது, ஈடுசெய் நிதிக்கொள்கையில் மக்களின்

நம்பிக்கையை வளர்க்கவல்ல இரண்டாவது காரணி ஆகும். அத்தகைய கொள்கையைக் கையாளவேண்டியது அரசாங்கத்தின் கடமை என்பதிலும், அந்தக் கொள்கை வெற்றி பெறுவதற்கு உண்மையான வாய்ப்புகள் இருக்கின்றன என்பதிலும் பொருளாதார வல்லுநர்களிடையே ஒருமித்த கருத்து இருக்கின்ற நிலைமையால் பொதுமக்களின் நம்பிக்கை தழைத்தோங்க முடிகிறது. எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய மந்தத்தின்போது இருக்கக்கூடிய அளவு வெளிப்படையான கோட்பாட்டு ஆதரவு (theoretical support) 1933 – 1938ஆம் ஆண்டுகளில் அரசாங்கம் கையாண்ட செலவுக் கொள்கைக்குக் கிடைக்கவில்லை.

எதிர்காலத்தில் அரசாங்கம் ஈடுசெய் செலவுக் கொள்கையை கையாளும்போது, நம்பிக்கையை வளர்ப்பதற்கான முறைகளில் முன்னர் இழைத்த தவறுகளைச் செய்யாமல் இருப்பதற்கு, 1933–1938ஆம் ஆண்டுகளின் பற்றுக்குறைச் செலவு அனுபவம் பேருதவியாக இருக்கும். எதிர்காலத்தில் அரசாங்கம் கீழ்கண்ட முறைகளில் நடந்துகொள்ளும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. (1) செலவுக் கொள்கையைக் கையாளும்போது, வரிகளை உயர்த்தி வரவு செலவுத் திட்டத்தைச் சமநிலைப்படுத்தும் முயற்சி இராது. (2) உறுப்பினர் பாங்குகளுக்காகப் புதிய கூடுதல் காப்பிருப்புகளை உற்பத்தி செய்யும் முறையில் கூட்டமைப்பின் காப்பிருப்புக் கொள்கை (Federal Reserve Policy) அமைந்திருக்கும். உறுப்பினர் பாங்குகளின் இந்தக் கூடுதல் காப்பிருப்புகளிலிருந்து அரசாங்கம் கடன் வாங்கும்.[4] (3) கட்டுப்பாடுகளின் வாயிலாகவோ போட்டியிடுவதன் மூலமாகவோ, தனியார் வாணிபத்தைத் தண்டிக்கும் முறையில் அமைந்த அரசாங்க நடவடிக்கைகள் மிகக் குறைந்த அளவினதாக இருக்கவேண்டும். (4) ஈடுசெய் செலவுக் கொள்கையானது பொருளாதாரத்தைச் சீர்திருத்தி அமைப்பதற்கான சிறந்த திட்டம் என்னும் கருத்தைப் பொதுமக்கள் தெள்ளத் தெளிவாக உணர்ந்துகொள்வதற்காக அரசாங்கம் கீழ்க்கண்ட முறைகளைக் கையாளும் — (அ) செலவுக் கொள்கையின் நிவாரணத் தன்மையை விட (relief aspect) மீட்சித் தன்மை (recovery aspect) முக்கியமானது என்பதை அழுத்தந் திருத்தமாக எடுத்துக்காட்டுதல் (ஆ) கோட்பாடு வழிச் சான்றுகளும் (theoretical evidence) புள்ளி விவரச் சான்றுகளும் செலவுக் கொள்கையை ஆதரிக்கும் வகையில் ஏராளமாக இருப்பதை அடுக்கடுக்காக எடுத்துக்காட்டுதல் (இ) பொருளாதார மீட்சியைக் கொண்டுவருவதற்குத் தேவையான காலம் வரையில், தேவையான அளவுத் தொகை, தவறாமல் செலவிடப்படும் என்னும் உறுதிமொழியை மக்களுக்கு அளித்தல் (ஈ) ஏற்கனவே முடிவுசெய்து வைக்கப்பட்டுள்ள பொதுப் பணிகளின் பட்டியலைப் பயன்படுத்துதல்; பொதுமக்களின் நீண்ட காலத் தேவையை நிறைவேற்றவல்ல திட்டங்களுக்கு முதலிடம் அளித்தல்.

ஐக்கிய அமெரிக்கா 1933–1938ஆம் ஆண்டுகளில் செலவுக் கொள்கையைக் கையாண்டதால் பெற்றுள்ள அனுபவம் ஓரளவு முக்கியத்துவம் உடையதாக இருக்கிறது. அந்த அனுபவத்தைப் பற்றிய பகுத்தாய்விலிருந்து,[5] ஓர் ஈடுசெய் திட்டம் என்கிற முறையில் அரசாங்கச் செலவானது போதிய அளவில் வெற்றிபெற்றிருக் கிறது என்கிற உண்மையையும், இந்த செலவுக் கொள்கை இல்லா திருந்தால் நாட்டின் வருமானம் குறைந்திருக்கக்கூடிய அளவைவிட உயர்ந்த நிலையில் அதனை இந்தக் கொள்கை நிறுத்தியிருக்கிறது என்கிற உண்மையையும், நாம் தெரிந்துகொள்ள முடிகிறது. குறிப் பாக, பற்றுக்குறைச் செலவு உயர்ந்த அளவில் இருந்த 1934–1936ஆம் ஆண்டுக் காலத்தில், நாட்டின் வருமானத்தில் ஏற் பட்ட குறிப்பிடத்தக்க நிகர உயர்வுக்கு அரசாங்கச் செலவே பெரிதும் காரணமாக இருந்தது. அதுமட்டும் அல்ல. 1937-ல் திடீ ரென்று ஏற்பட்டு 1938-லும் தொடர்ந்து இருந்த செங்குத்தான பின்னிறக்கத்திற்கு, 1937-ல் அரசாங்கச் செலவில் செய்யப்பட்ட எதிர்பாராத குறைப்பே பெரிதும் காரணமாக இருந்தது என்று கருதப்படுகிறது.

ஆனால், 1930ஐத் தொடர்ந்த ஆண்டுகளின் அரசாங்கச் செல வைக் குழாய் நிரப்பும் ஓர் ஏற்பாடு (a pump priming device) என் கிற கோணத்திலிருந்து நோக்கினால், அது சிறிதளிவும் வெற்றி பெறவில்லை என்றே கூறவேண்டும். அக் காலத்தில் பதுக்கும் நாட் டம் மாறாமல் இருந்தது அல்லது உயர்ந்துஇருந்தது என்பதி லிருந்து, முன்னேக்குகள் உயரவில்லை என்பது விளக்கமாகிறது. அக் காலத்தில் ஏற்பட்ட தனியார் முதலீடானது பெரும்பாலும் நடப்பு நுகர்வுத் தேவைகளை நிறைவேற்றுவதற்குரிய உற்பத்திச் சக்தியை அளிப்பதற்காகமட்டும் செய்யப்பட்டதே தவிர, வளரக் கூடிய எதிர்கால உற்பத்திக்கான முதலீடாக அமையவில்லை.

அப்படியானால், அரசாங்கச் செலவுக்குக் குழாய் நிரப்பும் ஆற்றல் இல்லவே இல்லை என்று நாம் முடிந்த முடிவாகக் கூறிவிட முடியுமா? ஏறக்குறைய குழாய் நிரப்பும் ஏற்பாடுபோல அமைந் துள்ள ஒரு திட்டத்தால் நமக்கு ஏற்பட்டுள்ள ஒரே ஒரு அனுப வத்தைமட்டும் வைத்துக்கொண்டு பொதுப்படையான முடிவு கட்டுவது, முற்றிலும் ஆபத்தான ஒரு முறை ஆகும். குழாய் நிரப்பும் திட்டம் 1933 – 1938-ல் தோற்றுவிட்டதால் அது எப் போதுமே தோல்விதான் அடையும் என்று கூறுவது, ‘இந்தியர்கள் அனைவரும் ஒருவர்பின் ஒருவராக ஒற்றை வரிசையில்தான் நடந்து செல்கிறார்கள், ஏனென்றால் நான் பார்த்துள்ள ஒரே ஒரு இந்தியர் அப்படித்தான் நடந்து சென்றார்’ என்று கூறுவதையே ஒத்திருக்கிறது.

1933 – 1938ஆம் ஆண்டுகளின் செலவுக் கொள்கையின் சில இயல்புகள், அது பெற்றிருக்கக்கூடிய வெற்றியைத் தடுத்துவிட்டன என்பதை நாம் இங்கே எடுத்துக்காட்டிக் கண்டிக்கமுடியும். முதலாவதாக, அக் கொள்கை அரை மனதோடு கையாளப்பட்டது. அடக்கமான ஈடுசெய் செலவு என்கிற கோணத்திலிருந்து பார்த்தால் கூட, 1933–1934-ல் மேற்கொள்ளப்பட்ட செலவு, போதிய அளவுடையதாக இல்லை. 1933 முதல் 1938 வரையுள்ள காலம் முழுவதிலும், பற்றுக்குறைச் செலவானது, முக்கியமாக நிவாரணம் அளிப்பதற்காகவே செய்யப்பட்டது. அச் செலவின் விளைவாகக் கிடைக்கும் ஒரு துணைப்பொருள் (by product) என்கிற முறையிலேயே, அச் செலவால் பொருளாதாரம் பலமடையலாம் என்கிற நம்பிக்கை அடுத்தபடியாகத் தெரிவிக்கப்பட்டது. ஒவ்வோர் ஆண்டும், பற்றுக்குறைச் செலவின்கூடவே, அடுத்த நிதி ஆண்டில் வரவுசெலவு திட்டத்தைச் சமநிலைப்படுத்தவேண்டும் என்னும் கருத்தும் தெரிவிக்கப்பட்டுவந்தது. இத்தகைய நிலைமையால் தனியார் முன்னேக்குகளில் உயர்வை ஏற்படுத்த இயலாது. தனியார் முன்னேக்குகளில் உயர்வு ஏற்படவேண்டுமானுல், அரசாங்கமாகிய துணைப்பொறி தேவையான காலம்வரையில் தேவையான அளவில் தவருமல் செலவு செய்யும் என்கிற உறுதிமொழி அளிக்கப்படவேண்டும்.

1933 – 38ஆம் ஆண்டுகளின் செலவுக்கொள்கை தோல்வியுற்றதற்கான இரண்டாவது காரணம், அக் காலத்தில் ஏற்பட்ட வரி உயர்வாகும். ஒவ்வாதநிலை வரவுசெலவுத் திட்டங்கள் தொடர்ச்சியாக வருவதுபற்றிய அச்சத்தாலும், வருமான உயர்வு தாழ்வுகளைக் குறைக்கவேண்டும் என்னும் விருப்பத்தாலும், வருமான வரியும் பண்டங்கள்மீதான வரிகளும் (commodity taxes) உயர்த்தப்பட்டன. ஆனுல் செலவுக்கொள்கை வெற்றிபெறவேண்டுமானுல், இதற்கு நேர்மாருன ஈடுசெய் வரிக்கொள்கை (compensatory tax policy) கையாளப்பட்டிருக்கவேண்டும்.

மூன்ருவதாக, செலவுத் திட்டமானது ஒழுங்குமுறை அற்றதாக இருந்தது. பற்றுக்குறைச் செலவுக்கொள்கையானது புத்தம் புதியதாக இருந்தால், உடனடியாக மேற்கொள்ளக்கூடிய முறையில் பொதுப் பணித் திட்டங்கள் எவையும் ஆயத்தமாக இல்லை. மீட்சிக்கான கருவிகளைக் கண்டறிவதில் மிகப்பெரிய தடுமாற்றம் இருந்தது. N.R.A. திட்டத்தின்கீழ்த் தொழிலாளர்களை உயர்ந்த ஊதியத்தில் மீண்டும் வேலைக்கு வைத்துக்கொள்ளும்படிச் செய்யப்பட்ட முயற்சிகளால், மீட்சிக்காகச் செயற்கையாக எழுப்பப்பட்டு, ஊர்வலங்களில் காட்சியளித்த ஆர்வத்தின் விளை

வாகக்கூட, வேலைதருவோரின் முன்னேக்குகளை உயர்த்தமுடிய வில்லை. அதிகத் தொழிலாளர்களை உயர்ந்த ஊதியத்தில் வேலையில் அமர்த்திக்கொள்வதாக வாணிப நிறுவனங்கள் தந்த உறுதி மொழிக்குப் பிரதிபலனுக அரசாங்கம் தந்ததெல்லாம், 'நியாயமான போட்டிக்கான விதிமுறைகளே ஆகும். ஆனல், நடைமுறையில் இந்த விதிமுறைகளால் போட்டிக்கு எதிர்மாறுன நிலைமையை (antithesis of competition) ஏற்பட்டது; இப்போதும் ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது. அப்படி ஏற்பட்டதன் விளைவாக விலைகள் மாறுமல் இருக்கும் நிலை உண்டாயிற்று. இந்த விலை இறுக்க மானது (price rigidity), வாணிபச் சுழலின்போது தேவையான மாற்றங்கள் செய்வதைத் தடுக்கும் மாபெரும் முட்டுக்கட்டை யாகும். பணத்துறையிலும் வணிகத்துறையிலும் அரசாங்கத் தலையீடு இருக்கலாம் என்பதும், அத் தலையீட்டின் தன்மையையும் விளைவுகளையும் முன் கூட்டியே தெரிந்துகொள்வது இயலாது என்பது மான ஒரு வகை எண்ணத்தை, தங்கக் கொள்கையும் (gold policy) 1933-ல் நடைபெற்ற உலகப் பொருளாதார மாநாட்டின் (The World Economic Conference) படுதோல்வியும், சரியாகவோ தப்பாகவோ ஏற்படுத்திவிட்டன. தொழிலாளர் நலன்பற்றிய ஒரு புதிய சிந்தனையையும், பல புதிய வரிகளையும் தொடங்கிவைத்த சமூகப் பாதுகாப்புத் திட்டத்தால் (Social Security Programme), தொழில் துணிவோர்களின் உள்ளங்களில் நம்பிக்கை உணர்ச்சியை ஊட்டமுடியவில்லை. அதுபோலவே நாட்டின் தொழிலாளர் உறவுச் சட்டத்தாலும் (The National Labour Relations Act) உற்பத்தியாளர் முன்னேக்குகளில் வீழ்ச்சியே ஏற்பட்டது. அந்தச் சட்டம் நீண்ட நாட்களுக்கு முன்னரே நிறைவேற்றப்பட்டிருக்க வேண்டிய ஒன்றுதான் என்றுலும், அது நிறைவேற்றப்பட்ட சமயம், குழாய் நிரப்பும் திட்டத்தின் வெற்றியைத் தடுப்பதாக அமைந்து விட்டது.

இப்படி நாம் கூறுவதால், 1930ஐத் தொடர்ந்த ஆண்டுகளில் தொடங்கப்பட்ட சீர்திருத்த ஏற்பாடுகளை நாம் கண்டிக்கிறேம் என்று கருதிவிடக்கூடாது. சுழல் எதிர்ப்புநிதிக் கொள்கையின் கண்ணேட்டத்திலிருந்து பார்க்கும்போது, அந்தச் சீர்திருத்த ஏற்பாடுகளைக் கொண்டுவந்த நேரம் பொருத்தமானதாக இல்லை என்றுதான் நாம் கூறுகிறேம். அந்தச் சீர்திருத்தங்கள் யாவும் நெடுங் காலத்திற்கு முன்னரே செய்திருக்கவேண்டியவை என்னும் உண் மையை எவரும் ஒப்புக்கொள்ளத்தக்க முறையில் நிலைநாட்ட முடியும். ஆனல் நாம் இந்தச் சமயத்தில் எடுத்துக்காட்ட விழைவ தெல்லாம், தலையாய சீர்திருத்தங்கள் பல நம் பொருளாதாரத்தில் தற்போது இணைக்கப்பட்டுவிட்டன என்பதும், கூடுதலாக

ஏதாவது பெரிய சீர்திருத்தங்களைச் செய்யவேண்டுமானால் பொருளாதாரத்தின் வேலைநிறைவுக் கட்டத்தின்போதே (full employment phase of the economy) அவற்றைச் செய்துவிடவேண்டும் என்பதும், முன்னோக்குகள் குறைவாக இருக்கும் காலத்தில் சுழல் எதிர்ப்புச் செலவுக் கொள்கையோடு அவற்றையும் மோதவிடக் கூடாது என்பதுமே ஆகும்.

**தேக்கநிலைப் பொருளாதாரத்திற்குரிய ஈடுசெய் செலவு (Compensatory Spending in a Stagnant Economy)**

தேக்கநிலையை உடைய பொருளாதாரத்தின் செழுமைப் பருவங்கள், வேலைநிறைவு அளவை அடைவதற்கு முன்னரே முடிவுற்றுவிடுகின்றன என்பதையும், அதன் மந்தப் பருவங்கள் வளரும் பொருளாதாரத்தின் மந்தப் பருவங்களைவிட நீளமாகவும் ஆழமாகவும் இருக்கின்றன என்பதையும் இந்த அத்தியாயத்தின் தொடக்கத்தில் நாம் விளக்கியிருக்கிறோம்.

முன்னர் நாம் விளக்கியுள்ள சுழல் எதிர்ப்பு நிதித் திட்டங்கள் பொதுவாக, முதிர்வுப் பொருளாதாரம் (mature economy), வளரும் பொருளாதாரம் (expanding economy) இரண்டிற்கும் பொருந்தும். ஆனால் ஒரு வேறுபாடு. இயற்கையாகத் தேக்கநிலையை அடைந்த பொருளாதாரத்தில், சுழலின் உச்ச கட்டத்தில்கூட, வேலை நிறைவு அளவை அடைவதற்காகப் பற்றுக்குறைச் செலவைச் செய்யவேண்டியிருக்கும். இவ்வாறாகத் தேக்க நிலைகளின்போது, அரசாங்கப் பற்றுக்குறை தொடர்ச்சியாக இருக்கும் என்பதும், பல்வேறு அளவுகளில்—ஆனால் தொடர்ச்சியாக நாட்டின் கடன் உயர்ந்துகொண்டே வரும் என்பதும் எதிர்பார்க்கவேண்டியவையே.

வாணிபச் சுழலில் வருமானம் குறையும்போது ஏற்படும் இடர்ப்பாட்டைப்போலவே, தேக்கநிலைப் பொருளாதாரத்திலும் சேமிப்பைவிட முதலீடு குறைவாக இருப்பதே தலையாய இடர்ப்பாடாக உள்ளது. இந்த இடர்ப்பாட்டுக்கு ஏதாவது தீர்வு இருக்குமானால், அது, கீழ்க்கண்ட இரண்டில் ஒன்றாக அல்லது இரண்டுமாகத்தான் இருக்கமுடியும். (1) முதலீட்டைவிட மிகுதியாக உள்ள சேமிப்பை நுகர்வில் செலுத்துதல். (2) முதலீட்டின் கவர்ச்சியை அதிகப்படுத்துதல். இந்த இரண்டு முறைகளும், பதுக்கலைக் குறைக்கும் நோக்கம் உடையனவே. வளரும் பொருளாதாரத்தில் ஏற்படுவதைப்போலவே, இங்கும், நம்பிக்கையில் ஏற்படும் வீழ்ச்சியால் இந்த முறைகள் முறியடிக்கப்படக்கூடும். நம்பிக்கையின் வீழ்ச்சி முன்னோக்குகளைக் குறைத்துவிடும்.

ஆண்டுதோறும் தொடர்ச்சியாகப் பற்றுக்குறை ஏற்படக் கூடும் என்னும் சிந்தனையே, முன்நோக்குகளைப் பெரிய அளவில் கீழ்நோக்கி இழுத்துவிடும் ஆற்றல் படைத்ததுதான். ஆனால் நேர்மையான முறையில் ஆராய்ந்து பார்த்தால், அரசாங்கக் கடனை நிர்வகிக்கும் செலவு அந்தக் கடனால் உற்பத்தியாகும் வருமானத்தை விடக் குறைவாக இருக்கும்வரையில், நாட்டின் உற்பத்தியில் அரசாங்கம் முதலீடுசெய்யும் கொள்கை சிக்கனமானது என்பதும், அதே முறையில் செய்யப்படும் தனியார் முதலீட்டை முற்றிலும் ஒத்திருப்பது என்பதும் தெள்ளத்தெளிவாக விளங்கும்.

ஆனால், வேலை நிறைவு அளவைத் தன்னுடைய ஆற்றலாலேயே அடையமுடியாத ஒரு பொருளாதாரத்தில் அரசாங்கச் செலவின் லீவரேஜ் விளைவுகள் குறைவாகத்தான் இருக்கும் என்பதை மறவாமல் இருப்பது இன்றியமையாதது. இத்தகைய நிலையில், கூடுதலாக ஏற்படும் அரசாங்கச் செலவின் விளைவுகள் குறுகிய காலம்வரையில்தான் இருக்கும் என்பதும், ஆனால் அச் செலவுக்காக எழுப்பிய கடனின் பராமரிப்புச் செலவு (service cost) அச் செலவின் விளைவு முடிவுற்ற காலத்திற்குப் பின்னர்கூடத் தொடர்ந்து இருக்கும் என்பதும் இயற்கையே. ஈடுசெய் செலவு தொடர்ந்து செய்யப்படும்போது, வேலை நிறைவை அடைவதற்காக நாட்டு வருமானத்தில் நிகரஉயர்வை உண்டாக்கவேண்டிய அவசியம் ஏற்படும்; அல்லது, கடன் உயர்வின் விளைவாகப் பெருகிக்கொண்டு வரும் இடர்ப்பாடுகளையும்மீறி வேலை நிறைவு அளவு வருமானத்தை நிலைநாட்டவேண்டிய அவசியம் ஏற்படும். அரசாங்கக் கடன் பளு பற்றிய சிக்கல்களையும், அரசாங்கக் கடன் அளவின் வரம்புபற்றிய சிக்கல்களையும் பிறகு வரும் ஓர் அத்தியாயத்தில் நாம் ஆராயலாம். உள்நாட்டில் எழுப்பப்படும் அரசாங்கக் கடன் பளுவற்றது என்று சிலர் தெரிவிக்கும் கருத்து உண்மையல்ல என்பதையும், ஆனால் 'பழமைக்' கருத்தினர் தெரிவிப்பதைவிட மிக அதிகமான அளவில் உள்நாட்டுக் கடனை எழுப்பமுடியும் என்பதையும்மட்டும் தற்போதைக்கு நாம் நினைவில் வைத்துக்கொண்டால் போதும். அரசாங்கத்தின் பற்றுக்குறைச் செலவை மட்டும் முன்வைத்துப் பார்த்தால், ஒரு முதிர்ந்த பொருளாதாரத்தில் வேலைநிறைவு அளவை அடைவதும் அதை நெடுநாட்கள் நிலைத்திருக்கச் செய்வதும் எளிதில் நிறைவேறக்கூடியன அல்ல என்னும் உண்மை, இதுவரை நாம் அறிந்த செய்திகளிலிருந்து தெளிவாகிறது. தேக்க நிலையில் உள்ள பொருளாதாரத்திற்கு நீண்டகாலத் தீர்வை அளிக்கவல்ல ஆற்றல், நிதித்துறையைச் சாராத பிற திட்டங் களுக்கே இருப்பதாகத் தெரிகிறது. ஏனென்றால், தேக்க நிலைப் பொருளாதாரத்தில், அகலமான வளர்ச்சிக்குரிய (extensive

expansion) வாயில்கள் இல்லாமலிருந்தாலும் ஆழமான முறையில் வளர்வதற்கு அளவற்ற வாய்ப்புகள் அணி அணியாக உள்ளன. ஆழமான முறையில் வளர்வதைத் தடுக்கும் இடையூறுகள், அங்காடியைக் காப்பாற்றுவதற்காகக் கையாளப்படும் தடுப்பு முறைக் கொள்கைகளே ஆகும்.—அதாவது ஏற்கெனவே பெற்றுள்ளதை விட்டுக்கொடுக்க மனமில்லாததால் உற்பத்தியாளர்கள் துணிவுமிக்க புது முயற்சிகளை மேற்கொள்ளாமல் இருக்கும் நிலைகளே ஆகும்.

## இரண்டாம் உலகப்போருக்குப் பிந்திய ஈடுசெய் கொள்கை (Compensatory Policy Since World War II)

நாம் இதுவரை செய்த கருத்தாய்வின் பெரும்பகுதி, கடுமையான மந்த நிலையைப் பொறுத்ததாகவே இருந்தது. 1930ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளிலும் 1940ஐத்தொடர்ந்த சில ஆண்டுகளிலும் இத்தகைய முறையில்தான் இத் துறைபற்றிய சிந்தனை சென்றுகொண்டிருந்தது. இவ் வகைப்பட்ட சிந்தனையின் விளைவாகத்தான் 1946-ல், போர்ச் செலவின் நிறுத்தம் காரணமாகப் போருக்குப் பிந்திய உடனடி ஆண்டுகளில் கடுமையான வாணிப வீழ்ச்சி ஏற்பட்டுவிடுமோ என்னும் அச்சம் நிறைந்த சூழ்நிலையில் வேலைச் சட்டம், 1946 (The Employment Act of 1946) நிறைவேற்றப்பட்டது. இந்தச் சட்டம், 'உச்ச அளவு வேலை, உற்பத்தி, வாங்கும் சக்தி ஆகியவற்றை உருவாக்கும்' பொறுப்பைக் கூட்டரசாங்கத்தின்மீது சுமத்திற்று. வேலை நிறைவு அளவில் நிலைபேற்றை ஏற்படுத்துவது என்னும் குறிக்கோளை நிறைவேற்றுவதற்காகச் சட்டமன்றத் துறையிலும் நிர்வாகத் துறையிலும் அமைப்புகள் ஏற்படுத்தப்பட்டன. வேலை நிறைவை நிலைநாட்டும் பொறுப்பு யார் யாரிடம் குறிப்பாகத் தரப்பட்டதோ, அவர்கள் யாவரும் நிதிக் கொள்கையில் தொடர்ச்சியாக மிகுந்த ஆர்வம் காட்டினார்கள்.

வரவுசெலவுத் திட்ட முடிவுகளில் பொருளாதார நிலைபேற்றுக்கத்திற்குத் தலைசிறந்த இடம் தரப்படவில்லை என்றாலும், பொருளாதார நிலைபேற்றை அல்லது நிலைபேறின்மையை உருவாக்குவதில் நிதிக்கொள்கைக்கு உள்ள ஆற்றல், ஏறத்தாழ எல்லா வட்டாரங்களிலும் உணரப்பட்டது. சில நேரங்களில் ஈடுசெய் கொள்கையானது சில நிலைமைகளுக்குமட்டுமே பொருந்துவது போலக் கருதப்பட்டாலும், வாழ்க்கையின் பொருளாதார உண்மைகளை — அவற்றின் அடிப்படையை எல்லோருமே ஏற்றுக் கொண்டுவிட்டார்கள் என்றே கூறவேண்டும். எடுத்துக்காட்டாக, 1958 பின்னிறக்கத்தின்போது, ஈடுசெய் செலவின் உயர்வைக்

கன்சர்வேடிவ் கருத்தினர் அடிக்கடி எதிர்த்துவந்தார்கள் என்ற போதிலும், 1959-ல் முதன்மையான பணவீக்க எதிர்ப்புக் கருவி யாகப் பற்றுக்குறை இருப்பதை அகற்றிவிடவேண்டும என்பதில் அவர்கள் யாவரும் ஏறத்தாழ ஒத்த கருத்துடையவர்களாகவே இருந்தார்கள்.[6] சில சமயங்களில் பொருளாதார நிலைபேற்றிற்குத் தேவையான நிதிக் கொள்கை கையாளப்படாமலிருந்தால் அதற் குக் காரணம், அந்தக் கொள்கை தேவை என்னும் கருத்து ஏற்கப் படவில்லை என்பது அல்ல. வாணிபத்தின் வருங்காலத்திய தன்மை களைத் தகுந்த முறையில் மதிப்பிடத் தவறியதால் அத்தகைய நிலைமை ஏற்பட்டிருக்கலாம். பொருளாதார நிலைபேற்றைத் தவிர்த்த ஏனைய நோக்கங்களை அதிக முக்கியத்துவம் உடையன வாகக் கருதியதாலும் அத்தகைய நிலைமை தோன்றியிருக்கலாம்.

1949–1950 ஆண்டுகளின் பின்னிறக்கத்தின்போது கையாளப் பட்ட நிதிக்கொள்கை பொருத்தம்மிக்கதாக அமைந்தது. அந்தக் கொள்கை திறமையான முறையில் வகுக்கப்பட்டதன் விளைவுஎன்று கூறுவதைவிட நற்பேற்றின் பயன் என்று இயம்பு வதே பொருத்தமாக இருக்கும். 1947-லும் 1948-லும் விலைகள் விரைவாக உயர்ந்த காரணத்தால், வரிக் குறைப்பு மசோதாவைக் காங்கிரஸ் மூன்று முறை நிறைவேற்றியது. மூன்று முறையும் அது குடியரசுத் தலைவரால் தள்ளுபடி (veto) செய்யப்பட்டுவிட்டது. ஆனால் மூன்றாவது முறை (1948) அது அவருடைய தள்ளுபடியையும் மீறி நிறைவேற்றப்பட்டது. பொதுமக்களுக்குக் கூட்டரசாங்கம் தந்த ரொக்கச்செலுத்தல்கள் நிதியாண்டு 1945-ல் 95·2 பில்லியன் டாலராக இருந்தது,1948-ல் 36·5பில்லியன் டாலராகக் குறைந்துவிட்டது. அதே காலப்பகுதியில் பொதுமக்களிடம் இருந்து அரசாங்கம் பெற்ற ரொக்கவரவுகள் (cash receipts) 50·2 பில்லியன் டாலரிலிருந்து 45·4 பில்லியன் டாலராகத்தான் குறைந்தது. இவ்விதமாக, நிதியாண்டுகள் 1947-லும் 1948-லும் நுகர்வோர் விலைகள் முறையே, 12 சதவீதப் புள்ளிகள், 7 சதவீதப் புள்ளிகள் என்னும் அளவில் உயர்ந்திருக்க, பொதுமக்கள் தொடர்பான ரொக்க உபரி (cash surplus) முறையே 6·6 பில்லியன் டாலராகவும், 8·9 பில்லியன் டாலராகவும் இருந்திருக் கிறது. இந்த நிதி நிலைமை அந்த காலத்திற்கு முற்றிலும் பொறுத்த மானதே. ஏனென்றால் ரொக்க உபரி, (பணவீக்கம் மிகுந்த அந்தக் காலத்தில்) குறிப்பிடத்தக்க பணவீக்க எதிர்ப்புச்சக்தி யாக விளங்கியிருக்கிறது. இத்தகைய சூழ்நிலையில் வரிக் குறைப்பு மசோதாவை நிறைவேற்றியது (ஒரு முழு ஆண்டில் அந்த மசோதாவால் குறையும் வரித்தொகை 5 பில்லியன் டாலராக இருக்கும் என்று மதிப்பிடப்பட்டது) பொருத்தமான

செயல் ஆகாது. ஆனால் நிதிஆண்டு 1949-ல் விலைகளில் ஒரு சிறிய வீழ்ச்சியும் நாட்டின் மொத்த ஆக்கத்தில் ஒரு வீழ்ச்சியும் ஏற்பட்டன. அந்த மசோதா நடைமுறைக்கு வந்த காலமும் இந்த நிகழ்ச்சிகளின் காலமும் தற்செயலாக ஒன்ருக இருந்த தால், அந்த மசோதா முழு வெற்றி பெற்றுவிட்டது. அதே சமயத்தில் மார்ஷல் வெளிநாட்டு உதவித் திட்டம் (Marshall foreign aid plan) தொடங்கப்பட்டதாலும் பாதுகாப்புச் செலவுக் காக வரவு செலவுத் திட்டத்தில் அதிகத் தொகை ஒதுக்கப்பட்ட தாலும், நிதி ஆண்டு 1948-இல் 8·9 பில்லியன் டாலராக இருந்த ரொக்க உபரி, நிதி ஆண்டு 1949-ல், 1 பில்லியன் டாலராகவும், நிதி ஆண்டு 1950-ல் —2·2 பில்லியன் டாலராகவும் குறைந்துவிட்டது. நாட்டின் மொத்த ஆக்கமானது, நான்கு பின்னிறக்கக் காலாண்டு களுக்குப் பிறகு, காலண்டர் ஆண்டு 1950-ன் முதல் காலாண்டில் உயரத் தொடங்கியது. அந்தக் காலத்தில் உருவாகிய பொருளா தாரப் போக்குகளின் எல்லைக்கோடுகள்மட்டுமே இங்கே சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. என்ருலும், இவற்றிலிருந்து ஓர் உண்மை தெளிவாகத் தெரிகிறது. அந்தக் காலத்துப் பொருளாதார நிலைமைக்களுக்கு ஏற்ற முறையில் நிதிக் கொள்கை வகுக்கப்பட்ட தால் அந்தக் கொள்கை வெற்றிபெற்றது என்று கூறுவதைவிட, அந்தக் கொள்கைக்கு ஏற்ற முறையில் அந்தக் காலப் பொருளா தார நிலைமைகள் தாமாகப் பொருந்திவந்ததால் அந்தக் கொள்கை வெற்றிபெற்றது என்று கூறுவதே பொருந்தும் என்பதே அந்த உண்மை.

1950-1952ஆம் ஆண்டுகளில் போர்நிலைமையும் பணவீக்கச் சக்திகளும் மீண்டும் ஏற்பட்டதால், வாணிபம் பெருகத் தொடங்கிவிட்டது; வரி வீதங்களும் உயர்த்தப்படலாயின. இவற் றிற்கு ஏற்ற முறையில் நிதி ஆண்டு 1951-ல் 7·6 பில்லியன் டாலர் ரொக்க உபரி ஏற்பட்டது. பாதுகாப்புச்செலவு, அதற்காக ஒதுக்கப் பட்ட தொகையைவிடக் குறைவாக ஆனதும் இதற்குரிய காரணங் களில் ஒன்ருகும். 1951-க்கும் 1952-க்கும் இடையே அச் செலவு இரட்டிப்பாக (22 பில்லியன் டாலரிலிருந்து 44 பில்லியன் டால ராக) உயர்ந்தபோது, வரிகளும் உயர்ந்ததால், 1952-ல் ஒத்தநிலை ரொக்க வரவுசெலவுத் திட்டத்தைப் (a balanced cash budget) பெறமுடிந்தது. நல்ஊழும் தனியார் சேமிப்பில் ஏற்பட்ட உயர்வும் உதவிபுரிந்தன என்ருலும், இந்தக் காலப் பிரிவில், பொருளா தார நிலைபேறு நல்ல முறையிலேயே அமைந்திருந்தது. பாதுகாப்புச் சக்திகளின் பெருக்கம் மிகுதியாக இருந்தும்கூட, நுகர்வோர் விலைகள், 1951ஐ விட 1952-ல் 2 சதவீதப் புள்ளிகளின் அளவுக்கே உயர்ந்திருந்தன.

1953–1954-ன் பின்னிறக்கம் தொடர்பாகக் கொள்கை வகுக்கப்பட்டபோதும், திட்டமிடுதலும் நற்பேறும் கைகோத்துக்கொண்டு அக்கொள்கையை வெற்றிபெற வைத்துவிட்டன. 1953-ல் கொரியா பற்றிய தொல்லைகளைக் குறைப்பதற்காக முயற்சி எடுக்கப்பட்ட அதே சமயத்தில் வரவுசெலவுத் திட்டச் செலவுகள் பெரிய அளவில் குறைக்கப்பட்டன. நிதிஆண்டு 1953-லிருந்து 1955க்குள் அவ்வாறு குறைக்கப்பட்ட தொகை 10 பில்லியன் டாலராகும். இச் செலவுக் குறைவு முழுமைக்கும் பாதுகாப்புச் செலவின் குறைவே காரணமாகும். இச் செலவுக் குறைவுத் திட்டம் வெளியிடப்பட்டதன் விளைவாகப் பொருளாதாரத்தில் பலவீனம் ஏற்பட்டு, காலண்டர் ஆண்டு 1953-ன் பிற்பாதியில் பின்னிறக்கம் உண்டாயிற்று. அவ்வாறு ஏற்பட்ட பின்னிறக்கம் 1954-ன் இறுதிக் கால்ஆண்டு வரையில் நீடித்தது. அதே சமயத்தில் செலவுக் குறைப்பின்கூடவே ஏற்பட்ட வரிக்குறைப்பானது, செலவுக் குறைப்பால் ஏற்பட்ட பொருளாதார விளைவுகளின் வேகத்தைத் தணித்தது. கொரியா தகராற்றின் விளைவாக ஏற்பட்ட அமிதலாப வரி 1953ஆம் ஆண்டின் இறுதியோடு கைவிடப்பட்டது. அதே சமயத்தில் சில ஆயத்தீர்வை வீதங்கள் (excise duty rates) குறைக்கப்பட்டன. தனியாள் வருமானவரி வீதங்களில் ஏறத்தாழ 10 சதவீதம் குறைக்கப்பட்டது. இந்த வரி மாறுதல்களின் முழு விளைவுகளும் உள்நாட்டு வருவாய் விதித்தொகுப்பு 1954-ல் (Internal Revenue Code of 1954) செய்யப்பட்ட மாறுதல்களின் விளைவுகளும் நிதியாண்டு 1955 வரையில் பொருளாதாரத்தால் உணரப்படவில்லை. ஆனால், நிதியாண்டு 1955க்குள், வரவு செலவுத் திட்ட வருவாயானது, 1953-ல் இருந்ததைவிட 4·4 பில்லியன் டாலர் குறைந்துவிட்டது. அதோடு பின்னிறக்கத்தின் காரணமாகப் பொறுப்புநிதிச் செலவுகள் (Trust fund expenditures) குறிப்பிடத்தக்க அளவு உயர்ந்துவிட்டன. ஆனால் இச் செலவுகள் வரவு செலவுத் திட்டச் செலவுகளில் சேர்க்கப்படுவதில்லை. இந்த நடவடிக்கைகள் அனைத்தின் விளைவாகவும், வருமானவரி அடித்தளத்தில் (income tax base) பின்னிறக்கம் காரணமாக ஏற்பட்ட குறைப்பின் விளைவாகவும், நிதி ஆண்டுகள் 1953, 1954, 1955-ல் முறையே, 5·3, 0·2, 7·2 பில்லியன் டாலர் ரொக்கப் பற்றுக்குறைகள் வரிசையாக ஏற்படலாயின. எல்லா நடவடிக்கைகளின் மொத்த விளைவுகள் ஒரு பின்னிறக்கக் காலத்தில் இருக்கவேண்டிய முறைப்படியே இருந்தன. ஆனால் 1954-லும், 1955-லும் வரவுசெலவுத் திட்டத்தில் செலவுக் குறைப்பு செய்யப்பட்டதால், பொருளாதார நிலைபேறுக்கத்தை முன்னிட்டு, அச் செலவை ஈடுசெய்யும் முறையில், விரிவடையும் பண ஆக்கக்கொள்கை (expansionist monetary policy) உள்ளிட்ட பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டி யிருந்தது.

1949—1954 ஆகிய ஆண்டுகளில் ஏற்பட்ட பின்னிறக்கங்களின் நிலைமைகளிலிருந்து ஓரளவு மாறுபட்ட நிலைமையில் 1957—1958-ன் பின்னிறக்கம் அமைந்திருந்தது. போருக்குப் பிந்திய பொருளாதாரச் சீரமைப்பு முடிவுற்ற நிலையோடும், போரின் காரணமாக நிறைவேற்றப்படாமலிருந்த நீடித்த நுகர்வுப் பொருள்களின் (durable consumer goods) தேவை மறைவுற்ற நிலையோடும் தொடர்புடையது, 1949-ல் தோன்றிய பின்னிறக்கம். 1954ஆம் ஆண்டின் பின்னிறக்கம் ஓரளவுக்கு, கொரியாபற்றிய பாதுகாப்புத் தயாரிப்பின் முடிவோடும், வரவுசெலவுத் திட்டத்தில் செய்யப்பட்ட பெரிய வெட்டுகளோடும் தொடர்புடையது. 1957 முழுவதிலும் வரவுசெலவுத் திட்டச்செலவைச் சிறிதளவு குறைப்பதுபற்றி அரைகுறை மனதோடு பேசப்பட்டது என்றாலும், அந்த ஆண்டில் ஏற்பட்டப் பின்னிறக்க நிலைமையானது, முதலீட்டு வீக்கத்தைத் (investment boom) தொடர்ந்து ஏற்படும் மாறுதல்கள் எவ்வாறு இருக்கும் என்பதற்கான தூய—தொன்மை நூற்படி அமைந்த எடுத்துக்காட்டு ஆகும் (pure classic example). ஆகவே, 1957ஆம் ஆண்டின் பின்னிறக்கமானது, பின்னிறக்க எதிர்ப்பு நிதிக்கொள்கையை உருவாக்குவதற்கு ஏற்றவகையில் பிற பின்னிறக்கங்களில் இருந்ததைவிட அதிக இயல்பான நிலைமையையும் சிக்கல்கள் குறைவான நிலைமையையும் பெற்றிருந்தது என்பது விளக்கமாகத்தெரிகிறது.[7] 1957-ன் இறுதிக் காலாண்டில் பின்னிறக்கம் தோன்றியபோது, முதலாவது ஸ்புட்னிக்கைச் சோவியத் ரஷ்யா விண்வெளியில் வெற்றிகரமாகப் பறக்கவிட்டதன் எதிர்விளைவு உள்ளிட்ட பல காரணங்களால், செலவுக் கொள்கையைத் தலைகீழாக மாற்றவேண்டும் என்று பலர் கருத்துத்தெரிவித்தார்கள். காலண்டர் ஆண்டு 1958-ன் முற்பாதியில் (நிதியாண்டு 1958-ன் பிற்பாதியில்) பின்னிறக்கமானது அதன் மிகக் கீழான நிலையை அடைந்தபோது, அந்த ஆண்டின் தொடக்கத்தில் மதிப்பிடப்பட்டதைவிடச் சிறிது குறைவான அளவில் வரவுசெலவுத் திட்டச் செலவு ஏற்பட்டது. இவ் வகையில் இந்த நெருக்கடிமிகுந்த நேரத்தில், பொருளாதாரத்திற்கு, வரவுசெலவுத் திட்டச் செலவுகளிலிருந்து எத்தகைய கூடுதல் ஆதரவும் கிடைக்கவில்லை. ஆனால், அடுத்த நிதிஆண்டில் அதிகப்படிச் செலவு செய்யப்படும் என்று எதிர்பார்க்கப்பட்ட நிலைமையால் வாணிப எதிர்நோக்குகளை உயர்த்தத்தக்க அறிவிப்புவிளைவு (announcement effect) ஏற்பட்டது. 1958-ன் முதல் காலாண்டில் பின்னிறக்கத்தின் ஆழம் மிகுதியானபோது, உடனடியாக வரிக்குறைப்பு ஏற்படவேண்டும் என்னும் கிளர்ச்சி ஒன்று தோன்றியது. ஆனால், அத்தகைய வரிக் குறைப்புச் செய்வதுபற்றிக் காங்கிரசோ அரசாங்க நிர்வாகத்

துறையோ தீவிரமாகச் சிந்தித்துப் பார்க்கவில்லை. அந்தக் காலப் பகுதியில் பொருளாதாரத்திற்கு நிதித்துறையிலிருந்து ஏதாவது உதவி கிடைத்திருந்தால், அந்த உதவி, வரித்துறையிலோ அல்லது செலவுத் துறையிலோ விரும்பிக் கையாளப்பட்ட நடவடிக்கையின் விளைவு அல்ல என்றும், நீண்டகாலக் கொள்கைகளில் இணைக்கப் பட்டுள்ள ' தானே இயங்கும் ' தன்மை படைத்த நிலைபேறுக்கச் சக்திகளின் விளைவே என்றும்தான் நாம் முடிவுசெய்யவேண்டும். அத்தகைய தானியங்கும் சக்திகளில் தலையாயது, நிகர வருமானத்தின் அடிப்படையில் அமைந்துள்ள வளர்வீத வரித் திட்டம் ஆகும். பின்னிறக்கத்தில் வருமானங்கள் குறைவதால், தனியாட்கள்மீதான வருமான வரிமூலம் நிதியாண்டு 1958-ல் கிடைத்த வருவாய், அதன் முந்திய ஆண்டில் கிடைத்ததைவிட 1 பில்லியன் டாலர் குறைவாகவும், 1958ஆம் ஆண்டின் முதற்பாதி முடிந்தபிறகு, அந்த ஆண்டில் அந்த வரியிலிருந்து கிடைக்கக்கூடிய தொகைஎன்று அதிகாரபூர்வமாக மதிப்பிடப்பட்ட தொகையை விட 2·5 பில்லியன் டாலர் குறைவாகவும் இருந்தது. கார்ப்பரேஷன் வருமானவரியின் வருவாய் முந்திய ஆண்டின் வருவாயைவிட 1·1 பில்லியன் டாலர் குறைவாக இருந்தது. நிதியாண்டு 1958-ல் செய்யப்பட்ட வரவுசெலவுத் திட்டச் செலவுகள், ஆண்டு நடுவில் செய்யப்பட்ட மதிப்பீட்டைவிட நடைமுறையில் குறைவாக இருந்துங்கூட, வரவுசெலவுத் திட்ட வருவாய் தானுகவே குறைந்துவிட்டதால், 0·4 பில்லியன் டாலர் பற்றுக்குறை இருக்கும் என்று எதிர்ப்பார்க்கப்பட்டதற்கு மாறாக நடைமுறையில் ஏற்பட்ட பற்றுக்குறை 2·8 பில்லியன் டாலராக உயர்ந்துவிட்டது. வரவுசெலவுத் திட்டத்திற்குப் புறம்பாக பொறுப்பு நிதிகள் (trust funds) வாயிலாகப் பொருளாதாரத்தில் நுழைக்கப்பட்ட ரொக்கச்செலுத்தல்களும், இந்தப் பற்றுக் குறையின் உயர்வுக்கு ஓரளவுக்குக் காரணமாக இருந்துள்ளன. வேலையின்மையின் இழப்பீட்டுப் பொறுப்பு நிதியின் வரவுகளும் செலுத்தல்களும் (receipts and payments of the unemployment compensation trust fund) நிதியாண்டு 1957-ல் 0·3 பில்லியன் டாலர் உபரியாக இருந்த நிலை மாறி, 1958-ல் 1·2 பில்லியன் டாலர் பற்றுக்குறையாக அமைந்துவிட்டன. முதிர்ந்த வயது மற்றும் எஞ்சியிருப்போரின் பொறுப்பு நிதியும் (old age and survivors trust fund) 0·7 பில்லியன் டாலர் அளவில் அதே திசையில் மாறி யிருக்கிறது.

1958-ன் முதற்பாதியில் பின்னிறக்கத்தை எதிர்த்து நடவடிக்கை எடுக்கப்பட்டதற்குப் பல காரணங்களைச் சுட்டிக்காட்டலாம். வேலையின்மை உயர்ந்துகொண்டும், தொழில் உற்பத்திக்

குறியீட்டு எண் குறைந்துகொண்டும் இருந்த அந்தக் காலப்பகுதி முழுவதிலும், நுகர்வோர் விலைகள் மேன்மேலும் உயர்ந்து கொண்டே இருந்தன. இயல்பாக இருக்கக்கூடிய நிலைமைக்கு முற்றிலும் மாறான ஒரு நிலைமையாக இது இருந்ததால், இந் நிலையில் தாக்கப்படவேண்டிய எதிரி வேலையின்மையா அல்லது பணவீக்கமா என்பதை முடிவுசெய்வதில், கொள்கை வகுக்கும் வட்டாரங்களில் சற்றுத் தடுமாற்றம் ஏற்பட்டது. விலைகள் இடைவிடாது உயர்ந்து வரும் இயக்கம் 1955-லிருந்து பொருளாதாரத்தின் தலைவலியாக இருந்துவருவதாலும், வேலையின்மையால் உருவாகியுள்ள நிலைமைகள் தொடர்ந்து இருக்குமானால் அவை விலையுயர்வை முறியடிக்கக்கூடும் ஆதலாலும், வேலையின்மையை விலையுயர்வை முறியடிப்பதற்கான கருவியாக ஏற்றுக்கொள்ளலாம் என்று சிலர் உண்மையிலேயே கருதினார்கள். பின்னிறக்கத்தில் விலைகள் உயரும் நிலைமை, பொருளாதாரத்தின் அடிப்படைப் பலத்தைக் காட்டும் அறிகுறியே என்றும், இந்த அறிகுறி இருப்பதால் அரசாங்க உதவி இல்லாமலே பின்னிறக்கமானது விரைவில் மாறிவிடும் என்றும் வேறு சிலர் உற்சாகமாகப் பேசினார்கள். அதோடு போருக்குப்பிந்திய கால வரலாற்றில், குறுகியகாலமே நீடித்திருந்த சிறிய பின்னிறக்கங்களே நிறைந்துள்ளன. இவற்றையெல்லாம் எண்ணிப்பார்த்து, தற்போதைய பின்னிறக்கத்தைத் தள்ளியபடி அடுத்துவரக்கூடிய வீக்க நிலையை (boom) எதிர்பார்க்கிற மனப்போக்கு பலரிடம் வளர்ந்து விட்டது. பின்னிறக்கமானது சிறிதுகால ஆயுளே உடையதாக இருக்குமானால், அதை எதிர்ப்பதற்காக மேற்கொள்ளப்படும் செலவுத்திட்டம் எதுவும், பின்னிறக்கம் முடிந்து மீட்சிநிலை வளர்ந்து கொண்டிருக்கும்போதுதான், தன் பயனை அளிக்கத்தொடங்கும். ஆனால் மீட்சிக்காலத்தின்போது அதன் பயன் வெளிப்படுமானால், அதனால் பணவீக்க நிலையே உண்டாகும். காலண்டர் ஆண்டு 1958-ன் நடுவில் தொடங்கும் நிதியாண்டு 1959-ல் செலவு குறிப்பிடத்தக்க அளவில் உயரும் என்பதும், வரவுகள் குறையும் என்பதும், 1958-ன் தொடக்க மாதங்களில் தெளிவாகத் தெரியலாயிற்று. 1958 ஜனவரியில் வெளியிடப்பட்ட நிதியாண்டு 1959-க்கான வரவுசெலவுத்திட்ட அறிக்கையில் அந்த நிதியாண்டுக்கான வரவாக மதிப்பிடப்பட்டிருந்த தொகை 74·4 பில்லியன் டாலராக இருந்தாலும், நடைமுறையில் அந்த நிதியாண்டில் கிடைத்த வரவு, 68·3 பில்லியன் டாலரே. அதுபோலவே வரவுசெலவுத் திட்டப்படிச் செலவின் மதிப்பீடு 73·9 பில்லியன் டாலர். ஆனால் நடைமுறையில்ஆன செலவு அதைவிட 6·8 பில்லியன் டாலரதிகம். அரை பில்லியன் டாலரைவிடச் சற்றே குறைவான உபரித்தொகை கிடைக்கும் என்று வரவுசெலவுத் திட்டத்தின் மதிப்பீடு தெரிவித்திருந்தாலும், நடைமுறையில், 12·4 பில்லியன் டாலர் பற்றாக்

குறையே ஏற்பட்டது. பின்னிறக்கத்தின் விளைவாக வரி அடிப் படையில் காலங்கடந்து ஏற்பட்ட மாறுதலையே வருவாய்க் குறைவு விளக்கிக் காட்டுகிறது. முதலில் செய்யப்பட்ட மதிப்பீடுகளை விடச் செலவுகள் மிகுதியாக அமைந்த தலையாய துறைகள், வேளாண்மை, வேலையின்மை இழப்பீட்டு விரிவு, வெளிநாட்டுக்கு உதவி, வீடுகட்டுதல், வானப்போக்கு வரவு (aviation) ஆகியவையே. இந்த நிலைமை வளர்ச்சிகளின் முழு வடிவமும் பின்னர்தான் தெளிவாகத் தெரியவந்தது என்றாலும், வாணிபத்தின் கீழ் இறக்கப் பருவத்திலேயே (period of business down swing) இவற்றின் அறிகுறிகள் தென்படலாயின. இவற்றால் வாணிப எதிர்நோக்குகள் வரவேற்கத்தக்க முறையில் பாதிக்கப்பட்டன என்பதிலும்ஐயமில்லை

நிலைபேறுக்கத்திற்கு நிதிக் கொள்கையைப் பயன்படுத்துவது பற்றிய கருத்துகளின் இன்றைய நிலையைப்பற்றிச் சில பொதுவான முடிவுகளைச்செய்ய, போருக்குப் பிந்திய கால நிதிக் கொள்கைபற்றிய இந்த சுருங்கிய மதிப்புரை இடந்தருவதுபோல் தோன்றலாம். நிலைபேறுக்க நோக்கத்தை நிறைவேற்றுவதோடு வேறு பல அரசியல், பொருளாதார நோக்கங்களையும் நிறைவேற்ற வேண்டிய இன்றியமையாமை இருக்கிறது. பொதுவாக எல்லா அரசாங்கங்களும்—சிறப்பாக மைய அரசாங்கம், பொருளாதாரத் துறையில் அளவுக்குமீறித் தலையிடுவது தடுக்கப்படவேண்டும் என்னும் நீண்டகாலக் குறிக்கோள் பெரும்பாலோரால் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. பொதுவாக எல்லாச் சமயங்களிலும், சிறப்பாக நிலைபேறின்மை தற்காலிகமானதாகவும் மென்மையான தாகவும் இருக்கும் சமயங்களிலும், நிதிக் கொள்கை கையாளப் படக்கூடிய அளவை, இந்த நீண்ட காலக் குறிக்கோள், குறைத்து விடுகிறது. நிதிக்கொள்கையானது அளவுக்குமீறிய முறையில் ஓர் ஒருவழிப் பாதையாக அமைந்துவிடுகிறது என்றும், நல்ல காலங் களில் (செழுமைக் காலங்களில்) உபரியைப் பெறத்தக்க ஏற்பாடு களைச் செய்வதைவிடத் தீய காலங்களில் (மந்த காலங்களில்) பற்றுக்குறை ஏற்பாடுகளைச் செய்வது அரசியல் துறையில் மிகவும் எளிதான செயலாக இருக்கிறது என்றும் கருதப்படுகிற சிந்தனை அலைகள், நிதிக்கொள்கை கையாளப்படுவதைப் பெரிதும் தடுத்து விடுகின்றன. பொருளாதாரத்தின் எதிர்காலப்போக்கு எவ்வாறு அமையும் என்பதை திட்டவட்டமாக முன்னறிந்து தெரிவிக்க முடியாதிருப்பதால், பல சமயங்களில் எந்த வகையான நிதிக் கொள்கையைக் கையாள்வது என்பதுபற்றிய குழப்பம் ஏற்பட்டு விடுகிறது. இத்தகைய குழப்ப நிலையில் எந்த வகையான நிதிக் கொள்கையையும் கையாளாமல் அமைந்துகிடப்பதே நலம் என்னும் கருத்து தோன்றிவிடுகிறது.

நிலைபேருக்கும் நிதிக்கொள்கையைப் பயன்படுத்தும்போது இந்த நடைமுறைச் சிக்கல்கள் யாவும் தோன்றுகின்றன என்றாலும் இத்தனைக்கும் இடையே, ஓர் உண்மை தெள்ளத்தெளிவாக விளங்குகிறது. பொருளாதார நடவடிக்கையின் அளவை நிதிக் கொள்கையால் மாற்றியமைக்க முடியும்—மாற்றியமைக்கிறது என்னும் கருத்து பரவலாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது என்பதே அந்த உண்மை. குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட எந்த நிதிக்கொள்கையைக் கையாள்வது என்பதில் கருத்துவேற்றுமை இருந்தாலும், நிதிக்கொள்கையால் மொத்தத் தேவையில் (aggregate demand) மாறுதலை ஏற்படுத்தமுடியும் என்பதில் கருத்து வேறுபாடு இருப்பதில்லை. இந்த ஒருமித்த கருத்தின் வளர்ச்சிக்கு இரண்டு காரணங்களைச் சுட்டிக்காட்டமுடியும். அரசாங்கப் பணிகளின் வளர்ச்சியால், நாட்டின் பொருளாதாரத்தில் அரசாங்க நிதி நடவடிக்கைகள் மிகப்பெரிய இடத்தைப் பெற்றுவிட்டிருப்பது, முதல் காரணமாகும். பொருளாதார நடவடிக்கையின் அளவை உருவாக்கவும் மாற்றியமைக்கவும் ஆற்றல்படைத்த சக்திகள் பற்றிய கோட்பாடுகளின் தொகுதி, ஒரு தலைமுறைக்குள், பரவலாக ஒப்புக்கொள்ளத்தக்க வகையிலும் பரவலாகக் கையாளத் தக்க முறையிலும் வளர்ச்சியடைந்திருப்பது, இரண்டாவது காரண மாகும்.

## மேலும் படித்தற்கு உரியவை

1. பெர்ட் ஜி. ஹிக்மான் (Bert G. Hickman), 'Federal Spending and the Stability of the Postwar Economy'. இது, பொருளாதார இணைக்குழுவால்(Joint Economic Committee)வெளியிடப்பட்டுள்ள, 'Federal Expenditure Policy for Economic Growth and Stability' (Papers submitted by Panelists before the Subcommittee on Fiscal Policy), என்னும் நூலில் உள்ளது. (வாஷிங்டன், 1957, பக்கங்கள் 357 - 81).

இது கூட்டரசாங்கத்தின் போருக்குப்பிந்திய நிதிக் கொள் கையை விளக்குகிறது. மொத்தத் தேவையில், செலவு மிகவும் நிலையற்ற ஒரு காரணியாக இருக்கிறது என்பதையும், இதற்கு ஒரு காரணம், செலவின் தலையாய நோக்கம் பாதுகாப்பே தவிர நிலைபேருக்கம் அன்று என்பதையும் இது விள்க்குகிறது.

2. ஆல்வின் எச். ஹான்சன் (Alvin H. Hansen), 'Fiscal Policy and Business Cycle', நியூயார்க், நார்ட்டன், 1941, அத்தியாயம் 12.

பொதுவான ஈடுசெய் செலவுக் கொள்கை, குழாய் நிரப்புதல் என்னும் சிறப்புக் கொள்கை—இரண்டையும் விளக்குகிறது.

3. ரிச்சர்ட் ஏ. மஸ்கிரேவ் (Richard A. Musgrave), 'Fiscal Policy, Stability and Full Employment'. இது 'Public Finance and Full Employment' என்னும் நூலில் (வாஷிங்டன், ஐக்கிய ரிசர்வ் முறையின் ஆளுநர்குழு, Postwar Economic Studies, No. 3, 1945) உள்ளது.

வேலை நிறைவை அடைவதுபற்றிய பொதுக் கோட்பாடுகளைப் பற்றிய இப் பகுத்தாய்வில், வரவு செலவுத்திட்ட மாற்றுமுறைகள் பற்றிச் சிறப்பாக ஆராயப்பட்டுள்ளது.

## 5 ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. செனெடார் ஓ' மஹோனி (Senator O' Mahoney) என்பார், பாங்கு மற்றும் செலாவணிபற்றிய செனெட் குழுவின் (The Senate Committee on Banking and Currencies) ஒரு துணைக்குழுவின்முன் சாட்சியம் அளிக்கையில், (U.S. Senate, S. 380, 79ஆவது காங்கிரஸ், 1ஆவது கூட்டத்தொடர், ஜூலை 30, 1945), 1929 முதல் 1940 வரையுள்ள காலத்தில், நாட்டின் வருமானம் வேலை நிறைவு அளவைவிடக் குறைவாக இருந்ததால் உற்பத்தியில் ஏற்பட்ட இழப்பின் மதிப்பு 355 பில்லியன் டாலராக இருந்தது என்று, சென்சஸ் பீரோவிலிருந்து புள்ளிவிவரங்களை மேற்கோளாகக் காட்டினர்.

2. எடுத்துக்காட்டாக, 1956–57-ன் முதலீட்டு வீக்கத்தைப்பற்றிக் குறிப்பிடாமல், 1957–58-ன் பின்னிறக்கம் – வேலையின்மை ஆகியவற்றை விளக்கமுடியாது.

3. 'முன்னோக்குகள்' (Anticipations) என்னும் சொல்லை, ஜேம்ஸ், டபள்யூ. ஆங்கெல் (James. W. Angell) என்பார், தம்முடைய 'Investment and Business Cycles' என்னும் நூலில் (நியூயார்க், மெக்ராஹில், 1941, பக்கம் 15) எந்தப் பொருளில் பயன்படுத்தியுள்ளாரோ அந்தப் பொருளில்தான் இங்குப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. அது ஒரு தொகுப்புக் கருத்தாகும் (collective concept). அது, பொருளாதார எதிர்காலம்பற்றிய நம்பிக்கை நிறைந்த மனப் போக்கு, நீர்மை நிதிகளுக்கான நடப்புத்தேவை, மரபு, கல்வி, திறமை ஆகிய வற்றின்மீது கூட்டாகச் செயல்படுகிற பலதிறச் செல்வாக்குகளைக் குறிக்கும் ஒரு சொல்லாகும். உற்பத்திசெய்வோர், நுகர்வோர் ஆகிய இரு சாராரின் முன்னோக்குகளையும் அது குறிக்கிறது.

4. ஐக்கிய ரிசர்வ் பாங்குகள், வெளி அங்காடிகளில் கடன்பத்திரங்களை வாங்குவதே, இந்த நோக்கத்தை நிறைவேற்றுவதற்கான தலையாய முறை யாகும். இந்தக் கடன்பத்திரங்களை உறுப்பினர் பாங்குகளிலிருந்து, அல்லது தனியாட்கள் அல்லது வாணிப நிறுவனங்களிலிருந்து வாங்கலாம். அப்படி வாங்குவதன் மூலமாகப் பாங்குகளுக்கோ ஏனையோருக்கோ தரப்படுகிற ஐக்கிய ரிசர்வ் நிதிகள், இறுதியில் உறுப்பினர் பாங்குகளை அடைகின்றன. உறுப்பினர் பாங்குகள் இந்தப் புதிய நிதிகளை ஐக்கிய ரிசர்வ் பாங்குகளில் வைப்புச் செய்யும்போது, புதிய சட்டமுறைக் காப்பிருப்புகள் படைக்கப்படுகின்றன. காப்பிருப்புத் தேவைகள் குறைக்கப்படுவதும் மற்றொரு சாத்தியக்கூறாகும்.

5. ஜேம்ஸ் டபள்யூ ஆங்கெல் என்பாரின் 'Investment and Business Cycles' என்னும் நூலையும் (நியூயார்க், மக்ராஹில், 1941, பக்கங்கள் 221-234), ஷெர்வுட் எம். ஃபைன் (Sherwood M. Fine) என்பாரின் 'Public Spending and Postwar Economic Policy' என்னும் நூலையும் (நியூயார்க், கொலம்பியா, 1944, அத்தியாயம் 6) காண்க.

6. பொதுவாக ஈடுசெய் நிதிக்கொள்கையில் மிகுந்த ஆர்வம் உடையவர்களாகிய லிபரல்கள், 1959-ல், செலவுக் குறைப்பை, நிலைபேருக்கம் அல்லாத தேவைகள் அதிக முக்கியம் உடையவை என்னும் காரணத்தை முன்வைத்து, எதிர்த்தார்கள். செலவைக் குறைப்பதால் நாட்டின் பாதுகாப்புக்கு இடையூறு ஏற்படலாம் என்று அஞ்சிய அவர்கள், படைத்துறைக்கும் வெளிநாட்டு உதவிக்குமான செலவுகள் உயர்வதைப் பொதுவாக ஆதரித்தார்கள். அந்தச் செலவு உயர்வை ஈடுசெய்யும் வகையில், வரிகளை உயர்த்தலாம் என்றும், பணக் குறைப்புக் கொள்கையைக் கையாளலாம் என்றும், அவர்கள் கருதினார்கள். ஆனால், அதே சமயத்தில் சிலர், பணவீக்க ஆபத்துக்கு அளவுக்குமீறிய முக்கியத்துவம் தரப்படுகிறது என்றும், உயர்ந்தவீதப் பொருளாதார வளர்ச்சி ஏற்பட வேண்டுமானால் பெருக்கத்தன்மையுள்ள நிதிக்கொள்கையும் பணக்கொள்கையும் கையாளப்படவேண்டும் என்றும் கருதினார்கள்.

7. மோட்டார்கார் மற்றும் கருவிகளின் அங்காடிகளிலும், வீடுகட்டும் தொழிலிலும், நீண்டகால அளவில் ஏற்பட்ட விளைவுகள் (secular reactions), ஓரளவுக்கு, துணைபுரிவனவாகவும் இயல்பு அல்லாதனவாகவும் இருந்தன.

---

# 6. நிலைபேருக்கத்திற்கான நிதித் திட்டங்கள்

தனியார் துறையையே பெரும்பகுதியாகக் கொண்டுள்ள ஒரு பொருளாதாரத்தில் நிலைபேருக்கம் செய்வதற்கு மூன்றுவகையான நிதிக் கருவிகள் இருக்கின்றன. அவையாவன : 1. அரசாங்கச் செலவின் அளவு 2. வரி முதலிய வருவாய்களின் அளவு 3. அரசாங்கம் கடன் வாங்கும் முறைகள். இப் புத்தகத்தில் இதுவரை நாம் செய்த பகுத்தாய்வின் பெரும்பகுதி, செலவுத் துறையைப் பொறுத்ததாகவே இருந்திருக்கிறது. மொத்த அரசாங்கச் செலவில் ஏற்படும் ஒரு மாறுதல், பொருள்களுக்கும் ஊழியங்களுக்குமான மொத்தத் தேவையில் அதே வகையான ஒரு மாறுதலை ஏற்படுத்துகிறது. நடப்பு உற்பத்தியை (current output) அரசாங்கம் விலைக்கு வாங்கும்போது இந்த மாற்றம் நேர்முகமாக நிகழ்கிறது. எல்லா நிலைகளிலும் உள்ள அரசாங்கங்களின் வரவுசெலவுத் திட்டச் செலவுகளின் பெரும்பகுதி, இந்த வகையைச் சேர்ந்ததுதான். (ரொக்க) வரவுசெலவுத் திட்டச் செலவுகளின் மிச்சப்பகுதி மாற்றுச் செலுத்தல்களைக் (transfer payments) கொண்டதாகும். பொருள்களையும் ஊழியங்களையும் தனியார் வாங்கும் நிலையை இத்தகைய செலுத்தல்கள் அடிக்கடி உண்டாக்குகின்றன.

அரசாங்க வருவாய்களை உயர்த்த, கருவிகளைப் பயன்படுத்துவது, நடப்புக் காலத்தில் உற்பத்தியான பொருள்களுக்கும் ஊழியங்களுக்குமான மொத்தத் தேவையை மாற்றியமைக்கவும் செய்கிறது. மிகுதியான அல்லது குறைவான – ஆழமான அல்லது அகலமான வரிவிதிப்பின் மூலமாகத் தனியாரிடமிருந்து எடுக்கப்படும் வரித் தொகையின் மொத்த அளவு மாறுபடுமானால், செலவிடப்படக் கூடிய வருமானத்தின் (disposable income) அளவு, குறுகிய காலத்தில், அதன் எதிர்த்திசையில் மாறுபடும். ஏனைய நிலைகள் யாவும் மாறாமல் இருந்தால், வரி விதிப்பில் ஏற்படும் உயர்வானது செலவிடக்கூடிய வருமானத்தின் அளவைக் குறைத்துவிடும். அப்படிக் குறைப்பதால் வரி செலுத்துவோர் பொருள்களுக்கும் ஊழியங்

களுக்கும் எழுப்பும் தேவையையும் குறைத்துவிடும். வரிவிதிப்பில் குறைவு ஏற்பட்டால் இதற்கு நேர்மாறான விளைவுகள் ஏற்படும். இவ்வாறாக, வருவாய்க் கருவிகள், செலவுக் கருவிகளிலிருந்து முற்றிலும் வேறான, நிலைபேறுக்கக் கருவிகளின் தொகுப்பு ஆகும்.

அரசாங்கம் கடனை எழுப்புவதும் திருப்பித் தருவதுமாகிய செயல்கள், அவற்றின் அளவில், வரியிலிருந்தும் செலவிலிருந்தும் வேறுபட்ட நிலைபேறுக்கக் கருவிகளாக ஆகமாட்டா. கடன் பெறுவது வரிக் கருவிகளும் செலவுக் கருவிகளும் பயன்படுத்தப் படும் அளவின் ஒரு விளைவாகவே இருக்கிறது. கடனைத் திருப்பித் தருவதும் அத்தகைய ஒரு விளைவாக இருக்கக்கூடும். ஆனால் அரசாங்கம் கடன் எழுப்பும் முறைகளும், கடன் நிதிகளின் பிறப்பிடங்களும், மொத்தத் தேவையை மாற்றியமைப்பதற்காக (வரியின் தன்மையிலிருந்தும் செலவின் தன்மையிலிருந்தும் வேறு பட்ட) சுயேச்சையான முறையில் கையாளப்படக்கூடும். அதுபோலவே, நடப்பு உபரியிலிருந்து கடனைத் திருப்பித் தருவதா வேண்டாமா என்பதுபற்றிய முடிவும், கடன் கொடுத்தவர்களில் எந்த வகையினருக்குத் திருப்பித்தருவது என்பதுபற்றிய முடிவும், பொருளாதார நிலைமைகளைச் சுயேச்சையான முறையில் மாற்றி அமைப்பதற்குரிய வாய்ப்புகளைத் தருகின்றன.

அரசாங்கக் கடனும் அதன் நிர்வாகமும் 8, 9, 10 ஆகிய அத்தி யாயங்களின் ஆய்வுப் பொருள்களாக உள்ளன. ஆகவே கடன் தொடர்பான நிலைபேறுக்கக் கருவிகள்பற்றிய ஆராய்ச்சியைத் தற்போதைக்கு ஒத்திவைத்துவிட்டு, ஏனைய இருவகை நிலைபேறுக்கக் கருவிகளை முதலில் கவனிப்போம். செலவில் செய்யப்படும் மாறுதல், அந்த மாறுதலின் விளைவாக மொத்தத் தேவையில் ஏற்படும் மாற்றங்கள் ஆகியவைபற்றிய பொதுவான கோட்பாடுகளை முந்திய அத்தியாயங்களில் பகுத்து ஆய்ந்துள்ளோம். ஆகவே, செலவுத் தொடர்பான நிலைபேறுக்கக் கருவிகளைப் பொறுத்தவரையில் நிலைபேறின்மையின் பல்வேறு நிலைகளில் சிறப்பான விளைவுகளைத் தரவல்ல குறிப்பிட்ட செலவுத்திட்டங்களைத் தேர்ந்தெடுப்பது எப்படி என்பதுபற்றியும், செலவுக்கொள்கைக்கு மிக அதிகமான வெற்றியைத் தேடித்தரத்தக்க முறையில் திட்டமிடுதல் எப்படி என்பதுபற்றியும் மட்டுமே நாம் இங்கே, சிறப்பாகக் கவனம் செலுத்தவேண்டும். பல்வேறு வரிகளின் வடிவங்களையும், அவற்றின் பொருளாதார விளைவுகளையும்பற்றி விளக்கிக்கூறாத இந்த நிலையில், குறிப்பிட்ட வரிகளின் நிலைபேறுக்கத் தன்மைகளைப்பற்றி விளக்க மாக ஆய்ந்து அறிவது இயலாது. என்றாலும், வரிக்கொள்கை யையும் நிலைபேற்றையும் பொறுத்த சில பொதுவான பயனுள்ள விதிமுறைகளை வகுத்துக்கூற இயலும்.

## மொத்தத் தேவையையும் வேலையையும் தூண்டவல்ல கொள்கைகள் (Policies to Stimulate Aggregate Demand and Employment)

ஒப்புக்கொள்ளத்தக்க அளவில் வேலையையும் உற்பத்தியையும் உருவாக்குவதற்கு மொத்தத்தேவை போதுமானஅளவில் இல்லாமல் இருந்தால், அரசாங்கச் செலவை உயர்த்தும் அல்லது வரியைக் குறைக்கும் அல்லது, இரண்டும் செய்யவேண்டிய கொள்கை கையாளப்படவேண்டும். எந்த அளவுக்கு இந்தக் கொள்கைகள் கையாளப்படும் என்பது, எந்த அளவுக்கு மொத்தத் தேவை தற்போது குறைவாக இருக்கிறது அல்லது எதிர்காலத்தில் குறைவாக இருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது என்பதைப் பொறுத்திருக்கிறது. பொருளாதாரச் சிக்கலைப் பொருளாதார முறைப்படித் தீர்ப்பதற்கு அரசியல் துறையிலிருந்தோ பிற கோட்பாடுகளின் கண்ணோட்டத்திலிருந்தோ எத்தகைய எதிர்ப்பும் இல்லை என்று வைத்துக்கொண்டால்கூட, பின்னிறக்கம் தொடங்கியவுடன், எதிர்பார்க்கப்படுகிற பொருளாதார விழ்ச்சி எந்த அளவுடையதாக இருக்கும் என்பதை முடிவுசெய்வதில் பொருளாதார வல்லுநர்களிடையேகூட குறிப்பிடத்தக்க அளவில் கருத்து வேற்றுமையும் குழப்பமும் இருக்கும் என்று நாம் எதிர்பார்க்கவேண்டியதே முறையாகும். பொருளாதாரவீழ்ச்சி மிகுதியான அளவில் இருக்கும் என்று எதிர்பார்ப்பவர்கள், மாபெரும் திட்டங்கள் தொடங்கவேண்டுமென்று வாதாடுவார்கள். அந்த அளவு வீழ்ச்சியை எதிர்பாராதவர்கள், வரியில் அல்லது செலவில் சிறிய மாறுதல்கள் செய்யவேண்டும் என்கிற ஆய்வுரையிலிருந்து நிலைமை மேலும் தெளிவாகும்வரை காத்திருந்துபார்ப்பதே நல்லது என்பதுவரையுள்ள பல ஆலோசனைகளைத் தரக்கூடும். ஆகவே, பின்னிறக்கம் வருவதற்கு முன்னாலேயே அதற்குரிய கொள்கை நடவடிக்கைகளை மேற்கொள்ளமுடியும்என்று எதிர்பார்க்க இயலாது. இயல்பாக எடுக்கப்படவேண்டிய நிதிநடவடிக்கையைவிட மிகுதியான அளவில் அது எடுக்கப்படவேண்டிய அவசியத்தை உண்டாக்கத்தக்க முறையில், நடவடிக்கையின் தன்மைபற்றிய கருத்துப்போராட்டம் நீண்டுசெல்லாமல் இருந்தால், அதுவே ஒரு நற்பேறு என்று சொல்லிவிடலாம்.

**செலவுத் திட்டங்கள் (Expenditure pragram) :** மொத்தத் தேவையை அதிகப்படுத்துவதற்கான செலவுத் திட்டங்கள் வெற்றிகரமான முறையில் பயன்படவேண்வடுமானால் திட்டமிடுதல் (planning) இன்றியமையாதது. இத்தகைய திட்டங்களைக் குறுகியகால அளவில் உருவாக்கிவிடமுடியாது. ஏனென்றால், அப்படி அவை உருவாக்கப்பட்டால், பயன்மிக்க சமூக

மூலதனத்தை அளிக்கும் நோக்கத்தைத் தற்செயலாக அவை நிறைவேற்றுமேதவிர, நிலைபேறுக்கும் நோக்கத்தை அவற்றால் நிறைவேற்றமுடியாது. ஏற்பாடுகளைத் திட்டமிடுவது என்றால், பல்வேறு கட்டங்களில் முன்கூட்டியே முடிவுகள் செய்யப்பட்டிருக்கும் என்று பொருள். திட்டங்களைத் தயாரிக்கும்போது, வாணிப வீழ்ச்சியை உண்டாக்கும் சக்திகளின் பலவகைத் தொகுப்புகளுக்கு இடையே, பல்வேறு மாற்றுத் திட்டங்களால் ஏற்படக்கூடிய லீவரேஜ் விளைவுகளை மதிப்பிட்டு அறியவேண்டும். ஒரு பின்னிறக்கமானது குறிப்பிட்ட தொழில்களில் மட்டும் மிகுந்த அழுத்தம் உடையதாக இருக்குமானால், பொதுவான பொருளாதார வீழ்ச்சிக்கு மாற்றாக உருவாக்கப்பட்ட திட்டம் அந்தப் பின்னிறக்கத்திற்குப் பயன்படாது. வேலையின்மையானது எந்தெந்த வட்டாரங்களில் எந்த அளவில் பரவியிருக்கிறது என்பதுபற்றிய புள்ளிவிவரம், குறிப்பிட்ட கொள்கைகளைத் தேர்ந்தெடுப்பதற்குப் பெரிதும் பயன்படும். குறிப்பிட்ட திட்டங்கள் நீண்டகாலத்திற்குப் பயன்படும் தன்மையைத் தம் இயல்பாகப் பெற்றிருக்கின்றனவா என்பதும் இத் தொடர்பில் கவனிக்கப்படவேண்டிய ஒரு நிலைமையே. இந்தக் கோணத்திலிருந்து பார்த்தால், நீச்சல் குளங்களைவிடப் பள்ளிக்கூடக் கட்டிடங்கள் அதிக முக்கியத்துவம் வாய்ந்தவை ஆகின்றன. அதுபோலவே, அரசாங்கச் செலுத்தல்களால் அவற்றைப் பெறுவோரின் தன்மானம் எவ்வாறு பாதிக்கப்படுகிறது என்னும் கேள்வியும், முறைப்படித் தனியார் வாணிபங்களுக்கு விடப்படவேண்டிய துறைகளில் அரசாங்கம் நுழையாதிருத்தல், வன்மைமிகுந்த வாணிபப் போட்டியை வளர்த்தல் ஆகிய ஏற்பாடுகளும் இன்றியமையாதன. உயர்ந்த மட்டத்தில் செய்யப்படவேண்டிய இந்த முடிவுகளைத்தவிர, திட்டமிடும்போது, சில நடைமுறை ஏற்பாடுகளையும் செய்யவேண்டியிருக்கும். எடுத்துக்காட்டாக, ஒவ்வொரு திட்டத்திற்கும் ஒரு நகல்திட்டம் தயாரிக்கப்படவேண்டும்; நிர்வாக அமைப்பும் உருவாக்கப்படவேண்டும்.

பின்னிறக்கத்திற்கு உரிய ஈடுசெய் செலவுத் திட்டங்களை உருவாக்குவதற்கும் தேர்ந்தெடுப்பதற்கும் ஏற்ற சில பொதுவான விதிமுறைகளை நாம் வகுக்கமுடியும். முதலாவதாக, எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவில் அரசாங்கச் செலவு பங்கெடுத்துக்கொண்டால் பயனுள்ளதாக இருக்கும். எவ்வளவு விரைவில் அரசாங்கச் செலவானது வருமான ஓட்டத்தில் நடைமுறையில் இணைந்துவிடுகிறதோ, அவ்வளவு அதிகமாக அது, பொருளாதாரத்தைக் கீழ்நோக்கி இழுக்கும் சக்திகள் திரண்டு குவிவதையும் (accumulation), ஒன்றை ஒன்று வலுப்படுத்திக்

கொள்வதையும் தடுக்கமுடியும். அரசாங்கச் செலவானது, உண்மையான, வருமானத்தை உற்பத்திசெய்யும் விளைவைமட்டும் பெற்றிருக்கவில்லை ; வாணிப முன்நோக்குகளின்மீதான அறிவிப்பு விளைவையும் (announcement effect upon business anticipations) பெற்றிருக்கிறது. ஆகவே, விரைவான நடவடிக்கை, நியாயமான எல்லைக்குள் வாணிப வீழ்ச்சியை நிறுத்திவைக்கமுடியும் ; இயல்பான மீட்சிச் சக்திகள் விரைவில் பயன்தருவனவாக மாற இடமளிக்கும்.

செலவின் விளைவுகள் விரைவில் ஏற்படவேண்டும் என்பது குறிக்கோளாக இருப்பதால், வாணிப வீழ்ச்சியின்போது, முதலில் பெரும்பாலும் பெரிய திட்டங்கள் மேற்கொள்ளப்படமாட்டா. எவ்வளவுதான் முன்னதாகவும் சிறப்பாகவும் திட்டமிட்டிருந்தாலும், பெரிய திட்டங்களைப் பொறுத்தவரையில், அவற்றை மேற்கொள்வது என்கிற முடிவுசெய்யப்பட்ட நேரத்திற்கும், அவற்றிற்கான பணத்தைச் செலுத்துகிற நேரத்திற்கும் இடையே நீண்ட ஓர் இடைவெளி ஏற்பட்டுவிடும். நகல் திட்டங்களும் (blueprints) விவரக் குறிப்புகளும் (specifications) முன்கூட்டியே தயாரிக்கப்பட்டிருந்தாலும், ஒப்ப அறிவிப்புகளைப் (bids) பெறுவதிலும் ஒப்பந்தங்களை (contracts) வழங்குவதிலும், ஒப்பந்தக்காரர்களும் துணை ஒப்பந்தக்காரர்களும் (contractors and sub-contractors) வேலை நடப்பதற்கான அமைப்பை உருவாக்குவதிலும், முன் பணம் செலுத்துவதற்குத் தேவையான அளவு வேலை நடப்பதிலும், குறிப்பிடத்தக்க காலம் கடந்துவிடுவது இயற்கை. ஆகவே, பல வகையான சிறிய திட்டங்களைத் தயாரித்துவைப்பது, இன்றியமையாததாகிறது. இந்தக் கோணத்திலிருந்து பார்த்தால், ஏற்கெனவே நடைமுறையில் உள்ள திட்டங்களின் அளவை விரிவாக்குவதற்கான வாய்ப்பு இருக்குமானால், அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்வது, சிறந்த ஏற்பாடாக அமையும்.

அரசாங்கத்தின் பல திட்டங்கள் 'திறந்த முனை' (open end) உடையனவாக இருக்கின்றன. அதாவது, அந்தத் திட்டங்களுக்காகச் செலவிடக்கூடிய தொகையின் அளவு, அந்தத் திட்டங்களில், பணியாற்றுவதற்கு உரிய தகுதிபெற்றுள்ள ஆட்களின் எண்ணிக்கையை அல்லது அந்தத் திட்டங்களில் இணைக்கப்படுவதற்கு உரிய தகுதிபெற்றுள்ள ஏற்பாடுகளின் எண்ணிக்கையைப் பொறுத்திருக்கிறது. வேலையின்மை இழப்புஈடு, இதற்குரிய தலைசிறந்த எடுத்துக்காட்டு ஆகும். இதன் நிர்வாக அமைப்பு தொடர்ந்து இருப்பதால், இதன்கீழ் உதவி பெறக்கூடிய வேலையற்றோரின் எண்ணிக்கை வளர வளர, இதன்கீழ்த் தரப்படும் மொத்தச் செலுத்தல்கள் தாமாகவே பெருகிவிடுகின்றன. அதோடு, நெருக்கடிக் காலம் முழுவதிலும்

வாராந்திர உதவிகளின் (weekly benefits) அளவு உயர்த்தப்பட்டு, இயல்பாகத் தரப்படக்கூடிய கால எல்லேக்குப்பிறகும் அவை தொடர்ந்து தரப்படுமானுல், வேலேயின்மை இழப்பீட்டின் மொத்தச் செலவு, மிக விரைவில் இன்னும் அதிகமாக உயர்ந்து விடும். ஏனேய பொது உதவித் திட்டங்களேயும் (public assistance programs) இதே முறையில் பயன்படுத்தமுடியும். அரசாங்கத்தின் பல்வேறு மானியத் திட்டங்கள் (grant programs), அவற்றிற்காக வரையறுக்கப்பட்டுள்ள நிதி ஒதுக்கீடுகளின் (appropriations) அளவு காரணமாக, ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஒரு குறிப்பிட்ட அளவுக்குமேல் செலவிடமுடியாத நிலேயில் உள்ளன. கிடைக்கக் கூடிய நிதிகளில் உயர்வு ஏற்பட்டால், ஏற்கெனவே திட்டமிட்டுப் போதுமான நிதி இல்லாததால் நின்றுபோயுள்ள திட்டங்கள் பலவற்றை உடனடியாக மேற்கொள்ளமுடியும். தற்போதுள்ள சிப்பந்திகளே நிறைவேற்றக்கூடிய--ஆனுல் வரவுசெலவுத் திட்டத்தில் அவற்றிற்காக நிதி ஒதுக்கப்படாததால் ஒத்திவைக்கப் பட்டுள்ள நூற்றுக்கணக்கான சிறிய திட்டங்களே, அரசாங்கத்தின் சாதாரண நிர்வாக அமைப்புகள் எந்த நேரத்திலும் புதுப்பிக்க முடியும்.

பெரிய பொதுப் பணித் திட்டங்களின் (public works projects) நிலே யாது? அவற்றின் தலேயாய குறைபாடு, அவை நீண்ட கால அளவில் நிறைவேற்றக் கூடியனவாய் இருக்கின்றன என்பதே. அவை முன்னதாகவே திட்டமிட்டு, அவற்றைத் தொடங்குவதில் ஏற்படக்கூடிய தாமதம் மிகக் குறைந்த அளவுடையதாக ஆக்கப் பட்டாலும் அவற்றைக் கட்டி முடிப்பதற்கு நீண்டகாலம் பிடிக் கிறது. வேலேக் குறைவின் காலம் (period of under-employment) குறுகியதாக இருந்தால், வாணிபச் சுழலின் மேல்நோக்கிய திருப்பம் தொடங்கிய பின்னரே, பெரிய திட்டங்களுக்கான செலவின் விளேவு பொருளாதாரத்தில் தென்படும். ஆனுல், அந்த நிலேயில், பணவீக்கப் போக்கைக் குறைப்பதற்காக மொத்தத் தேவையைத் தணிப்பதே குறிக்கோளாக இருக்கமுடியும். பின்னிறக்கம் தொடங்கியவுடன், அது தொடர்ந்து இருக்கக்கூடிய காலத்தின் அளவையோ, அது பெறக்கூடிய தீவிரத்தின் அளவையோ, முன்கூட்டியே கண்டறிவது, செயற்கரிய செயலாகும். ஆகவேதான், பெரிய திட்டங்கள் பொருத்தமானவையா அல்லவா என்பதை முடிவுசெய்வதும் செயற்கரிய செயலாகிறது. நிலேபேறுக்கம் அல்லாத வேறு காரணத்திற்காகப் பல பெரிய திட்டங்கள் மேற்கொள்ளப்படலாம். அதாவது அந்தத் திட்டங்கள் தேவை என்பதற்காகவே அவை மேற்கொள்ளப்படலாம். 1956-ல் தொடங்கப்பட்டதைப்போல நெடுஞ்சாலே அமைப்புக்காகக்

கூட்டரசாங்கம் மேற்கொள்ளும் பெரிய திட்டம், நெடுஞ்சாலைகளைப் புதுப்பிப்பதற்காக மாநில அரசுகள் மேற்கொள்ளும் பெரியதிட்டம், கல்வி வசதிகளைப் பெருக்குவதற்காகத் தல அரசாங்கம் கையாளும் திட்டம்—ஆகிய இவை யாவும், பொதுவாக வாணிபச் சுழல்பற்றிய நோக்கம் எதுவும் இன்றியே தொடங்கப்படும். ஆனால், தொடங்கிய பிறகு பின்னிறக்கம் ஏற்பட்டால் அவை நிறைவேற்றப்படும் வேகத்தை மிகுதிப்படுத்துவதற்கும், அதற்கு மாறான நிலை ஏற்பட்டால் வேகத்தை மட்டுப்படுத்துவதற்கும் வசதி இருந்தால், மிகவும் நலமாக இருக்கும். அத்தகைய வசதிக் கூறுகள் சில இருக்கின்றன என்றாலும் அவை பெரும்பயன் நல்கத்தக்க வகையில் இல்லை. ஒரு பெரிய திட்டத்தை, எந்த அளவுக்குப் பல சிறிய பகுதிகளைக் கொண்டதாகப் பிரித்து அமைக்கமுடியுமோ, அந்த அளவுக்கு அது, இரண்டாம் உலகப் போருக்குப்பின் ஏற்பட்டு வருவதுபோன்ற குறுகியகாலப் பின்னிறக்க நிலைமைகளில், பின்னிறக்க எதிர்ப்புப் பணிகளுக்குப் பயன்படும்.

பின்னிறக்க காலச் செலவின் தலையாய குறிக்கோள், நாட்டின் பொது ஆக்கத்தையும் வேலையின் அளவையும் உயர்த்துவதே. தனியார் தேவையின் (private demand) பற்றாக்குறையால் இவை இரண்டிலும் ஏற்பட்டுள்ள குறைவின் ஒரு பகுதியை அரசாங்கத் தேவையைக்கொண்டு (government demand) நிரப்பவேண்டும் என்பதே இதன் பொருள். அரசாங்கச் செலவால் மிக அதிகமான விளைவு ஏற்படவேண்டுமானால், அச் செலவை முதலில், கீழ்க்கண்ட இரு துறைகளில் செலுத்தவேண்டும்: (1) பொருளாதாரத்தின் எந்தப் பகுதிகளில் பயன்படுத்தப்படாத சாதனங்கள் உள்ளனவோ அந்தப் பகுதிகள். (2) மறுசெலவு நாட்டத்தை உயர்ந்த அளவில் பெற்றுள்ள பகுதிகள். சில சமயங்களில், பொதுவாகப் பின்னிறக்க நிலை ஏற்பட்டிருந்தாலும், பொருளாதாரத்தின் சில பகுதிகளில் செழுமைக் கட்டம் தொடர்ந்து இருக்கக்கூடும். எடுத்துக்காட்டாக, 1958-ன் தொடக்கத்தில் பொதுவாகப் பின்னிறக்க நிலை இருந்தது என்றாலும், பெரிய கட்டுமானத்தொழிலில் (heavy construction industry) பொருளாதார வீக்க நிலையே தொடர்ந்து இருந்தது. அப்படி இருந்ததற்குக் கூட்டரசாங்க நெடுஞ்சாலைத் திட்டமும் ஒரு காரணமாகும். அத்தகைய நிலையில் பின்னிறக்க எதிர்ப்புத் திட்டமாக அரசாங்கத்தின் நெடுஞ்சாலை அமைப்புத் திட்டத்தின் வேகத்தை மிகுதிப்படுத்தியிருந்தால், அது பொருத்தமற்ற ஏற்பாடாக இருந்திருக்கும். ஏனெனில், அத்தகைய திட்டத்தின் விளைவாக ஏற்படும் பணவழித் தேவையின் (monetary demand) உயர்வால், கட்டுமான விலைகள் உயர்ந்திருக்குமேதவிர வேலையின் அளவு உயர்ந்திராது. ஆனால், சிறிய குடியிருப்புக் கட்டுமானத்

தொழில் (light residential construction industry) சிறிது காலமாகவே தேக்கநிலையில் இருந்துவந்தது. அடைமானப் பண அங்காடியில் (mortgage money market) எளிதில் பணம் கிடைக்கச் செய்ய அரசாங்க நிதிகள் பயன்பட்டிருந்தால், குடியிருப்புக் கட்டுமானத் தொழிலில் வேலையின் அளவு உயர்ந்திருக்கும்.

மறுசெலவு நாட்டத்தை மிக உயர்ந்த அளவில் பெற்றுள்ள பொருளாதாரப் பகுதிகளுக்குச் செலவிடவேண்டும் என்பது குறிக்கோளாக இருந்தால், நுகர்வு நாட்டத்தை மிகுதியாகப் பெற்றுள்ள பகுதிகளுக்குச் செலவிடுவதால் மிக அதிகப் பயன் விளையும். குறைந்த அளவு வருமானத்தை, அல்லது வீழ்ந்து கொண்டிருக்கும் வருமானத்தைப் பெற்றிருப்பதால் குறைந்த அளவில் நுகர்வுச் செலவுசெய்யும் நிலையில் உள்ளவர்களைச் சேரும்விதத்தில் முதலில் அரசாங்கச் செலவு செய்யப்படு மானால் மிகச்சிறந்த பயன் ஏற்படும் என்பது இதன் பொருளாகும். வேலைசெய்ய முடியாதவர்களுக்குத் தரப்படும் நிவாரணச் செலுத்தல்களாலும் (relief payments to the unemployables), வேலையிழந்தவர்களுக்குத் தரப்படும் இழப்பீட்டுச் செலுத்தல்களா லும் (compensation payments to the unemployed), நுகர்வுக் கான மறுசெலவு மிக உயர்ந்த அளவில் ஏற்படுவது உறுதி என்றே சொல்லிவிடலாம். எதிர்காலத்தில் சமுதாயத்திற்குப் பயன்படக் கூடிய பருப்பொருள் வசதிகள் (physical facilities) எவையும் அத்தகைய செலுத்தல்களால் ஏற்படுவதில்லை என்பது உண்மை தான். ஆனால் உடல்நலம் நிறைந்த மக்களைக்கொண்ட ஒரு சமுதாயத்தையும், எல்லாவற்றிற்கும் மேலாக, உற்பத்திக்கான தேவை (demand for production) யையும் அது உண்டாக்குகிறது என்பது முற்றிலும் உண்மை. முடிந்த அளவுக்கு அத்தகைய செலுத்தல்கள், செய்யப்பட்ட ஊழியங்களுக்கான கூலியாகவோ, அல்லது வேலையிலிருந்தபோது கட்டிய தவணைத்தொகைகள் (premiums) காரணமாக வேலையற்றுள்ள இப்போது பெறக்கூடிய உதவித்தொகைகளாகவோ (benefits) இருப்பது நல்லது. ஏனென் றால் அப்படி இருந்தால்தான், செலுத்தல்களைப் பெறுவோரின் தன்மான உணர்ச்சிக்கு ஊறு ஏற்படாமல் இருக்கும். ஆனால் இத்தகைய செலுத்தல்களின் அடிப்படைக் குறிக்கோள், தற்போது உற்பத்தியாகும் பொருள்களுக்கும் ஊழியங்களுக்கும் நிதிகள் செலவாகும்படிச் செய்வதே ஆகும். [அல்லது பொருள் இருப்பு களைக் (inventories) குறைப்பதன்மூலம் புதிய உற்பத்திக்கு வழிவகுப்பதே ஆகும்.] நிவாரணம் (relief), தனியாள் உதவித்

தொகை (personal benefit) ஆகியவற்றிற்கான செலவுகளும், பொதுப்பணிகளுக்கான (public works) செலவுகளும் இந்தக் குறிக்கோளை நிறைவேற்றமுடியும்.

கூட்டரசாங்க–மாநில அரசாங்க வேலையின்மை இழப்பீட்டுத் திட்டமே (the federal–state unemployment compensation program), வேலையை இழந்த உழைப்பாளிகளுக்கு உதவித்தொகைகளை முறைப்படித் தருவதற்கான பெரிய திட்டம் ஆகும். சமூகப் பாதுகாப்புச் சட்டம் 1935-ன் படியும் (Social Security Act, 1935), பல்வேறு மாநில அரசுகளின் சட்டங்களின்படியும் ஏற்பட்டிருப்பது இந்தத் திட்டம். வேலையின்மையின்போது மாநிலச் சட்டங்களில் தெரிவிக்கப்பட்டிருக்கும் அளவுக்கும் காலத்திற்கும் இணங்க இந்தத் திட்டத்தின்கீழ் உதவித் தொகைகள் தரப்படுகின்றன. மாநில அரசுகளால் முடிவுசெய்யப்பட்டுள்ள வரி வீதங்களின்படி வேலை தருவோர்மீது சுமத்தப்படுகிற சம்பளப் பட்டியல் வரிகள்மூலம் (pay roll taxes) இந்தத் திட்டத்திற்குத் தேவையான நிதிகள் திரட்டப்படுகின்றன. இந் நிதிகள், உயர்ந்த அளவு வேலை உள்ள காலங்களில், கூட்டரசாங்கக் கருவூலத்தால் (Federal Treasury) நிர்வகிக்கப்படுகிற—ஆனால் ஒவ்வொரு மாநிலத்திற்கென்று தனித் தனியாக உள்ள வேலையின்மைக் காப்பிருப்பு நிதிகளில் (unemployment reserve funds) சேர்க்கப்படுகின்றன. உதவித்தொகைகளைத் தரவேண்டிய நிலை ஏற்படும்போது, மாநில அரசுகள் கூட்டரசாங்கக் கருவூலத்தில் உள்ள தங்களுடைய காப்பிருப்புகளிலிருந்து நிதிகளை எடுத்துக்கொள்கின்றன. ஆனால், இந்தத் திட்டத்தின் நிர்வாகச் செலவுக்காகக் கூட்டரசாங்கம், சம்பளப் பட்டியல்மீது 1 சதவீதத்தில் $\frac{3}{10}$ என்னும் அளவுள்ள ஒரு வரியை விதிக்கிறது. இந்த வரியிலிருந்து கிடைக்கும் தொகை, மேற்படி திட்டத்திற்கான நிர்வாகச் செலவைவிட மிகுதியாக இருந்தால், அந்த மிகுதி, மாநிலக் காப்பிருப்பு நிதிகளில் சேர்க்கப்படுகிறது.

வேலையின்மை இழப்பீட்டுத் திட்டத்தால் அரசாங்க ரொக்கச் செலவில் ஏற்படும் மாறுதல்கள் கீழே தரப்பட்டிருக்கின்றன. மாநில அரசுகள், தங்களுடைய வேலையின்மை வரியிலிருந்து கிடைக்கிற வரவுகளை வேலையின்மைப் பொறுப்பு நிதியில் (unemployment trust fund) சேர்த்துவிட்டு, வேலையிழந்தோருக்கான உதவித் தொகைகளைத் தரும்போது இந் நிதியிலிருந்து பணத்தை எடுத்துக் கொள்கின்றன. கீழே தரப்பட்டுள்ள புள்ளி விவரங்கள், நிதியாண்டுகள் 1956 முதல் 1959 வரை, இந் நிதியில் மாநிலங்களால் வைக்கப்பட்ட தொகைகளையும் திரும்பப் பெறப்பட்ட தொகைகளையும் குறிக்கின்றன.[1]

| | 1956 | 1957 | 1958 | 1959 |
|---|---|---|---|---|
| மாநிலங்களின் வைப்புகள் (Deposits by States) | 1,330 | 1,542 | 1,501 | 1,701 |
| மாநிலங்களின் திரும்பப் பெறல்கள் (Withdrawals by States) | 1,287 | 1,511 | 2,926 | 2,797 |
| திரும்பப் பெறல்களின் மிகை (Excess of withdrawals) | —43 | —31 | 1,425 | 1,096 |

[தொகைகள் யாவும் மில்லியன் டாலர்களில் தரப்பட்டுள்ளன.]

நிதியாண்டுகள் 1956-ம், 1957-ம் வாணிபச் செழுமை மிகுந்த ஆண்டுகள். நிதியாண்டு 1958 தொடங்கிய சிறிது காலத்திற்குப் பின்னர் பின்னிறக்கம் தொடங்கியது. 1959-ல் பல குறியீட்டெண்கள், வாணிபச் சுழலின் மேல்நோக்கிய திருப்பம் (upturn) குறிப்பிடத்தக்க அளவில் ஏற்பட்டிருப்பதைச் சுட்டிக்காட்டிய போதிலும் அந்த ஆண்டு முழுவதும் வேலையின்மை மிகப்பெரும் அளவிலேயே இருந்தது. நிதியாண்டு 1958-ல் உதவித்தொகைச் செலுத்தல்களுக்கான திரும்பப் பெறலில் (withdrawal for benefit payments) பெரும் அளவில் உயர்வு ஏற்பட்டிருப்பதே (1·4 பில்லியன் டாலர்), இந்த அட்டவணையிலிருந்து சிறப்பாகத் தெரிந்து கொள்ளக்கூடிய உண்மையாகும். இந்தத் திட்டமானது ரொக்கச் செலவில், பொருளாதார நிலைபேருக்கத்திற்குத் தேவையான திசையில் குறிப்பிடத்தக்க மாறுதலைத் தானாகவே ஏற்படுத்தி விடுகிறது என்பதும் இந்த அட்டவணையிலிருந்து விளக்கமாகத் தெரிகிறது.

ஒரு பின்னிறக்க எதிர்ப்புச் செலவுத் திட்டம் என்னும் வகையில் வேலையின்மை இழப்பீட்டுத் திட்டத்தில் அண்மைக் காலத்தில் இரண்டு குறைபாடுகள் தோன்றியுள்ளன. முதல் குறைபாடு கூலி அளவும் ஊதிய அளவும் உயர்ந்துள்ள அளவுக்கு வாராந்தர உதவித் தொகை உயரவில்லை என்பது. தரப்படுகிற உதவித் தொகையின் அளவு மாநிலந்தோறும் வேறுபடுகிறது. ஆனால் வாராந்தர உதவித் தொகை வாராந்தரக் கூலியில் பாதி அளவு இருக்கவேண்டும் என்கிற நிலை பொதுவாக ஏற்படவில்லை என்று குடியரசுத் தலைவரின் பொருளாதார அறிக்கைகள் (Economic Reports of the President) அடிக்கடி வருத்தம் தெரிவித்துள்ளன. வேலைசெய்து கூலி பெறுவதைவிட வேலையின்மைக்கால உதவித் தொகைகளைப்

பெறுவதே சிறந்தது என்கிற எண்ணத்தை ஏற்படுத்துகிற அளவுக்கு உதவித்தொகைகள் உயர்வாக இருக்கக்கூடாது. உதவித் தொகைகளிலிருந்து குறிப்பிடத்தக்க சேமிப்புகள் செய்ய உதவுகிற அளவுக்கும் அவை உயர்வாக இருத்தல் கூடாது. ஆனால், கூலியில் 50 சதவீத அளவு என்னும் கொள்கையால் இந்த ஆபத்துகள் ஏற்படமாட்டா. உதவித் தொகைகள் இந்த அளவை விட மிகக் குறைவாக இருக்குமானால், வேலையின்மைக் காலத்தில் நுகர்வில் மாபெறும் குறைவு ஏற்படலாம்.

ஒரு பின்னிறக்க எதிர்ப்புக்கருவி என்னும் வகையில் திட்டத்தின் இரண்டாவது குறைபாடு, நெடுநாள் தொடர்ந்திருக்கும் வேலை யின்மைக் காலத்தில், வேலையிழந்த தொழிலாளர்கள், தாங்கள் பெறக்கூடிய உதவித் தொகைகள் முழுவதையும் பெற்றுமுடித்துவிட முனைவது ஆகும். தாராளத்தன்மையுடைய மாநில அரசுகள் உதவித்தொகையை இருபத்தாறு வாரங்களுக்குப் பெற அனுமதிக் கின்றன. அதன்பின் உழைப்பாளிகள் மீண்டும் ஒரு குறித்த காலத் திற்காவது வேலை செய்தால்தான் உதவித் தொகைகளைப் பெறுதற் குரிய தகுதியைப் பெறமுடியும். பெறுதற்குரிய உதவித் தொகைகள் அனைத்தையும் பெற்று முடித்துவிட்ட தொழிலாளி, அதன்பின், தன் சேமிப்புகளைக்கொண்டோ, கடன் வாங்கியோ, நிவாரண நிதியிலிருந்து உதவியைப் பெற்றோதான் வாழமுடியும். ஆகவே, தொழிலாளர்கள் பெறக்கூடிய உதவித் தொகைகள் விரிவான அளவில் பெற்றுமுடிக்கப்படுவதால் (widespread exhaustion), மொத்த நுகர்வின் அளவில் தீவிரமான மாறுதல்கள் ஏற்படும். இதனால்தான் 1958-ன் பின்னிறக்கத்தின்போது, உதவித் தொகைகள் பெற்றுமுடிக்கப்படும் மட்டற்ற வேகத்தைக் கண்டு, பல மாநில அரசுகள், உதவித் தொகைகள் பெறுதற்குரிய கால அளவைத் தற்காலிகமாக நீட்டித்தன; அப்படி நீட்டித்ததால் ஏற்படும் செலவைச் சரிக்கட்ட மாநில அரசுகளுக்குக் கூட்டர சாங்கம் கடன்கொடுத்து உதவியது. உதவித்தொகைகள் விரிவான அளவில் பெற்று முடிக்கப்படுவதால் நுகர்வில் மாபெரும் வீழ்ச்சி ஏற்பட்டு, அதன் விளைவாக, பின்னிறக்கத்தை மந்தமாக மாற்றக்கூடிய கீழ்நோக்கிச் செல்லும் சுழலேறி (downward spiral) ஏற்படக்கூடும் என்கிற அச்சம் அப்போது நிலவியது.[2]

வேலையின்மை இழப்பீட்டுத் திட்டமானது, பருவகால வேலை யின்மையையும் (seasonal unemployment), தொழிலாளர்கள் ஒரு வேலையிலிருந்து இன்னொரு வேலைக்கு மாறிச் செல்வதால் ஏற்படும் வேலையின்மையையும் சமாளிப்பதற்காக ஏற்படுத்தப்பட்டது என்பதுதான் உண்மை. அது, வாணிப வீழ்ச்சிக் காலத்தில் வேலை

யிழந்தோருக்கு உதவிசெய்வதற்காக ஏற்பட்ட திட்டம் அல்ல. அத்தகையோருக்கு உதவிபுரியப் பல வகையான நிவாரணத் திட்டங்கள் இருக்கின்றன. இந்த உண்மையை, வேலைதருவோர் ஒருவர்மீது விதிக்கப்படுகிற சம்பளப் பட்டியல் வரியின் வீதத்தை (individual employer's payroll tax rate) அவரால் தரப்படுகிற வேலையின் அளவுக்குஏற்ப மாற்றி யமைத்துக்கொள்வதற்குச் செய்யப்பட்டுள்ள ஏற்பாட்டிலிருந்தும், [அனுபவப்படி அமைந்த வீதம் (experience rating)], உதவித் தொகைபெறுதற்கான காலம் வரையறுக்கப்பட்டு இருப்பதிலிருந்தும், வாராந்திர உதவித் தொகையின் அளவு முன்னர் பெற்ற கூலியோடு தொடர்புபடுத்தப் பட்டிருக்கிறதே தவிரப் பெறுபவரின் தேவையோடு தொடர்பு படுத்தப்படவில்லை என்பதிலிருந்தும் தெளிவாக அறிந்து கொள்ளலாம். உண்மை இப்படியிருந்தபோதிலும், வேலையின்மை இழப்பீட்டுத் திட்டமானது, பின்னிறக்க வேலையின்மையின்போது தான் கவர்ச்சிமிக்க வகையில் பயன்பட்டிருக்கிறது. இப்படிப் பயன்பட்ட தன்மையே, உதவித்தொகை பெறுதற்குரிய காலம் நீட்டிக்கப்படவேண்டும் என்னும் கோரிக்கைக்கு மிகுந்த வலு வூட்டியது.

ஐக்கிய அமெரிக்காவில் அரசாங்கத்தின் எந்த நிலையிலாவது பொதுப் பணித் திட்டமிடுவதை மையப்படுத்தும் முயற்சி, அதிக முன்னேற்றத்தை அடையவில்லை. வரவுசெலவுத் திட்டத்தின் மூலமாக அல்லது இதற்கென்று உருவாக்கப்படும் வேறு ஓர் அமைப்பின்மூலமாகப் பொதுப்பணித் திட்டங்களை ஒருங்கிணைக்கும் முயற்சி வேண்டுமென்றே தொடங்கப்பட்டாலொழிய இவ்வாறு நடப்பதைத் தடுக்கமுடியாது. காரணம் என்னவென்றால், அரசாங்க ஊழியங்களின் தொடர்பாகத்தான் பொதுப் பணித்திட்டங்கள் பெரும்பாலும் தோன்றுகின்றன. அந்தப் பொதுப் பணிகளுக்காகத் திட்டமிடுவது என்பது, மேற்படி ஊழியங்களை நிறைவேற்றும் நடவடிக்கையின் ஒரு பகுதியாகவே இருக்கமுடியும். கூட்டரசாங்கத் தைப் பொறுத்த அளவில், பொதுப்பணிகள் நிறைவேறுவதற்காக அரசு நேரடியாகச் செலவழிக்கிறது; அல்லது குறிப்பிட்ட பணிகளுக்காக ஏனைய அரசாங்கங்களுக்கும் அரசாங்கமல்லாத பிற நிறுவனங்களுக்கும் கடன்களோ கொடைகளோ தருகிறது. பொதுப் பணிகளுக்காகத் திட்டமிடும் வேலையின் பெரும்பகுதி, வணிகத் துறையின் பொதுச்சாலைப்பகுதி (Bureau of Public Roads in the Department of Commerce), தரைப்படையின் பொறியாளர் பிரிவு (The Corps of Engineers of the Army), இராணுவ ஊழியங்கள், வேளாண்மைத் துறை, அணுச் சக்தி ஆணைக் கழகம் (Atomic Energy Commission) உடல்நலம், கல்வி, மற்றும் நல்வாழ்வு

பற்றிய துறை (The Department of Health, Education and Welfare) ஆகியவற்றால் மேற்கொள்ளப்படுகின்றன. பெரிய பொதுப் பணிகளுக்காகச் செலவிடும் பொறுப்பு பெரும்பாலும் இந்தத் துறைகள் அல்லது நிறுவனங்களையே சார்ந்திருக்கிறது. ஒரு வரவு செலவுத் திட்ட ஆண்டுக்குரிய திட்டங்களின் பட்டியல், மிக நீண்டதாக இருக்கும். அத் திட்டங்களை நிர்வாகம்செய்யும் பொறுப்புடைய நிறுவனங்களும் பல்வேறாக இருக்கும்.[3] நிலைபேருக்கத் தேவைகளின் அடிப்படையில் திட்டங்களை முன்னதாகவே தயாரித்து வைக்கும் ஆர்வம் இந்த நிறுவனங்களுக்கு ஊட்டப்படுவதில்லை. நிலைபேருக்க நோக்கத்தின் அடிப்படையில் பல்வேறு திட்டங்களை ஒருங்கிணைக்கும் தனி நிறுவனமும் வேறு இல்லை.

மாநில அரசாங்க அளவில், பொதுப்பணிகளுக்கான பொறுப்புடைய நிறுவனங்களின் எண்ணிக்கை குறைவுதான். ஆனால் திட்டங்களை ஒருங்கிணைக்கும் முயற்சி, மாநில அளவிலும் குறிப்பிடத்தக்க அளவில் இல்லை. பெரிய கட்டுமான வேலைகள் பெரும்பாலும் நெடுஞ்சாலைத் துறையால் மேற்கொள்ளப்படுகின்றன. அண்மைக் காலத்தில் கல்விக்காக அத்தகைய வேலைகளை மிகுந்த அளவில் மேற்கொள்ளவேண்டியிருந்தது. சில மாநிலங்களில் பொதுப்பணித் துறை என்று ஒருதுறை தனியாக இருக்கக்கூடும். அப்படியிருந்தால், அதன் பணி, கட்டுமானத்தை அல்லது பராமரிப்பை மேற்பார்வையிடுகிற (overseeing of construction or maintenance) பொறியியல் தன்மை படைத்ததாகவே பெரும்பாலும் இருக்கும். இந்த இரு நிலைகளில் ஒன்றிலும் அது, நிலைபேருக்க நோக்கங்களுக்குப் பயன்படும் வகையில் திட்டங்களை ஒருங்கிணைக்கவில்லை. தல அரசாங்கங்களைப் பொறுத்தவரையில், அவை நிலைபேருக்கத்திற்கு ஏற்ற வகையில் திட்டமிடும் என்று எதிர்பார்ப்பது, நடைமுறை நிலைமைக்குச் சிறிதளவும் பொருந்தாது. வேலையின் அளவை நிலைபேருக்குவதற்கு ஏற்ற தருணத்தில் மூலதனத் திட்டங்களை நிறைவேற்றவேண்டும் என்னும் பொறுப்புணர்ச்சி இந்த அரசாங்கங்களுக்கு இருக்கமுடியாது. உண்மையில் வாணிபச் சுழலில் ஈடுசெய் செலவுக்குத் தல அரசாங்கங்கள் செய்த முழு பங்களிப்பும் (contribution), நிவாரண நடவடிக்கைகளுக்கு உதவுகிற அளவோடு முடிந்துவிடுகிறது.

ஏற்பட்டுள்ள சிக்கல், தொடர்ந்து இருக்கும் பொருளாதாரத் தேக்கநிலைபற்றியதாக இருக்குமானால், திட்டமிடும் பணி அவ்வளவு முக்கியமானதல்ல. ஏனெனில் அந் நிலையில், திட்டங்களைத் தொடங்குவதற்கான காலத்தைத் தேர்ந்தெடுப்பது, இடர்ப்பாடு மிகுந்த செயலாக இராது. ஆனால் சுழல்பற்றிய நிலைபேறின்மையை

(cyclical instability) மாற்றியமைப்பதற்காகப் பொதுப்பணித் திட்டங்கள் பயன்படுத்தப்பட்டால், குறிப்பிட்ட திட்டமானது, சுழல் வீழ்ச்சியின் திசைக்கும் அளவுக்கும் ஏற்ற வகையில் உருவாக்கப் பட்டிருக்கிறதா என்பதும், அதனுடைய விளைவானது பொருளா தாரத்தின் பொருத்தமான பகுதிகளிலும் நாட்டின் பொருத்தமான வட்டாரங்களிலும் உருவாகிறதா என்பதும், பெரிய திட்டங்களின் பல்வேறு பகுதிகளை விரைவுபடுத்தமுடியுமா என்பதும், குறுகியகால அறிவிப்பில் தொடங்குவதற்கு உரிய வகையில் அந்தத் திட்டம் ஆயத்தமாக இருக்கிறதா என்பதும் மிகுந்த முக்கியத்துவம் உடையனவாக ஆகிவிடுகின்றன. இவற்றிற்கெல்லாம், பொருளா தார முறையில் திட்டமிடும் ஏற்பாடு தேவைப்படுகிறது. அத்தகைய ஏற்பாடு, வழக்கமாகச் செய்யப்படும் பொறியியல் திட்டங்களை (engineering plans) உள்ளடக்கியதாக இருப்பதோடு, அத் திட்டங்களுக்கு அப்பாலும் செல்வதாக இருக்கிறது. அதுபோலவே, அந்த ஏற்பாடு, சாதனங்களைத் திறமையான முறையில் பயன்படுத்துவதுபற்றி வரவுசெலவுத் திட்டத்தின் மூலம் வழக்கமாகச் செய்யப்படும் முடிவுகளுக்கு அப்பால் செல்வ தாகவும் இருக்கிறது. பொருளாதாரத் தன்மைபடைத்த இத்தகைய திட்டமிடும் ஏற்பாடு இல்லாவிட்டால், சுழலின் கீழ்நோக்கிய பயணத்தின்போது (cyclical downswing) பொதுப் பணிகள் பெறக்கூடிய பங்கு, சிறிய அளவினதாகவே இருக்கும்; தனியாட்களுக்குத் தரப்படும் மாற்றுச்செலுத்தல்கள்மீதும் தனியார் ஊழியங்களை வாங்குவதற்குத் தரப்படும் செலுத்தல்கள் மீதும் குறிப்பிட்ட அழுத்தத்தைச் செலுத்தவேண்டியிருக்கும்.

**வரிக் குறைப்பு (Tax Reduction) :** எதிர்பார்க்கப்படுகிற அல்லது நடைமுறையில்உள்ள ஒரு பொருளாதார வீழ்ச்சியின்போது வரியைக் குறைப்பதன் பொதுவான நோக்கம், தனியாட்களிடமும் வாணிப நிறுவனங்களிடமும் (business enterprises), அவர்கள் விரும்பிய முறைகளிலெல்லாம் செலவிடுவதற்கு நிதிகளை விட்டுவைப்பதே ஆகும். ஆகவே ஒரு வகையில் பார்த்தால், (மொத்தச்) செலவைக் குறிப்பிட்ட துறைகளில் செலுத்துவதற்கு அரசாங்கத்திற்கு உள்ள ஆற்றலானது, அதன் செலவு உயர்த்தப் படும்போது இருப்பதைவிட வரி குறைக்கப்படும்போது குறைவாகவே இருக்கிறது. மற்றொரு வகையில் பார்த்தால், குறைக்கப்படக்கூடிய வரிகளைத் தேர்ந்தெடுப்பதன்மூலமும், விரிவான வரி முறைகளில் குறிப்பிட்ட சில மாறுதல்களைச் செய்வதன்மூலமும், (மொத்தச்) செலவானது செல்லக்கூடிய துறைகளை ஓரளவுக்குத் தேர்ந்தெடுக்கமுடியும்.

அரசாங்கச் செலவை உயர்த்தும்போது எப்படி அச் செலவு–உயர்வின் விளைவு உடனடியாக ஏற்படுவது இன்றியமையாததோ, அப்படியே வரிக் குறைப்பின்போதும் அந் நடவடிக்கையின் விளைவு உடனடியாக ஏற்படுவது இன்றியமையாதது. குறிப்பாகப் பின்னிறக்கம் சிறிய அளவினதாக இருக்கும்போதும், பின்னிறக்கம் ஏற்பட்டபின்னரும் நடவடிக்கை எடுக்கக் காலத் தாழ்ச்சி ஏற்பட்ட போதும் இது மிக இன்றியமையாததாக அமைகிறது. நல்ல வேளையாக, வரிக் குறைப்பின் விளைவு உடனடியாக ஏற்படுவது, பெரும்பாலும் கடுமையான சிக்கலாக இருப்பதில்லை. கூட்டரசாங்கத்தின் தனியாட்கள் மீதான வருமான வரியானது, வரி செலுத்துவோரால் ஊதியம் வாங்கும் நாட்களில் செலுத்தப்படுகிறது; தம்மைத் தாமே வேலைக்கு வைத்துக்கொண்டிருப்போரால் (self-employed persons) மூன்று மாதங்களுக்கு ஒரு முறை செலுத்தப்படுகிறது. ஆகவே, இந்த வரிவீதத்தில் ஏற்படும் குறைவின் விளைவை, (வரி கட்டியது போக) வீட்டிற்கு எடுத்துச்செல்லும் ஊதியம் (take-home pay) மிகுதியாக இருப்பதன்மூலம் விரைவில் உணர முடியும். கார்ப்பரேஷன் வரியின் பெரும் பகுதியும் கால் ஆண்டுக்கு ஒருமுறையே செலுத்தப்படுகிறது. இந்த இரண்டு வரிகளின் வீதங்களில் ஏற்படுத்தப்படும் குறைப்பானது கடந்த காலத்திற்கும் பொருந்தும் வகையில் செய்யப்பட்டால், வரிக் குறைப்பின் விளைவு இன்னமும் விரைவாக உணரப்படும். மாநில வருவாய்த் திட்டங்களில் தலையாய இடம் பெற்றுள்ள விற்பனை வரிகளும் (sales taxes) ஆய வரிகளும் (excise taxes) பண்டங்களின் விலைகளை உடனடியாகப் பாதிக்கும்படிச் செய்யமுடியும். இவற்றிற்கு மாறாக, தல அரசாங்கங்களின் சொத்து வரி, ஈடுசெய் நோக்கத்திற்குச் சிறிதும் பொருந்தாத ஒன்றாகும். ஏனென்றால் அவ் வரி, பொதுவாக ஆண்டுக்கு ஒருமுறையே மதிப்பிடப்படுகிறது; செலுத்தப்படுகிறது. ஆனால், அது எப்படியிருந்தாலும், தல அரசாங்கங்கள் தங்கள் நிதி நடவடிக்கைகளைப் பெரும்பாலும் சுழல் எதிர்ப்பு அடிப்படையில் உருவாக்குவதில்லை.

ஒரு வரிவீதக் குறைப்பால் செலவு எந்த அளவு உயரும் என்பது, இறுதியான வரி செலுத்துவோரிடம் (the ultimate tax-payer) வரி வீதக்குறைப்பு எத்தகைய விளைவை ஏற்படுத்துகிறது என்பதைப் பொறுத்திருக்கிறது. தனியாள் வருமானவரி வீதங்கள் குறைக்கப்பட்டால், அக் குறைப்பின் முழு விளைவும், வரி செலுத்துவோர் கூடுதலாகப் பெறுகிற செலவிடக்கூடிய வருமானம் என்னும் வடிவத்தில் தோற்றமளிக்கும். வரிக்குறைப்பின் விளைவில் ஒரு சின்னஞ்சிறு பகுதிகூட வரி செலுத்துவோரை அடையாமல் தப்பிச் செல்லமுடியாது. ஏனென்றால், அத்தகைய வரிக்குறைப்பின் விளைவை

இடையே வேறு யாரும் எடுத்துக்கொள்வது, இயலாத செயல். ஆனால், ஆய வரிகளைப் பொறுத்தவரையில் இதே நிலைதான் இருக்கும் என்று சொல்வதற்கில்லை. பெட்ரோல், சிகரெட்டுகள், வானொலிப் பெட்டி ஆகியவற்றின்மீதான ஆய வரிகள் குறைக்கப்பட்டால், வரிகள் குறைக்கப்படும் அளவுக்கு அவற்றின் விலைகளும் குறையும் என்று உறுதி கூறமுடியாது. பின்னிறக்கத்தின்போது இலாபங்கள் பெரும்பாலும் குறைந்துகொண்டுதான் இருக்கும். ஆகவே, அறிவிக்கப்படுகிற விலையில் வரியானது மறைந்திருக்கும் நிலையில், வரிக்குறைப்பின் ஒரு பகுதியைத் தன் நிகர வருமானத்தோடு சேர்த்து எடுத்துக்கொள்ளும் ஆசை விற்பனையாளருக்கு ஏற்படும். எந்த அளவுக்கு இந்த ஆசை நிறைவேற்றப்படும் என்பது, பல காரணிகளைப் (factors) பொறுத்திருக்கிறது. இந்தக் காரணிகளிற் பெரும் பாலானவை, அங்காடியில் உள்ள போட்டி நிலைமைகள் என்னும் தலைப்பில் அடங்குவனவே. வரிக் குறைப்பானது தாற்காலிக ஏற்பாடாக இருக்குமானால் (அது அப்படி இருப்பதாகத்தான் பாவிக்கப்படுகிறது.) பின்னர் வரியானது உயர்த்தப்படும்போது விலையையும் உயர்த்தவேண்டியிருக்கும். ஆதலால், தற்போது விலையைக் குறைப்பதற்கு விற்பனையாளர் தயங்கக்கூடும். வரிக் குறைப்பால் விலைகள் குறையாவிட்டால், விற்பனையில் எத்தகைய உயர்வையும் எதிர்பார்க்கமுடியாது. ஆனால், விற்பனையில் எத்தகைய விளைவும் ஏற்படவில்லை என்று கூறிவிடமுடியாது. ஏனென்றால், இலாப நிலைமையில் முன்னேற்றம் ஏற்படுமானால், இலாபத்தைப் பெறுபவர்கள் கூடுதலர்கச் செலவிட முனையலாம். இந்த உண்மையைப்பற்றிப் பின்னர் மேலும் விரிவாக ஆய்ந்து அறிவோம்.

விற்பனைவரி குறைக்கப்படும்போது, வரியானது விற்பனை விலையில் இணைக்கப்படாமல் இருந்தால், பண்டங்களை வாங்குவோர், வரிக் குறைப்பால் பெரும்பாலும் நேர்முகமான நன்மையைப் பெறமுடியும்.[4] ஆனால், வரிவீதக் குறைப்பானது பண்டங்கள் வாங்குவதை நடைமுறையில் மிகுதிப்படுத்துகிறதா என்பதே இங்கு நாம் கேட்கவேண்டிய கேள்வி. விலை உயர்ந்த பொருள்களைப் பொறுத்தவரையில், வரிக்குறைப்பால், குறிப்பிடத்தக்க சேமிப்பு ஏற்பட்டு, அதிகப் பண்டங்களை வாங்கும் நிலைமை ஏற்படலாம். ஆனால் சிறிய பொருள்களைப் பொறுத்தவரையில், ஒரு முறை வாங்கும்போது செலுத்தப்படுகிற வரியின் அளவு மிகச் சிறியதாக இருப்பதால், வரிக்குறைப்பானது பெரும்பாலும் புறக்கணிக்கப் பட்டு, அதனால் எத்தகைய விளைவும் ஏற்படாமற்போய்விடும். வாங்குவதா அல்லது வாங்காமல் இருப்பதா என்பதுபற்றிய முடிவைத் தனியாகச் செலுத்தப்படும் விற்பனை வரிகள் பாதிக்காமல்

இருந்தால் (அப்படித்தான் இருக்கும் என்று பொதுவாகக் கருதப்படுகிறது), இவ் வரிகளில் ஏற்படும் குறைவால் பண்டங்கள் வாங்குவதை மிகச் சிறிய அளவில்தான் உயர்த்த முடியும். எது எப்படி யிருந்தாலும், ஆயவரிக் குறைப்பால் ஏற்படுவதைவிட வருமானவரிக் குறைப்பால் அதிக விளைவு ஏற்படும். ஏனென்றால், செலவிடக் கூடிய வருமான உயர்வின் ஒவ்வொரு டாலராலும் ஏற்படக்கூடிய விளைவு, விலைக்குறைப்பின் ஒவ்வொரு டாலராலும் ஏற்படக்கூடிய விளைவைவிடக் கூடுதலாக இருக்கும்.

வீழ்ச்சியானது தடுக்கப்படவேண்டுமானால், அதிகக் கவனம் செலுத்தவேண்டியது, நுகர்வைத் தூண்டுவதிலா அல்லது முதலீட்டைத் தூண்டுவதிலா என்பது ஒரு பெரிய கேள்வி. செலவிடத்தகும் வருமானத்தை அதிகப்படுத்துவது நுகர்வை அதிகப்படுத்துவதற்காக என்று முடிவு செய்யப்பட்டால், நுகர்வு நாட்டம் மிகுதியாக உள்ளவர்கள் நன்மை அடையும் வகையில் வரிக் குறைப்பு செய்யப்படும். குறைந்த வருமானப் பிரிவினர் மீதுள்ள வருமான வரிகளைக் குறைப்பதில் மிகுந்த கவனம் செலுத்தப்படும். அல்லது, விரிவான அளவில் நுகரப்படுவதும், ஓரளவு நெகிழ்ச்சியுள்ள தேவை (fairly elastic demand) படைத்ததுமான பொருள்கள்மீது விதிக்கப்படும் ஆய வரிகள் நீக்கப்படும் அல்லது குறைக்கப்படும். இதற்கு மாறாக, உயர்ந்த அளவில் சேமிப்பு நாட்டத்தையும் முதலீட்டு நாட்டத்தையும் பெற்றுள்ளவர்களின் செலவிடத்தகும் வருமானத்தை உயர்த்துவது குறிக்கோளாக இருக்குமானால், கார்ப்பரேஷன் வரிகளையும், ஏனைய வாணிப வரிகளையும் (business taxes), மேல் நடுத்தர வருமானப் பிரிவினர் மீதும் (upper middle income group), உயர்தர வருமானப் பிரிவினர் மீதும் உள்ள தனியாள் வருமான வரிகளையும் குறைக்கவேண்டும்.

வரிக் குறைப்பு செய்யப்படவேண்டும் என்று முடிவு செய்யப் பட்டுவிட்டால், இந்த இரண்டு வகை வரிக் குறைப்பு முறைகளில் ஒவ்வொன்றின் சார்பிலும் வன்மைமிக்க சான்றுகள் திரட்டிக் காட்டப்படுவது இயல்பு. வரிசெலுத்துவோர் ஒவ்வொருவரும், எந்த வரிக்குறைப்பு முறை அவருக்குச் சிறந்ததாக அமைகிறதோ அதுவே பொருளாதாரம் முழுவதற்கும் சிறந்த முறையாக இருக்கும் என்று எண்ணுவது இயற்கை. நீண்ட கால அறம் (long run equity) பற்றிய கேள்விகள் இத் தொடரில் எழுப்பப்படுவது உறுதி என்றாலும், பெரும்பாலும் அவை, சுழல் எதிர்ப்பு வரிக் குறைப்புத் திட்டத்திற்குப் பொருத்தமற்ற கேள்விகளாகவே இருக்கும். தற்போதைய வீழ்ச்சியை மிகத் திறமையாகத் தடுக்க வல்ல கொள்கை எது என்பதுதான் இத் தொடர்பில் எழுப்பப்பட

வேண்டிய உண்மையான கேள்வி. தாற்காலிக வரிக் குறைப்பால் நுகர்வு நாட்டமோ முதலீட்டு நாட்டமோ பெரும்பாலும் உயராது. ஆதலால், தற்போதுள்ள உயர்ந்த செலவு நாட்டத்தைப் பயன் படுத்திக்கொள்ளும் வரிக் குறைப்புத் திட்டமே சிறந்த திட்டம் ஆகும்.

உயர்ந்தஅளவு நுகர்வு நாட்டம் படைத்தவர்களின் செலவிடத் தகும் வருமானத்தை அதிகப்படுத்தக்கூடிய கொள்கையே, இத் தொடர்பில் ஏற்றுக்கொள்ளத்தக்க கொள்கை ஆகும். பின்னிறக்க காலத்தில்—குறைந்த அளவு அதனுடைய தொடக்க நிலைகளில்—இருப்புப் பொருள்களில் செய்யப்படும் முதலீட்டில் கடுமையான வீழ்ச்சி ஏற்படுவது இயல்பு. பின்னிறக்கம் தொடங்கியதும், தங்கள் கைகளில் உள்ள பொருள்களின் இருப்பு (inventory), தேவைப்படுவதைவிட மிகுதியாக இருப்பதை விற்பனை யாளர்கள் உணர்வார்கள். இந்த உணர்ச்சியின் விளைவாக அவர்கள் மேற்கொள்ளும் முதல் நடவடிக்கை, இருப்புப் பொருள்கள் வாங்குவதை நிறுத்திவிடுவதே. முதலீட்டு வீழ்ச்சியில் தொடக்க நிலையின் தலைசிறந்த தன்மை இதுதான். முதலீடு செய்வோர் மீதான வரிகளைக் குறைப்பதால்மட்டும் இந் நிலைக்குப் பரிகாரம் காண முடியாது. இருப்புப் பொருள்களின் மிகுதியைக் குறைப்பதற்கு வழி செய்தால்தான் தேவையான நிவாரணம் ஏற்படும். அம் மிகுதியைக் குறைக்கவேண்டுமானால் இருப்புப் பொருள்களை விற்றாகவேண்டும். வரிக்குறைப்பின்மூலம் நுகர்வுப் பொருள் வாங்குவதை அதிகப்படுத்தினால், முதலில் நுகர்வுப் பொருள் இருப்புகள் விற்பனையாகும். அதனைத் தொடர்ந்து உற்பத்தியாளர் பொருள் இருப்புக்களும் விற்பனையாகும். ஓர் எடுத்துக்காட்டின் மூலம் இந்த உண்மையை நாம் விளக்கிக் கூறலாம். இரண்டாம் உலகப் போருக்குப்பின் ஏற்பட்ட மூன்று சிறிய பின்னிறக்கங்கள் போன்ற ஒரு பின்னிறக்கம் ஏற்படுவதாக வைத்துக்கொள்வோம். ஏற்பட்டவுடன், வீடுகளில் பயன்படுத்தக்கூடிய பொருள்களை விற்பவர்கள், தங்களால் விற்க முடிந்ததைவிட மிகுதியான அளவில் தங்களிடம் அப் பொருள்களின் இருப்புகள் இருப்பதை உணர்வார்கள். உணர்ந்ததும், அப் பொருள்களை உற்பத்தி செய்பவர்களிடமிருந்து தாங்கள் வாங்கும் அளவைக் குறைத்து விடுவார்கள். இந் நிலையில் உற்பத்தியாளர்கள், தங்களிடமுள்ள மூலப் பொருள்களின் இருப்புகள், தேவையைவிட மிகுதியாக இருப்பதைக் காண்பார்கள். கண்டதும், அவர்கள் எஃகு முதலிய மூலப்பொருள்கள் வாங்குவதைக் குறைத்துவிடுவார்கள். இந் நிலையில், எஃகு ஆலைகள், தங்களிடமுள்ள எஃகின் இருப்பு, தேவையை மிஞ்சி இருப்பதை உணரும். இவ்வாறாக முதலிலிருந்து முடிவு

வரையில், இருப்புப் பொருள்களில் செய்யப்படும் முதலீடு குறைக்கப் படுகிறது. இம் முதலீட்டுக் குறைப்பானது, மொத்தத் தேவையின் ஒரு குறைப்பாகவே அமைகிறது. ஏனென்றால் இம் முதலீட்டுக் குறைப்பை ஈடுசெய்யும் வகையில் தேவையின் பிற வகைகள் உயரவில்லை. இதுதான் பின்னிறக்க நிலை. இந் நிலையில் வேலையின்மை யும் சேர்ந்திருக்கிறது. இருப்புப்பொருள்களில்முதலீடு செய்பவர்கள் மீதுள்ள வரிகளைக் குறைப்பதால் எத்தகைய நற்பயன் விளையும்? குறிப்பிடத்தக்க பயன் எதுவும் விளையாது. ஏனென்றால், பின்னிறக்கத்தின்போது ஏற்பட்டுள்ள சிக்கல், இருப்புப் பொருள்களில் முதலீடு செய்வதற்குரிய வருமானம் இல்லாதது அல்ல. இருப்புப் பொருள்களின் அளவு தேவையைவிட மிகுதியாக இருப்பதால் அவற்றில் மேலும் முதலீடுசெய்வது அறிவுக்குப் பொருந்தாத செயலாக இருப்பதே ஆகும். ஆகவே, சிக்கலைத் தீர்ப்பதற்குரிய வழி, பொருள் இருப்புகளைக் குறைப்பதே. நுகர்பவர்கள் பொருள்களை வாங்கும் அளவு உயர்ந்தால்தான், விற்போரிடம் உள்ள பொருள் இருப்புகள் குறையும். சில்லறை விற்பனையாளரிடம் உள்ள பொருள் இருப்புகள் குறைந்தால், அவர்கள் அவற்றை உற்பத்தி செய்வோரிடமிருந்து மிகுதியாக வாங்குவார்கள். உற்பத்தியாளர்களின் இருப்புகள் குறையும்போது, அவர்கள் எஃகு முதலிய மூலப் பொருள்களைக் கூடுதலாக வாங்குவார்கள். ஆகவே இருப்புப் பொருள் பின்னிறக்கத்தைத் (inventory recession) தீர்ப்பதற்குரிய வழி, முதலீட்டுக்குரிய நிதிகள் எளிதில் கிடைக்கும்படிச் செய்வது அல்ல; நுகர்பவர்களை அதிகப் பொருள் வாங்கும்படிச் செய்வதே.

பின்னிறக்கமானது இருப்புப் பொருள்களைப் பாதிப்பதோடு நில்லாமல் பொறிகளிலும் தளவாடங்களிலும் (plants and equipment) செய்யப்படும் முதலீட்டைப் பாதிக்கும்போதும், இதே வகையான தீர்வு பொருந்தும். உற்பத்தியாளர்களுக்குரிய தளவாடங்களை (producers' equipment) இலாபகரமான முறையில் பயன்படுத்த முடிந்தாலொழிய, உற்பத்தியாளர்களிடம் செலவிடத்தக்க வருமானம் எவ்வளவுதான் இருந்தாலும், அவர்கள் அத் தளவாடங்களை வாங்கமாட்டார்கள். உற்பத்திச் சக்தியில் (productive capacity) பெருக்கம் ஏற்படுவதற்குரிய ஒரே வழி, இறுதிப் பொருள்களின் தேவை (demand for final goods) அதிகப் படுவதே ஆகும். நுகர்வோர் தேவையின் உயர்விலிருந்து தொடங்கும் மேம்பாடுகளின் வரிசை (chain of improvements) இறுதியில், உற்பத்தியாளர்களின் தளவாடங்களுக்கான தேவையை உயர்த்துவதில் முடியும். ஏனென்றால், உற்பத்தியை (output) வாங்குவது அதிகப்படும்போது, உற்பத்தியை உற்பத்திசெய்யும் சாதனங்களை வாங்குவதும் அதிகப்படத்தான் செய்யும். எனவே,

நுகர்வோர்களின் செலவிடத்தக்க வருமானத்தை அதிகப்படுத்தும் முறையிலேயே வரிக் குறைப்பானது முதலில் பயன்படுத்தப்பட வேண்டும் என்பது வெள்ளிடைமலை என விளக்கமாகிறது. வரிக் குறைப்பின் இந்த நோக்கம் வெற்றிபெறுமாறுல், முதலீட்டின் வீழ்ச்சி தடுக்கப்படும். அப்படித் தடுக்கப்படும்போது, முதலில் இருப்புப் பொருள் முதலீட்டின் வீழ்ச்சி தடுக்கப்பட்டு, பிறகே பொறிகளிலும், தடவாடங்களிலும் செய்யப்படும் முதலீட்டின் வீழ்ச்சி தடுக்கப்படும். வரிக்குறைப்பு ஏற்பாட்டோடு, பணத்துறைக் கொள்கையைத் தளர்த்தும் ஏற்பாடும் (an easing of monetary policy) மேற்கொள்ளப்பட்டால், முதலீட்டின் மீட்சிக்குத் தேவைப்படும் அளவில் நிதிகள் கிடைக்கும்.

சுருங்கச் சொல்லின், வாணிப வீழ்ச்சி ஏற்பட்டுவிட்டபோது, அல்லது ஏற்படக்கூடும் என்கிற நிலை இருக்கும்போது, மொத்தத் தேவையை உயர்த்துவதற்குப் பொருத்தமான நிதிக் கொள்கைகள் கையாளப்படும். நிலைபேறுக்கத்திற்கு முதலிடம் தரப்பட்டு, ஏனைய நோக்கங்கள் அனைத்திற்கும் தாற்காலிகமாக அதற்கு அடுத்த இடமே தரப்படும், பின்னிறக்கத்தை உண்டாக்கும் தேவைக் குறைவைப் போக்குவதற்கான வாய்ப்புகள் எவை எவை என்பது தேடிப் பெறப்படும். இடர்ப்பாடுகளை உண்டாக்குவதில் மொத்தத் தேவையின் முதலீட்டுப் பகுதிகளே (investment components of aggregate demand) தலைசிறந்த இடம் பெற்றுள்ளன என்ற போதிலும், நேரடியாக இப் பகுதிகளை அதிகப்படுத்த முயல்வதால் ஏற்படும் பயன் குறைவாகத்தான் இருக்கும். முதலீடு செய்வோர் மீதான வரிக் குறைப்புக்குமுன் இருந்ததைவிட மிகுதியான அளவில் செலவிடத்தக்க வருமானம் இருக்கும் என்பதை நாம் முன்னரே ஆய்ந் தறிந்தோம். இத்தகைய ஏற்பாட்டால் பின்னிறக்கத்தின்போது அவர்களுடைய மகிழ்ச்சி மிகுதிப்படலாம். ஆனால், இதனால் அவர்களுடைய முதலீட்டுச்செலவு கூடுதலாகும் என்று பொதுவாக எதிர்பார்க்க முடியாது. ஆகையால், வரிக்குறைப்பின் மூலம் முதலில், நுகர்வுச் செலவை அதிகப்படுத்தி, அந்தச் செலவு உயர்வின் மூலம் முதலீட்டு உயர்வை ஏற்படுத்தும் மறைமுக முறையே கையாளப்படும். ஆனால் இராணுவ இரும்புச்சரக்குகள், நெடுஞ் சாலைகள், பொதுப்பணிகள் ஆகிய துறைகளுக்குப் பணத்தைச் செலவழிக்கும் முறையில் ஈடுசெய் செலவுக் கொள்கையை வகுப்பதன்மூலம், முதலீட்டு வகைச் செலவை அதிகப்படுத்த முடியும். செலவானது செய்து முடிக்கப்பட்டுவிட்டபிறகு, அது முதலீட்டுக்காகச் செய்யப்பட்டபோது ஏற்படும் விளைவு, நுகர்வுக் காகச் செய்யப்பட்டபோது ஏற்படும் விளைவின் அளவுக்காவது இருக்கும் என்பது உண்மைதான். ஆனால், முதலீட்டுத் திட்டங்

களுக்கான செலவைச் செய்து முடிப்பதற்கு ஆகும் காலம், தனியாள் ஊழியங்களை வாங்கும் வகையில் செலவழிப்பதற்கு ஆகும் காலத்தையும், தனியாள் உதவித் தொகைகளைச் செலுத்துவதற்கு ஆகும் காலத்தையும் விட நீண்டதாக இருக்கும்.

### மொத்தத் தேவையை மட்டுப்படுத்தும் கொள்கைகள் (Policies to Limit Aggregate Demand)

இரண்டாம் உலகப் போருக்குப் பிந்திய காலத்தில், மொத்தத் தேவையானது பெரும்பாலும் அளவுக்கு மீறியதாக இருந்ததே தவிர பற்றுக்குறையினதாக இருக்கவில்லை. எனவே நிதிக் கொள்கையால் தீர்க்கப்படவேண்டிய சிக்கல்கள், பின்னிறக்கம் பற்றியனவாக இல்லாமல் பணவீக்கம் பற்றியனவாகவே இருந்திருக்கின்றன. மொத்தத் தேவையின் வளர்ச்சிவீதத்தைக் குறைக்கவேண்டும் அல்லது மட்டுப்படுத்தவேண்டும் என்கிற நோக்கத்தை நிறைவேற்ற, நிதித் துறையைப் பொறுத்தவரையில், இரண்டு வழிகள் இருக்கின்றன. பொருள்களையும் ஊழியங்களையும் அரசாங்கங்கள் நேரடியாக வாங்குவதன்மூலம் மொத்தத் தேவையின் ஒரு பகுதியை அரசாங்கங்களே உண்டாக்குகின்றன அல்லவா? அந்தப் பகுதியைக் குறைப்பது, முதல்வழி. நுகர்வுக்காகவும், முதலீட்டுக்காகவும் தனியார் துறையிலிருந்து எழுகிற தேவை, மொத்தத் தேவையின் மிச்சப்பகுதி. அந்தப் பகுதியைக் குறைப்பது, இரண்டாவது வழி. முதல் வழியைக் கையாண்டால், அரசாங்கச் செலவைக் குறைக்க வேண்டும்; அல்லது அரசாங்கச் செலவில் உயர்வு ஏற்படுவதைத் தடுக்கவேண்டும். இரண்டாவது வழியைக் கையாண்டால், செலவிடுவதற்காகத் தனியாரிடம் உள்ள தொகையை வருவாய் முறைகள்மூலம் கட்டுப்படுத்தவேண்டும். அதே சமயத்தில் தனியாட்களுக்கும் வாணிப நிறுவனங்களுக்கும் அரசாங்கம் தருகிற மாற்றுச் செலுத்தல்களின் (transfer payments) தொகை கட்டுப்படுத்தப்படுவதாலும் தனியார் துறையிலிருந்து எழுகிற தேவை பாதிக்கப்படும்.

**செலவுக் குறைப்பு (Expenditure Reduction):** பணவீக்கம் ஏற்படும்போது செலவுகளைக் குறைக்கமுடியுமா என்பது, செலவுகள் உண்மையான சுழல்எதிர்ப்பு முறையில் பயன்படுத்தப்பட்டுவருகின்றனவா இல்லையா என்பதையே பெரும்பாலும் பொறுத்திருக்கிறது. பின்னிறக்கத்தின்போது செலவுகள் வேண்டுமென்றே உயர்த்தப்பட்டிருந்தால், நிலைபேறுக்கத்தை தவிர்த்த பிற நோக்கங்களுக்கு அவ்வளவாகப் பயன்படாத பல திட்டங்களும், ஏற்பாடுகளும் மேற்கொள்ளப்பட்டிருக்கும். வேலை

நிறைவு நிலைமையின்போது, இத்தகைய திட்டங்களை நிறைவேற்றி முடிப்பதற்கான காலத்தை நீடிப்பதன்மூலமோ, அல்லது இத்தகைய புதிய திட்டங்களைத் தொடங்காமல் இருப்பதன் மூலமோ, இத்தகைய திட்டங்களுக்கான செலவைக் குறைக்க முடியும். ஆனால், பின்னிறக்கத்தின்போது அதிகச் செலவு மேற்கொள்ளப்படாமலிருந்தால், பணவீக்கத்தின்போது, பொருள்களையும் ஊழியங்களையும் அரசாங்கம் வாங்குவதைக் குறைப்பதோஅல்லது நிறுத்திவிடுவதோ மிகக் கடினமான செயலாக இருக்கும். ஏனென்றால், பின்னிறக்கத்தின்போது அதன் எதிர்ப்புக் கான செலவு மேற்கொள்ளப்படாமல் இயல்பான செலவு மட்டுமே மேற்கொள்ளப்பட்டிருந்தால், அரசாங்கத்தால் வாங்கப்படுகிற கட்டுமானங்களும் (structures) ஊழியங்களும் சமுதாயத்திற்கு எந்த அளவுக்குத் தேவைப்படுகிறதோ அந்த அளவுக்கே அச் செலவு அமைந்திருக்கும். தற்போது அரசாங்கங்கள் பெரும்பாலும் இத்தகைய நிலைமையில்தான் இருக்கின்றன. எல்லாவகை அரசாங் கங்களின் தலையாய செலவுகள், வளர்ந்துவரும் தேவைகளை வேண்டா வெறுப்போடு நிறைவேற்றும் தன்மை படைத்தவைதாம். சில வகைச் செலவுகள் மிக அதிகமாக வளர்ந்திருந்தாலும் தேவையின் அளவோடு ஒப்பிடும்போது அச் செலவுகளின் அளவு குறைவானதுதான். கல்வி, நெடுஞ்சாலை வளர்ந்துவரும் புறநகர்ப் பகுதிகளுக்குத் (suburban areas) தண்ணீர் வசதியையும் துப்புரவு வசதியையும் (sanitary facility) விரிவுபடுத்தல் ஆகியவற்றிற்காக மாநில அரசாங்கங்களும் தல அரசாங்கங்களும் செய்யும் செலவும், பாதுகாப்பு, அரசாங்கம் பெற்றுள்ள கடனுக்கு வட்டி, வேளாண்மைப் பொருள்களின் விலை வீழ்ச்சித் தடுப்புத் திட்டங்கள், போர் வீரர்களுக்கான உதவிகள் ஆகியவற்றிற்காகக் கூட்டரசாங்கம் செய்யும் செலவுமே, தற்காலத்தில் அரசாங்கச் செலவின் பெரும் பகுதியாக அமைந்துள்ளது. இந்தத் துறைகளில் செய்யப்படும் செலவில் ஏற்பட்டுள்ள உயர்வு, வரவுசெலவுத் திட்டத்தின் கடுமையான எதிர்ப்புக்கு இடையேதான் ஏற்பட்டிருக்கிறது. எனவேதான், இத் திட்டங்கள் தேவைக்கு மீறிக் கொழுக்க முடியவில்லை. இந்தத் தலையாய பணிகளுக்கான செலவு மிக அதிகமாக உயர்ந்துவிட்டதால், ஏனைய இனங்களுக்கான (items) செலவுகள், வரவுசெலவுத் திட்டத்தின் கடுமையான எதிர்ப்புக்கு ஆளாகி விட்டன. இத்தகைய சூழ்நிலையில், நிலைபேறுக்கத்தை முன்னிட்டுச் செலவைக் குறைக்கவேண்டும் என்று முடிவு செய்யப்பட்டால், அச் செலவுக் குறைப்புக்கு வரவுசெலவுத் திட்டத்தில் எத்தகைய இடமும் இருப்பதில்லை. ஆகவே, பொருள்களையும் ஊழியங்களையும் அரசாங்கம் நேரடியாக வாங்குவதைப் பொறுத்தவரையில், சூழல்

எதிர்ப்புக் கொள்கையின் ஒரு பகுதி இல்லாவிட்டால், அதன் மற்றொரு பகுதி, திறமையான முறையில் பணியாற்றமுடியாது. அதாவது, பின்னிறக்கத்தின்போது செலவுகள் உயர்த்தப் பட்டாலொழியப் பணவீக்கத்தின்போது செலவுகளைக் குறைக்க முடியாது. இதிலிருந்து ஓர் உண்மை தெளிவாகத் தெரிகிறது. செலவைத் திட்டமிடும் பணியானது, பின்னிறக்கத்தின்போது கையாள்வதற்காகத் திட்டங்களை ஆயத்தமாக வைத்திருத்தல்—அவற்றை நிறைவேற்றுவதற்கு ஏற்ற முறையில் பொதுமக்களின் நிலையை மாற்றியமைத்தல் ஆகிய இவற்றோடு முடிந்துவிடவில்லை என்பதே அந்த உண்மை. செழுமைக் காலத்தின்போது குறிபிட்ட திட்டங்களை நிறுத்திவைப்பதற்கு அல்லது மெதுவாக நிறை வேற்றுவதற்கு பொதுமக்களை ஆயத்தப்படுத்துவதும், செலவைத் திட்டமிடும் பணியின் ஒரு பகுதியே. முந்திய வாக்கியத்தில் சுட்டிக் காட்டப்பட்ட பணிகளைப்போலவே இந்தப் பணியும் கடின மானதுதான்.

பொருள்களையும் ஊழியங்களையும் நேரடியாக வாங்குவதற்கு அரசாங்கம் செய்யும் செலவைவிட அரசாங்கம் தரும் மாற்றுச் செலுத்தல்களில் சில இனங்கள், சுழல் எதிர்ப்பு மாறுதல்களுக்கு எளிதில் உட்படக் கூடியவனவாய் உள்ளன. உதவி பெறுவதற்கான நிபந்தனைகள் ஒரே நிலையில் இருக்குமானால், வேலையின் அளவு உயர்நிலையில் இருக்கும்போது, நிவாரணத்திற்கும் வேலையின்மை இழப்பீட்டிற்கும் ஆகும் செலவு குறையும். அதோடு வேலைகள் ஏராளமாகக் கிடைக்கும்போது, அறுபத்திஜந்து வயதை அடைந் வர்கள் முதுமைக் கால உதவி பெறுவதை ஒத்திப்போடுகிறார்கள் (தொடர்ந்து வேலையில் இருக்க விரும்புகிறார்கள்). ஏனென்றால், முதுமைக்கால உதவித் தொகை, வேலைசெய்து கிடைக்கும் வருமானத்தைவிடப் பெரும்பாலும் குறைவாகத்தான் இருக்கும். வாணிபம் வீக்க நிலையை (boom) அடையும்போது வேளாண்மைப் பொருள்களின் விலை வீழ்ச்சித் தடுப்புக்கான உதவிக்கொடைகள் (subsidies for support of agricultural prices) குறையலாம் அல்லது குறையாமல் இருக்கலாம். ஏனென்றால், குறுகிய காலத்தில், வேளாண்மைப் பொருள்களின் விலைகள், பொருளாதாரத்தின் வருமான அளவைவிட, வானநிலையையும் பயிரிடப்பட்ட ஏக்கர் களின் அளவையுமே பொறுத்திருக்கின்றன. ஆனால், அரசாங்கக் கடன்களின் வட்டிக்காகத் தரப்படும் மாற்றுச் செலுத்தல்களின் போக்கு இதற்கு மாறான முறையில் அமைந்திருக்கிறது. ஏனென்றால், வாணிப வீக்கத்தின்போது வட்டிவீதங்கள் பெரும்பாலும் உயர் வாகவே இருக்கும். இருந்தபோதிலும் பல்வேறு மாற்றுச் செலுத்தல் திட்டங்களுக்கான அடிப்படை (பின்னிறக்க காலத்தில் இருந்ததைப்

போலவே செழுமைக் காலத்திலும்) மாருமல் இருக்குமானுல், எல்லா மாற்றுச் செலுத்தல்களின் மொத்த அளவு செழுமைக் காலத்தில் குறையக்கூடும். மாற்றுச் செலுத்தல்களைப் பெறுவதற்கான தகுதிகள் பின்னிறக்கக் காலத்தில் தாராளமாக்கப் பட்டுச் செழுமைக் காலத்தில் கடுமையாக ஆக்கப்படுமானுல், செழுமைக்காலத்தில் ஏற்படும் மேற்படி குறைவு இன்னும் அதிகமாக இருக்கும்.

செழுமைக் காலத்தில்பணச்செலவைக் குறைக்கவேண்டுமானுல், இறுதிநிலைச் செலுத்தல்களை (marginal payments) நிறுத்தி விடுவதற்கு வரிசை முறை ஒன்று வகுக்கப்படவேண்டும். பெருக்கும் எண் விளைவுகளை மிக உயர்ந்த அளவில் பெற்றுள்ள இறுதிநிலைச் செலுத்தல்கள் முதலில் நிறுத்தப்படவேண்டும். ஓரளவுக்கு இத்தகைய ஏற்பாடு தானுகவே நடைபெறும். ஏனென்ருல், குறைக்கப்பட்ட அல்லது நிறுத்தப்பட்ட மாற்றுச் செலுத்தல்கள், நுகர்வு நாட்டத்தை மிகுதியாகப் பெற்றுள்ளவர்களிடம் சென்றிருக்கும். மற்றொரு புறத்தில், மொத்தத் தேவையின் உயர்வுக்கு தனியார் முதலீட்டுச் செலவின் உயர்வே முக்கியமான காரணமாக இருக்கலாம். அப்படியிருந்தால், முதலீட்டுத்தன்மை படைத்த பொருள்களுக்கு அரசாங்கம் செய்யும் செலவைக் குறைப்பது, பணவீக்கத்தைக் குறைப்பதற்குப் பெரிதும் பயன்படலாம். குறிப்பாக நெடுஞ்சாலைகள் அமைப்பதை எளிதில் ஒத்திவைக்க முடியும். அப்படிச்செய்தால், கட்டுமானத் தொழிலின்மீது ஏற்படும் தேவையின் அழுத்தம் (the impact of demand upon construction industry) குறையும். தேவையை உற்பத்தியிலிருந்து ஆராய்ச்சிக்கு முடிந்த அளவுக்கு மாற்றுவதும், பணவீக்க நிலையைக் குறைக்க உதவும். பொதுவாகச் சொல்வதானுல், பின்னிறக்கத்தின்போது செலவை உயர்த்துவதற்கு என்னென்ன கொள்கைகள் கையாளப் பட்டனவோ அவற்றிற்கு நேர்மாருன கொள்கைகளைப் பொருளா தார வீக்கத்தின்போது (boom) கையாள்வது சிறந்த முறையாகும்.

**வரி உயர்வு** (Tax Increases): பொருளாதார வீக்கத்தின்போது பணவீக்கச் சக்திகளை எதிர்ப்பதற்காக உருவாக்கப்படும் நிதிக் கொள்கைகள், நடைமுறையில் ரொக்க வரவுசெலவுத் திட்டத்தின் வருவாய்ப் பகுதியிலேயே மிகுந்த கவனம் செலுத்தவேண்டி யிருக்கும். ஏனென்ருல், வாணிபம்செழித்துக்கொண்டிருக்கும்போது, ஊழியங்களுக்கும் மூலதனக் கட்டுமானங்களுக்கும் (capital structures) ஆகும் செலவைக்குறைப்பதற்குக் கடுமையான எதிர்ப்பு இருக்கும். இப்படிக் கூறுவதால், வரி உயர்வுகள், உண்மையான ஆர்வத்தோடு ஏற்றுக்கொள்ளப்படும் என்று கூறுவதாகப் பொருளாகாது. நடைமுறையில் செலவைக் குறைப்பதற்குரிய வாய்ப்புகள்

மிகக்குறைவாக இருப்பதால், நிலைபேறுக்கம் செய்வதற்கு எஞ்சியிருக்கிற ஒரே ஒரு கருவி, வரிகளை உயர்த்துவதே என்றுதான் கூறுகிறோம்.

சில வகையான வரி உயர்வுகள், வரி அமைப்புகளின் ஒரு பகுதியாகவே அமைக்கப்பட்டிருக்கும். பணவீக்கத்தின்போது இத்தகைய வரி உயர்வுகள் பொருத்தமான திசையை நோக்கித் தாமாகவே செயல்படும். எடுத்துக்காட்டாக, வளர்வீத வருமான வரிகளைப் பொறுத்தவரை, தனியாளுடைய வருமானம் முன்னிலும் உயர்ந்த வருமானப் பிரிவு ஒன்றை அடையும்போது, அந்தப் பிரிவுக்குரிய உயர்ந்த இறுதிநிலை வீதங்கள் (higher marginal rates) விதிக்கப்படுகிற நிலை தானுகவே ஏற்பட்டுவிடுகிறது. கீழ்நிலை, இடைநிலை வருமானப் பிரிவினரைப் பொறுத்தவரையில் (lower and middle income classers) இத்தகைய நிலை எளிதில் ஏற்பட்டுவிடுகிறது. ஏனென்றால், இந்த வருமான அளவுகளைப் பொறுத்தவரையில் வளர்வீத வரிகள் விதிக்கப்படுகிற வருமானப் பிரிவுகள் சிறியனவாய் இருப்பதால், வருமானத்தில் மிதமான உயர்வு ஏற்பட்டால்கூட உயர்ந்த வரி வீதம் விதிக்கப்படுகிற நிலை உண்டாகிவிடுகிறது. இந்த உண்மை, சம்பளப்பட்டியல் வரிகளுக்கும் பொருந்தும். ஏனென்றால், வேலையின் அளவு, ஒரு வாரத்தில் வேலைசெய்யும் காலத்தின் அளவு, கூலி வீதங்கள் ஆகியவற்றில் உயர்வு ஏற்படும்போது, சம்பளப் பட்டியல் வரிகளின் அடிப்படையும் (tax-base) தானுக உயர்ந்துவிடுகிறது. ஆய வரிகளுக்கும், விற்பனை வரிகளுக்கும்கூட இந்த உண்மை ஓரளவு பொருந்தும். ஏனென்றால், வருமானங்கள் உயரும்போது, இந்த வரிகளுக்கு உள்ளாகும் சில பொருள்களின்மீது கூடுதலாகச் செலவு செய்யப்படும் என்று எதிர்பார்க்கலாம்.

குறிப்பிட்ட வரிகளின் அடிப்படைகள் உயர்வதால், **தாமே இயங்கும்** வரி உயர்வுகள் (automatic tax increases) ஏற்பட்டுவிடுகின்றன. இந்த வரி உயர்வுகள், வரிகளின் வீதங்களில் (tax rates) எத்தகைய உயர்வுமில்லாமலே ஏற்பட்டுவிடுகின்றன. ஆனுல் **வேண்டுமென்றே கையாளப்படுகிற** பணவீக்க எதிர்ப்பு வரி நடவடிக்கைகளுக்கும் (discretionary anti-inflation tax actions) வாய்ப்புகள் இருக்கின்றன. இத்தகைய நடவடிக்கைகள், வரி வீதங்களை மாற்றியமைத்தல், குறிப்பிட்ட வரிகளின் அடிப்படைகளை மாற்றியமைத்தல், புதிய வரித் திட்டங்களை ஏற்படுத்தல் ஆகிய முறைகளில் அமையலாம். இந்த முறைகளைக் கையாள்வதற்குச் சட்டங்களின் துணை தேவைப்படுவதால், இவை தாமே இயங்கும் முறைகள் ஆகா.

வேண்டுமென்றே கையாளப்படும் முறைகளால் வரிகள் உயர்த்தப்படுமானுல், வரித் திட்டங்களிலேயே மாறுதல்

ஏற்படலாம். எப்போதோ சில சமயங்களில் தவிரப் பெரும்பாலான நேரங்களில், நுகர்வில் ஏற்படும் மாபெரும் உயர்வின் காரணமாகப் பணவீக்க நிலையானது ஏற்படுவதில்லை. தனியார் முதலீட்டுச் செலவில் அல்லது அரசாங்கச் செலவில் பெரிய அளவில் ஏற்படுகிற உயர்வின் விளைவாகவே பெரும்பாலும் பொருளாதார வீக்கம் ஏற்படுகிறது. இத்தகைய வீக்கத்தை எதிர்ப்பதற்கு மூன்று வகையான முறைகளைக் கையாளலாம். கார்ப்பரேஷன் வருமான வரியை உயர்த்துவதன்மூலம் முதலீடு செய்வதற்கான தூண்டுதலைக் குறைக்கமுடியும். ஏனென்றால், அத்தகைய வரி உயர்வால், வரி செலுத்தி எஞ்சிய வருமானம் (after-tax income) குறைந்து, அக் குறைவு காரணமாக முதலீட்டின் இலாபம் குறைந்துவிடும். உயர்நிலை வருமானப் பிரிவினர்மீதான தனியாள் வருமான வரி வீதங்களை உயர்த்துவதாலும் இதே விளைவைப் பெறமுடியும். ஆனால், நுகர்வைத் தடுக்கிற வரிகளின்மூலமே மிகச் சிறந்த விளைவைப் பெற இயலும். இறுதிப் பொருள்களின் விற்பனை உயர்வதால், இருப்புப் பொருள்களின் விற்பனை அளவும், உற்பத்திச் சக்தியின் உற்பத்தி அளவும் உயர்கின்றன. இந்த இரு வகை உயர்வின் காரணமாக முதலீட்டின் பெருக்கம் ஏற்படுகிறது. பொருள்களை வாங்குவோர்மீது கூடுதலான வரிகளை விதிப்பதன் மூலம் இறுதிப் பொருள்களின் விற்பனை குறைக்கப்பட்டால், முதலீட்டு வீக்கத்திற்கான அடிப்படை, பலவீனம் அடைந்துவிடும். எனவே, நுகர்வைப் பெரும் அளவில் தாக்குகிற வரி உயர்வே முதலீட்டு வீக்கத்தைக் கட்டுபடுத்துவதில் வெற்றிபெற முடியும் என்பது தெளிவு.

பணவீக்க எதிர்ப்பு வரிக்கொள்கையை (anti inflation tax policy) வகுப்பதற்கு, பணவீக்கத்தின் தன்மைபற்றிய பகுத்தாய்விலிருந்து கிடைக்கும் முடிவுகளே வழிகாட்டிகளாக இருக்கமுடியும். பொருள்களின்நடப்புஉற்பத்தியைவிட,உயர்ந்தவருமானத்தோடும் பண அளிப்பு (supply of money) மிகுந்துள்ள நிலையோடும் கூடிய பணவழித் தேவை (monetary demand) அதிகமாக இருப்பதே, பொதுவான பணவீக்க நிலையாகும். தேவையின் அழுத்தம் (demand pressure) எல்லா அங்காடிகளிலும் ஒத்த நிலையில் இல்லாவிட்டாலும், ஓர் அங்காடியில் அல்லது சில பெரிய அங்காடிகளில் தேவை மிகுதியாக எழுந்தாலே பொருள்களின் விலைகள் உயர்ந்துவிடும். இந்த வகையில், தேவை உயர்வைப் பெறாத துறைகளிலும் உற்பத்திச்செலவு அதிகமாகிவிடக்கூடும். எனவே, பொருளாதாரத்தின் ஒரு பகுதியில் ஏற்படும் விலைஉயர்வு அதன் பிற பகுதிகளுக்கும் பரவிவிடுவது எளிது. இரண்டாவது வகைப் பகுதியில் உள்ள அங்காடிகளில் பணவீக்கமானது உற்பத்திச்செலவின் உயர்வு

காரணமாக ஏற்படுகிறது என்றால், முதல் வகைப் பகுதியில் அது பொருள்களுக்கான தேவையின் உயர்வு காரணமாக ஏற்படுகிறது. அளவுக்கு மீறிய தேவையின் உயர்வு காரணமாக ஏற்படும் விலை உயர்வைக் கட்டுபடுத்துவதற்கு, வரி உயர்வு, ஒரு தக்க முறையாகும்.

அத்தகைய வரி உயர்வானது, வருமானத்தின்மீதோ பொருள்களுக்கும் ஊழியங்களுக்குமான செலவின்மீதோ. ஏற்படுத்தப் படலாம். இதற்காக வருமான வரியை அல்லது விற்பனைவரி, ஆய வரி ஆகியவற்றைப் பயன்படுத்தலாம். ஒரு பணவீக்க எதிர்ப்புத் திட்டம் என்னும் முறையில் பொருள்களின்மீது உயர்ந்த வரிகளை விதிப்பது தன்னைத்தானே தோற்கடித்துக்கொள்ளும் ஓர் ஏற்பாடு என்று சில சமயங்களில் ஒரு வாதம் எழுப்பப்படுகிறது. இந்த வரிகளே விலைகளோடு சேர்க்கப்பட்டு இந்த வரி உயர்வாலேயே விலைகள் உயர்ந்துவிடும் ஆதலால், வரிஉயர்வு ஏற்பட்டால் விலை உயர்வைத் தடுக்கமுடியாது என்னும் கருத்தில் இந்த வாதம் பிறக்கிறது. பண்டங்களின்மீது விதிக்கப்படும் வரிகளால் பொதுவாக அப் பண்டங்களின் விற்பனை விலைகள் உயர்வது உண்மைதான். ஆனால் அதனாலேயே பணவீக்க எதிர்ப்பு நோக்கம் நிறைவேறத் தவறிவிட்டது என்று எப்படிக் கூறமுடியும்? வரியால் தூண்டப் பட்ட விலை உயர்வால் பொருளாதாரத்தின் செலவிடத்தக்க வருமானம் குறைகிறது. வரி விதிக்கப்பட்ட பொருள்களுக்கு அதிக விலைகள் தருவதால் ஏனைய பொருள்களுக்குச் செலவிடக்கூடிய வருமானத்தின் அளவு குறைந்துவிடுகிறது. எனவே, பண்டங்களை வாங்குவதற்கு முன்பேவாங்குவோரின் வருமானத்தைக் குறைப்ப தால் ஏற்படக்கூடிய அதே விளைவுதான் வரியால் தூண்டப்பட்ட விலை உயர்வாலும் ஏற்படுகிறது.[5] உண்மையை ஒளிக்காது சொல்வதானால், வருமான வரி உயர்வால் ஏற்படாத ஒரு நன்மை, விற்பனை வரி உயர்வாலும் ஆய வரி உயர்வாலும் ஏற்படுகிறது. வருமானவரி பெரும்பாலும் சேமிப்பைக் குறைக்கிறது; ஆனால், விற்பனை வரியும் ஆய வரியும் செலவைமட்டுமே குறைக்கின்றன. ஆகவே விற்பனை வரிகள், அளவுக்குமீறிய தேவை என்னும் சிக்கலின் அடிப்படையையே தாக்குவதாக அமைந்துள்ளன.

விற்பனை வரிகளை உயர்த்துவதா அல்லது வருமான வரியை உயர்த்துவதா என்பதுபற்றிய முடிவு, வேறு பல நிலைமைகளையும் பொறுத்திருக்கிறது. முதலாவதாக, செலவை நேர்முகமாகத் தாக்குவதில் விற்பனை வரிக்குள்ள அனுகூலம் முற்றிலும் பயன் படுத்தப்படவேண்டுமானால், கூடியவரையில் அந்த வரி, பொருள்கள் இறுதியாக வாங்கப்படும் நிலையில் விதிக்கப்படவேண்டும். அளவுக்கு மீறிய தேவையை நிறைவேற்றும் செலவிடத்தக்க

வருமானத்தை, உற்பத்திச்செலவை அதிகப்படுத்தாமல், குறைக்க வேண்டும் என்பதுதான் குறிக்கோள். ஆயவரியானது (excise tax) பிற பொருள்களின் உற்பத்திக்குப் பயன்படும் பொருள்கள்மீது விதிக்கப்படுமானால், உற்பத்திச் செலவுச் சுழலேறி ஒன்று (a cost spiral) உருவாகிவிடுகிறது; வரியின் விளைவு கூடுதலாகிக்கொண்டே வந்து, இறுதிப் பொருள்களின் விலைகள், வரியின் அளவைவிட அதிகமாக உயர்ந்துவிடுகின்றன. இத்தகைய நிலையில், ஒரு குறிப்பிட்ட அளவுள்ள வாங்கும் திறனை (purchasing power) அழித்துவிடுவதற்குத் தேவைப்படும் விலை உயர்வு, இறுதி விலை ஒன்றில்மட்டுமே இணைக்கப்படக்கூடிய வகையில் ஆயவரி விதிக்கப் பட்டால் தேவைப்படும் விலை உயர்வைவிட அதிகமாக இருக்கிறது. சில்லறை விற்பனை மீது விதிக்கப்படும் ஆயவரிகளைவிடப் பொறிசெய் பொருள்கள்மீது (manufactured goods) விதிக்கப்படும் ஆய வரிகள், குறைந்த அளவு பயனையே தருகின்றன என்பது இதிலிருந்து தெரிகிறது. உற்பத்தியாளர் பொருள்களை இறுதியாக வாங்குவோர் (final buyers of producers' goods), வாணிபப் பொறிகள், கப்பலில் ஏற்றிச் செல்லப்படும் சரக்குகள், தந்தி மற்றும் தொலைபேசி ஊழியங்கள் ஆகியவற்றின்மீது விதிக்கப்படும் ஆய வரிகள், நகைகள், மூட்டைகள் (luggage), பெட்ரோல் ஆகிய வற்றின்மீது விதிக்கப்படும் ஆயவரிகளைவிடக் குறைந்த பயனை விளைவிக்கின்றன என்பதும் இதிலிருந்து தெரிகிறது.

பணவீக்க எதிர்ப்புக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும் போது, வருமான வரியால் கிடைக்காத ஒரு நன்மை விற்பனை வரியாலும் ஆய வரியாலும் கிடைக்கிறது என்பதையும், வருமான வரி தனியாரின் சேமிப்பைக் குறைக்கையில் விற்பனை வரியும் ஆயவரியும் செலவைமட்டுமே குறைக்கின்றன என்பதே அந் நன்மை என்பதையும் நாம் முன்னரே ஆய்ந்தறிந்தோம். வரியானது தனியார் சேமிப்பிலிருந்து செலுத்தப்படுமானால், நுகர்வுச் செலவானது சிறிதும் குறையாது. நுகர்வுக்கான தேவையும் குறைவுபடாது. ஆனால், வருமான வரி உயர்வானது, நுகர்வு நாட்டத்தை மிகுதியாகவும் சேமிப்பு நாட்டத்தைக் குறைவாகவும் பெற்றுள்ள வருமானப் பிரிவினரையே அதிகமாகத் தாக்கும் முறையில் இருக்குமானால், விற்பனை வரியால் ஏற்படும் அதே வகையான விளைவே வருமான வரியாலும் ஏற்படும். இந்த வகையான வருமான வரிகள் விற்பனை வரிகளைவிடச் சிறப்பு மிக்க பணவீக்க எதிர்ப்புக் கருவிகளாக விளங்கமுடியும். ஏனென்றால், விற்பனை வரிகள் பணவீக்கத்தை எதிர்ப்பதுபோல வெளிப் பார்வைக்குத் தென்பட்டாலும், உற்பத்திச் செலவின் ஒரு பகுதியாக மாறி அதை உயர்த்துவதன் மூலம் உண்மையில் பண வீக்கத்தை அதிகப்படுத்திவிடுகின்றன.

இறுதிப் பொருள்களின் விலை உயர்வு என்னும் வடிவத்தில் அல்லாமல், உற்பத்திக் காரணிகளின் (factors of production) விலை உயர்வு என்னும் வடிவத்தில் முதலில் காட்சிதரும் பணவீக்கம், சில சமயங்களில், உற்பத்திச் செலவால் தள்ளி உயர்த்தப்படும் பணவீக்கம் (cost push inflation) என்று அழைக்கப்படுகிறது. உற்பத்திக் காரணிகளின் விலை உயர்வு, உற்பத்தியாளர்களைப் பொறுத்தவரையில், உற்பத்திச் செலவின் உயர்வே ஆகும். அந்த உயர்வால் இலாபத்தின் அளவு குறைவதோடு, உற்பத்தி செய்யப் படும் பொருளின் விலையும் உயர்வடைகிறது. இப்படிச் சொல்லும் போது நாம், அப்படி ஏற்படும் அதிக விலைகளைத் தருவதற்குப் பண்டங்களை வாங்குவோர் தயாராக இருக்கிறார்கள் என்றும், ஆகவே அதிக விலைகளைத் தரத்தக்க அளவில் தேவை இருக்கிறது என்றும் பாவித்துக்கொள்கிறோம். ஆனால், உற்பத்திச்செலவு உயராவிட்டால், விற்பனையாளர்கள் தற்போதுள்ள விலைகளைக் கொண்டே திருப்தி அடைந்துவிடுவார்கள் என்பதும், அதிகத் தேவையின் விளைவாகப் பெறக்கூடிய உச்ச அளவு நிகர வருமானத்தைப் பெற்றே தீருவதென்று முனைந்துநிற்கமாட்டார்கள் என்பதும் உண்மையாக இருக்கலாம். ஆகவே, ஒரு குறிப்பிட்ட வரித்திட்டத்தால் உற்பத்திச்செலவு உயருமா உயராதா என்கிற கேள்வியை எழுப்புவது பொருத்தமான செயல்தான். நுகர்வோர் விலைக் குறியீட்டெண்ணை (consumer price index) நிர்ணயிக்கும் காரணிகளில் விற்பனை வரிகளும் சேர்ந்தே இருக்கின்றன. இந்த குறியீட்டெண்ணைத் தரம் வாய்ந்த வாழ்க்கைத் தரப் புள்ளி விவரமாகக் கொண்டுதான், சில தொழில்களில், இந்தக் குறியீட் டெண் மாற்றத்திற்கு ஏற்ற முறையில் கூலி வீதங்களை மாற்றும் ஏற்பாடு நடைமுறையில் இருக்கிறது. எனவே, ஏனைய நிலைகள் யாவும் மாறாமல் இருக்குமானால், இந்த வரிகளில் ஏற்படும் உயர் வானது, விலைக் குறியீட்டெண்ணை உயர்த்தி, அப்படி உயர்த்துவதன் மூலமாக அடிப்படைக் கூலி வீதங்களையும் உயர்த்திவிடுகிறது. இதனால், விலைகள் உயராமல் இருந்தால், விற்பனையாளர்களின் இலாப அளவு குறைகிறது. அப்படிக் குறைவதால் விலைகள் உயர வேண்டிய ஒரு நிலைமை உருவாகிறது. ஏனைய தொழில்களில் விலைக்குறியீட்டெண்ணுக்கும் கூலி வீதத்திற்கும் இத்தகைய நேர்முகத் தொடர்பு இருப்பதில்லை. ஆனால் நுகர்வோர் விலைக் குறியீட்டெண் உயரும்போது, உரிமையின் அடிப்படையில் நின்று, கூலியை உயர்த்தும்படிக் கேட்பது நியாயமே ஆகும். நிகர வருமானத்தின்மீதான வரி உயர்த்தப்படுவதால் பெரும்பாலும் கூலிஉயர்வு ஏற்படுவதில்லை. பொதுவாக ஒப்புக்கொள்ளப்படும் விலைக் குறியீட்டெண்ணில் வருமான வரி சேர்க்கப்படுவதில்லை. வாழ்க்கைத்தரத்தை முடிவு செய்யும் ஒரு காரணியாகத்

தொழிலாளர்கள் இவ் வரியைக் கருதுவதும் இல்லை. ஆகவே, வருமான வரியானது, சேமிப்பிலிருந்து தரப்படுவதாலும் பெரும்பாலும் செலவைக் குறைக்காததாலும் நுகர்வோர் தேவையைக் குறைப்பதில் குறைந்த அளவு ஆற்றல் படைத்ததாகக் காணப்பட்டாலும், அவ் வரியால் உற்பத்திச் செலவோ, விலையோ உயர்வதில்லை. ஆனல் விற்பனை வரியால் உற்பத்திச் செலவும் விலையும் உயர்வதால், பணவீக்க எதிர்ப்புக் கருவியாகப் பயன்படுத்தப்படும்போது அதன் ஆற்றல் குறைவாக இருக்கிறது.

இறுதியாக, வரி உயர்வால் ஏற்படும் தூண்டுதல் விளைவுகள் (incentive effects), நம் கவனத்திற்கு உரியன. வரி உயர்வுக்குக் காரணமாகவுள்ள பணவீக்க நிலைமை, ஒரு குறிப்பிட்ட விலை மட்டத்தில் உற்பத்தியின் அளவைவிடப் பணவழித் தேவையின் அளவு மிகுதியாக இருப்பதால் ஏற்படுவதால், உற்பத்தியைக் குறைக்கின்ற எந்த நடவடிக்கையும், பணவீக்க எதிர்ப்புக் கொள்கையின் நோக்கத்தைப் பாழ்படுத்திவிடும். விற்பனை வரி உயர்வால் ஏற்படுவதைவிட வருமான வரி உயர்வால் ஏற்படும் தூண்டுதலின்மை விளைவுகள் (disincentive effects), கூடுதலாக இருக்கக்கூடும். இதற்குரிய காரணம் என்னவென்றால், ஒருவருடைய வருமானத்திலிருந்து அதிக சதவீதப் பகுதி வரியாக எடுக்கப்பட்டு விட்டால், அந்த வருமானத்தைச் சம்பாதிப்பதற்காக முயற்சியைச் செலவிடுவது, முன்னிலும் குறைந்த பயன் உடையதாக ஆகி விடுகிறது; அப்படி ஆவதன்மூலம் உற்பத்திக்கான முயற்சியைக் குறைத்துவிடுகிறது. வாங்குதல் மீதான வரியின் (a tax on purchase) உயர்வால் குறைந்த அளவு தூண்டுதலின்மை விளைவே ஏற்படுவதாகக் கருதப்படுகிறது. ஏனென்றால், அவ் வரி, வாங்குவதைக் குறைக்கிறதே தவிர வருமானம் சம்பாதிப்பதைக் குறைப்பதில்லை. தூண்டுதல்களைப்பற்றி நாம் தெரிந்துகொள்ளமுடிவது மிகக் குறைவாக இருப்பதால், அவற்றைப்பற்றிய பொதுப்படையான விதிமுறைகளை வகுப்பது முறையாகாது. ஆனல், மேலே நாம் தெரிவித்திருப்பது, குறுகிய காலத்தைவிட நீண்ட காலத்திற்கே மிகுந்த பொருத்தம் உடையதாகத் தென்படுகிறது. வரி மாறுதல் தாற்காலிகமாக இருந்து, அது அத்தகையதுதான் என்பது அறியப் பட்டும் இருந்தால், வருமான வரி வீதங்கள் உயர்வதால் உற்பத்திமுயற்சி நடைமுறையில் குறையும் என்று கூறமுடியாது. வேலைக்கு வராதிருக்கும் போக்கு (absenteeism) வளருமா ? நிர்வாக அதிகாரிகள் நீண்ட விடுமுறை எடுத்துக்கொள்வார்களா ? உற்பத்திக்கான கால அட்டவணை தாமதப்படுத்தப்படுமா ? குறைந்த அளவுடைய மிகை நேர வேலை ஏற்றுக்கொள்ளப்படுமா ?

வரி உயர்வுக் கருவிகளாக எந்த வரிகள் நடைமுறையில் தேர்ந்தெடுக்கப்படும் என்பது, வரி மாறுதல்களை எந்த அளவு எளிதாகவும் விரைவாகவும் செய்யமுடியும் என்பதையே பெரும்பாலும் பொறுத்திருக்கிறது. வருமான வரியில் நிறுத்திவைக்கும் ஏற்பாடு (withholding system) அமைந்திருக்குமானால், குறுகிய காலத்தில் வரி வீதங்களை எளிதில் மாற்றியமைப்பதற்கு வருமான வரியே மிகச் சிறந்த கருவியாகக் காட்சியளிக்கிறது. கூட்டரசாங்க நடைமுறையிலும் மாநில அரசாங்க நடைமுறையிலும், விற்பனை வரி வீதங்களில் அல்லது ஆயவரி வீதங்களில் மாறுதல் ஏற்பட்டால், அது ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகக் கருதப்படுகிறது. அரசியல் கோணத்திலிருந்து பார்த்தால், வருமான வரி வீதங்களை மாற்றியமைப்பது எளிதில் இயலக்கூடியது. அதோடு வருமான வரி வீதங்களில் ஏற்படுத்தப்படும் குறிப்பிட்ட மாறுதல்களால் ஏற்படும் விளைவுகளைத் திட்டவட்டமான முறையில் முன்னதாகவே அறிவிக்க முடியும். கிடைக்கக்கூடிய விளைவுகளில் பல்வேறு வகையான மாறுதல்களைச் செய்யக்கூடிய வாய்ப்பும் நடைமுறையில் வரியில் மிகுதியாக உண்டு. சுழல் எதிர்ப்புப் பணிகளுக்கு வரிகளைப் பயன்படுத்தும் நடைமுறை கூட்டரசாங்க நிலையிலேயே மிகுதியாகக் காணப்படும். அந்த அரசாங்கத்தின் வரிகளில் தனியாள் வருமான வரியும் கார்ப்பரேஷன் வருமானவரியுமே மிக முக்கியமானவையாக இருப்பதால், சுழல் எதிர்ப்பு நோக்கத்திற்கு ஏற்ப வரி வீதங்களை மாற்றியமைப்பதற்கும் தேர்ந்தெடுப்பதற்கும், ஆய வரிகளைவிட இந்த வரிகளே மிகப் பொருத்தம் உடையனவாக இருக்கின்றன. இந்த உண்மைகளையெல்லாம் முன்வைத்துப் பார்த்தால், பணவீக்க எதிர்ப்புவரி விதிப்புக்கான எந்தத் திட்டத்திலும் வருமான வரிகளுக்கே முதல் இடம் தரப்படும் என்பது தெளிவாக விளங்கும்.

## செலவு மாற்றங்களா? வரி மாற்றங்களா? (Expenditure Variations vs. Tax Variations)

அதிக முக்கியத்துவம் தரப்படவேண்டியது செலவுக் கொள்கைக்கா அல்லது வரிக்கொள்கைக்கா என்பது, நிலைபேருக்கக் கொள்கையைக் கையாளும்போது நடைமுறையில் எழக்கூடிய ஒரு கேள்வி. வேலையின்மையை அல்லது பணவீக்கத்தை ஏற்படுத்தக்கூடிய போக்குகள் கடுமையாக இருக்குமானால், இரண்டு வகைக் கொள்கைகளையும் ஒருங்கே கையாளவேண்டிய இன்றியமையாமை ஏற்படும். அவற்றோடு சேர்த்துப் பணவழிக் கொள்கையையும் (monetary policy) மேற்கொள்ள வேண்டியிருக்கும். ஆனால் ஏற்பட இருப்பது மிதமான பின்னிறக்கமாகவோ மிதமான பணவீக்கமாகவோ (mild recession or mild

inflation) இருக்குமானால், நிலைபேறான விலைகளின்போது உள்ள வேலை நிறைவிலிருந்து ஏற்படுகிற எந்த மாறுதலும் தொடக்கத்தில் பெரும்பாலும் மிதமான நிலையில்தான் இருக்கும்—ஈடுசெய் கொள்கையின் எந்த வகை முதலில் கையாளப்படவேண்டும் என்பதைப்பற்றிய கேள்வி ஓரளவாவது எழுவது இயற்கை.

வேலை அளவில் ஏற்பட்டுள்ள வீழ்ச்சியை முறியடிப்பது நோக்கமாக இருக்கும்போது, வரியில் குறைக்கப்படுகிற ஒவ்வொரு டாலராலும் ஏற்படுகிற பயனைவிட செலவில் உயர்த்தப்படுகிற ஒவ்வொரு டாலராலும் ஏற்படுகிற பயன் மிகுதியாக இருக்கும் என்பதில் துளியும் ஐயமில்லை. 4ஆவது அத்தியாயத்தில் நாம் கொண்ட முறையின்மூலம் இந்த உண்மையை விளக்கிக் காட்டலாம். தனியார் இறுதிநிலை செலவு நாட்டம் 0.9 ஆக இருக்கிறது என்றும், ஆகவே லீவரேஜ் குணகம் 10ஆக இருக்கிறது என்றும் வைத்துக் கொள்வோம். செலவு உயர்வையும் வரிக் குறைவையும் தனித் தனியாக எடுத்துக்கொண்டு கவனித்தால், அரசாங்கத்தால் கூடுதலாகச் செலவழிக்கப்படுகிற ஒரு டாலரால் நீண்டகால அளவில் உண்டாக்கப்படுகிற வருமானம் பின் வருமாறு இருக்கும்:

$$\$\ 1+{\cdot}90+{\cdot}81+{\cdot}729+\ldots\ldots\ldots\ldots = \$\ 10$$

அதே சமயத்தில், வரியில் குறைக்கப்பட்ட ஒரு டாலரால் தனியார் துறையில் 9 டாலர் அளவுள்ள வருமானம் உண்டாக்கப்படும் என்பது கீழே தரப்பட்டுள்ளது:

$$\$\ {\cdot}90+{\cdot}81+{\cdot}729+\ \ldots\ldots\ldots\ldots = \$\ 9$$

ஆகவே வரவு செலவுத் திட்ட மாறுதலின் ஒவ்வொரு டாலராலும் ஏற்படுகிற பயனைக் கணக்கிட்டுப் பார்த்தால், வரிக் குறைப்பைவிட செலவு உயர்வே கையாளத்தக்கது என்கிற முடிவு ஏற்படுகிறது.

பணவீக்கத்தை முறியடிப்பது நோக்கமாக இருக்கும்போது, தனியார் நாட்டங்கள் உயர்ந்த அளவில் இருப்பதாக வைத்துக் கொள்வோம். அரசாங்கச் செலவில் குறைக்கப்படுகிற ஒரு டாலரால், (நாட்டின் மொத்த) வருமானத்தில் நீண்டகால அளவில் கீழ்க்கண்ட மாறுதல் ஏற்படும்.

$$-(\$\ 1+{\cdot}99+{\cdot}9801+{\cdot}9703+\ldots\ldots\ldots\ldots) = -\$\ 100$$

அதே சமயத்தில், வரி செலுத்துவோரிடமிருந்து ஒரு டாலர் எடுத்துக்கொள்வதால், (நாட்டின் மொத்த) செலவு ஓட்டம் நீண்டகால அளவில் கீழ்கண்டவாறு குறையும்:

$$-(\$\ .99+.9801+.9703+\ldots\ldots\ldots\ldots) = -\$\ 99$$

ஆகவே இந்த முறையும் செலவு மாறுதலே வரி மாறுதலைவிட மிகுந்த பயன் உள்ளதாக இருப்பதை அறிகிறோம்.

வரி மாறுதலின் ஒவ்வொரு டாலராலும் ஏற்படுகிற பயனை விடச் செலவு மாறுதலின் ஒவ்வொரு டாலராலும் ஏற்படுகிற பயன், பெரும்பாலான நிலைமைகளில் கூடுதலாக இருப்பது உண்மையே என்றாலும், எந்தவகையான ஈடுசெய் கொள்கையைக் கையாள்வது என்பதைப்பற்றி முடிவுசெய்யும்போது, இந்த வேறுபாட்டைத்தவிர வேறு பல நிலைமைகளையும் நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டியிருக்கிறது. குறிப்பிட்ட கொள்கையைச் சட்ட மன்ற முறைப்படி (legislative process) நிறைவேற்றிவைப்பது எளிய செயல்தானா என்பது, இந்தத் தொடர்பில் நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டிய இரண்டாவது கேள்வி. செலவைக் குறைக்கும்போது மிகுந்த எதிர்ப்பு ஏற்படுகிறது ; ஆனால் செலவு உயர்வு ஏற்பாடுகள் எளிதில் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. அதுபோலவே, வரிவீத உயர்வைவிட வரிவீதக் குறைப்பு எளிதில் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. நிலைபேறுக்க நோக்கத்திற்குத் தொடர்பில்லாத வேறு பல காரணங்களாலேயே இவ்வாறு ஏற்படுகின்றன. இதிலிருந்து ஓர் உண்மை புலனாகிறது.ஒரு குறிப்பிட்ட நிலைமையில், பொருத்தமான பணவீக்க எதிர்ப்புக் கொள்கைகளைவிடப் பொருத்தமான பின்னிறக்க எதிர்ப்புக் கொள்கைகளைச் சட்டமன்றத்தில் நிறைவேற்றுவது எளிது என்பதே அந்த உண்மை. ஆனால் ஒரு குறிபிட்ட வாணிப நிலைமையில் கையாளக்கூடிய இரண்டு வகை ஏற்பாடுகளில், செலவு மாறுதல்களை விட வரி மாறுதல்களே மிகுந்த எதிர்ப்புக்கு ஆளாகின்றன. சட்ட மன்றத்தில் நிறைவேறும் ஒரு செலவு மாறுதலைவிட வரி மாறுதலே நீண்ட காலத்திற்கு நிலைத்திருக்கக்கூடியது என்று பொதுமக்கள் கருதுகிறார்கள். வரிவீதங்களில் ஒரு மாறுதல் ஏற்பட்டு விட்டால், புதிய வரிவீதங்களுக்குத் தங்களைச் சரிப்படுத்திக் கொள்வதற்குத் தேவைப்படும் காலம்வரையில் அந்த வரிவீதங்கள் தொடர்ந்து இருக்கவேண்டும் என்று எதிர்பார்க்கத் தங்களுக்கு உரிமை உண்டு என்று வரி செலுத்துபவர்கள் கருதுகிறார்கள். மொத்தச் செலவுகளைப் பொறுத்தவரையில் இத்தகைய நிலைமை இந்த அளவில் இருப்பதில்லை. வரவுசெலவுத் திட்ட ஏற்பாட்டின்மீது வந்து மோதுகிற பலதிறப்பட்ட வற்புறுத்தல்களின் விளைவாக ஏற்படுபவையே மொத்தச் செலவுகள். ஆகவே, வரிவீதங்களைப் பொறுத்தவரை அவற்றில் அடிக்கடி மாறுதல் செய்யக்கூடாது என்பதாக ஒரு மரபு இருக்கிறது என்று கூறலாம்.

கையாளப்படவேண்டியது வரி நடவடிக்கையா அல்லது செலவு நடவடிக்கையா என்பதை முடிவு செய்யும்போது கவனிக்க

வேண்டிய முக்கியமான ஒரு நிலைமை, இந்த நடவடிக்கைகளில் எது மிக விரைவில் பயனை விளைப்பதாக இருக்கமுடியும் என்பதாகும். நடப்பு உற்பத்திப் பொருள்களுக்கும் ஊழியங்களுக்குமான தேவை நடைமுறையில் பாதிக்கப்படும்போதுதான் ஒரு நடவடிக்கை பயன் விளைப்பதாக ஆகிறது. குறிப்பிட்ட செலவுத் திட்டங்களை மேற்கொள்வதற்கான முடிவு செய்யப்பட்ட பிறகும் அவை நடைமுறைக்கு வந்து பயன் விளைப்பதற்கு நீண்டகாலம் ஆகிறது. அதாவது, ஒரு செலவுக் கொள்கை சட்டமன்றத்தில் நிறைவேற்றப் பட்டுவிட்டாலும், அக் கொள்கைக்கு உரிய அமைப்பு முறை உருவாக்கப்பட்டு, விவரக் குறிப்புகள் (specifications) தயாரித்து முடிக்கப்பட்டு, ஒப்பந்தங்களும் (contracts) அளிக்கப்பட்டு, அது நடைமுறைக்கு வரத்தொடங்கிய பின்னர்தான், பொருளாதாரத்தில் அதனுடைய விளைவு தோற்றமளிக்கும். செலவுக்கொள்கை முடிவுசெய்யப்படுவதற்கும் அது நடைமுறைக்கு வருவதற்கும் இடையே உள்ள கால இடைவெளி, கூட்டரசாங்கப் பொதுப்பணிக் கட்டுமானத்தில் எவ்வளவு முக்கியமானதாக இருக்கிறது என்பதை, நிதி ஆண்டு 1960-ன் வரவுசெலவுத் திட்ட மதிப்பீடுகளில் சேர்க்கப்பட்டிருக்கிற அத்தகைய கட்டுமானச் செலவுகளின் மதிப்பீட்டிலிருந்து தெரிந்துகொள்ளலாம்.[6] பொதுப் பணிகளை விரைந்து நிறைவேற்றும் திட்டம் இருந்ததாக இந்தப் புள்ளி விவரங்கள் தெரிவிக்கவில்லை. அதற்கு மாறாக, 1960-ல் ஒத்த நிலை வரவுசெலவுத் திட்டத்தைப் பெறுவதற்காகச் சில பொதுப் பணிகளை வேண்டுமென்றே மெதுவாக மேற்கொள்ளும் நிலை இருந்தது என்பது, இப் புள்ளிவிவரங்களிலிருந்து தெரியவருகிறது. ஆனால், பொதுப்பணிகளை நடைமுறைக்குக் கொண்டுவருவது என்பது, மெதுவாக நடைபெறும் இயல்புடையதுதான். பொதுவாக எல்லாச் சமயங்களிலும், சிறப்பாகக் குறுகிய கால வேலையின்மை எதிர்பார்க்கப்படுகிறபோது, இந்த இயல்பு ஒரு பெரிய குறைபாடாக அமைந்துவிடுகிறது. ஏனென்றால், இந்த இயல்பின் காரணமாகச் செலவுத் திட்டத்தால் குறிப்பிடத்தக்க விளைவு எதுவும் உடனடியாக ஏற்படுவதில்லை. அதுமட்டுமல்ல, மீட்சி நிலையானது கிட்டத்தட்ட முடிந்தபிறகே அத் திட்ட விளைவின் பெரும் பகுதி தென்படுகிறது. ஆனால் மீட்சிக்கட்டம் முடிந்தபின், நிலைபேறுக்கத்திற்காகத் தேவைப்படுபவை, பின்னிறக்க எதிர்ப்பு ஏற்பாடுகள் அல்ல; பணவீக்க எதிர்ப்பு ஏற்பாடுகளே.

செலவுத் திட்டத்திற்கு மாறாக, வரிக்குறைப்புத் திட்டத்தைக் கையாண்டால், குறுகியகாலத்தில் மிகுந்த பயனைப் பெறமுடிகிறது. தனியாள் வருமான வரிகளும் கார்ப்பரேஷன் வருமான வரிகளுமே, கூட்டரசாங்க வரித்திட்டத்தின் தலையாய பகுதிகளாகும்.

தனியாள் வருமான வரி வசூலில் ஏறத்தாழ மூன்றில் இரண்டு பங்கு, தனியாட்களின் ஊதியத்திலிருந்து பிடித்துக்கொள்ளப் படுகிறது. அப்படிப் பிடித்துக்கொள்வது, ஊதியம் தரும் நாட்களில் நடைபெறுகிறது. ஆகவே, பிடித்துக்கொள்ளும் பட்டியலில் உள்ள வருமான வரிவீதங்கள் உயர்த்தப்பட்டால் அல்லது குறைக்கப் பட்டால், அந்த உயர்வு அல்லது குறைவு நடைமுறைக்கு வந்த நாளுக்கு அடுத்தாற்போல் வருகிற ஊதிய நாளிலேயே (pay day) அதன் விளைவு உருவாகிவிடுகிறது. தனியாள் வருமான வரியில் எஞ்சியுள்ள மூன்றில் ஒரு பகுதியும், கார்ப்பரேஷன் வருமான வரிகளின் பெரும் பகுதியும் குறிப்பிட்ட ஆண்டுக்கு அறிவிக்கப் பட்ட மதிப்பீடுகளின் அடிப்படையில், மூன்று மாதங்களுக்கு ஒரு முறை வசூலிக்கப்படுகிறது. குறிப்பிட்ட ஆண்டில், மூன்று மாதங்களுக்கு ஒருமுறை பணம் செலுத்தும் தேதியன்று, அந்த ஆண்டுக்குரிய அறிவிப்புகளைத் (declarations) திருத்தி அமைத்துக் கொள்ள முடியும். ஆகவே, வரி வீதங்கள் குறைக்கப்பட்டால், குறிப்பிட்ட ஆண்டிற்குரிய வரித்தொகை மதிப்பீடும் (estimated tax amount), கால் ஆண்டுச் செலுத்தல்களும் (quarterly payments) குறையும். பிடித்துக்கொள்ளும் வரிவீத மாறுதல்களால் செலவிடத் தக்க வருமானத்தில் உடனடியாக மாறுதல் ஏற்படுவதைப்போல, மதிப்பீட்டு வரிவீத மாறுதல்களால் அவ்வளவு விரைவாகப் பயன் விளைவதில்லை என்றாலும், பயன் விளைவதற்குப் பிடிக்கிற காலம் (lead time) ஏறத்தாழச் சிறிய அளவினதாகவே இருக்கிறது. உடனடியாக இன்னும் அதிகமான பயன் விளையவேண்டும் என்கிற நோக்கம் இருந்தால், வரிவீதக் குறைப்பைக் கடந்த காலத்தி லிருந்து நடைமுறைக்குக் கொண்டுவரலாம். அப்படிக் கொண்டு வரும்போது, ஏற்கெனவே பிடித்துக்கொள்ளப்பட்ட தொகை புதிய வரிவீதத்தின்படிப் பிடித்துக்கொள்ள வேண்டியதைவிட மிகுதியாக இருக்குமானால், நடப்புக் காலத்தில் பிடித்துக் கொள்ளும் வீதங்களை அதற்கு ஈடுசெய்யும் முறையில் குறைத்துக் கொள்ளலாம். அதுபோலவே, ஏற்கெனவே செலுத்தப்பட்ட காலாண்டுத் தொகைகள் செலுத்தவேண்டியதைவிடக் கூடுதலாக இருக்குமானால், அதை ஈடுசெய்யும் முறையில் அறிவிப்புகளைத் திருத்திக்கொள்ளலாம். இந் நிலையில், வரிவீதக்குறைப்பின் அளவைவிட அக் குறைப்பால் உடனடியாக ஏற்படும் விளைவின் அளவு கூடுதலாக இருக்கும்.

ஆகவே, வேலையின்மை அல்லது பணவீக்கம் குறுகிய காலத்திற்கே இருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறபோது, அதனை எதிர்ப்பதற்கு முதலில் வரி முறையைக் கையாள்வதே சிறந்த ஏற்பாடு என்பது தெளிவாக விளங்குகிறது. **செலவு மாறுதலின் தாக்குதல் (impact of**

expenditure change) உணரப்பட்ட நிலையில், செலவு மாறுதலின் ஒவ்வொரு டாலராலும் ஏற்படும் விளைவைவிடக் கூடுதலாக இருந்தாலும் செலவு மாறுதலின் தாக்குதலைவிட வரிக்குறைப்பின் தாக்குதல், வழக்கமான நிலைமைகளில் மிக விரைவில் ஏற்பட்டு விடுகிறது. ஆனால், நிலையான விலைகளில் உள்ள வேலைநிறைவில் (full employment at stable prices) ஏற்படும் மாறுதல் நீண்ட காலத்திற்குத் தொடர்ந்து இருக்குமானால் வரிக்கொள்கை, செலவுக் கொள்கை ஆகிய இரண்டும் கையாளப்படவேண்டும்.

**தாமே இயங்கும் ஈடுசெய் ஏற்பாடுகள் (Automatic Compensatory Measures)**

வருவாய் மாறுதலையும் செலவு மாறுதலையும் நிலைபேறுக்க நோக்கத்திற்குப் பயன்படுத்துவதாக இருந்தால், எளிதில் மாற்றக் கூடிய தன்மையை (flexibility) நிலையான அடிப்படையில் நிதி அமைப்பின் ஒரு பகுதியாகவே அமைத்துவிடுவதா அல்லது நிலைபேறின்மை தோன்றுகிறபோது அதற்கு ஏற்ற மாற்றங்களைச் சட்டமன்றத்தின் வாயிலாக நிறைவேற்றிக்கொள்வதா என்னும் பொதுப்படையான கேள்வி தொடர்ந்து எழத்தான் செய்யும். எளிதில் மாறக்கூடிய தன்மை என்னும் ஏற்பாட்டை ஏற்றுக் கொண்டால், நிதி நிறுவனங்களின் நிலையான அமைப்பு ஒன்று (a permanent structure of fiscal institutions) இருக்கவேண்டும் என்பதும், வரவுகள், செலவுகள் ஆகிய இரண்டையும் பயன் படுத்தும் அந்த அமைப்பு, நிலைபேறின்மை ஏற்படும்போது, அதை எதிர்த்துத் தானாகவே தகுந்த முறையில் பணியாற்றவல்லதாக இருக்கவேண்டும் என்பதும் தெளிவாகின்றன. இதற்கு மாறாகத் தேவைக்கு ஏற்ற முறையில் மாற்றங்களைச் செய்யும் ஏற்பாட்டை ஏற்றுக்கொண்டால், குறிப்பிட்ட நேரத்தில் ஏற்படக்கூடிய மாறுதல்களை ஆய்ந்து அறியவேண்டும் என்பதும் அப்படி ஏற்படக் கூடிய மாறுதல்களை நிலைபேறுக்கத்திற்கு ஏற்ற வகையில் மாற்றி அமைப்பதற்கு வழி வகுக்கவேண்டும் என்பதும் தெளிவாகத் தெரிகின்றன.

ஐக்கிய அமெரிக்கப் பொருளாதாரத்தில் தாமாகவே நிலைபேறுக்கம் செய்யும் நிதிக்கருவிகளில் முக்கியமானவை பின்வருமாறு :

வளர்வீத நிகர வருமான வரிகள்

சம்பளப் பட்டியல் வரிகள்

போகப்பொருள்கள் (luxuries) மீதான விற்பனை வரிகளும் ஆயவரிகளும்

வேலையின்மை இழப்பீட்டு உதவித்தொகைகள்

முதிய வயது மற்றும் எஞ்சியிருப்போர்க்கான இன்சூரன்ஸ் உதவித் தொகைகள்

நிவாரணச் செலுத்தல்கள்.

வரி ஏற்பாடுகளில், கூட்டரசாங்கத்தின் தனியாள் வருமான வரியே மிகவும் குறிப்பிடத்தக்கது ஆகும். இதற்கு ஒரு காரணம், நாட்டின் மொத்த ஆக்கத்தில் ஏற்படும் மாறுதல்களால் இந்த வரியின் வரவில் பெரு மாறுதல்கள் ஏற்படத்தக்க முறையில் இந்த வரி, விரிவான அடிப்படையைக் கொண்டிருப்பதாகும். எடுத்துக் காட்டாக, பின்னிறக்கத்தைப் பெற்றிருந்த நிதியாண்டு 1958-ல் தனியாள் வருமான வரியிலிருந்து கிடைத்த நிகர வரவைவிட மீட்சி நிலையைப்பெற்றிருந்த நிதியாண்டு 1959-ல் கிடைத்த வரவு இரண்டு பில்லியன் டாலர் அளவுக்கு அதிகமாக இருந்தது. இந்த வரி, வளர்வீதத் தன்மையைப் பெற்றிருப்பதால், ஈடுசெய் கருவி யாகப் பயன்படுவதற்கு மிகவும் பொருத்தம் உடையதாக இருக்கிறது. வருமானங்கள் உயரும்போது, வருமானங்களின் இறுதிநிலைப் பகுதிகள் (marginal portions), உயர்ந்த வரிவீதப் பிரிவுகளை (higher tax rate brackets) அடைந்துவிடுகின்றன. இந் நிலையில், வருமானம் உயரும் வீதத்தைவிட செலுத்தப்பட வேண்டிய வரித்தொகை உயரும் வீதம், கூடுதலாக இருக்கிறது. அதேபோல, வருமானங்கள் குறையும்போது, வரிசெலுத்தல்கள் வருமானத்தைவிட வேகமாகக் குறைகின்றன. ஏனைய நிலைகளில் உள்ள வருமானப் பிரிவுகளைவிட இடைநிலையில் உள்ள வருமானப் பிரிவுகளில்தான், வரிவீதங்கள் அதிக வளர்வீதம் படைத்தனவாக உள்ளன. தனியாள் வருமானங்களின் பெரும்பகுதி உள்ள இடங்களில்தான் வளர்வீத விளைவும் (progressive effect) மிகுதியாகக் காணப்படுகிறது என்பதுதான் இதன் பொருள். தானே இயங்கும் ஈடுசெய் கருவி என்னும் முறையில் பார்த்தால், தனியாள் வருமான வரியைவிடக் கார்ப்பரேஷன் நிகர வருமானத் தின் மீதுள்ள கூட்டரசாங்க வரி, மிகக் குறைந்த பயனையே தரவல்லதாக உள்ளது. இதற்குறிய காரணங்கள் இரண்டு. கார்ப்பரேஷன் நிகர வருமான வரியின் வீதங்கள் நடைமுறையில் வளர்வீதம் உடையனவாக இல்லை என்பது ஒரு காரணம். வரியைச் செலுத்துவதில் குறிப்பிடத்தக்க கால தாமதம் ஆகிறது என்பது மற்றொரு காரணம்.

எத்தகைய பண்டங்கள் வாங்கப்படும் அளவு நாட்டின் மொத்த ஆக்கம் உயரும்போது உயர்ந்து, தாழும்போது தாழ்கிறதோ, அத்தகைய பண்டங்கள்மீது விற்பனைவரிகளும்

ஆயவரிகளும் விதிக்கப்பட்டால், அந்த வரிகளால், நிதி அமைப்பில் தேவையான தானே இயங்கும் வளைந்துகொடுக்கும் தன்மை (automatic flexibility) உண்டாகும். ஆனால், தனியாள் வருமானவரிகளில் உள்ள வளர்வீதத் தன்மை இந்த வரிகளில் கிடையாது. இந்த வரிகளின் பயனும் குறைவாகத்தான் இருக்கும். எந்தப் பொருள்கள் வாங்கப்படுவது, வாணிபச்சுழலின் ஏற்ற இறக்கங்களுக்கு ஏற்ப மாறுபடுகிறதோ அந்தப் பொருள்கள்மீதே இந்த வரிகள் தொடர்ந்து விதிக்கப்படுகின்றன என்று கூறுவதற்கில்லை. ஆகவே, ஆயவரிகளில் தானே இயங்கும் மாறுந்தன்மை பொருத்தமான முறையில் இருக்கக்கூடும் என்றாலும், ஏனைய வரிமுறைகளில் இருப்பதைவிட இந்த வரிகளில் இருக்கும் மாறுந் தன்மையின் அளவு குறைவாகவே இருக்கும்.

சம்பளப் பட்டியல் வரிகளாலும் (payroll taxes), தாமே இயங்கும் சுழல் எதிர்ப்பு நிலைமைகள் ஓரளவுக்கு ஏற்படக்கூடும். இந்த வரிகள் வருமானத்தின் அடிப்படையில் இல்லாமல் சம்பளப் பட்டியலின் அடிப்படையில் அமைந்திருப்பதால், வருமானம், வேலை ஆகிய இரண்டிலும் ஏற்படும் ஏற்ற இறக்கங்களுக்கு ஏற்ப இவ் வரிகளின் அடிப்படை மாறுகிறது. அடிப்படையின் அளவு எத்தகையதாக இருந்தாலும், இந்த வரிகள், ஒரே நிலையான வீதத்தில் (at a fixed rate) விதிக்கப்படுகின்றன. முதிய வயது மற்றும் எஞ்சியிருப்போர் இன்சூரன்ஸ் அடிப்படையில் அமைந்த வரி, முதல் 4,800 டாலர் வருமானத்தின்மீதும், வேலையின்மை இழப்பீட்டு வரி முதல் 3,000 டாலர் கூலியின்மீதும்தான் விதிக்கப் படுகின்றன. ஆகவே இந்தக் குறைந்த அளவுகளுக்கு மேற்பட்ட நிலையில், வருமானத்திலோ சம்பளப் பட்டியலிலோ ஏற்படும் ஏற்ற இறக்கங்களால், வரியின் அடிப்படையிலோ, வரிசெலுத்தப்படுகிற தொகையிலோ எத்தகைய மாறுதலும் ஏற்படாது. அதோடு, பெரும்பாலான மாநிலங்களின் தகுதி வீத ஏற்பாடுகள் (merit rating schemes) வேலையின்மை வரிவீத மாறுதல்களில் முறையற்ற தாமதம் ஏற்பட இடம் தருகின்றன. சம்பளப் பட்டியல் வரியின் வீதங்கள் பின்னிறக்கத்தின்போது குறைந்து, செழுமையின்போது உயருமானால் சுழல்எதிர்ப்பு நோக்கம் நிறைவேற உதவியாக இருக்கும். ஆனால், நடைமுறையில் இதற்கு நேர்மாறான நிலை அடிக்கடி உருவாகிறது. வேலையின்மைக் காப்பிருப்பு நிதியின் இருப்புத்தொகையின் (unemployment reserve balance) அளவை யொட்டிச் சம்பளப் பட்டியல் வரிவீதம் அமைக்கப்படுகிறபோது இத்தகைய நிலைதான் உண்டாகிறது. செழுமைக் காலங்களில், சம்பளப் பட்டியல் உயர்ந்து உதவித்தொகைச் செலுத்தல்கள் (benefit payments) குறைவதால், மேற்படி நிதியின் இருப்புத்

தொகை அதிகமாக இருக்கிறது ; ஆகவே வரிவீதம் குறைகிறது. வேலையின்மைக் காலங்களில், சம்பளப் பட்டியல் தாழ்ந்து, உதவித்தொகைச் செலுத்தல்கள் உயர்வதால், இருப்புத்தொகை குறைகிறது. ஆகவே, பல மாநிலங்களில் வரிவீதம் உயர்கிறது. வேண்டுமானால் இந்த நிலையைத் திருத்தியமைக்கமுடியும். ஆனால் அப்படித் திருத்தியமைக்காதவரையில், இந்த வரியானது, வாணிபச்சுழலைப் பொறுத்தவரையில் தவறான விளைவையே உண்டாக்கும்.

விலைகள் (உற்பத்திக் காரணிகளின் விலைகள் உட்பட) தற்போது இருப்பதைவிட இன்னும் நெருக்கமான முறையில் வாணிபச்சுழலின் தன்மைக்கு ஏற்ப மாறுமானால், வரி ஏற்பாடுகளின் தாமே இயங்கும் நிலைபேறுக்க விளைவு, பொதுவாக இன்னும் அதிகமாக இருக்கும். வாணிபச்சுழலின்போது கூலிவீதங்களும் சம்பளவீதங்களும் விரைவாக உயர்ந்து விரைவாகக் குறையுமானால், வருமானவரியின் அடிப்படையின் மாறுந்தன்மை (flexibility) இன்னும் மிகுதியாக இருக்கும். அதுபோலவே சம்பளப் பட்டியல் வரிகளின் மாறுந்தன்மையும், பொருள்களின் விலையை அடிப்படையாகக் கொண்டுள்ள ஆயவரிகள், விற்பனை வரிகள் ஆகியவற்றின் மாறுந்தன்மையும் கூடுதலாக இருக்கும். இப்படி நாம் கூறுவது, விலைகளில் மிகுதியான மாறுதல் இருக்க வேண்டும் என்று வாதாடுவதற்காக அல்ல ; விலைகளின் மாறுந்தன்மை மிகுதியாக இருந்தால் வருவாய்களின் மாறுந்தன்மையும் மிகுதியாக இருக்கும் என்னும் உண்மையைச் சுட்டிக் காட்டுவதற்காகத்தான்.

வரவுசெலவுத் திட்டத்தின் செலவுப்பகுதியில் உள்ள தாமே இயங்கும் நிதி நிலைபேறுக்கக் கருவிகளில் (automatic fiscal stabilisers) தலையாயவை மாற்றுச் செலுத்தல்களே. இச் செலுத்தல்கள் திறந்த முடிவு உடையவை (open ended). அதாவது, இச் செலுத்தல்களுக்கான தகுதி அளவைகள் (qualification criteria) முடிவு செய்யப்பட்டிருக்கின்றன. தரப்படுகிற தொகையின் மொத்த அளவு, மேற்படி தகுதி பெற்றுள்ளவர்களின் எண்ணிக்கையைப் பொறுத்திருக்கிறது. முதன்மையான சமூகப் பாதுகாப்புத் திட்டங்கள் இந்த வகையைச் சேர்ந்தவையே. இத் திட்டங்களில் மிக அதிகமான ஏற்ற இறக்கங்களுக்கு ஆளாகக்கூடியது வேலையின்மை இழப்பீட்டுத் திட்டமே. உதவித்தொகைச் செலுத்தல்கள், 1957ஆம் ஆண்டின் மூன்றாவது காலாண்டிற்கும் நான்காவது காலாண்டிற்குமிடையே ஏறத்தாழப் பாதிஅளவு உயர்ந்திருக்கிறது என்பதையும், 1958-ன்

மூன்றுவது காலாண்டிற்குள் மூன்று மடங்காக உயர்ந்திருக்கிறது என்பதையும் 284ஆம் பக்கத்தில் தரப்பட்டுள்ள அட்டவணை தெளிவாக்குகிறது. பொருளாதாரத்தின் மொத்தக்கூலி மற்றும் ஊதியச் செலுத்தல்கள், 1957-ன் மூன்றுவது காலாண்டிற்கும், 1958-ன் இரண்டாவது காலாண்டிற்கும் இடையே 5·5 பில்லியன் டாலர் அளவுக்குக் குறைந்திருக்கையில், வேலையின்மை இழப்பீட்டு உதவித்தொகைகள், அதே காலத்தில் 2·5 பில்லியன் டாலர் அளவுக்கு உயர்ந்திருக்கின்றன; அப்படி உயர்ந்ததால் கூலி, மற்றும் ஊதியத்தின் வீழ்ச்சியில் ஏறத்தாழப் பாதிஅளவை ஈடு செய்துவிட்டன.

தானே இயங்கும் நிலைபேறுக்கக் கருவிகள் என்னும் கோணத்திலிருந்து பார்த்தால், வேலையின்மை இழப்பீட்டுத் திட்டத்தைவிட முதிய வயது மற்றும் எஞ்சியிருப்போர்க்கான இன்சூரன்ஸ் திட்டத்தால் குறைந்த அளவு பயனையே அளிக்கமுடியும். இந்தத் திட்டத்தின்படி அறுபத்தைந்து வயதான ஆட்கள் (பெண்களாக இருந்தால் அறுபத்திரண்டு) வேலையிலிருந்து ஓய்வுபெற்று மாதாந்தர உதவித்தொகைகளைப் பெறமுடியும். இந்த உதவித் தொகைகளைப் பெறுவதற்கான தகுதி, வேலை நிலைமையைப் பொறுத்ததாக இல்லாமல் வயதைப் பொறுத்ததாக இருந்தாலும், வேலையின்மை மிகுதியாக இருக்கும் காலங்களிலேயே வேலையிலிருந்து ஓய்வு பெறுவோரின் எண்ணிக்கையும் மிகுதியாக இருக்கிறது என்பதை அனுபவத்திலிருந்து நாம் அறியமுடிகிறது. ஆனால், வேலையின் அளவு உயரும்போது, வேலையைத் திரும்பப்பெற விழைவோரின் எண்ணிக்கை உயரக்கூடும் என்றாலும், பெரும்பாலும் அவ்வாறு நிகழ்வதில்லை. இந்தத் திட்டமானது வேலையின் பதிலியாகப் (substitute for employment) பயன்படுத்தப்பட்டிருப்பதை 284 ஆம் பக்கத்தில் உள்ள அட்டவணையிலிருந்து தெரிந்துகொள்ளலாம். குறிப்பாக, 1958-ன் இரண்டாவது காலாண்டில், வேலையின்மை அதன் உச்சஅளவை அடைந்தபோது இந்தத்திட்டம் இம்முறையில் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. ஆனால், அதன்பின், வேலையின் அளவு உயர்ந்தபோது உதவித்தொகைகளின் மொத்த அளவு குறையாமல் இருந்ததிலிருந்து, இந்தத் திட்டம் பின்னிறக்கத்தின்போதுமட்டும் நிலைபேறுக்கத்திற்குப் பயன்படக்கூடிய 'ஒருவழித் திட்டமே' (a one way program) என்னும் உண்மை துலக்கமாகத் தெரிகிறது.

உதவி தேவைப்படுகிற நிலையில் இருப்பவர்கள் என்னும் தகுதியை உடையவர்களுக்குமட்டுமே பெரும்பாலும் நிவாரணச் செலுத்தல்கள் (relief payments) தரப்படுகின்றன. மேலே

விளக்கிக் கூறப்பட்ட சமூகப் பாதுகாப்பு திட்டங்களின்படி உதவித் தொகைகளைப் பெறுகிற தகுதி இல்லாதவர்களே நிவாரணச் செலுத்தல்களைப் பெறுகிறார்கள். ஆகவே, வேலையின் அளவில் ஏற்படுகிற மாறுதலால், வேலையின்மை இழப்பீடு முதலிய திட்டங்களின்படி உதவித் தொகை பெறுபவர்களின் எண்ணிக்கையில் மாறுதல் ஏற்படுகிற அளவுக்கு, நிவாரணச் செலுத்தல்களைப் பெறுபவர்களின் எண்ணிக்கையில் மாறுதல் ஏற்படாது. மாநில அரசாங்கங்களும் தல அரசாங்கங்களும், பண நெருக்கடி மிகுந்த நல்வாழ்வை உயர்த்தவல்ல வரவுசெலவுத் திட்டங்களின்படிப் பணியாற்றவேண்டியிருப்பது, நிவாரணச் செலுத்தல்களின் மொத்தத் தொகையில் மிகுதியான ஏற்ற இறக்கங்கள் ஏற்படுவதைத் தடுக்கும் மற்றொரு கருவியாக இருக்கிறது. செழிப்பான வேலை நிலைமைகளின்போதுகூட இந்த வரவு செலவுத் திட்டங்களில் நெருக்கடி இருக்கிறது. ஆகவே, வேலையின்மை ஏற்படும்போது, நிவாரணச் செலுத்தல்களை மிகுதியாகத் தருவது, எளிதில் இயலக்கூடிய செயலாக இருப்பதில்லை.

தாமே இயங்குகிற அல்லது இணைத்து அமைக்கப்பட்டுள்ள ஈடுசெய் முறைகளில் (automatic or built in compensatory measures) மூன்று நன்மைகள் அமைந்துள்ளன. அவை விரைந்து செயலாற்றுகின்றன என்பது முதல் நன்மை. இத்தகைய முறைகள், பொருளாதாரத்தில் அமைந்துள்ளதும், வாணிப நடவடிக்கைகளின் மாறுதல்களை எடுத்துக்காட்டுவதுமாகிய ஒரு மைய மாறியுடன் (a central variable) அடிப்படையில் இணைக்கப்பட்டுள்ளன. நிகர வருமானம், சம்பளப் பட்டியல், அல்லது சில்லறை விற்பனை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டுள்ள வரிகளிலிருந்து கிடைக்கும் வருவாய், நாட்டின் மொத்த ஆக்கமும் வேலையின் அளவும் உயரும்போது உயரும் என்றும், அவை இரண்டும் குறையும்போது குறையும் என்றும் எதிர்பார்க்கலாம். அரசாங்கத்தின் மொத்தச் செலுத்தல்களை வேலையின்மையின் அளவோடு இணைத்துள்ள செலவுத் திட்டங்களும், வாணிப நிலைமைகளில் மாறுதல் ஏற்படும்போது, பொருத்தமான முறையில் உயரும் அல்லது குறையும். ஆனால், விலை மாறுதல்களை அடிப்படையாகக் கொண்டுள்ள திட்டங்கள், முறைப்படி அமைந்த மாறுந் தன்மையை ஓரளவுக்குப் பெற்றிருக்கக்கூடும் என்றாலும், அவை எப்போதுமே அத்தகைய தன்மையைப் பெற்றிருக்கும் என்று கூறமுடியாது. வரி அல்லது செலவானது மைய மாறி ஒன்றுடன் நெருக்கமாகப் பிணைக்கப்பட்டிருந்தால், ஈடு செய்

கொள்கையின் தேவையை விளக்கும் புள்ளி விவரங்கள் கிடைப்பதற்கு முன்னரே, பொருளாதாரத்தில் அக் கொள்கையின் விளைவு தோற்றம் அளிக்கக்கூடும்.

இணைத்து அமைக்கப்பட்ட நிலைபேறுக்கக் கருவிகளின் (built in stabilisers) இரண்டாவது நன்மை, அவை கையாளப்படுகிற ஒவ்வொரு முறையும், அரசியல் முறைப்படி நிறைவேற்றப்பட வேண்டிய நிலைமைக்கு அவை ஆளாவதில்லை என்பதே. பொருளாதாரப் போக்குகளைக் கண்டறிவதிலும், சட்டமன்ற முடிவுகளை அல்லது நிர்வாக முடிவுகளைச் செய்வதிலும் ஏற்படுகிற தாமதம், இணைத்து அமைக்கப்பட்ட முறைகளில் உண்டாவதில்லை என்பது மட்டுமல்ல முக்கியம். பொருளாதாரப் போக்குகளைப் பலப் படுத்துவதிலும், நடப்புப் புள்ளி விவரங்களின் உள்ளுறைப் பொருளை உரை விளக்கம் செய்வதிலும் மனிதர்கள் செய்யக்கூடிய தவறுகளும் இந்த முறைகளில் ஏற்படுவதில்லை. கொள்கையை வகுக்கும்போது பொருளாதாரத் தொடர்பில்லாத சிந்தனைகளால் அது பாதிக்கப்படுகிற நிலையும் இவற்றின் தொடர்பில் உருவாவதில்லை. பொருளாதாரக் காரணங்களைமட்டுமே அடிப் படையாகக் கொண்ட நடவடிக்கை தானுக எடுக்கப்பட்டுவிடுகிறது. அப்படி எடுக்கப்படும் நடவடிக்கையைப் பாதிக்கும் வாய்ப்பு ‘அரசியல்’ காரணங்களுக்குத் தரப்படுவதில்லை.

தாமே இயங்கும் நிலைபேறுக்கக் கருவிகளின் மூன்றுவது நன்மை, இரண்டாவது நன்மையின் விரிவே என்றுலும், தனியாக விவரித்துக் கூறவேண்டிய அளவுக்கு அது முதன்மை உடையதாக இருக்கிறது. நடைமுறையில் நிதிக்கொள்கை கையாளப்படும்போது அதில் காட்சியளிக்கிற ஒரு குறைபாடு, தேவைப்படும்போது அக் கொள்கையை நேர்மாறுனதாக மாற்றமுடியாமல் இருப்பதே. நிலைபேறுக்க நோக்கங்களும் பிற நோக்கங்களும் இணைக்கப்பட்டு விடுவதால் அவற்றின் தன்மை குறைந்துவிடுகிறது. வாணிப நிலைமைகள் மாறும்போது கொள்கையை உடனடியாக மாற்ற முடிவதில்லை. பின்னிறக்கத்தின்போது அதனை முறிப்பதற்காகக் கையாளப்பட்ட குறைந்த வரிகளும், பின்னர், அவற்றின் இயல்பான தன்மைக்காகவே கையாளப்படவேண்டிய ‘குறிக்கோள்களாக’ மாறிவிடுகின்றன. பின்னிறக்கத்திற்கு எதிரிடையான வாணிப நிலைமைகள் (பணவீக்க நிலைமைகள்) உருவான பின்னரும், பின்னிறக்கக் காலக் கொள்கையை மாற்றியமைத்தல் கடினமான செயலாக அமைந்துவிடுகிறது. அதுபோலவேதான், பணவீக்கத்தை எதிர்ப்பதற்காக உருவாக்கப்பட்டக் கொள்கைகளையும், பணவீக்க

நிலைமை மாறிய பிறகு எளிதில் மாற்றமுடிவதில்லை. பண வீக்கத்தின்போது கையாளப்படும் உயர்ந்த வரிகளும் குறைந்த செலவுகளும் வரவு செலவுத் திட்ட உபரியை உண்டாக்குகின்றன. அரசாங்கக் கடனைக் குறைக்க இந்த உபரி பயன்படுவதால் இது மிகவும் வரவேற்கத்தக்க ஒன்றாகக் கருதப்படுகிறது. பொருளாதாரத்தில் பலவீன நிலை ஏற்பட்டபிறகுகூட இந்தக் கொள்கைகளை மாற்றியமைக்க அதிகாரிகள் விரும்பாமல் இருக்கக்கூடும்.

நிதி அமைப்புகளில் எத்தனை அதிகமான தானே இயங்கும் சக்திகளை அமைக்கமுடியுமோ அத்தனையையும் அமைக்கவேண்டியது இன்றியமையாத செயலே என்றாலும், எல்லா நிலைபேறின்மை நிலைமைகளையும் மாற்றியமைப்பதற்கு இந்தச் சக்திகள் மட்டுமே போதுமானவையாக இருக்கமுடியாது. பொருளாதாரத்தில் மாபெரும் மாறுதல் ஏற்படும்போது, இத்தகைய சக்திகள் அனைத்தையும் ஒன்றாகத் திரட்டிப் பார்த்தால்கூட, அந்த மாறுதலைச் சமாளிப்பதற்குத் தேவையான அளவே உடையனவாக இவை இருக்கமாட்டா. சிறிய அளவில் ஏற்படும் பொருளாதார ஏற்ற இறக்கங்களை ஓரளவு நல்லமுறையில் இவற்றால் சமாளித்துவிட முடியும். பெரிய அளவு ஏற்ற இறக்கங்கள் ஏற்படும்போது இவை உடனடியாக நடைமுறைக்கு வருவதால், வேண்டுமென்றே கையாளப்படும் கொள்கைகள் சட்டமன்ற முறைப்படி அல்லது நிர்வாக முறைப்படி நடைமுறைக்கு வருவதற்குத் தேவைப்படும் கால இடைவெளியை இவை ஏற்படுத்தித் தருகின்றன. பின்னிறக்கத்தின்போது தாமே இயங்கும் நிலைபேறுக்கக்கருவிகள் ஆற்றவேண்டிய தலைசிறந்த பணிகள், நுகர்வை நிலைநாட்டுவதும், அப்படி நிலைநாட்டுவதன்மூலம், கீழ்நோக்கிய சுழலேறியைத் (downward spiral) தொடங்கிவைப்பதிலிருந்து முதலீட்டு வீழ்ச்சியைத் தடுப்பதுமே ஆகும். நுகர்வானது செலவிடத்தக்க தனியாள் வருமானத்தோடு நெருங்கிய தொடர்புடையதாக இருப்பதால், நாட்டின் மொத்த ஆக்கத்தில் ஏற்ற இறக்கங்கள் ஏற்படும்போது, அத்தகைய வருமானத்தை நிலைபேறுக்குவதே குறிக்கோளாக இருக்கிறது. 1958-ன் பின்னிறக்கத்திற்கான புள்ளி விவரங்களிலிருந்து இந்த உண்மையை எடுத்துக்காட்டலாம். கீழே தரப்பட்டுள்ள அட்டவணையில், காலண்டர் ஆண்டு 1957-ன் மூன்றாவது காலாண்டிலிருந்து 1958-ன் மூன்றாவது கால் ஆண்டுவரையுள்ள ஒவ்வொரு காலாண்டிற்கும் உரிய புள்ளி விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அவை ஆண்டுவீதங்களின்படித் திருத்தியமைக்கப்பட்ட புள்ளி விவரங்கள் ஆகும். புள்ளி விவரங்கள் அனைத்தும் பில்லியன் டாலர் கணக்கில் தரப்பட்டுள்ளன.[7]

| | 1957 | | 1958 | | |
|---|---|---|---|---|---|
| | 3ஆவது காலாண்டு | 4ஆவது காலாண்டு | 1ஆவது காலாண்டு | 2ஆவது காலாண்டு | 3ஆவது காலாண்டு |
| நாட்டின் மொத்த ஆக்கம் | 447·8 | 442·3 | 431·0 | 434·5 | 444·0 |
| முதியவயது மற்றும் எஞ்சியிருப்போர்க்கான இன்சூரன்ஸ் உதவித்தொகைகள் | 7·5 | 7·8 | 7·9 | 8·6 | 8·7 |
| வேலையின்மை இழப்பீட்டு உதவித்தொகைகள் | 1·7 | 2·4 | 3·1 | 4·2 | 4·8 |
| கூட்டரசாங்க வரி மற்றும் வரியல்லாத செலுத்தல்கள் | 37·6 | 37·4 | 36·2 | 36·3 | 37·1 |
| செலவிடத்தக்க தனியாள் வருமானம் | 311·5 | 309·9 | 310·3 | 312·9 | 320·4 |
| தனியார் நுகர்வுச் செலவுகள் | 288·2 | 288·1 | 287·3 | 290·9 | 294·4 |

செலவிடத்தக்க தனியாள் வருமானத்திலும் தனியார் நுகர்விலும் ஏற்படுவதைவிட எவ்வளவு அதிகமான அளவில் நாட்டின் மொத்த ஆக்கத்தில் ஏற்ற இறக்கங்கள் ஏற்படுகின்றன என்பதை இந்த அட்டவணை எடுத்துக்காட்டுகிறது. செலவிடத்தக்க தனியாள் வருமானத்திலும் தனியாள் நுகர்விலும் நிலைபேறு மிகுதியாக இருப்பதற்குரிய சில காரணங்களை, அட்டவணையில் சற்று உள்தள்ளி அச்சிடப்பட்டுள்ள இனங்கள் சுட்டிக் காட்டுகின்றன. நாட்டின் மொத்த ஆக்கம் குறைந்துகொண்டிருந்தபோது முதிய வயது மற்றும் எஞ்சியிருப்போர்க்கான இன்சூரன்ஸ் உதவித்தொகைகள் தொடர்ந்து உயர்ந்துகொண்டிருந்தன. வேலையின்மை இழப்பீட்டு உதவித்தொகைகளும் கூட்டரசாங்க வரிச் செலுத்தல்களும், குறிப்பிடத்தக்க அளவில் சுழல் எதிர்ப்புக்கு ஏற்ற திசையில் மாறியுள்ளன. நுகர்வின் நிலைபேற்றிற்கு, நிதி ஏற்பாடுகள் மட்டுமே முழுக் காரணமாக அமையவில்லை என்றாலும், குறிப்பிடத்தக்க அளவுக்குக் காரணமாக இருந்திருக்கின்றன.[8] இணைத்து அமைக்கப்பட்ட நிலைபேறுக்கக் கருவிகளிலிருந்து இத்தன்மை படைத்த விளைவைத்தான் எதிர்பார்க்கமுடியும்.

சுருங்கச் சொல்லின் கூட்டரசாங்கத்தின் வளர்வீதத் தனியாள் வருமான வரியும், கூட்டரசாங்கம், மாநில அரசாங்கங்கள்—இரண்டுமாகச் சேர்ந்து நிர்வாகம் செய்யும் வேலையின்மை இழப்பீட்டுத்

திட்டமும்தான், உண்மையான முக்கியத்துவம் உடைய தாமே இயங்கும் நிலைபேறுக்கக் கருவிகள் ஆகும். வேலையின்மை இழப்பீட்டுத் திட்டத்தின் சம்பளப் பட்டியல் வரிகளில் ஏற்படும் முறையற்ற ஏற்ற இறக்கங்கள் அகற்றப்பட்டு, பெரும்பாலான மாநிலங்களில் தரப்படுகிற வாராந்திர உதவித் தொகைகளின் அளவு உயர்த்தப்பட்டு, உதவித்தொகைகள் பெறுதற்குரிய கால அளவும் நீட்டிக்கப்படுமானால், வேலையின்மை இழப்பீட்டுத் திட்டமானது, இன்னும் மிகுந்த பயன்தரத்தக்க நிலைபேறுக்கத் திட்டமாக உருவாகும். சில ஆயவரிகள், பொது விற்பனை வரிகளின் சில பகுதிகள், முதிய வயது மற்றும் எஞ்சியிருப்போர்க்கான இன்சூரன்ஸ் திட்டம், வட்டார நிவாரணத்திற்கான (local relief) பல்வேறு திட்டங்கள் ஆகியவையே, தாமே இயங்கும் நிலைபேறுக்கத் தன்மைகளைப் பெற்று, நிதி அமைப்பில் இணைந்துள்ள வேறு சில சக்திகள் ஆகும். இச் சக்திகளின் நிலைபேறுக்க ஆற்றல், வேலையின்மை இழப்பீட்டுத் திட்டத்தின் நிலைபேறுக்க ஆற்றலைவிடக் குறைவானதுதான். இந்தக் கருத்தாய்வில் அரசாங்கத்தின் பல்வேறு உதவிக்கொடைத் திட்டங்களை (subsidy programs) நாம் சேர்த்துக் கொள்ளவில்லை. ஏனென்றால், பொதுவாக அத் திட்டங்களின்படித் தரப்படுகிற செலுத்தல்கள், வாணிபச் சுழலின் மைய மாறி ஒன்றுடன் (a central variable in the business cycle) பிணைக்கப்பட்டு இருப்பதில்லை. எடுத்துக்காட்டாக, வேளாண்மைப் பொருள்களின் விலைகள் வாணிபச் சுழலின் போக்கை ஒட்டி இயங்குமானால், அப் பொருள்களின் விலைவீழ்ச்சியைத் தடுப்பதற்கான திட்டங்கள் சிறப்புமிக்க நிலைபேறுக்கக் கருவிகளாக இருக்கமுடியும். ஆனால் அவ் விலைகளின் இயக்கமோ, வாணிப நடவடிக்கையோடு தொடர்பு அற்றதாக, முறை தவறியதாக இருக்கிறது. ஆகவே, விலை வீழ்ச்சித் தடுப்புக்காகத் தரப்படும் உதவிக் கொடைகளின் அளவு, சில சமயங்களில் சுழல் எதிர்ப்புக்குப் பொருத்தமான திசையில் இருந்தாலும் வேறு சில சமயங்களில் அதற்கு நேர்மாறான திசையில் இருந்துவிடுகிறது.

தாமே இயங்கும் நிலைபேறுக்கக் கருவிகள் அனைத்தையும் மொத்தமாக எண்ணிப்பார்க்கும்போது, நிலைபேறுக்க ஆற்றலைச் சிறப்பான அளவில் அவை பெற்றிருக்கின்றன என்பது வெள்ளிடை மலையென விளக்கமாகிறது. ஆனால் நிதித்துறைமூலம் நிலைபேறுக்கம் செய்வதற்குரிய முழுப் பொறுப்பையும் அவற்றிடம் ஒப்படைக்கும் அளவுக்கு அவை மாபெருந்தன்மை உடையனவாக இல்லை. பொருளாதாரத்தில் இயல்பாக அமைந்துள்ள போக்குகளை எதிர்ப்பதன்மூலம் வேறு நடவடிக்கைகள் எடுப்பதற்காகத் தேவைப்படும் காலத்தை ஈட்டித் தருவதே அவற்றின் தலையாய

பணியாகும். பொருளாதாரத்தின் போக்குகள் பலவீனம் உடையன வாக இருக்குமானுல், தாமே இயங்கும் நிலைபேறுக்கக் கருவிகள் மட்டுமே தனியாக அவற்றை முறியடித்துவிடமுடியும். ஆனுல் இந்த அளவுக்கு அவற்றை நம்புவது, அத்துணைப் பாதுகாப்பான ஏற்பாடு ஆகாது. நிதிக்கொள்கையின் படைக்கருவிகள் அனைத்தும் நிலைபேறுக்கத்திற்காக ஆற்றல்மிக்க முறையில் பயன்படுத்தப்பட வேண்டுமானுல், அரசாங்கத்தின் நிர்வாகப் பகுதியும் சட்டமன்றப் பகுதியும், வரவுகளிலும் செலவுகளிலும் தேவையான மாறுதல் களைச் செய்வதற்கு ஆயத்தமான நிலையிலேயே எப்போதும் இருக்க வேண்டும்.

## மேலும் படித்தற்கு உரியவை

1. ஜே. எம். க்ளார்க் (J. M. Clark), Economics of Planning Public Works, வாஷிங்டன், National Planning Board, 1935.

இந்தப் பொருள்பற்றிய தரம் மிக்க நூல். முழு நூலையும் படிப்பது மிகுந்த பயனைத் தரும். அதற்கு நேரம் இல்லாவிடின் 1, 2, 3, 4, 6, 9, 10, 16 ஆகிய அத்தியாயங்களைப் படிக்கவும்.

2. ஜெர்ஹார்ட் கோம் (Gerhard Colm, 'Guides and Procedures for Determining Federal Expenditure Programs'. இது பொரு ளாதார இணைக் குழுவின் Federal Expenditure Policy for Economic Growth and Stability (Papers submitted by Panelists before the Sub-committee on Fiscal Policy) என்னும் நூலில் உள்ளது. (வாஷிங்டன், 1957, பக்கங்கள் 433-43.)

வரவு செலவுத் திட்ட நடைமுறைகள் பொருளாதார நோக்கங்களை நிறைவேற்றத் தவறியதை விளக்குவதோடு, இது, மேம்பாட்டுக்கான ஆய்வுரைகளையும் தருகிறது.

3. எவரெட் ஈ. ஹேகன் (Everett E. Hagen), 'Federal Taxation and Economic Stabilisation'. இது, Federal Tax Policy for Economic Growth and Stability (Papers submitted by Panelists before the Sub-committee on Tax Policy) என்னும் நூலில் உள்ளது. Joint Committee on Economic Report, வாஷிங்டன், 1955, பக்கங்கள் 58-69.

நிலைபேறுக்க வரி விதிப்புபற்றிய ஓர் ஆராய்ச்சி. தானே இயங்கும் மாறுந் தன்மை (automatic flexibility), தேர்ந்தெடுத்துச் செய்யப்படும் மாறுந்தன்மை (discretionary flexibility) என்ற இரண்டும் கலந்த ஒரு மாறுந் தன்மை, அதாவது 'வாய்பாடு மாறுந் தன்மை'யை (formula flexibility) இக் கருத்தாய்வு பரிந்துரைக்கிறது.

இந்த மாறுந்தன்மையில், பொருளாதார மாறுதல்களுக்கு ஏற்ப, முன்னரே திட்டமிட்ட முறைப்படி, வரிவீதங்கள் மாற்றமடையும்.

4. ஆல்வின் எச். ஹான்சன் (Alvin H. Hansen), Economic Policy and Full Employment, நியூயார்க், மக்ராஹில், 1947, பாகம் மூன்று. இங்கிலாந்து, கனடா, ஆஸ்திரேலியா, ஸ்வீடன், ஐக்கிய அமெரிக்கா ஆகிய நாடுகளில், வேலை நிறைவை அடைவதற்காக அரசாங்கங்கள் கையாண்ட திட்டங்களைப்பற்றிய ஓர் அறிவார்ந்த வர்ணனை, இந் நூல்.

5. எஸ். ஈ. ஹாரிஸ் (S. E. Harris), Economic Planning, நியூயார்க், Knopf, 1949, அத்தியாயங்கள் 1, 4, 9.

அத்தியாயம் 1, இப் பொருள்பற்றிய தொடக்க உரையாகவும், அத்தியாயங்கள் 4-ம் 9-ம் ஐக்கிய அமெரிக்கக் கூட்டரசாங்கத்தின் அண்மைக் கால அனுபவத்தை விளக்குவனவாகவும் உள்ளன. இந்த அத்தியாயங்களில் தரப்பட்டுள்ள பொருள்கள், பொருத்தம் உள்ளனவாகவும், நடைமுறைக்கு ஒத்தனவாகவும் இருக்கின்றன. பிற அத்தியாயங்கள், பிற நாடுகளின் திட்டமிடுதல்பற்றிய அனுபவங்களை விளக்குகின்றன.

## 6ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்.

1. 1958, 1959, 1960, 1961 ஆகிய ஆண்டுகளின் கூட்டரசாங்க வரவுசெலவுத் திட்டத்திலிருந்து.

2. இழப்பீட்டு உதவித் தொகைகள் (compensation benefits) முற்றிலும் தீர்க்கப்படுவதன் விளைவாக ஏற்படுகிற ஒரு நிவாரணச் சுமையைக் கூட்டரசாங்கம், மாநில அரசாங்கங்கள் ஆகியவற்றின்மீது சுமத்துவதற்கான முறையாகவும் அது விளங்கிற்று. நிவாரணம் என்பது பொதுவாக ஒரு தல அரசாங்கப் பணியாகும். சொத்துவரியையே பெரிதும் சார்ந்துள்ள வட்டார வரவுசெலவுத் திட்டங்கள், ஏற்கெனவே, கல்விச் செலவாலும் பிற செலவாலும் ஏற்பட்டச் சுமைகளால் நெருக்கப்படுவதால், விரைவாக உயர்ந்துவரும் நிவாரணச் சுமைகளை அவற்றால் தாங்கமுடியாது.

3. எடுத்துக்காட்டாக, கூட்டரசாங்க முதலீட்டுச்செலவுகளின் பட்டியலைப் பெறவேண்டின், 'Budget of the United States' 1961, என்னும் நூலில் 'Special Analysis D' என்னும் பகுதியைக் காண்க.

4. இப்படிச் சொல்லும்போது, பொருளின் அடிப்படை விலையானது வரிக்குறைப்பைக் கவர்ந்துகொள்ளும் முறையில் உயர்த்தப்படமாட்டாது என்று பாவித்துக்கொள்கிறோம். ஆனால், ஒரு குறுகியகாலப் பின்னிறக்கத்தின்போது பெரும்பாலும் அவ்வாறு உயராது என்பது உண்மையே.

5. ஆனால், வரியின் விளைவாக உயரும் விலையின் காரணமாக, இந்தப் பொருள்கள்மீது செய்யப்படும் செலவு (வரிஉட்பட), வரிக்கு முன் செய்யப்பட்ட

செலவைவிடக் குறைந்துவிடுமானல், ஏனைய பொருள்களுக்கான பணவழித் தேவை (monetary demand) உயரக்கூடும்.

6. 'Budget of the U. S. Government for 1960' என்னும் நூலிலிருந்து ; சிறப்புப் பகுத்தாய்வு (Special Analysis F), பட்டியல் 3, பக்கம் 971.

| | ஜூன் 30, 1959 வரை சேர்ந்து இருப்பது | 1960 மதிப்பீடு | முடிப்ப தற்குத் தேவைப் படுவது | மொத்தக் கூட்டர சாங்கச் செலவு |
|---|---|---|---|---|
| தொடர்ந்துவரும் வேலை (மில்லியன் டாலர்களில்) | 7,391 | 1,647 | 6,706 | 15,743 |
| புதிய திட்டங்கள் (மில்லியன் டாலர்களில்) | 2 | 124 | 366 | 492 |

7. Survey of Current Business, ஜூலை 1959, பக்கம் 15.

8. வேலையின்மை இழப்பீட்டு உதவித்தொகைகள் பெறற்குரிய காலத்தை நீடிப்பதற்காக மாநிலங்களுக்குக் கடன்கள் தருவதற்கு வழிசெய்யும் சில சிறப்பான கூட்டரசாங்கச் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டதால், மேற்படி உதவித் தொகைகளில் ஓரளவு உயர்வு ஏற்பட்டிருக்கிறது. அந்த உயர்வின் அளவு தெரியவில்லை. சில மாநிலங்கள்மட்டுமே இச் சட்டங்களைப் பயன்படுத்திக் கொண்டதால், இந்த உயர்வு அதிக அளவில் இராது, ஆனல், மொத்த உயர்வின் ஒரு பகுதி தானே இயங்கும் முறையொன்றின் விளைவாக ஏற்பட்டது என்பதை இங்கே குறிப்பிடவேண்டும்.

# 7. பொருளாதாரத்தின் பொதுத் துறைக்கும் தனியார் துறைக்கும் இடையே சாதனப் பங்கீடு

நிதி நடவடிக்கைகளால் பொருளாதாரத்தின் உற்பத்தி வீதத்தில் (rate of production) அல்லது வருமானப் படைப்பில் (income creation) ஏற்படும் விளைவுகளைச் சென்ற மூன்று அத்தியாங்களில் விளக்கியுள்ளோம். நிதி நடவடிக்கையின் பெருக்கத்தால், நாட்டின் மொத்த ஆக்கத்தில் நன்மைக்கு ஏற்ற முறையிலோ தீமைக்கு ஏற்ற வகையிலோ விளைவுகளை ஏற்படுத்தித் தீரவேண்டிய அளவுக்கு, வரியும் அரசாங்கச் செலவும் உயர்ந்துவிட்டன என்பதையும், நிதிக் கொள்கையைத் திறமையான முறையில் கையாள்வதன்மூலம் பொருளாதாரத்தின் தனியார் துறையில் ஏற்படுகிற நிலைபேறின்மைப் போக்குகளை மாற்றிவிட முடியும் என்பதையும் அந்த அத்தியாயங்களில் நாம் ஆய்ந்து அறிந்தோம். இந்த அத்தியாயத்தில் நாம், அரசாங்க நிதி இயலின் (public finance) மிகப் பழைய சிக்கல் ஒன்றைப்பற்றிய கருத்தாய்வில் ஈடுபட முனைந்துள்ளோம். மொத்தப் பொருளாதாரச் சாதனங்களில் பொதுத் துறையில் (அரசாங்கத் துறையில்) பயன்படுத்தக்கூடிய 'பொருத்தமான' பங்கு ('proper' share) அல்லது உத்தமமான பங்கு (optimum share) எந்த அளவினது என்பதை முடிவு செய்வதே அந்தச் சிக்கலாகும்.

தனியார் வருமானங்களின் ஒரு பகுதியைப் பொது உபயோகத்திற்காக எடுத்துக் கொள்வதே, வரி அமைப்பின் மைய நோக்கமாகும். தனியார் ஒருவர் தன்னுடைய வருமானத்தின் ஒரு பகுதியைத் தன்னுடைய விருப்பம்போல் பங்கிடும் உரிமையை அவரிடமிருந்து அரசாங்கம் பறித்துவிடுகிறது. தனியார் வருமான ஓட்டத்திலிருந்து இவ்வாறு எடுக்கப்பட்ட வருமானங்கள், சமூகப் பொது நோக்கங்களுக்காக (collective purposes) ஒதுக்கப்படுகின்றன.

அதாவது, தனியாட்களுடைய சொந்த உபயோகத்திற்காக ஒதுக்கப்பட்டிருக்கக்கூடிய சாதனங்கள், வரி அமைப்பின்மூலம், சமூகப் பொது உபயோகத்திற்காக ஒதுக்கப்படுகின்றன. தோன்றக்கூடிய ஒவ்வொரு விருப்பத்தையும் நிறைவேற்றக்கூடிய அளவுக்குச் சாதனங்களின் மொத்த அளவு இல்லாததால், பல்வேறு விருப்பங்களுக்கு இடையே சாதனங்களை பங்கிடவேண்டியிருக்கிறது. ஆகவே, ஒரு குடிமகன் தான் செலுத்துகிற வரிகள் மிகக் கூடுதலாக இருக்கின்றன என்று குறைகூறுகிறபோது, தன்னுடைய தனிப்பட்ட விருப்பங்களை நிறைவேற்றுவதற்குத் தன்னுடைய சாதனங்களைப் பயன்படுத்துகிற உரிமை தன்னிடமிருந்து அளவுக்கு மீறிப் பறிக்கப்பட்டிருப்பதாக அவர் கருதுகிறார் என்றே பொருள். அதாவது, அவர் சாதனப் பங்கீட்டு முடிவுகளைப்பற்றிக் குறை கூறுகிறார். அரசாங்க நிதிஇயலின் மிகப்பழைய-மிகத்தொல்லையான சிக்கல்களில் இது ஒன்று. உண்மையில், இது தனியாள் உரிமைத் தத்துவத்தின் (philosophy of individualism) அடிப்படையில் அமைந்துள்ள சமுதாயங்களில் மிகப்பழைய—மிகத்தொல்லையான சிக்கல்களில் ஒன்றாகும். அரசாங்கத்தின் பங்கு எந்த அளவில் இருப்பது முறையானது என்பதுபற்றிய சிக்கல் இது.

'தனியாள் வருமானத்திலிருந்து இவ்வளவு அதிகமான தொகை கூட்டாட்சி அரசாங்கத்தால் எடுக்கப்படாமல் இருந்தால், தனியாள் அந்த வருமானத்தை எந்த அளவுக்குத் திறமையாகவும் பொருளாதாரத்திற்குப் பயன்படத்தக்க முறையிலும் செலவழித்திருப்பாரோ அந்த அளவுக்குத் திறமையாகவும் பயனுள்ள முறையிலும், நம் பணம், நம் கூட்டாட்சியின் பணம், ஒருநாளும் செலவிடப்பட முடியாது.'[1]

'கூட்டாட்சியின் வரவுசெலவுத் திட்டம் ஏற்கெனவே மிக உயர்ந்த மட்டத்தில் இருந்தாலும் அது மேலும் உயர்ந்துகொண்டிருப்பதற்கு இரண்டு தலையாய காரணங்கள் இருக்கின்றன. கூட்டாட்சியின் வரவுசெலவுத் திட்டங்களில் உள்ள பல திட்டங்கள் தவறான திசைகளில் செலுத்தப்படுகின்றன என்பது முதல் காரணம். அதாவது, சிக்கல்களை உண்டாக்குகிற காரணங்களை ஒழித்துக்கட்டுவதற்கு மாறாக, நாம், மேலும் மேலும் செலவழிப்பதன் மூலமாகச் சிக்கல்களைத் தீர்க்க முயலுகிறோம். தனியார் பொருளாதாரத்தால் அல்லது மாநில தலஅரசாங்கங்களால்இன்னும் திறமையாகச் செயல்படக்கூடிய பல பணிகளைக் கூட்டாட்சி அரசாங்கம் செய்துகொண்டிருப்பது இரண்டாவது காரணம்.'[2]

நம் சாதனங்களிலிருந்து அளவுக்குமீறிய பங்கைப் பொதுத் துறை எடுத்துக்கொள்வதற்கு நிறுவன ஏற்பாடுகள் (institutional arrangements) அனுமதிக்கின்றன என்று பொதுமக்களிடம் பரவலாக இருக்கிற கருத்தே, இந்த இரண்டு மேற்கோள்களிலும் எதிரொலிக்கிறது என்று கூறலாம். திரு ட்வைட். டி. ஐசனோவரால் (Dwight D. Eisenhower) தெரிவிக்கப்பட்டுள்ள முதல் கருத்தின் பொருள், அரசாங்கச் செலவுக்குரிய நோக்கங்கள், அதே நிதிகளைத்

தனியாட்கள் செலவுசெய்யும்போது இருக்கக்கூடிய நோக்கங்களை விட, எப்போதுமே (ஏதோ ஒரு வகையில்) மட்டமானவை யாகத்தான் இருக்கும் என்பதாகும். திரு. ஃபிரேசர் பி. வைல்ட் என்பவரால் (Frazer B. Wilde), தெரிவிக்கப்பட்டுள்ள இரண்டாவது கருத்து, பல்வேறு கேள்விகளை எழுப்பினாலும் (அதோடு, கூட்டாட்சிச் செலவின் உயர்வுக்கு இராணுவப் பாதுகாப்பே தலை சிறந்த காரணம் என்னும் உண்மையைப் புறக்கணித்திருந்தாலும்), அதனுடைய பொதுவான பொருளும், நிதிகளைக் கோருவதற்கான அரசாங்க உரிமையைவிடத் தனியார் உரிமையே உயர்வானது (சிறப்பு மிக்கது) என்பதே ஆகும். அரசாங்கச் செலவின் வளர்ச்சி பற்றிய எந்தக் கருத்தாய்வும், சாதனங்களைப் பொருத்தமான முறையில் பங்கிடுவதில் ஏற்படக்கூடிய இந்தச் சிக்கலைச் சமாளித் தாகவேண்டும்.[3] ஆனால் இந்தப் பொருளைப்பற்றிய இலக்கியம் (நூல்கள்) விரிவான அளவில் இல்லை. இந்தப் பொருளைப்பற்றிய ஆராய்ச்சியைத் துல்லியமான முறையில் செய்வதும் அவ்வளவு எளிதில் இயலக்கூடிய செயலாக இல்லை. கீழே உள்ள 10ஆவது அட்டவணை, ஒவ்வொரு ஐந்தாண்டு காலத்திலும் அரசாங்கம் வாங்கிய பொருள்கள்—ஊழியங்கள் ஆகியவற்றின் மதிப்பின் ஆண்டு சராசரிகளை (annual averages) நிலையான டாலர் கணக்கில் (in constant dollars) தருவதோடு, நாட்டின் மொத்த ஆக்கத்தில் இவ்வாறு வாங்கப்பட்ட தொகையின் வீதாச்சாரத்தையும் தந்துள்ளது. முதல் பத்தியில் உள்ள எண்களை நிலையான டாலர்களில் மாற்றி அமைப்பதன்மூலம் விலை மாறுதலின் விளைவுகள் அகற்றப்படுகின்றன. ஐந்தாண்டுக் காலங்களுக்கான சராசரி எண்களைப் பயன்படுத்துவதால், மிகக் குறுகிய கால ஏற்ற இறக்கங்களின் விளைவுகள் மட்டுப்படுத்தப்படுவதோடு, நீண்ட காலப் போக்குகளைப்பற்றிய பொதுமைகளைப் (generalisation) உருவாக்கவும் முடிகிறது.

## அட்டவணை 10

**பொருள்களையும் ஊழியங்களையும், கூட்டாட்சி, மாநில, தல அரசாங்கங்கள் வாங்கியமை: ஐந்தாண்டுக் காலப் பகுதிகட்கான ஆண்டு சராசரிகள், 1930–1959**

| காலப்பகுதி | பொருள்களும் ஊழியங்களும் வாங்கப்பட்ட அளவு (1954 விலைகளின்படி பில்லியன் டாலர்களில்) | நாட்டின் மொத்த ஆக்கத்தில் அதன் சதவீதம் |
|---|---|---|
| 1930–34 | 21·1 | 14·8 |
| 1935–39 | 27·0 | 15·4 |
| 1940–44 | 93·8 | 35·5 |
| 1945–49 | 60·3 | 20·6 |
| 1950–54 | 69·1 | 19·8 |
| 1955–59 | 76·0 | 18·7 |

இரண்டாம் உலகப் போரிலிருந்து அரசாங்கத்தால் வாங்கப் படுகிற பொருள்கள்—ஊழியங்களின் அளவு உயர்ந்திருக்கிறது என்பதையும், ஆனால் போர் ஆண்டுகளைத்தவிர்த்த ஏனைய ஆண்டு களில் நாட்டின் மொத்த ஆக்கத்தில் அரசாங்க வாங்குதல்களின் (purchases) வீதாச்சாரம் ஏறத்தாழ நிலையாக இருந்திருக்கிறது என்பதையும், இந்த அட்டவணையிலிருந்து தெரிந்துகொள்ளலாம். பொருளாதாரத்தின் சாதனப் பங்கீடு என்னும் கோணத்திலிருந்து பார்த்தால், உயர்ந்துவரும் நாட்டின் பொது ஆக்கத்திலிருந்து பொது உபயோகத்திற்கு ஒதுக்கப்படும் தொகை உயர்ந்து வருவதையும், ஆனால் அத் தொகையின் வீதாச்சாரம் நிலையாக இருப்பதையும் அறியலாம்.




படம் 7

**நாட்டின் மொத்த ஆக்கத்தின் தலையாய பகுதிகள் : 1954 விலைகளில் நாட்டின் மொத்த ஆக்கத்தின் சதவீதம், 1929—1959**

Per cent of GNP—நாட்டின் மொத்த ஆக்கத்தின் சதவீதம்; Personal Consumption Expenditures - தனியாள் நுகர்வுச் செலவுகள்; Government Purchases of Goods and Services - பொருள்களையும் ஊழியங்களையும் அரசாங்கம் வாங்குதல்; Gross Private Domestic Investment - தனியாரின் மொத்த உள்நாட்டு முதலீடு; Annual Averages - ஆண்டு சராசரிகள்.

நாட்டின் மொத்த ஆக்கத்தின் மூன்று தலையாய பகுதிகள், அந்த ஆக்கத்தின் எத்தனை சதவீதமாக உள்ளன என்பதை 7ஆவது படம் எடுத்துக்காட்டியுள்ளது. (சிறிய அளவினதாகிய நிகர அயல்நாட்டு முதலீடு சேர்க்கப்படாததால், இம் மூன்று பகுதிகளின் கூட்டுத் தொகை எந்த ஒரு காலப் பகுதியிலும் 100 சதவீதத்திற்குச் சற்றே மாறுபட்டதாக இருக்கும்.) போருக்குப் பிந்திய காலத்தில், பொருளாதார நடவடிக்கையில், முன்னிலும் கூடுதலான பங்கு அரசாங்கத்திற்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது என்றால், இந்த அதிகப்படி ஒதுக்கீடு முன்னர் வேறு யாருக்கு ஒதுக்கப்பட்டதிலிருந்து மாற்றப் பட்டிருக்கிறது? (பொறிகளும், கருவிகளும், வீடுகட்டுதல், இருப்புப் பொருள்கள், தேய்மானம் ஆகிய) உள்நாட்டு முதலீட்டுக்கு ஒதுக்கப் பட்ட நடவடிக்கையிலிருந்து இம் மாற்றம் ஏற்பட்டிருக்கமுடியாது என்பது தெளிவு. ஏனென்றால், போருக்குப் பிந்திய காலத்தில் இந்தத் துறைக்காக ஒதுக்கப்பட்ட தொகையின் வீதாச்சாரம் உயர்ந்திருக்கிறது. முதல் உலகப் போருக்குப் பிந்திய ஆண்டாகிய 1929-ல் இருந்ததைவிடக்கூட இந்த வீதாச்சாரம் அதிகமாக இருக்கிறது.[4] இதிலிருந்து சாதனங்கள் அரசாங்க உபயோகத்திற் காக அதிகமான வீதாச்சாரத்தில் ஒதுக்கப்பட்டதால் தனியார் முதலீட்டால் ஏற்படக்கூடிய பொருளாதார வளர்ச்சி வாய்ப்பு குறையவில்லை என்னும் உண்மை தெளிவாக விளங்குகிறது.

ஆகவே, அரசாங்கப் பணிகளுக்காக அதிக அளவில் ஒதுக்கப் பட்டுள்ள சாதனங்கள், முன்னர் தனியார் நுகர்வுக்காக ஒதுக்கப்பட் டிருந்த சாதனங்களிலிருந்தே எடுக்கப்பட்டிருக்கவேண்டும். (இந்த உண்மைமேலே தரப்பட்ட படத்தில் விளக்கப்பட்டிருக்கிறது.) இப்படிச் சொல்வதால், நுகர்வுக்காகச் செலவழிக்கப்பட்ட தொகை குறைந்திருக்கிறது என்று பொருளாகாது. ஏனென்றால், அச் செலவு 1929-ல் 128 பில்லியன் டாலராக இருந்தது இரண்டாம் உலகப் போரின்போது ஆண்டுதோறும் சராசரி 153 பில்லியன் டாலராகவும், 1955-59-ல் 270 பில்லியன் டாலராகவும் உயர்ந்திருக்கிறது. (இந்த எண்கள் யாவும் 1954ஆம் ஆண்டின் டாலர் கணக்கில் தரப்பட்டுள்ளன.) பொருள்களையும் ஊழியங்களையும் அரசாங்கம் வாங்கிய அளவு குறைவாக இருந்திருந்தால், நுகர்வுச் செலவு அதிகமாக இருந்திருக்கும் என்று கூறமுடியாது. மொத்தச் செலவில் நுகர்வுச் செலவின் வீதாச்சாரம் அதிகமாக இருந்திருக்கும் என்பது

கிட்டதட்ட உறுதிதான். ஆனால் அரசாங்கச் செலவு இல்லாம லிருந்தால் மொத்தச் செலவு குறைவாகத்தான் இருந்திருக்கும். ஐக்கிய அமெரிக்காவில் இருப்பதைப்போல் பொருளாதாரமானது தலா நுகர்வை (per capita consumption) உயர்ந்த அளவில் உடையதாக இருக்குமானால், மாநில தல அரசாங்கங்களால் ஆற்றப் படுகிற பணிகளில் பல, நுகர்வுத் தன்மை படைத்த ஊழியங்களையே தருவனவாக இருக்கும். பொதுக்கல்வி, நூல்நிலையங்கள், பொழுது போக்கு வசதிகள், பூங்காக்கள், பலதிறப்பட்ட மருத்துவச் சாலைகள் ஆகியவை இல்லாமலிருந்தால், அவற்றால், இப்போது கிடைக்கிற வசதிகள், தனியார் நுகர்வின் ஒரு பகுதியாகவே இருந்திருக்கும். போருக்குப் பிந்திய காலத்தில், பொருள்களையும் ஊழியங்களையும் தல அரசாங்கங்கள் வாங்கிய தொகையே, நாட்டின் மொத்த ஆக்கத்தின் சதவீதக் கணக்கில் உயர்ந்துவந்திருக்கின்றது. அந்த அரசாங்கங்களால் அவ்வாறு வாங்கப்பட்ட ஊழியங்கள், பெரும் பாலும் மேலே சொல்லப்பட்ட வகைகளைச் சேர்ந்தவையே. போருக்குப் பிந்திய காலத்தில், நாட்டின் மொத்த ஆக்கத்தில் கூட்டரசாங்கத்தின் பங்கு சிறிதளவு குறைந்திருக்கிறது.

ஆனால் இச் சமயத்தில் நம்முடைய தலையாய நோக்கம், பங்கீட்டுச் சிக்கல் ஒன்று இருக்கிறது என்பதை விளக்கிக்காட்டுவதும், பங்கீடு செய்வதற்காகத்திறமைமிகுந்த அமைப்புஒன்றை நிறுவுவது பொருளாதாரக் கண்ணோட்டத்தின்படி விரும்பத்தக்கது என்பதை எடுத்துக்காட்டுவதுமே ஆகும். தனியாரின் உபயோகம், அரசாங்க உபயோகம்—இரண்டிற்குமாக உள்ள மொத்தச் சாதனங்கள், ஓர் அளவுக்குத்தான் இருக்கின்றன. அவை திறமையான முறையில் பயன்படவேண்டுமானால், அவற்றின் பயன் உச்ச அளவினதாகவும், வீணாகும் சாதனங்கள் மிகக் குறைந்த அளவினதாகவும் இருக்கும் வகையில் அவற்றைப் பங்கிடவேண்டும். போட்டித்தன்மையை மிகுந்த அளவில் பெற்றுள்ள ஒரு தனியார் தொழில் துணிவுப் பொருளாதாரத்தில் (private enterprise economy), சாதனங்கள், தனியாட்களுடைய 'டாலர் வாக்கு'களாலும் (dollar votes) மக்கள் தொகுதிகளுடைய 'டாலர் வாக்கு'களாலுமே பங்கிடப் படுகின்றன. தனியாட்களுக்குப் போதுமான பகுத்தறிவும் இருந்து, அவர்கள் தேர்ந்தெடுப்பதற்கு ஏராளமான மாற்றுநிலைகளும் இருக்குமானால், தங்கள் வருமானத்திலிருந்து உச்ச அளவு மன நிறைவு கிடைக்கும் வகையில் தங்கள் வருமானத்தைச் செலவுக்கும் சேமிப்புக்கும் இடையே பங்கீடுசெய்வார்கள். அதுபோலவே இந்தப் பண்டத்திற்குச் செலவிடுவதா அல்லது அந்தப் பண்டத்திற்குச் செலவிடுவதா என்பதுபற்றிய முடிவையும் செய்வார்கள். தனிப்பட்ட விருப்பங்களைப் பொறுத்தவரையில்

தமக்கு மனநிறைவு தரும் விருப்பங்களை முடிவுசெய்வதற்கு அவரவரே பொறுப்பாவர். ஆனால் தனியார் வருமானங்களைத் தனியார் உபயோகத்திற்கும், பொது உபயோகத்திற்கும் இடையே பங்கிடுகிற நிலை வரும்போது, ஒரு புதிய சிக்கல் ஏற்படுகிறது. அரசாங்கத் துறையில் எழுகிற விருப்பங்களை (சில சிறிய விதி விலக்குகள் தவிர்த்த ஏனைய விருப்பங்களை), அங்காடி முறைப்படித் தெரிவிக்க முடியாது; அரசியல் நிறுவனங்கள்மூலமே தெரிவிக்க முடியும். பங்கீட்டுச் சிக்கல் முழுமையையும் ஆய்ந்துபார்த்தால், பங்கீட்டு முடிவுகளைச்செய்ய இரண்டு வகையான நிறுவனங்கள் இருப்பது தெரியவரும். அங்காடியில் சாதகமான நிலைமைகளில், நிறைவேற்றப்படவேண்டிய விருப்பங்கள் அடிப்படையில் தனியாள் தன்மை உடையனவே. அரசாங்கத்தில், நிறைவேற்றப்பட வேண்டிய விருப்பங்கள், பெரும்பாலும் சமுதாயத் தன்மை படைத்தனவாக (social in character) உள்ளன. அவற்றால் ஏற்படும் சூழ்நிலை வசதிகளுக்கு, இறுதிநிலைப் பயன்பாட்டுப் பகுத்தாய்வு (marginal utility analysis), போலி நியாயம் பேசும்போது தவிர ஏனைய நிலைகளில் பொருந்துவதில்லை. சமுதாய விருப்பங்களின் இயல்பு, அவற்றின் அளவை நிர்ணயிப்பதற்கான அமைப்பு, அவற்றிற்கான நிதி வசதிகளைச் செய்தல் ஆகிய பொருள்களைப்பற்றி இந்த அத்தியாயத்தில் இனி ஆய்ந்து அறிவோம். சமுதாயத்தின் நன்மைக்காகச் சாதனங்களைப் பயன்படுத்துவது எப்படி என்பதைப் பற்றி நாம் ஆராய்வதால் இந்தப் பகுத்தாய்வில் அரசியல் கண்ணோட்டம் கலந்திருப்பது இயல்பே.

## பொதுப் பொருள்கள் ஊழியங்கள் ஆகியவற்றின் இயல்பு (The Nature of Public Goods and Services)

பொருளாதாரத்தின் தனியார் துறையில், பொருள்கள் 'அங்காடிக் கோட்பாட்'டின்படி (market principle) உற்பத்தி செய்யப்பட்டுப் பங்கீடு செய்யப்படுகின்றன. போட்டியின் சூழ்நிலை ஏற்புடையதாக இருக்கும்போது, நுகர்வோர் இறைமைக்கோட்பாடு (principle of consumer sovereignty) ஆதிக்கம் செலுத்துகிறது. எந்த உற்பத்தித் துறைகளில் தனியாட்களுடைய தேவைகள் (individual demands) மிக அதிகமாக இருக்கின்றனவோ அந்தத் துறைகளில்தான் உற்பத்தியாளர்கள் மிகக் கூடுதலான இலாபம் பெறத்தக்க வாய்ப்பு இருக்கிறது. இந்த உண்மையை உணர்ந்திருப்பதால் உற்பத்தியாளர்கள், மிக அழுத்தமாகத் தெரிவிக்கப் படுகிற தனியார் விருப்பங்களை நிறைவேற்றத்தக்க பொருள்களை உற்பத்தி செய்வதற்குத் தங்கள் சாதனங்களைப் பயன்படுத்துவதன் மூலம், இலாபத்தைப் பெறுகிறார்கள். அங்காடியில், நுகர்வோர்,

தங்களுடைய வாங்கும் விருப்பங்களைத் தெரிவிப்பதில் எத்தகைய சிக்கலும் இருப்பதில்லை. ஆனால் அவர்கள் நுட்பமான முறையில் இந்த விருப்பங்களைத் தெரிவிப்பதற்கு வசதியாக இருக்கும் வகையில் ஏராளமான தெரிவுகளைத் தருவது (offering wide choices) எப்படி என்பதில்தான் சிக்கல் தோன்றக்கூடும். ஆனால், பொதுவாகப் பார்க்கும்போது, போட்டி (competition) திறமையான முறையில் அமைந்திருந்து, மாற்றுப் பொருள்களைப்பற்றிய போதுமான அறிவும் (reasonable knowledge of alternatives) இருக்குமானால், அங்காடியானது, சாதனங்களைத் திறமையான முறையில் அல்லது சிக்கனமான வகையில் பங்கிட்டுவிடும் என்று நாம் நம்பலாம்.

ஆனால், ஒரு சமுதாயத்தில் உள்ள தனியாட்களின் எல்லா விருப்பங்களையும் அங்காடி நடவடிக்கையின்மூலம் நிறைவேற்ற முடியாது. அப்படி நிறைவேற்றமுடியாமலிருப்பது, அவற்றை நிறைவேற்றுதற்கான பொருள்களை உற்பத்தி செய்யமுடியாத அளவுக்கு அவ் விருப்பங்கள் மிகக் குறைவாக இருப்பதால் ஏற்பட்டிருக்குமானால், அங்காடியானது தன் பணியைப் பொருத்தமான முறையில் ஆற்றியிருக்கிறது என்றே கூறவேண்டும். ஏனென்றால், விருப்பங்களின் வரிசை அமைப்பில் மிகக் கீழே உள்ளவற்றை அங்காடி புறக்கணிப்பது இயல்பு. ஆனால் சில விருப்பங்கள் நிறைவேற்றப்படாமல் இருப்பது, இந்தக் காரணத்தால் அல்ல. இவ் விருப்பங்கள் ஏராளமான அளவுடையனவாக இருக்கலாம்; மிக்க முனைப்பு (intensity) உடையனவாகவும் இருக்கலாம். ஆனால், அவ் விருப்பங்கள் வெளியிடப்படுவது, நிறுவனக் காரணங்களால் (institutional factors) தடுக்கப்பட்டிருக்கலாம். ஒரு பொருளுக்கு அங்காடியில் நிலவும் விலையை நான் கொடுக்க ஆயத்தமாய் இருந்தாலொழிய என் விருப்பங்களை நிறைவேற்றுதற்கு உரிய பொருள்களை அங்காடியிலிருந்து நான் பெறமுடியாது. ஆகவே, குறிப்பிட்ட பொருளுக்காக நான் என்னுடைய (பண) வாக்கை (money vote) அளிக்காதபோது, அங்காடி என்னைப் புறக்கணிக்க முடியும். ஆனால் மிக முக்கியமான சமுதாய விருப்பங்களில் மிகப் பலவற்றைப் பொறுத்தவரை, என்னை இவ்வாறு புறக்கணிக்க முடியாது. எடுத்துக்காட்டாக, நாட்டின் பாதுகாப்பைக் கவனிப்போம். அதனால் ஆற்றப்படுகிற பணி (நிறைவேற்றப்படுகிற விருப்பம்கூட) பரந்துபட்டதாக இருக்கின்றது. அதனால் சிலருக்குப் பயன் ஏற்படுமானால்; எல்லாக் குடிமக்களுக்கும் பயன் ஏற்பட்டே தீரும். நாட்டின் பாதுகாப்புக்காக நான் பணம் செலுத்தினாலும் செலுத்தாவிட்டாலும், ஒரு குடிமகன் என்னும் முறையில், பாதுகாப்பால் ஏற்படும் நன்மை எனக்கும் கிடைத்தே தீரும். ஆகவே, நாட்டுப் பாதுகாப்புக்கான சமுதாய விருப்பம் என்னைப்

பொறுத்த அளவில் எவ்வளவு முக்கியமாக இருக்கிறது என்பதை அங்காடிக் கோட்பாட்டால் முடிவுசெய்ய முடியாது.

ஒரு மட்டைப்பந்து ஆட்டத்தின்போது, திரண்டுள்ள கூட்டத்தில் இரண்டு வகையான வேண்டுகோள்கள் விடப்படுகின்றன என்று வைத்துக்கொள்வோம். ஒரு குழுவினர் அம் மக்கட் கூட்டத்தில் சில பானங்களை விற்றுக்கொண்டிருக்கிறார்கள். மற்றொரு குழுவினர், கண்டம் விட்டுக் கண்டம் பாயும் ஏவுகணை ஒன்றை (an intercontinental ballistic missile) அரசாங்கம் வாங்குவதற்காக நன்கொடை திரட்டிக்கொண்டிருக்கின்றனர். இந்த இரு வகை வேண்டுகோள்களில், எதற்கு அதிக முனைப்பான தேவை (effective demand) இருக்கும்? சோடா விற்பனைமூலம் கிடைக்கும்தொகையைவிட ஏவுகணை வாங்குவதற்காகக்கிடைக்கும் நன்கொடைத் தொகை மிகக் குறைவாக இருக்கும் என்று நாம் எதிர்பார்த்தால் அது தவறாகாது. அப்படியானால், நாட்டுப் பாதுகாப்புக்கான விருப்பத்தைவிடச் சோடா முதலிய பானங்களுக்கான விருப்பம் மிகுதியாக இருக்கிறது என்று நாம் முடிவுகட்ட முடியுமா? அது அப்படி இல்லை, இந்த இரு வகைப் பொருள்களுக்கும் உரிய தெரிவு விருப்பங்களைத் (preferences) தெரிவிப்பதற்கான கருவி என்னும் முறையில் அங்காடியே தவறுடையது என்று முடிவு கட்டுவதே பொருத்தமாக இருக்கும். உண்மையான காரணம் என்னவென்றால், ஒரு தனியாள் சோடாவுக்காகப் பணம் கொடுத்தாலொழிய அவருக்குச் சோடா கிடைக்காது. ஆனால் ஏவுகணையைப் பொறுத்தவரை, அவர் பணம் கொடுக்காவிட்டாலும் மற்றவர்கள், ஒரு வகையில் இல்லாவிட்டாலும் மற்றொரு வகையில் பணம் கொடுத்துவிடுவார்கள்; பாதுகாப்புக்கான அவருடைய விருப்பம் நிறைவேற்றப்படுகிற அளவு, அவர் தருகிற நன்கொடையின் அளவால் பாதிக்கப்படமாட்டாது என்பதே.

ஏனைய பொது விருப்பங்களிலும் இதுபோன்ற ஒரு நிலை இருக்கிறது. ஆனால் அந்த விருப்பங்களை நிறைவேற்றுவதால் ஏற்படும் நன்மைகள் இந்த அளவுக்கு முழுமையாகவோ அல்லது இந்த அளவு விரிவாகவோ பரவியிருப்பதில்லை. பொதுக்கல்வி (public education) அத்தகைய விருப்பங்களுக்குரிய ஓர் எடுத்துக்காட்டு ஆகும். பொதுக்கல்வியால் குறிப்பாக நலன் பெறுவோர் (specific beneficiaries) பள்ளிக்கூடங்களில் பயில்வோராக இருந்தாலும், விரிவாகப் பரவியுள்ள கல்வியால் சமுதாயம் முழுவதுமே குறிப்பிடத்தக்க அளவு நன்மையை அடைகிறது. மாணவர்களிடமிருந்து கட்டணம் வாங்கி நடத்தப்படுகிற—முற்றிலும் தனியார் துறையைச் சேர்ந்த பள்ளிக்கூடங்கள்,

கொடுக்கிற விலைக்கு (கட்டணத்திற்கு) ஏற்ற குறிப்பான நன்மைகள் (specific benefits) கிடைக்கின்றன என்று கருதும் பெற்றோர்களின் பிள்ளைகளுக்குச் சிறந்த கல்வியை அளிக்கின்றன என்பதில் ஐயம் இல்லை. ஆனால், ஒரு குடியாட்சி அரசியல் அமைப்பில் அத்தகைய கல்வி முறைமட்டுமே இருக்குமானால், மக்கள்தொகையில் ஒரு பெரும்பகுதியினர், வாக்களிக்கும் உரிமையைப் பயன்படுத்துவதில் குறைந்த அளவு தகுதி உடையவர்களாக இருப்பார்கள்; சமுதாய வாழ்க்கையின் வசதிகள்பற்றிச் சிறிதளவே அறிந்தவர்களாக இருப்பார்கள்; அங்காடியில் 'டாலர் வாக்கு'களை அளிப்பதில் குறைந்த திறமை படைத்தவர்களாக இருப்பார்கள். பொருளாதார அமைப்பை இயக்குவதிலும் குறைந்த ஆற்றல் அமைந்தவர்களாகக் காட்சி தருவார்கள்; சமுதாயத்தின் உறுப்பினர்கள் என்னும் முறையில் குறைந்த அளவு இடப்பெயர்ச்சியே (mobility) பெற்றவர்களாகவும் இருப்பார்கள். இவற்றின் விளைவாகச் சமுதாயத்திலுள்ள ஒவ்வொருவரும் துன்பப்படவேண்டியிருக்கும். தனியாட்கள் பணம் தந்தாலும் தராவிட்டாலும், விரிவான எண்ணிக்கையுள்ள மக்களால் பெறப்படுகின்ற நன்மைகளைப் பொறுத்தவரை, அங்காடிக் கோட்பாட்டால், பொருத்தமான சாதனப் பங்கீட்டைச் செய்யமுடியாது. கல்வி மட்டும் அல்லாமல் இதே வகையான தன்மை படைத்த பொது விருப்பங்கள் வேறுபல இருக்கின்றன. அவற்றில் சில, சாக்கடைக் கழிவை அகற்றுதல் உட்பட உடல் நலனைப் பேணும் ஏற்பாடுகள், காற்றிலும் ஆற்றிலும் இழி பொருள் கலப்பதைத் தடுத்தல், நோய்களைத் தடுத்தல், அஞ்சல் முறை, நெடுஞ்சாலைகள், பொழுது போக்கு வசதிகள், வீடுகட்டுதல், சமூகப் பாதுகாப்பு, குற்றங்களையும் தவறான நடத்தைகளையும் தடுப்பது, தண்டிப்பது, ஆராய்ச்சி நடவடிக்கைகள். இத்தகைய துறைகளில், தனியார் விருப்பங்களும் பொது விருப்பங்களும் போதுமான அளவில் அங்காடிமூலம் தெரிவிக்கப்படமாட்டா. ஆகையால், இத்தகைய விருப்பங்களை நிறைவேற்றுவதற்கு அங்காடிக் கோட்பாட்டிற்குப் பதிலாக வேறு ஏதேனும் ஒரு கோட்பாட்டையே நாம் பின்பற்றியாகவேண்டும்.

ஆனால் பொது விருப்பங்களையும் தேவைகளையும் அங்காடியால் நிறைவேற்றமுடியாமல் இருக்கிற நிலைமைகள் யாவற்றையும் நாம் மேலே உள்ள பத்திகளில் தந்துவிடவில்லை. சில பொது ஊழியங்களுக்கான விருப்பங்களைத் தனியாட்கள் உணர்ந்துகொண்டிருந்தால்கூட, அங்காடி முறையால் அந்த விருப்பங்களைத் துல்லியமான முறையில் அறிந்துகொள்ள முடியாமலிருக்கிற நிலைமைகளில் தலையாயவற்றைமட்டுமே மேலே உள்ள பத்திகளில் நாம் தந்திருக்கிறோம். இந் நிலைமைகளைத் தவிர, 1. இப் பொது விருப்பங்களை

மக்கள் அறிந்திருந்தால்கூட, இலாபமுறைப் பங்கீட்டால் (the profit system of allocation) இவ் விருப்பங்களை, அவற்றின் வரிசை முறைப்படி நிறைவேற்றமுடியாத நிலைமைகள் இருக்கின்றன. 2, சில பொதுவிருப்பங்களை மக்கள் உணராமல் இருப்பதால் அவற்றை நிறைவேற்றமுடியாத நிலைமைகளும் இருக்கின்றன.

இலாப முறையின் இயல்பான நடவடிக்கையானது, சில சமயங்களில், நீண்ட கால இலாபங்களைப் பெறத்தக்கமுறையில் அமைந்திருக்கிறது. எடுத்துக்காட்டாக, வேறு துறைகளில் இலாப முறையானது சிறந்த வகையில் பணியாற்றினாலும், சாதனங்களைக் குறுகிய காலத்தில் பயன்படுவதற்காக, அவற்றின் ஆற்றலை நெடுங் காலத்திற்குப் பேணிக்காக்கும் முயற்சி (conservation) புறக்கணிக்கப் படலாம். சில சமயங்களில் தனிப்பட்ட தொழில் துணிவாளரால் (individual entrepreneur) இலாபம் பெறுவதை ஒத்திவைக்க முடிவதைவிட, சாதனங்களின் உபயோகத்தை ஒத்திவைப்பது சமுதாயத்திற்கு எளிதில் நிறைவேற்றக்கூடிய செயலாக இருக்கிறது. ஆனால், சில சமயங்களில் சாதனங்களைப் பேணிக் காக்கவேண்டு மானால், சாதனங்கள் பயன்படுத்தப்படுவதை ஒத்திவைத்தால் மட்டும் போதாது. தற்போது பயன்படுத்தப்படுகிற சாதனங்களை ஈடுசெய்வதற்கு அல்லது பாதுகாப்பதற்குக் (for replacement or protection) குறிப்பிடத்தக்க அளவு உற்பத்திச் செலவும் செய்ய வேண்டியிருக்கும். எடுத்துக்காட்டாகப் புதுச் சுரங்கங்களைத் தேடிப் பெறுவதன் மூலமாகக் கனிப்பொருள் சாதனங்களை ஈடுசெய்ய வேண்டுமானால், உதவிக்கொடைகள் (subsidies) தரவேண்டி யிருக்கும். தனியார் தொழில் துணிவால் (private enterprise) நீர் மின்சார சாதனங்களைத் திறமையான முறையில் பெருக்க முடியும்; நீர்ப்பாசன வசதிக்கான தண்ணீரைக்கூட அளிக்கமுடியும். ஆனால், வெள்ளத்தடுப்பு, நில அரிப்புக் கட்டுப்பாடு (control of soil erosion) காடுகளைப் புதுப்பித்தல் முதலிய பேணிக்காக்கும் துணை ஊழியங்கள், பெரும்பாலும் அரசாங்கத்தால்தான் செய்யப்படு கின்றன அல்லது அரசாங்க உதவிக் கொடைகள் மூலமாகத்தான் செய்யப்படுகின்றன.

தனியார் தொழில் துணிவு நிலைமைகள் மிகச் சிறப்பாக இருக்கும்போதுகூட, இலாபமுறையால் பொருளாதார நிலைபேறு என்னும் சமுதாயக்குறிக்கோளை நிறைவேற்றும் வகையில் பணி யாற்ற முடிவதில்லை. இலாபமுறை தோற்றுப்போகும் மற்றொரு பொருளாதாரப் பகுதி இது. தேவை (demand) குறையும் என்று எதிர்பார்க்கும்போது, தனியார் தொழில் துணிவில் ஏற்படுகிற

மாறுதல், பெரும்பாலும், பொறிகளிலும் இருப்புப் பொருள் களிலும் செய்யும் முதலீட்டின் அளவு குறைவதாகவே இருக்கிறது. இக்குறைவின் விளைவாகப் பொருளாதார வீழ்ச்சி மேலும் அதிகமாக ஆகிவிடுகிறது. அதுபோலவே, பொருளாதார வீக்கம் (boom) ஏற்படும் என்று எதிர்பார்க்கும்போது, தனியார் துறையால் வாணிப நடவடிக்கைகளின் அளவு விரிவாக்கப்படும். தனியார் துறையில் இயல்பாக எடுக்கப்படும் இத்தகைய நதிவடிக்கைகளால் பொரு ளாதாரத்தில் உள்ள நிலைபேறின்மையின் அளவு பெருகிவிடுகிறது. நிலைபேறு என்பது சமுதாயத்திற்குத் தேவைப்படுகிற ஒரு நற் பொருளாகக் கருதப்படுமானால், உறுதிமொழிகள் (guarantees), உதவிக் கொடைகள், அல்லது அரசாங்கத்தின் ஈடுசெய் நடவடிக்கை கள் (offsetting actions) ஆகியவற்றின் மூலமாகத் தனியார் துறையின் இந்த இயல்பான போக்குகளை மாற்றியமைத்தாக வேண்டும். அப்படி மாற்றியமைக்கும்போது அங்காடியின் உரிமை (freedom of the market) ஓரளவுக்குக் குறையத்தான்செய்யும்.

பகுத்தறிவுக்கேற்ற முடிவுகள் செய்வதற்குத் தேவையான தகவல்கள் கிடைக்காத சமயங்களில், அங்காடிக் கோட்பாட்டால், சாதனப் பங்கீட்டைச் சிக்கனமான முறையிலோ பகுத்தறிவுக்கு ஏற்ற வகையிலோ செய்யமுடியாது என்றும் பொதுவாகக் கருதப் படுகிறது. இத்தகைய நிலைமையில் உற்பத்தியாளர்கள் அல்லது நுகர்பவர்கள் 'சரியல்லாத' முடிவுகளைச் செய்யக்கூடும். உற்பத்தி யாளர்கள், தேவையை, ஓரளவுக்காவது முன்நோக்கி அறியத்தான் வேண்டும். வெற்றியின்மீது ஓரளவுக்காவது அவர்கள் 'பந்தயம் கட்டத்தான்' வேண்டும் (betting on success). நன்மை தீமை வாய்ப்புகள் (odds) அவர்களுக்கு எதிராக இருக்குமானால் அவர்கள் தங்கள் உற்பத்தியை அதிகப்படுத்தமாட்டார்கள். ஆனால் அவ் வாய்ப்புகள் அவர்களுக்குச் சார்பாக இருக்குமானால், அவர்களில் பலர் உற்பத்தியைக் கூடுதலாக்குவார்கள். நடக்க இருப்பவை தவறாகக் கணிக்கப்படுமானால், நன்மை தீமை வாய்ப்புகளும் தவறாக மதிப்பிடப்படும். அப்படி மதிப்பிடப்பட்டால், உற்பத்தியை மிகுவிப்பதால், உண்மையில் ஏற்படக்கூடியதைவிடக் கூடுதலான ஆபத்து (risk) ஏற்பட்டிருப்பதாகத் தோன்றும். இதற்கு உரிய எடுத்துக்காட்டுகளை மின்சார உற்பத்தியிலும் பகிர்விலும் (distribution) நாம் காணமுடியும். 1935-க்கு முன்பு ஐக்கிய அமெரிக்காவின் கிராமப் பகுதிகளில் 10 சதவீதத்திற்கும் குறை வான இடங்களுக்குத்தான் மின்சாரம் அளிக்கப்பட்டுவந்தது. 1936-ல் தொடங்கிய கடன்கள் மற்றும் உதவிக் கொடைகள் வழங்கும் ஓர் அரசாங்கத் திட்டத்தால், கிராமப் பகுதிகளை மின்சார மயமாக்குதல், தனியார் துறையாலும் இயலக்கூடிய செயலே

என்பது தெளிவாக விளக்கப்பட்டது. அதுமுதல் மின்சாரம் அளிக்கும் பணியானது பெருகிக்கொண்டே வந்து, தற்போது, தனியார் துறை அரசாங்கத்துறை இரண்டுமாகச் சேர்ந்து உழவர்களில் ஏறத்தாழ 100 சதவீதத்தினருக்கும் மின்சாரம் அளிக்கும் நிலை ஏற்பட்டிருக்கிறது. இங்கே கவனிக்கவேண்டிய கருத்து என்னவென்ருல், கிராமப் பகுதிகளுக்கு மின்சாரம் வழங்குதல் என்னும் இந்தத் திட்டத்தை அங்காடிக் கோட்பாட்டால் நிறைவேற்ற முடியும் என்னும் உண்மை செயலாய்வு செய்தல் என்னும் ஆபத்தை (the risk of experimentation) ஏற்கக்கூடிய ஒரு நிறுவனம் விளக்கிக் காட்ட வேண்டியிருந்தது என்பதுதான். தேவை, உற்பத்திச்செலவு ஆகியவைபற்றிய தகவல்கள் தெரியாமல் இருந்ததால் கிராமப் பகுதிகளுக்கு மின்சாரம் வழங்கும் திட்டம் (தனியார் துறையில்) முன்னேருமல் இருந்தது. அத் தகவல்கள் அறிவிக்கப்பட்டதும், சிக்கல் தீர்ந்துவிட்டது.

இதே உண்மையை விளக்கிக்காட்டும் மற்ருேர் எடுத்துக் காட்டை, மின்சார உபயோகத்தை விரிவாக்குவதற்குரிய வீதங்களில் நாம் காணமுடியும். குறிப்பாக அரசாங்கத்தால் உற்பத்தி செய்யப்பட்ட மின்சாரத்தைக் குறைந்த கட்டணங்களில் வழங்கிப் பரிசோதனை செய்ததற்கு முன்பு, மின்சாரத்திற்கான அங்காடித் தேவையானது (market demand for electricity), மிக உயர்ந்த நெகிழ்ச்சியின்மை (inelasticity) படைத்திருப்பதாக மின்சாரத் தொழில்துறையில் கருதப்பட்டுவந்தது. அதாவது, மின்சாரக் கட்டணங்கள் குறைக்கப்பட்டால், மின்சாரத் தேவையில் மிகச் சிறிய அளவு உயர்வே ஏற்படும் என்றும், அதன் விளைவாக மின்சார விற்பனையால் கிடைக்கும் மொத்த வரவுகள் குறையும் என்றும் கருதப்பட்டது. ஆனுல், இந்தக் கருத்துகள் யாவும் தவருனவை என்பதையும், மின்சாரத்தைப் பயன்படுத்தும் பல்வேறு பிரிவினருள் பெரும்பாலோரைப் பொருத்தவரை, மின்சராத் தேவையின் நெகிழ்ச்சியானது (elasticity of demand for electricity) தனியார் கம்பெனிகளால் எதிர்பார்க்கப்பட்டதைவிட மிகக் கூடுதலாக இருக்கிறது என்பதையும் உண்மைகள் (பரிசோதனைகளின் விளைவாகக் கிடைத்தவை) தெளிவுபடுத்திவிட்டன. குறைந்த கட்டணங்களை விதிப்பதே சிறந்த வாணிபக் கொள்கை என்பது வெள்ளிடைமலையென விளக்கப்பட்டுவிட்டது.[5] சில உற்பத்தித் துறைகளில், இலாபங்கள் கிடைப்பதற்கு நீண்ட காலம் பிடிப்பதால் இலாபமே கிடைக்காது என்று கருதப்படுவதுண்டு. புத்தமைப்புகளை உருவாக்கியவர்களுக்குக் (innovators) கிடைக்காமல் மற்றவர்களுக்கு இலாபம் கிடைத்த துறைகளும் உண்டு. இத்தகைய துறைகளில் அரசாங்கத்திடமிருந்து உதவி கிடைக்காவிட்டால் தகவல்

அறிவதில் முன்னேற்றம் தடைபடுவது இயல்பே. அடிப்படை ஆராய்ச்சியால் பொருளாதாரத்தில் நீண்ட கால அளவில் ஏற்படும் இலாபமும், சேரிகளை ஒழித்தல், நகரங்களைப் புதுப்பித்தல் ஆகிய திட்டங்களால் நீண்டகால அளவில் ஏற்படும் பொருளாதார நன்மைகளும் இதற்கு உரிய எடுத்துக்காட்டுகள் ஆகும். இத்தகைய நிலைமைகளில், அரசாங்கத்தின் தலையீடு இல்லாமலிருந்தால், விருப்பங்களின் தர வரிசையில், உயர்ந்த தன்மை படைத்த சில விருப்பங்கள் (certain wants of high order) நிறைவேறவே இயலாது. ஒருகால் நிறைவேறினாலும், தாழ்ந்த தன்மைபடைத்த விருப்பங்கள் நிறைவேற்றப்பட்டபின்னரே, நிறைவேறும்.

நாம் இறுதியாகக் கவனிக்கவேண்டிய நிலைமை ஒன்று உண்டு. இந்த நிலைமையில், போதுமான தகவல்களைப் பெருத காரணத்தால், தனியாட்களுடைய நுகர்வு முடிவுகள் தாழ்ந்த தரம் உடையனவாக இருக்கின்றன. ஆகவே, அங்காடிக் கோட்பாட்டால், மிகச் சிறந்தவை அல்லாத வேறு உபயோகங்களுக்குச் சாதனங்கள் பங்கிடப்பட்டுவிடுகின்றன. நுகர்பவருக்குக் கிடைத்துள்ள தகவல்களின்படி அவர் முற்றிலும் பகுத்தறிவுக்கு ஒத்த முறையிலேயே நடந்துகொண்டிருக்கலாம். ஆனால் இவற்றைவிட மிகுதியான தகவல்கள் அவருக்குக் கிடைத்திருக்குமானால், அவர் தம் விருப்பங்களை மாற்றியமைத்துத் தம் டாலர் வாக்குகளை வேறு வகையில் அளித்திருப்பார்.

ஆனால், இத்தகைய நிலைமைகளில், தனியாள் உரிமைக் கொள்கையை (individualism) ஒப்புக்கொண்டுள்ள ஒரு சமுதாயம், தனியாட்களுடைய விருப்பங்களை எளிதில் புறக்கணிக்க இசையாது. மருந்துகளில் கலப்படம் செய்வதைத் தடுத்தல், இருபத்தொரு வயதுக்கு உட்பட்டவர்களுக்குச் (minors) சாராயங்கள் விற்பதைத் தடுத்தல், நஞ்சுகள் உள்ள புட்டிகளின்மீது நஞ்சுகள் என்னும் பெயர்க் குறிப்புச் சீட்டு ஒட்டப்பட்டிருக்கவேண்டும் என்று ஆணையிடல், ஒரு குறிப்பிட்ட வயதுவரை பள்ளிக்கூடம் சென்றுகவேண்டும் என்று கட்டாயப்படுத்தல் முதலிய துறைகளைப் பொறுத்தவரை சிக்கல் எதுவுமில்லை. ஆனால், மக்களின் நல்வாழ்வை உயர்த்துவதற்காக அரசாங்கத்தின் அதிகாரத்தைப் பயன்படுத்துவதற்கும் அரசின் நோக்கங்களை அல்லது ஆட்சிபுரியும் குழுவின் நோக்கங்களை மக்களின் நோக்கங்களைவிட உயர்ந்த நிலைக்குக் கொண்டுசெல்வதற்காக அந்த அதிகாரத்தைப் பயன்படுத்துவதற்கும் இடையே உள்ள வேறுபாடு, தெள்ளத் தெளிவானதாக இல்லை. 'அதிகாரம் தூய்மையைக் கெடுத்துவிடுகிறது (power corrupts)...........' என்று ஆக்டன் பிரபு (Lord Acton) தெரிவித்துள்ள கருத்துரை, தனியார்

விருப்பத்திற்குப் பதிலாக அரசாங்கமுடிவை அனுமதிக்கிற நிலைமை அளவுக்கு மீறிச் சென்ருல் எத்தகைய ஆபத்து ஏற்படும் என்பதை விளக்கிக் காட்டுகிறது.

தற்கால வாழ்க்கையின் சிக்கலான தன்மை காரணமாக, ஒரு சராசரி ஆள், தன்னுடைய நலனுக்கு ஏற்றமுறையில் திறமையாக நடந்துகொள்வதற்குத் தேவையான அறிவைப் பெறுவது கடின மான செயலாக இருக்கிறது. ஆகவே, முக்கியமான உண்மைகளை அறிவிக்கும்படிச் செய்வதில் அரசாங்கம் முன்னணியில் இருப்பதும், தனியாட்கள் தாமாக விரும்பி ஏற்காமல் இருக்கக்கூடிய நடவடிக்கை களை அரசாங்கம் கட்டாயப்படுத்தி ஏற்கவைப்பதும், சாதனங் களைப் பங்கிடும் முறையில் தவருமல் இடம்பெறத் தக்கவையே. சாக்கடைக் கழிவுகளை அகற்றத் தனியாட்கள் ஏற்பாடு செய்வதற்கு மாருக (அரசினரே) துப்புரவு வடிகால்களை அமைத்தல்; கட்டிட விதிமுறைகளைக் கட்டாயப்படுத்தாவிட்டாலும் அவற்றைக் கையாளும்படித் தூண்டுதல், பாதையைப் பிரிக்கும் சட்டங் கள் (zoning laws) மற்றும் போக்குவரத்து ஒழுங்குமுறைகள், வெளிநாடுகட்கு உதவி செய்தல், பொருளாதார வளர்ச்சிக்காக செயின்ட் லாரன்ஸ் கடல்வழி (St. Lawrence Seaway) போன்ற முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்றுதல், அணுஆயுதச் சோதனை களை (nuclear tests) எந்த அளவுக்குச் செய்யலாம் என்பதை முடிவுகட்டுதல் — இவையெல்லாம், அரசாங்கத் தலைமை (முடிவு) இன்றியமையாதுள்ள நிலைமைகளுக்கான எடுத்துக்காட்டுகள். இத்தகைய நடவடிக்கைகளில் சிலவற்றிற்காகச் சாதனங்களில் குறிப்பிடத்தக்க அளவை அரசாங்கம் எடுத்துக்கொள்ளவேண்டி யிருக்கிறது என்பது உண்மைதான். ஆனல் இந் நடவடிக்கைகள் எல்லாவற்றிற்கும் அவ்வாறு எடுத்துக்கொள்ளவேண்டிய தேவை எழுவதில்லை.

அங்காடிக்கோட்பாட்டின்மூலமே பெரும்பாலும் சாதனங்களைப் பங்கீடு செய்யும் ஒரு சமுதாயம், பல்வேறு நிலைமைகளில் அத்தகைய பங்கீட்டுக்கு வேறு ஒரு கோட்பாடு தேவைப்படுவதை உணரும் என்பது தெளிவாகத்தெரிகிறது. இத்தகைய நிலைமைகளில் அங்காடியால் தனியாட்களுடைய விருப்பங்களை நம்பத்தக்க முறை யில் அறிந்துகொள்ளமுடிவதில்லை. அப்படி அறியமுடியாததற்குக் காரணம், தனியாட்கள் தங்களுடைய விருப்பங்களைத் தெரிவிக் காததாக இருக்கலாம். அல்லது, உண்மையான விருப்பங்களை நிறைவேற்ற உத்தமமான முறையில் சாதனங்களைப் பங்கீடு செய்வ தற்குத் தேவையான அளவில் தகவல்கள் உற்பத்தியாளர்களுக்கோ அல்லது நுகர்பவர்களுக்கோ கிடைக்காமல் இருப்பதும்

அதற்குக் காரணமாக இருக்கலாம். இன்னின்ன நிலைமைகள் இப்படி இப்படித்தான் இருக்கும் என்று பாவித்துக்கொள்வதன் மூலமாகப் பொருளாதாரப் பகுத்தாய்வு இந்தச் சிக்கலிலிருந்து தப்பிவிடுகிறது. தனியாட்கள் தங்களுடைய விருப்பங்களைத் துல்லிய. மான முறையிலும் அறிவுக்கு ஏற்றவகையிலும் தெரிவிக்கமுடியும் என்றும், அவர்கள் அப்படியே தெரிவிப்பார்கள் என்றும் பொருளா தாரப் பகுத்தாய்வு பாவிக்கிறது. அப்படிப் பாவிக்கும்போது, சிக்கல், பொது விருப்பங்களையும் தனி விருப்பங்களையும், அவற்றின் இறுதிநிலை மனநிறைவுகள் (marginal satisfactions) ஒத்தநிலையில் இருக்கும்படி இணைப்பது எப்படி என்கிற எளிய கேள்வியாக மாறி விடுகிறது. ஆனால், தனியார் விருப்பங்களோடு பொது விருப்பங்களை அளக்கத்தக்க முறையில் பதிவுசெய்ய அங்காடியால் இயல்வதில்லை என்பதை நாம் முன்னரே படித்தறிந்தோம். இதன் பொருள் யாது எனில், பெரும்பாலான தனியார் பொருள்களைப் பொறுத்த வரை செய்யமுடிவதைப்போல, பொதுப்பொருட்களுக்கான தனியார் தேவைப் பட்டியல்களை (individual demand schedules for public goods) (பல்வேறு விலைகளில் தேவைப்படும் பொருள்களின் அளவுகள் என்னும் முறையில்) மொத்தமாகத் தொகுப்பது, இயலாத செயல் என்பதே. ஆகவே, தனியார் துறைக்கும் பொதுத்துறைக்கும் இடையே சாதனங்களைப் பங்கிடுவதற்கு, இரண்டு மொத்தப் பட்டியல்களின் விலை பொருள்களின் அளவு உறவுகளை (price - quantitiy relationships) இறுதிநிலையில் சமப் படுத்துவது, நடைமுறையில் உதவக்கூடியமுறை ஆகாது. அதோடு, பேராசிரியர் கால்பிரெய்த் (Professor Galbraith) சுட்டிக்காட்டி யிருப்பதைப்போல, தனியார் துறையில் விளம்பரமும் பிறரைப் பின்பற்றி நடத்தலும் மும்முரமாக இருப்பதால், பொதுஊழியங்கள் பின்தங்கிவிடுவது, அவற்றின் இயல்பான போக்காக அமைந்து விடுகிறது.[6]

## வரவுசெலவுத் திட்டக் கோட்பாடு (The Budget principle)

பொருளாதார சாதனங்களைப் பங்கிடுவதில் தனியாட்கள்மீது வலுக்கட்டாயத்தைப் (coercion) பயன்படுத்துவதே வரவுசெலவுத் திட்டக் கோட்பாட்டின் அடிப்படை ஆகும். வழக்கத்திற்கு மாறான விருப்பங்களையுடைய ஓர் ஆள், அங்காடிக் கோட்பாட்டின்படி, வழக்கத்திற்கு மாறான பொருள்களும் ஊழியங்களும் தேவை என்று கோருவதன்மூலம் அவற்றை நிறைவுசெய்ய முடியும். ஆனால், வரவுசெலவுத் திட்டக் கோட்பாட்டின்படிச் சிறுபான்மையோ ருடைய விருப்பங்கள் பெரும்பாலும் புறக்கணிக்கப்பட்டுவிடும். இக் கோட்பாட்டில் பெரும்பான்மையே(majority)ஆட்சிசெய்கிறது.

ஒருவர் தம்முடைய மோட்டார்காரில் பெரிய வால்புறத்துடுப்புகள் (tail fins) இருப்பதை விரும்பாவிட்டால், சிறிய துடுப்புகள் பொருந்திய வேறு ஒருவகை மோட்டார்காரை அவர் வாங்கிக் கொள்ள முடியும். ஆனால், ஒருவருக்குப் பொதுப்பள்ளிக்கூடங்கள் (public schools) இருப்பது பிடிக்கவில்லையென்றால், அல்லது போர்க் கருவிகளின் தொகுதி மிகுதியாக இருப்பது பிடிக்கவில்லையென்றால், அத்தகைய விருப்பங்களை அவரால் நிறைவேற்றமுடியாது. இத்தகைய நிலைமைகளில் வலுக்கட்டாயத்திலிருந்து யாரும் தப்ப இயலாது. ஆனால், சில சமயங்களில், சிறுபான்மை விருப்பங்களை யுடைய ஓர் ஆள், தன்னைப்போலவே விருப்பங்களை உடையவர்கள் பெரும்பான்மையாக இருக்கிற—தனக்குப் பிடித்தமான வேறு சமுதாயத்திற்குச் சென்றுவிடமுடியும்; அப்படிச் சென்று அங்கு உள்ள சிறுபான்மையோரைத் தன் விருப்பங்களுக்கு வலுக் கட்டாயமாக இணங்கவைக்கிற உரிமையை நுகரமுடியும்.

வரவுசெலவுத் திட்டக் கோட்பாடானது மைய முடிவின் மூலமாகப் (central decision) பணியாற்றுவதால், அது சாதனங் களைச் சிறப்பான முறையில் பங்கீடு செய்யவேண்டுமானால், பெரும் பான்மையோருடைய விருப்பங்கள் எவை என்பது தெளிவாக உணரப்படவேண்டும்; அதோடு, பயன்படக்கூடிய நடவடிக்கைகளை முன்மொழிவதற்கு ஏற்ற நுண்ணறிவும் கற்பனையாற்றலும் இருந்தாகவேண்டும். பொதுமக்களின் தேவைகளையும் சாதனங்கள் கிடைக்கக்கூடிய அளவையும் கூர்ந்து அறியும் இயல்பே, சிறந்த முறையில் வரவுசெலவுத் திட்டத்தை வகுப்பதற்கான அடிப்படை என்பதை இந் நூலின் 2ஆவது அத்தியாயத்தில் வரவுசெலவுத் திட்ட நடைமுறையைப்பற்றிப் படித்தபோது நாம் தெரிந்து கொண்டோம். ஆனால் உத்தமமான முறையில் (optimum) சாதனங் களைப் பங்கிடுவதற்கும், வீணுவதை மிகக்குறைந்த அளவினதாக ஆக்குவதற்கும், அரசாங்கப் பொறியானது, வரவுசெலவுத் திட்ட முறை மூலம் எவ்வாறு பணியாற்றமுடியும்? [7]

அங்காடி முறையால், சமுதாயப் பொருள்களுக்கான விருப்பங்களைப் போதுமான அளவில் பெறமுடிவதில்லை என்பதை நாம் முன்னரே கண்டுணர்ந்தோம். ஆகவே இத்தகைய சமுதாய விருப்பங்களை நிறைவேற்றும் முக்கியமான பணியை வரவுசெலவுத் திட்டம்தான் மேற்கொள்ளவேண்டும். தலஅரசாங்கங்கள், தங்கள் ஆட்சிக்கு உட்பட்ட மக்கள் அனைவரையும் ஓர் இடத்தில் கூட்டி அவர்களுடைய கருத்துகளை அறிகிற ஒரு வழக்கம், முற்காலத்தில் இருந்தது. இந்த முறையால், ஒரு குறிப்பிட்ட சாதனப் பங்கீட்டுத் திட்டத்திற்குச் சார்பாகவும், எதிர்ப்பாகவும் நேரடியாக மக்கள்

தங்களுடைய வாக்குகளை அளிக்கமுடியும். போதுமான வகைகளிலும் போதுமான விவரங்களோடும், மாற்றுத் திட்டங்கள்(alternatives) மக்கள்முன் வைக்கப்பட்டு, அந்த மாற்றுத் திட்டங்கள் அவர்களால் தெளிவாகப் புரிந்துகொள்ளப்படுமானால், மக்கள் நேரடியாக வாக்குகளை அளிக்கும் இந்த நகரக்கூட்ட முறையால் (town meeting system), தனியார் விருப்பங்களோடு பொது விருப்பங்களையும் துல்லியமான முறையில் பதிவுசெய்யமுடியும். ஆனால்; பெரும்பாலான அரசாங்கங்கள் — தலஅரசாங்கங்கள் உட்பட—மிகப் பெரிய அளவுக்கு வளர்ந்துவிட்டதால், அரசாங்கத்தின் சட்ட மன்றப் பிரிவில் ஒவ்வொரு குடிமகனும் தனக்குத் தானே பிரதிநிதியாக இருப்பது என்பது, இப்போது முடியாத செயலாகிவிட்டது.

ஓர் ஆள் மற்றோர் ஆளுக்காக முடிவுசெய்யவேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டவுடனே, அத்தகைய பிரதிநிதித்துவத்தை மிகச் சிறந்ததாக ஆக்குவது எப்படி என்னும் சிக்கல் ஏற்பட்டுவிடுகிறது. பிரதிநிதிகளின் எண்ணிக்கை மிகுதியாக இருந்தால், சட்டமன்ற முறையில், சிறுபான்மையோருடைய விருப்பங்கள் நிறைவேற்றப்படாவிட்டாலும் அவை எத்தன்மையன என்பது கேட்டாவது அறியப்படும். ஆனால் பெரும்பான்மையோருடைய விருப்பங்களைச் சார்ந்த பிரதிநிதிகள் மிகுதியாக இருப்பதால், அவ் விருப்பங்களே, சட்டமன்ற முறையில் ஆதிக்கம் செலுத்தும். ஆகவே, தேர்தல்கள் நடைபெறும்போது, தலையாய சிக்கல்களைப் பற்றி வேட்பாளர்கள் (candidates) கொண்டுள்ள கருத்துகள் எத்தகையவை என்பது வாக்காளர்களிடையே துல்லியமான முறையில் விளக்கப்படவேண்டும். அப்படி விளக்கப்பட்டால்தான், வாக்காளர்களால், தங்களுடைய விருப்பங்களின் அளவைத் தக்க முறையில் பதிவுசெய்யமுடியும் (தெரிவிக்கமுடியும்). வேட்பாளராக இருப்பவர், தன் கருத்துகளைத் தெளிவற்ற முறையில் தெரிவிப்பதில் வல்லுநராக இருக்கும்போது, அல்லது எல்லா வாக்காளர்களுடைய எல்லாக் கருத்துகளையும் ஏற்றுக்கொள்பவராகக் காட்சி அளிக்கும் போது, அல்லது கன்சர்வேடிவ் கருத்துடைய வேட்பாளர்கள் லிபரல் கருத்துடையோர்போலவும், லிபரல் கருத்துடையோர் கன்சர்வேடிவ் கருத்துடையோர் போலவும் தோற்றம் அளிக்கும்போது, தன் மதிப்புகளின் அளவுக்கு (scale of values) எந்த வேட்பாளர் பிரதிநிதியாக இருக்கமுடியும் என்பதை வாக்காளரால் முடிவுசெய்ய முடிவதில்லை. இரண்டு கட்சிகள் மட்டுமே உள்ள முறையால், வாக்காளர்கள், இரண்டே இரண்டு அபேட்சகர்களிலிருந்து தங்களுக்கு ஏற்றவரைத் தேர்ந்தெடுக்கவேண்டிய நிலை ஏற்பட்டுவிடுகிறது என்றாலும், இந்த முறையால், கட்சிகளின்

பொறுப்புணர்ச்சி மிகுதியாகிறது என்றும் பொது விருப்பங்களை நிறைவேற்றுவதற்குப் பொறுப்புமிக்க முயற்சி செய்யப்படும் என்றும் பெரும்பாலான அரசியல்கலை மாணவர்கள் நம்புகிறார்கள்.

இந்த அத்தியாயத்தின் தொடக்கத்தில் மேற்கோளாகக் காட்டப்பட்ட ஃபிரேசர் பி. வைல்ட் (Frazer B. Wilde) அவர்களின் கருத்துரை, தவறான கொள்கை கையாளப்படுவதன் விளைவாகச் சாதனங்களைத் திறமையான முறையில் பயன்படுத்த முடியாத ஆபத்து ஏற்படக்கூடும் என்பதை எடுத்துக்காட்டியிருக்கிறது. அவருடைய கருத்துரை தெரிவிக்கப்பட்ட சூழ்நிலையைக் கவனத்தில் நிறுத்திப் பார்த்தால், அவர், வேளாண்மைக் கொள்கையையே குறிப்பிட்டுள்ளார் என்பது தெள்ளிதிற் புலப்படும். அரசாங்க உதவிக் கொடைகளால் திறமையின்மை பெருகுகிறது என்பது உண்மையாக் இருக்கலாம். ஆனால், ஏறத்தாழ எல்லா அரசாங்கச் செலவுகளிலும் நேர்முகமான உதவிக் கொடைக் கூறுகள் இருக்கின்றன. பள்ளிக்கூடங்களிற் பயிலும் பிள்ளைகள் அல்லது நெடுஞ்சாலைகளிற் பணியாற்றும் பார வண்டிகள் கணக்கிடப்பட்ட உற்பத்திச் செலவைவிடக் குறைந்த செலவில் ஊழியங்களைப் பெறக்கூடும். எப்படியிருப்பினும், பகுத்தறிவின் காரணமாகவோ அல்லது அறியாமையின் விளைவாகவோ அரசாங்கத்தின் ஒரு திட்டத்தை எதிப்பவர்கள், அப்படி எதிர்த்தபோதிலும், அந்தத் திட்டம் நடைமுறையில் இருக்கும்வரையில் அதற்குரிய நிதி ஆதரவைத் தந்தே ஆகவேண்டும். வரவு செலவுத் திட்டக் கோட்பாட்டின்படி, பெரும்பான்மையோரின் மதிப்பீடே (majority evaluation) ஆதிக்கம் செலுத்தமுடியும். வரவு செலவுத் திட்டக் கோட்பாட்டின்படிச் செய்யப்படும் சாதனப் பங்கீட்டின் திறமையின்மையைத் தீர்ப்பதற்குரிய வழி, பங்கீடு செய்வதற்கான இந்தக் கருவியை (வரவு செலவு திட்டக் கோட்பாட்டை) ஒதுக்கித் தள்ளி விடுவது அல்ல; பகுத்தறிவுக்கு ஏற்ற முறையில் பணியாற்றும்படி இந்தக் கருவியை மாற்றியமைப்பதே. திரு. ஐசனோவர் (Mr. Eisenhower) அவர்களால் தெரிவிக்கப் பட்டுள்ள கோட்பாட்டைப் பலர் உடனடியாக ஒப்புக் கொள்வார்கள் என்றாலும், அந்தக் கோட்பாட்டை எல்லாச் சமயங்களிலும் கையாளத்தொடங்குவது நகைப்புக்குஇடமானதாக இருக்கும் என்பது வெள்ளிடைமலை. பொது உபயோகத்திற்கு ஒதுக்கப்படும் சாதனங்களின் அளவைக் குறைக்கவேண்டும் என்னும் உறுதியோடு அரசாங்க ஊழியத்தில் சேரும் அதிகாரிகள், உண்மை நிலைமையை நேருக்கு நேராகக் காணும்போது, பெரும்பாலும் அப்படிக் குறைக்கமுடிவதில்லை. அரசாங்கத்தின் எல்லா நிலை

களிலும் இத்தகைய நிகழ்ச்சி ஏற்படுகிறது. அப்படி ஏற்படுவதன் காரணம், அடிக்கடி சொல்லப்படுவதைப்போல, அரசாங்க அதிகாரிகள் விரைவில் 'பணித்துறையாளர்களாக' (bureaucrats) மாறி, தங்களுடைய சிக்கன ஆர்வத்தை இழந்துவிடுகிறார்கள் என்பதாலோ அல்லது அவர்களுடைய திட்டங்கள், பணித்துரைத் தன்மை படைத்த கீழ்த்தர அதிகாரிகளின் குழுவால் சிதைக்கப்பட்டு விடுகின்றன என்பதாலோ அல்ல. பொறுப்புமிக்க அதிகாரிகள் நடைமுறை நிலைமையை மிக அருகாமையிலிருந்து கூர்ந்து கவனிக்கும்போது, தற்போதைய திட்டங்கள் தொடர்ந்து இருப்பதால் ஏற்படக்கூடிய பயனையும், அத்தகைய புதிய பணிகளைத் தொடங்கவேண்டிய தேவை தொடர்ந்து இருப்பதையும் அவர்கள் ஐயம் திரிபு அற உணர்ந்துகொள்வதே, உண்மையான காரணமாகும்.

அரசாங்கச் செலவுகள் எப்போதும் மிகக் கூடுதலாகவே இருக்கின்றன என்னும் கருத்தை மாற்றமுடியாத வகையில் என்றென்றும் கொண்டிருக்கிற கொள்கை அமைப்பாளர் (the policy maker), பெரும்பாலும், செயல்கள் நிறைவேறுவதைத் தடுக்கிற மனிதராகவே இருக்கமுடியும். ஏனென்றால், அங்காடிக் கோட்பாடும் வரவு செலவுத் திட்டக் கோட்பாடும் இணைந்து நின்று பணியாற்றுவதால், தனியார் உபயோகத்திற்கும் பொது உபயோகத்திற்கும் இடையே சாதனங்கள் திருப்திமிக்க முறையில் பங்கிடப்படுகின்றன. (அப்படிப் பங்கிடப்படுவதில் சில தாமதங்கள் ஏற்படக்கூடும் என்பது உண்மைதான்.) அப்படிப் பங்கிடப்பட்ட போதிலும், அம் முறையில் பெருந் தவறு ஏதேனும் இருக்கிறது என்றால், அது, தனியார் உபயோகத்திற்காகச் சாதனங்கள் மிகுந்த அளவில் ஒதுக்கப்பட்டுவிடுவதே—குறிப்பாகப் போகப்பொருள் நுகர்வுக்காக ஒதுக்கப்பட்டுவிடுவதே என்று கருதுவோர் தொகை வளர்ந்து வருகிறது. பேராசிரியர் கால்பிரெய்த் (Professor Galbraith) இந்தக் கருத்தை வசீகரமான முறையில் பின்வருமாறு தெரிவித்திருக்கிறார் :

'ஊதா நிறமும் மங்கலான சிவப்பு நிறமும் உடையதும், குளிர் பதனம் செய்யப்பட்டதும் (air conditioned), சக்தியால் இயக்கப்படுவதும் (power-steered,) சக்தியால் இயக்கப்படும் சக்கரத் தடுப்புகளை உடையதும் power-braked) ஆகிய தங்களுடைய மோட்டார்காரை எடுத்துக்கொண்டு சுற்றுப் பயணம் செய்யும் ஒரு குடும்பத்தினர், மோசமான பாதைகள் அமைந்த நகரங்களில் செல்கிறார்கள். அந்த வழிகள், குப்பை கூளங்கள், சிதைந்துபோன கட்டிடங்கள், விளம்பரப் பலகைகள், நீண்ட காலத்திற்கு முன்பே நிலத்திற்கு அடியில் செலுத்தப்பட்டிருக்கவேண்டிய—ஆனால் இப்போதும் நிலத்திற்கு மேலே சென்றுகொண்டிருக்கிற கம்பிகளுக்காக நிறுவப்பட்டுள்ள கம்பங்கள் ஆகியவற்றின் காரணமாக வெறுக்கத்தக்க காட்சியை வழங்கிக்கொண்

டிருக்கின்றன. நகரங்களைக் கடந்தபின் அவர்கள் செல்லும் நாட்டுப்புறமோ, வாணிபக்கலையின் விளைவாகப் பெரும்பாலும் நம் கண்ணுக்குப் புலனாகாதபடி மறைக்கப்பட்டிருக்கிறது. [நம்முடைய மதிப்புத் திட்டத்தில் (value system) வாணிபக் கலை விளம்பரப்படுத்தும் பொருள்களுக்கு மிக உயர்ந்த இடம் தரப்பட்டிருக்கிறது. எனவேதான், நாட்டுப்புறம் நல்ல காட்சியை வழங்க வேண்டும் என்பது போன்ற கலைச்சுவைக் கருத்துகள் (aesthetic considerations) முக்கியத்துவ வரிசையில் இரண்டாவது இடமே பெற்றிருக்கின்றன. இத்தகைய கருத்துகளை நாம் விடாப்பிடியாகப் பற்றிக்கொண்டிருக்கிறோம்.] அக் குடும்பத்தினர், தும்பும் தூசும் நிறைந்த நீரோடை ஒன்றின் அருகில் அமர்ந்து கொண்டு, எளிதில் தூக்கிச்செல்லக்கூடிய ஐஸ் பெட்டி ஒன்றில் வைத்திருக்கும் நேர்த்தியாகக் கட்டப்பட்டுள்ள உணவுப் பொட்டலத்தைப் பிரித்து, கேளிக்கை விருந்து அருந்துகிறார்கள். அதன்பின், அன்றைய இரவு முழுவதையும், பொதுமக்களின் உடல் நலத்திற்கும் ஒழுக்கத்திற்கும் ஆபத்தை விளைவித்து வரும் ஒரு பூஞ்சோலையில் கழிக்கத் தொடங்குகிறார்கள். அழுகிப்போன குப்பை கூளங்களின் நாற்றத்திற்கு இடையே, ஒரு நைலான் கூடாரத்தில், காற்றுப்பாய் (air mattress) ஒன்றின்மீது படுக்கிறார்கள். இவ்வளவும் முடிந்தபின் உறங்குவதற்கு முன்னால், கிடைத்துள்ள வசதிகளின் விசித்திரமான முரண்பாடு பற்றி தெளிவற்ற வகையில் சற்றே அவர்களுக்குச் சிந்தித்துப்பார்க்கத் தோன்றும்.'[8]

## அரசாங்கச் செலவுகளும் பொருளாதார வளர்ச்சியும் (Public Expenditures and Economic Growth)

இரண்டாம் உலகப் போரிலிருந்து பொருளாதார வளர்ச்சியானது, ஒப்புக்கொள்ளப்பட்டதும் தலையாயதும் ஆன ஒரு சமுதாயக் குறிக்கோள் என்னும் நிலையைப் பெற்றுவிட்டது. பொருளாதார வளர்ச்சியானது, தலா மெய்யான உற்பத்தியில் (real per capita output) அல்லது தலா வருமானத்தில் (per capita income) ஏற்படும் உயர்வு என்றே பொதுவாக வரையறுக்கப் படுகிறது. ஆனால், ஒரு சமுதாயக் குறிக்கோள் என்னும் முறையில், பொருளாதார வளர்ச்சியானது, பொருள்களின் எண்ணிக்கை அளவையும் விஞ்சிய உள்ளடக்கத்தை உடையதாக இருக்கிறது என்பது பொதுவாக ஒப்புக்கொள்ளப்படுகிறது. உண்மையான வளர்ச்சி என்பது, பொருள்களின் மானிட இயல்புகளையும் சமூக இயல்புகளையும்பற்றிய கண்ணோட்டத்தையும் கொண்டதாகவே இருக்கும். மக்களுக்குக் கிடைக்கிற ஓய்வின் அளவும் வளரத்தக்க தாகவே பொருளாதார வளர்ச்சி இருக்கும். உற்பத்தியையும் நாட்டு வருமானத்தையும்பற்றிய புள்ளி விவரங்களால் இந்த இயல்புகளையும் ஓய்வின் அளவையும் திறமையான முறையில் அளந்தறிய முடிவதில்லை.

போரின்போதும், போருக்குப் பிறகும், முன்னேறிய பொருளா தாரங்களில், குறைந்து கொண்டிருந்த மக்கள் தொகை வளர்ச்சி வீதம் உயரத் தொடங்கிவிட்டதால், அதிக எண்ணிக்கையுள்ள

மக்களின் வாழ்க்கைத் தரத்தை நிலைநாட்டுவதற்காக உற்பத்தி நடவடிக்கையை அதிகப்படுத்தவேண்டியதன் இன்றி யமையாமையை அந்த சமூகங்கள் தெளிவாக உணரத் தொடங்கி விட்டன. உற்பத்தி நடவடிக்கையில் ஏற்படும் அத்தகைய உயர்வு, வளர்ச்சி (growth) என்பதற்கு மாருகப் பெருக்கம் (expansion) என்று அழைக்கப்படுவதே முறை. ஆனால், இந்தப் பொருளாதாரங்களில் உள்ள மரபானது, வாழ்க்கைத் தரங்களை உயர்த்துவதாகவே(வளர்ச்சி) இருக்கிறது. இந்தத் தலா உயர்வைக் கூடுதலாகியுள்ள மக்கள் தொகைக்கும் பொருந்தும்படி ஏற்படுத்த வேண்டுமானால், போருக்கு முந்திய காலத்தில் ஏற்பட்ட உற்பத்தி உயர்வைவிட இப்போது ஏற்படும் உற்பத்தி உயர்வு, தொடர்ச்சியாக ஏறிக்கொண்டே இருக்கவேண்டும். நெடுங்காலமாகப் பின் தங்கியுள்ள பொருளாதாரங்களில் (traditionally backward economies), இரண்டு வகையான நிகழ்ச்சிகளின் வளர்ச்சியால் பொருளாதார வளர்ச்சிச் சிக்கலானது முன்னணிக்குக் கொண்டு வரப்பட்டிருக்கிறது. இந் நாடுகள் சிலவற்றில், குறிப்பாக சோவியத் ரஷ்யா, சீனு ஆகியவற்றில், பொருளாதார வளர்ச்சியின் குறிப்பிடத் தக்க வீதங்கள், உலக நிகழ்ச்சிகளில் ஆதிக்கம் மிகுந்ததும் நிலைகுலையச் செய்வதுமான ஒரு பங்கை ஏற்கவேண்டும் என்னும் அரசியல் உறுதியோடு இணைந்தே காணப்பட்டன. இந் நாடுகளில், உள்நாட்டு வளர்ச்சி (internal growth) யானது, அந்த வளர்ச்சி தேவை என்பதற்காகவும், படைபல ஆற்றலுக்கான தொழில்துறை அடிப்படையாக (industrial base) அது விளங்கும் என்பதற்காகவும், தலையாய முதன்மை உடையதாகக் கருதப்படுகிறது. வளர்ச்சி குறைந்த ஏனைய நாடுகள் (other underdeveloped countries), பொருளாதார வளர்ச்சியை அடிப்படையான ஒரு சமுதாயக் குறிக்கோளாகக் கொண்டிருக்கின்றன. ஆனால் அவை இத் துறையில் பெரு வெற்றியைப் பெற இயலவில்லை. இவ்வாருகப் பொருளாதார வளர்ச்சிக்கான ஆர்வம் உலகம் முழுவதும் காணப்படுகிறது. மக்களின் பொருளாதார நல்வாழ்வை மேம்படுத்தவேண்டும் என்கிற எண்ணத்தால்மட்டும் இந்த ஆர்வம் ஏற்பட்டுவிடவில்லை. பன்னாட்டு அரசியல் வானத்தில் புதிய விறுவிறுப்பு மிகுந்த அமைப்புகள் தோன்றியுள்ளதன் விளைவாகப் பல்வேறு நாடுகளுக்கு இடையே ஏற்பட்டுள்ள போட்டியாலும் இந்த ஆர்வம் உலகம் முழுவதும் பரவியிருக்கிறது.

பொருளாதார சாதனப்பங்கீட்டைப்பற்றிய ஓர் அத்தியாயத்தில் பொருளாதார வளர்ச்சிபற்றிய சிக்கலைச் சந்திக்க நேரிட்டதுபற்றி நம் வாசகர்கள் முதலில் ஓரளவு வியப்படைந்திருக்கக்கூடும். ஆனால், சற்றே சிந்தித்துப்பார்த்தால், பொருளாதார வளர்ச்சியானது,

பங்கீட்டுச் சிக்கலின் ஒரு சிறப்புப் பகுதியே என்பது தெளிவுற விளங்கும். நெடுங்காலமாக, பங்கீட்டுச் சிக்கலானது, தனியார் பொருள்கள்-மற்றும் ஊழியங்களிலிருந்தும் பொதுப் பொருள்கள் மற்றும் ஊழியர்களிலிருந்தும் பெறக்கூடிய பயன்பாடுகளைத் (utilities) தக்க முறையில் பகிர்ந்தளிப்பது எப்படி என்பது பற்றிய சிக்கலாகவே இருந்திருக்கிறது. ஆனால், பொருளாதார வளர்ச்சிச் சிக்கலானது, முக்கியமாக, சாதனங்களை நுகர்வுக்கும் முதலீட்டுக்கும் இடையே பங்கிடுவதுபற்றிய பிரச்சினையாகவே இருக்கிறது. இந்த இரண்டு துறைகளுக்குமிடையே தக்க முறையில் சாதனங்கள் தனியார் துறையின்மூலம் பயன்படுத்தப்படவேண்டுமா அல்லது அரசாங்கத் துறையின்மூலம் பயன்படுத்தப்படவேண்டுமா என்னும் அடுத்த கேள்வி எழுகிறது. இவ்வாறுகப் பொருளாதார வளர்ச்சியானது, அடிப்படையில், சாதனப் பங்கீடுபற்றிய ஒரு சிக்கலாகவே அமைந்திருக்கிறது.

பொருளாதார வளர்ச்சியானது உற்பத்தி ஆற்றலின் பெருக்கத்தையே முற்றிலும் பொருத்திருக்கிறது' என்றும், உற்பத்தி ஆற்றலின் பெருக்கம் கட்டிடங்கள் அமைப்பதையும் பொறிகள் நிறுவுவதையுமே முற்றிலும் பொறுத்திருக்கிறது என்றும் பொருளாதார வளர்ச்சிபற்றிய இலக்கியத்தின் பெரும்பகுதியில் தெரிவிக்கப்பட்டிருந்தாலும், பொருளாதார வவர்ச்சிக்கு உகந்த நிலைமைகள் பலதிறப்பட்டனவாக இருக்கின்றன. குறிப்பிட்ட காரணிகளின் முக்கியத்துவம், ஒரு குறிப்பிட்ட சமயத்தில் பல்வேறு பொருளாதாரங்களுக்கு இடையேயும், ஒரு குறிப்பிட்ட பொருளாதாரத்தில் பல்வேறு சமயங்களுக்கு இடையேயும் வேறுபடுகிறது. ஆனால், வேலை நிறைவு அளவில் உள்ள ஒரு பொருளாதாரத்தில், உற்பத்தி ஆற்றலின் பெருக்கத்தின்மூலமாகவே வளர்ச்சியைப் பெறமுடியும் என்பது, தெளிவாகத் தெரிகிற உண்மையாகும். ஆனால் உற்பத்தி ஆற்றலைப் பெருக்குவதற்கான தூண்டுதல் தொடர்ந்து இருக்கவேண்டுமானால், நுகர்வுக்கான விருப்பம் பெருகிக்கொண்டிருக்கவேண்டும்; அல்லது, அரசாங்கத்திற்கான பொருள்களுக்கும் ஊழியங்களுக்குமான தேவை (demand) பெருகிக் கொண்டிருக்கவேண்டும். அத்தகைய தேவை இருக்குமானால், உற்பத்தி ஆற்றலின் பெருக்கம் காரணமாக, பொருத்தமான இயற்கைச் சாதன வகைகளின் பெருக்கம், பொருத்தமான தேர்ச்சியும் திறமையும் படைத்த தொழிலாளர்களின் எண்ணிக்கைப் பெருக்கம், பொறிகள், மற்றும் கருவிகளின் பெருக்கம் ஆகிய இவற்றில் சிலவோ அல்லது அனைத்துமோ ஏற்படும். உற்பத்தி நடவடிக்கை நடைபெறுகிற பொதுச் சுற்றுப் புறத்தின் கோணத்திலிருந்து பார்க்கும்போது இந்தக் காரணிகள்

யாவும் எந்த அளவுக்குப் 'பொருத்தமாக' இருக்கின்றன என்பதைப் பொறுத்துத்தான், உற்பத்தி ஆற்றலின் பெருக்கத்தின் அளவு அமைந்திருக்கும்.

உற்பத்திப் பெருக்கம் என்னும் சிக்கலின் பல கூறுகளில், அரசாங்கத்தின் பணி இன்றியமையாததாக இருக்கிறது. நெடுங்காலமாக அரசாங்கத்துறையின் அளவை மிகுதியாகவும், தனியார் துறையின் அளவைக் குறைவாகவும் பெற்றுள்ள பொருளாதாரங்களில், அரசாங்கம் செய்யவேண்டிய முடிவுகளின் வரிசை விரிவானதாக இருக்கும் என்பது உண்மைதான். ஆனால், ஐக்கிய அமெரிக்காவில் இருப்பதைப்போன்ற தனியார் தொழில் துணிவுப் பொருளாதாரங்களில்கூட, பொருளாதார வளர்ச்சியில் அரசாங்கத்தின் பங்கு, நம் கவனத்தைக் கவரத்தக்க அளவுடையதாக இருக்கிறது. இயற்கைச் சாதனங்கள் எந்த அளவுக்குக் கிடைக்கும் என்பது, இறந்தகாலத்தில் கையாளப் பட்டதும் நிகழ்காலத்தில் கையாளப்படுவதுமாகிய பேணிக் காக்கும் கொள்கையையே (conservation policy) குறிப்பிடத்தக்க அளவில் பொறுத்திருக்கிறது. மின்சாரம் மற்றும் நீர்ப்பாசன சாதனங்களின் வளர்ச்சித் திட்டங்கள், வெள்ளக் கட்டுப்பாடு நில அரிப்புக் கட்டுப்பாடு முதலிய திட்டங்களின் விளைவாக, அரசாங்கம், நேர்முக முதலீட்டிலும், தனியார் தொழில் துணிவைத் தூண்டுவதற்கும் தொழில்நுணுக்க உதவியைத் தருவதற்கும் உரிய மேம்பாட்டுக் கொள்கைகளிலும் மிகக் கூடுதலான பங்கேற்கவேண்டிய நிலைமை ஏற்பட்டுவிட்டது. பொருள்களை உற்பத்தி செய்வதிலும், வேளாண்மைத் துறையில் உற்பத்தியைப் பெருக்குவதிலும், கிடைத்தற்கரிய சாதனங்களுக்குப் பதிலாகத் தாராளமாகக் கிடைக்கும் சாதனங்களைப் பயன்படுத்த உதவிபுரியும் ஆராய்ச்சியைச் செய்வது, பல்வேறு அளவுகளில், அரசாங்கத்தின் பணியாகவே தொடர்ந்து இருந்துவருகிறது. 'ஊர்ந்து வரும் சமதர்மம்' (creeping socialism) என்று சிலரால் அழைக்கப்படுகிற முறைகள், உரம்படைத்த முதலாளித்துவத்தை (robust capitalism) உண்டாக்குவதற்கான உதவிகள் தவிர வேறொன்றும் இல்லை என்றே கூறிவிடலாம்.

உழைப்புச் சாதனங்களைப் பொறுத்தவரையில், ஒரு குறிப்பிட்ட நேரத்தில் இருக்கக்கூடிய மக்கள் தொகையின் அளவு, அரசாங்கச் செல்வாக்குக்கு உட்பட்டதல்ல என்பது வெளிப்படை. ஆனால், நோய்கள், எதிர்பாராத இடர்கள், இவற்றைத் தடுப்பதற்கும் தீர்ப்பதற்கும் உரிய ஆராய்ச்சிகளும் வசதிகளும், உணவிலும், நுகர்வோரைக் காத்தலிலும் செய்யப்படும்

ஆராய்ச்சியும், பொழுதுபோக்கு வசதிகளும் உழைப்பாளர்களின் உடல்நலத்தையும் வீரியத்தையும் மாற்றியமைக்கின்றன. இத் துறைகள் எல்லாவற்றிலும் அரசாங்கங்களின் பங்கு குறிப்பிடத்தக்க அளவுடையதாக இருக்கிறது. இத் துறைகள் எதிலும் இப் பங்கு குறைக்கப்படக்கூடும் என்று தோன்றவில்லை. அப்படிக் குறைக்கப் படவும் கூடாது. உழைப்புச் சாதனங்களின் மேம்பாட்டுத் திட்டங்களில் மிக முதன்மையானவை, கல்வியும் நூல்நிலையங்களும் ஆகும். இந்த இரண்டு துறைகளிலும் அரசாங்கத்தின் பங்கு பேராதிக்கம் மிகுந்ததாக இருந்தது ; இன்றும் இருந்து வருகிறது. தொழில்நுணுக்கத் திறமைகளுக்கான சிறப்புப் பயிற்சியை அளிப்ப தோடு கல்வியின் பணி முற்றுப்பெற்றுவிடவில்லை. பகுத்தறிவுக்கு ஏற்ற முறையில் முடிவு செய்யும் ஆற்றலை வளர்ப்பது, கருத்துகளை உருவாக்குவதற்கும் தெரிவிப்பதற்கும் புரிந்து கொள்வதற்குமான திறமையைப் பெருக்குவது, திரட்டப் பட்டுள்ள அறிவை முன்னேற்றத்திற்காகப் பயன்படுத்தவல்ல ஆற்றலை வளர்ப்பது ஆகியவையும் கல்வியின் பணிகளே ஆகும். கல்வியானது முன்னேற்றத்தை உருவாக்கும் மிக முக்கியமான சக்தி ஆகும். ஏனென்றால் புத்தமைப்பாளர்கள் (innovators) தொழில் நுணுக்கத் துறையில் முன்னேறுவதற்கான அடிப்படையை அது அமைக்கிறது என்பதோடு, அவர்களால் கண்டுபிடிக்கப்படும் புத்தமைப்புகளை ஏற்றுக்கொள்வதற்கும், அவற்றிற்கு ஏற்ற முறையில் தங்களைச் சரிசெய்துகொள்வதற்கும் பொதுமக்களை ஆயத்தப்படுத்துகிறது.

உற்பத்தித் திறமையை அதிகப்படுத்துவதற்கான மூலதனக் கருவிகளை அளிப்பதைப் பொறுத்தவரை, தனியாரின் தொழில் துணிவின்மீதே தலையாய் பொறுப்பு சுமத்தப்பட்டுள்ள பொருளா தாரங்களில்கூட, அரசாங்கங்கள் சிறப்பான உதவியை அளிக் கின்றன. முதலீட்டைச் செய்வதற்குத் தேவைப்படுகிற சேமிப்பு, போதுமான வீதத்தில் நடைபெறவேண்டுமானால், அரசாங்கத்தின் வலுக்கட்டாய அதிகாரங்கள் பயன்படுத்தப்படவேண்டியிருக்கும். நுகர்வுக்குத் தேவைப்படும் அளவைவிட உற்பத்தியானது குறை வாக இருக்கும் பொருளாதாரத்தில் இந்தப் பணியானது அதிக முக்கியத்துவம் உடையதாகும். ஏனென்றால், அத்தகைய பொருளா தாரத்தில் நடப்புக்கால சேமிப்பு அளவைப் பெருக்குவதற்காக நுகர்வின் அளவைக் கட்டாயமாகக் குறைக்கவேண்டியிருக்கும். ஆனால், முன்னேற்றம் அடைந்த ஒரு பொருளாதாரத்தில்கூட, அவ்வப்போது அரசாங்கம், வரி விதிப்பின் மூலமாகச் சேமிப்பை உருவாக்குவது, அல்லது மைய இடத்திலிருந்து கட்டுப்படுத்தப் படுகிற பாங்கிக் கொள்கை மூலமாகப் புதிய பணத்தை

உருவாக்குவது விரும்பத்தக்க ஏற்பாடே ஆகும். பிறநாட்டுத் தொழில் நுட்ப முறைகளை அப்படியே பின்பற்ற முடியாத அளவுக்கு முன்னேற்றத்தை அடைந்துள்ள நாடுகளில், ஆராய்ச்சிப் பணி, பொருளாதார முன்னேற்றத்தில் நடுநாயகமாக இருக்கிறது. இத்தகைய ஆராய்ச்சிப் பணியானது அரசாங்க ஆதரவைச் சார்ந்தே நடைபெறவேண்டியிருக்கிறது. ஏனென்றால், ஆராய்ச்சிக்கான செலவு ஓர் ஆபத்தான செலவாகும். எடுத்துக் கொள்ளப்படும் ஒவ்வோர் ஆராய்ச்சியும் பயனுள்ள விளைவுகளையே கொடுக்கும் என்று உறுதிகூற முடியாது. அதுமட்டும் அல்ல. அதன் பயனுள்ள விளைவுகளிற் பல, நீண்ட காலத்திற்குப் பின்னரே அடையத் தக்கனவாக இருக்கின்றன. அத்துடன், பெரும்பாலும் ஆராய்ச்சிக்காகச் செலவழித்தவர்களைத் தவிர்த்த வேறு சிலர் அவ் விளைவுகளைப் பெறுபவர்களாக இருக்கிறார்கள். பொருளாதாரப் பயன் விளைக்கும் ஆராய்சிக்கும் (applied research) முன்னேற்றத்திற்கும் (development) வேறான அடிப்படை ஆராய்ச்சியைப் (basic research) பொறுத்தவரை இவை சிறப்பாகப் பொருந்தும் உண்மைகள் ஆகும்.

நிதியாண்டு 1960-ல் ஆராய்ச்சிக்காகவும், உற்பத்தி மேம்பாட்டுக்காகவும் (product-development) கூட்டரசாங்கத்தால் செலவிடப்பட்ட தொகை 5·5 பில்லியன் டாலராக இருந்தது என்று ஐக்கிய அமெரிக்க வரவுசெலவுத் திட்டக்கழகம் (The United States Bureau of the Budget) மதிப்பிட்டிருக்கிறது. நாட்டுப் பாதுகாப்புக்கான பொருள்களை உற்பத்திசெய்யும் நிறுவனங்கள் ஆராய்ச்சிக்காகவும் உற்பத்தி முன்னேற்றத்திற்காகவும் செய்த செலவை ஈடுசெய்யும் வகையில் அமைந்த (reimbursements) இராணுவத் தளவாடச் சேகரிப்புச் செலவு (2 பில்லியன் டாலர் என்று மதிப்பிடப்பட்டது), இத் தொகையில் சேர்க்கப்படவில்லை.[9] இந்த 5·5 பில்லியன் டாலரில், 1·3 பில்லியன் டாலர் ஆராய்ச்சிக் காகவும் (இதில் 0·5 பில்லியன் டாலர் அடிப்படை ஆராய்ச்சிக் காகவும்), 4·2 பில்லின் டாலர் உற்பத்தி முன்னேற்றத்திற்காகவும் செலவிடப்பட்டிருக்கின்றன. ஐக்கிய அமெரிக்காவில் ஆராய்ச்சிக் காகவும், உற்பத்தி முன்னேற்றத்திற்காகவும் செய்யப்படும் மொத்தச் செலவில் கிட்டத்தட்டப் பாதி அளவுக்குத் தேவையான நிதியைக் கூட்டரசாங்கம் அளிக்கிறது என்று மேற்படி வரவு செலவுத் திட்டக்கழகம் மதிப்பிட்டிருக்கிறது. அத்தகைய நிதிகளில் பெரும்பகுதி, ஆராய்ச்சியைவிட உற்பத்தி முன்னேற்றத்திற்கே செலவாகிறது. அதுபோலவே, அந் நிதிகளில் பெரும்பகுதி, நாட்டுப் பாதுகாப்புப் பணிகளுக்குப் பயன்படுகிறது. வேளாண்மைத்துறை (department of agriculture), உடல்நலம், கல்வி மற்றும் நல்வாழ்வுத்

துறை (department of health, education and welfare) நாட்டு அறிவியல் நிறுவனம் (National Science Foundation) ஆகியவை ஆராய்ச்சிக்காகப் பெரிய அளவில் செலவிடும் கூட்டரசாங்கத்தின் ஏனைய உறுப்புகள் ஆகும். மாநில அரசாங்கங்கள், இவ்வளவு என்று திட்டமாகக் குறிப்பிடமுடியாத ஓரளவு தொகையை, முக்கியமாக மாநிலப் பல்கலைக் கழகங்கள், கல்லூரிகள் ஆகியவற்றின்மூலம், ஆராய்ச்சிக்காகச் செலவிடுகின்றன. மொத்தத்தில் ஐக்கிய அமெரிக்கப் பொருளாதாரத்தில், ஆராய்ச்சிக்காகவும் முன்னேற்றத்திற்காகவும் ஆகும் செலவில் பெரும்பகுதியை அரசாங்கங்களே ஏற்றுக்கொள்கின்றன என்பது தெளிவு. அதாவது, ஆராய்ச்சிக்காகவும் முன்னேற்றத்திற்காகவும், அங்காடியின் மூலமாக ஒதுக்கப்படும் சாதனங்களுக்குக் குறையாத அளவில் அரசாங்கத்தாலும் ஒதுக்கப்படுகின்றன.

தொழில் நுண்ணியல் ஆராய்ச்சியையும் (technological research) முன்னேற்றத்தைப் பொறுத்த அளவில், நேர்முகச் செலவின் பெரும்பகுதியை அரசாங்கமே மேற்கொள்கிறது; ஆனால் அந்த ஆராய்ச்சியின் பெரும்பகுதி, தனியார் நிறுவனங்களாலேயே செய்யப்படுகிறது. புத்தமைப்புக்கான விறுவிறுப்பு முயற்சி முழுவதும் ஆராய்ச்சிக்காகவும் மேம்பாட்டுக்காகவும் செய்யப்படும் நேர்முகச் செலவோடு முடிந்துவிடவில்லை. கல்விப் பணியானது தக்கமுறையில் நிறைவேற்றப்படுமானால், அறிவியல் புத்தமைப்பு முறை முழுவதையும் அது விரைவுபடுத்துகிறது.

உற்பத்தி ஆற்றலின் வளர்ச்சிக்காக அரசாங்கம் செய்கிற தலையாய உதவியை, போதிய இயற்கைச் சாதனங்களை அளித்தல், பொருத்தமான தொழிலாளர்களை அளித்தல், தேவைப்படுகிற மூலதன வசதிகளை அளித்தல் ஆகிய தலைப்புகளின்கீழ், மிகச் சுருங்கிய முறையில் இங்கே நாம் எடுத்துக்காட்டியிருக்கிறோம். ஆனால், அரசாங்கம் தருகிற உதவி இந்த மூன்று தலைப்புகளோடு முடிந்துவிடவில்லை. வளர்ச்சிக்கு உகந்த சூழ்நிலையில்தான் பொருளாதார வள்ர்ச்சி நடைபெற முடியும். அத்தகைய சூழ்நிலை உருவாகவேண்டுமானால், நிலைபேறுன ஓர் அரசியல் சமுதாயம், தனியாட்களின் உரிமைகளையும் கடமைகளையும்பற்றிய ஒரு பொருத்தமான அமைப்பு, பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான தூண்டுதல்களைப் (incentives) பெற்றுள்ள அறிவுக் கூர்மையும் ஆர்வமும் மிகுந்த மக்கள்தொகை, சுயேச்சையான அங்காடிகளில் (in free markets) திறமையாகப் பணியாற்றும் ஒரு போட்டிமுறை (competitive system), ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பொருளாதாரம் நிலைபேறுக இருக்கும் தன்மை ஆகிய யாவும்

இருந்தாகவேண்டும். இவை யாவற்றிற்கும் அரசாங்கத்தின் பணி இன்றியமையாது தேவைப்படுகிறது. அதுமட்டுமல்ல. இந்தப் பொறுப்புகளையெல்லாம் நிறைவேற்றும் பணியைச் சமுதாயம் பெரும்பாலும் அரசாங்கத்திடம் ஒப்படைக்கவே விரும்புகிறது.

**வரவுசெலவுத் திட்ட நோக்கங்கள் ஒன்றுடன் ஒன்று ஒத்திருக்கின்றனவா? (Are Budgetary Objectives Consistent with Each Other?)**

அரசாங்கச் செலவுகள்பற்றிய நம்முடைய பகுத்தாய்வு முடியும் கட்டத்தை நெருங்குவதால், செலவின் முதன்மையான நோக்கங்களை மறுஆய்வு செய்வதும், இந்த நோக்கங்களை ஒன்றுக்கு ஒன்று முரண்படாத வகையில் நிறைவேற்றுவது இயலக்கூடிய செயல்தானு என்பதை ஆராய்ந்து அறிவதும், நலம்பயக்கும் செயல்கள் ஆகும். சமுதாயத்தின் வாழ்க்கைத் தரத்தைப் பாதுகாப்பதும் அரசாங்கச் செலவின் நெடுங்கால நோக்கமாக இருந்து வருகிறது. சமுதாயத்திற்குப் புறத்தேயிருந்து குறுக்கீடோ அல்லது படையெடுப்போ ஏற்படுவதைத் தடுப்பதே மைய அரசாங்கங்களின் ஒரு தலையாய பணியாகப் பன்னெடுங்காலமாக இருந்து வருவதை வரலாறு தெரிவிக்கிறது. அண்மைக்கால ஆண்டுகளில் மைய அரசாங்கச் செலவின் பெரும்பகுதி நாட்டுப் பாதுகாப்புக்காகவே ஆகியிருக்கிறது. நாட்டுப் பாதுகாப்பின் மறுபகுதியாக இருப்பது, உள்நாட்டுப் பாதுகாப்பாகும் (internal security); அதாவது, சில குடிமக்களின் உரிமைகளை ஏனைய குடிமக்களின் தாக்குதலிலிருந்து பாதுகாப்பது ஆகும். இந்தப் பணியில், மாநில அரசாங்கங்களும், அவற்றின் துணைப்பிரிவுகளும் (தல அரசாங்கங்களும்) மைய அரசாங்கத்தோடு இணைந்துநின்று செயலாற்றுகின்றன. ஆனல், நெடுங்காலமாக இருந்துவரும் பாதுகாப்புப் பணியானது, குடிமக்களின் வாழ்க்கையை மேம்பாடு அடையச் செய்கிற பொதுவான பணியின் ஒரு பகுதியே ஆகும். ஆடம் ஸ்மித் (Adam Smith) அவர்கள், 'இய்ல்பான உரிமை' முறையில் (system of natural liberty) அரசாங்கம் ஆற்றவேண்டிய் நியாயமான பணிகளை எடுத்து விளக்குகையில், படையெடுப்பை எதிர்த்துப் பாதுகாப்பு அளிக்கும் பணியையும், நீதியை நிர்வாகம் செய்யும் பணியையும் சுட்டிக்காட்டிய பிறகு, மூன்ருவதாகக் கீழ்க்கண்ட பணியையும் எடுத்துக்காட்டியுள்ளார்:

'சில பொதுப்பணிகளையும், சில பொதுநிறுவனங்களையும் ஏற்படுத்துவதும் பராமரிப்பதும் ஆகிய கடமை. இவற்றை ஏற்படுத்துவதிலும் பராமரிப்பதிலும் எந்தத் தனி ஆளுக்கும் அல்லது தனியாட்கள் கொண்ட எந்தச் சிறு குழுவுக்கும் அக்கறை இருக்கமுடியாது. ஏனென்ருல், இவற்ருல் ஏற்படக்கூடிய இலாபம், தனியாட்களோ தனியாட்கள் கொண்ட குழுவினரோ இவற்றை

மேற்கொள்வதால் ஏற்படும் செலவைவிடக் குறைவாகத்தான் இருக்கமுடியும். ஆனால், ஒரு பெரிய சமுதாயம் இப் பணிகளை ஏற்றால் ஏற்படும் இலாபம், இவற்றிற்கான செலவைவிட மிகக்கூடுதலாக இருக்கலாம்.'[10]

அரசியல் சுதந்தரமும் பொருளாதார சுதந்தரமுமே நல்வாழ்வை உருவாக்குவதற்கான குறிப்பிட்ட கருவிகளாக இருந்தாலும், இக் கருவிகளுக்குத் துணையாக, அரசாங்கம் சில ஊழியங்களை ஊக்கத்தோடு செய்யவேண்டியிருக்கிறது. தனியாரின் வாழ்க்கைத்தரம் உயர உயர, இத்தகைய நிறைவுசெய் ஊழியங்கள் (complementary services) . தேவைப்படுகிற அளவும் விரிந்து கொண்டேவந்திருக்கிறது. எடுத்துக்காட்டாக, வாழ்க்கைத்தரத்தில் மோட்டார்கார் புரட்சிகரமான முறையில் இணைந்துள்ளதன் விளைவாகப் பொதுநெடுஞ்சாலைகள் விரிவான முறையில் ஏற்பட வேண்டியிருக்கிறது. பொருளாதாரத்தில் ஏற்பட்டுள்ள கூடுதல் உற்பத்தியின் காரணமாகக் கிடைத்த அதிக ஓய்வு நேரம் பொதுப் பொழுதுபோக்கு வசதிகளையும், நூல்நிலையங்களையும், ஏனைய பல நிறைவுசெய் வசதிகளையும் ஏற்படுத்தவேண்டிய நிலையை உருவாக்கி யிருக்கிறது. பொருளாதாரத்தின் பெரும்பாலான பகுதிகளில் உள்ள வறுமை, அவலநிலை ஆகியவற்றிலிருந்து மிகவும் முரண்பட் டிருப்பதால், நல்வாழ்வை மறுபங்கீடு செய்யவேண்டிய இன்றியமையாமை ஏற்படுகிறது.

ஆகவே, ஏராளமாக உற்பத்தியாகும் பொருள்களைப் பாது காப்பதும், பராமரிப்பதும், குறைவை நிரப்பும் வகையில் புதுப் பொருள்களைச் சேர்ப்பதும், பொருத்தமான முறையில் பங்கிடுவதுமே நெடுங்காலமாக அரசாங்கத்தின் பணிகளாக இருந்திருக்கின்றன என்பது விளங்குகிறது. இந்தப் பொருள்கள் சிறப்பாகச் சுயேச்சை நிறுவனங்களால் (free institutions) உற்பத்தி செய்யப்பட்டவையே. அரசாங்கத்தின் இப் பணிகள், சாதனங்களைப் பங்கிடுதல் என்னும் பொதுத் தலைப்பின்கீழ் அடங்குவனவே. சிறந்த வாழ்க்கையை நிலைநாட்டுவதற்காக, இந்தச் சாதனங்களின் ஒரு பகுதி தனியார் உபயோகத்திலிருந்து பொது உபயோகத் திற்கும் மாற்றப்பட வேண்டியிருக்கிறது. ஏற்கனவே, நாம் படித்தறிந்ததைப்போல, அண்மைக்காலத்தில், சிறந்த வாழ்க்கையைப் பராமரித்தல் என்னும் இந்தப் பொதுக் குறிக்கோளுக்கு உள்ளேயே ஒரு புதிய அழுத்தம் (emphasis) ஏற்பட்டிருக்கிறது. பொருளாதார வளர்ச்சிக்கு அல்லது சிறந்த வாழ்க்கையை மேலும் மேலும் மேம்பாடு அடையச் செய்வதற்குத் தரப்படுகிற முக்கியத்துவமே அது. ஆனால் பொருளாதார வளர்ச்சிக் குறிக்கோள், பங்கீட்டுப் பணியில் ஒரு புதிய பரிமாணத்தை மட்டுமே (a new dimension) ஏற்படுத்தியிருக்கிறது. நாடுகளின்

செல்வத்தைப்பற்றி ஆடம் ஸ்மித் இக் காலத்தில் எழுதுவாராஞல், தமக்காக ஆகும் செலவைவிட அதிக இலாபத்தை ஒரு சமுதாயத் திற்குத் தரவல்ல பொது நிறுவனங்களின் பட்டியலில், பொரு ளாதார வளர்ச்சியையும் சேர்த்துவிடுவார் என்பதில் எள்ளளவும் ஐயமில்லே.

பொருளாதாரத்தின் தனியார் துறையிலிருந்து பொதுத் துறைக்குச் சாதனங்களே மாற்றுவதற்கான செலவைப்பற்றி நெடுங் காலமாக இருந்துவரும் பழமைக் கருத்து என்னவென்ருல், கணக் கிடும் காலப்பகுதி (accounting period) ஒன்றில், சாதனங்களேப் பெறுவதற்காக அரசாங்கம் செய்யும் செலவுகளுக்குச் சரிசமமான அளவில் பொதுமக்களிடமிருந்து நிதிகளேப் (வரிகளே) பெற வேண்டும் என்பதே. கணக்கிடும் காலப் பகுதி ஓர் ஆண்டாக இருப்பதே மரபாக இருத்தலால், ஆண்டுதோறும் வரவுசெலவுத் திட்டமானது ஒத்தநிலேப் படுத்தப்படவேண்டும் என்பது இதன் கருத்தாக அமைகிறது. உண்மையில், அரசாங்கத்தால் எடுக்கப் படும் சாதனங்கள் பொதுமக்களால் தரப்படும் சாதனங்களுக்குச் சமமாகவே இருக்கின்றன. ஆகவே ‘சாதனங்களின் வரவு செலவுத் திட்டம்’ (resources budget) இயல்பாகவே ஒத்தநிலே உடையதாக ஆகிறது. அப்படியாஞல், சாதனங்களே வாங்குவதற்காகப் பொது மக்களிடமிருந்து எடுக்கப்பட்ட பணம், அச் சாதனங்களேப் பெற்றதற்காகப் பொதுமக்களுக்குத் தரப்பட்ட பணத்திற்குச் சமமாக இருக்கும் முறையில், பண வரவுசெலவுத் திட்டத்தை (money budget) ஏன் ஒத்தநிலே உடையதாக ஆக்கக்கூடாது? இந்த விதியானது எளிமைப் பண்பைப் பெற்றிருக்கிறது. வரவு செலவுத் திட்டத்தில் இயல்பாக அமைந்துள்ள வலுக்கட்டாய சக்திக்கு எதிராகச் சமுதாயம் எப்போதும் விழிப்போடு இருப்பதற்குத் தேவையான தடைகளேயும் சமப்படுத்தும் இயல்புகளேயும் இந்த விதி அளிக்கிறது. வரி உயர்வைப் பொது மக்கள் எதிர்ப்பதன் வாயிலாகவே இந்தத் தடைகளும் சமப்படுத்தும் இயல்புகளும் செயலாற்றுகின்றன.

ஆண்டுதோறும் வரவு செலவுத் திட்டம் ஒத்தநிலே உடைய தாக ஆக்கப்பட வேண்டும் என்னும் கோட்பாடு, போர் முதலிய நாட்டு நெருக்கடிக் காலங்களில் மிக அமைதியாக மீறப்பட்டு விடுகிறது. போர்க்காரணங்களுக்காகச் சாதனங்களில் மெய்யான மாற்றல் (real transfer) ஏற்படவேண்டியதன் இன்றியமையாமை எல்லோராலும் உணரப்படுகிறது. ஆஞல், வரி வீதங்களின் அசையாத் தன்மையின் (inertia) விளேவாக ஒத்தநிலே வரவு செலவுத் திட்டம் என்னும் கோட்பாடு கைவிடப்பட்டு, நிதிப்

பற்றுக்குறைகள் தொடர்ச்சியாக ஏற்படுகிற நிலை உருவாகியிருக்கிறது. பொருளாதார வளர்ச்சி என்னும் புதிய குறிக்கோள் தோன்றிய பின்னர், இந்தக் குறிக்கோளின் நிறைவேற்றத்திற்காகப் பற்றுக்குறையை ஒப்புக்கொள்ளும் போக்கு பரவலான அளவில் காணப்படுகிறது. நெடுஞ்சாலைகள் அமைப்பதற்காகக் கடன் வாங்குவதை மாநில அரசுகள் வழக்கமாகக் கொண்டுவிட்டன. அதுபோலவே, பள்ளிக்கூட வசதிகளை அளிப்பதற்காகத் தல அரசுகள், அனுமதிக்கப்பட்ட அளவுவரை கடன் வாங்கிவிட்டன. தண்ணீர் வசதிக்காகவும், வடிகால்கள் அமைப்பதற்காகவும் வாங்கப்படும் கடன்கள், அண்மைக்காலத்தில் 'விண்ணை முட்டும்' அளவுக்கு உயர்ந்துவிட்டன. இவ்வாறாகப் போருடன்கூட மோட்டார்கார் புரட்சி, வியக்கத்தக்க மக்கள்தொகை உயர்வு, பெரிய அளவில் ஏற்பட்ட மக்களின் இடப் பெயர்ச்சி (geographical shifts in population) முதலிய புதிய நெருக்கடிகளும் சேர்ந்து, ஒவ்வா நிலை வரவுசெலவுத் திட்டங்கள் நியாயமானவையே என்று கருதத்தக்க நிலையை ஏற்படுத்திவிட்டன. எப்படி தனியார் வாணிபத்தைப் பெருக்குவதற்காகக் கடன் வாங்குவது நியாயமான செயலாக இருக்கிறதோ அப்படித்தான் பொருளாதார வளர்ச்சியை நிலைநாட்டவும் மிகுதிப்படுத்தவும் அரசாங்கம் கடன் வாங்குவதும் நியாயமான செயல் என்னும் கருத்து பரவிவிட்டது. ஆனால், விதியின் புறனடைகள் (exceptions) அதிகமாக வழக்கத்தில் இருப்பதைப்போல் தோன்றினதும், ஆண்டுதோறும் ஒத்தநிலை உடையதாக ஆக்கப்படும் வரவுசெலவுத் திட்டங்களின் எல்லைக்குள் அரசாங்கத்தின் பங்கீட்டுப் பணிகள் பொதுவாக நடைபெறவேண்டும் என்பதுதான் இன்னும் விதியாக இருக்கிறது.

மிக அண்மை ஆண்டுகளில், வரவுசெலவுத் திட்டத்தின் மூலமாகப் பொருளாதார நிலைப்பேறுக்கம் செய்யப்படவேண்டும் என்னும் குறிக்கோள், பங்கீட்டுக் குறிக்கோளைப்போலவே முக்கியத்துவம் பெற்றுவிட்டது. இதற்கான ஒரு காரணம் பங்கீட்டுப் பணியை ஆற்றுவதன் விளைவாக வரவுசெலவுத் திட்டங்கள் பெரிய அளவுடையனவாக வளர்ந்துவிட்டன என்பது ஆகும். மொத்தத் தேவையில் (aggregate demand) வரவுசெலவுத் திட்டங்களின் பங்கு மிகப் பெரிதாக வளர்ந்துவிட்ட காரணத்தால் பொருளாதார நிலைபேறுக்க நோக்கத்தையும் நிறைவேற்றும் வகையிலேயே வரவுசெலவுத் திட்டக் கொள்கையை வகுக்க வேண்டியிருக்கிறது. இவ்வாறாக நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் நிலைபேறுக்கத்தைக் கொள்கையின் இலக்காக ஏற்றுக்கொள்ள இருக்கிறது. இதற்கும் மேலாக, தனியார் துறையில்

உள்ள நிலைபேறின்மையை மாற்றியமைப்பதற்கான ஆற்றல் படைத்ததாக நிதிக்கொள்கை இருப்பதால், சிறந்த வாழ்வை அடைவதற்காக விரும்பிக் கையாளப்படும் ஒரு கருவியாக ஆக்கப் பட்டு வருகிறது. வேலையின்மை ஏற்படும்போது, பயன்படக்கூடிய பொருள்களையும் ஊழியங்களையும் இழந்துவிடும் நிலையும் ஏற்பட்டு விடுகிறது. அதுபோலவே, தடுக்கப்படாத பணவீக்கத்தால், நல் வாழ்வின் மறுபங்கீடு ஒழுங்கற்ற முறையிலும் அடிக்கடி மாறக் கூடிய வகையிலும் ஏற்பட்டுவிடும் என்பது மட்டுமல்ல; பொரு ளாதாரத்தில் பல கோணல்கள் ஏற்பட்டு, அவற்றின் விளைவாக வேலையின்மையும் ஏற்படக்கூடும். பின்னிறக்கமானது வளர்ச்சியின் பகைவன் ஆகும். ஏனென்றால் ஒவ்வொரு பின்னேற்றத்தாலும் (set back) ஏற்படும் உற்பத்திப் பற்றுக்குறை சரிக்கட்டப்பட்ட பின்னர்தான், பொருளாதாரமானது முன் இருந்ததைவிட உயர்ந்த நிலைக்குச் செல்லமுடியும்.[11]

ஆண்டுதோறும் வரவு செலவுத்திட்டம் ஒத்தநிலைப்படுத்தப் படவேண்டும் என்னும் கோட்பாட்டுக்கு, வரவுசெலவுத் திட்டத்தின் பங்கீட்டுப் பணியானது, உதட்டளவு ஒப்புதலாவது தருகிறது. ஆனால், நிலைபேறுக்கப் பணி அந்தக் கோட்பாட்டோடு ஒத்து வருவதில்லை. உண்மையைச் சொல்வதானால், நிலைபேறுக்க வரவு செலவுத்திட்டத்தின் எளிதில் மாறுந்தன்மையும் (flexibility), ஒத்தநிலையிலிருந்து (balance) வேண்டுமென்றே விலகிச் செல்லும் போக்கும்தான், அதன் உயிர்நாடிகள் ஆகும். பொருளாதாரத்தின் தனியார் துறைச் சக்திகள் குறைந்த வேலை நிலையில் (at the level of underemployment) சமநிலை (equilibrium) அடைய முயலும்போது, ஒத்தநிலை வரவுசெலவுத் திட்டத்தால் அந்தப் போக்கை மாற்றி யமைக்கமுடியாது. வரியின் அடிப்படை (tax base) சுருங்கும் வரி வீதங்களை உயர்த்துவதன்வாயிலாக அல்லது செலவைக் குறைப்பதன் மூலமாக ஒத்தநிலை வரவுசெலவுத் திட்டத்தை நிலைநாட்டப் பார்ப்பதால், பொருளாதார வீழ்ச்சியின் அளவுதான் கூடுதலாகும். அதுபோலவே, பணவீக்கச் சக்திகள் நடைமுறையில் இருந்து வரி அடிப்படை விரிவாகும்போது, வரிவீதங்களைக் குறைப்பதோ செலவை உயர்த்துவதோ, ஏற்பட்டுவிட்ட பணவீக்கத்தை மேலும் அதிகப்படுத்துகிற விளைவையே உண்டாக்கும். கூட்டமைப்பு ரிசர்வ் பாங்கின் தொடர் ஒன்றைக் கையாள்வதானால், நிலைபேறுக்க நோக்கத்தை நிறைவேற்ற எண்ணும்போது, நிதிக் கொள்கையானது காற்றடிக்கும் பக்கத்திற்கு எதிர்ப்பக்கத்தில் செல்லவேண்டும் (the fiscal policy must 'lean against the wind') என்று கூறலாம்.

வரவுசெலவுத் திட்டக் கோட்பாட்டின்படிச் செய்யப்படும் முடிவுகள், சில சமயங்களில், ஒத்த முதன்மையுடைய ஆனால் ஒன்றுக்கொன்று முரண்பாடாகவுள்ள குறிக்கோள்களின் தராதரத்தை மதிப்பிடவேண்டியிருக்கும். இந்த முரண்பாடுகள், நீண்ட கால அளவில் பொருளாதாரத்தில் அரசாங்கத்திற்கு இருக்கவேண்டிய பங்கு எத்தகையது என்பதுபற்றிய கருத்து வேறுபாட்டிலிருந்து எழுகிற முரண்பாடுகளிலிருந்து மாறுபட்டவை. அதுபோலவே இனி வாணிபச் சுழலின் போக்கு எத்தகையதாக இருக்கும் என்பது பற்றிய கருத்துவேறுபாடுகளிலிருந்தும் அவை வேறுபட்டவை. போர்க்காலத்தில் அரசாங்கம் பெறக்கூடிய சாதனங்களின் அளவு மிகக் கூடுதலாக ஆக்கப்படவேண்டும் என்பதைப் பொறுத்த அளவில் கருத்து வேறுபாடு இல்லை. ஆனால்,இந்தக் கொள்கையானது, நுகர்வோரின் தேவை (consumer demand) மிகக் கூடுதலாக இருக்கும் நிலையில், வேலை நிறைவு அளவுக்குப் பிறகும் தொடர்ந்து கையாளப்படுமானால், பணவீக்க அழுத்தங்கள் (inflationary pressures) உருவாகக்கூடும். போர்க்காலத்தைவிட இயல்பான அளவில் பொருளாதார வீக்கத்தை உடைய காலங்களில் வேலையின் அளவு முழுமையாக இருக்கும்; வருமானங்கள் உயரிய அளவில் இருக்கும்; தனியாரின் வாழ்க்கைத் தரமும் உயர்ந்த நிலையில் இருக்கும். இத்தகைய காலங்களில் நிறைவுசெய் அரசாங்க ஊழியங்கள் உயர்ந்த அளவில் செய்யப்படவேண்டும் என்கிறதேவை இயல்பாகத் தோன்றும். ஏனென்றால், இத்தகைய காலங்களில் இந்த ஊழியங்களைக் கூடுதலான அளவில் செய்வது இயலக்கூடிய செயலே ஆகும். இவ்வாறாக, பங்கீட்டுப் பணியால் அரசாங்கத்தின் தேவை (demand) உயர்கையில், நிலைபேறுக்கப் பணியின் விளைவாக அத்தகைய உயர்வுக்குத் தடை ஏற்படும் என்பது மட்டுமல்ல; தனியார் தேவையின் மிகுதியைக் குறைப்பதற்காக அரசாங்கத் தேவையின் அளவைக் குறைக்கவேண்டிய நிலையும் ஏற்படும். பொதுப்பொருள்களை அதிகப்படுத்தும் குறிக்கோளுக்கும் நிலைபேற்றை அதிகப்படுத்தும் குறிக்கோளுக்கும் இடையே ஏற்படும் இத்தகைய முரண்பாடுகள் அடிக்கடி நிகழ்கின்றன.[12]

அண்மை ஆண்டுகளில் மற்றொரு வகையான முரண்பாடு மிக விரிவாக அலசி ஆராயப்பட்டிருக்கிறது. நீண்டகாலப் பொருளாதார வளர்ச்சியை உச்ச அளவிற் பெறுகிற குறிக்கோள், நிலைபேறுக்கக் குறிக்கோளுடன் முரண்படாமல் இருக்கிறதா? மிதமான அளவுள்ள விலைமட்ட பணவீக்கமானது (a moderate degree of price level inflation) உயர்ந்த வீதப் பொருளாதார வளர்ச்சிக்கு இன்றியமையாதது என்று ஒரு சாரார் கருதுகின்றனர். இந்தக் கருத்துக்கான ஆதரவு இரண்டு கோணங்களிலிருந்து கிடைக்கிறது.

முதலாவதாக, மிதமான விலை உயர்வுகள் ஏற்படக்கூடும் என்கிற நிலைமையால் இலாபம் கிடைப்பதற்கான சாத்தியக்கூறுகள்பற்றி உற்சாகம் நிறைந்த மனப்போக்கு உருவாகிவிடுகிறது. இம் மனப்போக்கின் விளைவாகத் தொழில்துணிவோர்கள் பொறிகளையும் கருவிகளையும் பெருக்கத் தொடங்குகிறார்கள்; புதிய தொழில் நுணுக்க முறைகளையும் கையாள முனைகிறார்கள். இவற்றின் விளைவாக உற்பத்திக்கான ஆற்றல் வளர்ந்துவிடுகிறது. இரண்டாவதாக, விலைகள் உயர்வதன் விளைவாக, கூலிகள் உயர்வதைப்பற்றித் தொழில் துணிவோர், அவ்வளவாகக் கவலைப்படாத மனநிலையைப் பெற்றுவிடுகிறார்கள். இத்தகைய சூழ்நிலையில் தொழிலாளர்கள் மிகுந்த மகிழ்ச்சியோடு காணப் படுகிறார்கள். பொருளாதார வளர்ச்சியைத் தடுக்கின்ற தன்மை படைத்த வேலைநிறுத்தங்கள் குறைந்த அளவை அடைந்து விடுகின்றன. இவ்வாறாக, உற்பத்தி ஆற்றலின் பெருக்க வீதம் விலைஉயர்வு வீதத்தைவிட உயர்ந்துவிடுகிறது; அப்படி உயர்வதால், மெய்யான கூலிகளும் மெய்யான இலாபங்களும் உயர்கின்றன. மெய்யான கூலிகள் உயர்வதால், நுகர்வில் உயர்வு ஏற்படுவது உறுதியாகிறது. மெய்யான இலாபங்கள் உயர்வதால், முதலீட்டில் ஏற்பட்டுள்ள பெருக்கம் முறையானதுதான் என்பது உறுதியாவதோடு, அந்தப் பெருக்கம் தொடர்ந்து நடை பெறுவதற்குத் தேவையான உள்நாட்டு முதலீட்டு நிதிகளும் கிடைக்கின்றன. இத்தகைய கொள்கைக்கு மாறாக, பணக்கூலிகள் (money wages) மெதுவாக உயர்ந்துகொண்டிருக்கும் சூழ்நிலையில் அழுத்தந் திருத்தமான நிலைபேறுக்கக் கொள்கை கையாளப் படுமானால், இறுதியில் அதனால் இலாப அளவு குறையும்; பெருக்கத்திற்கான தூண்டுதலும் மூலதன முதலீட்டுப் பெருக்கமும் பின் தங்கிவிடும்; உச்சவீத வளர்ச்சியைவிடக் குறைந்த அளவு வளர்ச்சியே உண்டாகும்.

அழுத்தந்திருத்தமான நிலைபேறுக்கக் கொள்கையை உடையவர்கள், மேலே காட்டிய கருத்தை எதிர்ப்பதற்கு இரண்டு காரணங்களைக் கூறுகிறார்கள். முதல் காரணம் அறிவுக்கு ஒத்த முறையில் வாணிபத்தைத் திட்டமிடுவதற்கு நிலைபேறான விலைகள் இருக்கக் கூடும் என்னும் நிலைமையே மிகவும் உகந்தது என்பதும், விலை மாறுதல்கள் ஏற்படக்கூடிய சூழ்நிலையில் தோன்றுகிற நிலையற்ற தன்மைகளின் விளைவாகத் தொழில் துணிவோர் வாணிபத்தைப் பெருக்கும் திட்டங்கள் எவற்றையும் மேற்கொள்ளாமல் இருக்கின்ற வாணிபத்தை ஆபத்தின்றிக் காத்துக்கொண்டால் போதும் என்கிற மனநிலையைப் பெற்று விடுவார்கள் என்பதும் ஆகும். இவ்விதமாக விலை மாறுதல்

ஏற்படக்கூடும் என்னும் நிலைமை, அதில் பொதிந்துள்ள ஆபத்தின் விளைவாக, உற்சாகம் நிறைந்த மனப்போக்கை அழித்துவிடுகிறது. இரண்டாவது காரணம், மிதமான பணவீக்கமானது—குறிப்பாக அரசாங்கக் கொள்கையால் ஆதரிக்கப்படும்போது—மிதமான பணவீக்கமாகவே தொடர்ந்து இருந்துவிடாது என்கிற ஆபத்தை, அழுத்தந் திருத்தமான நிலைபேறுக்கக் கொள்கையை உடையவர்கள், நாம் ஏற்கத்தக்க விதத்தில் எடுத்துக் காட்டுகிறார்கள். விலை உயர்வு ஏற்படும் என்று எதிர்பார்ப்பதாலேயே விலை உயர்வு ஏற்பட்டுவிடலாம். விலை உயர்விலிருந்து தப்பித்துக்கொள்வதற்காக, அல்லது விலை உயர்வு ஏற்படும்போது அதிலிருந்து இலாபம் பெறுவதற்காகப் பொருள்களை வாங்குவதாலும் விலை உயர்வு மிகுதியாகக்கூடும்.

மிதமான பணவீக்கமானது, உத்தமமான வளர்ச்சிக்கு (optimum growth) இன்றியமையாததாக விளங்குகிறது என்னும் வாதத்தை எழுப்புபவர்கள், உறுதியான பணவீக்க எதிர்ப்புக் கொள்கை கையாளப்படுவதைத் தடுக்கவல்ல பல்வேறு நிறுவனக் காரணிகள் (institutional factors) ஐக்கிய அமெரிக்கப் பொருளாதாரத்தில் அமைந்திருப்பதைச் சுட்டிக் காட்டுகிறார்கள். உயர்ந்து கொண்டே இருக்கவல்ல பணக் கூலியை விரும்புகிற பெருந் தொழிலாளர் சக்திகள், உற்பத்தியைக் குறைப்பதன்மூலம் விலைகளை உயர்த்தவல்ல ஆற்றல் உடைய பெரிய வாணிப நிறுவனங்கள், ஒப்புக்கொள்ளப்பட்ட விலைகளில் பாதுகாப்புக்கான தளவாடங்களை ஏராளமான அளவில் தொடர்ச்சியாகப் பெறவேண்டிய நிலையில் உள்ள பெரிய அரசாங்கம்—இவை யாவும் ஒன்று சேர்ந்து, நிலைபேறுக்கக் கொள்கையின் ஆற்றலைக் குறைத்து விடுகின்றன. இத்தகைய சூழ்நிலையில், பணவீக்க எதிர்ப்புத் தன்மையுடைய பணவழிக்கொள்கைகளும் நிதிக்கொள்கைகளும் உண்மையான ஆர்வத்தோடு மேற்கொள்ளப்படுமானால், விலைகளைத் தடுப்பதைவிட வேலையின்மையை உருவாக்குவதிலேயே அக் கொள்கைகள் மிகுந்த வெற்றியைப் பெறும். இவ்வாறாக, நாட்டின் மொத்த ஆக்கத்தை உயர்த்துவது நோக்கமாக இருந்தாலும், பணவீக்கத் தடுப்புமுயற்சியால் நாட்டின் மொத்த ஆக்கத்தில் குறைவு ஏற்படக்கூடும்.

நிலைபேறுக்கம், வளர்ச்சி ஆகிய இரண்டு சமுதாயக் குறிக்கோள்களுக்கு இடையே காணப்படுகிற முரண்பாட்டை மிகைப்படுத்திக் காட்டுவது எளிது. நிலைபேறான வளர்ச்சி என்னும் ஒரே ஒரு குறிக்கோள் நம்முன் வைக்கப்படுமானால் அதை ஆதரிப்பதில் ஒருமித்த கருத்து இருக்கும். ஆனால் இப்போது ஏற்பட்டுள்ள

சிக்கல், நிலைபேருக்கத்தை ஏற்படுத்துவதற்கான கொள்கை களுக்கும், வளர்ச்சியை மிகுதிப் படுத்துவதற்கான கொள்கை களுக்கும் இடையே எந்த அளவு இணக்கத்தை ஏற்படுத்த வேண்டும் என்பதாகும். பணவீக்கம் ஏற்படக்கூடிய நிலைமைகளில் நிலைபேருக்கக் கொள்கையை அளவுக்குமீறிய விறுவிறுப்போடு கையாள்வதால், வளர்ச்சியானது தவருனமுறையில் பாதிக்கப் படும். ஆனால், வேலைக்குறைவு நிலைமைகளில் இத்தகைய முரண் பாடு எதுவும் தோன்றுவதில்லை என்பது கவனிக்கத்தக்க உண்மை யாகும். இத்தகைய நிலைமைகளில் முழு உற்பத்தியை உருவாக்குவதற்காக வகுக்கப்படும் கொள்கைகள், உத்தம வளர்ச்சிக்கு (optimum growth) உகந்ததாக உள்ள கொள்கைகளோடு முற்றிலும் இணக்கமாக உள்ளன.

## மேலும் படித்தற்கு உரியவை

1. ஹாவார்ட் ஆர். போவன் (Howard R.Bowen), Toward Social Economy, நியூயார்க், ரைன்ஹார்ட் (Rinehart), 1949, பாகம் 4·

இந்தப் பாகத்தின் பதினேரு அத்தியாயங்கள், சமுதாயப் பொருளாதாரத்தின் தன்மையையும், விலையையும் முடிவு செய்யும் பொருத்தமான முறையையும் விளக்குகின்றன. இந்தப் பாகம் முழுவதும் ஒரே அலகாக (unit) விளங்குகிறது என்ருலும், வாசகர், குறிப்பிட்ட அத்தியாயங்களைமட்டும் தேர்ந்தெடுத்துப் படிப்பதை விரும்பக்கூடும்.

2. ஜெர்ஹார்ட் கோம் (Gerhard Colm), 'The Theory of Public Expenditures,' The Annals, ஜனவரி 1936. இக் கட்டுரை, இதே ஆசிரியரின் 'Essays in Public Finance and Fiscal Policy' என்னும் நூலில் (நியூயார்க், ஆக்ஸ்போர்ட், 1955) 2 ஆவது அத்தி யாயமாக எடுத்து வெளியிடப்பட்டுள்ளது.

அரசாங்கத் துறைக்குச் சாதனங்களைப் பெறுவதற்காக அங்காடியைச் சார்ந்திருப்பதுபற்றிய சிக்கலை நெடுங்காலக் கோணத்திலிருந்து ஆராயும் கட்டுரை.

3. ரிச்சர்ட் ஏ. மஸ்கிரேவ் (Richard A. Musgrave), 'Principles of Budget Determination', வால்ட்டர் டபள்யூ. ஹெல்லர் (Walter W. Heller), 'Economies and the Applied Theory of Public Expenditure' இந்த இரண்டு கட்டுரைகளும் கீழ்க்கண்ட நூலில் உள்ளன: Federal Expenditure Policy for Economic Growth and Stability (Papers submitted by Panelists

before the Sub-committee on Fiscal Policy), பொருளாதார இணைக்குழு, வாஷிங்டன், 1957, பக்கங்கள், முறையே, 108–15 மற்றும் 98–107.

இந்த இரண்டு கட்டுரைகளும், அரசாங்கத் துறைக்குச் சாதனங்களைப் பெறுவதற்காக அங்காடிக் கோட்பாட்டைக் கையாள்வதைக் கைவிடவேண்டும் என்னும் மஸ்கிரேவ் அவர்களுடைய பகுத்தாய்வின் அடிப்படையில் அமைந்துள்ளன. இந்தப் பகுத்தாய்வில் அடங்கியுள்ள கருத்துகள் இக் கட்டுரையில் விளக்கப்படுகின்றன. இதே பொருளை, இன்னும் விரிவான முறையிலும், உயரிய தரத்திலும், மஸ்கிரேவின், 'The Theory of Public Finance' என்னும் நூலில் (நியூயார்க், மக்ராஹில், 1959) காணலாம்.

4. ஃப்ரேசர் பி. வைல்ட் (Frazer B. Wilde), 'Federal Expenditures in Modern America', in Joint Economic Committee (மஸ்கிரேவ் மற்றும் ஹெல்லர் பற்றிய மேலே உள்ள குறிப்பைக் காண்க) பக்கங்கள் 153–61.

இது, வரவுசெலவுத் திட்டக் கோட்பாடானது மிகக் கூடுதலான கூட்டரசாங்கச் செலவுக்கு இடம் தந்துவிடுகிறது என்னும் மிகப் பரவலாக உள்ள கருத்தைத் தெளிவாக விளக்குகிறது.

## 7ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. இவ் வாசகங்கள், ட்வைட் டி. ஐசனோவரால் (Dwight D. Eisenhower) 1959 ஜனவரி 14 அன்று, நாட்டின் பத்திரிகைக் கழகம் (National Press Club) என்னும் பெயரில் வாஷிங்டனில் உள்ள அமைப்பில், கேட்கப்பட்ட ஒரு கேள்விக்கு விடையாகத் தரப்பட்டவை. 'New York Times' என்னும் பத்திரிகையின் 15–1–1959 இதழில், செய்தி மாநாட்டைப்பற்றிய செய்தியில் இக் கருத்துரை தரப்பட்டுள்ளது.

2. ஃப்ரேசர் பி. வைல்ட் (Frazer B. Wilde), 'Federal Expenditure in Modern America'; பொருளாதார இணைக்குழு, Federal Expenditure Policy for Economic growth and Stability : Papers submitted by Panelists appearing Before the Sub-committee on Fiscal Policy, நவம்பர் 5, 1957, பக்கம் 158

3. இயல்பல்லாத போர்க் காலங்களை விட்டுவிட்டுப் பார்த்தால்கூட, அரசாங்கச் செலவுகள் தொடர்ச்சியாக உயர்ந்துகொண்டிருப்பதைக் காணலாம். மொத்தச் சாதனங்களில் அரசாங்கத்திற்கு ஒதுக்கப்பட்ட வீதாசாரம் அந்த அளவு தொடர்ச்சியாக உயரவில்லை.

4. படத்தில் உள்ள புள்ளிகள், பொதுவாக, ஐந்தாண்டுக் காலப்பகுதிகளின் ஆண்டு சராசரிகளாக இருந்தாலும், 1929க்கான புள்ளிகள், ஒரே ஆண்டுக்கான புள்ளிகளே என்பது கவனிக்கத்தக்கது. நாட்டின் மொத்த ஆக்கம்பற்றிய ஒப்பிடத்தக்க நவீன புள்ளி விவரங்கள் கிடைக்கிற முதல் ஆண்டு 1929 ஆக இருப்பதே, இதற்குரிய காரணமாகும்.

5. மின்சார சக்தித் துறைபற்றிய இந்த எடுத்துக்காட்டுகள், அந்தத் துறையில் உள்ள முற்றுரிமையின் விளைவுகளையே பெரிதும் காட்டக்கூடியனவாக இருக்கின்றனவே தவிர, அங்காடிக் கோட்பாட்டின் நடவடிக்கைபற்றிய ஒருசிறந்த மாதிரியாக இருக்கமுடியாது. ஆனால், பொது வசதிகளில் சட்டமுறை முற்றுரிமைகள் இருப்பது, நம் பொருளாதாரத்தின் ஒரு பகுதியாக அமைந்து விட்டது. அவை, தொழில்துணிவுப் பொருளாதாரத்தில் வேண்டாதவை என்று கருதப்படவில்லை. அம் முற்றுரிமைகள் வளர்ச்சியில் பின்தங்கியிருப்பதற்கான காரணம், போதுமான அறிவுடைமை இல்லாததா அல்லது போதுமான போட்டி இல்லாததா என்பது, தற்போதைய பகுத்தாய்வுக்குப் பயன்படாத ஒரு சிக்கல்.

6. ஜான் கே. கால்பிரெய்த் (John K. Galbraith), The Affluent Society, போஸ்டன், ஹௌடன் மிஃப்ளின் (Boston, Houghton Mifflin), 1958, பக்கங்கள் 260–61.

7. ஹோவார்ட் ஆர். போவன் (Howard R. Bowen) என்பாரின் 'Toward Social Economy', [ரைன்ஹார்ட் கம்பெனி, (Rinehart and Company), 1948, அத்தியாயம் 18] என்னும் நூலில், வரவு செலவுத் திட்டக் கோட்பாட்டின் பொருளாதார ஆற்றலை உச்ச அளவுப்படுத்துவதற்கான முறைகளைப்பற்றிய பயன்மிக்க ஒரு கருத்தாய்வைக் காணலாம்.

8. ஜான் கே. கால்பிரெய்த், The Affluent Society, பக்கம் 253.

9. The Budget of the U. S. Government for the Fiscal year ending June 30, 1960. சிறப்புப் பகுத்தாய்வு (Special Analysis H.)

10. ஆடம் ஸ்மித், 'The Wealth of Nations', 1776. நவீன நூல் நிலையப் பதிப்பு, பக்கம் 651.

11. 1957-ன் மூன்றுவது காலாண்டில், 1958 விலைகளில் நாட்டின் மொத்த ஆக்கமானது, 453·3 பில்லியன் டாலராக இருந்தது (ஆண்டு வீதம்). 1958-ன் முதல் காலாண்டில், அது, 429 பில்லியன் டாலராகக் குறைந்து விட்டது; அந்த ஆண்டின் இறுதிக் காலாண்டுவரை, அதன் முந்திய புள்ளி இலக்கத்தை (figure) அது அடையவில்லை. நாட்டின் மொத்த ஆக்கம், 1957-ல் 451·1 பில்லியன் டாலராகவும், 1958-ல் 437·7 பில்லியன் டாலராகவும் இருந்தது. 3 சதவீத ஆண்டு வளர்ச்சி வீதத்தின்படிக் (annual rate of growth) கணக்கிட்டால், 1958-ன் புள்ளி இலக்கமானது, 464·6 பில்லியன் டாலராக இருந்திருக்கவேண்டும். இவ்வாறாக, பின்னிறக்கமானது நாட்டின் மொத்த ஆக்கத்தை, 3 சதவீத வளர்ச்சியின் அளவைவிட 27 பில்லியன் டாலர் அளவுக்குக் குறைந்துவிட்டது.

12. மேலே சுட்டிக்காட்டப்பட்ட முரண்பாடுகள், பெரும் அளவுக்கு, வரவு செலவுத் திட்டத்தின் வரிகள்பற்றிய பகுதியைத் தக்கமுறையில் இயக்குவதன் மூலம், தீர்க்கப்படமுடியும். எடுத்துக்காட்டாக, பணவீக்கக் காலத்தில் செலவில் உயர்வு ஏற்படவேண்டும் என்று விரும்பப்படுமானால், வரி வீதங்களைப் போதிய அளவு உயர்த்துவதன்மூலமாக, நிலைபேறுக்கக் கொள்கையைக் கைவிடாமலேயே, அந்த நோக்கத்தை நிறைவேற்றமுடியும். ஆனால், நடைமுறையில் இந்த முறையைக் கையாள்வது, எளிதில் இயல்வதாக இல்லை. ஏனென்றால், வரவுசெலவுத் திட்டச் செலவுகளைவிட வரி வீதங்கள் எளிதில் மாற்றமுடியாத இயல்பு உடையனவாக உள்ளன. அதோடு, வரிவீதங்களில் பெரிய அளவிலும் திடீரென்றும் செய்யப் படுகிற மாறுதல்களின் பயனாகப் பொருளாதாரத்தில் கடுமையான விளைவுகள் ஏற்படக்கூடும்.

# 8. பொதுக் கடன் (அரசாங்கக் கடன்) –அதன் இயல்பும் நிர்வாகமும்

கருவூலமானது (Treasury), பாங்குகள், வாணிப அமைப்புகள், தனியாட்கள் ஆகியோரிடமிருந்து கடன் வாங்குவதால் அரசாங்கக் கடன் உண்டாகிறது. இக் கடனானது, கருவூலத்தின் வாக்குறுதிகள் (promises) வடிவத்தில் அமைந்திருக்கிறது. இவ் வாக்குறுதிகளைப் பெறுபவர்களுக்கு ஓர் அசல் தொகையையும் (a principal sum), பெரும்பாலான கடன்களைப் பொறுத்தவரை, அந்த அசலின் மீதான வட்டியையும் செலுத்துவதாகக் கருவூலம் உறுதிகூறும் வகையில் இந்த வாக்குறுதிகள் அமைந்துள்ளன. நடப்புச்செலவுச் செலுத்தல்களைச் (current cost payments) செய்வதற்கும்,[1] தவணை முடிந்த கடன்களைத் (maturing debts) திருப்பித்தருவதற்கும் தேவையான அளவில் கருவூல ரொக்க இருப்பை (treasury cash balance) வைத்துக்கொள்ள முடியாதபோது–அப்படி வைத்துக் கொள்வதற்கு வேண்டிய அளவில் நடப்பு வருவாய் வரவுகள் (current revenue receipts) இல்லாதபோது, கருவூலமானது கடன் வாங்குகிறது. (2ஆவது அத்தியாயத்தைக் காண்க.) நடப்பு வரவுசெலவுத் திட்டம் பற்றுக்குறையைச் சரிக்கட்டுவதற்கான நிதிகளைத் திரட்டுவதற்காகக் கடன் வாங்கப்படுவதால் பொதுக் கடனில் ஒரு நிகரக் கூடுதல் (a net addition) ஏற்படுகிறது. ஆனால், அண்மை நிதி ஆண்டுகளில் கூட்டரசாங்கம் எழுப்பியுள்ள கடனின் ஒரு பெரும்பகுதி, ஏற்கெனவே உள்ள கடனின் தவணை முடிவின் போது அதைத் தீர்ப்பதற்காகப் பெறப்பட்டதுதான். ஏனென்றால், ஒரு கருவூலக் கடனின் தவணை முடியும்போது (அதாவது அதனுடைய அசலைத் திருப்பித்தரவேண்டிய கெடு வந்தபோது), கருவூலமானது, அசல் தொகையை, நடப்பு வரவு செலவுத் திட்ட உபரியிலிருந்து (அதாவது வருவாய் வரவுகளிலிருந்து செலவுச் செலுத்தல்கள் செய்யப்பட்டதுபோக எஞ்சியிருக்கும் தொகையி

லிருந்து) செலுத்த வேண்டும்; அல்லது, பழைய கடன்களைத் திருப்பித் தருவதற்காகப் புதிய கடன்களை எழுப்பவேண்டும். 1930 முதல் 1946 வரை உள்ள ஒவ்வொரு நிதி ஆண்டிலும் கூட்டரசாங்கக் கடனில் நிகர உயர்வு (net increase) இருந்திருக்கிறது. 1946 முதல் 1959 வரை உள்ள ஆண்டுகளில், ஆண்டு முடிவில் உள்ள பொதுக்கடன் தொகையானது, ஐந்து ஆண்டுகளில் மட்டுமே குறைவைக் காட்டியிருக்கிறது. ஆகவே, இந்தக் காலப் பகுதி முழுவதும், பெரும்பாலும் புதுக்கடன்களை எழுப்புவதன் வாயிலாகவே, தவணை முடிந்த கடன்களைத் திருப்பித்தர வேண்டிய நிலை இருந்திருக்கிறது. ஆனால், பழைய கடன்களுக்குப் பதிலாகப் புதிய கடன்களை எழுப்பும் நடவடிக்கையால், கொடுக்க வேண்டிய பொதுக்கடனில் ஒரு நிகர உயர்வு ஏற்படுவதில்லை என்பது உண்மைதான்.

## மொத்தக் கடனும் நிகரக்கடனும் (Gross Debt and Net Debt)

கருவூலத்தின் மொத்தக் கடனில், கருவூலம் செலுத்த வேண்டிய எல்லாக் கடன் பொறுப்புகளின் அசல் தொகைகளும் அடங்கியுள்ளன. கடன் பொறுப்புகள் (dept obligations) என்பன, கடன் பத்திரங்களில் (securities) அடங்கியுள்ளவற்றையே, அதாவது கடனைத் திருப்பிச் செலுத்துவதற்கான ஒப்பந்த வாக்குறுதிகளையே (contractual promises to pay) குறிக்கின்றன. எந்த ஒரு நேரத்திலும், கருவூலமானது செலுத்தவேண்டிய—ஆனால் இன்னும் செலுத்தப்படாமல் உள்ள அரசாங்க ஊழியர்களின் ஊதியங்களைத் தரவேண்டிய பொறுப்பில் இருக்கலாம். அரசாங்கப் பணியாளர்களின் ஊதியம் இரண்டு வாரங்களுக்கு ஒரு முறை தரப்படுவது வழக்கமானால், ஊதியம் தரப்படும் நாட்கள் இரண்டிற்கு இடையில் உள்ள எந்த நேரத்திலும், தர வேண்டிய ஊதியங்கள் திரண்டுவிட்டிருக்கும்—ஆனால் தரப்படாமல் இருக்கும். அவ்வாறு திரண்டுள்ள நடப்புச் செலவுகள், (accrued current expenses) மொத்தக் கடனின் ஒரு பகுதியாகச் சேர்க்கப்படமாட்டா. பணம் செலுத்தும் முறையின் காரணமாக, எந்த நேரத்திலும், அரசாங்கத்தால் வாங்கப்பட்ட பொருள்களுக்காகவோ தரப்பட்ட இழப்பு ஈட்டிற்காகவோ (damage) அரசாங்கம் பணம் தரவேண்டிய நிலை இருக்கத்தான் செய்யும். இத்தகைய செலவுகளும், திரண்டுள்ள நடப்புச் செலவுகளே ஆகும். இத்தகைய செலவுகளுக்கான தொகையைத் திரட்டுவதற்காகப் பின் ஒரு நாளில் கடன்கள் எழுப்பப்படக்கூடும் என்றாலும், இந்தச் செலவுகள் மொத்தக் கடனின் ஒரு பகுதியாகக் கருதப்பட மாட்டா. மொத்தக் கடனுக்கான வட்டி, ஏனைய திரண்ட செலவுகளிலிருந்து ஓரளவு வேறுபட்ட செலவினமாகும். எந்த ஒரு

குறிப்பிட்ட நேரத்திலும், உடனடியாகச் செலுத்தவேண்டியதோ அல்லவோ, கடன்மீதான வட்டி திரண்டுதான் இருக்கும். மொத்தக் கடனை அறிவிக்கும்போது, கருவூலமானது, திரண்டுள்ள வட்டியைச் சில சமயங்களில் அதில் இணைத்துவிடுகிறது; சில சமயங்களில் அதிலிருந்து விலக்கிவிடுகிறது. திரண்டுள்ள வட்டியானது மொத்தக் கடனில் இணைக்கப்பட்டுள்ள இரண்டு எடுத்துக்காட்டுகள், புள்ளிவிவர முறைப்படி முக்கியமானவையாக உள்ளன. E வரிசை சேமிப்புப் பத்திரங்கள் (Series E savings bonds), அவற்றின் காலம் முடியும்வரையில் வட்டியைச் சேர்த்துக் கொண்டே வந்து, அப்படிச் சேர்க்கப்பட்ட (கூட்டு) வட்டியை அசலோடு இணைத்துவிடுகின்றன. 18·75 டாலருக்கு வாங்கப்பட்ட ஒரு E வரிசைப் பத்திரம், எட்டு ஆண்டுகளுக்குச் சற்றே குறைந்த காலத்தில் தவணை முடிவை அடைகின்றது. அப்படி அடையும்போது, அந்தப் பத்திரத்தை வைத்திருப்பவருக்கு அரசாங்கம் 25 டாலர் செலுத்துகிறது. 18·75 டாலருக்கும் 25 டாலருக்கும் இடையே உள்ள வேறுபாடானது, $7\frac{3}{4}$ ஆண்டுகளுக்கு 3·75 சதவீதத்தின்படி அமைந்த கூட்டுவட்டியாக (compound interest) அமைகிறது. ஆனால், அந்தப் பத்திரத்தின் வாழ்நாளில், எப்போது வேண்டுமானாலும் அரசாங்கம், 18·75 டாலரோடு அச்சமயம் வரை திரண்டுள்ள வட்டியையும் சேர்த்து செலுத்துவதன் மூலம் அப் பத்திரத்தைத் திரும்பப் பெற்றுவிடலாம். (தவணை முடிவு வரை பத்திரத்தை வைத்திருப்பதற்கான ஊக்கம் ஊட்டத்தக்க வகையில், கடன் மீட்சிப் பட்டியலில் அமைக்கப்பட்டுள்ள வீதங்களின்படி, இத்தொகை நடைமுறையில், சற்று திருத்தியமைக்கப்படும்.) ஆகவே, தவணை முடிவுக்கு முன் எந்த நேரத்திலும் கருவூலமானது, அசலையும் ஒரு குறிப்பிட்ட வட்டித்தொகையையும் செலுத்த ஆயத்தமாக உள்ளது என்பது தெளிவு. அத்தகைய பத்திரங்களுக்காகச் செலுத்தப்படவேண்டிய மொத்தத் தொகை ஒரு குறிப்பிட்ட நேரத்தில் எந்த அளவில் உள்ளது என்பதை அறிவிக்கும்போது, கருவூலமானது, அந்தநேரத்தில் உள்ள அவற்றின் அசல் தொகையையும் அதுவரை சேர்ந்துள்ள வட்டியையும் சேர்த்தே அறிவிக்கிறது. கருவூல உண்டியல்கள் (treasury bills) அதாவது, ‘கழிவு’ (dicount) அடிப்படையில் விற்கப்படுகிற தொண்ணூறு நாள் கடன்கள், இரண்டாவது எடுத்துக்காட்டு ஆகும். இத்தகைய உண்டியலை வாங்குபவர், உண்டியலின் தவணை முடிவு மதிப்பைவிடக் (matured value) குன்றவாக உள்ள ஒரு தொகையைக் கருவூலத்திற்குச் செலுத்துகிறார். அப்படிக் கழிக்கப்படும் தொகையே, தவணை முடிவுவரை உள்ள காலத்திற்கான வட்டி ஆகும். ஒரு குறிப்பிட்ட நேரத்தில் இத்தகைய பத்திரங்களுக்காகச் செலுத்தவேண்டிய மொத்தத் தொகையை

அறிவிக்கும்போதும், கருவூலமானது, தவணை முடிவு மதிப்பையோ அல்லது இறுதி மதிப்பையோ தெரிவிக்கிறது. ஆகவே கருவூல உண்டியல்களைப் பொறுத்த நிலையிலும், மொத்தக் கடனில் வட்டியும் சேர்ந்தே இருக்கிறது. மொத்தக் கடன்பற்றி அறிவிக்கப்படும் புள்ளி விவரங்கள், மொத்தக் கடனுக்கு நாம் தந்துள்ள இலக்கணத்திலிருந்து (definition) சிறிதளவு மாறுபட்டிருக்கும் என்பதே, அத்தகைய மாறுபாட்டால் ஏற்படும் தவற்றின் அளவு அதிகமில்லை என்றபோதிலும், நினைவுபடுத்திக் கொள்வது, இத்தகைய நிலைமைகளில் இன்றியமையாதது.

நிகரக் கடனை முடிவு செய்யவேண்டுமானால், கையிருப்பில் உள்ள நிதிகளை—அவை கடனைத் திருப்பித் தருவதற்காகப் பயன் படுத்தப்படுகின்றனவோ இல்லையோ—மொத்தக் கடனிலிருந்து கழித்துவிடவேண்டும். கடன் கழிவு நிதிகள் (sinking funds) என்பன, கடனைத் திருப்பித்தரும் குறிப்பிட்ட நோக்கத்திற்காகவே ஒதுக்கிவைக்கப்பட்டுள்ள சொத்து (assets) ஆகும். அவை பொதுவாக அரசாங்கத்தின் சட்டமன்றப் பிரிவால் ஒதுக்கீட்டின் மூலமாக (through appropriation) உருவாக்கப்படுகின்றன. ஐக்கிய அமெரிக்க அரசாங்கங்கள் இப்போதெல்லாம் கடன் கழிவு நிதிகள் என்னும் இந்த முறையைப் பெரும்பாலும் பயன் படுத்துவதில்லை. கூட்டரசாங்கம் ஒரு கடன்கழிவு நிதிக் கணக்கை நிர்வகித்து வருகிறது. நிதியாண்டு 1959-ன்முடிவில், அக் கணக்கில் 12 பில்லியன் டாலர் தொகை இருந்தது. ஆனால் இந்தக் கணக்கில் பணம் இருந்தால் அதனை,கடனைத் திருப்பிக் கொடுப்பதற்காகப் பயன்படுத்தலாம் என்றுதான் அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது. எனவே, இந்தக் கணக்கு, ஓர் உண்மையான ரொக்க இருப்போ (cash balance) சொத்து இருப்போ (asset balance) அல்ல. மாநில அரசாங்கங்களும் தல அரசாங்கங்களும், கடன் கழிவு நிதிகளுக்குப் பதிலாகத் ‘தொடர்ச்சியான’ கடன் பத்திரங்களையே (serial securities) பெரும்பாலும் கையாளத் தொடங்கிவிட்டன. இந்தக் கடன் பத்திரங்கள், ஒரு நீண்ட கால அளவின் முடிவில் மொத்தத் தொகையைத் திருப்பிக்கொடுக்கும் முறைக்குப் பதிலாக ஒவ்வோர் ஆண்டும் கடனின் ஒரு பகுதியைத் திருப்பிக்கொடுக்கும் முறையில் அமைந்த கடன் வெளியீடுகள் (loan issues) ஆகும். இந்த முறையால், காப்புநிதி (reserve fund) ஒன்றைப் பெருக்குவது தேவையற்ற செயலாகிவிடுகிறது. கடனின் ஒவ்வொரு பகுதியும் தவணை முடிவை அடையும்போது, ஒதுக்கீட்டின் மூலமாக (by appropriation) (அல்லது புதிய கடனை எழுப்புவதன்மூலமாக) அப் பகுதிக் கடன் திருப்பிச் செலுத்தப்படுகிறது.

நிகரக்கடனைப் பெறுவதற்காக மொத்தக் கடனில் செய்யப்பட வேண்டிய மற்றொரு கழிவு, ரொக்கமாகவோ பாங்கு வைப்புகளாகவோ (bank deposits) உள்ள கருவூல இருப்புத் தொகையாகும். கடனைத் திருப்பிக் கொடுப்பதற்குப் பயன்படுத்தக் கூடிய அல்லது பயன்படுத்தாமல் இருக்கக்கூடிய நீர்மைச் சொத்து களைக் (liquid assets) கொண்டிருப்பது, இந்தத் தொகை. ரொக்க இருப்பைப் பெருக்குவதற்காகக் கடன் வாங்கப்படுமானால், கருவூலத்தின் நிகரக்கடன் நிலையில் எத்தகைய மாறுதலும் ஏற் படாது. ஏனென்றால் இந் நிலையில் மொத்தக் கடனில் ஏற்படும் கூடுதல் கருவூலத்தின் நீர்மைச் சொத்துகளில் ஏற்படும் கூடுதலுக்குச் சமமாக இருக்கிறது. உபரித்தொகை இருக்கும் முறையில் கருவூல நடவடிக்கை மேற்கொள்ளப்படுமானால், கடனைத் திருப்பித் தருவதற்காக அது பயன்படுத்தப்படும்வரையில், கருவூல இருப்பில் உயர்வு ஏற்பட்டிருக்கும். இவ்வாறாகக் கருவூல இருப்பானது, புதிய கடன் எழுப்புவது, நடப்புச் செலுத்தல்களைவிட நடப்பு வரவுகள் மிகுதியாக இருப்பது ஆகிய இரண்டு முறைகளால் (இரண்டு முறைகளால் மட்டுமே) உயரமுடியும். எந்த முறையால் அது உயர்ந்தாலும், கருவூலத்தின் நிகரக்கடன் நிலையைத் தெள்ளத் தெளிவாக நாம் அறியவேண்டுமானால், செலுத்தப்படவேண்டிய மொத்தக் கடனிலிருந்து கருவூல இருப்பானது கழிக்கப்பட வேண்டும்.

எனவே, கடன் கழிவு நிதி, கருவூல இருப்பு ஆகியவற்றின் கூட்டுத்தொகையை மொத்தக் கடனிலிருந்து கழிப்பதால் கிடைக்கும் தொகையே நிகரக் கடன் ஆகும். 1959 ஜூன் 30 அன்று ஐக்கிய அமெரிக்கக் கருவூலத்தின் நிகரக் கடன் நிலை கீழ்க்கண்டபடி இருந்ததாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது.[2]

| | பில்லியன் டாலர்கள் |
|---|---|
| மொத்தக் கடன் | 2,75,466 |
| கருவூல இருப்பு | 5,119 |
| கடன் கழிவு நிதி (இந் நிதியில் தொகை எதுவும் இல்லை) | —— |
| நிகரக்கடன் | 2,70,347 |

சில நிலைமைகளுக்குக் கருவூலத்தின் நிகரக்கடன் நிலைமையே சிறப்புப் பொருத்தம் உடையதாகக் காட்சி தருகிறது. மொத்தக் கடனைவிட நிகரக் கடனே அதிக நடைமுறைப் பொருத்தம் உடையதாய் இருப்பது, தெளிவாக விளங்கும் ஓர் உண்மை.

எடுத்துக்காட்டாக, 1946-ல் நடந்ததைப்போல, கருவூல இருப்பைக் குறைப்பதன்மூலமாகக் கடனைத் திருப்பிக் கொடுப்பதால், கருவூலமானது பற்றுக்குறை நிலையில் பணியாற்றும் நிலை ஏற்பட்டாலும், மொத்தக் கடன் குறிப்பிடத்தக்க அளவில் குறைகிறது. அத்தகைய நிலைமையில், கடன் நிலைமையை அளந்தறிவதற்கு மொத்தக்கடனைவிட, கிட்டத்தட்ட மாறுமலேஇருக்கிற நிகரக்கடனே மிகச்சிறந்த கருவியாகப் பயன்படுகிறது. அப்படிப் பயன்பட்டபோதிலும், நிகரக்கடனின் பொருளைத் தக்க முறையில் கண்டறிந்தாலொழிய அதிலிருந்து தவறான பல முடிவுகளை நாம் பெற்றுவிடக்கூடும். மொத்தக் கடனில் ஏற்படும் உயர்வால் நிகரக் கடனில் எத்தகைய உயர்வும் உடனடியாக ஏற்படாமல் இருக்கலாம். ஏனென்றால், கடனாகப் பெறும் தொகையால் கருவூலத்தின் இருப்பு உயர்கிறது அல்லவா ? ஆனால் நீண்ட கால அளவில், நடப்புச் செலவுகளுக்காகக் கருவூல இருப்பைப் பயன்படுத்தும்போது, மொத்தச் செலவில் ஏற்பட்ட உயர்வுக்கு ஒப்ப நிகரச் செலவிலும் உயர்வு ஏற்படும்.

நிதியாண்டு 1959-ல் மொத்தப் பொதுக்கடனின் வரவுகளும் செலவுகளும் பின்மருவாறு இருந்தன.[3]

| | பில்லியன் டாலர்கள் |
|---|---|
| பொதுக்கடன் வரவுகள் (புதிய வெளியீடுகள்) (New issues) | 1,99,885 |
| பொதுக்கடன் செலவுகள் (திருப்பித் தருதல்) | 1,91,522 |
| வரவுகளின் மிகுதி (excess of receipts) | 8,363 |

பொதுக்கடனின் வரவுகள், அதன் செலவுகளைவிட மிகுதியாக இருப்பது,அந்த ஆண்டில் நாட்டின் மொத்தக் கடனில் உயர்வு ஏற்பட்டதையே குறிக்கிறது. ஓர் ஆண்டின் பொதுக் கடன் வரவுகள், அந்த ஆண்டில் அரசாங்கக் கடன் பத்திரங்களின் விற்பனையால் கிடைத்த தொகையைக் குறிக்கின்றன. அது போலவே, பொதுக்கடன் செலவுகள் கடன் பத்திரங்கள் குறிக்கும் கடனைத் திருப்பித் தருவதற்காகச் செலுத்தப்பட்ட தொகையைக் குறிக்கின்றன. கருவூலப் பத்திரங்களின் விற்பனையால் கிடைத்த முழுத் தொகையைவிடக் குறைந்த அள்வு தொகையே, தவணை அல்லது அழைப்பித்த கடன் பத்திரங்களை (matured or called securities) வைத்திருப்பவர்களுக்குச் செலுத்தப்பட்டிருக்கிறது என்பது மேலே தரப்பட்டுள்ள புள்ளி விவரங்களிலிருந்து தெளிவாக விளங்குகிறது.

மேலே தரப்பட்டுள்ள பொதுக்கடன் வரவுகளின் மிகுதி (8,363 பில்லியன் டாலர்), 1959ஆம் ஆண்டில் மொத்தக் கடனில் ஏற்பட்ட உயர்வைக் குறிக்கிறது. அந்த ஆண்டில், வரவு செலவுத் திட்டப் பற்றுக்குறையானது, மொத்தக் கடனில் உயர்வு, கருவூல இருப்பில் குறைவு ஆகிய இரண்டு முறைகளாலுமே சரிக் கட்டப்பட்டது. 1959ஆம் ஆண்டில், இவற்றின் நிலை பின்வருமாறு இருந்தது.[4]

| | மில்லியன் டாலர்கள் |
|---|---|
| வரவுசெலவுத் திட்டப் பற்றுக்குறை | 12,540 |
| கருவூல இருப்பில் குறைவு | 4,399 |
| மொத்தக் கடனில் உயர்வு | 8,141 |

மொத்தக் கடனில் மாறுதலை ஏற்படுத்தும் காரணங்களைச் சுருக்க மாகக் கூறவேண்டுமானல் பின் வருமாறு தெரிவிக்கலாம் :

1. வரவுசெலவுத் திட்ட உபரி அல்லது பற்றுக்குறை.

வரவுசெலவுத் திட்டப் பற்றுக்குறையானது, ரொக்க இருப்பைக் குறைப்பதன் மூலம் சரிக்கட்டப்பட்டாலொழிய, அப் பற்றுக் குறையால் மொத்தக் கடன் உயர்வது திண்ணம். வருவாய் வரவுகளை விடச் செலவுச் செலுத்தல்கள் (cost payments) மிகுதியாக இருக்கும் நிலைமை, பொதுவாகப் புதிய கடன்கள் எழுப்பப்படவேண்டிய இன்றியமையாமையை உருவாக்கும். வரவுசெலவுத் திட்ட உபரி யானது கடனைக் குறைப்பதற்குப் பயன்படுத்தப்படலாம். அல்லது மொத்தக் கடனைக் குறைப்பதற்கு மாருக ரொக்க இருப்பை உயர்த்துவதற்கும் அது பயன்படுத்தப்படலாம்.

2. கருவூல இருப்பில் உயர்வு அல்லது குறைவு.

கருவூல இருப்பின் உயர்வானது வரவுசெலவுத் திட்ட உபரியால் ஏற்பட்டாலொழிய, அந்த உயர்வால் மொத்தக் கடன் உயர்வது உறுதி. ரொக்க இருப்பைக் குறைப்பதால் கிடைக்கும் நிதிகள், எந்த அளவுக்கு வரவுசெலவுத் திட்டப் பற்றுக்குறையை நிறைவுசெய்வதற்குப் பயன்படுத்தப்படாமல் கடனைத் திருப்பிக் கொடுப்பதற்குப் பயன்படுத்தப்படுகிறதோ, அந்த அளவுக்கு ரொக்க இருப்புக் குறைப்பால் மொத்தக் கடன் குறையும்.

3. கடன் கழிவு நிதியின் இருப்பில் குறைவு.

கடன் கழிவு நிதியானது கடனைத் திருப்பிக் கொடுப்பதற் கென்றே ஏற்பட்டிருப்பதால், அந் நிதியின் இருப்பில் ஏற்படும் குறைவால் மொத்தக் கடன் குறைவது உறுதி. ஆனால், கடன் கழிவு நிதியின் இருப்பு குறையும்போது, நடப்புச் செலவுக்காகவோ ரொக்க இருப்பை உயர்த்துவதற்காகவோ எழுப்பப்படும் புதிய கடனால் மொத்தக் கடன் உயரக்கூடும்.

வரவுசெலவுத் திட்டத்தின் உபரி அல்லது பற்றுக்குறையின் விளைவாக மட்டுமே நிகரக் கடனில் மாறுதல் ஏற்படமுடியும் என்பதை நாம் முன்னரே ஆய்ந்து அறிந்துள்ளோம். கருவூல இருப்பில் உயர்வையோ குறைவையோ ஏற்படுத்தக்கூடிய முறையில் மொத்தக் கடனில் உயர்வோ குறைவோ ஏற்பட்டால், அதனால் நிகரக்கடனில் எத்தகைய மாறுதலும் உண்டாகாது. அதுபோலவே, கடன் கழிவு நிதியிலிருந்து செலவு செய்யப்படுவதால் மொத்தக் கடன் குறையும் போதும் நிகரக் கடனில் மாறுதல் ஏற்படுவதில்லை.

## அரசாங்கச் செலவின் போக்கு (The Trend of Government Debt)

**கூட்டரசாங்கக் கடன்:** கூட்டரசாங்கக் கடனின் போக்கு, அட்டவணை 11-ல் விளக்கப்பட்டிருக்கிறது. பொதுக் கடன் பற்றிய எண்கள், கூட்டாட்சி செலவுகளின் பொதுப்போக்கை எடுத்துக் காட்டுகின்றன. போரின் காரணமாக மொத்தக் கடனில் ஏற்படும் விளைவு தெளிவாக இருக்கிறது. மொத்தக் கடனானது, போர்க் காரணமாக, 1860க்கும் 1870க்கும் இடையே 38 மடங்கு உயர்ந் திருக்கிறது; 1910க்கும் 1920க்கும் இடையே 21 மடங்கு உயர்ந் திருக்கிறது; 1940க்கும் 1946க்கும் இடையே 6 மடங்கு உயர்ந் திருக்கிறது. இம் மூன்று போர்க்காலக் கடன் உயர்வுகள் ஒவ் வொன்றிலும் குறிப்பிடத்தக்க விலை உயர்வின் முத்திரை பதிந் திருப்பது உண்மைதான் என்றாலும், போர்க் கடனானது டாலர் களின் கணக்கில் அமைந்திருப்பதால், போர் முடிந்து விலைகள் குறைந்தபின்னரும், அது போர்க்கால அளவிலேயே தொடர்ந்து இருக்கிறது. மொத்தக் கடனின் சதவீத உயர்வுகள், உண்மையின் ஒரு பகுதியைமட்டுமே தெரிவிக்கின்றன. டாலர் கணக்கில் ஏற்பட்ட மொத்தக் கடன் உயர்வைக் கவனித்தால், 1860—1870-ல் 38 மடங்காக ஏற்பட்ட கடன் உயர்வின் டாலர் உயர்வைவிட, 1940—1946-ல் ஆறு மடங்காக ஏற்பட்ட கடன் உயர்வின் டாலர் உயர்வு 95 மடங்கு அதிகமாக இருக்கிறது. அதுபோலவே, இந்த டாலர் உயர்வு, 1910—1920-ல் 21 மடங்காக ஏற்பட்ட கடன் உயர்வின் டாலர் உயர்வைவிட 10 படங்கு அதிகமாக இருக்கிறது.

1870 முதல் 1910 வரை உள்ள காலப் பிரிவில் மொத்தக் கடனுனது, உள்நாட்டுப் போரின்போது இருந்ததைவிடக் குறைந்த அளவில் இருந்ததோடு, அந்தக் காலப் பிரிவு முழுவதும் ஏறத்தாழ ஒரே நிலையில் இருந்தது. 1920ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளில் ஆண்டுக்குச் சராசரி 1 பில்லியன் டாலர் என்னும் வீதத்தில் மொத்தக் கடனுனது தொடர்ச்சியாகக் குறைந்துவந்திருக்கிறது. பொருளாதாரநடவடிக்கை உயர்ந்த அளவில் இருந்தாலும், போர்க் காலத்தில் தொடங்கப்பட்ட வரிமுறையால் போருக்குப் பிந்திய காலத்தில் ஏராளமான வருவாய் வரத் தொடங்கியதாலுமே, பெரும்பாலும் இந்தக் கடன் குறைப்பு ஏற்பட்டது என்று கூறலாம். 1920ஐத் தொடர்ந்த ஆண்டுகளில் ஏற்பட்ட வரவுசெலவுத்திட்ட உபரித்தொகைகள், கடனைக் குறைப்பதற்காக வேண்டுமென்றே மிகக்கூடுதலான வரிகளைச் சுமத்தியதன் விளைவாக ஏற்பட்டதுஎன்று கூறமுடியாது. அதற்கு மாருக, அக் காலத்தில் தொடர்ச்சியாக வரி வீதங்கள் குறைக்கப்பட்டதையும் மீறிக்கொண்டுதான் இந்த உபரித் தொகைகள் திரண்டு பெருகின. கடனைத் திருப்பித் தருவதற்கும், ஏராளமான கடனின் பளுவைக் குறைப்பதற்கும், வாணிப நடவடிக்கை—நாட்டின் வருமானம் ஆகியவற்றின் அளவு உயர்வாக இருக்கவேண்டியது எவ்வளவு இன்றியமையாதது என் பதை, 1920ஐத் தொடர்ந்த ஆண்டுகளின் அனுபவத்திலிருந்துநாம் தெரிந்துகொள்ளலாம். 1930ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளின் பொருளாதார மந்தத்தின்போது புதிதாகத் தொடங்கப் பட்ட அரசாங்கப் பணிகளின் தொகுதியைப்பற்றி 3ஆவது அத்தியா யத்தில் நாம் விரிவாகப் படித்தறிந்தோம் அல்லவா? 1931-ல் தொடங்கி 1940 வரை தொடர்ந்து இருந்த புதுக்கடன் உயர்வுக்கு அந்தப் பணிகளே காரணம் ஆகும். இரண்டாம் உலகப் போரின்போது கடன் உயர்வு விரைந்து பெருகியது, முற்றிலும் இயற்கையே.

1946-க்கும் 1947-க்கும் இடையே மொத்தக்கடனில் 11·5 பில்லியன் டாலர் குறைவு ஏற்பட்டிருக்கிறது. அச் சமயத்தில் வழக்கத்திற்கு மாருக மிக அதிக அளவில் இருந்த கருவூல இருப்புத் தொகையைக் கடனைத் திருப்பித் தருவதற்குப் பயன்படுத்திய தாலேயே இந்தக் குறைவு ஏற்பட முடிந்தது. போர் முடிந்தவுடன், வெற்றிக்கடன் (the victory loan) திட்டத்தால் கருவூலத்திற்கு ஏராளமான அளவில் ரொக்க நிதிகள் (cash funds) கிடைத்தன. படைத்துறைச் செலவுக் குறைப்பு எதிர்பார்த்ததைவிட மிக அதிக மாக இருந்ததாலும், நடப்பு வரி வருவாய்கள் உயர்ந்த அளவில் இருந்ததாலும், கடனைத் திருப்பித் தருவதற்காகக் கருவூல இருப்பைப் பயன்படுத்த முடிந்தது. மொத்தக் கடனில் குறிப்பிடத் தக்க அளவில் ஏற்பட்ட இந்தக் குறைவைப்போல நிகரக் கடனில்

குறைவு ஏற்படவில்லை. எந்த அளவுக்கு ரொக்க இருப்பைப் பயன் படுத்துவதன்மூலம் மொத்தக் கடன் குறைக்கப்பட்டதோ அந்த அளவுக்கு நிகரக்கடன் மாறுமல் இருந்தது.

*1948-ன் முடிவில் 252 பில்லியன் டாலராக இருந்த மொத்தக் கடன், 1953-55 வரை கிட்டத்தட்ட நிலையாகவே இருந்தது. 1953-1955-ல் முதலில் தலையாய செலவுகளின் உயர்வாலும், பின்னர் பின்னிறக்கத்தின்போது செய்யப்பட்ட தலையாய வரிக் குறைப்புகளாலும் மொத்தக்கடன் உயரலாயிற்று.*

## அட்டவணை 11

**ஐக்கிய அமெரிக்கக் கூட்டாட்சியின் கடன்**
**1860 முதல் 1959 வரை சில குறிப்பிட்ட ஆண்டுகள்***
**(நடப்பு டாலர்களில்)**

| கீழே உள்ள நிதி ஆண்டின் முடிவில் | மொத்தக் கடன் (பில்லியன் டாலர்களில்) | மொத்தக் கடனின் தலா அளவு (டாலர்களில்) | மொத்தக் கடன், நாட்டின் மொத்த ஆக்கத்தின் சத வீதக் கணக்கில் |
|---|---|---|---|
| 1860 | 0·65 | 2·06 | 1·8 |
| 1870 | 2·4 | 61·06 | 36·2 |
| 1880 | 2·1 | 41·60 | 28·3 |
| 1890 | 1·1 | 17·80 | 9·3 |
| 1900 | 1·3 | 16·60 | 6·9 |
| 1910 | 1·1 | 12·41 | 3·7 |
| 1920 | 24·3 | 228·23 | 28·0 |
| 1930 | 16·2 | 131·51 | 17·8 |
| 1935 | 38·7 | 255·55 | 39·6 |
| 1940 | 43·0 | 325·23 | 40·6 |
| 1945 | 258·7 | 1,848·60 | 121·2 |
| 1950 | 257·4 | 1,696·68 | 90·3 |
| 1951 | 255·2 | 1,653·42 | 77·5 |
| 1952 | 259·1 | 1,650·06 | 74·6 |
| 1953 | 266·1 | 1,666·74 | 72·9 |
| 1954 | 271·3 | 1,670·14 | 74·8 |
| 1955 | 274·4 | 1,620·15 | 69·1 |
| 1956 | 272·8 | 1,662·64 | 65·1 |
| 1957 | 270·6 | 1,588·96 | 61·5 |
| 1958 | 276·4 | 1,587·92 | 63·4 |
| 1959 | 284·7 | 1,610·09 | — |

* *1860 முதல் 1956 வரை உள்ள மொத்தக் கடன், மொத்தக் கடனின் தலா அளவு ஆகியவற்றில் எண்கள்,* Annual Report of the Secretary of the Treasury 1956-ன் 16-வது *அட்டவணையிலிருந்து எடுக்கப்பட்டவை.*

1957–1959-க்கான எண்கள், ஜூன் 30-க்கான Daily Treasury Statement-லிருந்து எடுக்கப்பட்டு, அதே தேதிக்கான மக்கள் தொகைக் கணிப்பின் (census) மக்கள் தொகை மதிப்பீடுகளோடு இணைக்கப்பட்டவை.

நாட்டின் மொத்த ஆக்கம்பற்றிய எண்கள் கீழ்க்கண்ட மூலங்களிலிருந்து எடுக்கப்பட்டவை: 1860 முதல் 1910 வரை: டபிள்யூ. ஐ. கிங். (W. I. King) என்பாரின், 'Wealth and Income of the People of the United States', N. Y., Macmillan, 1915, பக்கம் 129. 1920 முதல் 1925 வரை: மேரி எஸ். பெயின்டர் (Mary S. Painter) என்பாரின் 'Estimates of Gross National Product.' 1919 முதல் 1928 வரை: 'Federal Reserve Bulletin', செப்டம்பர் 1945, பக்கம் 873. 1930 முதல் 1951 வரை: 'National Income Supplement to the Survey of Current Business', 1954. 1952 முதல் உள்ள ஆண்டுகளுக்கு: இந்த Surveyயின் ஜூலை மாத இதழ்கள்.

நாட்டின் மொத்த ஆக்கம் பற்றிய புள்ளி விவரங்கள் காலண்டர் ஆண்டு களுக்குத் தரப்பட்டுள்ளன. (நிதி ஆண்டின் முடிவு, காலண்டர் ஆண்டின் நடுப் பகுதியாக இருக்கிறது). நாட்டின் மொத்த ஆக்கம்பற்றிய புள்ளிவிவரங்கள் முழுமையாக ஒப்பிடத்தக்க முறையில் அமைந்தவை அல்ல என்பது வெளிப்படை. ஆகவே அவை முற்றிலும் பொருத்தமான ஒரு வரிசையாக அமையவில்லை. கிங் (King) நாட்டு வருமானத்தை, 'குடிமக்களுடைய முயற்சிகளின் மொத்த ஆக்கம் (total product)' என்று வரையறுத்துள்ளார். (பக்கம் 124) இந்த இலக்கணம், (definition) நாட்டின் மொத்த ஆக்கத்திற்குக் கிட்டத்தட்டப் பொருத்தமானதாக இருக்கிறது. வணிகத்துறை (Department of Commerce) 1947க்கு முன் நாட்டின் மொத்த ஆக்கத்திற்குத் தந்த இலக்கணத்தைப் பெயின்டர் (Painter), தன் மதிப்பீடுகளில் பயன்படுத்தியுள்ளார்.

மொத்தக் கடனின் அடுத்த உயர்வு 1958–59-ல் ஏற்பட்டது. அந்தச் சமயத்தில், பாதுகாப்புச் செலவின் விரிவாலும், வருவாய்களில் ஏற்பட்ட பின்னிறக்கக் காலக் குறைவாலும், மொத்தக் கடன் எந்தக் காலத்திலும் இல்லாத உச்ச அளவை—கிட்டத்தட்ட 285 பில்லியன் டாலர்—அடைந்து விட்டது.

மொத்தக் கடனில் ஏற்பட்டுள்ள உயர்வைப் போலவேதான் மொத்தக் கடனின் தலா அளவில் ஏற்பட்ட உயர்வும் இருக்கிறது. ஆனால் இந்த உயர்வானது மக்கள் தொகையின் வளர்ச்சியால் ஓரளவு தணிந்திருக்கிறது. 1860-க்கும் 1946-க்கும் இடையே மொத்தக் கடன் ஏறத்தாழ 4000 மடங்கு உயர்ந்திருக்கிறது. ஆனால், அதே கால அளவில் மொத்தக் கடனின் தலா அளவு, 1000 மடங்குக்கும் குறைவாகத்தான் உயர்ந்திருக்கிறது. மக்கள் தொகை வளர்ச்சியால் தலா கடனில் ஏற்பட்டுள்ள விளைவு,

1870-க்கும் 1910-க்கும் இடையே, சிறப்பாகக் குறிக்கத்தக்க அளவினதாக உள்ளது. இந்தக் காலப்பகுதியில் மக்கள்தொகை, ஏறத்தாழ இரண்டரை மடங்கு உயர்ந்திருக்கிறது.

அட்டவணை 11-ல், மொத்தக் கடனை நாட்டின் மொத்த ஆக்கத்தோடு தொடர்புபடுத்திக் காட்டும் கடைசிப்பத்தி, மொத்தக் கடன் உயர்வுபற்றிய அசல் புள்ளி விவரங்களை, மேலும் குறிப்பிடத்தக்க வகையில் மாற்றியமைத்திருக்கிறது. இப் பத்தியில் 1860-க்கும் 1946-க்கும் இடையே உள்ள மொத்த உயர்வானது எழுபத்திஏழு மடங்காக இருக்கிறது. நாட்டின் மொத்த ஆக்கத்திற்கும் மொத்தக் கடனுக்கும் உள்ள விகிதமானது (ratio), இரண்டாம் உலகப் போரைத் தொடர்ந்த ஆண்டுகளில் குறிப்பிடத்தக்க அளவில் குறைந்திருப்பதற்கு, அந்த ஆண்டுகளில், உற்பத்தியின் அளவிலும் விலை மட்டத்திலும் சிறப்பான உயர்வு ஏற்பட்டதே காரணமாகும். மொத்தக் கடனின் மூலதனத் தொகைக்கு (capital sum of the gross debt) அளவுக்கு மீறிய முக்யத்துவம் தரக்கூடிய ஆபத்து இருப்பதால், மொத்தக் கடனுக்கும் நாட்டின் மொத்த ஆக்கத்திற்கும் உள்ள விகிதத்தின் நிலையிலிருந்து பல்வேறு முடிவுகள் எடுப்பதை இந்த அளவோடு நாம் நிறுத்திக்கொள்வது நல்லது. என்றாலும், எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும், கடன் சிக்கல்கள்பற்றிய பொருளாதார ஆராய்ச்சிக்கு, மொத்தக் கடன் அல்லது மொத்தக் கடனின் தலா அளவைவிட, மொத்தக் கடனுக்கும் நாட்டின் மொத்த ஆக்கத்திற்கும் உள்ள விகிதமானது அதிக அளவில் பயன்படக்கூடியது என்னும் உண்மையை இச் சமயத்தில் சொல்லித்தானாகவேண்டும்.

**மாநில அரசாங்கக் கடனும் தல அரசாங்கக் கடனும் :** கீழே தரப்பட்டுள்ள 12ஆவது அட்டவணையில், மாநில அரசாங்கம், தல அரசாங்கம் ஆகியவற்றின் மொத்தக் கடன், சில குறிப்பிட்ட ஆண்டுகளில் எந்த அளவில் இருந்தது என்பது விளக்கப்பட்டுள்ளது. 11ஆவது அட்டவணையில், கூட்டரசாங்கக் கடனைப் பொறுத்த அளவில் மொத்தக் கடனின் தலா அளவும், நாட்டின் மொத்த ஆக்கத்தில் மொத்தக் கடனுக்கு உள்ள சதவீதமும் கணக்கிடப்பட்டதைப்போல, இந்த அட்டவணையில் கணக்கிடப்படவில்லை. இந்த அட்டவணையில் குறிப்பிடப்படுகிற அரசாங்கங்கள் ஒன்றிலிருந்து ஒன்று பெரிய அளவில் வேறுபட்டிருப்பதால், நாடு முழுவதற்கும் உரிய முறையில் அத்தகைய சராசரிகளைக் கணக்கிடுவதால் எத்தகைய பயனும் இல்லை என்பதாலேயே அத்தகைய கணக்கீடுகள் இங்கு செய்யப்படவில்லை.

## அட்டவணை 12

### மாநில, தல அரசாங்கங்களின் மொத்தக் கடன் (1902 முதல் 1958 வரை, சில குறிப்பிட்ட ஆண்டுகட்கு)*

| நிதி ஆண்டின் முடிவில் | மாநில அரசாங்கங்களின் கடன் (பில்லியன் டாலர்களில்) | தல அரசாங்கங்களின் கடன் (பில்லியன் டாலர்களில்) |
|---|---|---|
| 1902 | 230 | 1,877 |
| 1913 | 379 | 4,035 |
| 1922 | 1,131 | 8,976 |
| 1927 | 1,971 | 12,910 |
| 1932 | 2,832 | 16,373 |
| 1936 | 3,413 | 16,061 |
| 1940 | 3,590 | 16,693 |
| 1944 | 2,776 | 14,703 |
| 1948 | 3,676 | 14,980 |
| 1950 | 5,285 | 18,830 |
| 1952 | 6,874 | 23,226 |
| 1954 | 9,600 | 29,332 |
| 1956 | 12,890 | 36,271 |
| 1958 | 15,394 | 42,656 |

* 1902 முதல் 1952 வரை உள்ள எண்கள், சென்சஸ் பீரோவின் (Bureau of the Census) 'Historical Statistics in State and Local Government Finances', 1902–1953 என்னும் நூலின் 2ஆவது, 3ஆவது அட்டவணைகளிலிருந்தும், 1954 முதல் உள்ள எண்கள், சென்சஸ் பீரோவின் 'Summary of Governmental Finances in 1956 and 1958' என்பதிலிருந்தும் எடுக்கப்பட்டவை.

1950ஐத் தொடர்ந்த பத்தாண்டுகள் வரையில், மாநில, தல அரசாங்கங்களின் கடனில் ஏற்பட்ட உயர்வு, அட்டவணை 11-ல் தரப்பட்டுள்ள கூட்டரசாங்கத்தின் கடன் உயர்வைப்போல் நம் கவனத்தை ஈர்க்கத்தக்கதாக இல்லை. இருந்தபோதிலும், முந்திய இரு அரசாங்கங்களின் கடன் உயர்வின் தன்மை, கூட்டரசாங்கக் கடன் உயர்வின் தன்மையைப் போன்றதாகவே இருக்கிறது. ஆனால், இந்தப் பொது ஒப்புமைத் தன்மைக்கு (similarity) இரண்டு விதிவிலக்குகள் இருக்கின்றன. 1920 ஐத் தொடர்ந்த பத்து ஆண்டுகளில் மாநில, வட்டாரக் கடன்கள் விரைவாக உயர்ந்தன; ஆனால், கூட்டாட்சிக் கடன்களோ சிறிது சிறிதாகக் குறைந்து வந்தன. இது, முதல் விதிவிலக்கு. இரண்டாம் உலகப் போரின்போது மாநில, தல அரசுகள் தங்கள் கடனைக் குறைக்கலாயின. ஆனால் கூட்டாட்சிக் கடனோ கிடுகிடுவென

உயர்ந்தது. இது, இரண்டாவது விதிவிலக்கு; இதைப் பொறுத்த வரை விளக்கம் ஏதும் தேவையில்லை. ஏனென்றால், போர்க் கால வாணிப நடவடிக்கையின் விளைவாக மாநில, தல அரசுகளின் வருவாய்கள் உயர்ந்தாலும், கட்டுமானச் செலவுகளைச் (construction outlays) செய்யமுடியவில்லை.

ஆனால் முதல் விதிவிலக்கு ஏன் அப்படி அமைந்தது என்பதைப் பற்றி நாம் ஆராயத்தான் வேண்டும். இத்தகைய ஆராய்ச்சிக்குத் தேவையான முழுப் புள்ளி விவரங்கள் கிடைக்காதது வருந்தத் தக்கதுதான். ஆனால், பல்வேறு வகைப்பட்ட தல அரசுகள் செலுத்தவேண்டிய கடனில் பெரும் பகுதி, 30,000-க்கு மேற்பட்ட மக்கள் தொகையுடைய நகரங்களைச் சேர்ந்ததே. இத்தகைய நகரங்களின் கடன்பற்றிய புள்ளி விவரங்கள் கிடைக்கின்றன. இத்தகைய நகரங்கள் அனைத்துமாகச் செலுத்தவேண்டிய மொத்தக் கடன் (gross debt), 1930-ல் $9\frac{1}{3}$ பில்லியன் டாலராக இருந்தது.[5] இந்த மொத்தக் கடனில் கிட்டத்தட்ட 80 சதவீதம், நான்கு வகைப் பணிகளுக்கான கடனாக இருந்தது. அவையாவன :

| | |
|---|---|
| தண்ணீர் வழங்கும் அமைப்புகள் | 30·0% |
| பள்ளிக்கூடங்கள் | 17·5% |
| ஏனைய பொது ஊழியச் செயல் துணிவுகள் அனைத்தும் (All other Public Service Enterprises) | 15·5% |
| சாலைகள் (Roadways) | 15.1% |
| மொத்தம் | 78·1% |

எல்லா மாநில அரசாங்கங்களின் மொத்தக் கடன் (gross debt) 1930-ல் 2,350 மில்லியன் டாலராக இருந்தது. இக் கடன் தொகையில் 56 சதவீதம் நெடுஞ்சாலைப் பணிக்காகச் செலவிடப் பட்டது. வேறு எந்த ஒரு பணிக்காகவும் 10 சதவீதத்திற்கு மேற்பட்ட தொகை செலவிடப்படவில்லை.[6] 1922-ல் இருந்த எல்லா மாநிலக் கடன் தொகையின் மொத்த அளவைவிட, 1930-ல் நெடுஞ்சாலைக்காக மட்டும் செலவிடப்பட்ட கடன் தொகையான 1,317 மில்லியன் டாலர், அதிகத் தொகையாகும். இந்த உண்மையை 12ஆவது அட்டவணையிலிருந்து தெரிந்து கொள்ளலாம். 1920 ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளில் செலவு ஏறத்தாழ ஒரே நிலையில் இருக்க, வரியின் அளவு மட்டும் உயர்ந்த காரணத்தால், கூட்டரசாங்கக் கடன் குறைந்திருக்கிறது. ஆனால்,

அதே ஆண்டுகளில், மாநில, தல அரசாங்கங்கள் மூலதன வகையைச் சார்ந்த செலவுகளை ஏராளமாகச் செய்தாலும், அத்தகைய செலவுகட்கான நிதி பொதுவாகக் கடன் பத்திரங்களை வெளியிடுவதன் மூலமாகவே திரட்டப்படுவதாலும், அவற்றின் கடன்கள் உயர்ந்திருக்கின்றன.

**கூட்டாட்சிக் கடனின் அமைப்பு (Composition of the Federal Debt)**

கூட்டரசாங்கக் கடனை உருவாக்குகிற கடன் பத்திரங்களை மூன்று முறைகளில் பாகுபாடு செய்யலாம். முதல் வகைப் பாகுபாடு (classification), வட்டியுள்ள கடனை வட்டியில்லாக் கடனிலிருந்து பிரித்து அமைக்கிறது. இரண்டாவது வகைப் பாகுபாடு, பொது மக்கள் அனைவரும் வாங்கக்கூடிய கடன் பத்திரங்களைக் குறிப்பிட்ட சாரார் மட்டுமே வாங்கக்கூடிய சிறப்புப் பத்திரங்களிலிருந்து தனிப்படுத்துகிறது. மூன்றாவது வகைப் பாகுபாடு, தவணை முடிவுகளின் (maturities) அடிப்படையில்—அதாவது, கடன் வெளியீட்டுத் தேதிக்கும் அசலைத் திருப்பிச் செலுத்தவேண்டிய தேதிக்கும் இடையே உள்ள கால அளவின் அடிப்படையில் பல்வேறு கடன் பத்திரங்களைத் தனித்தனி வகுப்புகளாகப் பிரித்தமைக்கிறது.

பின் வரும் 13ஆவது அட்டவணையானது, முன்னர் சொல்லப் பட்ட மூன்று வகைப் பாகுபாடுகளையும் இணைத்து, 1959 ஜூன் 30-ல் இருந்தபடி, கூட்டாட்சிக் கடனின் அமைப்பை எடுத்துக் காட்டுகிறது. இந்த அட்டவணையை ஆதாரமாக வைத்துக் கொண்டு, இந்த மூவகைப் பாகுபாடுகளையும் இனி தனித்தனியே ஆராய்வோம்.

**வட்டியுள்ள கடனும் வட்டியில்லாக் கடனும் (Interest-bearing and Non-Interest-bearing Debt):** கடனின் வட்டியில்லா இனங்கள், அவற்றின் அளவை வைத்துப் பார்க்கும்போது, முக்கிய மானவையாகத் தென்படவில்லை. 13ஆவது அட்டவணையில் குறிப்பிட்டுள்ளதைப்போல அவை ஐந்து பிரிவுகளாக அமைந்துள்ளன. கடன் பத்திரங்கள் தவணை முடிவை அடையும் போது, அல்லது தவணை முடிவுக்கு முன்னரே செலுத்தப் படுவதற்காக அழைக்கப்படும்போது (called for payment prior to maturity),[7] வட்டி செலுத்தவேண்டிய நிலை முடிந்துவிடுகிறது. எந்த நேரத்திலும், அழைக்கப்பட்ட அல்லது தவணை முடிந்த கடன் பத்திரங்களில் சிலவற்றிற்குப் பணம் செலுத்தப்பட வேண்டிய நிலை இருக்கும். இந் நிலை, பத்திரங்களை இழந்துவிட்ட தாலோ அல்லது அவை அழிந்துவிட்டதாலோ, பத்திரங்களை வைத்திருப்போரின் அறியாமையாலோ அல்லது சுறுசுறுப்பு

## அட்டவணை 13

கூட்டாட்சிக் கடனின் அமைப்பு, ஜூன் 30, 1959 *
(Composition of the Federal Debt)

| கடன் பத்திரத்தின் வகையும் தன்மையும் (Class and type of security) | தவணை முடிவுகள் (வெளியீட்டுத் தேதியிலிருந்து) [ Maturities (from issue date) ] | வட்டி வீதங்கள் (%) (Interest rates) | செலுத்தவேண்டியவை (Outstanding) மில்லியன் டாலர்களில் |
|---|---|---|---|
| I. வட்டியுள்ள கடன் | | | |
| (அ) பொது வெளியீடுகள் (Public Issues) | | | |
| 1. பாண்டுகள் (Bonds) கருவூலப் பாண்டுகள் | 6 ஆண்டுகள் முதல் 40 ஆண்டுகள் வரை. | $2\frac{1}{8}$ முதல் 4 வரை | 84,803 |
| சேமிப்புப் பாண்டுகள் | 7 ஆண்டு 9 மாதங்கள் முதல் 12 ஆண்டுகள் வரை. | 2·5 முதல் 3·75 வரை | 50,503 |
| ஏனைய பாண்டுகள் | 12 ஆண்டுகள் முதல் 50 ஆண்டுகள் வரை. | 3 | 8,597 |
| | | மொத்தப் பாண்டுகள் | 1,43,904 |
| 2. நோட்டுகள் (Notes) | 13 மாதங்கள் முதல் 5 ஆண்டுகள் வரை. | $1\frac{1}{2}$ முதல் 4 வரை | 27,314 |
| 3. கடன் நிலைச் சான்றுகள் (Certificates of indebtedness) | $11\frac{1}{2}$ மாதங்கள் முதல் 12 மாதங்கள் வரை. | $1\frac{5}{8}$ முதல் 4 வரை | 33,843 |
| 4. கருவூல உண்டியல்கள் (Treasury Bills) | 91 நாட்கள் முதல் 340 நாட்கள் வரை. | 2·722 முதல் 3·835 வரை | 32,017 |
| | | பொது வெளியீடுகளின் மொத்தத் தொகை | 2,37,078 |

| | | | |
|---|---|---|---|
| (ஆ) சிறப்பு வெளியீடுகள் (Special issues) | ஓராண்டுக்குப்பின், கேட்கும் போது (On demand after one year) | 1·5 முதல் 4·0 வரை | 44,756 |
| | வட்டியுள்ள கடனின் மொத்தத் தொகை | | 2,81,833 |
| **II.** வட்டியில்லாக் கடன் | | | |
| (அ) தவணை முடிந்த கடன், இனி, வட்டி இல்லை. (Matured debt, interest ceased). | தவணை முடிந்தது. | — | 476 |
| (ஆ) சேமிப்புகளும் சிக்கன வில்லைகளும் (Savings and thrift stamps) | கேட்கும்போது | 0 | 54 |
| (இ) மிகை இலாப வரி திருப்பித் தரும் பத்திரங்கள் (Excess profits tax refund bonds) | கேட்கும்போது | 0 | 1 |
| (ஈ) பன்னாட்டுச் செலாவணி நிதி நோட்டுகள் (International monetary fund notes). | கேட்கும்போது | 0 | 1,979 |
| (உ) செலாவணி (Currency) | — | — | 362 |
| | வட்டியில்லாக் கடனின் மொத்தத் தொகை | | 2,873 |
| | மொத்தக் கடனின் மொத்தம் (Total gross debt) | | 2,84,706 |

* Daily Treasury Statement, ஜூன் 30, 1959, பக்கங்கள் 5 முதல் 9 வரையில் உள்ள 'Summary of Public Debt and Guaranteed Obligations' மற்றும் 'Statement of the Public Debt' என்னும் அட்டவணைகளிலிருந்து எடுக்கப்பட்டவை.

இன்மையாலோ ஏற்படலாம். தவணை முடிந்த கடன் பத்திரங்கள் மீட்கப்படவில்லை என்பதாலேயே, அப் பத்திரங்களின் அசல் தொகையைத் திருப்பிச் செலுத்தவேண்டிய பொறுப்பிலிருந்து அரசாங்கம் தப்பிவிட முடியாது. அத்தகைய அசல் தொகை, மொத்தக் கடனின் ஒரு பகுதியாகத் தொடர்ந்து இருக்கும். முதல் உலகப் போரின்போது சிக்கன வில்லைகளும் (thrift stamps), இரண்டாம் உலகப் போரின்போதும் அதன் பின்னரும் சேமிப்பு வில்லைகளும் (savings stamps), கடன் பத்திரங்களை வாங்க முடியாத சிறிய அளவில் சேமிக்க விரும்புபவர்களுக்கு விற்கப்பட்டன. இந்த வில்லைகளை வாங்குபவர், இவற்றைப் போதுமான அளவில் சேர்த்தபின், இவற்றைக் கொடுத்துவிட்டு இவற்றிற்கு ஈடான மதிப்புடைய கடன் பத்திரத்தை வாங்கிக்கொள்வார் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ஆனால், இந்த வில்லைகளுக்கு வட்டி கிடையாது. இரண்டாம் உலகப் போரின் மிகை இலாப வரி முறையில் இருந்த ஓர் ஏற்பாட்டின்படி, ஒரு கார்ப்பரேஷன், தான் செலுத்திய அவ் வரித் தொகையில் 10 சதவீத அளவுக்கு,. போரின் முடிவுக்குப் பிறகு செலுத்தப்படக்கூடிய வட்டியில்லாக் கடன் பத்திரங்களைப் பெற்றுக்கொள்ளலாம்.[8] இத்தகைய ஏற்பாட்டின் விளைவாக ஏற்பட்டவையே, மிகை இலாப வரியைத் திருப்பித்தரும் பத்திரங்கள் (excess profit tax refund bonds). பன்னாட்டுச் செலாவணி நிதி நோட்டுகள், அந் நிதியின் சொத்துகளுக்கு ஐக்கிய அமெரிக்கா செலுத்துகிற பங்குக் கட்டணத்தைக் (quota subscription) குறிக்கின்றன. இந்த நோட்டுகள், செலாவணித் தன்மை அற்றவை; வட்டியில்லாதவை; கேட்கும்போது செலுத்தத் தக்கவை. ‘செலாவணி’ இனமானது (the ‘currency’ item), செலாவணியை மாற்றிக் கொடுப்பதற்குக் கருவூலத்திற்குச் சட்டமுறைப்படியுள்ள பொறுப்பைக் குறிக்கிறது. இப் பொறுப்பு நாட்டின் பாங்கு நோட்டுகளையும் ‘பச்சைப் புறங்கள்’ (green backs) எனப்படும் நோட்டுகளையும் மாற்றித் தரவேண்டிய கடமையையே சுட்டிக் காட்டுகிறது. இப் பொறுப்பு, இக் காலத்தில் பெரும்பாலும் நடைமுறையில் இல்லை.

வட்டியுள்ள கடன் என்னும் தலைப்பின்கீழ் உள்ள தனித்தனி இனங்கள், செலுத்துகிற வட்டித் தொகை, வட்டியைச் செலுத்தும் முறை ஆகிய இரண்டிலும், தங்களுக்குள் வேறுபாடுகளை உடையனவாக இருக்கின்றன. 13ஆவது அட்டவணையில், ஒவ்வொரு வகைக் கடன் பத்திரங்களுக்கும் தரப்பட்டுள்ள வட்டி வீதங்களின் எண்கள், உச்ச அளவு வீதத்தையும், குறைந்த அளவு வீதத்தையுமே குறிக்கின்றன. எனவே, அவை, ஒவ்வொரு வகைக் கடன் பத்திரங்

களுக்கும் மிக அதிகமான அளவில் செலுத்தப்படுகிற வட்டிவீதம் எது என்பதைக் குறிக்கவில்லை.

சில குறிப்பிட்ட அண்மை ஆண்டுகளில், பல்வேறு கடன் பத்திர வகைகளில் ஒவ்வொன்றுக்கும், கருவூலத்தால் கணக்கிடப் பட்ட சராசரி வட்டி வீதம், கீழே உள்ள 14ஆவது அட்டவணையில் எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது.

## அட்டவணை 14

கடன் பத்திர வகைகளின் கணக்கிடப்பட்ட ஆண்டு வட்டி விதம்

1942 முதல் 1959 வரையுள்ள சில ஆண்டுகளுக்கு (ஜூன் 30-ல் இருந்தபடி)*

| | 1942 % | 1951 % | 1959 % |
|---|---|---|---|
| சேமிப்புப் பாண்டுகள் | 2·787 | 2·742 | 2·961 |
| அங்காடியில் விற்கப்படக்கூடிய கருவூலப் பாண்டுகள் (Marketable Treasury Bonds) | 2·680 | 2·327 | 2·619 |
| அங்காடியில் விற்கப்படக்கூடிய கருவூல நோட்டுகள் (Treasury Notes) | 1·092 | 1·399 | 3·304 |
| அங்காடியில் விற்கப்படக்கூடிய சான்றிதழ்கள் (Certificates) | ·564 | 1·875 | 2·842 |
| அங்காடியில் விற்கப்படக்கூடிய கருவூல உண்டியல்கள் (Treasury Bills) | ·360 | 1·569 | 3·317 |

* Annual Report of the Secretary of the Treasury, 1951, பக்கம் 814-லிருந்தும், Daily Treasury Statement, ஜூன் 30, 1959, பக்கம் 5-லிருந்தும் எடுக்கப்பட்டவை.

1942-லும், 1951-லும், குறுகிய தவணை முடிவுகளோடு குறைந்த வட்டி வீதங்கள் இணைந்திருப்பதையும், 1959-ல் ஏறக் குறைய அதற்கு நேர்மாறான நிலைமை இருப்பதையும் இந்த அட்டவணையிலிருந்து தெரிந்துகொள்ளலாம். எந்த வகைக் கடன்பத்திரங்களாக இருந்தாலும், அதன் சராசரி வட்டி வீதம், மாறக்கூடிய காரணிகள் (variable factors) மூன்றினுடைய பணி யாகும். செலுத்தவேண்டிய கடன் பத்திரங்களின் வயது, முதற்

காரணி ஆகும். பொதுவாகச் சொல்வதானால், 1930 ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளின் தொடக்கப் பகுதியிலிருந்து 1950 ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளின் நடுப் பகுதி வரை உள்ள காலம், குறைந்த வட்டி வீதங்களைப் பெற்றிருந்த காலம் என்றும், 1950ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளின் பிற்பாதியில் எல்லா வகை வட்டி வீதங்களும் மிக அதிக அளவில் உயர்ந்துவிட்டன என்றும் கூறலாம். அங்காடியில் விற்கக்கூடிய கருவூலப் பாண்டு குறிப்பிடத் தக்க பகுதி, குறைந்த வட்டி நிலவிய காலங்களில் வெளியிடப் பட்டதால், அப் பாண்டுகளின் வட்டி வீதங்களில் அவ்வப்போது ஏற்பட்ட மாறுதல், அவ் வீதங்களின் சராசரியில் விரைவில் காட்சி தரமாட்டா. ஆனால், குறுகிய காலக் கடன் பத்திரங்கள், முற்றிலும் அல்லது பெரும்பாலும் உயர்ந்த வட்டி நிலவிய காலங்களிலேயே வெளியிடப்பட்டதால், அப் பத்திரங்களின் வட்டி வீத மாறுதல்கள், அவ் வட்டிகளின் சராசரியில் விரைவில் இடம் பெற்றுவிடும்.

வட்டி வீதங்களின் எதிர்காலப் போக்கைப்பற்றிய அங்காடியின் மதிப்பீடே, இரண்டாவது காரணியாகும். 1942-ல் இருந்ததைப் போல் வட்டி வீதங்கள் பொதுவாகக் குறைந்த அளவில் இருக்கு மானால், இனி வரும் நாட்களில் அவை குறைவதற்கான வாய்ப்பை விடக் கூடுவதற்கான வாய்ப்பே அதிகமாக இருக்கும். நீண்டகாலப் பாண்டுகளை வாங்குபவர், தம் நிதிகளை நீண்டகாலத்திற்கு ஒரு நிலையான வட்டியுடன் (a fixed interest) பிணைத்துவிடுவதால், உயர்ந்த வட்டி வீதம் தேவையென்று வற்புறுத்துவது இயல்பே. ஏனென்றால், அப்போதுதான் அவர், தம் பாண்டுகளின் வாழ்நாளில் ஏற்படக்கூடிய வட்டி உயர்வை முதலாக்க முடியும் (capitalise the possibilty of rising interest rate).[9] இதற்கு மாறாக, உண்டியலை வாங்குபவர் (the bill-buyer), தம் பணத்தைத் தொண்ணூறு நாட்களுக்கு மட்டுமே கடனாகக் கொடுப்பதால், நீண்டகால அளவில் ஏற்படக்கூடிய வட்டி வீத மாறுதல்களைப்பற்றிக் கவலைப்பட மாட்டார். ஆகவே, அவர் ஏற்கக்கூடிய வட்டி வீதம், குறைந்த அளவில் உள்ள நடப்பு வட்டிவீதமாகவே இருக்கும். இந் நிலைகளுக்கு மாறாக, தற்போதுள்ள வட்டி வீதங்கள் உயர்ந்தவை யாகக் கருதப்பட்டு முதலீட்டின் வாழ்நாளுக்குள்ளாக அவ் வீதங்கள் குறையக்கூடிய நிலைமை உண்மையாகவே இருக்குமானால், நீண்ட காலக் கடன் பத்திரத்தை வாங்குபவர், குறுகிய காலக் கடனுக்குத் தற்போது தரப்படுகிற வட்டி வீதத்தைவிடக் குறைந்த வீதத்தை ஏற்றுக் கொள்ளக்கூடும். இந்தக் குறைவின் அளவானது, இந் நிலையில், எதிர் காலத்தில் குறையக்கூடிய வட்டி வீதத்தின் அளவையே குறிக்கிறது.

சராசரி வட்டி வீதத்தை மாற்றி அமைக்கக்கூடிய மூன்றாவது மாறி (variable), பல்வேறு காரணிகளின் ஒரு பெருந் தொகுப்பு ஆகும். இத் தொகுப்பை, கடன் பத்திரங்கள் வெளியிடப்படும் காலத்தில் பண அங்காடிகள், மூலதன அங்காடிகள் ஆகியவற்றில் காணப்படும் துறைநுணுக்க நிலை (technical condition) என்று குறிப்பிடலாம். மேலே விளக்கப்பட்ட காரணிகளோடுகூட, பல்வேறு தவணை முடிவுகளின்போது, கடன் வழங்குவதற்குக் கிடைக்கக்கூடிய நிதிகளின் பற்றாக்குறை அல்லது ஏராளத் தன்மையும் வட்டி வீதங்களை மாற்றியமைக்க முடியும். பற்றாக் குறையா அல்லது ஏராள நிலையா என்பது, (நிதிகளின்) அளிப்பு மற்றும் தேவை நிலைமைகளால் (supply and demand conditions), முடிவு செய்யப்படும். மையப் பாங்கின் பணத்துறைக் கொள்கை யால் (Central bank monetary policy), பாங்குகளின் சுயேச்சைக் காப்பிருப்புகளைப் (free bank reserves) பாதிப்பதன் மூலம் குறுகிய கால நிதிகள் கிடைக்கக்கூடிய அளவை நேரடியாகப் பாதிக்க முடியும். பொதுமக்களின் சேமிப்பு நடத்தையால், நீண்ட கால நிதிகள், குறுகிய கால நிதிகள் ஆகிய இரண்டும் கிடைக்கக்கூடிய அளவு பாதிக்கப்படும். அதோடு, நிதிகளுக்கான தேவையின் (demand) அளவாலும் வட்டி வீதங்களில் வேறுபாடு ஏற்படக்கூடும்.

அப்படி ஏற்படும் வேறுபாடு, நிதிகள் எவ்வளவு காலத்திற்குத் தேவைப்படும் என்பதையும் பொறுத்திருக்கிறது. எடுத்துக் காட்டாக, பொறிகளுக்கும் தளவாடங்களுக்கும் அதிகத் தேவை யுள்ள ஒரு பொருளாதார வீக்கத்தின்போது நீண்ட கால நிதிகள் தேவைப்படும். அதன் விளைவாக நீண்டகால மூலதன அங்காடியில் (long term capital market) நிதிப்பற்றாக்குறை ஏற்படும். இந் நிலையில் அரசாங்கம் நீண்டகாலக் கடன்களை வாங்க விரும்பினால், அதிக வட்டி வீதங்களைச் செலுத்துவதன் மூலமாக, கிடைத்தற்கு அரிய நிதிகளைப் (scarce funds) பெறுவதற்காக அது போட்டியிட வேண்டிய இன்றியமையாமை ஏற்படுகிறது. எனவே, பல்வேறு வகையான கடன்பத்திரங்களுக்கான சராசரி வட்டி வீதங்கள், அந்தப் பத்திரங்கள் வெளியிடப்படுகிறபோது பண அங்காடியிலும் மூலதன அங்காடியிலும் தற்காலிகமாக இருக்கிற நிலைமைகளை ஓரளவுக்குப் பிரதிபலிப்பனவாக இருக்கின்றன.

பலதிறப்பட்ட அரசாங்கக் கடன்பத்திரங்களின் பல்வேறு வட்டிவீதங்கள், பகுத்தறிவுக்கு ஒத்த காரணங்களால் மட்டுமே, அதாவது அந் நிலைகளைப் பயன்படுத்துவதால் தற்போது ஏற்படுகிற விளைவுகள், எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய விளைவுகள் ஆகிய காரணங்களால் மட்டுமே உருவாக்கப்படுகின்றன என்று கூற

முற்படுவது முறையாகாது. ஏனென்றால், அங்காடியில், இந்தக் கடன் பத்திரங்களைப் பாதிக்கக்கூடிய துறைநுணுக்கக் காரணிகளும் நிறுவனக்காரணிகளும் (technical and institutional factors) பல இருக்கின்றன. முதலீடு செய்தற்குரிய நிதிகளை ஏராளமான அளவில் பெற்றுள்ள சில வகை நிதி நிறுவனங்களால் சில வகைக் கடன் பத்திரங்களை வாங்க முடியும்; சில வகைப் பத்திரங்களை வாங்க முடியாது. அவற்றால் வாங்கக்கூடிய கடன்பத்திரங்களுக்கு அவற்றிடமிருந்து எழும் தேவை மிகுதியாக இருப்பதால், அப் பத்திரங்களின் வட்டிவீதங்கள் குறைவாக இருக்கக்கூடும். வட்டி வீதங்களை மாற்றக்கூடிய மற்றொரு காரணி, மையப் பாங்கின் கொள்கையாகும். இரண்டாம் உலகப் போரின்போது மிகக் குறுகிய காலக் கடன்பத்திரங்களுக்கான வட்டிவீதங்கள் மிகக் குறைவாக இருந்ததற்குக் காரணம், ஐக்கிய ரிசர்வ் பாங்கு (Federal Reserve Bank), அந்தப் பத்திரங்கள்பற்றிய அங்காடியின் வட்டி வீதங்களை ஒரே நிலையில் இறுத்தி இருந்ததாகும் (pegging). போருக்குப் பின் அந்த இறுத்தங்கள் (pegs) நீக்கப்பட்டபோது குறுகியகாலக் கடன்பத்திரங்கள் மீதான சராசரி வட்டிவீதங்கள் குறிப்பிடத்தக்க அளவில் உயர்ந்திருப்பதை 14ஆவது அட்டவணையிலிருந்து அறியலாம். இந்த நடைமுறைக் காரணிகள் பலவற்றின் விளைவாக, 1951-ல் கருவூல நோட்டுகளுக்கான சராசரி வட்டி வீதங்கள், குறுகியகாலக் கடன்பத்திரங்களுக்கான வட்டிவீதங்களை விடக் குறைவாக அமைந்துவிட்டன. கருவூலப் பாண்டுகளின் (treasury bonds) வெளியீடுகளிற் பலவற்றை வாங்கமுடியாதபடி வாணிபப் பாங்குகள் தடுக்கப்பட்டுவிட்டன. ஆகவே, நீண்டகால அரசாங்கக் கடன் பத்திரங்களில் முதலீடு செய்யப்படுவதற்குரிய பாங்கு நிதிகள், கருவூல நோட்டுகளிலேயே முதலீடு செய்யப்படலாயின. அதே சமயத்தில், அண்மையில் வெளியிடப்பட்ட பல கருவூல நோட்டுகள் ஓராண்டைவிடச் சிறிதளவே உயர்ந்த காலத் தவணை முடிவை உடையனவாக இருந்தமையால், குறுகிய கால நிதிகளைக்கொண்டு அவற்றை வாங்கும் போக்கு வளரலாயிற்று. பொதுவாகக் கூறுவதானால், பல்வேறு கடன்பத்திரங்களின் வட்டி வீதங்கள், முதலீடு செய்வோரால் ஒப்புக்கொள்ளக்கூடியவை என்று கருவூலத்தால் மதிப்பிடப்பட்ட வீதங்களைக் குறிக்கின்றன. முதலீட்டு அங்காடிகளில் குறிப்பிட்ட நேரங்களில் இருக்கக்கூடிய குறிப்பிட்ட நிலைமைகள் காரணமாக வழக்கத்திற்கு மாறான சில வட்டிவீதங்கள் சில சமயங்களில் ஏற்படக்கூடும். ஆகவே எல்லாச் சமயங்களிலும் வட்டிவீதங்களின் போக்கு இத்தகையதுதான் என்று பொதுமைகளை (generalisations) வகுத்துவிடுவது, ஆபத்தான முறையாகும்.

எல்லாவகை அரசாங்கக் கடன்களுக்கும் உரிய வட்டிவீதங்கள், பிறகடன்களுக்கான வட்டி வீதங்களைவிடக் குறைவாக இருப்பதன் தலையாய காரணம், அத்தகைய முதலீடுகள் பாதுகாப்பானவை என்பதே. வரிவிதிக்கும் அதிகாரத்தின் பின்னால் இருந்துகொண்டு அதற்கு வலுவூட்டுகிற நாட்டின் பெருவளங்கள், அரசாங்கம் நிதித் துறையில்நேர்மையாக நடந்துவந்திருப்பதற்கான சான்றுகள் ஆகிய இவற்றின் காரணமாக, அரசாங்கக் கடன்பத்திரங்கள் மிகப் பாதுகாப்பான முதலீடுகளாக அமைந்துள்ளன.

இருவகை முறைகளில் வட்டி செலுத்தப்படுகிறது. முதல்வகை, வெட்டுச்சீட்டு முறை (the coupon system). இந்த முறையில், கடன் பத்திரத்தை வைத்திருப்பவர், வட்டியைப் பெறுவதற்கு உரியது என்று குறிப்பிடப்பட்ட நாளில், ஒரு பாங்கில் தம் வெட்டுச் சீட்டுகளைக் (coupons) கொடுத்துவிட்டு, தம் வட்டியைப் பெற்றுக் கொள்வார். பெரும்பாலான பாண்டுகள், நோட்டுகள், மற்றும் சான்றிதழ்களுக்கான வட்டி இந்த முறையில்தான் தரப்படுகிறது. ஆறு மாதங்கட்கு ஒரு முறை இவ்வாறு வட்டித் தொகை செலுத்தப் படுகிறது. இரண்டாவது வகை, கழிவுமுறை (discount system) ஆகும். இந்த முறையில், கடனைத் திருப்பிக்கொடுப்பதற்கான தொகையில் திரண்டுள்ள வட்டியும் (accumulated interest) சேர்க்கப்பட்டுவிடுகிறது. தவணை முடிவின்போது (அல்லது அதற்கு முன்னதாக) கடன்பத்திரத்தின் தொகை திருப்பித் தரப்படும்போது, அந்தத் தொகையில், அசல், வட்டி ஆகிய இரண்டும் இணைந்திருக்கின்றன. இத்தகைய கடன்பத்திரங்கள் 'கழிவு அடிப்படையில்' விற்கப்படுகின்றன. அதாவது, கடன் பத்திரங்களை வாங்கும்போது அவற்றை வாங்குபவர், அப் பத்திரங் களின் காலம் முழுவதற்குமான வட்டியை அவற்றின் அசலிலிருந்து கழித்துக்கொண்டு, மிச்சத் தொகையையே கருவூலத்திற்குத் தருகிறார். இந்த முறையில் வட்டியைச் செலுத்தல், சேமிப்புப் பாண்டுகள், கருவூல உண்டியல்கள் ஆகியவற்றின் முறையை அப்படியே ஒத்திருக்கிறது. விற்பனை விலை, தவணை முடியும் தேதி, தவணை முடிந்தபின் உள்ள மதிப்பு (matured value) ஆகியவற்றை நிர்ணயிப்பதன்மூலம், கருவூலமானது, சேமிப்புப் பாண்டுகளுக்கான வட்டிவீதத்தை (கழிவு வீதத்தை) நிர்ணயிக்கிறது. எடுத்துக் காட்டாக, 18·75 டாலருக்கு வெளியிடப்படுகிற சிறிய E வரிசை சேமிப்புப் பாண்டுகள் $7\frac{3}{4}$ ஆண்டுகளின் முடிவில், அவற்றை வைத்திருப்பவருக்கு 25 டாலரைச் செலுத்துகின்றன. இப் பாண்டுகளின் விற்பனை விலைக்கும் தவணை முடிவு மதிப்புக்கும் உள்ள வேறுபாடு, $3\frac{3}{4}$ சத வீதக் கூட்டு வட்டி என்று காட்டுகிறது. கருவூல உண்டியல்களை விற்கும்போது, கருவூலமானது, போட்டியின்

அடிப்படையில் அமைந்த ஏலங்களை (bids on competitive basis) அழைக்கிறது. இந்த ஏலங்கள், உண்டியல்களின் அதிகாரபூர்வமான மதிப்பின் (par value) ஒவ்வொரு நூறு டாலருக்கும் வாங்குபவர்கள் கொடுக்க விழைகிற விலைகளைக் குறிக்கின்றன. இந்த முறையில், ஏல விலைக்கும் அதிகார பூர்வமான மதிப்புக்கும் உள்ள உறவின் தன்மையே கழிவின் (வட்டியின்) வீதத்தை நிர்ணயிப்பதால், அந்த வீதம், பத்திரத்தை வாங்குபவரால் நிர்ணயிக்கப்படுகிறதே தவிரக் கருவூலத்தால் அல்ல. ஆனால் அந்த ஏலங்களை ஏற்கிற அல்லது தள்ளிவிடுகிற உரிமை கருவூலத்திற்கு இருக்கிறது. கருவூலத்திற்கு இந்த முறையால் ஏற்படுகிற பெரிய நன்மை, மிகக் குறைந்தவட்டி வீதங்களில் அது நிதிகளைப் பெற முடிகிறது என்பதே.[10]

பொது வெளியீடுகளும் சிறப்பு வெளியீடுகளும் (Public and Special Issues): கூட்டாட்சிக் கடன் பத்திரங்களின் பொது வெளியீடுகள், தனியாட்கள், வாணிபங்கள் மற்றும் பாங்குகள் ஆகியோரால் வாங்கப்படுவதற்குக் கிடைக்கின்றன. அவற்றை வாங்குவதற்கு வரையறைகள் (limitations) விதிக்கப்பட்டிருக்கலாம். எடுத்துக்காட்டாக, ஓர் ஆண்டில் வாங்கக்கூடிய சேமிப்புப் பாண்டுகளின் உச்ச அளவு நிர்ணயிக்கப்பட்டிருக்கலாம். சிறப்பு வெளியீடுகள் என்பன, அரசாங்கப் பொறுப்பு நிதிகளை (Trust funds) முதலீடு செய்வதற்காக அல்லது குறிப்பிட்ட குழுவினருக்குத் தள்ளிப் போட்ட செலுத்தல்களைத் (deferred payments) தருவதற்காகக் கருவூலத்தால் வெளியிடப்படும் கடன் பத்திரங்களாகும். பாண்டுகளின் சிறப்பு வெளியீடுகள், கருவூல நோட்டுகள், நாட்டு ஊழிய வாழ்க்கை ஈட்டுறுதி நிதி (National Service Life Insurance Fund), முதிய வயது மற்றும் எஞ்சியிருப்போர்க்கான இன்சூரன்ஸ் நிதி, இரயில்வே கம்பெனி பதவி ஓய்வு நிதி (The Railroad Retirement Fund), சிவில் பணியாளர் பதவி ஓய்வு நிதி (The Civil Service Retirement Fund), வேலையின்மைப் பொறுப்பு நிதி (The Unemployment Trust Fund) ஆகிய நிதிகளின் காப்பிருப்புகளின் (reserves) முதலீட்டுச் சான்றிதழ்கள், பாண்டுகளின் சிறப்பு வெளியீடுகள், கருவூல நோட்டுகள் ஆகியவை முதலில் கூறப்பட்ட சிறப்பு வெளியீடுகளுக்கான எடுத்துக்காட்டுகள் ஆகும். முதல் உலகப் போரின் வீரர்களுக்கு போனஸாக அளிக்க 1936-ல் வெளியிட்ட சரிசெய்யப்பட்ட ஊழிய இழப்பீட்டுக் கடன் பத்திரங்கள் (adjusted service compensation securities), இரண்டாவது கூறப்பட்ட சிறப்பு வெளியீட்டுக்கான எடுத்துக்காட்டு ஆகும். இந்தக் கடன் பத்திரங்களின் தொகையைப் போர் வீரர்கள் எந்தச் சமயத்திலும் பெற்றுக்கொள்ளலாம். ஆனால், அவற்றின் வட்டி,

1946-ல் அவை தவணை முடிவை அடையும் வரை, திரண்டு வரும். இரண்டாம் உலகப் போரின் வீரர்களுக்கு 1947-ல் வட்டியுள்ள கடன் பத்திரங்களைக் கொடுப்பதன்மூலம் வேலை முடிந்த விடுமுறைச் செலுத்தல்களைத் தந்திருப்பது (payment of terminal leave), சிறப்பு வெளியீட்டுக்கான அண்மைக் கால எடுத்துக்காட்டு ஆகும்.

சிறப்பு வெளியீடுகளில் குறிப்பிடத்தக்க இரண்டு நிலைமைகள் அடங்கியிருக்கின்றன. சிறப்பு வெளியீடு ஒவ்வொன்றும் காப்பிருப்பு நிதிகளின் முதலீடாகவோ அல்லது போர் வீரர்களின் போனஸ் செலுத்தலாகவோ இருக்கிறது என்பது முதல் நிலைமை. காப்பிருப்பு நிதிகளின் முதலீட்டைப் பொறுத்த அளவில், வட்டி வீதமானது, ஓய்வு பெறும் திட்டத்தின்கீழ் அல்லது வேறு திட்டத்தின்கீழ் ஏற்படும் ஆக்கவரி தேவைகளாலேயே (actuarial requirements) நிர்ணயிக்கப்படுகிறது. இந்தத் தொகை, வட்டி என்ற பெயரால் அழைக்கப்பட்டாலும், அழைக்கப்படா விட்டாலும், கருவூலமானது இந்தத் தொகையைக் கொடுத்தாக வேண்டிய நிலையில் இருக்கிறது. ஆகவே இத்தகைய நிலைமைகளில் வட்டி வீதங்களை நிர்ணயிப்பதில் கவனிக்க வேண்டிய தலையாய கருத்து, குறிப்பிட்ட திட்டம் கடனைத் தீர்க்கும் ஆற்றல் உள்ளதுதானு என்பதே தவிர, நிதிகளை மிகக் குறைந்த செலவில் பெறுவது எப்படி என்னும் இயல்பான ஆர்வம் அல்ல. போர் வீரர்களின் போனஸ் செலுத்தலைப் பொறுத்தவரை, உயர்ந்த வட்டி வீதம் நிர்ணயிக்கப்பட்டதன் காரணம், போர் வீரர்கள் தங்கள் கடன் பத்திரங்களை உடனடியாக ரொக்கமாக்கிக் கொள்ளாமல், அவற்றின் தவணைக் காலம் முடியும் வரையில் வைத்திருக்கும் நிலையை உருவாக்குவதற்குத்தான்.

முதல் நிலைமையோடு தொடர்புடைய இரண்டாவது நிலைமை, சிறப்பு வெளியீடுகள், கருவூலத்தால் செலுத்தப்பட வேண்டிய பொறுப்புகளாக (கடன்களாக) இருந்தாலும், பெரும்பாலும் அவை, கூட்டரசாங்கத்தின் ஏனைய ஏஜன்சிகளின் சொத்துகளாக இருக்கின்றன என்பதே. தற்போதைய ஏற்பாடுகளில் தீவிரமான மாறுதல் ஏதேனும் செய்யப்பட்டாலொழிய, சிறப்புப் பொறுப்பு நிதிகள் முதலீடு செய்யப்படுவதற்குரிய கடன் பத்திரங்களைக் கருவூலம் எப்போதும் வெளியிட்டபடிதான் இருக்கவேண்டி யுள்ளது. நிதியாண்டு 1959-ன் இறுதியில் இத்தகைய நிதிகளின் மொத்தத் தொகை 44 பில்லியன் டாலராக இருந்தது. இத்தகைய நிதிகள் யாவும், எப்போதும் உயர்ந்துகொண்டே இருக்கும் என்று கூறிவிட முடியாது. ஆனல் முதிய வயது மற்றும் எஞ்சி யிருப்போர்க்கான நிதி, அதன் தற்போதைய தொகையாகிய

17 பில்லியன் டாலரைவிட இன்னும் அதிகமாக உயரக்கூடும். எந்த அளவு உயரும் என்பது, அசல் காப்பிருப்புத் திட்டம் (the original reserve plan) எந்த அளவு மாற்றப்படுகிறது என்பதைப் பொறுத்திருக்கிறது. அரசாங்கக் காப்பிருப்புத் திட்டங்களுக்கு முதலீட்டு வாய்ப்புகள் கிடைக்காத நெருக்கடி ஏற்படா வகையில், தற்போதைக்குக் குறிப்பிடத்தக்க அளவுக்குக் கடனைக் குறைக்க முடியும் என்றாலும், தொடர்ந்து கடனைக் குறைத்துக்கொண்டே யிருந்தால் அத்தகைய நெருக்கடி நிலை ஏற்படலாம்.[11]

தவணை முடிவுகள் (Maturities) : 13ஆவது அட்டவணையில், பொது வெளியீடுகள் என்னும் தலைப்பின்கீழ் நான்கு வகையான கடன் பத்திரங்கள் தரப்பட்டுள்ளன. அவை நான்கிற்கும் இடையே உள்ள வேறுபாடு, பெரும்பாலும் அவற்றின் தவணை முடிவுகளில் உள்ள வேறுபாடே. தவணை முடிவுக்கான கால அளவின் வரிசைப்படி அந்த நான்கு வகைக் கடன் பத்திரங்கள் (bonds), நோட்டுகள், கடன் சான்றிதழ்கள், உண்டியல்கள் என்பவையாகும். பண அங்காடி, மூலதனஅங்காடி ஆகியவற்றின் எந்தப் பகுதியினரும் கடன் பத்திரங்களில் முதலீடு செய்வதற்கு வசதியாக இருப்பதற்காகவும், தனக்குச்சாதகமான கடன் வாங்கும் வீதங்களில் கடன் வாங்குவதற்காகவும், அரசாங்கக் கடன் முழுவதற்குமாக ஒரு பொருத்தமான தவணை முடிவுப் பட்டியலை (maturity schedule) உருவாக்குவதற்காகவுமே, கருவூலத்தால், இந்த நான்கு வகைக் கடன் பத்திரங்கள் ஏற்பாடு செய்யப் பட்டுள்ளன.

பாண்டுகளின் (bonds) தவணை முடிவுத் தேதிகள், ஆறு ஆண்டுகளிலிருந்து ஐம்பது ஆண்டுகள் வரையில், விரிவான முறை யில் மாறுபடுகின்றன. ஆனால் இந்தத் தவணை முடிவுத் தேதிகளை மட்டும் கவனிப்பதால் பயனுள்ள தகவல் எதையும் நாம் தெரிந்துகொள்ள முடியாது. நிதியாண்டு 1959-ன் இறுதியில் செலுத்த வேண்டியிருந்த பொதுக் கடனில், பாண்டுகளின் மொத்தத் தொகையாகிய 144 பில்லியன் டாலரில், பாதிக்கு மேற்பட்ட தொகைக்கு உரியவை (55 சத வீதம்), பத்து ஆண்டுகள் அல்லது அதற்குக் குறைந்த கால அளவுத் தவணை முடிவு உடையனவாக முதலில் வெளியிடப்பட்டவை; எட்டில் ஒரு பங்கு தொகைக்கு உரிய பாண்டுகள் (13 சதவீதம்), பத்து ஆண்டு களுக்கும் இருபது ஆண்டுகளுக்கும் இடைப்பட்ட கால அளவுத் தவணை முடிவு உடையனவாகவும், ஏறத்தாழ மூன்றில் ஒரு பங்கு தொகைக்கு உரிய பாண்டுகள் (32 சதவீதம்) இருபது ஆண்டு களுக்கு மேற்பட்ட தவணை முடிவு உடையனவாகவும், வெளி யிடப்பட்டவை. நாம் இங்கே குறிப்பிட்டுள்ள கால அளவுகள்,

பாண்டுகள் வெளியிடப்பட்ட தேதியிலிருந்து தவணை முடிவுத் தேதி வரையுள்ள காலத்தைக் குறிக்கின்றனவே தவிர 1959 ஜூன் 30-லிருந்து தவணை முடிவுத் தேதி வரையுள்ள காலத்தை அல்ல என்பதைக் கவனத்தில்வைத்துக் கொள்வது நல்லது. பத்தாண்டுக் காலம் அல்லது அதற்குக் குறைந்த காலப் பாண்டுகளில் பாதிக்கு மேற்பட்டவை, சேமிப்புப் பாண்டுகள் (savings bonds) என்னும் வகையைச் சேர்ந்தவையே.[12]

கூட்டரசாங்கத்தால் வெளியிடப்பட்டுள்ள பாண்டுகள் அந்த அரசாங்கத்தின் நீண்ட காலக் கடனைக் குறிப்பனவாகும். பாண்டுகளுக்கு அடுத்தபடியாகக் கருவூல நோட்டுகளே மிக நீண்ட தவணை முடிவுக் காலத்தை உடையனவாகும். நிதியாண்டு 1959-ன் இறுதியில் இருந்த கருவூல நோட்டுகளின் தவணை முடிவுக் காலம், ஓராண்டுக்குச் சற்று உயர்ந்த காலத்திலிருந்து ஐந்து ஆண்டுகள் வரையில் அமைந்திருந்தது. கருவூல நோட்டுகளில் பாதி எண்ணிக்கை உடையவை, ஐந்தாண்டுத் தவணை முடிவை உடையனவாக இருந்தன. ஆனால், இந்த வகைக் கருவூல நோட்டுகள் ஒவ்வொன்றின் பண மதிப்பும் குறைவானது; இவை அனைத்தினுடைய தவணை முடிவு மதிப்பும், மொத்தக் கருவூல நோட்டுகளின் மதிப்பில் ஏறத்தாழ ஐந்தில் ஒரு பங்குதான் இருக்கும். 1959-ன் இறுதியில் இருந்த பொதுக் கடனில் கடன் சான்றிதழ்களைப் (certificates of indebtedness) பொறுத்தவரை, அவை யாவுமே, வெளியிடப்பட்ட தேதியிலிருந்து ஏறத்தாழ ஓராண்டுக் காலத் தவணை முடிவு உடையனவாகவே இருந்தன. கருவூல உண்டியல்கள் (treasury bills), கூட்டரசாங்கத்தின் மிகக் குறுகிய காலக் கடன்களாகும். அண்மைக் காலம் வரையில் இக் கருவூல உண்டியல்கள் யாவும், 91 நாட்கள் என்னும் ஒரே தவணை முடிவை உடையனவாக இருந்தன. ஆனால், 1959 ஜூன் 30-ல் செலுத்தவேண்டியிருந்த கருவூல உண்டியல்களில் ஒரு வகை, பதினேரு மாதமும், மற்றொரு வகை ஒன்பதரை மாதமும், இரண்டு வகைகள் ஒன்பது மாதமும் தவணை முடிவு உடையனவாக இருந்தன. [இவை, வரி எதிர்நோக்கு வரிசைகள் (tax anticipation series) ஆகும். இவற்றின் தவணை முடிவுகள், கார்ப்பரேஷன் வரியைச் செலுத்தவேண்டிய தேதியாக வரும்படி அமைக்கப் பட்டவை.] கருவூல உண்டியல்களின் பிற வகைகளில், பாதி 182 நாள் தவணை முடிவும், ஏனையவை 91 நாள் தவணை முடிவும் உடையவை. கருவூல உண்டியல்களின் வழக்கமான 91 நாட்களுக்கும், கடன் சான்றிதழ்களின் மிகக் குறுகிய கால வகைகளின் தவணை முடிவுக்கும் இடையே உள்ள காலத்தைத் தவணை முடிவாகக் கொண்ட கடன் பத்திரங்கள் தேவை என்னும் எண்ணத்தின் விளைவாகவே, கருவூல உண்டியல்களின் தவணை

முடிவு, அண்மைக் காலத்தில் இவ்வாறு நீட்டப்பட்டிருக்கிறது. இருந்த போதிலும், பொதுக் கடனில் கருவூல உண்டியல்களாக உள்ள பகுதி, ஆண்டுக்கு இரண்டு முறைகளிலிருந்து நான்கு முறைகள்வரை புதுப்பிக்கப்பட வேண்டியிருக்கிறது [ஈடு செய்யப் பட வேண்டியிருக்கிறது (to be replaced)].

கூட்டரசாங்கத்தின் கடன் மிகப் பெரிதாகவும், பல்வேறு வகைகள் கொண்டதாகவும் இருப்பதால், அதன் தவணை முடிவுக் காலத்தை நிர்ணயிப்பது, எளிய செயலாக இருப்பதில்லை. நிதியாண்டு 1958-ல் வாங்கப்பட்ட கடனின் தொகையிலிருந்து, தவணை முடிவுற்ற கடனை ஈடு செய்வதற்கான நடவடிக்கைகள் எத்துணைப் பெரிய அளவுடையன என்பதை நாம் உணர்ந்து கொள்ளலாம். 1958, வரவு செலவுத் திட்டத்தில் சிறிய பற்றுக் குறையைப் (2·8 பில்லியன் டாலர்) பெற்றிருந்த ஆண்டாகும். எனவே, அந்த ஆண்டில் வாங்கப்பட்ட கடன், பெரும்பாலும் தவணை முடிவுற்ற கடனை ஈடு செய்வதற்காக வாங்கப்பட்ட புதுக் கடனாக இருக்குமே தவிர கடனில் நிகர உயர்வை ஏற்படுத்துவ தாக இருக்காது. அந்த ஆண்டில் பொது வெளியீடுகளின் வாயிலாக எழுப்பப்பட்ட கடன் தொகைகள் பின்வருமாறு இருந்தன :[13]

| | |
|---|---|
| உண்டியல்கள் | 94·0 பில்லியன் டாலர் |
| சான்றிதழ்கள் | 32·0 ,, ,, |
| நோட்டுகள் | 7·1 ,, ,, |
| கருவூலப் பாண்டுகள் | 16·9 ,, ,, |
| சேமிப்புப் பாண்டுகள் | 4·7 ,, ,, |
| மொத்தப் பொது வெளியீடுகள் | 154·7 பில்லியன் டாலர் |

இந்தத் தொகையானது, 1958-ன் முடிவில் செலுத்த வேண்டியிருந்த பொது வெளியீடுகளின் தொகையில் 68 சதவீத மாகவும், வட்டியுள்ள கடனின் மொத்தத் தொகையில் 56 சதவீத மாகவும் இருந்தது. அரசாங்கக் கடனானது உண்டியல்கள் மூலம் எழுப்பப்படுவது குறைவாகவும், நீண்ட காலக் கடன் பத்திரங்கள் மூலம் எழுப்பப்படுவது மிகுதியாகவும் இருக்கும் வகையில் தவணை முடிவுகள் மாற்றி அமைக்கப்பட்டால், பண அங்காடியில் ஆண்டு தோறும் அரசாங்கத்திடமிருந்து ஏற்படும் கடன் தேவை குறைந்து விடும். மேலே தரப்பட்டுள்ள எண்களை, ஆண்டின் முடிவில் ஒவ்வொரு வகைக் கடன் பத்திரத்திரத்திலும் செலுத்த வேண்டி யுள்ள மொத்தத் தொகையோடு ஒப்பிட்டால், ஆண்டின் விற்பனைப் புரள்வு வீதங்கள் (rates of annual turnover) பின் வருமாறு இருப்பதை அறியலாம்.[14]

| | 1958-ல் வெளியிடப்பட்டவை | 1958-முடிவில் செலுத்த வேண்டியவை | ஆண்டின் சராசரி விற்பனைப் புரள்வு |
|---|---|---|---|
| உண்டியல்கள் | 94·0 பில்லியன் டாலர் | 22·4 பில்லியன் டாலர் | 4·2 |
| சான்றிதழ்கள் | 32·0 ,, | 32·9 ,, | ·97 |
| நோட்டுகள் | 7·1 ,, | 20·4 ,, | ·35 |
| கருவூலப் பாண்டுகள் | 16·9 ,, | 90·9 ,, | ·19 |
| சேமிப்புப் பாண்டுகள் | 4·7 ,, | 52·0 ,, | ·09 |

இங்கே தெரிவிக்கப்பட்டுள்ள உண்மைகளை நினைவில் நிறுத்திப் பார்த்தால், அங்காடியில் கருவூலக் கடன் பத்திரங்களுக்கு வசதி மிக்க நிலைமை இருக்க வேண்டுமென்று கருவூலம் (பணத்துறை நிர்வாகிகளும் பொதுமக்களும் கூட) விரும்புவதில் வியப்பு ஏதும் இருக்க முடியாது.

**கடனைத் திருப்பிக் கொடுத்தல்**

குறிப்பிட்ட கடன் வெளியீடுகளைத் திருப்பிக் கொடுத்தல், கடனில் நிகரக் குறைவை ஏற்படுத்தல் ஆகிய இரண்டைப் பற்றியும் இந்தப் பகுதியில் நாம் பயில முற்பட்டுள்ளோம். குறிப்பிட்ட கடன் வெளியீடுகள் திருப்பிக் கொடுக்கப்பட்டு, அவற்றை ஈடுசெய்யும் புதுக்கடன்கள் எழுப்பப்படாமல் இருந்தால், கடனில் நிகரக் குறைவு ஏற்படும் என்பது உண்மையே. ஆனால் தற்காலக் கடன் நிர்வாகத்தில் (debt management), கடனில் நிகரக் குறைவு ஏற்படுத்தும் நடவடிக்கையைவிடக் கடனை ஈடுசெய்யும் நடவடிக்கையே மிக அதிகமாக இருக்கிறது.

**மறுநிதியாக்கம் (Refunding):** ஊழியங்களுக்கு அல்லது பொருள்களுக்குரிய விலை முதலிய 'மிதக்கும்' கடன்களைத் (floating debts) திருப்பிக் கொடுப்பதற்காகக் கருவூலமானது, தன் கடன் பத்திரங்களை விற்பதன் மூலம் கடன் வாங்கும்போது, கடனானது நிதியாக்கம் செய்யப்பட்டிருக்கிறது (debt is funded) என்று கூறுகிறோம். இம் முறையில், ஒரே வகைக் கடன் பத்திரங்களை வைத்திருக்கும் ஒரு புதிய கடனீவோர் தொகுதியை (a new group of creditors) உருவாக்குவதன் மூலம் பல்வேறு வகைப்பட்ட கடன்கள் திருப்பித் தரப்படுகின்றன. கூட்டரசாங்கத்தைப் பொறுத்தவரை 'மிதக்கும்' கடன்கள் எவையும் இல்லாததால், அந்த அரசாங்க மட்டத்தில் நிதியாக்கம் (funding) எதுவும் நடைபெறுவதில்லை. ஆனால் தல அரசாங்கங்கள் அடிக்கடி ஊதியங்களையும், வாங்கப்பட்ட பொருள்களுக்கான விலையையும்

'வாரண்டுகள்' (warrants) எனப்படும் ஒரு வகை 'மிதக்கும்' கடன் மூலமாகச் செலுத்துகின்றன. இந்த மிதக்கும் கடன்கள், பின்னர் நீண்ட காலக் கடன் பத்திரங்களாக நிதியாக்கம் செய்யப் படுகின்றன அல்லது நடப்பு வருவாய்களிலிருந்து (current revenues) திருப்பிக் கொடுக்கப்படுகின்றன. தவணை முடிந்த கடன் பத்திரங்களை ஈடு செய்வதற்காகப் புதிய கடன் பத்திரங்கள் வெளியிடப்படுவதையே மறு நிதியாக்கம் (refunding) என்று அழைக்கிறோம். கடன் பத்திரங்களின் தவணை முடிந்தபோது அல்லது தவணை முடிவதற்கு முன்னுலேயே 'அழைக்கும்' உரிமை யைப் (the right to call) பயன்படுத்துவதன் மூலமாக அப் பத்திரங்கள் மீட்கப்படலாம் (அதாவது அவற்றிற்குரிய தொகை முழுவதும் தரப்படலாம்). அரசாங்கமானது, நடப்பு வட்டி வீதங்கள் தனக்கு நலன் தரத்தக்கனவாக இருப்பதைப் பயன் படுத்திக்கொள்ள விழையும்போது, அல்லது செலுத்த வேண்டிய கடன்களின் தவணை முடிவுகளைத் திருத்தியமைக்க விரும்பும்போது, தன் 'அழைக்கும்' உரிமையைப் பயன்படுத்துகிறது. ஆனுல், பெரும்பாலான மறு நிதியாக்க நடவடிக்கைகள், தவணை முடிவு நிலைமைகளைச் சரிக் கட்டுவதற்காகவே மேற்கொள்ளப்படுகின்றன.

வரி வசூல் தொகை வரும் வரை அல்லது எழுப்பப்படவிருக்கிற நீண்டகாலக் கடனின் தொகை கிடைக்கும் வரை உள்ள செலவுக் காகச் சில சமயம் குறுகிய காலக் கடன் எழுப்பப்படுகிறது. வரி வசூலை எதிர்பார்த்து உண்டியல்கள் (bills) விற்கப்படுமானுல், (வரித் தொகை கிடைத்ததும்) இந்த உண்டியல்கள் திருப்பிக் கொடுக்கப்படும் என்றும், இவற்றிற்குப் பதிலாகப் புதிய கடன்கள் எழுப்பப்படமாட்டா என்றும் நாம் எதிர்பார்க்கலாம். ஆனுல், வரி வசூல் தொகையோடு ஒப்பிடும்போது செலவு வீதம் மிகுதியாக இருக்குமானுல், வரி வசூலில் பெரும் பகுதி, உண்டியல்களைத் திருப்பிக் கொடுப்பதற்கே செலவாகிவிடும். அந் நிலையில் அதன் பின்னர் வரக்கூடிய வரிவசூலை எதிர்பார்த்து மீண்டும் குறுகியகாலக் கடன் வாங்கவேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டுவிடும். நீண்டகாலக் கடன் எழுப்பப்படவிருப்பதை எதிர்பார்த்துக் குறுகியகாலக் கடன் எழுப்பப்படும்போது, கருவூலத்திற்கு உடனடி யாக நிதிகள் கிடைத்தாக வேண்டிய தேவை நிறைவு செய்யப்படு கிறது. பொதுமக்களுக்குக் கடன் பத்திரங்களை விற்பதற்காக நடத்தப்பட்ட பல்வேறு போர்க் கடன் பிரசாரங்களால் உடனடி யாக ஏற்பட்ட விளைவு, பாங்குகள் வைத்திருந்த உண்டியல்களின் தவணைமுடிந்தபோது அவற்றிற்குரியதொகையைச் செலுத்துவதற் குரிய நிதி கருவூலத்திற்குக் கிடைத்ததேயாகும். அத்தகைய

பிரசாரங்களால் ஏற்பட்ட மற்ருெரு பயன்மிக்க விளைவு அரசாங்கக் கடனின் ஒரு பெரும் பகுதி பொதுமக்களிடம் மாற்றப் பட்டதே.[15]

**மாற்றம்** (Conversion): கருவூலம் ஒரு குறிப்பிட்ட நன்மையைப் பெறுவதற்காக, தற்போதைய கடன்களின் தவணை முடிவதற்கு முன்னுலேயே மேற்கொள்ளப்படுகிற ஒரு சிறப்பு வகை மறு நிதியாக்கமே, மாற்றம் என்பது. பாங்குகளிடம் உள்ள கடனைத் தனியாட்களிடமும் நிறுவன முதலீட்டாளர்களிடமும் (institutional investors) மாற்றித் தருவதற்கும், செலுத்தவேண்டிய கடன்களின் தவணை முடிவுகளை எளிதில் நிர்வாகம் செய்யக்கூடிய முறைக்கு மாற்றியமைப்பதற்கும்,[16] அல்லது வட்டி வீதங்களைக் குறைப்பதற்கும் மாற்றம் (conversion) மேற்கொள்ளப்படலாம்.

இந்த முறையானது 1932-ல் பிரிட்டிஷ் அரசாங்கத்தால் பெரிய அளவில் கையாளப்பட்டது.[17] போருக்குப் பிந்திய கடனின் வட்டித் தொகையைக் குறைப்பதே இந்த நடவடிக்கையின் நோக்கம். இந் நடவடிக்கையின் விளைவாக, கடனின் மூன்றில் ஒரு பங்குக்கு மேற்பட்ட தொகையின் ஆண்டு வட்டி வீதம் 5 சத வீதத்திலிருந்து $3\frac{1}{2}$ சதவீதமாகக் குறைந்தது. இப்படிக் குறைந்ததால் ஆண்டுதோறும் செலுத்தவேண்டிய வட்டித் தொகையில் 30 மில்லியன் பவுன் மிச்சமாயிற்று. இந்த மாற்றத்தில் அடங்கி யிருந்த சிக்கல், தற்போதுள்ள கடன்களை 'அழைத்து விட்டு', அவற் றிற்கு ஈடாகக் குறைந்த வட்டியுள்ள புதிய கடன் பத்திரங்களை வாங்கும்படிச் செய்வது எப்படி என்பதாகும். குறைந்த வட்டிக் கடன் பத்திரங்கள், அவற்றின் தகுதிக்கு ஏற்ற அளவுக்கு விற்கட்டும் என்ற நிலையில் அங்காடியில் விடப்பட வேண்டியிருந்தது. கருவூலக் கணக்குகளின் இருப்பு (balance) மனநிறைவு அளிக்கத்தக்க அளவில் இல்லாததாலும், இந்த மாற்றமானது அரசாங்கத்திற்கு நிவாரணம் அளித்தற்குரிய ஓர் ஏற்பாடாக மேற்கொள்ளப்பட்ட தாலும், குறைந்த வட்டி வீதங்களில் அமைந்த புதிய கடன் பத்திரங்கள் அங்காடியில் வாங்கப்படமாட்டா என்கிற ஆபத்து உண்மையாகவே இருந்தது. எந்த அளவுக்கு அப் பத்திரங்கள் வாங்கப்படும் என்பது, முதலீட்டு அங்காடி எந்த அளவுக்குத் திண்மை உடையதாக இருந்தது என்பதையும், முதலீடு செய்வோருக்கு அரசாங்கத்திடம் எந்த அளவுக்கு நம்பிக்கை இருந்தது என்பதையுமே பொறுத்திருந்தது.

மேலே சொல்லப்பட்ட முறைப்படி மாற்றப்பட்ட போர்க் கடன் பத்திரங்கள் 1932 டிசம்பர் 1 ஆம் தேதியிட்டு 'அழைக்கப்

பட்டன.' அழைக்கப்பட்ட பத்திரங்களை வைத்திருந்தவர்கள் அந்தத் தேதிக்குப் பிறகும் குறைந்த வட்டியில் அப் பத்திரங்களைத் தொடர்ந்து வைத்திருக்கும்படிக் கேட்டுக்கொள்ளப்பட்டார்கள். புதிய கடன் பத்திரங்கள் 1952க்குப் பின் எந்த நேரத்திலும் அழைக்கப்படலாம் என்று தெரிவிக்கப்பட்டதே தவிர, அப் பத்திரங்களுக்கான தவணை முடிவுத் தேதி எதுவும் நிர்ணயிக்கப்படவில்லை. 1932 டிசம்பர் முதல் தேதியன்று பழைய பத்திரங்களுக்குப் பதிலாகப் புதிய பத்திரங்களை ஏற்றுக்கொள்வதற்குரிய தங்கள் இசைவை 1932 ஜூலை 31க்குள் அரசாங்கத்திற்குத் தெரிவித்து விடுபவர்களுக்கு, அழைக்கப்பட்ட பத்திரங்களின் ஒவ்வொரு 100 பவுனுக்கும் 1 பவுன் வீதம், ரொக்க வெகுமதி (cash bonus) தரப்பட்டது. அவ்வாறின்றி, அழைக்கப்பட்ட தங்கள் பத்திரங்களுக்குரிய தொகையை ரொக்கமாகப் பெற்றுக்கொள்ள விழைபவர்கள் செப்டம்பர் 30-க்குள் தங்கள் விருப்பத்தை அரசாங்கத்திற்குத் தெரிவித்துவிட வேண்டும் என்றும், அப்படி தெரிவிக்காதவர்கள் அனைவரும் கடன் பத்திர மாற்றத்தை ஏற்றுக்கொண்டதாகக் கருதப்படும் என்றும் அறிவிக்கப்பட்டது.

அச் சமயத்தில் 'தி எகனுமிஸ்ட்' (The Economist) என்னும் பத்திரிகை பின்வருமாறு எழுதியது: 'நான்கு மாதங்களுக்கு முன்னர் அரசாங்கம் 4 சதவீத அடிப்படையில்தான் கடன் எழுப்ப முடிந்தது என்பதையும், நடு வேனிற் காலத்திற்குப் பிறகு ஸ்டார்லிங்கின் மதிப்பு மிகவும் குறைந்திருக்கிறது என்பதையும், வெளிநாடுகளில் உயர்ந்த வகைக் கடன் பத்திரங்களுக்கு 4 சதவீத வட்டி இப்போதும் தரப்படுகிறது என்பதையும், ஐக்கிய அமெரிக்காவுக்குப் போர்க் கடன் கணக்கில் நாம் தொகை எதுவும் செலுத்தாவிட்டாலும் நம் வரவு செலவுத் திட்டமானது உறுதியற்ற முறையிலேயே ஒத்தநிலைப்படுத்தப்பட்டிருக்கிறது என்பதையும் சிந்தித்துப் பார்க்கும்போது, கருவூலத்தை, அதனுடைய அஞ்சாமைக்காகவும் திறமைக்காகவும் வெற்றிக்காகவும் நாம் பாராட்டத்தான் வேண்டும்'.[18] இந்தத் திட்டமானது வெற்றிமிக்கதாக அமைந்தது என்றபோதிலும், அதன் வெற்றிக்குத் துணைபுரிந்த சூழ்நிலைகளின் சில இயல்புகளை இங்கே நாம் குறிப்பிடத்தான் வேண்டும். இந்தத் திட்டம் நாட்டுப்பற்றின் அடிப்படையில் மேற்கொள்ளப்பட்டது. எனவே, முதலீடு செய்வோரின் தன்னலத்தின் அடிப்படையில் மட்டுமே இது வெற்றி பெற்றது என்று கூற முடியாது. குறைந்த வட்டிப் பத்திரங்களை ஏற்றுக்கொள்ள உடனடியாக இசைவு தருபவர்களுக்குத் தரப்பட்ட வெகுமதியும் (bonus) இத் திட்டத்தின் வெற்றிக்குத் துணை புரிந்திருக்கிறது என்பதில் ஐயமில்லை. அதோடு, மாற்றப்பட்ட

கடன் பத்திரங்களில் மூன்றில் ஒரு பகுதி, அரசாங்கத் துறைகள், பாங்குகள், இன்சூரன்ஸ் நிறுவனங்கள் ஆகியவற்றால் வைத்திருக்கப் பட்டவை. மாற்றத்திற்கான இசைவை உடனே தெரிவிக்கும்படி இந்த அமைப்புகள் மீது செல்வாக்கைப் பயன்படுத்தமுடியும். இவை அனைத்தையும்விடத் திட்டத்தின் வெற்றிக்கு ஆற்றல்மிக்க துணையாக அமைந்தது, அந்தக் காலத்தில் இருந்த வாணிபத் தேக்க நிலையே ஆகும். இத் தேக்கநிலை காரணமாக வாணிபத் துறையில் ஏராளமான சேமிப்புகள் ஏற்பட்டு, முதலீட்டு வாய்ப்புகளை அவை தேடிக்கொண்டிருக்கும் நிலைமை உருவாகியிருந்தது. எனவே மாற்றப்பட்ட கடன் பத்திரங்களுக்குத் தரப்பட்ட $3\frac{1}{2}$ சதவீத வட்டியானது அரசாங்கக் கடனில் முதலீடு செய்வதற்காகக் கிடைக்கக்கூடிய நிதிகளின் அளிப்பு விலையை (supply price) மிகத் துல்லியமாக அளந்து அமைத்ததுபோல ஆகிவிட்டது.

1932-ல் பிரிட்டிஷ் அரசாங்கம் மேற்கொண்ட இந்த மாற்றுத் திட்டம்பற்றிய சிக்கலின் காலம், அளவு,அது மேற்கொள்ளப்பட்ட நிலைமைகள் ஆகிய கோணங்களிலிருந்து பார்க்கும்போது, அது ஒரு சிறப்பு வகைச் சிக்கல் என்பது தெளிவாக விளங்கும். முதலீட்டு நிதிகள் குறைந்த வட்டிக்கு எளிதில் கிடைக்கும் சூழ்நிலையில், கடனின் ஒரு பகுதியைக் குறைந்த வட்டிப் பத்திரங்களாக மாற்றுவது, ஓரளவு எளிய செயலே. ஐக்கிய அமெரிக்காவில் அத்தகைய நிலை இருந்திருக்கிறது. முதல் உலகப் போரின்போதும், அதைத் தொடர்ந்த உடனடி ஆண்டுகளின் போதும், உயர்ந்த வட்டி வீதத்தில் எழுப்பப்பட்ட கடன்களில் 1930-ன் முடிவு வரை செலுத்தப்படாமலிருந்த கடன்கள், தவணை முடிவின்போது மறுநிதியாக்கம் செய்ததன் வாயிலாக, அல்லது தவணை முடிவுக்கு முன்னதாக மாற்றம் (conversion) செய்ததன் மூலமாக, 1945க்குள், குறைந்த வட்டிக் கடன்களாக மாற்றப்பட்டுவிட்டன.[19] 1930 முதல் 1945 வரையுள்ள ஆண்டுகளில் வரவு செலவுத் திட்டப் பற்றுக்குறை இல்லாத ஆண்டு எதுவும் இல்லை. எனவே, அந்த ஆண்டுகளில் கடனில் நிகரக்குறைப்பு எதுவும் ஏற்பட்டிருக்க முடியாது என்பதும் தீர்க்கப்பட்ட கடன்களுக்குப் பதிலாகப் புதிய கடன்கள் எழுப்பப்பட்டிருக்கவேண்டும் என்பதும் தெளிவு. இந்த மறுநிதியாக்க நடவடிக்கைகளிலும் மாற்றம் பற்றிய நடவடிக்கைகளிலும் வெற்றி ஏற்பட்டதற்கு ஒரு தலையாய காரணம், வேறு வகைகளில் ஆளப்படாத முதலீட்டு நிதிகள் (otherwise idle investment funds) ஏராளமாகக் கிடைத்ததே ஆகும்.

**கடன் கழிவு நிதி (The Sinking Fund) :** கடன் கழிவு நிதி என்பது நிதியாக்கப்பட்ட கடனைத் (funded debt) திருப்பிக்

கொடுப்பதற்கான ஒரு நிதியாகும். முறையாகக் கடனைத் திருப்பிக் கொடுப்பதற்கான வழிமுறைகளை அரசாங்கம் தனக்குத்தானே ஏற்படுத்திக்கொள்ளவேண்டும் என்னும் கருத்தே, இதற்காகத் தனி நிதி ஒன்றை உருவாக்குவதற்கான கோட்பாட்டு வழிக் காரணம் (theoretical justification). கடன் கழிவு நிதிக்கான வருமானம் அரசாங்கப் பொது வருவாய்களிலிருந்து பெறப்படும். அதாவது, முறையான ஒதுக்கீடுகள் (regular appropriations) கருவூலத்தின் சில வருவாய்களை, இந் நிதிக்கென்றே ஒதுக்கி வைப்பது ஆகிய முறைகளால் பெறப்படும்.

கூட்டரசாங்கக் கடன் கழிவு நிதி ஒன்று, முதன்முதலில், 1792ல், பெரிதும் அலெக்சாண்டர் ஹாமில்டன் ((Alexander Hamilten) என்பாரின் முயற்சியால் தோற்றுவிக்கப்பட்டது. 1795-ல் நடைபெற்ற மறு ஆய்வின் (revision) விளைவாகச் சில வகை வருவாய்கள் (முக்கியமாகப் பொது நிலங்களின் விற்பனை வருவாய்கள்) இந்த நிதிக்கென்றே ஒதுக்கி வைக்கப்பட்டன. கடன் கழிவு நிதியை அரசாங்கக் கடன் பத்திரங்களில் முதலீடு செய்யலா மென்ற கருத்தை ஹாமில்டன் தெரிவித்தபோது, கையில் பணம் இல்லாமலே கடனைத் திருப்பித்தர முயல்கிறார் என்று அவர் கிண்டல் செய்யப்பட்டார். கடன் கழிவு நிதியின்மூலம் மிக விரைவாக கடனைத் தீர்க்கவேண்டும் என்னும் விதியைக் காங்கிரசானது தன்மீது தானே விதித்துக்கொள்ளவேண்டும் என்பதும், அரசாங் கத்தைத் தவிர்த்த பிறகடன் ஈவோர்க்குத் தரப்படுவதைப்போலவே கடன் கழிவு நிதிக்கும் வட்டி தரலாம் என்பதும் ஹாமில்டனின் நோக்கம் என்று தெளிவாகத் தெரிகிறது. இருந்தபோதிலும், சிக்கன நோக்கமும், கருவூல உபரிக் கடனைத் திருப்பிக்கொடுப்பதற் காகப் பயன்படவேண்டும் என்னும் கருத்தும் உடைய ஓர் அர சாங்கம், மேலே சொல்லப்பட்ட வட்டி தரும் முறையால் எந்த அளவுக்குக் கடனைத் தீர்க்க முடியுமோ அந்த அளவுக்கு, அந்த முறை இல்லாமலே பெரும்பாலான நிலைமைகளில் தீர்க்கமுடியும்.

தற்போது நடைமுறையில் உள்ள கூட்டரசாங்கக் கடன் கழிவு நிதிக்காகப் பொது நிதியிலிருந்து ஆண்டுதோறும் ஒதுக்கீடுகள் செய்யப்படுகின்றன. சில காரணங்களுக்காகப் பெறப்பட்ட கடன் தொகையின் ஒரு குறிப்பிட்ட சத வீதம்,[20] நடப்பு ஆண்டில் அல்லது முந்திய ஆண்டுகளில் வாங்கப்பட்ட அல்லது கடன் தீர்க்கப்பட்ட தவணை முடிவுறாத பாண்டுகள் மற்றும் நோட்டு களுக்காக நடப்பு ஆண்டில் தரப்படவேண்டிய வட்டி—இந்த இரண்டின் கூட்டுத் தொகையை ஒத்த அளவு தொகையே, ஆண்டு தோறும் கடன் கழிவு நிதிக்காகப் பொது நிதியிலிருந்து

ஒதுக்கீடு செய்யப்படுகிறது. மேற்படி கூட்டுத் தொகையின் இரண்டாவது பகுதியில் ஹாமில்டனுடைய குவிவுக் கடன் கழிவு நிதி ஏற்பாடு (cumulative sinking fund) பொதிந்துகிடக்கிறது. ஆனால், கடன் கழிவு நிதிக்கான ஒதுக்கீடுகள், கடனைத் திருப்பிக் கொடுப்பதற்காக இந் நிதிகளைப் பயன்படுத்தலாம் என்னும் அதிகார அளிப்புகளே (authorisations) தவிர வேறொன்றும் இல்லை. உபரி நிதிகள் கிடைத்தாலொழிய இந்த அதிகார அளிப்புகளைச் செலவிடமுடியாது. உபரி நிதிகள் கிடைப்பது, கருவூலத்தின் முடிவுகளைப் பொறுத்திருக்கிறது.

கூட்டரசாங்கம் கடன் கழிவு நிதியைப் பயன்படுத்துவதால் எத்தகைய நன்மையும் இருப்பதாகத் தெரியவில்லை. கூட்டர சாங்கத்தால் அந் நிதி தற்போது பயன்படுத்தப்படுகிற முறையை வைத்துப் பார்த்தால் அந் நிதி, பொருளற்ற ஓர் ஏற்பாடாகவே காட்சியளிக்கிறது. முதலீடு செய்பவர்களுக்குக் கூட்டரசாங்கக் கடன்களில் நம்பிக்கை ஏற்படுவதற்குக் கடன் கழிவு நிதியின்மூலம் முறைப்படிக் கடனைத் தீர்ப்பதற்கான ஏற்பாடு இருப்பது இன்றி யமையாதது அல்ல என்பதை அனுபவம் நமக்குத் தெளிவுற விளக்கிக் காட்டிவிட்டது. எந்த அளவுக்குக் கடன்கழிவு நிதியானது, ஒரு குறிப்பிடத்தக்க கடன் தொகையை முறையாகத் தீர்த்து வரவேண்டும் என்று அரசாங்கத்தைக் கட்டுப்படுத்துகிறதோ அந்த அளவுக்கு, நிலைமைக்கு ஏற்ப நிதிக்கொள்கையை மாற்றி அமைப் பதற்கான சுயேச்சைக்கு முட்டுக்கட்டை போட்டிருக்கிறது என்று பொருள். கடனை நிகர முறையில் திருப்பிக் கொடுப்பதற்கான ஒரே ஊற்றுக்கால், உபரி வருவாய்தான். தக்க முறையில் செய்யப் படுகிற மறுநிதியாக்க நடவடிக்கைகளும், மாற்றம் பற்றிய நடவடிக்கைகளுமே, வட்டி வீதங்களையும் தவணை முடிவுகளையும் நிர்வாகம் செய்வதற்கான தலைசிறந்த கருவிகளாகும்.

**கூட்டரசாங்கத்தின் எதிர்பாரா பொறுப்புகள் (Contingent Liabilities of the Federal Government)**

ஓரளவு அரசாங்கத் தன்மையுடைய கார்ப்பரேஷன்கள் (semi public corporations), மற்றும் அரசாங்கக் கார்ப்பரேஷன்கள் சிலவற்றின் கடன்களுக்குக் கருவூலம் கொடுத்துள்ள உறுதிமொழி யின் (guarantee) விளைவாகக் கருவூலத்திற்கு எதிர்பாரா பொறுப்பு ஏற்பட்டுவிடுகிறது. அதாவது, முதன்மையான கடனாளி (primary debtor) கடனைத் திருப்பிக் கொடுக்கத் தவறிவிடும்போது (in case of default) அக் கடனைத் தான் தரவேண்டிய பொறுப்பு கரு வூலத்திற்கு இருக்கிறது. இத்தகைய பொறுப்புக்கு உடனடியாகப்

புலனுகிற மிக எளிய எடுத்துக்காட்டு ஐக்கிய ரிசர்வ் நோட்டுகள் ஆகும். இந் நோட்டுகள், ஐக்கிய ரிசர்வ் பாங்குகளால் வெளி யிடப்படுபவை; கருவூலத்திலாவது அல்லது எந்த ஐக்கிய ரிசர்வ் பாங்கியிலாவது மீட்கப்படக்கூடியவை (redeemable). இந்த நோட்டுகள் ஐக்கிய ரிசர்வ் பாங்குகளின் சொத்துகள்மீது முதன்மைப் பற்றுரிமை (prior lien) உடையனவாக இருப்பதால், இந் நோட்டுகளின் விளைவாகக் கருவூலத்திற்கு ஏற்படும் நடை முறைப் பொறுப்பு புறக்கணிக்கத்தக்க அளவினதாகவே இருக்கிறது. பொருளாதாரத்தின் பல்வேறு பகுதிகளுக்குக் கடன் வசதிகளை விரிவுபடுத்துவதற்கான அரசாங்கக் கொள்கைகளை நிர்வாகம் செய்வதற்காக 1930ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளில் பல்வேறு அரசாங்கக் கார்ப்பரேஷன்கள் ஏற்படுத்தப்பட்டன. கீழ் வருபவை இத்தகைய கார்ப்பரேஷன்களில் மிகப் பெரியவை ஆகும்: பண்டக் கடன் கார்ப்பரேஷன் (the commodity credit corporation), கூட்டரசாங்க நில அடமானக் கார்ப்பரேஷன் (the federal farm mortgage corporation), கூட்டரசாங்க வீடு கட்டும் நிர்வாகம் (the federal housing administration), கூட்டரசாங்கப் பொது வீடு கட்டும் அமைப்பு (the federal public housing authority), வீட்டு உரிமையாளர்களின் கடன் கார்ப்பரேஷன் (the house owners' loan corporation), மற்றும் பல துணை அமைப்புகளோடு கூடிய மறு அமைப்பு நிதிக் கார்ப்பரேஷன் (the reconstruction finance corporation) ஆகியவை.[21] இந்தக் கார்ப்பரேஷன்களில் பெரும்பாலானவை கடன் வழங்கும் பணிகளை நிறைவேற்றவே ஏற்படுத்தப்பட்டன. ஆனுல், கடன் வழங்கும் பணிகளை நிறை வேற்றக் கடன் நிதிகளைத் திரட்டவேண்டியிருந்தது. அத்தகைய நிதிகளைத் திரட்டுவதற்கு இரண்டு மாற்று வழிகள் இருந்தன. தான் எழுப்புகிற கடன்களிலிருந்து கிடைக்கும் தொகையில் ஒரு பகுதியைக் கருவூலம் இந்தக் கார்ப்பரேஷன்களுக்குக் கொடுப்பது, ஒரு வழி. மூலதன அங்காடியிலிருந்து கடன்களை இந்தக் கார்ப்ப ரேஷன்களே நேரடியாகப் பெற்றுக்கொள்வது மற்ருெரு வழி. இந்த இரண்டாவது வழியில், கார்ப்பரேஷன்களின் கடன் பத்திரங்கள் கருவூலத்தால் உத்தரவாதம் செய்யப்படுகின்றன. 1941 வரை இந்த இரண்டாவது வழியே கையாளப்பட்டு வந்தது. 1932-ல் மறு அமைப்பு நிதிக் கார்ப்பரேஷனுனது புதுமுறைத் திட்டத்திற்கு (new deal program) முன்பு நிறுவப்பட்டபோது, இந்த வழியானது முதன் முதலில் அந்தக் கார்ப்பரேஷன் தொடர் பாகக் கையாளப்பட்டது. இந்த வழிக்கு ஆதரவாக எழுப்பப் பட்ட வாதங்களாவன: (1) கருவூலத்தைச் சாராமல் சுயேச்சை யாக உள்ள ஒரு கார்ப்பரேஷன், பணித்துறை ஆட்சிக்கு

(bureaucracy) உள்ளாகாத ஒரு வாணிப நிறுவனமாக இருக்க முடியும். இந் நிலையில் கருவூலமும் பாங்குத் துறைக்குள் இழுக்கப் படாமல் இருக்கும். (2) அத்தகைய ஒரு கார்ப்பரேஷன் அதுவே கடன் வாங்கிய நிதிகளைக்கொண்டு அமைக்கப்படுமானால், அந்தக் கார்ப்பரேஷன் காரணமாகக் கூட்டரசாங்க வரவுசெலவுத் திட்டம் ஒவ்வாத நிலை அடைகிற சூழ்நிலை உருவாகாது. இதனால் பலவகைப்பட்ட பணவீக்கச் சக்திகளை எதிர்த்து நிற்கிற அரசாங் கத்தின் ஆற்றல் மிகுதியாகும். (3) கார்ப்பரேஷனின் கடன்கள் தம்மைத் தாமே தீர்த்துக்கொள்ளும் தன்மை உடையனவாக இருப்பதால், இக் கடன்கள் வரி செலுத்துவோருக்கு ஒரு சுமையாக இருக்கமாட்டா. ஆனால், கார்ப்பரேஷன் கடன் பத்திரங் களின் அசலுக்கும் வட்டிக்கும் கருவூலம் உறுதிமொழி அளிக்க வேண்டியது இன்றியமையாதது என்பது தொடக்கத்திலிருந்தே தெளிவாக உணரப்பட்டது. அத்தகைய உறுதிமொழி இல்லா விட்டால், நன்றாக நிலைநாட்டப்பட்ட நிதி நிறுவனங்கள் நுழைய அஞ்சுகிற ஒரு பாதையில் வேகமாக ஓடுவதற்காகவே உருவாக்கப் பட்ட ஒரு புதிய கார்ப்பரேஷனால் அனுகூலமான நிபந்தனைக ளோடு கடன் வாங்கமுடியாது.

மறு அமைப்பு நிதிக் கார்ப்பரேஷனில் கையாளப்பட்ட இந்த முறை, ஏனைய கார்ப்பரேஷன்கள் நிறுவப்பட்டபோது அவற்றிலும் கையாளப்பட்டன. ஆனால், சில ஆண்டுகளுக்குள், காங்கிரசானது, சில குறிப்பிட்ட கடன்களை எழுப்பச்செய்வதின் மூலம், இந்தக் கார்ப்பரேஷன்களின் சுதந்திர நிலையைக் குலைத்துவிட்டது. அது போலவே இக் கார்ப்பரேஷன்களில் சிலவற்றை அரசாங்க உதவித் தொகைகளைச் (subsidies) செலுத்தும்படிச் செய்ததன் மூலமும், அப்படிச் செலுத்தியதால் அவற்றின் மூலதனத்தில் ஏற்பட்டக் குறைவைப் பின்னர் கருவூலத்தால் ஈடுகட்டச் செய்ததன்மூலமும், காங்கிரசானது, இக் கார்ப்பரேஷன் கடன்களின் தம்மைத்தாமே தீர்த்துக்கொள்ளும் இயல்பையும் மாற்றிவிட்டது.[22] இந்தக் கார்ப்பரேஷன்கள் பலவற்றின் சுதந்திர நிலையும், தம் கடன்களைத் தாமே தீர்த்துக்கொள்ளும் தன்மையும் 1941-க்குள் பெரும் அளவுக்குக் குறைந்துவிட்டன. அதன்பின் இந்தக் கார்ப்பரேஷன் களுக்கான நிதிகள் கருவூலத்தாலேயே அளிக்கப்படவேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது. இந்த முறையே இப்போதும் பயன்படுத்தப் படுகிறது. இந்த முறையில் பல நன்மைகள் இருக்கின்றன. கார்ப்ப ரேஷன்களின் தேவைகள், கருவூலத்தின் தேவைகளோடு ஒருங்கு இணைக்கப்படுகின்றன. இந்தக் கார்ப்பரேஷன்கள் தனித்தனியே வாங்கக்கூடியதைவிடக் குறைந்த விலையில் கருவூலத்தால் கடன்களை எழுப்பமுடியும். மையப்படுத்தப்பட்ட கருவூலக் கட்டுப்பாடு

ஓரளவுக்கு ஏற்பட்டு, அப்படி ஏற்படுவதன் மூலம், இந்தக் கார்ப்ப ரேஷன்களின் நிதிக்கொள்கைகளை அரசாங்கத்தின் நிதிக்கொள்கை யோடு இணைத்து அமைக்க முடிகிறது.

நிதியாண்டு 1951-ன் முடிவிற்குள், அரசாங்கக் கார்ப்ப ரேஷன்களின் கருவூல உறுதிமொழி பெற்ற கடன் தொகை, $6\frac{1}{3}$ பில்லியன் டாலர் என்னும் உயர்ந்த அளவிலிருந்து ஏறத்தாழ 29 பில்லியன் டாலர் என்னும் குறுகிய அளவுக்குச் சுருங்கிவிட்டது. ஆனால், பெரிதும் 1941-ல் கொள்கையில் ஏற்பட்ட மாறுதல் காரணமாக, இந்தக் கார்ப்பரேஷன்களுக்குத் தேவையான நிதிகளுக்காகக் கருவூலத்தால் எழுப்பப்பட்ட கடனில் செலுத்தப்பட வேண்டிய தொகை, 1951-ன் இறுதியில் 9 பில்லியன் டாலராக இருந்தது. இந்த 9 பில்லியன் டாலர் கடன், கருவூலத்தின் நேரடியான பொறுப்பே தவிர ஐயப்பாடான பொறுப்பல்ல என்ற போதிலும், இந்தக் கடனின் பெரும் பகுதி, இப்போதும் தன்னைத் தானே தீர்த்துக்கொள்ளும் தன்மையதாகவே இருக்கிறது. ஏனைய நிலைகள் யாவும் மாறாமல் இருக்குமானால், கடன்தரும் பணியாற்றும் கார்ப்பரேஷன்களின் மூலதன நிதிகள் கார்ப்பரேஷன்களால் கடன் வாங்கப்பட்டுக் கருவூலத்தால் உத்தரவாதம் செய்யப்பட்டாலும் சரி, அல்லது கருவூலத்தால் நேரடியாகக் கடன் வாங்கப்பட்டுக் கார்ப்பரேஷன்களுக்குக் கடனாகத்தரப்பட்டாலும் சரி, இரு நிலைகளிலும் அக் கடனால் ஏற்படும் பளு ஒத்த அளவினதாகவே இருக்கும். கார்ப்பரேஷனானது தன் கடனைத் தானே தீர்த்துக் கொள்ளும் தன்மை படைத்ததாக இருக்குமானால், இந்த இரு முறைகளில் எம்முறையால் கடன் வாங்கப்பட்டாலும், அக் கடனின் அசலாலோ வட்டியாலோ வரி செலுத்துவோர்மீது எத்தகைய பளுவும் சுமத்தப்படமாட்டாது.

## மாநிலக் கடனும் வட்டாரக் கடனும் (State and Local Debt)

ஒருபுறத்தில் மாநிலக் கடனுக்கும் வட்டாரக் கடனுக்கும் இடையேயும், மற்றொரு புறத்தில் இக் கடன்களுக்கும் கூட்டரசாங்கக் கடனுக்கும் இடையேயும் தலையாய ஒற்றுமைத் தன்மைகள் இருக்கின்றன. கூட்டரசாங்கக் கடன்பற்றி நாம் இதுவரை செய்த கருத்தாய்வின் பெரும் பகுதி, கோட்பாட்டின் அளவில் மாநிலக் கடனுக்கும் வட்டாரக் கடனுக்கும் பொருந்தும். மாநில, தல அரசாங்கங்களுக்குக் கடன் வாங்குவதில் உள்ள ஆற்றல், முதலீடு செய்வோருக்கு அந்த அரசாங்கங்களிடம் உள்ள நம்பிக்கையைப் பொறுத்திருக்கிறது. அந்த நம்பிக்கையானது, கடன் வாங்கும் அரசாங்கம் கடனைத் திருப்பித் தருவதில் இதுவரை கையாண்டுள்ள போக்குபற்றிய சான்றுகள், கிடைக்கக்கூடிய வரி வரவுகள்

செலுத்தவேண்டிய கடன்களுக்குப் போதிய அளவில் இருக்குமா என்னும் கேள்வி, கடன் வாங்கப்படுவதற்கான நோக்கங்கள் ஆகியவற்றைப் பொறுத்திருக்கிறது. பொறுத்தமானநிபந்தனைகளின்படிக் கடன் வாங்கும் ஆற்றல், மூலதன அங்காடிகளின் நிலைமையையும்—அதாவது பொதுவாக நிதிகள் கிடைக்கக்கூடிய நிலைமையையும் பொறுத்திருக்கிறது. மாநில, தல அரசாங்கங்கள் கடன் எழுப்புகிற பண அங்காடிகள் பெரும் அளவுக்கு வட்டாரத்தன்மை படைத்தனவாக இருக்கின்றன. குறைந்த ஆட்சிவரம்பு (jurisdiction) உள்ள அரசாங்கங்களுக்கு இந்த உண்மை சிறப்பாகப் பொருந்தும். இத்தகைய நிலைமையின் விளைவாகக் கடன் வாங்குவதில் சங்கடம் ஏற்படக்கூடும். ஆனல், அதே சமயத்தில் மாநில, தல அரசாங்கங்களின் கடன்பத்திரங்களுக்குக் கூட்டரசாங்கத்தின் வருமான வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருப்பது ஒரு நற்பேறு என்றே கூறவேண்டும். இந்த விலக்கு, கடன் வாங்குவதில் சிறிய அரசாங்கங்களுக்கு உள்ள சங்கடத்தை ஈடுசெய்வதாக இருக்கிறது. மாநில, தல அரசாங்கங்களின் கடன்பற்றிச் செய்யப்படும் எந்தக் கருத்தாய்விலும், இந்தப் பல்வேறு அரசாங்கங்களின் கடன் வாங்கும் ஆற்றலில் விரிவான வேறுபாடுகள் இருக்கின்றன என்பது தொடக்கத்திலேயே தெளிவாகத் தெரிவிக்கப்படவேண்டும்.

கீழே உள்ள 15ஆவது அட்டவணையில், 1902 முதல் மாநில, வட்டாரக் கடன்களின் போக்கு எவ்வாறு இருந்து வருகிறது என்பது எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது. போரின்போது, வரி வருவாய்களின் உயர்வு காரணமாகவும், கட்டுமானம் மற்றும் மூலதனச் செலவுகளின்மீது விதிக்கப்பட்ட தடைகள் காரணமாகவும், மாநிலக் கடனும் வட்டாரக் கடனும் குறைந்துவிட்டன. 1950-க்குப் பிறகு, பள்ளிக்கூடங்கள், நெடுஞ்சாலைகள், தண்ணீர் வழங்கல் மற்றும் வடிகால் திட்ட விரிவுகள், நகரங்களைப் புதுப்பித்தல் ஆகியவற்றிற்கான செலவுகளின் காரணமாக இந்த இரு வகை அரசுகளின் கடன்கள் விரைவாக உயரலாயின. 1950 முதல் வட்டாரக் கடனைவிட மாநிலக் கடன் வேகமான வீதத்தில் உயரலாயிற்று. 1950-ஐத் தொடர்ந்து பத்து ஆண்டுகளின் தொடக்கத்தில், மாநிலக் கடன், இருவகைக் கடன்களின் கூட்டு மொத்தத்தில் பத்தில் ஒரு பங்காக இருந்தது, அப் பத்தாண்டுகளின் முடிவில் நான்கில் ஒரு பங்காக உயர்ந்துவிட்டது. நெடுஞ்சாலை அமைப்பில் ஏற்பட்ட விரைவான வளர்ச்சியும், வட்டார மூலதனச் செலவில்—குறிப்பாகப் பள்ளிக்கூடங்களுக்கும் சாலை அமைப்புக்குமான செலவில் மாநில அரசு கூடுதலான பங்கேற்றுக் கொண்டதுமே, இந்த உயர்வுக்குக் காரணங்கள் ஆகும்.

## அட்டவணை 15

**மாநிலக் கடனும், வட்டாரக் கடனும்**

**குறிப்பிட்ட ஆண்டுகள், 1902 – 1957 ***

*(பில்லியன் டாலர்களில்)*

| நிதி ஆண்டு | மாநில அரசாங்கங்கள் | | | தலஅரசாங்கங்கள் | | | மாநிலக் கடன் வட்டாரக் கடன் ஆகியவற்றின் மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| | நீண்ட காலக் கடன் | குறுகிய காலக் கடன் | மொத்தக் கடன் | நீண்ட காலக் கடன் | குறுகிய காலக் கடன் | மொத்தக் கடன் | |
| 1902 | ·2 | அ | ·2 | 1·8 | ·1 | 1·9 | 2·1 |
| 1913 | ·4 | அ | ·4 | 3·8 | ·2 | 4·0 | 4·4 |
| 1922 | 1·1 | அ | 1·1 | 8·4 | ·6 | 9·0 | 10·1 |
| 1927 | 1·9 | ·1 | 2·0 | 12·5 | ·4 | 12·9 | 14·9 |
| 1932 | 2·6 | ·2 | 2·8 | 15·3 | 1·1 | 16·4 | 19·2 |
| 1936 | 3·2 | ·2 | 3·4 | — 16·1 | — | 16·1 | 19·5 |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1940 | 3·3 | ·3 | 3·6 | 15·8 | ·9 | 16·7 | 20·3 |
| 1944 | 2·8 | — | 2·8 | 14·1 | ·6 | 14·7 | 17·5 |
| 1948 | 3·6 | ·1 | 3·7 | 14·4 | ·6 | 15·0 | 18·7 |
| 1952 | 6·5 | ·2 | 6·9 | 22·1 | 1·1 | 23·2 | 30·1 |
| 1954 | 9·3 | ·3 | 9·6 | 29·3 | 1·8 | 27·6 | 37·2 |
| 1958 | 15·1 | ·3 | 15·4 | 40·3 | 2·3 | 42·7 | 58·1 |

* சென்சஸ் பீரோவின் (Bureau of the Census) Historical Statistics on State and Local Government Finances, 1902 – 1953, பக்கங்கள் 20, 22 ; Summary of Government Finances in 1954, பக்கம் 33 ; Summary of Government Finances in 1958, பக்கம் 18 ஆகியவற்றிலிருந்து எடுக்கப்பட்டவை.

(அ) 50 மில்லியன் டாலருக்குக் குறைந்த தொகை.

மாநில, தல நிதிகளில் (finances) குறுகிய காலக் கடனுனது மிகச் சிறிய பங்கையே பெற்றிருக்கிறது. இந் நிலைமை, கூட்டர சாங்க நிதியில் இக் கடனுக்கு உள்ள முதன்மையோடு முற்றிலும் மாறுபட்டதாக இருக்கிறது. இந்த அட்டவணையில் கையாளப் பட்டுள்ள இலக்கணத்தின்படி (definition), வெளியிடப்படும் தேதியி லிருந்து ஓர் ஆண்டுக்கு மேற்பட்ட தவணை முடிவுத் தேதியை உடைய கடனே நீண்ட காலக் கடனுகும். குறுகிய காலக் கடனில் பெரும் பகுதி பாங்குகளிடம் வாங்கப்பட்ட கடனுகும். இக் கடன், பெரும் அளவுக்கு வரி வசூலை எதிர்பார்த்தும், ஓரளவுக்குக் கடன் பத்திர வெளியீடுகள் வரும் வரையுள்ள இடைக் காலச் செலவுக் காகவும் எழுப்பப்படுகிறது. சில சமயங்களில், வரி வசூலை எதிர் பார்த்து, அல்லது கடன் பத்திர வெளியீட்டை எதிர்பார்த்து வெளியிடப்படும் குறுகிய காலக் கடன் பத்திரங்கள் பொது மக்களுக்கும் விற்கப்படுகின்றன. மிகக் கடுமையான நெருக்கடிகளின் போது அரசாங்கங்கள் பங்குச் சான்றுச் சீட்டுகளைச் (scrips) செலுத்துவதன்மூலம் பொது மக்களிடமிருந்து கடன்களைப் பெற்றுள்ளன.

இப்போதெல்லாம் மாநில, தல அரசாங்கங்களின் நீண்ட காலக் கடனுனது, அநேகமாக, வரிசைப்படுத்தப்பட்ட பாண்டுகளை (serial bonds) வெளியிடுவதன் மூலமாக மட்டுமே எழுப்பப் படுகிறது. எடுத்துக்காட்டாக, ஒரு மூலதனத் திட்டத்திற்காக ஓர் அரசாங்கம் 1 மில்லியன் டாலர் கடன் வாங்கவேண்டியிருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். ஒரு நேரடியான இருபதாண்டு வரிசை வெளியீட்டால், ஒவ்வோர் ஆண்டும் மொத்தக் கடனில் இருபதில் ஒரு பங்கு (50,000 டாலர்) தவணை முடிவு ஏற்படும். இத்தகைய வரிசைப்படுத்தப்பட்ட பாண்டுகளின் வெளியீட்டில் பல நன்மைகள் அடங்கியுள்ளன. நீண்ட காலப் பாண்டுகள் என்ற தலைப்பில் அவை சேர்க்கப்பட்டிருந்தாலும், நீண்ட கால நிதிகள், குறுகிய கால நிதிகள், நடுத்தரக் கால நிதிகள் ஆகிய மூவகை நிதிகளை முதலீடு செய்பவர்களையும் கவரத்தக்க முறையில் அவை அமைந்துள்ளன. இவ் வகையில் அவை, மூலதனமாகக்கூடிய நிதி களின் முழு வரிசையையும் பயன்படுத்திக் கொள்கின்றன. ஒரு குறிப்பிட்ட காலத்தில் தவணை முடிவுறக்கூடிய கடன் பத்திரங் களின் வெளியீட்டு அளவை மாற்றி அமைப்பதன் மூலம், மூலதன அங்காடிகளில் உள்ள சிறப்பு நிலைமைகளுக்கு ஏற்ற வகையில் கடன் வெளியீடுகளை ஒழுங்குபடுத்த முடியும். கடன் கழிவு நிதியின் துணை இல்லாமலே கடனை ஒழுங்கான முறையில் திருப்பித் தருவதற்குரிய 'இணைத்து அமைக்கப்பட்ட' ஒரு திட்டமாக (a built-in program) அவை விளங்குகின்றன. எனவே அவை முதலீடு செய்பவர்களின்

கவனத்தையும் அரசாங்கத்தின் கவனத்தையும் ஒருங்கே கவர்ந்து விடுகின்றன.

அட்டவணை 15-ல் தரப்பட்டுள்ள புள்ளி விவரங்கள், ஐக்கிய அமெரிக்காவில் உள்ள எல்லா தல அரசாங்கங்களையும் உள்ளடக்கியவை ஆகும். 25,000 பேருக்கு மேற்பட்ட மக்கள் தொகையை உடைய நகரங்களுக்கு மட்டும்தான், தல அரசாங்கங்களின் கடன் அமைப்பைப் பற்றிய விரிவான தகவல்கள் கிடைக்கின்றன. 1958-ல் இந்த நகரங்களின் கடன், தல அரசாங்கங்கள் அனைத்தினுடைய கடனில், ஏறத்தாழ ஐந்தில் இரண்டு பங்காக (17/43) இருந்தது. சிறிய தல அரசாங்கங்களின் நிதிச் சிக்கல்கள், பெரிய தல அரசாங்கங்களின் நிதிச் சிக்கல்களிலிருந்து ஓரளவு வேறுபட்டவையாக இருந்தாலும், இத்தப் பெரிய அரசாங்கங்களைப் பற்றிய தகவல்கள், பல உண்மைகளை நமக்கு விளக்கும் ஆற்றல் படைத்தனவாக விளங்குகின்றன.

மாநில, தல அரசுகளின் நீண்ட காலக் கடனுக்குத் தரப்படும் ஆதரவு, மூன்று வகையினதாக இருக்கிறது. முதலாவதாக அக் கடன் பத்திரங்கள் பொதுப் பொறுப்புப் பத்திரங்களாக (general obligation securities) இருக்கலாம். அதாவது அப் பத்திரங்கள் குறிப்பிட்ட வருவாய்களோடு இணைக்கப்படாமல் அரசாங்கத்தின் எல்லாச் சாதனங்களோடும் இணைக்கப்பட்டிருக்கும். இரண்டாவதாக அப் பத்திரங்களின் அசலையும் வட்டியையும் செலுத்துவதற்காக அவை சில குறிப்பிட்ட வருவாய்களோடு பிணைக்கப்பட்டிருக்கலாம். அப்படியிருந்தாலும், இந்த வருவாய்கள் போதவில்லையென்றால், அப் பத்திரங்களை வெளியிடும் அரசாங்கத்தின் பொதுச் சாதனங்களிலிருந்தும் கடனைத் தீர்ப்பதற்கான தொகை எடுத்துக் கொள்ளப்படும். இவ்வாறாக இக் கடன் பொறுப்புகள் நிறைவேற்றப்படும்வரை சில குறிப்பிட்ட வருவாய்கள் வேறு எப்பணிக்கும் பயன்படுத்தப்படமாட்டா. ஆனால், அதே நேரத்தில் இக் கடன் பத்திரங்களுக்கான ஆதரவு இக் குறிப்பிட்ட வருவாய்களோடு வரையறுக்கப்பட்டுவிடவில்லை. மூன்றாவதாக, இக் கடன் பத்திரங்களின் வெளியீடு, 'உறுதிமொழி அற்றதாக' (non-guaranteed) இருக்கலாம். அதாவது, குறிப்பிட்ட வருவாய்கள் இப் பத்திரங்களோடு பிணைக்கப்பட்டிருக்கும். ஆனால், இவ் வருவாய்கள் போதவில்லையென்றால், அப் பற்றாக்குறையை அரசாங்கத்தின் பொது நிதிகளிலிருந்து ஈடு செய்யவேண்டும் என்று, பத்திரங்களை வைத்திருப்போர், பத்திர ஒப்பந்தத்தின்படி எதிர்பார்க்க முடியாது. கடன்பத்திர அங்காடியானது, மேலே நாம் தந்துள்ள வரிசை முறைப்படியே இக் கடன் பத்திரங்களின் மூன்று வகைகளுக்கு மதிப்பு அளிக்கும்.

நிதியாண்டு 1957-ன் முடிவில், மாநிலங்கள், நகரங்கள் ஆகிய வற்றின் நீண்ட காலக் கடன், கீழே தந்துள்ள முறையில் இந்த மூன்று வகைகளுக்கு இடையே பங்கிடப்பட்டிருந்தது. [23]

| | நீண்ட காலக் கடன் | முழு நம்பிக்கையும் நாணயமும் (Full faith and credit) | | உறுதிமொழி பெறுதவை |
|---|---|---|---|---|
| | | பொதுப் பொறுப்பு (General obligation) | குறிப்பிட்ட வரி அல்லாத வருவாய்களிலிருந்து முதலில் செலுத்தத் தக்கவை | |
| மாநிலங்கள் | 13,522 | 4,585 | 1,905 | 7,032 |
| 25000-க்கு மேற்பட்ட மக்கள் தொகையை உடைய நகரங்கள் | 15,227 | 10,440 | | 3,997 |

(எல்லா எண்களும் மில்லியன் டாலர்களில் தரப்பட்டுள்ளன.)

இப் பட்டியலில் உறுதிமொழி பெறுத கடனின் அளவைப்பற்றி ஓரளவு விளக்கம் தருவது இன்றியமையாதது. நலன்கள் (benefits) தனியாட்களுக்குக் கிடைப்பனவாகவும், ஆகவே தம்மைத் தாமே ஆதரித்துக் கொள்ளக் கூடியவையாகவும் உள்ள துறைகளில் அரசாங்க நடவடிக்கைகள் பெருகியிருப்பதையே, உறுதிமொழி பெறுத கடன்களின் வளர்ச்சி சிறப்பாக எடுத்துக்காட்டுகிறது. சுங்க வரியுள்ள நெடுஞ்சாலைகள், பல்கலைக் கழக உறைவிடங்கள், முதலியவற்றிற்காக எழுப்பப்படும் கடன்கள், மாநிலங்களைப் பொறுத்தவரையில் இத்தகைய கடன்களுக்கான எடுத்துக் காட்டுகள் ஆகும். நகரங்களில், மின்சார வசதி, தண்ணீர் வசதி, வடிகால் வசதி பற்றிய திட்டங்கள் நெடுங்காலமாகவே தம்மைத் தாமே தீர்த்துக்கொள்ளும் கடன்களால்தான் நிறைவேற்றப்பட்டு வருகின்றன. உறுதிமொழி அற்ற கடன்கள்—குறிப்பாக அண்மை ஆண்டுகளில் வளர்ந்திருப்பதற்கான இரண்டாவது காரணம், கடன் வரையறைகளின் (debt limits) கடுமை ஆகும். தம்மைத் தாமே தீர்த்துக்கொள்ளும் கடன்களுக்குப் பொதுவாகக் கடன்

வரையறைகளிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருப்பதால், தன் பெயரிலேயே கடனை எழுப்பி, தன் வருவாய்களிலிருந்தே அக் கடனைத் தீர்க்கவல்ல தன்னுட்சியுரிமை படைத்த (autonomous) நிறுவனம் ஒன்றை அமைப்பதன் மூலம், ஒரு திட்டத்தை நிறைவேற்றுவதற்குத் தேவையான நிதியை, கடன் வரையறைக்குப் புறம்பாக எழுப்பமுடியும். இத்தகைய சிறப்பு நிறுவனங்களை உருவாக்குவதன் மூலம் பள்ளிக்கூடக் கட்டிடங்களைக் கட்டுவதற்கான நிதிகூடத் திரட்டப்பட்டிருக்கிறது. இந்த நிறுவனங்கள், வட்டாரக் கடன் வரையறைக்குப் புறம்பாகக் கடன் வாங்கி, அக் கடன் தொகையைக் கொண்டு பள்ளிக்கூடக் கட்டிடங்களைக் கட்டி, அக் கட்டிடங்களை தல அரசாங்கத்திற்கு வாடகைக்கு விடுகின்றன.

மாநில, தல அரசாங்கங்களின் செலவில் சென்ற பத்து ஆண்டுகளில் ஏற்பட்ட விரைவான வளர்ச்சியோடுகூட உயர்ந்து வரும் கடனும் இணைந்திருக்கும் என்றே பொதுவாக யாரும் எதிர்பார்ப்பது இயல்பு. ஆனால், அண்மை ஆண்டுகளில் இந்த நிலைமையில் மற்றொரு காரணியும் (factor) செறிந்திருக்கலாயிற்று. மொத்தச் செலவில் மூலதனச் செலவின் விகிதம் உயரும்போது, மொத்தச் செலவின் உயர்வு வீதத்தைவிடக் கடனின் உயர்வு வீதம் அதிகமாக இருக்கும். ஏனென்றால், மூலதனச் செலவுகளின் நன்மைகள் பல்வேறு ஆண்டுகளிலும் தொடர்ந்து கிடைப்பதால், நடைமுறைச் செலவுகளைவிட மூலதனச் செலவுகளுக்காகவே அதிகமாகக் கடன் வாங்கப்படும். நடைமுறைச் செலவுகளில் (operating expenses) உயர்வு ஏற்படும்போது பெரும்பாலும் வரிகளிலும் உயர்வு ஏற்படும். ஆனால், நீண்டகால மூலதனத் திட்டங்கள் மேற்கொள்ளப்படும்போது பெரும்பாலும் வரி உயர்வு ஏற்படுவதில்லை.

**தவறுதல் (Default):** ஒரு கடனாளி தான் திருப்பிக்கொடுக்க வேண்டிய அசலையோ, கொடுக்க வேண்டிய வட்டியையோ கொடுக்காமல் இருக்கும்போது, அவர் தவறிவிட்டார் என்று கூறுகிறோம். எந்தக் காலத்திலும் கூட்டரசாங்கமானது தன் கடன்களைச் செலுத்தத் தவறியதில்லை.[24] சில சமயங்களில் மட்டும் மாநில அரசாங்கங்கள் மிதக்கும் கடன்களைக்கூடச் செலுத்தத் தவறியதுண்டு. ஆனால் தல அரசாங்கங்களோ பற்பல முறை தவறியிருக்கின்றன. தங்கள் கடன் பொறுப்புகளை நிறைவேற்றத் தவறிய தல அரசாங்கங்களின் எண்ணிக்கை, 1933 பிப்ரவரி 1ஆம் தேதியன்று, 1120ஆக இருந்ததென்று கணக்கிடப்பட்டிருக்கிறது. ஆறு மாநிலங்களில் மட்டுமே எல்லா தல அரசாங்கங்களும் தங்கள் கடன் பொறுப்புகளை நிறைவேற்றி இருந்தன.[25] பொருளாதார

மந்தத்தின்போது வருவாய்கள் குறைந்ததால், ஏராளமான நிலையான கடன் தொகைகளைத் திருப்பித் தரமுடியாமல் இருந்ததே, தல அரசாங்கங்களின் தவறுதலுக்குக் காரணமாகும். சில சமயங்களில் தல அரசாங்க வைப்புகளை (deposits) வைத்திருந்த பாங்குகளின் வீழ்ச்சியால் அந்த அரசாங்கங்களின் கடனைத் திருப்பித் தர இயலாத தன்மை மேலும் கடுமையானதாக ஆயிற்று.

கடனைத் திருப்பிக் கொடுக்கும் நிலையைப் பொறுத்த அளவில், கூட்டரசாங்கத்திற்கு இருக்கிற செலாவணி அதிகாரம் (currency power) கடன் அதிகாரம் (credit power) ஆகியவற்றின் காரண மாக அந்த அரசாங்கம் ஓர் அனுகூலமான நிலையில் இருக்கிறது என்பதை இச் சமயத்தில் நாம் குறிப்பிடத்தான் வேண்டும். செலாவணியை வெளியிடும் அதிகாரம், உள்நாட்டுப் போரின் போது, கூட்டரசாங்கத்திற்குப் பயன்மிக்க ஒரு வருவாய்க் கருவி யாகப் பயன்பட்டது. 'பச்சைப்புறங்கள்' (Greenbacks) எனப்படும் ஒரு வகை நோட்டுகளை வெளியிட்டதன் மூலம், அச் சமயத்தில், கடனைச் செலுத்தத் தவறும் நிலையிலிருந்து கூட்டரசாங்கமானது தப்பிவிட்டது என்றே கூறலாம். ஐக்கிய ரிசர்வ் முறையின்கீழ் (The Federal Reserve System) கிடைக்கும்படிச் செய்யப்பட்ட பாங்குக் காப்பிருப்புகளின் நெகிழ்ச்சியானது (the elasticity in bank reserves), கூட்டரசாங்கக் கருவூலம் கடன் வாங்குவதற்குரிய பயன்மிக்க ஓர் ஊற்றுக்காலாக அமைந்திருந்தது. முதலாவது, இரண்டாவது உலகப் போர்களின்போது இந்த ஊற்றுக்கால் கூட்டரசாங்கத்திற்குக் கிடைத்தற்கரிய ஒரு நற்பேறுகவே விளங்கியது. ஆனால், மாநில, தல அரசாங்கங்களோ, வரி விதிப்பின் மூலமாக அல்லது தங்களால் கட்டுப்படுத்த முடியாத நிலையில் உள்ள மூலதன அங்காடிகளில் புதிய கடன் எழுப்புவதன் மூலமாகத்தான், கடனைத் திருப்பிச் செலுத்தத் தவறுவதிலிருந்து தப்பமுடியும்.

கடனைச் செலுத்தத் தவறுவதால் ஏற்படும் விளைவு யாது? தனியார் கடனைப் பொறுத்த அளவில், அந் நிலையில், (கடன் ஈவோ ரால் கடனாளியின் சொத்து) ஈடு சுவாதீனம் (foreclosure) செய்யப் பட்டுவிடும். ஆனால், பொது வசதிகளின் (public utilities) செலவுக்காக வெளியிடப்பட்ட வருவாய்ப் பத்திரங்களைத் (revenue bonds) தவிர அரசாங்கத்தின் ஏனைய கடன் பத்திரங்களைப் பொறுத்த அளவில் அரசாங்கத்தின் சொத்தை ஈடு சுவாதீனம் செய்வது என்பது, முடியாத செயல் மட்டுமல்ல, நினைத்துக்கூடப் பார்க்க முடியாத செயலும் ஆகும். ஆனால், கடனைச் செலுத்தத் தவறிவிடுகிற தல அரசாங்கங்களின் நிதி நடவடிக்கைகளை மேற்

கொண்டு, இறுதியில் கடனைத் திருப்பித் தருவதற்கும், வட்டார நிதிநிலையைச் சீரமைப்புச் செய்வதற்கும் ஏற்ற முறையில் அந் நடவடிக்கைகளைச் செய்துவரக்கூடிய நகராட்சி ரிசீவர்களை (municipal receivers) நியமிக்க முடியும். பல மாநிலங்களின் ரிசீவர் பற்றிய சட்டங்கள் தோல்வியடைந்திருப்பதற்குக் காரணம், இந்த ரிசீவர்கள் மாநிலச் சட்டமன்றங்களுக்கு அளவுக்கு மீறிய வகையில் கீழ்ப்படிந்து நடக்கவேண்டியிருப்பதே ஆகும். மாநில அரசாங்கத்தின் அனுமதிக்கும் கட்டுப்பாட்டுக்கும் உட்பட்டு, வரிகளை விதிப்பதற்கும் திரட்டுவதற்குமுரிய அதிகாரங்கள் ரிசீவர்களுக்குத் தரப்பட்டால்தான் அவர்களால் கிடைக்கக்கூடிய முழுப்பலனையும் பெறமுடியும். ஆனால், நடைமுறையில் பெரும்பாலும் ரிசீவர்களுடைய வருவாய் அதிகாரம் கடன் வாங்குவதற்கு மட்டுமே வரையறுக்கப்பட்டதாக இருக்கிறது.

## கடன் நிர்வாகம் பற்றிய சிக்கல்கள் (Problems of Debt Management)

நிலைபேறான பொருளாதார வளர்ச்சி என்னும் குறிக்கோளைப் பொதுவான அடிப்படையாகக் கொண்டு, வரவுகளுக்கும் செலவுகளுக்கும் உள்ள உறவு, செலவுகளின் முறையான பங்கீடு, பொருத்தமான வரித் திட்டம் ஆகியவற்றை அலசி ஆராயும் வகையிலேயே, நிதிக் கொள்கைபற்றிய கருத்தாய்வுகள் பெரும்பாலும் அமைகின்றன. நிதிக்கொள்கை பற்றிய இந்தத் தலையாய சிக்கல்கள் தவிர, அரசாங்கக் கடன் நிர்வாகம் செய்யப்படுகிற முறையாலும் முக்கியமான பொருளாதார விளைவுகள் ஏற்படக் கூடும் என்னும் உண்மை, அத்தி பூத்தாற்போலச் சிற்சில நேரங்களில் மட்டுமே உணரப்படுகிறது. அரசாங்கக் கடனில் உயர்வை ஏற்படுத்திவிடுகிற ஒரு பற்றுக்குறையை உருவாக்க வேண்டுமா என்னும் வரவு செலவுத் திட்டச் சிக்கலைப்பற்றி நாம் இங்கே கவனிக்க வேண்டியதில்லை. நம்மை எதிர்நோக்கி இருக்கும் கேள்வி என்னவென்றால், குறிப்பிட்ட அளவு கடன் இருக்கும் என்று வைத்துக்கொண்டால், அல்லது கடனை உயர்த்தவோ குறைக்கவோ வல்ல குறிப்பிட்ட வரவு செலவுத் திட்ட நிலைமைகள் இருக்கின்றன என்று வைத்துக்கொண்டால், மிக அதிகமான பொருளாதார அனுகூலங்களையாவது, மிகக் குறைந்த பொருளாதாரப் பிரதிகூலங்களையாவது பெறத்தக்க வகையில், தடுக்க முடியாத கடன் விற்பனைப் புரள்வையோ (turnover) மறுநிதியாக்கத்தையோ செய்வதையும், தற்காலிகக் கடனை எழுப்புவதையும் இல்லாவிட்டால் கடனைத் திருப்பித் தருவதையும் எவ்வாறு நிகழ்த்துவது என்பதுதான்.

கடன் நிர்வாகத்தைப் பற்றி பொதுப்படையான மூன்று கோட்பாடுகளை வகுக்கலாம்: (1) இத் துறையில் கையாளப்படுகிற கொள்கைகள், ஒரு பற்றுக் குறையைச் சரிப்படுத்துவதற்காக அல்லது தவணை முடிவடைகிற கடன் பத்திரங்களை ஈடு செய்வதற்காகத் தேவைப்படுகிற கடன்களைப் பொது மக்களிடமிருந்து, அவர்களை அதிகமாகக் கட்டாயப்படுத்தாமல் பெறத்தக்க ஆற்றல் படைத்தனவாக இருக்க வேண்டும். (2) அங்காடியிலிருந்து கடன் தரத்தக்க நிதிகளைப் (loanable funds) பெறுவதும், கடனைத் திருப்பிக் கொடுக்கும்போது அங்காடிக்கு அந் நிதிகளைத் திருப்பித் தருவதும், நிலைபேறான வளர்ச்சி என்னும் பொருளாதாரக் குறிக்கோளுக்குத் துணை புரிவனவாக இருக்கவேண்டுமே தவிர இடையூறு செய்வனவாக இருத்தல் ஆகாது. (3) அங்காடியில் கடன் வாங்குவது வசதியற்றதாகவோ அனுகூலமற்றதாகவோ இருக்கிற சமயங்களைத் தவிர்த்து ஏனைய நேரங்களில் மட்டுமே கடன் எழுப்பப்பட வேண்டும். இந்த மூன்று நோக்கங்கள் ஒன்றுக்கொன்று முரண்படக் கூடும் என்பது, அவற்றைப்பற்றி இனித் தனித்தனியாக விளக்கும்போது தெளிவாகத் தெரியும்.

1. கடன் நிர்வாகமானது, கடன் தரும் அங்காடியிலிருந்து தேவையான நிதிகளைப் பெறத்தக்க ஆற்றல் உடையதாக இருக்க வேண்டும் என்பது தெளிவு. அது அப்படி இல்லாவிட்டால், வரி—செலவுக் கொள்கைகள் முறியடிக்கப்பட்டு, நிதி நிர்வாகத்தின்மீது இன்றியமையாது இருக்க வேண்டிய நம்பிக்கை அழிந்துவிடும். தேவையான நிதிகளைப் பெறத்தக்க ஆற்றல் இருப்பதோடு, அந் நிதிகளைப் பெறுவதில் அரசாங்கத்திற்கு ஏற்படுகிற செலவும் நியாயமானதாக இருக்கவேண்டும். வட்டியானது, வரவு செலவுத் திட்டத்தின் ஒரு செலவாகும். வருமான ஓட்டத்தில் செலுத்தப் பட்டால் மிகக் குறைந்த வருமானத்தை உற்பத்தி செய்யும் லீவரேஜ் விளைவை (income generating leverage effect) உண்டாக்க வல்ல ஒரு மாற்றுச் செலுத்தலாகிறது. சில விதிவிலக்குகள் இருக்கக்கூடும் என்றபோதிலும், விரிவாக ஒப்புக்கொள்ளப்பட்டுள்ள பொதுவான விதி என்னவென்றால், வட்டியைச் செலுத்துவதற்காக விதிக்கப்படுகிற வரியானது, அதிக லீவரேஜ் விளைவையுடைய டாலர்களைக் குறைந்த லீவரேஜ் விளைவையுடைய டாலர்களாக மாற்றுகிறது என்பதும், அப்படி மாற்றுவதன் வாயிலாகப் பொருளாதார வளர்ச்சியின் வீதத்தைக் குறைக்கிறது என்பதுமே ஆகும். தன் நிதிகளைத் தன் கடனுக்கான வட்டியைச் செலுத்துவதற்காகச் செலவிடுவதைவிட வேறு பணிகளுக்காகச் செலவிடுவதை அரசாங்கம் அதிகமாக விரும்பக்கூடும்.

கடன் நிர்வாகத்தின் முதல் குறிக்கோள் நிறைவேற வேண்டுமானால், கடன் தரத்தக்க நிதிகள் இருக்கும் இடமெல்லாம் சென்று அவற்றை ஈட்டத்தக்க கடன் கருவிகள் பல இருக்க வேண்டும். அதோடு, கடன் வரையறைகட்குள் திறமையாகவும் தந்திரமாகவும் திட்டமிடுவதற்குரிய சுயேச்சையும், அங்காடி விரும்புகிற தவணை முடிவுகள், வட்டி வீதங்கள் முதலிய நிபந்தனைகளை ஏற்றுக்கொள்கிற சுயேச்சையும் இருக்கவேண்டும். அனுகூலமான பண அங்காடி நிலைமைகளை உருவாக்குவதில் பணத் துறை அதிகாரிகளிடமிருந்து நியாயமான ஒத்துழைப்பும் கிடைக்க வேண்டும். ஆனால் அந்த அதிகாரிகள் அத்தகைய ஒத்துழைப்பைத் தரும்போது, நிலைபேறான வளர்ச்சிக்குரிய பணவழித் தேவைகளை (monetary needs) நிறைவேற்ற வேண்டிய அவர்களுடைய பெரும் பொறுப்புக்கு அந்த ஒத்துழைப்பு இடையூறாக இருத்தலாகாது.

2. நிலைபேறான பொருளாதார வளர்ச்சிக்கு உதவும் முறையில் கடனானது நிர்வகிக்கப்பட வேண்டுமானால், கடன் நிர்வாகக் கொள்கையில் மாறக்கூடிய தன்மை (flexibility) ஏராளமாக இருந்தாக வேண்டும். வேலைக் குறைவு நிலைமை (situation of underemployment) இருக்கும்போது, பொருள்களுக்கும் ஊழியங்களுக்குமான தேவையில் (demand) ஏற்படும் சுருக்கம் மிகக் குறைந்த அளவினதாக இருக்கும் முறையில்தான் புதிய கடன் வெளியீடுகளும் மறுநிதியாக்கக் கடன் வெளியீடுகளும் அங்காடியில் வைக்கப்படவேண்டும். உயர்ந்த செலவு நாட்டம் படைத்தவர்களிடமிருந்து கடன் நிதிகளைப் பெறுவது நல்லதல்ல என்பதே இதன் பொருள். அந் நிதிகளைத் தனியாட்கள் யாரிடமிருந்தும் பெறக்கூடாது என்பதும், பாங்கு முறையில் அவை புதிதாக உருவாக்கப்பட வேண்டும் என்பதும் இதன் பொருளாக இருக்கக்கூடும். தீர்க்கவேண்டிய சிக்கல் மிகைப்பட்ட செலவாக (overspending) இருக்கும்போது, மேலே குறிப்பிட்டதற்கு நேர்மாறான கொள்கை தேவையாகிறது. அச் சமயத்தில், பணவழித் தேவையைக் குறைப்பதும், செலவு செய்யக்கூடியவர்களிடமிருந்து நிதிகளை எடுத்துக்கொள்வதும் (அப்படி எடுத்துக் கொள்வதற்காக உயர்ந்த வட்டி வீதங்களைக் கையாள வேண்டியிருக்கும் என்பது உண்மையே), பாங்கு முறையில் புதிய நிதிகளை உருவாக்காமல் இருப்பதுமே, கையாளப்படவேண்டிய குறிக்கோள்களாகும். கடன் நிர்வாகக் கொள்கையாலும் பிற கொள்கைகளாலும் விலையை நிலைபேறுக்கும் குறிக்கோளை நிறைவேற்றத் தவறுவது, மேலே சொல்லப்பட்ட 1ஆவது கோட்பாட்டை அழிக்கும் செயலாகவே அமையும். தங்கள் சேமிப்புகளின் மதிப்பு

எதிர்காலத்தில் குறையும் என்னும் அச்சம் பொதுமக்களிடம் ஏற்பட்டுவிடுமானுல், அரசாங்கக் கடன் பத்திரங்களின் டாலர் வட்டியும், டாலர் மூலதன மதிப்பும் நிலேயானதாக (fixed) இருப்பதால், பொது மக்களால் மிகக் குறைவான அளவில் விரும்பப்படும் சேமிப்பு முறைகளாகவே அப் பத்திரங்கள் இருக்க முடியும். இந் நிலேயில் இப் பத்திரங்களின் மூலம் கடன் வாங்குவது அரசாங்கத்திற்கு மிகவும் கடினமான செயலாக ஆகிவிடுகிறது. 1956–59-ல் ஏற்பட்ட விலே உயர்வின்போது சேமிப்புப் பாண்டுகளே (savings bonds) வைத்திருந்தவர்களின் நடத்தையி லிருந்து இந்த உண்மை தெளிவுற விளங்குகிறது. அந்த ஆண்டுகளில் இத்தகைய பாண்டுகளின் புதிய விற்பனேயைவிட ஏற்கனவே உள்ள இத்தகைய பாண்டுகளின் தொகையைத் திருப்பிக் கொடுத்ததே அதிகமாக இருந்தது.[26] 1957-ன் தொடக்கத்தில் வட்டி வீதங்கள் உயர்த்தப்பட்டுங்கூட இத்தகைய பாண்டுகளின் தொகையைத் திரும்பப் பெறுவது குறையவில்லே. விலேகள் உயரும் காலத்தில் தங்கள் சொத்துகளே நிலேயான டாலர் கணக்கில் வைத்துக்கொண்டிருப்பது அறிவுடைமையல்ல என்பதைப் பொதுமக்கள் உணர்ந்துகொண்டுவிட்டார்கள் என்பதையே இச் செய்தி எடுத்துக் காட்டுகிறது.

3. அரசாங்கக் கடன்களின் தவணே முடிவுக் காலத்தை அதிகப்படுத்துவதன் மூலம் மூன்ருவது கோட்பாட்டைச் சிறந்த முறையில் நிறைவேற்ற முடியும். எப்போதும் தவணே முடிவே அடையாத பிரிட்டிஷ் கான்சல்கள் (British Consols) என்னும் ஒரு வகைக் கடன் பத்திரங்களேப் போன்றவையே, இந்தக் கண்ணுேட்டத்தின்படி மிகச் சிறந்த அரசாங்கக் கடன் கருவிக ளாகும். கருவூலமானது, இத்தகைய கடன் பத்திரங்களின் தொகையை, தானே தேர்ந்தெடுக்கும் சமயங்களில்தான் திருப்பிக் கொடுக்கும்; அல்லது புதுப் பத்திரங்களின்மூலம் ஈடு செய்யும். குறைந்த வட்டி வீதம் இருக்கும் சமயங்களில், அல்லது நிலேபேருன வளர்ச்சிக்காகத் தேவைப்படும் சமயங்களில்தான், கருவூலம் இத்தகைய நடவடிக்கைகளில் ஈடுபடும். எனவே, இந்த முறையில், கடனேத் திருப்பித் தருவதும் மறுநிதியாக்கமும், கருவூலம் விரும்பும் சமயங்களில்தான் நடைபெறுமே தவிர, ஒப்பந்தப்படியுள்ள தவணே முடிவுத் தேதிகளில்—அவை பெரும்பாலும் இடர்ப்பாடான சமயங்களாகவே இருக்கும்—நடத்தப்பட வேண்டும் என்னும் கட்டாய நிலே இல்லே. அரசாங்கக் கடன் பத்திரங்களுக்கான அங்காடிகளுக்கு ஆதரவு அளிப்பது, நிலேபேருக்கத்திற்கு உதவும் பணவழிக் கொள்கையை மேற்கொள்வது ஆகிய இரண்டு நடை

முறைகளுக்கு இடையே எதைக் கையாள்வது என்று ஐக்கிய ரிசர்வ் பாங்கு திண்டாடுவதற்குக் காரணம், தவணை முடிவடைந்ததும் அரசாங்கக் கடன் பத்திரங்களை ஈடு செய்தாக வேண்டியிருக்கிற கட்டாயமே ஆகும்.

இந்த மூன்று கோட்பாடுகளையும் தனித்தனியாக ஆராயும் போது இவற்றை எவரும் எளிதில் ஏற்றுக்கொள்வர். ஆனால், இந்தக் கோட்பாடுகளுக்கு இடையே முரண்பாடு ஏற்படும்போது தான் எந்தக் கோட்பாட்டைப் பின்பற்றுவது என்னும் இடர்ப்பாடு தோன்றுகிறது. ஐசனேவருடைய (Eisenhower) நிர்வாகம் நீண்ட காலத் தவணை முடிவுக் கடன்களையே முற்றிலும் விரும்பியிருந்த போதிலும், சராசரித் தவணை முடிவுக் காலம் தொடர்ச்சியாகக் குறைந்துகொண்டே வந்தது. அந்தக் குறைவின் வேகம், காலம் கழிவதால் இயல்பாக ஏற்படவேண்டிய வேகத்தைவிட மிகுதியாக இருந்தது. ஏன்? இரண்டு காரணங்கள் கூறப்பட்டன. ஒரு காரணம் எளிதில் ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இருந்தது. மற்றொன்று, அத்துணை எளிதில் ஏற்கத்தக்கதாக இல்லை. முதல் காரணம், உயர்ந்த வட்டி வீதங்கள் உள்ள ஒரு காலத்தில்— குறுகிய தவணைமுடிவுகளைவிட நீண்ட தவணைமுடிவுகளுக்கே வட்டி வீதங்கள் பொதுவாக அதிகமாக இருக்கும்—கடனை நீண்ட தவணை முடிவுகள் உள்ளனவாக மாற்றுவதால் வரவு செலவுத் திட்டத்தின் வட்டிச் செலவுகள் உயர்ந்து, அப்படி உயர்வதால் வரவு செலவுத்திட்ட உபரி காரணமாக வரியைக் குறைக்கக்கூடிய காலம் ஒத்திவைக்கப்படும் என்பது. இரண்டாவது காரணம் முதலீட்டு நிதிகளுக்காக வாணிபத் துறையில் மிகக் கூடுதலான தேவை எழுகிற காலத்தில், நீண்ட கால மூலதன அங்காடியில் எத்தகைய நடவடிக்கையிலும் ஈடுபடாதபடிக் கருவூலத்தைத் தடுப்பதன் மூலமும், அத்தகைய அங்காடியைக் கட்டுப்படுத்தும் பணியை ஐக்கிய ரிசர்வ் பாங்குக்கு விட்டுவிடுவதன் மூலமுமே நிலை பேருக்க நோக்கம் சிறப்பாக நிறைவேற்றப்படும் என்பதாகும். இவ்வாருக, நீண்ட காலக் கடன்பத்திரங்களை வெளியிடாததன் மூலம், கருவூலமானது, 'பணத்துறை அதிகாரிகளின் வழியில் தான் குறுக்கே வராமல் ஒதுங்கியிருப்பதாக' அறிவித்தது. பாங்குக் காப்பிருப்புகளை மாற்றியமைப்பதன்மூலம், ஐக்கிய ரிசர்வ் பாங்குக் கொள்கையின் விளைவானது, முதலில் குறுகிய காலப் பண அங்காடியிலேயே ஏற்படுகிறது. குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு, அந்த விளைவானது நீண்டகால மூலதன அங்காடிக்கு மாற்றப் படலாம்.[27] ஆனால், நீண்டகாலக் கடன்பத்திரங்களை வெளியிடுவதன் மூலம் கருவூலமானது நீண்டகால நிதிகளை எடுத்துக்கொள்வதால், தனியாருடைய முதலீட்டுப் பெருக்கத்தை (private

investment boom) வரையறுக்க வேண்டிய தேவை உள்ள ஒரு காலத்தில், நீண்டகால மூலதன அங்காடியில் உடனடி விளைவு ஏற்பட்டிருக்கும். இவ்வாறாக 1956–1957-ல் அரசாங்கக் கடனின் தவணை முடிவுக் காலத்தை அதிகப்படுத்தியிருந்தால், ஐக்கிய ரிசர்வ் பாங்கின் கொள்கைக்கு அது ஆற்றல் மிக்க துணையாக இருந்திருக்கும்.[28]

கடன் நிர்வாகத்தின் கோட்பாடுகள் அல்லது குறிக்கோளாகத் தெரிவிக்கப்பட்டுள்ளவை அனைத்தையும் ஒரே சமயத்தில் நிறைவேற்றுவது இயலாத செயலாக இருக்கக்கூடிய பல நிலைமைகள் இருப்பதைச் சிறிதளவு சிந்தித்தாலும் நாம் உணர்ந்துகொள்ள முடியும். குறைந்த வட்டிக்குக் கடன் வாங்கும் கொள்கையைக் கையாள்வதானால், பெரும்பாலான சமயங்களில், குறுகிய காலக் கடன் பத்திரங்களையே வெளியிடவேண்டியிருக்கும். பொருளாதார வீக்கம் நடைமுறையில் இருக்கும்போது, குறைந்த வட்டிக்குக் குறுகிய காலக் கடனை வாங்கும் நடவடிக்கை, நிலைபேறுக்கக் குறிக்கோளுக்கு எதிரான செயலாகவே பெரும்பாலும் இருக்கும். ஏற்பட்டுள்ள சிக்கல் வேலைக்குறைவாக (underemployment) இருக்கும்போது, குறுகிய காலக் கடனால் நிலைபேறுக்க நோக்கம் நிறைவேற்றப்படலாம். ஆனால், அப்படி எழுப்பப்படும் கடனைக் கருவூலமானது விரைவில் ஈடுசெய்ய வேண்டியிருக்கிறது. அப்படி ஈடு செய்வதற்குரிய சமயம், பெரும்பாலும் அதற்குரிய வசதி இல்லாத நேரமாகவே இருக்கும். கடன் பெரிய அளவில் இருக்குமானால், கருவூலமானது அடிக்கடிப் பண அங்காடியை நாடவேண்டியிருக்கும். அதுமட்டுமல்ல. அந் நிலையில் கருவூலத்தின் நடவடிக்கைகள் அங்காடியின் நிலைமைகளை உருவாக்குவதில் சிறப்புமிக்க சக்தியாகவும் விளங்குகின்றன. இவ்வாறாகக் கடன் பெரிய அளவில் இருப்பதால், பொருத்தமான கடன் நிர்வாகக் கொள்கைகளைக் கையாள்வது, மிக இன்றியமையாத செயலாகவும் மிகக் கடினமான செயலாகவும் ஆகிவிடுகிறது.

## மேலும் படித்தற்கு உரியவை

1. ஆல்வின் எச். ஹான்சன் (Alvin H. Hansen), 'Fiscal Policy and Business cycles', நியூயார்க், நார்ட்டன், 1941, அத்தியாயம் 9.

எத்தகைய நிலைமைகளில் கடன் வளர்ந்திருக்கிறது என்பதையும் கடனைப்பற்றிய மனப்போக்குகள் எவ்வாறு மாறியுள்ளன என்பதையும் சிறந்த முறையில் அலசிக்காட்டும் மதிப்பு மிக்க ஆய்வுரை.

2. காஸ்டன் ஜெசி (Gaston Jese), 'Public Debt', Encyclopaedia of the Social Sciences, நியூயார்க், மாக்மில்லன், 1934.

கடனின் தன்மையையும் நிர்வாகத்தையும்பற்றிய நல்ல பொதுவான கருத்தாய்வு. இது 1930 ஐத் தொடர்ந்த ஆண்டுகளின் மந்தத்திற்கு முன்பு, கடனைப்பற்றிய கருத்தும் நடைமுறையும் எவ்வாறுஇருந்தன என்பதை விளக்கும்முறையில் அமைந்திருக்கிறது. கடன்பற்றிய அண்மைக் காலக் கருத்தோட்டம் இதில் இடம் பெறவில்லை.

3. ஹென்ரி சி மர்ஃபி (Henry C. Murphy), 'National Debt in War and Transition', நியூயார்க், மக்ரா ஹில், 1950.

4. கே. ஈ. பூல் (K. E. Poole), 'Fiscal Policies and the American Economy', (நியூயார்க், ப்ரெண்டிஸ் ஹால், 1951) என்னும் நூலின் நான்காவது அத்தியாயம் 'Debt Management' என்னும் தலைப்பை உடையது.

மர்ஃபியின் நூல், வரலாற்று அடிப்படையில் அமைந்துள்ளது; அவ்வப்போது தோன்றிய கடன் நிர்வாகச் சிக்கல்களைப்பற்றிக் குறிப்பிடத்தக்க அளவு பகுத்தாய்வைக் கொண்டிருக்கிறது. குறிப்பாக 8 முதல் 17வரை உள்ள அத்தியாயங்கள், நம் நூலின் இந்த அத்தியாயத்தில் உள்ள பொருள்பற்றி மேலும் விரிவாக அறிவதற்குத் துணை புரியும்.

'Debt Management' என்னும் கட்டுரை, கடன் நிர்வாகம் பற்றிய ஒரு சிறந்த, சிறிய கருத்தாய்வு.

5. பால் ஸ்டுடென்ஸ்கி (Paul Studenski), 'The Nature and Functions of Public Loans'. இது, ஈ. டி. ஃபேஜன் (E. D. Fagan), சி. டபள்யூ. மாசி (C. W. Macy) ஆகியோரின் 'Public Finance' என்னும் நூலில் (நியூயார்க், லாங்மன்ஸ், 1934, பக்கங்கள் 667 முதல்) உள்ளது.

அரசாங்கக் கடனின் தன்மையையும் வளர்ச்சியையும், ஆரம்ப நிலையில் நின்று ஆராயும் கட்டுரை. அண்மைக் காலத்ததாக இல்லா விட்டாலும், சிறந்த கட்டுரையாக விளங்குகிறது.

**கருவூலத்தால் உறுதிமொழி அளிக்கப்பட்ட கடன்பத்திரங்கள்:**

எச். டபள்யூ. ஹார்கிரீவ்ஸ் (H.W. Hargreaves), 'The Guaranteed Security in Federal Finance,' Journal of Political Economy, ஆகஸ்டு 1942, பக்கங்கள் 559 முதல்.

*1932* முதல் *1942* வரை அரசாங்கக் கார்ப்பரேஷன்களுக்கு மூலதனம் எவ்வாறு கிடைத்தது என்பதுபற்றிய மிக அருமையான கருத்தாய்வு. கடன் நடைமுறைகள்பற்றிய நல்ல விவரங்களும், எதிர்பாராக் கடன் சிக்கல்பற்றிய சிறப்பான ஆராய்ச்சியும் இதில் அடங்கியுள்ளன.

## 8ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. பொதுக்கடன் மீதான வட்டி, ஒரு செலவுச் செலுத்தலே (cost payment) ஆகும்.

2. Daily Statement of the United States Treasury, ஜூன் 30, 1959.

3. Daily Treasury Statement, ஜூன் 30, 1959, பக்கங்கள் 3, 4.

4. இப் புள்ளி விவரங்களின் மூலம்: Monthly Statement of Receipts and Expenditures of the U. S. Government, ஜூன் 30, 1959, பக்கம் 1. இங்கே காட்டப்பட்டுள்ள மொத்தக் கடனின் உயர்வுக்கும் (increase in gross debt), முந்திய சான்றுப் பொருளில் (exhibit), பொதுக் கடன் செலவுகளைவிடப் பொதுக் கடன் வரவுகளின் கூடுதல் தொகையாகக் காட்டப்பட்டுள்ள 221 மில்லியன் டாலர் என்னும் தொகைக்கும் வேறுபாடு இருக்கிறது. இந்த வேறுபாட்டிற்கு ஒரு காரணம், இங்கே தரப்பட்டுள்ள புள்ளி விவரங்களிற் சில தாற்காலிகமானவை என்பதாகும். சிறப்பு நிதிகளைப்பற்றிய துறை நுணுக்கங்கள் (technicalities) மற்றொரு காரணமாகும்.

5. Financial Statistics of Cities, 1930, பக்கம் 520.

6. Statistical Abstract of the United States, 1932, பக்கம் 211.

7. பெரும்பாலான பாண்டுகள் 'அழைக்கப்படக் கூடியவை'. அவற்றைப் பொறுத்தவரை, ஒரு குறிப்பிட்ட தேதிக்குப் பின்னரும், குறிப்பிட்ட தவணை முடிவுக்கு முன்னரும் உள்ள காலத்தில், எப்போது வேண்டுமானாலும் அவற்றின் அசலைத் திருப்பிக் கொடுத்துவிடக் கடன் வாங்கியவருக்கு (அரசாங்கத்திற்கு) உரிமை உண்டு.

8. 1945-ல் நிறைவேறிய வரிச் சரிக்கட்டல் சட்டமானது (The Tax Adjustment Act), இந்தப் பாண்டுகளை வெளியிடுவதற்கான அடிப்படையை அகற்றிவிட்டது.

9. அவர், அவருடைய விற்கப்படக்கூடிய பாண்டை, வட்டி வீதங்கள் உயரத் தொடங்கும்போது விற்பாரானால், ஒரு மூலதனக் கழிவுடன்தான் (at a capital discount) விற்கவேண்டியிருக்கும். ஆகவே, உயரும் வட்டி வீதங்களால் ஏற்படும் இழப்பைத் தவிர்க்க முடியாது.

திட்டவட்டமான அல்லது எதிர்பார்க்கப்படுகிற தவணை முடிவை உடைய ஒரு முதலீட்டின் தற்போதைய மதிப்பை அறிவதற்கான வாய்ப்பாடாவது **(Formula):**

$$P = A_n / (1 + r)^n$$

இந்த வாய்ப்பாட்டில், P என்பது ஒருவர் செலுத்தக்கூடிய தற்போதைய மதிப்பு அல்லது விலையையும், A என்பது எதிர்பார்க்கப்படுகிற எதிர்காலச் செலுத்தல் அல்லது மறு செலுத்தலேயும், n என்பது எத்தனை ஆண்டுகட்குப் பிறகு செலுத்தல் அல்லது மறுசெலுத்தல் எதிர்பார்க்கப்படுகிறது என்பதையும், n என்பது பாண்டை வாங்கக்கூடியவர் அதில் தன் நிதிகளை முதலீடு செய்வதால் தனக்குக் கிடைக்கும் என்று எதிர்பார்க்கிற விளைவு வீதத்தையும் (rate of return) குறிக்கின்றன. கருவூலப் பாண்டுகளில் 2 சதவீதத்தில் நான் முதலீடு செய்ய விரும்பினல், 2 சதவீதப் பாண்டின் மதிப்பை (par value) நான் செலுத்துவேன். இந்தப் பாண்டானது, ஆண்டுதோறும் அதன் சம மதிப்பில் 2 சதவீதத்தைத் தரும்; தவணைமுடிவுறும்போது அசல் தொகையைத் (சமமதிப்பை) திருப்பித்தரும். அந்தப் பாண்டின் சம மதிப்பு தற்போது 100 டாலராக இருக்கிறது என்றும், அது ஒரு 2 சதவீத 20 ஆண்டுப் பாண்டு என்றும் வைத்துக்கொள்வோம். அதன் தற்போதைய மதிப்பு அல்லது மூலதன மதிப்பு (capital value) என்பது, எதிர்காலச் செலுத்தல்களின் ஒரு வரிசையைக் குறிக்கும்; அதாவது 20 ஆண்டுகளுக்கு, ஆண்டு ஒன்றுக்கு 2 டாலர் வீதம் வட்டியும், 20 ஆண்டுகளின் முடிவில் அசல் தொகை 100 டாலரும் கிடைக்கும் என்பதைக் குறிக்கும் இந்த எண்களை முன் தெரிவித்த வாய்ப்பாட்டில் பெய்தால்,

$$P = \$2 / 1{\cdot}02 + \$2 / (1{\cdot}02)^2 + \$2 / (1{\cdot}02)^3 + \ldots\ldots\ldots + \$102 / (1{\cdot}02)^{20} = \$100$$ என்று ஆகும்.

அந்தப் பாண்டைப் பத்து ஆண்டுகளுக்கு வைத்திருந்த பிறகு, அந்தப் பாண்டையொத்த பாதுகாப்புள்ள பிற முதலீடுகளின் அங்காடி வீதம் (market rate) 3 சதவீதமாக உயர்கிறது என்று வைத்துக்கொள்வோம். அந் நிலையில் என்னுடைய பாண்டை நான் 100 டாலர் ரொக்கமாக மாற்றிக்கொண்டால், அந்த ரொக்கத்தை 3 சதவீதத்திற்கு மறுமுதலீடு செய்யமுடியும். ஆனல் அந்தப் பாண்டை நான் ஒரு கழிவுடன்தான் (discount) விற்கமுடியும். ஏனென்றுல் அந்தப் பாண்டை வாங்கக்கூடியவர்கள், தங்கள் தொகையை 3 சதவீதத்திற்கு முதலீடு செய்யமுடியும். ஆகவே, நான் பத்தாண்டுகள் வைத்திருந்த என்னுடைய 2 சதவீதப் பாண்டை வாங்கக்கூடியவர் கொடுக்கக்கூடிய தொகை, கீழ்க்கண்டதாக இருக்கும் :

$$P = \$2 / 1{\cdot}03 + \$2 / (1{\cdot}03)^2 + \$2 / (1{\cdot}03)^3 + \ldots\ldots\ldots + \$102 / (1{\cdot}03)^{10} = \$91{\cdot}47.$$

10. அளிப்புக்கூற்று விலைகளுக்கிடையே (bid prices) பெரும் மாறுபாடு இருப்பதாகக் கருதிவிடக்கூடாது, உண்டியல்கள் முக்கியமாகப் பாங்குகளுக்கு விற்கப்படுகின்றன. பாங்குகளோ, மிக நன்ருக அமைக்கப்பட்ட அங்காடியாகும். எடுத்துக்காட்டாக, 14–6–1951 அன்று வெளியிடப்பட்ட உண்டியல்களுக்காக ஒப்புக்கொள்ளப்பட்ட மிக உயர்ந்த அளிப்புக்கூற்று (bid), 100 டாலர் சம மதிப்புள்ள ஒவ்வொரு உண்டியலுக்கும் 99·632 டாலராகும்; மிகக் குறைந்த அளிப்புக் கூற்று, 99·628 ஆகும் (Annual Report of the Secretary of the Treasury, 1951, பக்கம் 169). இரண்டாம் உலகப் போரின்போதும், அதன்பின் 1947 வரையிலும், 1 சத வீதத்தில் ⅜ பங்கு கழிவுடன் உண்டியல்களை வாங்கவும் விற்கவும் ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் ஆயத்தமாக இருந்ததன் விளைவாக, உண்டியல்களின் விலை ஒரு நிலையில் நிறுத்தப்பட்டது.

• 11. 1959 மார்ச் 31 அன்று, அரசாங்கக் கடனில், பாங்குகளின் முதலீடு 96 பில்லியன் டாலராகவும், ஈட்டுறுதிக் (இன்சூரன்ஸ்) கம்பெனிகளின் முதலீடு 12 பில்லியன் டாலராகவும், ஏனைய கார்ப்பரேஷன்கள் மற்றும் சங்கங்களின் முதலீடு 38 பில்லியன் டாலராகவும் இருந்தன என்று கருவூலத் துறை மதிப்பிட்டது (Federal Reserve Bulletin, ஜூன் 1959, பக்கம் 622). இந்த மூன்றுவகை முதலீட்டாளர்களுமாகச் சேர்ந்து, அரசாங்கக் கடனில் 146 பில்லியன் டாலர் முதலீடு செய்திருந்தனர். தனியார் வாணிப நிறுவனங்கள், தங்கள் நிதிகளை முதலீடு செய்வதற்கான ஒரு தலைசிறந்த வாய்ப்பாக அரசாங்கக் கடனைக் கருதத் தொடங்கிவிட்டன என்பது இந்தப் புள்ளி விவரத்திலிருந்து தெளிவாகத் தெரிகிறது.

12. இந்தக் கணக்குகள், Daily Treasury Statement (ஜூன் 30, 1959, பக்கங்கள் 6–8) என்பதில் தரப்பட்டுள்ள விவரங்களை அடிப்படையாகக் கொண்டவை. இந்த விவரங்கள், அரசாங்கக் கடனின் பல்வேறு வகைக் கடன் பத்திரங்களின் முழுப் பட்டியலைத் தந்துள்ளன. தவணை முடிவுகள், கடன் பத்திரங்கள் வெளியிடப்பட்ட தேதியிலிருந்து அசல் தொகை திருப்பித் தர வேண்டிய தேதிவரை இருப்பதாகக் கணக்கிடப்பட்டுள்ளன. செலுத்தவேண்டிய சில கருவூலப் பாண்டுகள், தவணை முடிவுக்கு 3 முதல் 5 ஆண்டுகள் வரை முன்னதாக உள்ள ஓர் அழைப்புத் தேதியை (a call date) உடையனவாக உள்ளன. எடுத்துக்காட்டாக, 1953-ல் வெளியிடப்பட்ட '1978–1983-ன் 3¼ கள்,' 3¼ சதவீதமுள்ள கூப்பன் வட்டியைத் தருகின்றன. இவை 1983-ல் திருப்பித் தரக்கூடியவை. ஆனால் கருவூலம் விரும்பினால், 1978-லேயே இவற்றை 'அழைக்கலாம்' (callable). இவ்வாறு 'அழைக்கப்படும் தன்மை' யின் விளைவாகக் கடன் பத்திரங்களை, சம மதிப்பில் தவணை முடிவு அடைவதற்கு முன்னரே திருப்பித்தர முடிகிறது; அல்லது ஈடுசெய்ய முடிகிறது. அப்படிச் செய்ய முடிவதால், கடன் நிர்வாகத்தில், கடன் வாங்கியவருக்கு (அரசாங்கத்தில்) ஓரளவு சுதந்தரம் உண்டாகிறது. 1953-க்குப் பிறகு வெளியிடப்பட்ட எந்தக் கடன் பத்திர வெளியீட்டிலும் இந்த அழைக்கப்படும் தன்மை காணப்படவில்லை.

13. Daily Treasury Statement என்பதன், ஜூலை 1957, ஜூன் 1958 ஆகிய மாதங்களின் இறுதியில் வெளியிடப்பட்ட இதழ்களிலிருந்து தொகுக்கப்பட்டது.

14. செலுத்தவேண்டிய கடன் வெளியீடுகள் பற்றிய புள்ளிவிவரங்கள், Daily Treasury Statement என்பதிலிருந்து (ஜூன் 30, 1958) எடுக்கப்பட்டவை. இரண்டாவது பத்தியில், ஓராண்டில் செலுத்தவேண்டியுள்ள சராசரித் தொகைகள்பற்றிய புள்ளி விவரங்களைத் தருவது, இன்னும் துல்லியமானதாக இருக்கும். ஆனால், நம்முடைய கருத்தாய்வுக்கு, இங்கே தரப்பட்டுள்ள புள்ளி விவரங்களே போதுமானவை.

15. இந்த முறையானது, இரண்டு நோக்கங்களை நிறைவேற்றுவதற்குப் பயன்படுகிறது. (1) போர் முயற்சியின் அல்லது நெருக்கடி முயற்சியின் நிதித் துறையில் மிக அதிகமான மக்களைப் பங்கேற்கச் செய்வதற்கு, (2) தனியாட்களிடம் குவிந்துள்ள ஆளப்படா நிதிகளின் (accumulated idle funds) விளைவாக விலைகளில் ஏற்படக்கூடிய பணவீக்கச் செல்வாக்கைக் குறைப்பதற்கு.

16. ஐக்கிய அமெரிக்கக் கூட்டரசாங்கக் கடனின் ஒரு பகுதியை, குறிப்பிட்ட தவணைத் தேதி எதுவும் இல்லாத நிலையான கடனாக மாற்றுவதற்கான ஒரு முன்மொழிவு (proposal) நியூயார்க் டைம்ஸ் பத்திரிகையின் 8-4-1946 இதழில் தெரிவிக்கப்பட்டிருந்தது. அந்த முன்மொழிவு, அத்தகைய கடன் பத்திரங்களால் நிறுவன முதலீட்டாளர்களுக்கும், கருவூலத்திற்கும் ஏற்படக் கூடிய நன்மைகளை வற்புறுத்தியிருந்தது. அத்தகைய கடன் பத்திரங்கள் வெளியிடப்பட்டால், ஒரு குறிப்பிட்ட நாளில் கடனைத் திருப்பிச் செலுத்தவேண்டிய அல்லது மறுநிதியாக்கம் செய்யவேண்டிய கட்டாயத்திற்குக் கருவூலம் உள்ளாகாது. அந்தத் திட்டத்தில் கடனைத் திருப்பிச் செலுத்தவேண்டுமானால், கருவூலமானது, கடன் பத்திரத்தை அழைப்பதற்கான தன் உரிமையைப் பயன்படுத்தி அதன் அசலைத் திருப்பித் தரலாம்; அல்லது வெளி அங்காடியில் அதனை விலைக்கு வாங்கலாம்.

17. இதுபற்றிய விவரம், 'தி எகானமிஸ்ட்' (The Economist) பத்திரிகையில் 1932-ல் வரிசையாக வெளியான கட்டுரைகளிலும் குறிப்புகளிலும் பாராட்டத்தக்க முறையில் தரப்பட்டிருக்கிறது. 'போர்க் கடன்' (War Loan) என்னும் தலைப்பில் 2-7-1932 இதழிலும் (பக்கம் 10), 'மாற்றுகையின் முழுக் கதை' (The Full Tale of Conversion) என்னும் தலைப்பில் 5-11-1932-லும் வெளியான குறிப்புகள், சிறப்பாகக் குறிக்கத்தக்கவை.

18. நவம்பர் 5, 1932, பக்கம் 824.

19. 1922-ல் வெளியிடப்பட்ட 1947-1952-4¼ சதவீதப் பாண்டுகள், இதற்குள்ள ஒரு விதிவிலக்கு ஆகும்.

20. (அ) 1919-ன் வெற்றி உரிமைக் கடன் சட்டத்தின்படி (The Victory Liberty Loan Act), ஜுலை 1, 1920-ல் செலுத்தவேண்டியுள்ள உரிமைப் பாண்டுகள் (liberty bonds), வெற்றி நோட்டுகள் (victoy notes) ஆகியவற்றின் கூட்டுத்தொகையில் 2½ சதவீதம் என்பதிலிருந்து, ஜுலை 1, 1920-ல் ஐக்கிய அமெரிக்காவுக்கு வெளிநாட்டு அரசாங்கங்கள் தரவேண்டிய கடன் ஏதாவது இருந்தால் அதன் சம மதிப்பைக் கழித்தபின் கிடைக்கும் தொகை.

(ஆ) 1932-ன் நெருக்கடி நிவாரணம் மற்றும் கட்டுமானச் சட்டத்தின்படி (The Emergency Relief and Construction Act), அச் சட்டத்தின்கீழ் நிதிஒதுக்கம் செய்யப்பட்ட அல்லது அதிகார அளிப்புச் செய்யப்பட்ட செலவுகளின் மொத்தத் தொகையில் 2½ சதவீதம்.

(இ) நாட்டின் தொழில் மீட்சிச் சட்டத்தின்படி (The National Recovery Act), அச் சட்டத்தின்கீழ் நிதி ஒதுக்கம் செய்யப்பட்ட அல்லது அதிகார அளிப்புச் செய்யப்பட்ட செலவுகளின் மொத்தத் தொகையில் 2½ சதவீதம். 1951-ல் இந்த விதிகளின்படிச் செய்யப்பட்ட நிதி ஒதுக்கங்களின் தொகை ½ பில்லியன் டாலராகும். (Annual Report of the Secretary of the Treasury, 1951, பக்கம் 800)

21. எச். வால்ட்டர் ஹார்கிரீவ்ஸ் (H. Walter Hargreaves) என்பார், 'Journal of Political Economy' என்னும் இதழில் (தொகுப்பு 50, ஆகஸ்டு 1942), 'The Guaranteed Security in Federal Finance' என்னும் தலைப்பில் எழுதியுள்ள கட்டுரை, கருவூலத்திற்கும் அரசாங்கக் கார்ப்பரேஷனுக்கும் உள்ள நிதித்தொடர்புபற்றிய மிகச் சிறந்த கட்டுரையாக விளங்குகிறது. இந்தப் பிரிவில் நம்முடைய கருத்தாய்வு, பெரிதும், பேராசிரியர் ஹார்கிரீவ்சின் முடிவுகளையே சார்ந்திருக்கிறது.

22. ஹார்கிரீவ்ஸ், முன்னர் குறிப்பிட்ட அதே ஆதாரம், பக்கங்கள் 564–65. விலை ஆதரவுச் செலுத்தல்களால் (price support payments) பண்டக் கடன் கார்ப்பரேஷனின் (the commodity credit corporation) மூலதனத்தில் ஏற்பட்ட குறைவு, கருவூலத்தால் ஈடுசெய்யப்பட்டது, இதற்கான ஓர் அண்மைக் கால எடுத்துக்காட்டு ஆகும்.

23. சென்சஸ் பீரோவின் 'Compendium of State Government Finances in 1957', பக்கம் 38; 'Compendium of City Government Finances in 1957', பக்கம் 112 ஆகியவற்றிலிருந்து எடுக்கப்பட்டவை.

24. மிகக் குறுகிய துறைநுணுக்கப் பொருளில் கூறுவதானால், 1933-ல் தங்கம்பற்றிய விதி நிறுத்திவைக்கப்பட்டதை (கடன்பத்திர ஒப்பந்தத்தில் குறிப்பிட்டுள்ளபடித் தங்கம் தர மறுத்ததை) ஒரு தவறுகை (default) என்று கருதலாம். உள்நாட்டுப் போருக்குப் பிறகு, கூட்டிணைப்பு அரசின் (confederacy) கடன்களை ஏற்றுக்கொள்ள ஐக்கிய அமெரிக்க அரசாங்கம் மறுத்ததை கூட்டரசாங்கத் தவறுகை என்று கருதமுடியாது.

25. இவான்ஸ் கிளார்க் (Evans Clark), 'The Internal Debts of the United States)', நியூயார்க், இருபதாம் நூற்றுண்டு நிதி (Twentieth Century Fund), 1933, பக்கம் 270.

26. ஐக்கிய அமெரிக்கச் சேமிப்புப் பாண்டுகள் திட்டம் தொடங்கப்பட்ட பிறகு, முதல்முறையாக, 1956-ல் தான் விற்பனை விலையால் அளக்கப்பட்ட திருப்பிச் செலுத்தப்படும் தொகைகள் விற்பனைகளைவிட மிகக் கூடுதலாக இருந்தன. இந்த இருதொகைகளையும் ஒப்பிடும்போது, திருப்பிச் செலுத்தப் படும் தொகைகளிலிருந்து (redemptions), சேர்ந்துள்ள வட்டியைக் கழித்து விடுவது முக்கியம். அப்படிச் செய்யாவிட்டால், சேர்ந்துள்ள வட்டியின் (accrued interest) விளைவாக, திருப்பிச் செலுத்தப்படும் தொகை மிகக்கூடுதலாகத் தோற்றம் அளிக்கும். நாம் இங்குப் பயன்படுத்துகிற அளவையிலிருந்து, சேமிப்புப் பாண்டுகளை வைத்திருப்பவர்கள், 1956-க்குப் பிறகு இவற்றைக் குறைந்த அளவில் வைத்திருந்தார்கள் என்பது தெளிவாகத் தெரிகிறது. காண்க: Treasury bulletin, ஜூன் 1959, பக்கம் 40.

27. காண்க: வினிஃபீல்ட் டபள்யூ. ரீஃப்ளர் (Winifield W. Riefler), 'Open Market Operations in Long Term Securities', Federal Reserve Bulletin, நவம்பர் 1958.

28. அதே சமயத்தில், அத்தகைய கொள்கையானது, உயர்ந்த நீண்ட கால வட்டி வீதங்களின் விளைவாக வீடுகட்டுதல், பள்ளிக்கூடம் கட்டுதல், பிற கட்டுமான வேலைகள் ஆகியவை ஏற்கெனவே பாதிக்கப்பட்டுள்ள ஒருகாலத்தில், குடியிருப்பு வீடுகள் கட்டுவதற்கான நிதிகள், மாநில அரசுகளும் தல அரசுகளும் கடன் வாங்குவதற்கான நிதிகள் ஆகியவற்றை மேலும் கிடைப்பதருமை (scarcity) உடையனவாக ஆக்கிவிட்டிருக்கும். கருவூலமானது நீண்டகாலக் கடனைவிடக் குறுகிய காலக் கடனை விரும்புவதற்கான இந்தக் காரணமானது, மேலே சொல்லப்பட்ட மற்ற இரண்டு காரணங்களைப்போல அடிக்கடி எடுத்துக்காட்டப் படுவதில்லை. வீடுகட்டும் பணிக்கு, மூலதன இறுக்க நிலைகளிலிருந்து, தனி நிவாரணத்தைத் தற்போதுள்ள கூட்டரசாங்கத் திட்டங்கள் மூலமாகவே தரமுடியும். ஆனால் பல்வேறு கூட்டரசாங்கக் கொடைத் திட்டங்கள் மூலமாக மாநில, தல அரசாங்கங்கட்கு நிவாரணம் அளிப்பது, மிகவும் கடினமான செயலே ஆகும்.

# 9. பொதுக் கடனும் பண அளிப்பும்

அரசாங்கம் கடன் வாங்குகிற முறைகளால், பயன் படுத்துவதற்குக் கிடைக்கும் பணத்தின் தொகையில் மாறுதல் ஏற்பட்டு, அதன் விளைவாகப் பொருளாதாரத்திலும் சிறப்பான மாறுதல்கள் ஏற்படக்கூடும். அரசாங்கக் கடன் பணவீக்கத் தன்மையை உடையதாக இருக்கிறது என்று சொல்லப்படுவதைப் பல சமயங்களில் நாம் கேட்க நேரிடுகிறது. அதாவது, கடன் வாங்குவதை இன்றியமையாததாக ஆக்குகிற வரவு செலவுத் திட்டப் பற்றுக்குறையால் ஏற்படுகிற பணவீக்கத்தோடு, அரசாங்கம் கடன் பத்திரங்களை வெளியிடுவதால் கூடுதலான பணவீக்கம் ஏற்படுகிறது என்று கூறலாம். அரசாங்கக் கடனின் உயர்வால் அல்லது குறைவால் பொருளாதாரத்தில் அளிக்கப்படும் பணத்தின் அளவில் எத்தகைய மாறுதல் ஏற்படும்? இந்தக் கேள்விதான், இந்த அத்தியாயத்தின் பகுத்தாய்வுக்கு உரிய பொருளாகும்.

பண அளிப்பைப் பொதுக் கடன் எந்த முறையில் மாற்றி யமைக்கிறது என்பதைப்பற்றி ஆய்ந்து அறிவதற்கு முன்னர், பண அளிப்பில் ஏற்படுகிற மாறுதலால் பொருளாதாரத்தின் செலவு வீதத்தில் எத்தகைய விளைவுகள் ஏற்படக்கூடும் என்பதைக் கண்டறி வோம். 'பண அளிப்பு' (money supply) என்பது, பரிவர்த்தனைச் சாதனமாகப் (medium of exchange) பணியாற்றுவதன் மூலம் பணத்தின் வேலையைச் செய்யும் பொருள்கள் அனைத்தி னுடைய கூட்டுத் தொகையைக் குறிக்கிறது. ரொக்கத்தின் (cash) அளவும் — அதாவது நாணயங்கள் (coins), காகிதப் பணம் (paper money) ஆகியவற்றின் அளவும், 'செக்' (cheque) முறைக்கு உட்பட்ட பாங்கு வைப்புகளின் (bank deposits) அளவும் பண அளிப்பில் அடங்கும். நாணயம், காகிதப் பணம், பாங்கு வைப்புகள் ஆகிய இவைதான், தற்காலப் பொருளாதாரத்தில் செலுத்தும் சாதனங்களாகப் (means of payment) பயன்பட்டு வருகின்றன.

வாங்கும் நாட்டமானது (the propensity to buy) பண அளிப்புக் கூற்றுக (offer of money) ஆகும்போதுதான், அங்காடியில் அதன் விளைவு பதிகிறது. மொத்தத் தேவையை மாற்றியமைக்கும் ஏனைய காரணிகளோடு கூட, பணத்தின் அளவும் (செலாவணி, 'செக்' முறை வைப்பு ஆகியவற்றின் அளவும்), பொருளாதார நடவடிக்கையின் அளவு, செல்வம்—வருமானம்—ஆகியவற்றின் பங்கீடு ஆகிய இரண்டையும் முக்கியமான முறையில் பாதிக்கக் கூடும். பொருள்கள்—ஊழியங்கள் ஆகியவற்றிற்கான பண வழித் தேவைமீது பணத்தின் அளவுக்கு உள்ள செல்வாக்கின்மூலமாகவே, அது, இத்தகைய விளைவுகளை ஏற்படுத்தமுடியும். மொத்த நிலையில் (in the aggregate), பணவழித் தேவையானது (monetary demand) கீழ்க்கண்ட இரண்டு முறைகளாலேயே உயர முடியும். 1. பண அளிப்பில் ஏற்படும் உயர்வு. 2. பண அளிப்புப் புரள்வின் வீதத்தில் (rate of turn-over of the money supply) ஏற்படும் உயர்வு. இப்படிச் சொல்வதால் பண வழித் தேவையின் மாறுதல்கள், பண அளிப்பையும், பணத்தின் வேகத்தையுமே (velocity) பொறுத்திருக்கின்றன என்று சொல்வதாகப் பொருள்படாது. பொருள்களுக்கும் ஊழியங்களுக்குமாகப் பண அளிப்புக் கூற்றைச் செய்வதற்கான முடிவெடுக்கும்போது, வேறு பல காரணிகளும் அந்த முடிவைப் பாதிக்கக்கூடும்.

எந்தக் குறிப்பிட்ட கால அளவிலும், பண அளிப்பானது, நடவடிக்கைகளுக்காக (transactions)—அதாவது வாங்குவதற்காகப் பயன்படுத்தப்படும் ; அல்லது, ரொக்கமாகவோ, பாங்கு இருப்புகளாகவோ அல்லது ஏனைய நீர்மைச் சொத்துகளாகவோ (liquid assets) உள்ள நீர்மை இருப்புகளுக்காகப் (liquid balances) பயன்படுத்தப்படும். நடவடிக்கைக் காரியங்களுக்கான (அதாவது நுகர்வு அல்லது முதலீட்டுக்கான) பணத் தேவை உயர்ந்து, பண அளிப்பின் அளவு மாறாமல் இருக்குமானால், வட்டி வீதமானது உயரத் தொடங்கும். பண வேகமானது (velocity of money) நிலையாக இருக்கும்போது வட்டி வீதம் உயரும் வீதத்தைவிடப் பணவேகம் உயரும்போது வட்டி வீதம் உயரும் வீதம் குறைவாகவே இருக்கும். ஏனைய நிலைகள் யாவும் மாறாமல் இருந்து வட்டி வீதங்கள் மட்டும் உயர்வதால், முதவீட்டுச் செலவின் அளவும், கடன் வாங்கிச் செய்யப்படுகிற நுகர்வுச் செலவின் அள்வும் குறையும். தேவை (demand) அளவுக்கு மீறி இருக்கும் நிலையில் பண இறுக்கக் கொள்கை (tight money policy) கையாளப்படுவதன் அடிப்படைக் காரணத்தை இதிலிருந்து நாம் தெரிந்துகொள்ளலாம். பண வழித் தேவை உயரும்போது அந்த உயர்வுக்கு ஏற்ற அளவில் உயர்வதற்குப் பண அளிப்பு அனுமதிக்கப்படாவிட்டால் வட்டி வீதங்கள்

உயர்வடையும். அப்படி ஏற்படும் வட்டி வீதங்களின் உயர்வால், நடவடிக்கைகளுக்கான தேவையில் மேலும் ஏற்படக்கூடிய உயர்வின் அளவு குறைக்கப்படும். ஆனால் பண வேகத்தில் ஏற்படக் கூடிய உயர்வால், இந்தப் பண இறுக்கக் கொள்கையானது, முழு அளவில் அல்லது ஓரளவில் முறியடிக்கப்படக்கூடும் என்பது உண்மையே. பண வேகத்தைக் கட்டுப்படுத்துவதில் பண வழி ஏற்பாடுகளுக்குக் குறிப்பிடத்தக்க ஆற்றல் இல்லை.

வேலை நிறைவு அளவுக்குத் தேவைப்படுவதைவிடத் தாழ்ந்த மட்டத்திற்குப் பண வழித் தேவையானது குறைந்துவிட்டால், அந் நிலையில் ஒரு நிலையான பண அளிப்பால், நீர்மை இருப்புகள் உயரும் ; வட்டி வீதங்கள் குறையும். பண அளிப்பு பயன்படுத்தப் படும் வேகமும் ஓரளவு குறையும். இதன் விளைவாகப் பணவாட்டச் சக்திகளின் (deflationary forces) ஆற்றல் பெருகும். இத்தகைய நிலையில் எழுகிற சிக்கல், பணத்தைத் தாராளப்படுத்துவது எப்படி என்பதே. இதற்கு இரண்டு முறைகளைக் கையாளலாம் : 1. பொது மக்களின் நீர்மை விருப்பத்தை நிறைவு செய்வதற்குத் தேவைப்படும் அளவு பணத்தைப் பொருளாதாரத்தில் செலுத்துவது. 2. முதலீடு செய்வதற்கும் நுகர்வுக்காகக் கடன் வாங்குவதற்கும் உரிய தூண்டுதலைப் பலப்படுத்துவதற்குத் தேவையானஅளவுக்கு வட்டி வீதத்தைக் குறைப்பது. ஒரு பின்னிறக்கத்தின்போது, பண அளிப்பின் அளவில் ஏற்படும் வீழ்ச்சியைத் தடுப்பதும்,[1] முடியுமானால் அந்த அளவை உயர்த்துவதுமே, நோக்கங்களாக இருக்கும்.

வேலை நிறைவு நிலைமைகளை வளர்க்கும் பணியில் பண அளிப்பு ஏற்கக்கூடிய பங்கைப் பற்றியே இதுவரை இந்த அத்தியாயத்தில் நாம் கருத்தாய்வு செய்தோம். ஆனால், விலை மட்டத்தை (price level) நிலைபேறுக்குவது எப்படி என்பதும் இன்றியமையாத ஒரு கேள்வியே. உண்மையான பொருள்களையும் ஊழியங்களையும் உற்பத்தி செய்வதற்குப் பொருளாதாரத்திற்கு உள்ள ஆற்றலை விடப் பணவழித் தேவையானது அதிகமாக உள்ள நிலைமைதான், பணவீக்கம் என்று நெடுங்காலமாகக் குறிப்பிடப்பட்டு வருகிறது. இத் தன்மை படைத்த பண வீக்கத்தில், 'மிகச் சில பொருள்களை மிகக் கூடுதலான பணம் துரத்திக்கொண்டு வருகிறது;' அதோடு, விலை மட்டமானது, பொருள்களின் பண மதிப்பும் மொத்தப் பணச் செலவுகளும் ஒரே அளவில் இருக்கிற சம நிலையை அடைய முயல்கின்றன. பொதுவாக விலைகள் உயர்கின்றன. பயன்படுத்தப் படாத சாதனங்கள் குறிப்பிடத்தக்க அளவில் இருக்கும்போது பண வழித் தேவையில் ஏற்படும் உயர்வால் பொதுவான விலை

உயர்வு ஏற்படாது. ஆனால், சாதனங்களின் முழு வேலை அளவை அடைந்த பிறகும் மொத்தத் தேவை உயர்ந்துகொண்டே இருந்தால், பணவீக்க அழுத்தங்கள் (inflationary pressures) மிகுந்த ஆற்றல் உடையனவாக ஆகிவிடுகின்றன. அந் நிலையில் உயர்ந்த தேவை காரணமாக ஏற்படும் விலை உயர்வால் இலாப வாய்ப்புகள் உருவாகின்றன. அவ் வாய்ப்புகள், கிடைத்தற்கரிய சாதனங்களுக்கான (scarce resources) போட்டியை அதிகப்படுத்திவிடுகின்றன. இப் போட்டியால் உற்பத்திச் செலவுகள் உயர்ந்து, மேலும் விலைகள் உயர்வதற்கான நிலைமை ஏற்பட்டுவிடுகிறது. இவ்வாறாக, பொருளாதாரத்தின் ஒரு துறையில் (எடுத்துக்காட்டாக முதலீட்டுத் துறையில்) ஏற்படும் தேவையின் பெருக்கம், அதே வகையான சாதனங்களைப் பயன்படுத்தும் பிற துறைகளில் (எடுத்துக்காட்டாக நுகர்வுப் பொருள்கள்பற்றிய துறையில்) தேவையின் பெருக்கம் இல்லாவிட்டாலும், அத் துறைகளின் உற்பத்திச் செலவை உயர்த்திவிடுகிறது.

தேவையின் உயர்வால் இழுக்கப்பட்ட பண வீக்கத்தைத் தவிர (demand-pull inflation), கூலியால் உந்தப்பட்ட பண வீக்கம் (wage-push inflation), விலையை நிர்வகிப்பதால் ஏற்பட்ட பண வீக்கம் (administered-price inflation) முதலிய பிற வகைப் பண வீக்கங்களைப்பற்றி வற்புறுத்திக் கூறுவது, சென்ற சில ஆண்டுகளில் ஒருவகை நாகரிகமாக ஆகிவிட்டது. ஆனால், பணவீக்கத்தை ஏற்படுத்தும் காரணம் எதுவாக இருந்தாலும், போதுமான பணவழித் தேவைமட்டுமாவது கூடவே இருந்தாலொழியப் பொதுவான விலை உயர்வு எதுவும் ஏற்பட முடியாது என்பது தெளிவாக விளங்குகிறது. அதோடு, நாம் மேலே எடுத்துக் காட்டியதைப்போல, பணவழித் தேவையின் ஒரு தலையாய பகுதியாகப் பண அளிப்பு இருப்பதால், பண அளிப்பில் ஏற்படும் மாறுதல், விலை மட்டத்தில் மாறுதலை ஏற்படுத்தும் காரணிகளில் ஒன்றாக இருக்கிறது என்பதை நாம் மறுக்கமுடியாது. ஆகவே, பண அளிப்பானது, பணவழித் தேவையைப் பாதிப்பதால், பொருளாதார நடவடிக்கைகளின் அளவு—விலைகளின் அளவு—ஆகிய இரண்டையும் பாதிக்கிறது என்பதை அறிகிறோம்.

இனி, நாம் அரசாங்கக் கடனால் பண அளிப்பு எந்த வகைகளில் பாதிக்கப்படுகிறது என்பதை ஆய்ந்து அறியலாம்.

### பொதுக் கடனின் பண ஆக்கம் : செலாவணிப் பெருக்கம் (Monetization of the Public Debt: Currency Expansion)

பொதுக் கடனால் (அரசாங்கக் கடனால்) ஏற்படக்கூடிய பணவீக்க நிலைமைகளைப்பற்றி ஆராயும்போது, செலாவணி (currency), பாங்குச் செலாவணி (bank credit) ஆகிய இரு துறை

களிலும் அரசாங்கக்கடனால் ஏற்படுகிற பண ஆக்கத்தைப் பற்றியும் நாம் ஆராயவேண்டியிருக்கிறது. பொதுக் கடனால் ஏற்படுகிற செலாவணிப் பெருக்கம் இந்தப் பகுதியிலும், பாங்குச் செலாவணிப் பெருக்கம் அடுத்த பகுதியிலும் ஆராயப்படுகின்றன.

பொதுக் கடனின் பண ஆக்கம் என்றால், புதிய நோட்டுகளை அச்சடித்து, அரசாங்கத்திற்குக் கடன் கொடுத்தவர்களிடம் அவற்றைக் கொடுத்து, சட்டமுறைப் பணமாக (legal tender) அவற்றை ஏற்கும்படிச் செய்வது என்று பொருள் என்றுதான் பாமர மனிதர்கள் பொதுவாகக் கருதுகிறார்கள். இந்தக் கருத்து எவ்வளவு பரவலாக இருக்கிறது என்பதை முதல் உலகப்போருக்குமுன் ஐக்கிய அமெரிக்கா பெற்ற அனுபவத்திலிருந்து தெரிந்துகொள்ளலாம். அத்தகைய பண ஆக்கத்திற்குரிய இரண்டு பெரிய எடுத்துக்காட்டு களையும் பல் வேறு சிறிய எடுத்துக் காட்டுகளையும் அமெரிக்க வரலாற்றில் நாம் காணலாம். புரட்சியின்போது புழங்கிய 'காண்டினென்டல்' செலாவணியும் (continental currency), உள்நாட்டுப் போரின்போது இருந்த பச்சைப்புற நோட்டுகளும் மிகச் சிறந்த எடுத்துக்காட்டுகள் ஆகும்.

'காண்டினென்டல்' காங்கிரஸ், 1775-ல் கடன் உண்டியல்களை (bills of credit) வெளியிடத்தொடங்கியது. அந்தத் தேதியிலிருந்து 1779 வரையில் 40 முறை அவ்வாறு வெளியிடப்பட்டன[2]. இந்த வெளியீடுகள் எல்லாவற்றினுடைய மதிப்பு ஏறத்தாழக் கால் பில்லியன் டாலராகும். காங்கிரஸ் புதிதாக நிறுவப்பட்டது என்பதையும், பல்வேறு காலனிகள் தங்கள் வருவாய்களிலிருந்து ஒரு பகுதியைத் தாமே விரும்பித் தருவதைப் பெற்றுக்கொள்வதைத் தவிர வேறு வரி வருவாய்கள் எதுவும் காங்கிரசுக்குக் கிடையாது என்பதையும், உள்நாட்டிலோ வெளிநாடுகளிலோ கடன் எழுப்பு வதற்குரிய செல்வாக்கு (credit standing) அதற்கு இல்லை என்பதையும், காலனிகளில் கடன் வாங்குவதற்குரிய சுயேச்சை யான மூலதனம் மிகச் சிறிய அளவிலேயே இருந்தது என்பதையும் இச் சமயத்தில் நினைவுபடுத்திக்கொள்வது நலம். மேலே சொல்லப் பட்ட உண்டியல்கள் அல்லது 'காண்டினென்டல்கள்' (continentals) பணம் செலுத்துவதாகக் காங்கிரஸ் அளித்த வாக்குறுதிகளே. இந்த வாக்குறுதிகள் காலனிகளின் நாணயத்தை நம்பியே தரப் பட்டன. காலனிகள் ஒவ்வொன்றுக்கும் இந்த உண்டியல்களின் ஒரு பகுதியைத் திருப்பிச் செலுத்தும் பொறுப்பு பங்கிட்டு அளிக்கப்பட்டது. இந்த உண்டியல்கள், பணமாக வெளியிடப் பட்ட—வட்டியில்லாத—உரிய காலத்தில் திருப்பித் தருவதாகத் தெரிவிக்கப்பட்ட வாக்குறுதிகளே. ஆனால், பல்வேறு காலனி களின் சட்ட முறைப் பணச் சட்டங்களால் (Legal Tender Acts)

இவை ஆதரிக்கப்பட்டன. 1776 முதல் இந்த உண்டியல்களின் மதிப்பு குறையலாயிற்று. 1779-ல், அவை, அங்காடிகளில், 40-க்கு 1 என்னும் விகிதத்திலேயே வெள்ளிப் பணத்துடன் பரிவர்த்தனை செய்துகொள்ளப்பட்டன. இந்த வகையான பணத்தில் மக்கள் நம்பிக்கை இழந்துவிட்டதையும், இந்த உண்டியல்களின் வெளியீட்டால் விலைகளில் பண வீக்க விளைவுகள் ஏற்பட்டதையுமே, இந்த மதிப்பிறக்கத்தி லிருந்து (depreciation) நாம் தெரிந்துகொள்கிறோம். 1779 நவம்பர் மாதத்தில், 1774-ல் இருந்த விலைகளுக்கு 2,000 சத வீதத்துக்கு மேற்படாத விலைகளையே நிர்ணயிக்கும்படிக் காங்கிரசானது காலனிகளுக்கு அறிவுரை புகன்றது. 2,000 சத வீதம் என்கிற புள்ளிவிவரத்திலிருந்து அப்போது ஏற்பட்டிருந்த பணவீக்கத்தின் அளவுபற்றி அப்போது செய்யப்பட்ட மதிப்பீட்டை நாம் தெரிந்துகொள்ள முடிகிறது.[3] ஆனால் காகிதப் பணத்தின் மதிப்பிறக்கம் மிக அதிகமான அளவில் ஏற்பட்டு விட்டதால், நிலைபேறுக்கத்திற்கான அத்தகைய முயற்சிகளால் எத்தகைய பயனும் ஏற்படவில்லை.[4]

உள்நாட்டுப் போரின்போது ஏற்பட்ட 'பச்சைப் புறப்' பண வீக்கம், ஏறத்தாழ இதே வகையான சூழ்நிலையில்தான் ஏற்பட்டது. உள்நாட்டுப் போரின்போது கூட்டரசாங்கம் அழுத்தமான முறையில் நிறுவப்பட்டிருந்தாலும், அதனுடைய கடன் வாங்கும் செல்வாக்கு மிகக் குறைவாகவே இருந்தது; அதனுடைய வரி முறையும் போதுமான வருவாய்களைப் பெற முடியாததாகவே விளங்கியது. ஐக்கிய அமெரிக்க நோட்டுகள் (பச்சைப் புறங்கள்), பொதுவான புழக்கத்திற்காகச் சிறிய இனங்களிலேயே (small denominations) வெளியிடப்பட்டு, போர்ச் செலவுக்கான பணமாகக் கருவூலத்தால் செலுத்தப்பட்டன. 1862-லும் 1863-லும், அவை கருவூலத்தின் மொத்த வரவுகளில் முறையே 20 சதவீதமாகவும் 40 சதவீதமாகவும் விளங்கின.[5] வருவாய்க்கான ஓர் ஏற்பாடு என்னும் முறையில் பச்சைப்புற நோட்டுகளுக்கு இருந்த முக்கியத்துவத்தைவிட அவற்றால் விலை களில் ஏற்பட்ட உயர்வு மிகக் கூடுதலாக இருந்தது என்றும், உள் நாட்டுப் போரின்போது ஏற்பட்ட பண வீக்கத்திற்கு அந்த நோட்டுகளே மாபெரும் காரணமாக இருந்தன என்றும் பேராசிரியர் மிட்செல் (Professor Mitchell) முடிவு செய்துள்ளார்.[6]

நெருக்கடிக் காலங்களில் அரசாங்கத்தின் கருவூலத்திற்கு ஏற்பட்ட பணத் தேவையை நிறைவு செய்வதற்காகப் புழங்கும் நோட்டுகளை அரசாங்கம் வெளியிட்டிருப்பதற்கான எடுத்துக்

காட்டுகள் வரலாற்றில் ஏராளமாக இருக்கின்றன. முதல் உலகப் போரின்போதும் அதைத் தொடர்ந்த ஆண்டுகளிலும் இத் துறையில் ஜெர்மனி பெற்ற அனுபவம் அரசாங்கக் கடனுனது செலாவணி வடிவத்தில் பண ஆக்கம் செய்யப்பட்டதற்கான தலைசிறந்த எடுத்துக்காட்டு ஆகும். சீனுவும், சில பால்கன் நாடு களும், இரண்டாம் உலகப் போரின்போது இதே வகையான அனுபவத்தைப் பெற்றன. இந் நிலைமைகள் ஒவ்வொன்றிலும், வரிகளிலிருந்து கிடைத்த வருவாய் போதிய அளவினதாக இல்லாததும், வழக்கமான முறைகளில் வட்டியுள்ள கடன் பத்திரங்கள் மூலம் கடன் வாங்க முடியாமலிருந்ததும் அல்லது வாங்க விருப்பமில்லாமல் இருந்ததுமே, காகிதப் பணத்தை வெளி யிட்டதற்கான காரணங்கள் ஆகும்.

ஆனுல், அரசாங்கக் கடனின் இத்தகைய செலாவணிப் பண ஆக்கத்தால் (currency monetization) ஏற்படும் மொத்த விளைவுகள், வரி விதிப்பதால் ஏற்படும் விளைவுகளைப் போன்றவையே என்பதை நினைவில் வைத்துக்கொள்வது நல்லது. ஏனென்ருல், இந்த இரண்டு வகை நிலைமைகளின்போதும், வாங்கும் திறனை (purchasing power) அரசாங்கம் பெறுகிறது; தனியாட்கள், இழந்து விடுகிருர்கள். வாங்கும் திறனைத் தனியாட்களிடமிருந்து கட்டாயப்படுத்திப் பெற்று அரசாங்கத்திற்குத் தருகிற இயல்பு செலாவணிப் பண ஆக்கத்தில் செறிந்து கிடக்கிறது. ஆனுல், பெரும்பாலான வரிமுறைகளைவிட அது தாழ்ந்த தரத்தை உடையதே. ஏனென்ருல் அது சுமைகளைக் (burdens) குடிமக்க ளிடம் பங்கிடும் முறை முற்றிலும் ஒழுங்கீனமானதாக இருக்கிறது. தாங்கக்கூடியவர்களிடம் சுமைகளை மாற்றியமைக்கிற வாய்ப்பு அத் திட்டத்தில் மிகக் குறைவாகவே இருக்கிறது. ஏனைய வகை வருமானங்களைக் குறைப்பதன் மூலம் இலாப வருமானங் களைப் பெருக்குகிற தன்மை படைத்ததாகவே ஏறத்தாழ எல்லாச் சமயங்களிலும் அது விளங்குகிறது.

## பொதுக் கடனின் பண ஆக்கம் : பாங்குச் செலாவணிப் பெருக்கம் (Monetization of the Public Debt : Credit Expansion)

வெளியிடப்பட்ட கடன் பத்திரங்களைப் பாங்குச் செலாவணிப் பெருக்கத்திற்கான அடிப்படையாகப் பயன்படுத்துவது பொதுக் கடனைப் பண ஆக்கம் செய்வதற்கான ஒரு செயற்கை முறையாகும். ஒரு சராசரி மனிதர், செலாவணிப் பண வீக்கம் ஏற்படக்கூடிய நிலையைக் கண்டால் அச்சம் அடைகிருர். அப்படிப்பட்ட நிலையை ஏற்பட விடுவதால் அரசாங்கத்தின் மதிப்பு குறைகிறது என்றும் கருதுகிருர். ஆனுல், அதற்கு மாருக, பாங்குச் செலாவணியைப்

பற்றி அவருக்கு எதுவும் புரிவதில்லை. பாங்குச் செலாவணிப் பெருக்கத்தைப்பற்றிப் பொதுமக்களிடத்தில் அதிகமாகக் கருத்தாய்வு செய்யப்படுவதும் இல்லை. பாங்குச் செலாவணிப் பெருக்கம், செலாவணிப்பெருக்கம் ஆகிய இரண்டின் விளைவுகள் ஒரே வகையாக இருந்தாலும், செலாவணிப் பெருக்கம் பொது மக்களின் கண்டனத்துக்கு ஆளாகிற அளவுக்குப் பாங்குச் செலாவணிப் பெருக்கம் ஆளாவதில்லை.

**பாங்குச் செலாவணிப் பெருக்கம் இயங்கும் முறை** (Mechanics of Credit Expansion) : பாங்குச் செலாவணியின் அளிப்பு (supply of bank credit) பொதுக் கடனுல் அதிகமாகும் வகையைப் புரிந்து கொள்ள வேண்டுமானுல், பாங்குச் செலாவணிப் பெருக்கம் எவ்வாறு இயங்குகிறது என்பதைப் பற்றி நாம் ஓரளவாவது தெரிந்துகொள்வது இன்றியமையாதது. ஐக்கிய ரிசர்வ் முறையைச் (federal reserve system) சேர்ந்த வாணிபப் பாங்குகள், அவை வைத்திருக்கும் வைப்புகளை (deposits) முன்னிட்டு, அவற்றின் சட்டப்படியான காப்பிருப்புகளை (legal reserves) **ஐக்கிய ரிசர்வ் பாங்குகளில் வைப்புகளாக** வைத்திருக்கவேண்டும் என்று சட்டப்படி விதிக்கப்பட்டிருக்கிறது. (ஐக்கிய ரிசர்வ் முறையைச் சேர்ந்த வாணிபப் பாங்குகளை இனி உறுப்பினர் பாங்குகள் என்று அழைப்போம்) உறுப்பினர் பாங்குகள் சட்டப்படி வைத்திருக்கவேண்டிய காப்பிருப்புகளின் அளவை, ஐக்கிய ரிசர்வ் முறையின் ஆளுநர் குழு (The Board of Governors), சட்டத்தால் விதிக்கப்பட்டுள்ள வரையறைகளுக்கு உட்பட்டு, முடிவு செய்கிறது. ஐக்கிய ரிசர்வ் பாங்குகளும், உறுப்பினர் பாங்குகளின் வைப்புகளை வைத்திருப்பதை முன்னிட்டும், செலாவணி நோட்டுகளை அவை வெளியிடுவதை முன்னிட்டும், (உறுப்பினர் பாங்குகள் வைத்திருப்பதைப்போலத் தாங்களும்) காப்பிருப்புகளை வைத்திருக்க வேண்டும் என்பது சட்டம்.

வைப்புகளை முன்னிட்டு சட்டப்படி வைத்திருக்கவேண்டிய காப்பிருப்புகளின் அளவு, அந்த வைப்புகளின் இத்தனை சதவீதமாக இருக்க வேண்டுமென்று அறிவிக்கப்படுகிறது. ஆனுல், வைப்புகள், கடன்களின் விளைவாகத் தோன்றுகின்றன. ஒரு பாங்கு ஒரு கடனைக் கொடுக்கும்போது, கடன் வாங்குபவர் அக் கடன் தொகையைப் பாங்கில் தன் கணக்கில் வைத்துவிடுகிருர் (deposits to his account). இவ்வாருக ஒரு புதிய வைப்பு படைக்கப்படுகிறது. ஓர் ஐக்கிய ரிசர்வ் பாங்கு ஓர் உறுப்பினர் பாங்குக்குக் கடன் கொடுக்கும்போது, கடன் வாங்கும் பாங்கின் கணக்கில் ஒரு வைப்பு வரவு வைக்கப்படுகிறது (a deposit is credited). இவ்வாருக, சட்டப்

படியான காப்பிருப்புகள், கடன் தரப்படக்கூடிய பணத்தின் அளவைக் கட்டுப்படுத்துவதன் மூலம், வைப்புப் படைப்பின் (deposit creation) அளவைக் கட்டுப்படுத்துகிறது.

ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் மட்டுமே நோட்டுகளை வெளியிட முடியும். அப்படி வெளியிடும்போது அவ் வெளியீடுகளுக்கு எதிராகக் காப்பிருப்புகள் இருந்தாகவேண்டும். ஆகவே, ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் வைத்திருக்கவேண்டிய மொத்தக் காப்பிருப்புகள், அவற்றின் வைப்புகளுக்கும் நோட்டு வெளியீடு களுக்கும் இடையே பங்கிடப்படவேண்டும். வைப்புகள், நோட்டு வெளியீடுகள் ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றின் எதிராகத் தேவைப் படும் காப்பிருப்புகளின் அளவு உயருமானால், மற்றதன் எதிராக இருக்கக்கூடிய காப்பிருப்புகள் குறைந்துவிடுவது இயல்பு. இவ்வாறாக, புழங்கும் பணம் என்னும் வகையில் ஐக்கிய ரிசர்வ் நோட்டுகளுக்கான பொதுமக்களின் தேவை உயருமானால், ஐக்கிய ரிசர்வ் பாங்குகளில் உறுப்பினர் பாங்குகள் வைத்துள்ள வைப்பு களுக்கு எதிராக இருக்கக்கூடிய நிதிகள், புழக்கத்திற்கு இழுக்கப் பட்டு விடுகின்றன.

ஒரு தனிப்பட்ட உறுப்பினர் பாங்கானது, ஐக்கிய ரிசர்வ் பாங்கில் தன் ரொக்கத்தை வைப்பதன் மூலமாகவும் (by depositing its cash), தன்மீது எழுதப்பட்டு ஏனைய பாங்குகளால் தீர்வுக்காகத் தரப்பட்டுள்ள (presented for clearing) செக்குகளின் தொகையைவிடப் பிற பாங்குகள்மீது எழுதப்பட்டு, ஐக்கிய ரிசர்வ் பாங்கில் தீர்வுக்காகத் தான் தருகிற செக்குகளின் தொகை மிகுதியாக இருக்கும்படிச் செக்குகளைத் தருவதன் மூலமாகவும், ஐக்கிய ரிசர்வ் பாங்கிலிருந்து 'வைப்புக் கடன்' (deposit credit) என்னும் முறையில் அமைந்த கடனைப் பெற்றுக்கொள்வதன் மூலமாகவும், தன்னுடைய காப்பிருப்புகளை அதிகப்படுத்திக் கொள்ள முடியும். அன்றாடத் தேவைகளுக்கு வேண்டியதைவிட மிகுதியான அளவில் ஓர் உறுப்பினர் பாங்குக்கு ரொக்கம் கிடைக்குமானால், ஐக்கிய ரிசர்வ் பாங்கில் இந்த உபரி ரொக்க மானது வைப்பாக வைக்கப்படுவதே இயல்பாக நடைபெறக் கூடியதாகும். ஐக்கிய ரிசர்வ் பாங்குகள், தம் உறுப்பினர் பாங்கு களுக்காகச் 'செக்கு'த் தீர்வுப் பணியை ஆற்றிவருவதால், ஒவ்வொரு வாணிப நாளின் முடிவிலும் செக்குகள் தாமாகவே ஐக்கிய ரிசர்வ் பாங்குகளை அடைந்துவிடுகின்றன. அடைந்ததும், ஐக்கிய ரிசர்வ் பாங்குகள், உறுப்பினர்களின் செக்குகளை, ஒவ்வொன் றிற்கும் எதிராகத் தீர்த்து விடுகின்றன. அப்படிச் செய்யும்போது, ஐக்கிய ரிசர்வ் பாங்குகள், எந்தப் பாங்கு மீது ஒரு 'செக்கு' எழுதப்

பட்டிருக்கிறதோ அந்தப் பாங்கின் வைப்புக் கணக்கில் அந்தச் செக்கைப் பற்று வைக்கின்றன (debit the deposit account); அதுபோலவே, ஒரு செக்கைத் தீர்ப்பதற்காக எந்தப் பாங்கு தருகிறதோ அந்தப் பாங்கின் வைப்புக் கணக்கில் அந்தச் செக்கை வரவு வைக்கின்றன (credit the deposit account). இவ்வாறாக, ஐக்கிய ரிசர்வ் பாங்குகளில் உள்ள தனி உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்புத் தொகைகள், செக்கைத் தீர்க்கும் நடவடிக்கைகளின் விளைவாக, நாள்தோறும் உயர்ந்துகொண்டும் தாழ்ந்துகொண்டும் இருக்கின்றன. உறுப்பினர் பாங்குகளுக்கு ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் தருகிற கடன்கள், 'முன் பணங்கள்' (advances) அல்லது 'கழிவுகள்' (discounts) என்னும் வடிவத்தில் இருக்கும் முன் பணங்கள் என்பன, துணை ஈட்டுடன் (collateral security) கூடிய உறுப்பினர் பாங்குகளின் புரோநோட்டுகள்மீது தரப்படும் கடன்கள் ஆகும். கழிவுகள் என்பன, உறுப்பினர் பாங்குகள் வாணிபங்களுக்குக் கடன் தருவதால் எழுகிற புறங்குறிக்கப்பட்ட 'வாணிபத் தாள்களை' (endorsed 'commercial papers') [நோட்டுகள், டிராஃப்டுகள், மாற்று உண்டியல்கள் (bills of exchange) முதலியவை] ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் வாங்குவதன் விளைவாக ஏற்படுகிற கடன்கள் ஆகும்.

ஒவ்வொரு பாங்கின் காப்பிருப்புகளின் அளவைப் பாதிக்கிற காரணிகளும், உறுப்பினர் பாங்குகள் எல்லாவற்றினுடைய காப்பிருப்புகளின் மொத்த அளவைப் பாதிக்கிற காரணிகளும் ஒன்றாக இருப்பதில்லை. ஒரு பாங்குக்கு அதிக ரொக்கம் கிடைப்பதால் அதனுடைய காப்பிருப்புகள் ஓர் அளவுக்கு உயரலாம். அதே சமயத்தில் மற்றொரு பாங்கின் ரொக்கம் குறைவதால் அதனுடைய காப்பிருப்புகள், அதே அளவுக்குக் குறைந்துவிடலாம். செக்குத் தீர்வின் விளைவாகத் தனித்தனிப் பாங்குகளின் காப்பிருப்புகள் உயர்வும் தாழ்வும் அடைகின்றன என்றாலும், எல்லாப் பாங்குகளின் மொத்தக் காப்பிருப்புகள் செக்குத் தீர்வின் விளைவாக எத்தகைய மாற்றமும் அடைவதில்லை. ரிசர்வ் பாங்குகள் உறுப்பினர் பாங்குகளுக்குக் கடன் கொடுக்கும்போது உறுப்பினர் பாங்குகள் எல்லாவற்றினுடைய மொத்தக் காப்பிருப்புகள் உயர்கின்றன. பாங்குகளிடமிருந்து பொதுப்புழக்கத்திற்காக ரொக்கம் எடுத்துக் கொள்ளப்படும்போது, பாங்குகளின் மொத்தக் காப்பிருப்புகள் குறைகின்றன. ஆனால், அதற்கு மாறாகப் பாங்குகளிடம் ரொக்கம் சேரும்போது மொத்தக் காப்பிருப்புகள் உயர்கின்றன.

உறுப்பினர் பாங்குகளின் மொத்தக் காப்பிருப்புகளில் ஏற்படும் மாறுதல், அந்தக் காப்பிருப்புகளை உயர்த்தவேண்டும் அல்லது குறைக்கவேண்டும் என்று ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் திட்டமிட்டுக்

கையாளும் கொள்கையின் விளைவாக ஏற்படக்கூடும். ரிசர்வ் பாங்குகளின் வெளி அங்காடி நடவடிக்கைகள் (open market operations) என்பன, வெளி அங்காடியில் ரிசர்வ் பாங்குகள் தங்கள் கணக்கில் அரசாங்கக் கடன் பத்திரங்களை வாங்குவதையும் விற்பதையும் குறிக்கின்றன. எடுத்துக்காட்டாக, அரசாங்கத் திற்கு அல்லது வாணிபத்திற்குத் தரப்படக்கூடிய பாங்குக்கடனைத் தாராளப்படுத்துவதற்காக, உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்பு களை அதிகப்படுத்தவேண்டுமென்று விரும்பப்படுகிறது என்று வைத்துக்கொள்வோம். இந் நிலையில், தனிப்பட்ட முதலீடு செய்வோர், கார்ப்பரேஷன்கள், உறுப்பினர் பாங்குகள் ஆகியோ ரிடமிருந்து ரிசர்வ் பாங்குகள் கடன் பத்திரங்களை வாங்கலாம். அப்படி வாங்குவதன் விளைவாக உறுப்பினர் பாங்குகளின் காப் பிருப்புகள் உயர்கின்றன. இந்த விளைவு பின்வருமாறு ஏற்படுத்தப் படுகிறது. ஐக்கிய ரிசர்வ் பாங்கு, இந்தக் கடன் பத்திரங்களைப் பாங்குகள் அல்லாத பிற முதலீடு செய்வோரிடமிருந்து வாங்கு மானால், அவர்களுக்குச் செக்குகளைத் தருகிறது. கடன் பத்திரங்களை விற்றவர் அந்தச் செக்கைத் தன் பாங்கில் வைப்புச் செய்வது, இயல்பாக நடக்கக்கூடிய செயல். அவ்வாறு பெற்ற செக்கை உறுப்பினர் பாங்கு ரிசர்வ் பாங்குக்கு அனுப்புகிறது. ரிசர்வ் பாங்கு, அந்தச் செக்கின் தொகையை, உறுப்பினர் பாங்கின் வைப்புக் கணக்கில் வரவு வைக்கிறது. இந்த முறையில், ஐக்கிய ரிசர்வ் பாங்கில் உள்ள உறுப்பினர் பாங்கின் வைப்புகள் (காப்பிருப்புகள்) கூடுதலாகின்றன. ஐக்கிய ரிசர்வ் பாங்கானது கடன் பத்திரங் களைத் தனியாட்களிடமிருந்து வாங்காமல் உறுப்பினர் பாங்குகளிட மிருந்து வாங்குமானால், உறுப்பினர் பாங்குகளுக்கு உரிய செக்குகள் ஐக்கிய ரிசர்வ் பாங்குகளில் வைப்புச் செய்யப்படுகின்றன. இவ் வாறாக, வெளி அங்காடியில் ஐக்கிய ரிசர்வ் பாங்கு கடன் பத்திரங் களை வாங்குவதால், உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்புகள் உயர்வடைந்து, அப்படி உயர்வதால் அவற்றின் கடன்கொடுக்கும் ஆற்றலும் உயர்வடைகிறது.

இதற்கு மாறாக, ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் வெளி அங்காடி களில் கடன்பத்திரங்களை விற்பதால், உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்புகள் குறையும். பாங்குகள் அல்லாத முதலீட்டாளர் களிடம் பத்திரங்கள் விற்கப்பட்டால், அம் முதலீட்டாளர்கள், உறுப்பினர் பாங்குகள்மீது எழுதப்பட்ட செக்குகள் மூலம் பணம் செலுத்துகிறார்கள். இந்தச் செக்குகள் தீர்வு செய்யப்படும்போது, உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்புத் தொகைகள் குறைகின்றன. கடன் பத்திரங்கள் பாங்குகளுக்கு விற்கப்படுமானால், உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்புத் தொகைகள் குறைக்கப்படுவதன்

மூலமாகத்தான், அப் பத்திரங்களுக்கு உரிய தொகை செலுத்தப் படுகிறது. ஐக்கிய ரிசர்வ் பாங்குகளின் வெளி அங்காடி விற்பனைகளும் வாங்குதல்களும், உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்புகளைத் திறமையான முறையில் கையாள்வதற்கும், அப்படிக் கையாள்வதன் மூலமாகப் பாங்குச் செலாவணியை இறுக்குவதற்கும் அல்லது தளர்த்துவதற்குமே, மேற்கொள்ளப்படுகின்றன. ஆனால், பாங்குச் செலாவணியைத் தளர்த்துவதற்குப் பயன்படுவதைவிட இறுக்குவதற்கே இந்தக் கருவியானது மிக நன்றாகப் பயன்படுகிறது. மிகையாகவுள்ள காப்பிருப்புகளை (சட்டத்தால் விதிக்கப் பட்டுள்ள அளவைவிட மிகுதியாக உள்ள தற்போதைய காப் பிருப்புகளை) அகற்றுவதற்குத் தேவைப்படுவதைவிட அதிகமான அளவில் காப்பிருப்புகள் குறைவதால், உறுப்பினர் பாங்குகள் தருகிற கடன்களின் அளவு குறையும். எந்த வைப்புகளுக்கு எதிராகக் காப்பிருப்புகள் பராமரிக்கப்படுகின்றனவோ அந்த வைப்புகளைக் குறைப்பதற்காகவே உறுப்பினர் பாங்குகள் தருகிற கடன்களின் அளவு இவ்வாறு குறைகிறது. இதற்கு மாறாக, பாங்குக் காப்பிருப்புகளில் ஏற்படும் உயர்வால் கடன் தரப்படுகிற அளவு உயரக்கூடும் ; ஆனால் உயர்ந்தே தீரும் என்று கூறமுடியாது. 1930ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளின் நடுப் பகுதியில், வெளி அங்காடி வாங்குதல்களின் விளைவாகப் பாங்குகளின் காப்பிருப்புகள் உயர்ந்தன. ஆனால், இந்த உயர்வின் பயனாகச் சட்டப்படி இருக்க வேண்டிய அளவுக்கு மீறியிருந்த காப்பிருப்புகளின் தொகை உயர்ந்ததே தவிர, கடன் தரப்பட்ட அளவு உயரவில்லை. ஆகவே, ஐக்கிய ரிசர்வ் கொள்கையால், கடன் தருவதற்கான தூண்டுதலை ஏற்படுத்த முடியுமே தவிர, கடன் கொடுக்கும்படிப் பாங்குகளைக் கட்டாயப்படுத்த முடியாது ; கடன் வாங்கும்படிப் பாங்குகளின் வாடிக்கைக்காரர்களைக் கட்டாயப்படுத்தவும் முடியாது.

**உறுப்பினர் பாங்குக் காப்பிருப்பு நிதிகளின் அளிப்பும் பயனும் (Supply and Use of Member Bank Reserve Funds)[7] :** உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்புகளாகப் பயன்படக்கூடிய நிதிகளின் எல்லாவகை மூலங்களையும் (sources), உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்புகளாகப் பயன்படுவது உட்பட அந் நிதிகளின் எல்லாவகைப் பயன்களையும் கீழே உள்ள பட்டியல் சுட்டிக்காட்டுகிறது. கிடைக்கும் நிதிகள் இந்தப் பயன்களுக்கிடையே, அங்காடிச் சக்திகளாலும் ஐக்கிய ரிசர்வ் முறையின் நடவடிக்கையாலும் பங்கிடப்படுகின்றன.

1. உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்பு நிதிகளின் அளிப்புக்கான மூலங்கள் :

(அ) ஐக்கிய ரிசர்வ் பாங்குகளால் உறுப்பினர் பாங்குகளுக்குக் கொடுக்கப்படும் கடன் : (i) கழிவுகளும் முன் பணங்களும். (ii) ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் வைத்திருக்கும் ஐக்கிய அமெரிக்கக் கடன் பத்திரங்கள்.

(ஆ) பாங்குகளின் உபயோகத்திற்கும் பிற வகைகளில் பயன் படுத்தப்படுவதற்கும் கிடைக்கிற ரொக்கத்தின் அளவு: (i) பணத் துறைத் தங்க இருப்பு (monetary gold stock) (ii) கருவூலச் செலாவணியின் மொத்தத் தொகை (treasury currency outstanding).

2. பாங்குகளும் மற்றவர்களும் காப்பிருப்பு நிதிகளைப் பயன் படுத்தக்கூடிய விதங்கள் :

(அ) ஐக்சிய ரிசர்வ் பாங்குகளிடம் உள்ள வைப்புகள் : (i) உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்புகள்(ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடம் உள்ள வைப்புகள்) (ii) ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடம் உள்ள உறுப்பினர் அல்லாத பாங்குகளின் வைப்புகள்.

(ஆ) பாங்குகள் அல்லாத பிறரால் பயன்படுத்தக்கூடிய முறைகள் : (i) புழக்கத்தில் உள்ள பணம் (ii) கருவூலம் ரொக்கமாக வைத்திருக்கும் தொகை (iii) ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடம் உள்ள கருவூல வைப்புகள்.

காப்பிருப்பு நிதிகளின் அளிப்புக்கான மூலங்கள் என்னும் தலைப்பில் உள்ள நிதிகள், உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்புகளாக ஆகலாம் அல்லது ஆகாமலும் இருக்கலாம். இந்தப் பகுதியில், ஐக்கிய ரிசர்வ் பாங்குகளால் அளிக்கப்படுகிற கடன், பாங்குகளின் காப்பிருப்புகளாக ஆவது உறுதி. ஏனென்றால் அந்தக் கடன் அத்தகைய காப்பிருப்புகளாக ஆவதற்காகவே தரப்படுகிறது. தேவையான காப்பிருப்புகளை ஏற்படுத்திக்கொள்வது தவிர வேறு எந்தக் காரணத்திற்காகவும், உறுப்பினர் பாங்குகள், ரிசர்வ் பாங்குகளிடம் தங்கள் வாணிபத் தாள்களை மாற்றிக் கொள்வதில்லை. (discounting the commercial papers); கடனையும் வாங்குவதில்லை ரிசர்வ் பாங்குகள் வைத்திருக்கும் ஐக்கிய அமெரிக்கக் கடன் பத்திரங்கள், உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்புகளைப் பெருக்கிக் கொள்வதற்காகவே வெளி அங்காடியில் வாங்கப்பட்டவை ஆகும்.

கிடைக்கக்கூடிய ரொக்கத் தொகையின் ஒரு பகுதி மட்டுமே பாங்குகளின் காப்பிருப்புகள்ாகப் பயன்படுத்தப் படுகின்றது; அதன் பிற பகுதிகள், பாங்குகள் அல்லாத

பிறராலேயே பயன்படுத்தப்படுகின்றன. பணத்துறைத் தங்க இருப்பானது, உள்நாட்டில் தங்கம் வாங்கப்படுவதால் அல்லது தங்க இறக்குமதியால் ஏற்படுகிறது. வாங்கப்பட்டதும் அல்லது இறக்குமதி செய்யப்பட்டதும், இந்தத் தங்கமானது, முதலில் உறுப்பினர் பாங்குகளில் வைப்புகளாக அமைகிறது. தங்கத்தை நாட்டு உடைமையாக்கும் கொள்கைக்கு இணங்க, இத் தங்கம் உடனடியாக ரிசர்வ் பாங்குகளில் மறு வைப்புச் செய்யப்பட்டு, கருவூலத்திடம் கொடுக்கப்பட்டுவிடுகிறது. இந்த ஏற்பாட்டின் போது உறுப்பினர் பாங்குகள், ரிசர்வ் பாங்குகள், ஆகிய இருவகைப் பாங்குகளின் காப்பிருப்புகளும் கூடுதலாகின்றன. அப்படி ஏற்படும் கூடுதலின் விளைவாக அவை புதிய வைப்புகளை ஏற்க முடியும்.[8] கருவூலச் செலாவணியின் மொத்தத் தொகையில் கருவூலத்தாலும், ரிசர்வ் பாங்குகளாலும் வைக்கப்பட்டிருக்கும் பகுதி போக மிகுதி உள்ளது புழக்கத்தில் இருக்கும். புழக்கத்தில் உள்ள பகுதி, பாங்குகளிடம் பேழைப் பணமாக (Till money) இருக்கலாம் அல்லது பொதுமக்களிடம் உலவிக்கொண்டிருக்கலாம். கருவூலச் செலாவணியில் ரிசர்வ் பாங்குகளும் உறுப்பினர் பாங்குகளும் வைத்திருக்கும் பகுதி மட்டுமே உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்புகளாகப் பயன்படுகிறது.

உறுப்பினர் பாங்குக் காப்பிருப்புகள் (மேலே உள்ள பட்டியலில் 2, அ, i ஆக இருப்பது), எந்த நேரத்திலும், காப்பிருப்பு நிதிகளாக அளிக்கப்படக்கூடிய தொகையின் ஒரு பகுதியாக மட்டுமே இருக்கும். அந் நிதிகளைப் பெறுவதற்காகக் கருவூலம், பாங்குகள், பொதுமக்கள் ஆகிய மூன்று சாராரிடமும் தேவைப் போட்டி இருப்பதே அது அப்படி இருப்பதற்குக் காரணமாகும். பட்டியலின் 1 'அ'-வில் உள்ள இனங்கள் ஐக்கிய ரிசர்வ் அமைப்பின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டவை. மறு கழிவு செய்தல் கடன் வாங்குதல், அல்லது அவ்வாறு செய்யாமல் இருத்தல் என்பவை உறுப்பினர் பாங்குகளின் கட்டுப்பாட்டிற்கும் தூண்டுதலுக்கும் உட்பட்டவையே. மேலும் அந்தப் பாங்குகளுக்குத் தரப்படுகிற கழிவுகள் முன்பணங்கள் ஆகியவற்றிற்கான வீதங்கள், கழிவுகள், முன்பணங்கள் என்பவையும் அவற்றைக் கட்டுப்படுத்தும் பகுதிகளாகும். ரிசர்வ் பாங்குகள் வைத்திருக்கும் அரசாங்கக் கடன் பத்திரங்கள், பெரும்பாலும். அவற்றால் வெளி அங்காடிகளில் வாங்கப்பட்டவையே. அத்தகைய பத்திரங்களின் மொத்த அளவு, வெளி அங்காடியில் வாங்குதல் அல்லது விற்றல்பற்றிய ஐக்கிய ரிசர்வ் கொள்கையின் தன்மையை விளக்கிக் காட்டுவதாக இருக்கிறது.

இவற்றிற்கு மாருக, 1 'ஆ'-வில் உள்ள இனங்கள், பாங்குக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டன அல்ல. பணத்துறைத் தங்க இருப்பின் அளவு, தங்கத்தின் ஏற்றுமதி இறக்குமதிகளின் அளவைப் பொறுத்திருக்கிறது. ஏற்றுமதி இறக்குமதிகளின் அளவோ, பன்ஞட்டு வாணிபத்தின் அல்லது நிதியின் நிலைமைகளைப் பொறுத்திருக்கிறது. பல நாடுகளுக்கிடையே தங்கமானது எந்த அளவுக்குச் சுயேச்சையாக இயங்கமுடியும் என்பதுபற்றிய அரசாங்கக் கொள்கையையும் அது பொறுத்திருக்கிறது. கருவூலச் செலாவணிக்கு ஏதாவது கட்டுப்பாடு இருக்கிறதென்ருல், அது பாங்குத் துறை அல்லாத கட்டுப்பாடே—சிறப்பாகக் கருவூலத்தின் கட்டுப்பாடே ஆகும்.

இரண்டாவது உலகப் போரின்போதும், பிறகும், காப்பிருப்புகளாகப் பயன்படக்கூடிய நிதிகளின் மூலங்களும் பயன்களும் எத்தகைய போக்குகளைக் கொண்டிருந்தன என்பதை இனிச் சற்று ஆய்ந்து அறிவோம். புள்ளி விவரங்களில் காணப்படுகிற மாறுதல்களைக் கவனிப்பதன் மூலம் மேலே தரப்பட்ட பட்டியலில் உள்ள பல்வேறு இனங்களுக்கு இடையே உள்ள தொடர்புகளை இன்னும் தெளிவாக உணர்ந்துகொள்ள முடியும். அதோடு, ஐக்கிய ரிசர்வ் கொள்கையின் சில விளைவுகளையும் நன்ருகத் தெரிந்துகொள்ள இயலும். 16ஆவது அட்டவணை, மேலே தரப்பட்ட பட்டியலை அடிப்படையாகக்கொண்டே அமைக்கப்பட்டிருக்கிறது. இந்த அட்டவணை, போருக்கு முந்திய இறுதி ஆண்டின் (1940) ஜூலை மாத இறுதி, போரின் இறுதி ஆண்டு (1945), அண்மை ஆண்டின் (1959) மே மாத இறுதி ஆகிய காலங்களில் இருந்த நிலைமைகளைப் பற்றிய புள்ளிவிவரங்களைத் தருகிறது. இரண்டாம் உலகப் போரின்போதும், போருக்குப் பிந்திய பணவீக்க ஆண்டுகளிலும் ஏற்பட்ட மாறுதல்களைத் தெள்ளத் தெளிய விளக்குவதற்காகவே இந்த ஆண்டுகள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன.

இந்த அட்டவணையில் போர்க் காலமான 1940 முதல் 1945 வரையுள்ள ஆண்டுகளில் ஏற்பட்ட மாறுதல்களை விளக்கும் பத்தி, அந்த ஆண்டுகளில் பொதுக் கடனுனது எந்த அளவுக்குப் பண ஆக்கமாயிற்று என்பதைத் தெளிவாக எடுத்துக்காட்டுகிறது. ஐக்கிய ரிசர்வ் பாங்குகள், தாங்கள் வைத்திருந்த கருவூலக் கடன் பத்திரங்களை, 19 பில்லியன் டாலரைவிட அதிகமான ஓர் அளவில் உயர்த்திக்கொண்டன. இவ்வாருக, ஐக்கிய ரிசர்வ் முறையானது, வெளி அங்காடியில் கடன் பத்திரங்களை வாங்கும் தன் நடவடிக்கையின் மூலம், ஏராளமான புதிய காப்பிருப்புகளை உறுப்பினர் பாங்குகளுள் செலுத்தலாயிற்று. அதே சமயத்தில், 'உறுப்பினர்

பாங்குகளின் காப்பிருப்புகள்' என்னும் இனத்தில் அத்தகைய உயர்வு எதுவும் ஏற்படவில்லை. இந்த முரண்பாட்டுக்கான காரணம், 'புழக்கத்தில் உள்ள பணம்' என்னும் இனத்தில் ஏற்பட்ட 19 பில்லியன் டாலர் உயர்வே ஆகும். இவ் விதமாக, எவ்வளவு விரைவாகப் புதிய காப்பிருப்பு நிதிகள் படைக்கப்பட்டனவோ அதே அளவு விரைவாகப் பொதுமக்கள் காப்பிருப்புகளாகப் பயன்படக்கூடிய நிதிகளைப் பாங்குகளிலிருந்து எடுத்துக்கொண்டிருந்தார்கள். இவ்வாறுகப் பணம் புழக்கத்திற்குள் சென்றுவிடுவதை ஈடுசெய்ய வேண்டுமானுல், ஐக்கிய ரிசர்வ் முறையானது தாராளப் பணக் கொள்கையைக் கையாள வேண்டியிருந்தது.

அப்படியானுல் போர்க் காலத்தில் உறுப்பினர் பாங்குகளின் வைப்புகள் உயரவேயில்லை என்று பொருளா? மேலோட்டமாகப் பார்க்கும்போது, அந்தக் காலத்தில் உறுப்பினர் பாங்குகளின் வைப்புகளுக்கு எதிரான காப்பிருப்புகள் (16ஆவது அட்டவணையில் 2, அ, i இனம்) குறிப்பிடத்தக்க அளவு உயரவில்லையென்றுல், காப்பிருப்புகளை ஏற்படுத்தக்கூடிய வைப்புகள் உயர்ந்திருக்க முடியாது என்றுதான் முடிவு செய்யத் தோன்றும். ஆனுல் நடைமுறை உண்மை வேறு வகையானதாக இருந்தது. 16ஆவது அட்டவணையில் இணைக்கப்பட்டுள்ள கடைசி இனத்திலிருந்து, 1940 ஜூன் மாதத்தில் இருந்த காப்பிருப்புகளில் ஏறத்தாழப் பாதி அளவு, சட்டப்படி இருக்க வேண்டிய அளவைவிட மிகையாக இருந்தது என்னும் உண்மை துலக்கமாகிறது. அதாவது, 1940-ல் எல்லாப் பாங்குகளுமாகச் சேர்ந்து வைத்திருக்கவேண்டிய சராசரிக் காப்பிருப்புகளின் தொகை, வைப்புகளின் 20 சதவீதத்தை விடச் சற்றுக் குறைவானதாக இருக்க, உண்மையில் அவை வைத்திருந்த காப்பிருப்புகள் ஏறத்தாழ 40 சதவீதமாக இருந்தன. இந்த மிகையான காப்பிருப்புகளில் (excess reserves) 1945 ஜூலை இறுதிக்குள் ஏற்பட்ட குறைவு, கிட்டத்தட்ட ஆறு பில்லியன் டாலராக இருந்தது. சராசரியில் காப்பிருப்புகள் வைப்புகளின் 20 சதவீதமாக இருக்கவேண்டும் என்று உள்ள நிலையில், மிகையான காப்பிருப்புப் பகுதியிலிருந்து தேவையான காப்பிருப்புப் பகுதிக்கு ஏற்பட்ட இந்த மாற்றலால் (transfer) சட்டப்படி ஏற்படுகிற காப்பிருப்புகளை எதிராக வைத்து, கிட்டத்தட்ட 30 பில்லியன் டாலர் அளவுக்கு வைப்புகளை உயர்த்த முடியும். நடைமுறையில் நிகழ்ந்தது என்னவென்றுல், 1940 ஜூன் 29க்கும் 1945 ஆகஸ்டு மாதத்தின் முதல் பாதிக்கும் இடைப்பட்ட காலத்தில், காப்பிருப்பு விதிகளுக்கு உட்பட்ட

உறுப்பினர் பாங்குகளின் நடப்பு வைப்புகள் (demand deposits, i.e. current deposits) ஏறத்தாழ 34 பில்லியன் டாலர் அளவுக்கு உயர்ந்திருக்கின்றன.[9]

மொத்தமாகப் பார்க்கும்போது, 1945-க்கும் 1959-க்கும் இடையே ஏற்பட்ட பல்வேறு நிலைமைகளின் வளர்ச்சிப் போக்குகள், ஏறத்தாழ 1940-க்கும் 1945-க்கும் இடையே ஏற்பட்ட போக்குகளைப் போலவே இருக்கின்றன. ஆனால் அந்தப் போக்குகள் 1945 முதல் 1959 வரை தொடர்ச்சியாக ஒரே நிலையில் இல்லை. காப்பிருப்புகளாகப் பயன்படக்கூடிய நிதிகளின் அளிப்பு, 1945-க்கும் 1952-க்கும் இடையில் 7 பில்லியன் டாலர் அளவு உயர்ந்தது; ஆனால், 1952-க்குப் பின்னர் ஒரே நிலையில் இருந்து விட்டது. காப்பிருப்பு நிதிகளில் ஏற்பட்ட இந்த உயர்வுக்கு, ஐக்கிய ரிசர்வ் முறை கடன் பத்திரங்களை வாங்கியதும், கருவூலச் செலாவணியின் மொத்தத்தில் உயர்வு ஏற்பட்டதுமே தலையாய காரணங்கள் ஆகும். முந்திய காரணத்தால் ஏற்பட்ட உயர்வு, ஏறத்தாழ 4·5 பில்லியன் டாலர். பிந்திய காரணத்தால் ஏற்பட்ட உயர்வு, 1 பில்லியன் டாலரைவிடச் சற்று அதிகம். காப்பிருப்பு நிதிகளின் பயன்களைப்பற்றிய இனங்களைக் கவனித்தால், உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்புகளில் ஏற்பட்ட உயர்வு (+3·7 பில்லியன் டாலர்), புழக்கத்தில் இருந்த பணத்தில் ஏற்பட்ட உயர்வு (+4·5 பில்லியன் டாலர்)—ஆகிய இவற்றின் கூட்டுத்தொகை, காப்பிருப்பு நிதிகளின் பயன்களில் ஏற்பட்ட மொத்த உயர்வைவிடக் கூடுதலாக இருக்கிறது. அது அப்படி இருப்பதற்குக் காரணம், ஏனைய வகைப் பயன்களில் ஏற்பட்ட குறைவே ஆகும். வைப்புகளுக்கு எதிராக வைத்திருக்கப்படவேண்டிய காப்பிருப்புகளின் சதவீதம் குறைந்துகொண்டிருந்தபோது உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்புகளில் ஏற்பட்ட உயர்வின் விளைவாகவும் மிகையாக (excess) இருந்த காப்பிருப்புகளில் 6 பில்லியன் டாலர் அளவுக்கு ஏற்பட்ட குறைவின் விளைவாகவும், சரி செய்யப்பட்ட நடப்பு வைப்புகளில் ஏறத்தாழ 42 பில்லியன் டாலர் அளவுக்கு உயர்வு ஏற்பட முடிந்தது. எனவே, 1945-க்கும் 1959-க்கும் இடையே உள்ள நீண்ட காலமானது இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட வேண்டும். இரண்டாம் உலகப் பேர்ருக்குப் பின் பண அளிப்பில் ஏற்பட்ட உயர்வில் முக்கால் பங்கு, 1952-க்குள் ஏற்பட்டிருக்கிறது. ஏறத்தாழ 1952-ஐ ஒட்டிய காலத்தில், ஐக்கிய ரிசர்வ் முறையின் தலையாய பொறுப்பு, கூட்டரசாங்கக் கடன் பத்திரங்களுக்குரிய அங்காடியை வளர்ப்பது அல்ல என்றும், பொருளாதார நிலைபேற்றைப் பேணி வளர்ப்பதே அதன் முதன்மைப் பொறுப்பு என்றும் ஒப்புக்கொள்ளப்பட்டதால், பண அளிப்பின் வளர்ச்சி வீதமானது பெரிதும் குறைந்துவிட்டது.

## அட்டவணை 16

**உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்பு நிதிகளின் அளிப்பும், பயனும், 1940, 1945, 1959** *

(மில்லியன் டாலர்களில்)

| | ஜூலை 31, 1940 | ஜூலை 25, 1945 | மாறுதல் 1940–1945 | மே 27, 1959 | மாறுதல் 1945–1959 |
|---|---|---|---|---|---|
| 1. காப்பிருப்புகளாகப் பயன்படக்கூடிய நிதிகளின் அளிப்பு : | | | | | |
| (அ) ஐக்கிய ரிசர்வ் கடன் : | 2,484 | 22,129 | +19,645 | 27,548 | +5,419 |
| i. கழிவுகளும் முன்பணங்களும் | 4 | 229 | +225 | 675 | + 446 |
| ii. ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் வைத்திருந்த ஐக்கிய அமெரிக்கக் கடன் பத்திரங்கள் | 2,448 | 21,570 | +19,122 | 25,905 | +4,335 |
| (ஆ) கிடைக்கும் ரொக்கம் | 23,487 | 24,356 | +869 | 25,456 | +1,100 |
| i. பணத்துறைத் தங்க இருப்பு | 20,461 | 20,212 | — 251 | 20,188 | —24 |
| ii. கருவூலச் செலாவணி, மொத்தம் | 3,024 | 4,144 | +1,120 | 5,268 | +1,124 |
| காப்பிருப்புகளாகப் பயன்படக்கூடிய நிதிகளின் மொத்த அளிப்பு | 25,939 | 46,485 | +20,546 | 53,004 | +6,519 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **2. காப்பிருப்புகளாகப் பயன்படக்கூடிய நிதிகளின் பயன்கள்** | | | | | |
| (அ) ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடம் வைப்புகள் | 14,870 | 16,238 | +1,368 | 19,037 | +2,799 |
| i. உறுப்பினர் பாங்கு வைப்புகள் | 13.498 | 14,699 | +1,201 | 18,393 | +3,694 |
| ii. உறுப்பினர் அல்லாதாரின் வைப்புகள் | 1,382 | 1,539 | +157 | 644 | — 895 |
| (ஆ) பிறரால் பயன்படுத்தப்படல் | 11,089 | 30,249 | +19,160 | 32,724 | +2,475 |
| i. புழக்கத்தில் உள்ள பணம் | 7,883 | 26,926 | +19,043 | 31,473 | +4,547 |
| ii. கருவூலம் ரொக்கமாக வைத்திருப்பது | 2,250 | 2,279 | +29 | 708 | — 1,571 |
| iii. ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடம் கருவூல வைப்புகள் | 694 | 595 | — 100 | 543 | — 51 |
| **பயன்படுத்தப்பட்ட மொத்த நிதிகள்** | 25,959 | 46,487 | +20,528 | 53,005 | +6,518 |
| (உறுப்பினர் பாங்குகளிடம் மிகையாக இருந்த காப்பிருப்புகள்) | 6,514 | 994 | — 5,520 | 355 | — 639 |

* இந்த அட்டவணையில் உள்ள எண்கள் யாவும், 'Federal Reserve Bulletin' என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டவை. சில மிகச்சிறிய இனங்கள். இந்த அட்டவணையில் சேர்க்கப்படாததால், தனித்தனி இனங்களைக் கூட்டிப் பார்ப்பதால் கிடைக்கும் தொகைக்கும், மொத்தத் தொகையாகத் தரப்பட்டுள்ள எண்ணுக்கும் இடையே வேறுபாடு இருக்கும்.

பாங்கு முறையின் கடன் தரும் ஆற்றலைப் பாதிக்கும் தலையாய காரணிகளைப்பற்றி இதுவரை பகுத்தாய்வு செய்த நாம், இனி, ஐக்கிய அமெரிக்கா பங்கெடுத்துக்கொண்ட சென்ற இரண்டு உலகப் போர்களின்போது, பாங்கு முறையானது எப்படிப் போருக்கான நிதி சாதனங்களை அரசாங்கத்திற்குத் தருகிற கருவியாக விளங்கியது என்பதை ஆய்ந்து அறிவோம்.

**முதல் உலகப் போரின்போது பாங்குக் கடன் பெருக்கம் (Credit Expansion in World War I) :** 1913-ல் தொடங்கப்பட்ட ஐக்கிய ரிசர்வ் முறையானது பாங்குக் காப்பிருப்புகளில் நெகிழ்ச்சியை (elasticity) உண்டாக்கியது. இந்த நெகிழ்ச்சியின் விளைவாக, முதல் உலகப் போரின்போது கருவூலம் எழுப்பிய கடன்களுக்குப் பாங்குகள் தாராளமாகப் பணம் கொடுக்க முடிந்தது. உறுப்பினர் பாங்குகளின் சட்டமுறைக் காப்பிருப்புகள் (legal reserves) அனைத்தும் ஐக்கிய ரிசர்வ் பாங்குகளில் வைப்புச் செய்யப்பட வேண்டும் என்று ஐக்கிய ரிசர்வ் சட்டத்திற்கு (Federal Reserve Act) 1917-ல் செய்யப்பட்ட திருத்தத்தின் பயனாகக் காப்பிருப்புகளைப் பயன்படுத்துவதில் பாங்குகள் உச்ச அளவு நெகிழ்ச்சியைப் பெறமுடிந்தது. அதே திருத்தம், சட்டமுறைக் காப்பிருப்பின் அளவையும் குறைத்துவிட்டது. அப்படிக் குறைத்ததன் பயனாகப் பாங்கு நிதிகளை, கருவூலத்தின் கடன் பத்திரங்களை நேரடியாக வாங்குவதற்கும், பெருகி வரும் அரசாங்கக் கடன் பத்திரங்களில் முதலீடு செய்ய விரும்பும் வாடிக்கைக்காரர்களுக்குக் கடன் கொடுப்பதற்கும் பயன்படுத்த முடிந்தது.

அரசாங்கக் கடன் பத்திரங்களை வாங்குபவர்களுக்கு அந்தப் பத்திரங்களுக்கான வட்டி எந்த வீதத்தில் தரப்படுகிறதோ அதே வீதத்தில் அவர்களுக்கு வாணிபப் பாங்குகள் கடன் தருவது, அரசாங்கத்திற்குப் பாங்குக் கடனைக் கிடைக்கும்படிச் செய்வதற்கான ஒரு முறையாகும். கையில் பணமில்லாவிட்டாலும், தம்முடைய நாட்டுப்பற்றின் விளைவாகவும், ஏனைய குடிமக்களின் வற்புறுத்தல் காரணமாகவும், விடுதலைப் பத்திரக் கிளர்ச்சியின் போது (liberty bond campaign) அரசாங்கக் கடன் பத்திரங்களை வாங்க விழைந்த குடிமக்கள், தங்களுடைய பாங்குகளில் கடன் வாங்கலாம்; அந்தக் கடன் தொகையைக்கொண்டு வாங்கிய பத்திரங்களை அந்தக் கடனுக்கான ஈடாகப் பாங்கில் வைப்புச் செய்யலாம்; தாங்கள் வாங்கிய கடன் பத்திரங்களுக்குக் கருவூலம் எந்த வட்டியைத் தருகிறதோ அந்த வட்டியைத் தங்களுக்குக் கடன் தந்த பாங்குகளுக்கு அவர்கள் தந்துவிடலாம். இந்தக்

கடன்கள் அல்லது இன்ன பிற கடன்களின் விளைவாகப் பாங்குக் காப்பிருப்புகள் ஆபத்துக் கட்டத்தை அடையும்போது, பாங்குகள், ஐக்கிய ரிசர்வ் பாங்கில் மேற்படிக் கடன் பத்திரங்களை ஈடாக வைத்து, வாணிபத் தாள்களை மறுகழிவு (rediscount) செய்வதன் மூலமாகத் தங்களுடைய காப்பிருப்புகளைப் பெருக்கிக் கொள்ளலாம்.

பாங்குகளின் கடன் அரசாங்கத்திற்குக் கிடைத்தற்கு உரிய இரண்டாவது வழி, கருவூலக் கடன் சான்றுகளைப் (treasury certificates of indebtedness) பாங்குகள் நேர்முகமாக வாங்குவதே. இந்தச் சான்றுகளின் வாயிலாகக் கடனைப் பெறுகிற கருவூலம், பிறகு, அக் கடன் நிதியைப் பாங்குகளிலேயே வைப்புச் செய்கிறது. இந்தக் கருவூல வைப்புகளுக்கு எதிராகச் சட்டப்படி இருக்க வேண்டிய காப்பிருப்புகளை, ஐக்கிய ரிசர்வ் பாங்குகளில் மேற்படிச் சான்றுகளைத் துணை ஈடாக (collateral security) வைத்துக் கடன் பெறுவதன்மூலம் ஈட்ட முடிகிறது.[10]

மேலே சொல்லப்பட்ட இரண்டு முறைகளில் ஏதேனும் ஒன்றின் மூலமாகக் கருவூலத்திற்குத் தேவையான நிதிகளை இறுதியில் ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் தருகின்றன. அப்படித் தருவதால், தனிப்பட்ட ஆட்களுக்கும் தனியார் நிறுவனங்களுக்கும் உறுப்பினர் பாங்குகள் தருகிற கடன்களின் அளவைக் குறைக்க வேண்டிய தேவையே இல்லை. 1917 ஏப்ரல் 2ஆம் நாளன்று, அதாவது ஐக்கிய அமெரிக்கா போர் அறிவிப்புச் செய்த இரண்டு வாரங்களுக்குப் பிறகு, ஐக்கிய ரிசர்வ் குழுவின் தலைவர் (Chairman of the Federal Reserve Board), ஐக்கிய ரிசர்வ் பாங்குகளுக்கு எழுதிய ஒரு கடிதத்தில், 'மறுகழிவுக்கான நிபந்தனைகளைத் தாராளப்படுத்துவதன் மூலம் ஐக்கிய ரிசர்வ் பாங்குகளை நம்பியிருக்கலாம் என்கிற நிலையை ஏற்படுத்தவேண்டும்' என்று குறிப்பிட்டுள்ளார்.[11] கருவூலச் சான்றுகளை அல்லது விடுதலைக் கடன் பத்திரங்களை (liberty loan bonds) ஈடாக உடைய வாணிப நோட்டுக்களுக்கான மறுகழிவு வீதம் $3\frac{1}{2}$ சதவீதமாகவும்,[12] கருவூலச் சான்றுகளை ஈடாக உடைய உறுப்பினர் பாங்குகளின் பதினைந்து நாள் கடன்களுக்கான மறுகழிவு வீதம் 3 சத வீதமாகவும்[13] அமைக்கப்பட்டிருந்தன. பின்னால் குறிப்பிட்ட ஏற்பாடானது, தங்கள் கணக்குக்காகவே கருவூலக் சான்றுகளை வாங்கும்படிப் பாங்குகளைத் தூண்டுவதற்காகச் செய்யப்பட்டதாகும். இந்தக் கடனின் தவணை முடிவு 15 நாட்களாக இருப்பது ஒரு தடையாகாது. ஏனென்றால் இந்தக் கடன் பத்திரங்கள் மீண்டும் எளிதில் புதுப்பிக்கப்படக்கூடியவை. அதோடு

அந்தப் பதினைந்து நாட்களுக்குள், கருவூலமானது, தான் எழுப்பிய குறுகிய காலக் கடன் தொகையின் பெரும்பகுதியைச் செலவழித்து விட்டிருக்கும். அப்படிச் செலவழித்ததால், வைப்பாளிகளிடமிருந்து (depositors) நிதிகள் பாங்குகளுக்குத் திரும்பிவரும். இவ்வாறுகப் பாங்குகளின் காப்பிருப்பு நிலைமை பழைய அளவுக்கு உயர்ந்து விடும். 1919-ன் நடுப் பகுதியில், அரசாங்கத்தால் செலுத்தப்பட வேண்டிய மொத்தக் கடனில் மூன்றில் ஒரு பகுதிக்கு மேற்பட்ட அளவை, கருவூலக் கடன் பத்திரங்களாகவும், கருவூலக் கடன் பத்திரங்களை ஈடாக உடைய வாணிபத் தாள்களாகவும், பாங்குகள் வைத்திருந்தன என்று ஐக்கிய ரிசர்வ் குழுவால் மதிப்பிடப் பட்டது.[14] ஆனால் இந்த ஒரு புள்ளி விவரத்திலிருந்து முழு உண்மையையும் நாம் தெரிந்துகொள்ள முடியாது. ஏனென்றால், ஏறத்தாழ அடுத்தடுத்து வெளியிடப்பட்ட கடன் எதிர்நோக்குச் சான்றிதழ்கள் (loan-anticipation certificates) அனைத்தையுமே பாங்குகள் வாங்கிவிட்டன. விடுதலைக் கடன் பத்திரங்களைப் பொது மக்கள் வாங்குவதற்கு முன்னல், கருவூலத்திற்குத் தேவையான நிதிகளை உடனடியாகத் தந்தவை இந்தச் சான்றுகளே. எடுத்துக் காட்டாக, 1919-ல் வெளியிடப்பட்ட கடன் எதிர்நோக்கு வெற்றிச் சான்றிதழ்களில் (victory loan-anticipation certificates) 99 சதவீதத்திற்கு மேற்பட்டவை பாங்குகளாலேயே வாங்கப் பட்டன. அப்படி வாங்கப்பட்ட அச் சான்றுகளின் மதிப்பு 6 பில்லியன் டாலருக்குமேல் இருந்தது.[15]

முதல் உலகப் போரின்போது ஏற்பட்ட அரசாங்கக் கடனின் பண ஆக்க அளவு குறைவுதான் என்றபோதிலும், புதிதாகப் படைக்கப்பட்ட கடனின் பணவீக்க விளைவு பெரும் அளவினதாக இருந்தது. அந்தக் காலத்திய விலைகளின் போக்கை ஆராய்ந்த எவரும் இந்த உண்மையை எளிதில் ஏற்றுக்கொள்வர். ஆனல், இந்தப் பணவீக்க விளைவு, 1919 – 1920ஆம் ஆண்டுகளில் தெளிவாகத் தெரிந்த அளவுக்குப் போர்க்காலத்தில் பொருள்களின் பற்றுக்குறை இருந்தபோது தெரியவில்லை.

**இரண்டாம் உலகப் போரின்போது பாங்குக் கடன் பெருக்கம் (Credit Expansion in World War II) :** ஐக்கிய அமெரிக்கா இரண்டாவது உலகப் போரில் ஈடுபட்டபோது, ஏறத்தாழ அதற்கு முந்திய பத்தாண்டுகளாக மந்தமான வாணிப நடவடிக்கையையே அது பெற்றிருந்தது. இந்த மந்த காலத்தில் வாணிபப் பாங்குகளின் மிகைக் காப்பிருப்புகள் (excess reserves) மிக உயர்ந்த அளவில் இருந்தன. அடுத்து வரும் ஆண்டுகளில் போரின் காரணமாகக் கருவூலத்தின் பற்றுக்குறை மிகக் கூடுதலாக இருக்கும் என்பதும்,

தொழில்களின் மூலதனப் பெருக்கத்திற்கான தேவை வளர்ந்துவரும் நிலையோடு இந்தப் பற்றுக்குறையும் சேர்வதால், இறுதியில் காப்பிருப்புகள் குறைய வேண்டிய நிலை ஏற்படும் என்பதும் 1941-ல் விளங்கத் தொடங்கிவிட்டன. ஐக்கிய ரிசர்வ் பாங்குகள்பற்றி உறுப்பினர் பாங்குகள் முதல்உலகப் போரின்போது கொண்டிருந்த கொள்கைகள், 1940-க்குள் மாறுதல் அடைந்துவிட்டன என்னும் உண்மையை நாம் நினைவு வைத்துக்கொள்வது இன்றியமையாதது. முதலாவதாக, மிகைக் காப்பிருப்புகள் ஏராளமாக இருந்ததன் விளைவாகவும் ரிசர்வ் பாங்குகளின் வற்புறுத்தலின் விளைவாகவும், ரிசர்வ் பாங்குகளிடம் கடன்பட்டிருக்கும் நிலை விரும்பத்தக்கதல்ல என்று உறுப்பினர் பாங்குகள் கருதலாயின. தற்காலிக நெருக்கடி களின்போது கடன் வாங்குவதும் மறுகழிவு செய்வதும் ஏற்றுக் கொள்ளப்பட்டன என்றாலும், வழக்கமான நடைமுறைகளாக அவற்றைக் கையாள்வது, பாங்குகளைச் சிறப்பாக நிர்வாகம் செய்யும் முறைக்கு மாறுபட்ட செயல் என்று கருதப்பட்டு, அவை வெறுப்புடன் ஒதுக்கப்பட்டன. இரண்டாவதாக, ஏராளமான மிகைக் காப்பிருப்புகள் இருக்கின்ற நிலையில் பணியாற்றிப் பழக்கப் பட்டுவிட்டதால், மிகைக் காப்பிருப்புகளையே மிகுதியாக நம்பும் போக்கு பாங்குகளிடம் வளர்ந்துவிட்டது. மிகைக் காப்பிருப்புகள் பெரும் அளவில் குறையுமானால் செழுமையற்ற நிலை ஏற்படுகிறது என்பதற்கான அடையாளமாக அது கருதப்படலாயிற்று. இந்த இருவகைப் போக்குகளின் வளர்ச்சியின் விளைவாக, மிகைக் காப்பிருப்புகளைப் பயன்படுத்த வேண்டியதன் இன்றியமையாமை பற்றியும், அப்படிப் பயன்படுத்துவதால் குறையக்கூடிய காப் பிருப்புகளை நிறைவு செய்வதற்காக ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிட மிருந்து கடன் வாங்கவேண்டியதன் தேவைபற்றியும் உறுப்பினர் பாங்குகளுக்கு 'மறு கல்வி' புகட்டவேண்டியது, இன்றியமையாத ஒரு செயலாகிவிட்டது.

இரண்டாம் உலகப் போரின்போது எந்தக் கொள்கைகளின்படி பாங்குக் கடனில் மாபெரும் உயர்வு ஏற்பட்டதோ, அந்தக் கொள்கைகள் யாவும் ஒன்றன்பின் ஒன்றாகக் கீழே விளக்கப் பட்டுள்ளன.

1. **மிகைக் காப்பிருப்புகளைப் பயன்படுத்தல்:** மிகைக் காப்பிருப்புகள் இருப்பதுதான் பாங்கு நடைமுறை செம்மையாக இருக்கிறது என்பதைக் காட்டும் அறிகுறி என்னும் கருத்து உறுப்பினர் பாங்குக ளிடம் ஊன்றிவிட்டது என்பதை உணர்ந்த ஆளுநர் குழுவும் (the Board of Governors), ஐக்கிய ரிசர்வ் பாங்குகளும், குறைகின்ற

தங்கள் காப்பிருப்புகளை நிறைசெய்வதற்காக உறுப்பினர் பாங்குகள் மையப் பாங்குகளை நாடுவதற்கு முன்னுல், தங்களிடமுள்ள மிகைக் காப்பிருப்புகளை முதலில் பயன்படுத்தவேண்டியது இன்றியமையாதது என்று அந்தப் பாங்குகளுக்கு வற்புறுத்திக் கூறலாயின. நியூயார்க்கின் ஐக்கிய ரிசர்வ் பாங்கின் தலைவர், அதன் உறுப்பினர் பாங்குகள் அனைத்திற்கும் 1942-ன் இறுதியில் எழுதிய ஒரு கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டார்: 'இந்த நாடு போரில் ஈடுபட்டதால் ஏற்பட்டுள்ள செலவை ஈடுகட்ட மாபெரும் அளவில் பணம் தேவைப்படும் இந்தக் காலத்தில், ஆளப்படாத (idle) மிகைக் காப்பிருப்புகளை ஏராள்மான அளவில் தொடர்ந்து வைத்துக்கொண்டிருக்கும் கொள்கையானது, பொருத்தம் உடையதும் அல்ல; விரும்பத்தக்கதும் ஆகாது.'[16] ஏறத்தாழ இக் கடிதம் எழுதப்பட்ட அதே சமயத்தில், கருவூலக் கடன் பத்திரங்களைப் பாங்குகள் வாங்குவது, அரசாங்கக் கடன் பத்திரங்களை வாங்கும் தனியாட்களுக்குப் பாங்குகள் தரும் கடன் ஆகியவைபற்றிப் பாங்குப் பரிசோதனைகள் கடுமையாக இருக்க மாட்டா என்று, மைய, மாநில பாங்கு மேற்பார்வை ஏஜன்சிகளில் தலையாயவை ஒன்று சேர்ந்து ஒரு கூட்டறிக்கை வெளியிட்டன.[17]

**2. வெளி அங்காடி நடவடிக்கைகள் (Open Market Operations):** போருக்கு முன்பு, அங்காடியில் அரசாங்கக் கடன் பத்திரங்களுக்கு ஒரு நிலைபேறுன நிலை இருக்கும்படிச் செய்வதே, வெளி அங்காடி நடவடிக்கைகளின் முதன்மையான நோக்கமாக இருந்தது. ஆனுல், அமெரிக்கா போரில் ஈடுபட்ட பிறகோ, தேவைப்படுகிற பாங்குகளுக்குக் கூடுதலான காப்பிருப்புகளை அளிப்பதே, அந் நவடடிக்கைகளில் தலையாய குறிக்கோளாக மாறிவிட்டது.[18] ரிசர்வ் பாங்குகள் வைத்திருக்கும் அரசாங்கக் கடன் பத்திரங்களின் அளவு, 1940-க்கும் 1945-க்கும் இடையில் ஒன்பது மடங்காக உயர்ந்திருக்கிறது என்பதை (இந்த உயர்வில் பெரும் பகுதி, குறுகியகாலக் கடன் பத்திரங்களைச் சார்ந்திருக்கிறது) 16ஆவது அட்டவணை எடுத்துக் காட்டியிருக்கிறது. இந்த உயர்வுக்கான ஒரு பெருங் காரணம், வெளி அங்காடி நடவடிக்கையின் விளைவாகக் கருவூல உண்டியல்களின் விலை ஒரே நிலையில் நிறுத்தப்பட்டதாகும். உறுப்பினர் பாங்குகள் மறுகழிவு செய்ய முன்வருகிற கருவூல உண்டியல்கள் அனைத்தையும், 1 சதவீதத்தில் ⅜ என்னும் மறுகழிவு வீதத்தில் வாங்கிக்கொள்ள ரிசர்வ் பாங்குகள் ஆயத்தமாக உள்ளன என்று 1942 ஏப்ரல் 30ஆம் தேதி அறிவிக்கப்பட்டது. ரிசர்வ் பாங்குகளுக்கு உண்டியல்களை விற்கிற பாங்குகள், அவை விரும்பினுல், அந்த உண்டியல்களின் தவணை முடிவுக்குமுந்திய எந்த நேரத்திலும், அவை விற்கிற அதே அளவு தவணை முடிவுள்ள அதே அளவு

உண்டியல்களை அதே மறுகழிவு வீதத்தில் திருப்பி வாங்கிக்கொள்ள அனுமதிக்கப்படவேண்டும் என்னும் நிபந்தனையோடு விற்கலாம் என்று அதே ஆண்டு ஆகஸ்டு 7ஆம் நாளன்று தெரிவிக்கப்பட்டது.[19] இந்த அறிவிப்பின் விளைவாகக் கருவூல உண்டியல்களை உறுப்பினர் பாங்குகளின் மிகக் கூடுதலான நீர்மைபடைத்த சொத்துக்களாக ஆகிவிட்டன. தாற்காலிக மிகைக் காப்பிருப்புகளை இந்தக் கடன் பத்திரங்களில் முதலீடு செய்யலாம். கூடுதல் காப்பிருப்புகளுக்கான தேவை எழும்போது, நிலையான மறுகழிவு வீதத்தின்படி அவற்றை உடனடியாக விற்றுவிடலாம். மிகையான காப்பிருப்புகள் ஏற்படும்போதோ, அப் பத்திரங்களை அதே மறுகழிவு வீதத்திற்கு மீண்டும் வாங்கிக்கொள்ளலாம்.

**3. கடன்களும் முன் பணங்களும்:** அரசாங்கக் கடன் பத்திரங்களைத் துணை ஈடாக வைத்துக்கொண்டு, அவற்றின் மதிப்புக்குச் சமமான அளவு கடனை எல்லாப் பாங்குகளுக்கும் தரத் தாங்கள் ஆயத்தமாக இருப்பதாக,[20] போர் தொடங்கியதும், ரிசர்வ் பாங்குகள் அறிவித்தன. (குறைகிற) பாங்குகளின் காப்பிருப்புகளை நிரப்புவதற்காகவே இத்தகைய ஏற்பாட்டை ரிசர்வ் பாங்குகள் செய்தன. ஓர் ஆண்டு அல்லது அதற்குக் குறைந்த காலத்தில் செலுத்தப்படக்கூடிய அல்லது அழைக்கப் படக்கூடிய அரசாங்கக் கடன் பத்திரங்களை ஈடாக வைத்துக் கொண்டு, 1 சதவீதத்தின் ½ என்னும் சலுகையுள்ள மறுகழிவு வீதத்தில் (preferential discount rate) உறுப்பினர் பாங்குகளுக்கு முன்பணம் தருவது என்னும் ஏற்பாட்டை, பெரிய நகரங்களில் உள்ள ரிசர்வ் பாங்குகள், 1942-ன் இறுதிக்குள் நிலைநாட்டி விட்டன.[21] அரசாங்கக் கடன் பத்திரங்களைத் தங்கள் கணக்கிலேயே வாங்கிக் கொள்வதற்கும், அரசாங்கக் கடன் பத்திரங்களை ஈடாக வைத்துக்கொண்டு தனியாட்களுக்குக் கடன் கொடுப்பதற்கும், பாங்குகளுக்குத் தேவைப்படுகிற காப்பிருப்புகளை அவற்றிற்குத் தருவதற்காக, ரிசர்வ் பாங்குகள், தங்களால் முடிந்த அளவின் இறுதி எல்லை வரை சென்றிருக்கின்றன என்பது இவற்றிலிருந்து நன்கு விளங்குகிறது.

**4. சட்டப்படி வைத்திருக்கவேண்டிய காப்பிருப்புகளின் குறைப்பு:** நியூயார்க்கிலும், சிகாகோவிலும் உள்ள உறுப்பினர் பாங்குகளின் சட்டமுறைக் காப்பிருப்புகள், 1942 அக்டோபருக்குள் 26 சத வீதத்திலிருந்து 20 சதவீதமாகக் குறைக்கப்பட்டன.[22] குறிப்பிட்ட இந்தப் பாங்குகளின் காப்பிருப்புகள் விந்தையான முறையில் வரையறுக்கப்பட்டிருப்பதால், இவற்றிற்குமட்டும் இத்தகைய நிவாரணம் அளிக்கப்பட்டது. இந்தப் பாங்குகளே, கருவூல

உண்டியல்களை ஏராளமான அளவில் வாங்கியவை. இத்தகைய குறைந்த வட்டி முதலீடுகளால் நாட்டுப்புறப் பாங்குகளைக் கவர முடியவில்லை. அதோடு, நிதிக் குவிப்பு மிகுந்த மாபெரும் நகரங்களில்தான், ரொக்கமானது, ஏராளமான அளவில் பாங்கு களிலிருந்து வெளிவந்து புழக்கத்தில் சேர்ந்துவிடுகிறது. இறுதியாக, கருவூலம் கடன் வாங்குவதால் இந் நகரங்களிலிருந்து எத்துணை விரைவாக நிதிகள் அகற்றப்படுகின்றனவோ அத்துணை விரைவாகக் கருவூலம் செலவழிப்பதால் நிதிகள் இந் நகரங்களுள் வந்து குவிவதில்லை. இச் சூழ்நிலைகளின் விளைவாக, நியூயார்க்கிலும் சிகாகோவிலும் உள்ள பாங்குகளின் காப்பிருப்புகள் குறைந்து, பிற இடங்களில் உள்ள பாங்குகளின் காப்பிருப்புகள் உயர்வாக மாறிவிட்டன.

'போர்க் கடன் கணக்குகள்' என்னும் இனத்திற்கு எதிராகச் சட்ட முறைக் காப்பிருப்புகள் எவையும் இருக்கத் தேவையில்லை யென்று, ஐக்கிய ரிசர்வ் சட்டத்திற்கு ஏப்ரல் 13 அன்று காங்கிரசால் நிறைவேற்றப்பட்ட திருத்தம் தெரிவிக்கிறது.[23] போர்க் கடன் கணக்குகள் என்பன, போர்ச் செலவுக்காக வெளி யிடப்பட்ட பாண்டுகளை உறுப்பினர் பாங்குகளோ அல்லது அப் பாங்குகள் மூலமாகத் தனியாட்களோ வாங்கியதால் ஏற்படுகிற அரசாங்க வைப்புகளைக் குறிக்கின்றன.[24] இந்தத் திருத்தத்தின் விளைவாக, போர்க் கடன்கள் விறுவிறுப்பாக எழுப்பப்பட்ட சமயங்களில், சட்டப்படி வைத்திருக்கவேண்டிய காப்பிருப்புகளின் அளவு பெரிதும் குறைந்துவிட்டது. ஏனென்றால், ஒரு பாங்கின் வைப்பாளிகள் பாண்டுகளை வாங்கும்போது, அந்தப் பாங்கில் உள்ள அவர்களுடைய வைப்புகள், அதே பாங்கில் உள்ள அரசாங்கத்தின் கணக்கிற்கு மாற்றப்பட்டுவிடுகின்றன. அவர்க ளுடைய வைப்புகளுக்கு எதிராகக் காப்பிருப்புகள் வைத்திருக்கப் படவேண்டும். ஆனால், அரசாங்க வைப்புகளுக்கு எதிராகக் காப்பிருப்புகளை வைத்திருக்கவேண்டிய தேவையில்லை. இவ்வாறு விடுவிக்கப்பட்ட காப்பிருப்புகளை, பாங்குகள், அதன் பின் குறுகிய கால உண்டியல்களில் முதலீடு செய்யலாம். இத்தகைய உண்டியல்களின் விலையை ரிசர்வ் பாங்குகள் ஒரே நிலையில் அமைத்து நிர்வகித்து வருகின்றன. ஆனால், அரசாங்கமானது தன் போர்க் கடன் வைப்புகளைச் செலவழிக்கும்போது, காப்பிருப்புகள் தேவையில்லாத அரசாங்க வைப்புகளின் இடத்தை அவை தேவையுள்ள தனியார் வைப்புகள் பெற்றுவிடுகின்றன என்பதும், இதன் விளைவாகக் காப்பிருப்புகளில் படிப்படியாக உயர்வு ஏற்பட வேண்டிய தேவை ஏற்பட்டுவிடுகிறது என்பதும் உண்மைதான். இருந்தபோதிலும், கடன் கிடைக்கும் நிலையைத் தாராளப்படுத்த

வேண்டும் என்னும் விழைவு இருந்த ஒரு காலத்தில், மேலே குறிப்பிட்ட திருத்தத்தின் விளைவாக, சட்டமுறைக் காப்பிருப்பின் இறுக்கம் தளர்த்தப்பட்டது என்பதை நாம் மறந்துவிட முடியாது. பாங்குகள் பாண்டுகளைத் தங்கள் கணக்கில் வாங்கியபோதும், இந்தத் திருத்தத்தால் இதே வகையான விளைவுதான் ஏற்பட்டது. இந்தத் திருத்தத்திற்கு முன்பு பாண்டுகள் வாங்கப்பட்டபோது, பாண்டுகளின் விற்பனைத் தொகை ரிசர்வ் பாங்குகளுக்கு மாற்றப் பட்டுவிடும். அப்படி மாற்றப்படுவதால் உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்புகள் குறைந்துவிடும். ஆனால், திருத்தத்திற்குப் பிறகோ, பாண்டுகளை வாங்கும் பாங்குகளிலேயே போர்க் கடன் வைப்புகள் நிறுத்திக் கொள்ளப்பட்டாலும் அந்த வைப்புகளுக்கு எதிராகக் காப்பிருப்புகளை வைத்திருக்கவேண்டியதில்லை ஆதலாலும், இந்தப் பாண்டுகளைப் பாங்குகள் வாங்குவதால் அவற்றின் காப்பிருப்புகளில் எத்தகைய மாறுதலும் ஏற்படுவதில்லை.

இரண்டாம் உலகப் போரின்போது உறுப்பினர் பாங்குகளைப் பொறுத்தவரை புதிய பாங்குக் காப்பிருப்புகள் படைக்கப் பட்டதைப்பற்றி நாம் இதுவரை கருத்தாய்வு செய்தோம். ஆனால், உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்புகள் உயரும்போது, இவை ஐக்கிய ரிசர்வ் பாங்குகளின் வைப்புகளாக இருப்பதால், ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் இந்த வைப்புகளுக்கு எதிராக அதிகக் காப்பிருப்புகளை வைத்திருக்க வேண்டிய தேவை ஏற்படுகிறது என்பதை நாம் நினைவில் இருத்திக்கொள்ளவேண்டும். கடன்கள் தருவதன் மூலமாக அல்லது வெளி அங்காடியில் கடன் பத்திரங்களை வாங்குவதன் மூலமாக உறுப்பினர் பாங்குகளுக்கான காப்பிருப்புகள் படைக்கப்படுகின்றன என்றாலே, ஐக்கிய ரிசர்வ் பாங்குகள்தான், தங்களிடம் வைப்புகளாக வைக்கப்படுகிற உறுப்பினர் பாங்குக் காப்பிருப்புகளை உருவாக்குவதற்கான நிதிகளைத் தரவேண்டும் என்பதும், அதே சமயத்தில் அவ்வாறு தங்களிடம் வைக்கப்படுகிற வைப்புகளின் உயர்வுக்கு ஏற்ற அளவில் காப்பிருப்புகளை உயர்த்த ஆயத்தமாக இருக்கவேண்டும் என்பதும் தாமாக விளங்கிவிடும். இவற்றோடுகூட போர்க் காலத்தில் புழக்கத்திற்கு வந்த ஐக்கிய ரிசர்வ் பாங்குகளின் ஏராளமான புதிய செலாவணி நோட்டுகளுக்கு எதிராகவும் புதிய சட்டமுறைக் காப்பிருப்புகள் வைத்திருக்கப்படவேண்டும். எல்லையற்ற அளவில் தேவைப்படுவதுபோல் காணப்படுகிற இவ்வளவு காப்பிருப்புகளையும் ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் இரண்டாம் உலகப் போரின்போது எவ்வாறு பெற முடிந்தது?

இந்தக் கேள்விக்குரிய விடையின் முதன்மையான பகுதி என்னவென்ருல், போர் தொடங்கியபோது, ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடம் ஏராளமான மிகைக் காப்பிருப்புகள் இருந்தன என்பதே. 1940 மே மாத இறுதியில், தங்களுடைய வைப்புகள், நோட்டு வெளியீடுகள் ஆகிய இரண்டிற்கும் எதிராக, ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் சட்டமுறைப்படி வைத்திருக்கவேண்டிய காப்பிருப்புகளின் விகிதம் 40 சதவீதத்திற்குச் சற்றே குறைவானதாக இருக்க (வைப்புகளுக்கு எதிராக, இருக்க வேண்டியது 35 சதவீதம்; நோட்டுகளுக்கு எதிராக இருக்க வேண்டியது 40 சதவீதம்), நடைமுறையில் வைத்திருந்த காப்பிருப்புகளின் வீதம் 88·4 சதவீதமாக இருந்தது.[25] இப்படி இருந்ததால், காப்பிருப்புகளைக் கூடுதல் ஆக்காமலே வைப்புகளை அல்லது நோட்டு வெளியீடுகளைப் பெருக்கிக்கொள்ள வசதி இருந்தது. ஆனுல் 1940-க்கும் 1945-க்கும் இடைப்பட்ட காலத்தில் நடைபெற்ற பெருக்கத்தின் விளைவாகக் காப்பிருப்பு களின் வீதம், 1945 மே இறுதியில், 45·1 சதவீதமாகக் குறைந்து விட்டது.[26] இப்படிக் குறைந்துவிட்டதால், அடுத்துவரும் ஆண்டுகளில் ஐக்கிய ரிசர்வ் பாங்குகளின் காப்பிருப்புகள் போதிய அளவினவாக இருக்கமாட்டா என்றும், தாராளப் பணக் கொள்கையைக் கைவிடவேண்டிய கட்டாயம் ஏற்படலாம் என்றும் கருத இடமேற்பட்டது. வைப்புகள், நோட்டுகள் இரண்டிற்கும் எதிராக ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் சட்டமுறைப்படி வைத்திருக்கவேண்டிய காப்பிருப்புகளின் வீதத்தை 25 சதவீத மாகக் குறைக்கும் வகையில், 1945 ஜூன் மாதத்தில், காங்கிரசானது, ஐக்கிய ரிசர்வ் சட்டத்தைத் திருத்தியமைத்தது. இப்படித் திருத்தியதன் விளைவாக ஏராளமான புதிய மிகைக் காப்பிருப்புகள் ஏற்பட்டுவிட்டன. எனவே, போரின் இறுதிக் காலம் வரையில் ஐக்கிய ரிசர்வ் பாங்குகளுக்குப் புதிய காப்பிருப்புகள் தேவைப்படவில்லை என்பதையும், அப்படித் தேவைப்படக்கூடிய நிலை நெருங்கியதும் சட்டமுறைக் காப்பிருப்பு களின் அளவு குறைக்கப்பட்டது என்பதையும் நாம் நன்கு உணர முடிகிறது. இவ்வாருகக் கருவூலத்திற்குப் பாங்குக் கடன் தாராளமாகக் கிடைப்பது, ஐக்கிய ரிசர்வ் பாங்குக் காப்பிருப்பு களின் கிடைப்பருமையால் (scarcity) தடைப்படாமல் இருப் பதற்கான ஏற்பாடு செய்யப்பட்டுவிட்டது.

போரின்போது கருவூலம் ஏராளமான அளவில் கடன் வாங்கியது, ஐக்கிய ரிசர்வ் முறையின் காப்பிருப்புப் பெருக்கக் கொள்கைகள் ஆகியவற்றின் விளைவுகளைச் சுருக்கித் தரும் முறையில், பணம்—கடன்—ஆகியவைபற்றிய தலையாய எடுகோள்களில் (data) ஏற்பட்ட மாறுதல்கள் 17ஆவது அட்டவணையில் தரப்பட்டுள்ளன:

## அட்டவணை 17

### பணம், கடன் ஆகியவைபற்றிய நிலையாய இனங்களில் ஏற்பட்ட மாறுதல்கள், 1940–1945 *

(மில்லியன் டாலர்களில்)

| இனம் | 1940-ன் முடிவில் | 1945-ன் முடிவில் | மாறுதல் | மாறுதலின் சதவீதம் |
|---|---|---|---|---|
| வைப்புகள் (ஐக்கிய அமெரிக்காவில் உள்ள எல்லாப் பாங்குகளும்) | 65,021 | 1,51,547 | +86,526 | + 133·1 |
| கடன்கள் (ஐக்கிய அமெரிக்காவில் உள்ள எல்லாப் பாங்குகளும்) | 23,741 | 30,355 | + 6,614 | + 27·8 |
| முதலீடு (ஐக்கிய அமெரிக்காவில் உள்ள எல்லாப் பாங்குகளும்) | 30,448 | 1,09,872 | +79,424 | + 260·8 |
| மிகைக் காப்பிருப்புகள் (உறுப்பினர் பாங்குகள்) | 6,615 | 1,213 | — 5,402 | — 81·7 |
| உறுப்பினர் பாங்குகளுக்குத் தரப்பட்ட ஐக்கிய ரிசர்வ் கடன் | 2,274 | 24,172 | +21,898 | + 963·0 |
| புழக்கத்தில் உள்ள பணம் | 8,732 | 28,515 | +19,783 | + 226·5 |

* எல்லாப் புள்ளி விவரங்களும் 'Federal Reserve Bulletin' என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டவை.

(அ)—1945-ன் இறுதியில் பாங்குகள் வைத்திருந்த ஐக்கிய அமெரிக்க அரசாங்கக் கடன் பத்திரங்களின் தொகை, 1,01,295 மில்லியன் டாலராகும். எனவே, 1940-க்கும் 1945-க்கும் இடையே பாங்குகளின் மொத்த முதலீடுகளில் ஏற்பட்ட மாறுதலைவிட அவை வைத்திருந்த அரசாங்கக் கடன் பத்திரங்களில் ஏற்பட்ட உயர்வு, குறிப்பிடத்தக்க அளவு கூடுதலாக இருந்திருக்கிறது. பாங்குகளின் மொத்த முதலீடுகளில் அரசாங்கக் கடன் பத்திரங்களின் சதவீதம் உயர்ந்துகொண்டு வந்ததையே இது எடுத்துக்காட்டுகிறது.

இந்த அட்டவணையில் அடங்கியுள்ள இனங்களின் இயல்பை இந்த அத்தியாயத்தின் தொடக்கத்தில் நாம் விளக்கியிருப்பதால் மீண்டும் அவை ஒவ்வொன்றையும் தனித்தனியே பகுத்தாய்வு செய்யவேண்டிய தேவையில்லை. ஆனால், போர் முடிந்தபோது, அரசாங்கக் கடன் பத்திரங்களில் மூன்றில் ஒரு பங்குக்கு மேற்பட்ட பகுதி பாங்குகளிடம் இருந்தன என்பதும், புழக்கத்தில் உள்ள

பணத்தின் அளவில் வியக்கத்தக்க உயர்வை அவை ஏற்படுத்தின என்பதும்,[27] வைப்புகளில் மாபெரும் உயர்வு ஏற்பட்டாலும் அதற்குத் தேவையான அளவில் காப்பிருப்புகளை அவை வைத்திருந்தன என்பதும் தெளிவாக விளங்குகின்றன. புழக்கத்தில் உள்ள பணம், வைப்புகள் ஆகியவற்றில் ஏற்பட்ட உயர்வில் ஒரு சிறு பகுதி மட்டுமே, போரின் தொடக்கத்தில் இருந்த மிகைக் காப்பிருப்புகளைக் குறைப்பதன்மூலம் ஏற்படுத்தப்பட்டது. பெரும் பகுதி உயர்வு, அதற்காகவே புதிதாக ஏற்படுத்தப்பட்ட காப்பிருப்புகளின் விளைவாகவே உருவாயிற்று. நாட்டின் மொத்த ஆக்கம், நிலையான டாலர் கணக்கில், 1940-ல் 100 பில்லியன் டாலராக இருந்தது. 1945-ல் 153·4 பில்லியன் டாலராக உயர்ந்ததிலிருந்தும்,[28] நுகர்வோர் விலைக்குறியீட்டு எண் 1940-ல் 100·2-ஆக இருந்தது. 1945-ல் 128·6-ஆக உயர்ந்ததிலிருந்தும்,[29] (பெரும்பாலும் அரசாங்கக் கடனின் பண ஆக்கத்தின் விளைவாக ஏற்பட்ட) பாங்குக் கடனின் மாபெரும் உயர்வின் விளைவுகளைத் தெரிந்து கொள்ளலாம்.

**இரண்டாம் உலகப் போருக்குப் பின் ஏற்பட்ட பாங்குக் கடன் பெருக்கமும், கருவூலத்திற்கும் ஐக்கிய ரிசர்வ் முறைக்கும் ஏற்பட்ட கருத்து மாறுபாடும்:** 1945-ல் 128·6-ஆக இருந்த நுகர்வோர் விலைக் குறியீட்டு எண், 1952 ஜூன் மாதத்தில் 189·6 ஆக உயர்ந்துவிட்டது. இந்த உயர்வின் அளவு 48 சதவீதமாகும். இந்த உயர்வானது 1945-க்கும் 1948-க்கும் இடையே ஒரு முறையும், 1950-க்கும் 1952-க்கும் இடையே ஒரு முறையுமாக இரண்டு தடவைகளில் ஏற்பட்டது. 1945-க்கும் 1952-க்கும் இடையே ஏற்பட்ட மொத்த விலை உயர்வில் முக்கால் பகுதி, 1945-க்கும் 1948-க்கும் இடைப்பட்ட ஆண்டுகளிலேயே ஏற்பட்டுவிட்டது. வேலை நிறைவு நிலைமைகளில் நுகர்வுப் பொருள்களுக்கும் முதலீட்டுப் பொருள்களுக்கும் மிக அதிகமான தேவை (demand) ஏற்படுவதையே இந்த விலை உயர்வு எடுத்துக்காட்டுகிறது. இந்தத் தேவையின் நிறைவேற்றத்திற்குரிய நிதிகளின் ஒரு பகுதி, உயர்ந்த அளவில் இருந்த நடப்பு வருமானத்திலிருந்தும், மற்றொரு பகுதி, போர்க் கால நிலையின் விளைவாகப் பொதுமக்களின் கைகளில் ஏராளமான அளவில் இருந்த நீர்மைச் சொத்துகளிலிருந்தும், வேறொரு பகுதி, தாராளப் பணக் கொள்கையின் மூலமாகவும் கிடைக்கலாயின. ஐக்கிய ரிசர்வ் கொள்கையானது குறிப்பிடத்தக்க அளவில் பண வீக்கத் தன்மை படைத்ததாக இல்லை என்றாலும், அது பண வீக்க எதிர்ப்புத் தன்மை படைத்ததாகவும் இல்லை. சிறப்பான அளவில் இறக்குமதியாகிக்கொண்டிருந்த தங்கத்தாலும், பண அளிப்பு கூடுதலாகிக்கொண்டிருந்தது. வெளி அங்காடியில் கடன்

பத்திரங்களை விற்பதன் மூலம் அரசாங்கக் கடனைப் பண ஆக்கம் (demonetisation) செய்வதன் வாயிலாகத்தான் விலை உயர்வைத் தணித்திருக்க முடியும். 1945-ன் முடிவுக்கும் 1948-ன் நடுப் பகுதிக்கும் இடைப்பட்ட காலத்தில், ஈட்டுறுதி (இன்சூர்) செய்யப்பட்ட வாணிபப் பாங்குகளின் மொத்தக் காப்பிருப்புகள் 1·5 பில்லியன் டாலர் அளவிலும் நடப்பு வைப்புகள் 7 பில்லியன் டாலர் அளவிலும் உயர்ந்துவிட்டன.

1949-ன் தொடக்கத்தில் ஏற்பட்ட ஒரு மிதமான வாணிபப் பின்னிறக்கத்தால் பணவீக்கச் சக்திகள் சற்றுக் குறையலாயின. ஆனால், 1949-ன் பிற்பாதியில் குறிப்பிடத்தக்க மீட்சி (recovery) ஏற்பட்டது. பணவீக்க எதிர்ப்புப் பணமுறைக் கொள்கை (anti-inflationary monetary policy) கையாளப்படாவிட்டால் விலைகளை உயர்த்தும் சக்திகள் மீண்டும் தோன்றிவிடும் என்பது 1950-ன் தொடக்கத்திலேயே தெளிவாகத் தெரிந்துவிட்டது. அந்த ஆண்டின் ஜூன் மாதத்தில் கொரியாவில் போர் தொடங்கியது. ஏற்கனவே எரிந்துகொண்டிருந்த பண வீக்கத் தீயின்மீது விரைவில் பற்றக்கூடிய எண்ணெயை ஊற்றியது போன்ற நிலையை ஏற்படுத்திவிட்டது. இந் நிலையைக் கண்டு அச்சமுற்ற பணத்துறை அதிகாரிகள், தைரியமான பணவீக்க எதிர்ப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ளலானார்கள்.

கருவூலத்திற்கும் ஐக்கிய ரிசர்வ் அமைப்புக்கும் இடையே 1950-ன் இறுதியில் மும்முரமான முறையில் ஏற்பட்டுவிட்ட கருத்து மோதுதல், 1948 முதலே சிறிது சிறிதாக வளர்ந்து கொண்டிருந்தது. பணவீக்கத்தைத் தணிப்பதற்காக வகுக்கப் படுகிற பணத்துறைக் கொள்கைகளுக்கும், அங்காடியில் கருவூலக் கடன் பத்திரங்களின் விற்பனைக்கு உரிய சீரான நிலைமைகளை உருவாக்க ஐக்கிய ரிசர்வ் முறை கையாளும் நடவடிக்கைகளுக்கும் இடையே அடிப்படை முரண்பாடு இருக்கிறது என்னும் உண்மையை உணர்ந்ததாலேயே இந்தக் கருத்து மோதுதல் ஏற்பட்டது. கூட்டரசாங்கக் கடனின் அளவு, அமைப்புமுறை ஆகியவற்றின் காரணமாகக் கருவூலத்திற்கு ஏற்பட்டுள்ள மாபெரும் பொறுப்புகளைப்பற்றிச் சென்ற அத்தியாயத்தில் நாம் படித்தறிந்தோம். ஒவ்வொரு வாரமும் ஒரு பில்லியன் டாலருக்கு மேற்பட்ட மதிப்புடைய கருவூல உண்டியல்கள் தவணை முடிவு அடைவது, நீண்ட காலக் கடன் பத்திரங்கள் அவ்வப்போது தவணை முடிவு அடைவது ஆகிய இந்த இரண்டு நிலைகளின் காரணமாக, ஒவ்வொரு வாரமும், கருவூலமானது, சராசரி 2 பில்லியன் டாலர் மதிப்புடைய தவணை முடிவடைந்த கடன்

பத்திரங்களைப் புதிய கடன் பத்திரங்கள் மூலம் ஈடுசெய்ய வேண்டியிருக்கிறது. அரசாங்க வரவுகளைவிடச் செலவுகள் மிகையாக இருப்பதன் காரணமாகப் புதிய கடன் எழுப்பவேண்டிய நிலை இருக்குமானால், கருவூலமானது, இதற்காக வேறு புதிய கூடுதல் நிதிகளைக் கடன் பெற வேண்டியிருக்கிறது. இத்துணைப் பெரும் அளவில் தான் எழுப்பவேண்டியுள்ள கடனை எண்ணிப் பார்க்கும்போது, கருவூலமானது, பண அங்காடிகளின் நிலைபேறின்மையைப்பற்றி அளவுக்கு மீறிக் கவலைப்படுவது இயற்கைதான். இதோடு, செலுத்தப்படவேண்டிய கடனுக்கான வட்டித் தொகையின் அளவுபற்றிக் கருவூலம் கவலைப்படுவதும் இயற்கையே. அரசாங்கக் கடனுக்கான வட்டி வீதங்களில் ஒரு சிறு மாறுதல் ஏற்பட்டாலும் வட்டியாகச் செலுத்தப்பட வேண்டிய தொகையில் குறிப்பிடத்தக்க மாறுதல் ஏற்பட்டுவிடும்.

பணவீக்கக் காலங்களில், அரசாங்கக் கடன் பத்திரங்களின் அங்காடி விலைகளை நிலைபேருக்குவதற்கும், கிடைக்கிற நிதிகளைக் கடன் பத்திரங்களின் புதிய வெளியீடுகளில் முதலீடுசெய்வதற்காகப் பயன்படுத்துவதற்கும், வட்டி வீதங்களைக் குறைந்த நிலையில் நிறுத்துவதற்கும் தலையாய கருவியாக விளங்குவது, ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் வெளி அங்காடிகளில் கடன் பத்திரங்களை வாங்குகிற செயலே ஆகும். குறிப்பிட்ட விலைகளில் கடன் பத்திரங்களை வாங்கவும் விற்கவும் முன் வருவதன் மூலம் ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் அந்தப் பத்திரங்களுக்கான அங்காடி விலைகளை நல்லமுறையில் நிலை நாட்ட முடியும். பணவீக்கக் காலங்களில் அத்தகைய விலைகளை நிலைபேருக்கவேண்டுமானால், ஐக்கிய ரிசர்வ் பாங்குகள், ஏறத்தாழத் தொடர்ச்சியாகவும் ஏராளமான அளவிலும் கடன் பத்திரங்களை வாங்கவேண்டியிருக்கும். ஆனால், நாம் படித்துப் படித்து உணந்திருப்பதைப்போல, ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் அவ்வாறு வாங்குவதால், உறுப்பினர் பாங்குகளுக்குப் புதிய காப்பிருப்புகள் உண்டாகின்றன. அப்படி உண்டாவதால், அரசாங்கத்திற்கும் தனியாட்களுக்கும் வாணிபங்களுக்கும் அந்தப் பாங்குகள் கடன் தருவதற்கான அடிப்படை விரிவடைகிறது. கடன் பத்திரங்களின் விலைகளை உயர்ந்த நிலையில் நிறுத்துவதற்கும், பாங்குகளுக்குப் புதிய காப்பிருப்புகளைப் படைத்துத் தருவதற்கும், ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் எடுக்கும் நடவடிக்கையால் வட்டி வீதங்கள் குறைகின்றன.

மந்த காலமாக (depression period) விளங்கிய 1930-ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளில், கருவூலமானது, தன் பற்றுக் குறைகளைத் தீர்த்துக் கொள்வதற்காக ஏராளமான அளவில் கடன் வாங்கலாயிற்று. அதே சமயத்தில் ஐக்கிய ரிசர்வ் முறை,

கடன் நிலைமைகளைத் தாராளமாக்க வேண்டும் என்பதில் பேரார்வம் கொண்டது. இந் நிலையில் ஐக்கிய ரிசர்வ் முறை கடன் பத்திரங்களை வாங்கியதால், கடன் நிலைமையைத் தளர்த்தவேண்டும் என்னும் அதனுடைய நோக்கமும் நிறைவேறியது; தன்னுடைய கடன் பத்திரங்களுக்கு அங்காடியில் அதிகத் தேவை ஏற்படும் சூழ்நிலையை வளர்க்கவேண்டும் என்னும் கருவூலத்தின் குறிக்கோளும் நிறை வேறியது; இரண்டாம் உலகப் போரின்போதும், ஐக்கிய ரிசர்வ் முறை, கருவூலம் ஆகிய இரண்டு அமைப்புகளின் நோக்கங்களும் ஒன்றுகவே இருந்தன. கடுமையான பற்றுக்குறை இருந்த போர்க் கால ஆண்டுகளில் போர் முயற்சிக்குத் தேவையான நிதிகளை ஒழுங்கான முறையில் பெறுவதற்கு ஐக்கிய ரிசர்வ் முறையின் முழு மனதாக ஒத்துழைப்பு தேவைப்பட்டது. ஐக்கிய ரிசர்வ் முறையும், வெளி அங்காடியில் கடன் பத்திரங்களை வாங்குவதன் மூலமாக, புதிய கடன் பத்திரங்களின் விற்பனைக்குச் சாதகமான சூழ்நிலையை உண்டாக்கி, அப்படி உண்டாக்குவதன் வாயிலாகத் தன் ஒத்துழைப்பை அளித்தது.

போர்முடிந்த உடனடிக் காலத்திலும், அரசாங்கக் கடனை வரவேற்பதற்குரிய நிலைமையை அங்காடியில் நிலைநாட்டுவதே தன்னுடைய தலையாய பொறுப்பாகத் தொடர்ந்து நீடிக்கிறது என்று ஐக்கிய ரிசர்வ் .முறை கருதலாயிற்று. கடன் நிர்வாகச் சிக்கலில் மாபெரும் அளவைக் கண்டு ஐக்கிய ரிசர்வ் அதிகாரிகள் பேரச்சம் கொண்ட காரணத்தால் தங்கள் கொள்கைகளை வகுக்கும்போது, விலையை நிலைபேறுக்கும் நோக்கத்தைவிட மேலே சொன்ன நோக்கத்திற்கே முதலிடம் தரலானுர்கள். ஆனல் சிறிது சிறிதாக இந்த மனப்போக்கு மாறலாயிற்று. தொடர்ச்சியான பணவீக்கத்தின் மூன்ருவது ஆண்டு முடிந்தபோது (1948), மகிழ்ச்சி தரத்தக்க முறையில் கருவூலத்தில் ஏராளமான உபரியும் ஏற்பட்டதால், பாங்கு அதிகாரிகளின் மனப் போக்கு மாறத் தொடங்கியது; கடன் பத்திரங்களுக்கான அங்காடிகளை நிலைபேறுக்கும் நோக்கம், பண்டங்களின் விலைகளை நிலைபேறுக்கும் நோக்கத்திற்கு இடம் தந்து ஒதுங்கலாயிற்று. 1949—ல் ஏற்பட்ட மிதமான பின்னிறக்கம் அரசாங்கப் பத்திரங் களின்அங்காடி விலைகளை உயர்த்தி,அப்படி உயர்த்தியதன் விளைவாக, அரசாங்கப் பத்திரங்களின் விலைகளை ஒரு நிலையில் நிறுத்தவேண்டும் என்னும் கொள்கையை உடைய ஐக்கிய ரிசர்வ் முறையை, வெளி அங்காடியில் கடன்பத்திரங்களை விற்கும்படிச் செய்தது. இந்த விற்பனையால் பாங்குக் காப்பிருப்புகளில் ஓர் இறுக்க விளைவு (a tightening effect) ஏற்பட்டு அந்தக் காலத்தில் எத்தகைய பணமுறை நிலைமைகள் ஏற்படக்கூடாதோ அத்தகைய நிலைமைகள்

ஏற்பட்டுவிட்டன. 1949-ன் இறுதிப் பகுதியிலும் 1950-லும் பணவீக்கச் சக்திகள் மீண்டும் தோன்றியபோது, கடன் பத்திரங்களின் நிலைபேருக்கத்திற்காக ஐக்கிய ரிசர்வ் முறையானது மேலும் கடன் பத்திரங்களை வாங்கவேண்டிய நிலை ஏற்பட்டது. ஆனால், அப்படி வாங்கியதால் உருவாகிய புதிய பாங்குக் காப்பிருப்புகள், பண வீக்கத் தீயை மேலும் கொழுந்துவிட்டு எரியச் செய்தன. 'அரசாங்கக் கடன் பத்திரங்களுக்கான அங்காடியில் சீரான நிலைமைகளை நிலைநாட்டவேண்டும் என்னும் கொள்கைக்கு இணங்க, பாங்குக் கடனில் இனி ஏற்படக்கூடிய விரிவைத் தடுத்து நிறுத்த வெளி அங்காடிக் குழுவானது (open market committee), தன்னிடம் உள்ள எல்லாக் கருவிகளையும் பயன்படுத்த ஆயத்தமாக இருக்கிறது' என்று 1950 ஆகஸ்டில் ஐக்கிய ரிசர்வ் அறிவித்தது. பொருளாதார நிலைபேருக்கம், அரசாங்கக் கடன் பத்திர விலைகளின் நிலைபேருக்கம் ஆகிய இரண்டு நோக்கங்களும் அடிப்படையிலேயே ஒன்றிற்கு ஒன்று முரண்பட்டனவாக இருப்பதால், பொருளாதார நிலைபேருக்கத்திற்கே முதலிடம் தரப்படும் என்பதை, ஐக்கிய ரிசர்வ் முறையால் தொடர்ந்து வெளியிடப்பட்ட அறிக்கைகளும், தொடர்ந்து மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளும் தெளிவுபடுத்திவிட்டன.

ஐக்கிய ரிசர்வ் அதிகாரிகளின் இத்தகைய அறிவிப்பின் விளைவாகச் சிறிது காலம், ஐக்கிய ரிசர்வ் முறைக்கும் கருவூலத்திற்கும் இடையே மனக்கசப்பு இருந்து வரலாயிற்று. இம் மனக்கசப்பு, 1951 மார்ச் மாதத்தில் இந்த இரு அமைப்புகளுக்கு இடையே ஏற்பட்ட 'உடன்பாட்டு'க்குப் பின்னரே முடிவுற்றது. இந்த உடன்பாட்டின்படி, பணஅதிகாரிகள், கடன் பத்திரங்களை விற்பதன்மூலமாகவும், வாங்குவதன் மூலமாகவும், நீண்ட காலக் கடன் பத்திரங்களின் அங்காடி விலைகளையும் வட்டி வீதங்களையும் ஒரு நிலையில் நிறுத்தவேண்டிய பொறுப்பிலிருந்து தங்களை விடுவித்துக் கொண்டார்கள். 1953-ல் ஆட்சியில் ஏற்பட்ட மாறுதலுக்குப்பின், வேலையின்அளவு, பண்டங்களின் விலைகள் ஆகியவற்றின் நிலைபேருக்கத்திற்கு உகந்த நடைமுறைகளை மேற்கொள்வதற்கு ஐக்கிய ரிசர்வ் முறைக்கு உள்ள சுதந்திரமான நிலை, நிர்வாகக் கொள்கையின் (executive policy) ஒரு மைய இயல்பாக ஆக்கப்பட்டுவிட்டது. இப்படிச் சொல்வதால், பணக்கொள்கை எத்தகையதாக இருக்க வேண்டும் என்பதுபற்றிய பண அதிகாரிகளின் கருத்தை நிர்வாகத் துறை அதிகாரிகள் எப்போதுமே ஏற்றுக்கொள்வார்கள் என்பது பொருள் அன்று. கடன் மேலாண்மைக் கொள்கையின் நடைமுறை உண்மைகளைப் பண அதிகாரிகள் புறக்கணித்துவிடுவார்கள் என்பதும் இதன் பொருளாகாது. கருவூலம் புதிய கடன்

பத்திரங்களை வெளியிட்டு, அந்தப் பத்திரங்களின் நிபந்தனைகள் அங்காடியால் விரும்பத்தக்கனவாக இல்லாதிருந்த இரண்டு சமயங்களில் (1955-லும், 1958-லும்), ஐக்கிய ரிசர்வானது கருவூலத்திற்கு ஆதரவு அளித்திருக்கிறது. இச் சமயங்களில், அங்காடியில் வெளியிடப்பட்ட கருவூலத்தின் கடன் பத்திரங்களை ஐக்கிய ரிசர்வ் வாங்கிக்கொண்டது. ஆனால், அப்படி வாங்கியவுடன் ஏறத்தாழ அதே அளவு மதிப்புடைய ஏனைய வகைக் கடன் பத்திரங்களை விற்றுவிடுவதன்மூலம், ஐக்கிய ரிசர்வானது, கருவூலக் கடன் பத்திரங்களை வாங்கியதால் பாங்குக் காப்பிருப்புகளில் ஏற்படக்கூடிய விரும்பத்தகாத பெருக்கத்தைத் தடுத்துவிட்டது. இவ்வாறாக, 'உடன்பாட்டு'க்குப் பிறகு, ஐக்கிய ரிசர்வுக்கும் கருவூலத்திற்கும் இடையே ஏற்பட்ட கூட்டுறவு குறிப்பிடத் தக்கதாக இருக்கிறது. ஆனால், அந்தக் கூட்டுறவு, கடன் பத்திரங்களின் விளைவும் (security yield) வட்டி வீதங்களும் ஏற்ற இறக்கங்களுக்கு உள்ளான ஒரு சூழ்நிலையில் இருந்துவந்தது என்பதை நினைவு கூர்தல் நல்லது. பொதுக்கடனின் வட்டிக்காக வரவு செலவுத் திட்டத்தில் ஒதுக்கப்பட்ட தொகை, நிதியாண்டு 1951-ல் 5·6 பில்லியனாக இருந்தது. 1959-ல் 7·6 பில்லியனாக உயர்ந்தது. அதே ஆண்டுகளில் பொதுக்கடனின் அசல் தொகை 11 சதவீதம் உயர்ந்தது. இவ்வாறாகக் கடன் பத்திரங்களின் விற்பனைக்குச் சாதகமான பண அங்காடி நிலைமையைப் பண அதிகாரிகள் ஏற்படுத்தித் தரட்டும் என்று எதிர்பார்ப்பதற்கு மாறாக, கடன் மேலாளர்கள் (debt managers), கடன் அங்காடியின் நிலைமைக்கு ஏற்பத் தங்கள் நிலைமையை மாற்றி அமைத்துக் கொண்டார்கள். பணக் கொள்கையானது, நீண்ட காலக் குறிக்கோள்கள் என்னும் முறையில், பொருளாதார நிலைபேற்றிற்கும் வளர்ச்சிக்குமே முதலிடம் கொடுத்திருக்கிறது. குறுகிய காலத்தைப் பொறுத்த அளவில், பணக் கொள்கையானது, பண அங்காடியில் ஒரு நிலையில் நிறுத்தப்பட்ட ஒழுங்கு முறையை (pegged order lines) ஏற்படுத்துவதைவிடக் கடுமையான ஒழுங்கீனம் ஏற்படுவதைத் தடுப்பதையே வற்புறுத்தலாயிற்று.

பொதுக் கடன், பண அளிப்பு ஆகியவைபற்றிய நம்முடைய பகுத்தாய்வில், இதுவரை நாம், கடன் வாங்குவதால் பணத்தின் அளவில் ஏற்படக்கூடிய உயர்வைப்பற்றி அல்லது அத்தகைய உயர்வு ஏற்படுவதைத் தடுப்பது பற்றியே கவனித்துவந்தோம். கடனைத் திருப்பித் தருவதால் பண அளிப்பை எந்த அளவு குறைக்க முடியும் என்பதை நாம் கவனிக்க வேண்டாமா? (கடனைத் திருப்பித் தருவதைத் தவிர்த்த) நடப்புச் செலுத்தல்களைவிட நடப்பு வரி விதிப்பு மிகையாக இருப்பதன் விளைவாக ஒரு ரொக்க உபரி

ஏற்பட்டிருப்பதாக வைத்துக்கொள்வோம். செலுத்தல்களைவிட மிகையாக உள்ள வரி விதிப்பானது, நிதிகளை வாணிபப் பாங்குகளிலிருந்து ஐக்கிய ரிசர்வ் பாங்குகளுக்கு மாறச் செய்வதால் (கருவூலமானது இந்தப் பாங்குகளில்தான் 'செக்கு'களின் வழிப்பட்ட தன் கணக்குகளை வைத்திருக்கிறது), கிடைக்கக்கூடிய பண அளிப்பைக் (potential money supply) குறைத்துவிடுகிறது.

கருவூலமானது ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் வைத்திருக்கும் கடன் பத்திரங்களை மட்டும் தேர்ந்தெடுத்து அவற்றின் தொகையைத் திருப்பித் தருமானால், இந்தப் பாங்குகளில் கருவூலத்தின் கணக்கில் உள்ள நிதிகள் பாங்குகளின் கணக்குக்கே மாறிவிடும். அப்படி மாறுவதால் இந்தப் பாங்குகளின் காப்பிருப்பு நிதிகள் உயர்வடையும். இப் பாங்குகள் இந் நிதிகளைப் பண அளிப்பை அதிகப்படுத்துவதற்காகப் பயன்படுத்தக்கூடும். ஆனால், கடனைத் திருப்பித் தரும் நடவடிக்கையைப் பொறுத்த அளவில் அந் நடவடிக்கையால் பண அளிப்பு உயரவில்லை; உயராதது மட்டுமல்ல, குறைந்தும் இருக்கிறது.

கருவூலம் தன்னிடம் உள்ள ரொக்க உபரியை வாணிபப் பாங்குகள் வைத்திருக்கும் கடன் பத்திரங்களின் தொகையைத் திருப்பித் தருவதற்குப் பயன்படுத்துமானால், சென்ற பத்தியில் குறிப்பிடப்பட்டதைவிடக் குறைவான பணவாட்ட விளைவு அல்லது நடுநிலை விளைவே ஏற்படும். வரி விதிப்பின் மிகையானது, காப்பிருப்புகளை வாணிபப் பாங்குகளிடமிருந்து ஐக்கிய ரிசர்வ் பாங்குகளுக்கு மாற்றிவிடுகிறது. அப்படி மாற்றப்பட்ட தொகை, ரொக்க உபரித் தொகைக்கு ஒப்பாக இருக்கும். இந் நடவடிக்கைக்கு முன்பு வாணிபப் பாங்குகள் காப்பிருப்புத் தேவைகளால் (reserve requirements) அனுமதிக்கப்படுகிற அளவுவரை வைப்புகளை வைத்திருந்தால், காப்பிருப்புகளில் இப்போது ஏற்படும் குறைவின் விளைவாக, அந்தக் குறைவைவிடப் பல மடங்கு கூடுதலான அளவில், வைப்புகளைக் குறைக்கவேண்டியிருக்கும். ரொக்க உபரியைக்கொண்டு பாங்குகள் வைத்திருக்கும் கடனைத் திருப்பித் தருவதால், காப்பிருப்புகள் ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிலிருந்து வாணிபப் பாங்குகளுக்கு மீண்டும் மாறிச் சென்றுவிடுகின்றன. இவ்வாறு வாணிபப் பாங்குகளுக்குக் கிடைக்கும் கூடுதல் காப்பிருப்புகள், முன்னர் (வரி விதிப்பின் மிகையால்) அக் காப்பிருப்புகளில் ஏற்பட்ட குறைவுக்குச் சமமாக இருக்கும். இக் கூடுதல் காப்பிருப்புகளின் விளைவாக, இக் கூடுதலைவிடப் பல மடங்கு அதிகமான அளவில், வைப்புகளை உயர்த்திக்கொள்ள முடியும். இவ்வாறாக, இந் நடவடிக்கைகளின் பயனாக ஏற்படுகிற

மொத்த விளைவு நடுநிலை விளைவாகவே இருக்கிறது. (அதாவது, பண அளிப்பின் அளவில் உயர்வும் ஏற்படுவதில்லை; குறைவும் உண்டாவதில்லை.)

இறுதியாக, பாங்குகள் அல்லாத பொதுமக்கள் வைத்திருக்கும் கடன் பத்திரங்களின் தொகை திருப்பித் தரப்படுமானல், பொது மக்களிடமிருந்து பெறப்படுகிற உபரி வரித்தொகை, அதே அளவுக்குப் பொதுமக்களுக்குத் திருப்பித் தரப்படுகிற கடன் தொகை ஆகிய இரண்டின் கூட்டு விளைவு, முந்திய பத்தியில் தெரிவிக்கப்பட்டதைப் போல, நடுநிலையானதாகவே இருக்கும். இவ்வாறாக, இங்கே விளக்கப் பட்டுள்ள மூன்று வகை நிலைமைகளில், ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் வைத்திருக்கிற கடன் பத்திரங்களின் தொகையைத் திருப்பித் தரும்போது மட்டும்தான் பண அளிப்பு குறைகிறது. உபரி வரிவிதிப்பு விளைவைப் (surplus taxation effect) பற்றிச் சிந்திக்காமல், கடனைத் திருப்பிக் கொடுக்கும் நடவடிக்கையைமட்டும் கவனித்துப் பார்த்தால், ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் வைத்திருக்கும் கடன் பத்திரங்களின் தொகையைத் திருப்பித் தரும்போது, நடுநிலை விளைவு ஏற்படுகிறது என்பதையும், வாணிபப் பாங்குகள் அல்லது பொதுமக்கள் வைத்திருக்கும் கடன் பத்திரங்களின் தொகையைத் திருப்பித் தரும்போது பண அளிப்பு பெருகுகிறது என்பதையும் நன்கு அறியலாம். ஆனல், இங்கே தரப்பட்டுள்ள எடுத்துக்காட்டுகளில் பாவிக்கப்பட்டிருப்பதைப்போல, கடனைத் திருப்பித்தரும் நடவடிக்கையின்போது கடன் பத்திரங்களை வைத்திருப்போரில் குறிப்பிட்ட சாராரை மட்டும் தேர்ந்தெடுத்துக் கடனைத் தீர்ப்பது என்பது எளிதில் நடக்கக்கூடிய செயல் அன்று. ஆனல், தீர்க்கப்படுகிற கடன் பத்திரங்கள் ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் வைத்திருப்பவையா அல்லது பிறர் வைத்திருப்பவையா என்பதைப் பொறுத்துப் பண அளிப்பில் வெவ்வேறு மாறுதல் ஏற்படும் என்பதை நினைவில் இருத்துவது நல்லது.

**பொதுக்கடனின் பண ஆக்கம் : பொழிப்புரை (Summary) :** பண அளிப்பில் உயர்வு ஏற்படத்தக்க முறையில் பொதுக்கடன் பாங்குகளால் கையாளப்படும்போது பண ஆக்கம் ஏற்படுகிறது. பொதுக் கடனின் பண ஆக்கத்தின் விளைவாக, புழங்கும் செலாவணியில் உயர்வு ஏற்படலாம். கடன் பத்திரங்களை மைய பாங்குகள் வாங்குவதால் உறுப்பினர் பாங்குகளுக்குக் கிடைக்கிற காப்பிருப்புகளை, அப் பாங்குகளிடமிருந்து பொதுமக்கள் தங்கள் புழக்கத்திற்காக ரொக்கமாகப் பெற்றுக்கொள்கிறபோது இத்தகைய உயர்வு ஏற்படுகிறது. ஆனல், புதிதாகப் படைக்கப்பட்ட பாங்குக் காப்பிருப்புகள், பாங்கு முறையில் உள்ள நடப்பு வைப்புகளுக்கு

ஆதரவாக இருக்கும்போதுதான், அக் காப்பிருப்புகளால் அதிக மான பயன் விளைகிறது. ஏனைய நிலைகள் யாவும் மாறுமல் இருக்கு மாஞல், மொத்தப் பாங்குக் காப்பிருப்புகளில் ஏற்படும் ஒரு புதிய டாலரின் விளைவாகப் பாங்கு முறையிலிருந்து ஒரு டாலரைத்தான் ரொக்கமாகப் பெறமுடியும். ஆனுல், அதே ஒரு டாலர் காப்பிருப் பாகத் தொடர்ந்து இருக்குமாஞல், சட்டமுறைக் காப்பிருப்பு 20 சதவீதமாக இருக்கும்போது, நடப்பு வைப்புகளில் 5 டாலர் உயர்வை ஏற்படுத்தமுடியும். புழங்கும் ரொக்கம், நடப்பு வைப்புகள் ஆகியவை உள்ளிட்ட மொத்தப் பண அளிப்பானது, 1940-ன் முடிவில் 63 பில்லியன் டாலராக இருந்தது, 1945-ன் முடிவில் 102 பில்லியன் டாலராகவும், 1959-ன் நடுவில், 139 பில்லியன் டாலராகவும் உயர்ந்திருக்கிறது.

இந்த உயர்வு முழுவதும் ஐக்கிய ரிசர்வ் கொள்கையின் விளைவாகவே ஏற்பட்டிருக்கிறது என்று முடிவுகட்டினுல் அது பெருந் தவறுகும். பாங்குகளின் மிகைக் காப்பிருப்புகளைப் பயன் படுத்துவது, பாங்குக் காப்பிருப்புகளோடு இறக்குமதி செய்யப்படும் தங்கத்தைச் சேர்ப்பது, கருவூல வைப்புகளிலும் ரொக்கமாக வைத்திருக்கும் தொகையிலும் குறைவு ஏற்படுவது ஆகிய இவற்றின் விளைவாக ஏற்படுகிற பாங்குக்கடன் பெருக்கும், ஐக்கிய ரிசர்வ் முறையின் மூலமாக ஏற்படுகிற பொதுக்கடனின் பண ஆக்கத்தி லிருந்து முற்றிலும் வேறுபட்ட சுயேச்சையான ஒரு நிகழ்ச்சியாகும். இரண்டாம் உலகப்போரின்போதும் பின்னரும் இம் முறைகளால் பாங்குக் கடன் பெருக்கம் ஏற்பட்டுவந்ததால், ஆற்றல்மிக்க பணவீக்கப் போக்குகளை முறியடிக்கவேண்டுமாஞல், பண இறுக்கக் கொள்கையின் மூலமாக—அதாவது பொதுக்கடஞல் ஏற்பட்ட பணஆக்கத்தைக் குறைப்பதன்மூலமாக மேற்படி முறைகளின் ஆற்றலை அழித்துவிடவேண்டும். ஆனுல், நாம் முன்னரே அறிந்ததைப்போல், மொத்தமாகப் பார்க்கும்போது, ஐக்கிய ரிசர்வ் கொள்கையானது, புதிய நிகர பொதுக்கடனின் பண ஆக்கம் ஏற்பட அனுமதி அளித்ததன்மூலம், பண அளிப்பைப் பெருக்கும் தன்மை உடையதாகவே இருந்திருக்கிறது. ஏராளமான பொதுக்கடன் இருந்ததன் விளைவாகப் பண அதிகாரிகள் பணவீக்கப் போக்கை ஏற்றுக்கொள்ள வேண்டியவர்களாக இருந் தார்கள் என்பதை 1946-க்குப் பிந்திய ஆண்டுகளின் அனுபவம் தெளிவாக எடுத்துக்காட்டுகிறது. பொதுக்கடனைச் சீரான முறையில் மேலாண்மை செய்யவேண்டுமாஞல், மையப் பாங்கானது, விலை நிலைபெருக்கக் கொள்கைகளுக்கு முரண்பாடாக உள்ள பணக்கொள்கைகளை விறுவிறுப்பான முறையில் கையாள

வேண்டியிருக்கிறது. கடன் பத்திரங்களின் விலைகள் பின்னிறக்கத்தால் உயர்த்தப்படும்போது வெளி அங்காடியில் கடன் பத்திரங்கள் விற்கப்படுவதால், பாங்குகளின் காப்பிருப்புகளில் குறைவு ஏற்படும். அப்படி ஏற்படுவதால், பண நிலையானது தளர்த்தப்படவேண்டிய சமயத்தில் இறுக்கப்பட்டுவிடுகிறது. கடன்பத்திரங்களின் விலைகள் பணவீக்கத்தால் குறையும்போது வெளி அங்காடியில் கடன் பத்திரங்கள் வாங்கப்படுவதால், பாங்குகளின் காப்பிருப்புகள் பெருகும். அப்படிப் பெருகுவதால் பொருளாதார வீக்கம் மேலும் பெருகுகிற நிலையே ஏற்படும்.

கடனின் பண ஆக்க முறை, அதனுல் விலைமட்டத்தில் ஏற்படுகிற மாறுதல் ஆகியவைபற்றிய நம்முடைய பகுத்தாய்வு, பெரும் அளவுக்குப் பணவீக்கக் காலத்தைப்பற்றியதாகவே இருந்திருக்கிறது. பணவீக்கக் காலத்தில் முன்னேக்குகள் உயர்வாக இருப்பதோடு மேலும் உயர்ந்துகொண்டிருக்கும் என்பதும், நுகர்வுக்கும் முதலீட்டுக்கும் செலவிடும் நாட்டமும் உயர்வாக இருக்கும் என்பதும் நாம் அறிந்தவையே. முன்னேக்குகள் குறைவாக இருக்கும்போது வருமானத்தை உருவாக்குவதற்கான துணைச் செலவு (auxiliary spending) கடன் வாங்கப்பட்ட நிதிகளிலிருந்தே செய்யப்படவேண்டும் என்பதை நாம் 5ஆவது அத்தியாயத்தில் சுட்டிக்காட்டியுள்ளோம். அதுமட்டும் அன்று. கடன் வாங்கப்படும் நிதிகள் இதற்கென்றே படைக்கப்பட்ட புதிய பணமாக இருக்க வேண்டும். ஆகவே, வாணிபச் சுழலின் கீழ்நோக்கிய கட்டத்தின் போது, பொதுக்கடனைப் பணஆக்கம் செய்வதே—அதாவது, புதிதாகப் படைக்கப்பட்ட பாங்குக் காப்பிருப்புகளிலிருந்து புதிய பணத்தைப் பொதுக்கடன்மூலம் உருவாக்குவதே விரும்பத்தக்க செயலாகும்.

மந்தகாலப் பற்றுக்குறைச் செலவுக்கான நிதிகளைக் கடன் வாங்குவதற்கு மூன்று வகையான மூலங்கள் இருக்கின்றன. தனியாரின் நடப்புக்காலப் பதுக்கல்கள் (அதாவது, நடப்புக் காலத்தில் தனியாரின் முதலீட்டைவிடத் தனியாரின் சேமிப்பில் உள்ள மிகை) அல்லது கடந்தகாலப் பதுக்கல்கள் (அதாவது கடந்த காலத்தில் தனியாரின் முதலீட்டைவிடத் தனியாரின் சேமிப்பு மிகையாக இருந்ததன் மூலமாகத் திரட்டப்பட்டவை), முதல்வகை மூலமாகும். பாங்குக் காப்பிருப்புகளின் மிகையாகத் தற்போதுள்ள தொகை இரண்டாவது மூலமாகும். பாங்குக் காப்பிருப்புகளின் மிகையில் நடப்புக்காலத்தில் ஏற்படும் நிகரக்கூடுதல் (net addition) மூன்றுவது மூலம் ஆகும். இந்த மூவகை மூலங்களில், முன்னேக்குகளில் மேலும் ஒரு வீழ்ச்சியை ஏற்படுத்துவதற்கான சாத்தியக்கூறுகளை மிகக் குறைவாக உடையது மூன்றுவது மூலமே.

முன்னேக்குகள் குறைவாக இருக்கும்போது ஏற்படுகிற நடப்புப் பதுக்கல்கள், பெரும்பாலும், தங்களுடைய நீர்மையைக் (liquidity) கூடுதலாக்கிக் கொள்ளவேண்டும் என்று வாணிபங்களிடமும் தனி ஆட்களிடமும் உள்ள விருப்பத்தின் விளைவாகவே உண்டாகின்றன. இத்தகைய நிலையில், அரசாங்கமானது, கூடுதல் செலவுக்கான நிதிகளை, வரிவிதிப்பின் மூலமாக அல்லது நடப்புப் பதுக்கல்களிலிருந்து கட்டாயப்படுத்திப் பெறப்படுகின்ற கடன்கள் மூலமாகப் பெற முயலுமானுல், அவ்வாறு அரசாங்கத்தால் எடுத்துக் கொள்ளப்படுகிற நீர்மை, பதுக்கல்களை ஈடுசெய்வதற்காகத் தனியாரின் பதுக்கல்கள் முன்னிலும் விரைவாக வளர்வது உறுதியாகும். ஆனுல், மந்தகாலத்தில் அத்தகைய வளர்ச்சி ஏற்படுவதைத் தடுப்பதுதான் அரசாங்கத்தின் நோக்கமாக இருக்கவேண்டும். வாணிபச்சூழலின் கீழ்நோக்கிய சட்டத்தைத் தடுத்து நிறுத்துவதற்கும் மீட்சியைத்தூண்டுவதற்குமாகக் கையாளப்படுகிற கொள்கையானது, தனியார் செலவில் உள்ள பற்ருக்குறையை ஈடுசெய்வதற்காக அரசாங்கச் செலவை மேற்கொள்வதோடு, தனியார் செலவை ஊக்குவிக்கும் தன்மை படைத்ததாகவும் இருக்கவேண்டும்.

1930ஐத் தொடர்ந்த ஆண்டுகளில் குறைந்த வருமானமும் குறைந்த முன்னேக்குகளும் இருந்த நிலையில், மிகைக் காப்பிருப்புகளை வைத்திருப்பதன் மூலமாகத்தான் பாங்கு நடவடிக்கைகளைப் பாதுகாப்பான முறையிலும் செம்மையான வகையிலும் நடத்த முடியும் என்று பாங்குகள் கருதியதை இந்த அத்தியாயத்தில் நாம் முன்னரே படித்து அறிந்துள்ளோம். நிலைமை இவ்வாறு இருக்கும் போது, பாங்குகளின் மிகைக் காப்பிருப்புகளைக் கடனுகப் பெற்றுக் கொள்ளக் கருவூலம் முயலுமானுல், அவ்வாறு குறைகிற காப்பிருப்புகளைப் பாங்குகள் உடனடியாக ஈடுசெய்யவே முயலும். அவ்வாறு ஈடுசெய்யும் முயற்சியின் விளைவாகப் பாங்குகள், வட்டி வீதங்களை உயர்த்துவது உட்படத் தனியார் கடன் வாங்குவதைக் கட்டுப்படுத்துவதற்கான பல்வேறு முறைகளைக் கையாளும். பாங்குகள் இத்தகைய நடவடிக்கையை மேற்கொள்வதால், நுகர்வுக்கும் முதலீட்டுக்குமான தனியார் செலவு மேலும் குறைவடைந்து, மீட்சித் திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றுவது மேலும் கடினமான ஒரு செயலாக ஆகிவிடும்.

இந்த உண்மைகளையெல்லாம் முன்வைத்துப் பார்க்கும்போது, புதிதாகப் படைக்கப்பட்ட பாங்குக் காப்பிருப்புகளையே, மந்தகாலச் செலவுக்கான நிதிகளைக் கடனுகப் பெறுவதற்குரிய

தலையாய மூலமாகப் பயன்படுத்தவேண்டும் என்னும் முடிவுக்கே நாம் வரமுடியும். அப்படிப் பயன்படுத்தும்போது இரண்டாம் உலகப் போரின்போது கையாளப்பட்ட சில முறைகளையே நாம் கையாளவேண்டியிருக்கும். வெளி அங்காடியில் கடன் பத்திரங்கள் வாங்குவதன் மூலமாகவே புதிய காப்பிருப்புகளைப் பெரும்பாலும் படைக்கவேண்டியிருக்கும். சட்டமுறைக் காப்பிருப்புத் தேவைகளைக் குறைப்பதும் இன்றியமையாது கையாளப்படவேண்டிய ஓர் ஏற்பாடே. முந்திய பணவீக்கக் காலத்தில் சட்டமுறைக் காப்பிருப்புகள் குறிப்பிடத்தக்க அளவில் உயர்த்தப்பட்டிருக்குமானால், மந்த காலத்தின்போது இச் சட்டமுறைக் காப்பிருப்பு வீதத்தைக் குறைப்பது மிகவும் இன்றியமையாத ஓர் ஏற்பாடாகும். ஆனால், சட்டமுறைக் காப்பிருப்பு வீதத்தைக் குறைப்பதால் காப்பிருப்புகளின் மொத்த அளவு உயர்ந்துவிடாது என்பதும், காப்பிருப்புகளின் ஒரு பெரும் பகுதி மிகைக் காப்பிருப்புகளாக மாற்றப்படுவதுதான் அக் குறைப்பின் விளைவு என்பதும் இச் சமயத்தில் குறிப்பிடவேண்டிய உண்மைகள் ஆகும். ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் வெளி அங்காடியில் கடன் பத்திரங்களை வாங்குவதாலும், சட்டமுறைக் காப்பிருப்பு வீதத்தைக் குறைப்பதாலும், போதுமான அளவில் கூடுதல் காப்பிருப்புகளைப் பெற முடியாவிட்டால், ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் கடன்களையும் கழிவுகளையும் தாராளமாகத் தருகிற முறையைக் கையாளலாம். ஆனால், இங்கே தெரிவிக்கப்பட்ட மூன்று முறைகளில் மிகவும் குறைந்த பயனை அளிக்கவல்ல முறை, இந்த மூன்றாவது முறையே. ஏனென்றால், இந்த முறைப்படிக் கடனை வாங்குவதும் வாங்காமல் இருப்பதும், உறுப்பினர் பாங்குகளின் விருப்பத்தைப் பொருத்ததாகும். உறுப்பினர் பாங்குகளிடையே உள்ள மாறுதல் விரும்பா மனப்பான்மை காரணமாக, அந்தப் பாங்குகள், ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடமிருந்து அதிகமாகக் கடன் பெறுவதை விரும்புவதில்லை. ஆனால், வெளி அங்காடி வாங்குதல்கள் (open market purchases) சட்டமுறைக் காப்பிருப்பு வீதத்தைக் குறைத்தல் ஆகிய இரண்டு முறைகளாலும், பாங்குகள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், அவற்றின் மிகைக் காப்பிருப்புகள் தாமாகவே உயர்ந்துவிடுகின்றன. கருவூலமானது ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடமிருந்து நேர்முகமாகக் கடன் வாங்குவதால் மந்த காலத்தில் நாம் ஏற்படுத்தவேண்டும் என்று விரும்புகிற விளைவுகளை, மிக எளிதாகவும் மிகுந்த பயனை விளைவிக்கத்தக்க வகையிலும் ஏற்படுத்த முடியும் என்பது உண்மையாக இருக்கலாம்.

## மேலும் படித்தற்கு உரியவை

1. எல். வி. சாண்ட்லர் (L.V. Chandler), 'Inflation in the United States', 1940–1948, நியூயார்க், ஹார்ப்பர், 1951.

இந்த முக்கியமான காலப் பகுதியில் கையாளப்பட்ட பணக் கொள்கைகள்–நிதிக் கொள்கைகள் ஆகியவை பற்றியும், அவற்றின் விளைவுகள் பற்றியும், மிகச் சிறந்த வகையிலும் விரிவான விவரங்களோடும் எடுத்துக்கூறும் நூல். கடனின் பண ஆக்கம்பற்றிச் சிறப்பாக விளக்கம் தரும் அத்தியாயங்கள், 9, 13, 14 ஆகியவை ஆகும்.

2. சி.எச். டனேவான் (C.H. Donovan), 'Debt Management and Federal Reserve Credit Policy Since 1945', Southern Economic Journal, ஜனவரி, 1954, பக்கங்கள் 231 முதல்.

பணக் கொள்கை, கடன் நிர்வாகக் கொள்கை ஆகியவற்றை இணைத்த முறையில் (அல்லது இணைப்பு இல்லாத முறையில்) 1946–1954 ஆண்டுகளில் ஏற்பட்ட அனுபவத்தைப்பற்றிய உண்மைகளை எடுத்து விளக்கும் கட்டுரை.

3. வில்லியம் ஃபெல்னர் (William Fellner), 'War Finance and Inflation', American Economic Review, ஜூன் 1942, பக்கங்கள் 235 முதல்.

போர்க்காலப் பணவீக்கம்பற்றிய மிக அருமையான கருத்தாய்வு. 1939–1942 ஆண்டுகளின் நிலைமைகள், சிறப்பாக ஆராயப்பட்டுள்ளன.

4. ஈ. ஏ. கோல்டன்வீசர் (E. A. Goldenweiser), 'American Monetary Policy', நியூயார்க், மக்ராஹில், 1951.

இந் நூலின் 11ஆவது அத்தியாயம், நம் நூலின் இந்த அத்தியாயத்தின் பொருள்பற்றி எடுத்து விளக்குகிறது. ஏனைய அத்தியாயங்கள், மையப் பாங்கின் பங்கையும், மையப் பாங்குக் கொள்கைகள் வளர்ந்த வரலாற்றையும் தெளிவுபடுத்துகின்றன.

5. ஏ. எச். ஹான்சன் (A. H. Hansen), 'Inflationary Potentialities of the Public Debt'. இது, 'Curbing Inflation Through Taxation' என்னும் நூலின் (நியூயார்க், Tax Institute 1944) 5ஆவது அத்தியாயம்.

கடனின் பண ஆக்கத்தைவிட, கடனுக்கும் செலவு நாட்டங்களுக்கும் உள்ள தொடர்பையே மிகுதியாக வற்புறுத்தும் கருத்தாய்வு. நம் நூலின் இந்த அத்தியாயத்தில் உள்ள பொருளோடு சேர்த்துப் படிப்பதற்கு ஏற்ற கட்டுரை.

6. ஜேகப் எச். ஹொல்லாந்தர் (Jacob H. Hollander), 'War Borrowing', நியூயார்க், மாக்மில்லன், 1919, அத்தியாயங்கள் 4, 5.

முதல் உலகப்போரின்போது, கருவூலம், குறுங்காலக் கடனையே பெரிதும் சார்ந்து இருந்ததைப்பற்றிய பகுத்தாய்வு. அத்தகைய கடன் எழுப்பப்பட்டதால் பண அங்காடியிலும் விலை மட்டத்திலும் ஏற்பட்ட விளைவுகள், இந்த இரு அத்தியாயங்களில் குறிப்பாக ஆராயப்பட்டுள்ளன.

7. ஆர்..ஐ. ராபின்சன் (R. I. Robinson), 'Monetary Aspects of National Debt Policy.' இது, 'Public Finance and Full Employment' என்னும் நூலில் (வாஷிங்டன், ஐக்கிய ரிசர்வ் முறை, 1945, பக்கங்கள் 69–83) உள்ளது.

நம் நூலின் இந்த அத்தியாயத்தின் பொருளைப்பற்றிச் சுருக்கமாக எடுத்துக்கூறும் கட்டுரை.

## 9ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்.

1. பின்னிறக்கக் காலத்தில் பணஅளிப்பு (money supply) குறைந்து விடுவதற்குக் காரணம், பாங்குகளிலிருந்து கடன்களைப் பெற்றவர்கள் அவற்றைத் திருப்பித் தருவதால், நடப்பு வைப்புகளின் மொத்தத் தொகை குறைவடைவதே. பண அளிப்பில் மிகப் பெரிய, மிக எளிதில் மாறக்கூடிய பகுதியாக இருப்பது, இந்த வைப்புகளே.

2. காண்க: டேவிஸ் ஆர். டீவி (Davis R. Dewey), 'Financial History of the United States', 12ஆவது பதிப்பு, நியூயார்க், லாங்மன்ஸ், 1934, பக்கங்கள் 36–43.

3. செஸ்டர் டபள்யூ. ரைட் (Chester W. Wright), 'Economic History of the United States', நியூயார்க், மக்ரா ஹில் (McGraw Hill), 1941, பக்கம் 221.

4. பல்வேறு குடியிருப்புகளால் (colonies) ஒரே சமயத்தில் வெளியிடப்பட்ட தாள் பணமானது (paper money) பணவீக்கத்தைக் குறிப்பிடத்தக்க அளவில் உயர்த்தியது.

5. வெஸ்லி சி. மிட்ச்செல் (Wesley C. Mitchell), 'A History of the Greenbacks', சிகாகோ, சிகாகோ பல்கலைக்கழகம், 1903, பக்கம் 129.

6. முன்னர்க் குறிப்பிட்ட அதே நூல், பக்கம் 279. மொத்த விலைக் குறியீட்டெண், 1865-க்குள் ஏறத்தாழ 230 ஆக உயர்ந்துவிட்டது (1860 = 100). அதே நூல், பக்கம் 277.

7. இந்தப் பொருள்பற்றிய கருத்தாய்வு வேண்டின், 'Federal Reserve Bulletin', நவம்பர் 1943, பக்கம 360 காண்க.

8. சட்டப்படி உலோக வடிவில் உள்ள தங்கமானது கருவூலத்தால் வைத்திருக்கப்படவேண்டுமாதலால்,அத் தங்கத்தின் பிரதிநிதியாகப் புழக்கத்தில் இல்லாத தங்கச் சான்றிதழ்களை ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் வைத்திருக்கலாம். இந்தச் சான்றுகளை இந்தப் பாங்குகள், தங்களால் வெளியிடப்படுகிற நோட்டுகளுக்கு (ஐக்கிய ரிசர்வ் நோட்டுகள்) எதிரான காப்பிருப்புகளாகவோ அல்லது, அவை வைத்திருக்கிற உறுப்பினர் பாங்கு வைப்புகள், கருவூல வைப்புகள் ஆகியவற்றிற்கு எதிரான ரொக்கக் காப்பிருப்புகளாகவோ வைத்துக்கொள்ளலாம்.

9. அத் தொகை, ஜூன் 29, 1940 அன்று 27,877 மில்லியன் டாலராகவும் (Federal Reserve Bulletin, நவம்பர் 1940, பக்கம் 1199), 1945-ன் ஆகஸ்டு மாத முதற் பாதியில், சராசரியில் 61,562 மில்லியன் டாலராகவும் (அதே பத்திரிகை, அக்டோபர் 1945, பக்கம் 1028) இருந்தது. வைப்புகளில் நடைமுறையில் ஏற்பட்ட உயர்வானது, மேலே தரப்பட்ட சுமார் கணக்கைவிட மிகுதியாக இருப்பதால்,1945-ல் காப்பிருப்புகள் சட்டமுறைத் தேவைகளைவிடக் குறைவாக இருந்ததாகப் பொருளாகாது. ஏனென்றால், (1) மேலே செய்யப் பட்ட கணக்கிடானது, 20 சதவீதக் காப்பிருப்புத் தேவைகளை அடிப்படையாகக் கொண்டு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால், நடைமுறைத் தேவைகள் கணக்காக 20 சதவீதமாக இருப்பதில்லை. (2) மேற்குறித்த இரு தேதிகளுக்கு இடையே உறுப்பினர் பாங்குகளின் காப்பிருப்புகளின் மொத்தத் தொகையில் ஏற்பட்ட நிகர உயர்வு 1,201 மில்லியன் டாலராகும். ஆகவே, அந்தத் தொகையை எதிராக வைத்து, அதைப்போல ஐந்து மடங்கு வைப்புகளைப் பெற்றுக்கொள்ள முடியும்.

10. இந்த முறையைப்பற்றிய மிகச்சிறந்த கருத்தாய்வு வேண்டுமானால், ஜேகப் எச். ஹொலாந்தர் (Jacob H. Hollander) என்பாரின் 'War Borrowing' (நியூயார்க், மாக்மில்லன், 1919, அத்தியாயம் 4) என்னும் நூலைக் காண்க.

11. Federal Reserve Bulletin, மே 1, 1917, பக்கம் 338.

12. முன்னர்க் குறிப்பிட்ட பத்திரிகை, ஜூன் 1, 1917, பக்கம் 429.

13. முன் குறிப்பிட்ட பத்திரிகை, ஜூலை 1, 1917, பக்கம் 497. இந்தக் காலத்தில், சான்றிதழ்கள் (certificates), அவற்றை வைத்திருந்தோருக்கு, 3 சதவீதத்தைவிட உயர்ந்த வட்டியைத் தந்தன.

14. முன் குறிப்பிட்ட பத்திரிகை, அக்டோபர் 1, 1919, பக்கம் 943.

15. முன் குறிப்பிட்ட பத்திரிகை, ஜூன் 1, 1919, பக்கம் 609.

16. காண்க: Federal Reserve Bulletin, டிசம்பர் 1942, பக்கம் 1190.

17. முன் குறிப்பிட்ட பத்திரிகை, பக்கங்கள் 1174-75.

18. முன் குறிப்பிட்ட பத்திரிகை, செப்டம்பர் 1942, பக்கம் 872.

19. முன் குறிப்பிட்ட பத்திரிகை, முன்குறிப்பிட்ட இதழ்.

20. முன் குறிப்பிட்ட பத்திரிகை, ஜனவரி 1942, பக்கம் 2.

21. முன் குறிப்பிட்ட பத்திரிகை, டிசம்பர் 1942, பக்கங்கள் 1190-91.

22. முன் குறிப்பிட்ட பத்திரிகை, அக்டோபர் 1942, பக்கம் 982.

23. முன் குறிப்பிட்ட பத்திரிகை, மே 1943, பக்கம் 378 மற்றும் பக்கங்கள் 369–75.

24. இந்தத் திருத்தமானது, இந்த வைப்புகள்மீதான வைப்பு ஈட்டுறுதி வரியையும் (Deposit Insurance Tax) அகற்றிவிட்டது.

25. Federal Reserve Bulletin, ஜூலை 1940, பக்கம் 685.

26. முன் குறிப்பிட்ட பத்திரிகை, ஜூலை 1945, பக்கம் 657.

27. கிட்டத்தட்ட இந்த உயர்வு முழுவதும் ஐக்கிய ரிசர்வ் நோட்டுகளின் வடிவிலேயே இருந்தது. இந்த நோட்டுகள், ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் வைத்திருந்த தங்கம், கருவூலக் கடன்பத்திரங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் வெளியிடப்பட்டவை.

28. ஆண்டின் மொத்தங்கள். ஆதாரம் : Survey of Current Business, ஜனவரி 1951, பக்கம் 9.

29. ஆண்டின் சராசரிகள். ஆதாரம் : Monthly Labour Review, ஏப்ரல் 1952, பக்கம் 479.

# 10. கடன் சுமை
## (The Burden of Debt)

ஒரு பொதுக் கடனைப் பெற்றுள்ள சமுதாயத்திற்கு அந்தக் கடனுல் ஓரளவு பொருளாதாரச் சுமை ஏற்படுகிறது என்பது உண்மைதான். ஆனுல், அந்தச் சுமையின் தன்மையும் கடுமையும் பெரும்பாலும் தவருன முறையிலேயே உணரப்படுகின்றன. இப்படி உணரப்படுவதற்கான காரணங்கள், பொதுக் கடன் (அரசாங்கக் கடன்) தனியார் கடனைப் போன்றதே என்று கருதுவதும், இருவகைக் கடன்களுக்கும் ஒரே வகைத் தரங்களை நிர்ணயிப்பதுமே ஆகும். தனியார் கடனுக்கும் அரசாங்கக் கடனுக்கும் உள்ள ஒற்றுமைகளையும் வேற்றுமைகளையும் அலசி ஆராய்வதும், அரசாங்கக் கடனுல் பொருளாதாரத்திற்கு ஏற்படுகிற சுமையின் தன்மையைப் பகுத்தாய்வு செய்வதுமே இந்த அத்தியாயத்தின் முதன்மையான நோக்கங்கள் ஆகும்.

**கடனின் மறுபுறம்—நாணயம் (The Obverse of Debt: Credit)**

செலுத்தவேண்டியுள்ள ஒவ்வொரு டாலர் மதிப்புள்ள கடனுக்கும் எதிராக, ஒவ்வொரு டாலர் மதிப்புள்ள நாணயம் (credit) இருக்கிறது. கடனுளி, கடன் ஈவோருக்குக் கடனைத் திருப்பித் தரவேண்டிய பொறுப்பு (liability) உடையவராக இருப்பதற்கு நேர் எதிராகக் கடன் ஈவோர், தம் கடனைத் திருப்பிப் பெறுவதற்குரிய உரிமையின் சொத்து மதிப்பு (asset value of creditor's claim) இருக்கிறது. இது மிக எளிய ஓர் உண்மைதான். ஆனுல், இந்த மிக எளிய உண்மையைத்தான், கடனின் தன்மையைப் பற்றி ஆராயும் பலர் அடிக்கடி மறந்துவிடுகிருர்கள். நிதிமுறை ஒழுக்கம்பற்றிய விதிகள் (the canons of financial morality) பெரும்பாலும் கடனுளியின் பரிதாபமான நிலைமைகளைப்பற்றி வருத்தம் தெரிவிக்கின்றன. ஆனுல், அதே விதிகள், கடன் ஈவோரிடம் காணப்படுகிற சிக்கன உணர்ச்சியையும் அதன் பொருளாதாரப் பெருமைகளையும் பாராட்டிப் பேசுகின்றன.

ஆனால், கடன் பெறுவோரின் நிலை, கடன் ஈவோரின் நிலை ஆகிய இந்த இரண்டில் ஒன்று இல்லாவிட்டால் மற்றொன்று இருக்க முடியாது. கடனுக்கான தேவை இல்லாமல் சிக்கன உணர்ச்சி மட்டும் இருக்குமானால் அச் சிக்கனத்தின் விளைவாகப் பதுக்கல்கள் தாம் உருவாகும்.

ஓர் ஆள், மற்றோர் ஆளுடைய சேமிப்புகளைப் பயன் படுத்துவதுதான், கடனின் அடிப்படைத் தன்மை ஆகும். இந்த உண்மை, தனியார் கடன், பொதுக் கடன், ஆகிய இரண்டிற்கும் பொருந்தும். கடன் தருவோரிடமிருந்து கடன் பெறுவோருக்கு இந் நிதிகள் மாற்றப்படுவதன் மூலமாக மிகுந்த பயன் தரத்தக்க முறையில் இந் நிதிகள் பயன்படுத்தப்படுமானால், கடனை உண்டாக்குகிற சூழ்நிலைகளால் பொருளாதாரத்திற்கு நன்மையே ஏற்படுகிறது என்பதில் ஐயம் இருக்கமுடியாது. இந்தக் கோணத்திலிருந்து பார்க்கும்போது, கடன் இருப்பது, பொருளாதாரம் உயிராற்றல் மிக்கதாக இருக்கிறது என்பதை எடுத்துக்காட்டும் அறிகுறியே என்று கூறப்படுவதில் உண்மை இருக்கிறது என்பது தெளிவு. பொருளாதாரத்தின் செழுமைப் பருவத்தின்போது தனியார் கடனில் உயர்வு ஏற்படுகிறது. அது போலவே மந்தப் பருவத்தின்போது தனியார் கடன் குறைவாக இருக்கிறது. தனியார் கடனின் இந்தப் போக்குக்கு உரிய காரணம், வெளிப்படையாக உள்ளது. நுகர்விலும் முதலீட்டிலும் உயர்வு ஏற்படும்போது, தற்போதுள்ள செலவிடக்கூடிய சொத்துக்களைக் (existing spendable assets) கடன் வாங்குவது, புதிய பணத்தைக் கடன் வாங்குவது ஆகிய இரண்டு முறைகளையும் கையாளவேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டுவிடுகிறது. பாங்குகளுக்குத் தரவேண்டிய கடனில் நிகரக் குறைவு ஏற்பட்டால், பணம் அழிக்கப்படுகிறது என்று பொருள். மற்றவர்களுக்குத் தர வேண்டிய கடனில் நிகரக்குறைவு ஏற்பட்டால் அங்காடியில் உள்ள நிதிகள் குறைந்த விறுவிறுப்புடன் பயன்படுத்தப்படுகின்றன என்றே பெரும்பாலும் பொருள்படும். கடனின் நிகரக் குறைவால் ஏற்படும் விளைவு, நாட்டின் வருமானம் குறைவதே ஆகும். தனியாட்களிடம் உள்ள ஆளப்படா நிதிகளை (idle funds), அல்லது பாங்குகளிடமிருந்து புதிய நிதிகளை அரசாங்கம் கடன் பெறுவதால் வருமானம் தூண்டப் படும் (கூடுதல்வருமானம் ஏற்படும்). ஆகவே வேலைக் குறைவு நிலை இருக்கும்போது, அவ்வாறு கடன் பெறுவது, விரும்பத்தக்க ஒரு செயலாகும். 1929க்குப் பிறகு கூட்டரசாங்கக் கடனில் பெரும் அளவு உயர்வு ஏற்பட்டபோதிலும், தனியார் கடன் — அரசாங்கக் கடன் — ஆகிய இரண்டின் கூட்டுத் தொகையில் உயர்வு ஏற்பட வில்லை என்பதைச் சுட்டிக்காட்டி, 1930ஐத் தொடர்ந்த ஆண்டுகளில், பலர், அரசாங்கம் கடன் வாங்குவதை ஆதரித்து

வாதாடியதற்குரிய காரணம் இதுதான்.[1] தனியார் செலவின் பற்றுக்குறையை ஈடுசெய்வதற்கான செலவை மேற்கொள்வதற்காக அரசாங்கம் கடன் வாங்குவதால் வருமானம் தூண்டப்படும் என்பதைப்பற்றி இங்கு மேலும் விளக்கவேண்டிய தேவையில்லை.[2] தனியார் கடன், பொதுக் கடன் ஆகிய இரண்டின் லீவரேஜ் விளைவுகளும் ஒரே தன்மை உடையவை. ஆகவே அக் கடன்கள், ஒன்றை ஒன்று நிறைவு செய்வது, அதாவது, தனியார் கடன் குறையும்போது அரசாங்கக் கடன் உயர்வடைந்து அக் குறைவை நிரப்புவது, முறையான செயலே ஆகும்.

ஓர் அரசாங்கத்தின் கடனை அந்த அரசாங்கத்தின் குடிமக்களே கொடுத்துள்ள அளவுக்கு, 'நமக்கு நாமே கடனைச் செலுத்த வேண்டியிருக்கிறது' (we owe it to ourselves) என்பது உண்மைதான். பரந்த கண்ணோட்டத்தில் பார்க்கும்போது, தனியார் கடனுக்கும் இந்த உண்மை பொருந்துவதாகவே இருக்கிறது. இதற்கு மாறாக அரசாங்கக் கடனானது ஏனைய சமுதாயங்களின் குடிமக்களுக்கு அல்லது அரசாங்கங்களுக்குச் செலுத்தவேண்டியிருக்குமானால், அத்தகைய செலுத்தல்களால் நாட்டின் ஆக்கம் (national product) குறைந்துவிடுகிறது. அப்படிக் குறைவதால் நாட்டு நலனின் தரமும் (standard of national welfare) குறைந்துவிடுகிறது. இப்படிச் சொல்வதால், வெளிநாடுகளிலிருந்து பெறுகிற கடனால் கடன் பெறுகிற பொருளாதாரத்திற்கு ஆக்கம் விளைவதில்லை (unproductive) என்று பொருளாகாது. அயல் நாடுகளிலிருந்து கடன் வாங்கப்பட்ட நிதிகளின் முதலீட்டால், கடன் பெறுகிற பொருளாதாரத்தில் ஏற்படுகிற நிகர விளைவு (net return), அதே அளவு நிதிகளை உள்நாட்டிலிருந்து கடன் பெற்று முதலீடு செய்வதால் ஏற்படும் நிகர விளைவைவிடக் குறைவாக இருக்கும் என்பதுதான் அதன் உண்மைப் பொருளாகும். நாட்டின் வருமானத்தின் அளவு என்னும் கோணத்திலிருந்து பார்க்கும்போது, உள்நாட்டுக் கடன்களை நமக்கு நாமே செலுத்தவேண்டியிருக்கிறது என்னும் நிலைமை தனிச் சிறப்பைப் பெற்றுவிடுகிறது. உள்நாட்டுக் கடனால் ஏற்படும் நிதிகளின் மாற்றல் (transfer of funds) சமுதாயத்திற்கு உள்ளேயே நிகழ்ந்துவிடுகிறது. இத்தகைய கடனால் சமுதாயத்திற்குக் கிடைக்கும் நாட்டு வருமானத்தின் அளவு குறைவதில்லை. குறையாதது மட்டுமல்ல — கடன் வாங்கிய நிதிகளைக்கொண்டு செய்யக்கூடிய செலவுகளால் அது உயரவும் கூடும்.

ஆனால், கடனுக்குத் தனியாட்கள் தொடர்பான இயல்புகள் நாட்டின் தொடர்பான இயல்புகள் ஆகிய இரண்டும் இருக்கின்றன. உள்நாட்டுக் கடனை நமக்கு நாமே செலுத்தவேண்டியிருக்கிறது

என்பது உண்மையாக இருந்தாலும், 'நமக்கு' என்பதில் அடங்கியுள்ள அதே தனியாட்கள்தான் 'நாம்' என்பதிலும் அடங்கியிருக்கவேண்டும் என்கிற கட்டாயம் இல்லை. தனியார் கடனைப் பொறுத்த அளவில் இது வெள்ளிடைமலையென விளங்குகிறது. தனியார் கடனைத் தருபவர், பெறுபவர் ஆகிய இருவரும் ஒரே சமுதாயத்தைச் சார்ந்த குடிமக்களாக இருந்தாலும், இருவரும் ஒருவரே அல்லர். அரசாங்கக் கடனைப் பொறுத்த அளவில், இறுதிக் கடனாளிகளே (அதாவது வரி செலுத்துவோரே), குறைந்த அளவிலோ மிகுந்த அளவிலோ, கடன் ஈவோராகவும் (அதாவது கடன் பத்திரங்களை வைத்திருப்போராகவும்) இருக்கக்கூடும். ஆனால் அரசாங்கக் கடனின் உடைமை (ownership) யார்யாரிடம் எந்த அளவுக்குப் பங்கிட்டிருக்கிறதோ, அந்த அளவில் அதே ஆட்களிடம், வரிச் சுமையும் பங்கிடப்பட்டிருக்கும் என்று கூறமுடியாது. எப்போதாவது அப்படிப் பங்கிடப்பட்டிருக்குமானால் மிக அருமையாக நேரிடுகிற ஓர் உடன் நிகழ்ச்சி (a rare coincidence) என்றே அதனைக் கூறவேண்டும். அத்தகைய பங்கீடு இருக்க முடியுமானால், அரசாங்கக் கடனால் கடன் ஈவோருக்கு ஏற்படக் கூடிய நன்மையும் வரி செலுத்துவோருக்கு ஏற்படக்கூடிய சுமையும் ஒரே நேரத்தில் அகன்றுவிடும்.

ஆகவே ஓர் உள்நாட்டுக் கடனை நமக்கு நாமே செலுத்த வேண்டியிருப்பதால் அத்தகைய கடனால் சுமை ஏற்படுவதில்லை என்று நாம் மகிழ்ச்சியோடு கூறிவிடமுடியாது. நம்முடைய பொருளாதாரம், தனியாட்களுடைய ஒரு பொருளாதாரமாகும். இப் பொருளாதாரத்தில் பொருளாதாரச் சுமைகள் பெரும்பாலும் அக இயல்பும் (subjective nature) தனியாள் தன்மையும் (individual nature) உடையனவாக இருக்கின்றன. ஆகவே, அச் சுமைகளைத் தனியாட்களின் நிலைமையை வைத்தே பகுத்தாய்வு செய்யவேண்டும். ஆனால், அதே நேரத்தில், தனியாள் நலன் (individual welfare), பெரும் அளவில், மக்கட் குழு நலனைப் (group welfare) பொறுத்திருக்கிறது என்னும் உண்மையையும் நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும். வேலை, நாட்டு வருமானம் ஆகியவற்றின் அளவு தாழ்ந்த மட்டத்தில் இருப்பதைவிட உயர்ந்த மட்டத்தில் இருக்கும்போதுதான் பெரும்பாலான தனியாட்கள் சிறந்த நிலையில் வாழ்கிறார்கள். அதுபோலவே பெரும்பாலும் பொது நலனிலிருந்துதான் (general welfare) தனியாள் நலன் பிறக்கிறது. இச் சிக்கலில் ஏற்படக்கூடிய ஆபத்து என்னவென்றால், நாம் மொத்த விவரங்கள் அல்லது சராசரி விவரங்களைமட்டும் கவனிக்கிற அண்டப் பொருளாதார வாதிகளாகவே (Macro-Economists) இருக்க விரும்புகிறோம்; அல்லது தனியாட்களை

மட்டும் கவனிக்கிற பிண்டப் பொருளாதார வாதிகளாகவே (Micro-Economists) இருக்க விரும்புகிறோம். இந்த இரண்டு நிலைகளில் ஏதேனும் ஒன்றை ஒதுக்கிவிட்டு, மற்றொன்றை மட்டுமே சார்ந்திருப்பதால் பாதி உண்மைகளை மட்டுமே நாம் காணமுடியும். ஓர் உள்நாட்டுக் கடனை நமக்கு நாமே செலுத்தவேண்டி யிருப்பதால் அக் கடனால் பொருளாதாரச் சுமை ஏற்படுவதில்லை என்று அறிவிப்பது எவ்வளவு தவறானதோ, அவ்வளவு தவறானதுதான், தனியாள் கடனும் பொதுக் கடனும் எல்லா வகைகளிலும் ஒரே இயல்புடையன என்று இயம்புவதும். கடன் வாங்கப்பட்ட நிதிகள் ஆக்கம் தரத்தக்க முறையில் (productively) முதலீடு செய்யப்பட்டால் அக் கடனால் நிகரச் சுமை எதுவும் ஏற்படுவதில்லை; ஆனால், சமுதாயம் முழுவதற்கும் நிகர நன்மை ஏற்படுகிறது; ஏனென்றால், அம் முதலீடு செய்யப்படாதபோது பெறக்கூடியதைவிடச் சிறப்புமிக்க வாழ்வை அம் முதலீடு செய்யப்பட்டபின் சமுதாயம் பெறுகிறது. ஆனால் அந்தக் கடன், கடன் என்னும் அளவில், ஒரு சாராரிடமிருந்து இன்னொரு சாராருக்கு அசலையும் வட்டியையும் மாற்றுவதற்கான ஒரு முறையை ஏற்படுத்தி, அப்படி ஏற்படுத்துவதால், சமுதாயத்தில் உள்ள குறிப்பிட்ட தனியாட்கள்மீது குறிப்பிட்ட சுமைகளை (specific burdens) ஏற்றிவிடுகிறது.

**பொதுக் கடனின் நன்மைகள் (The Benefits of Public Debt)**

கடன் சுமையைப்பற்றிப் பகுத்தாய்வு செய்வதற்கு முன்னர், அந்தச் சுமையைக் குறைக்கத்தக்க வகையில், பொதுக் கடன் இருப்பதால் ஏற்படுகிற சில நன்மைகளைப்பற்றிக் கவனிப்போம். கடன் வாங்கக்கூடிய திறமையால் ஏறத்தாழ வரையறையற்ற முறையில் ஏற்படக்கூடிய நன்மைகளைப்பற்றி மிகச் சுருக்கமான வகையில் ஆராய்ந்தால் போதும். மதிப்புள்ள அரசாங்கங்கள், வரவுக்கு ஏற்ற செலவை மட்டும் செய்வது என்னும் கொள்கையை (pay-as-you-go policy) எப்போதுமே பின்பற்றுவது என்பது இயலாத செயலாகும். வன்மைமிக்க பொது நாணயம் (a strong public credit) இருப்பது, சமுதாயத்திற்கு மிகக் கூடுதலான நன்மை தரத்தக்க நிலைமையாகும். பொது நாணயத்தைப் பயன்படுத்தும் செயல், நிதிக் கொள்கையைத் தாங்கி நிற்கும் தூண்களில் ஒன்றாகும். பொதுக் கடனை எழுப்பாமல் பொது நெருக்கடிகளைச் சமாளிப்பதற்கான நிதிகளைத் திரட்டுவது இயலாத செயலே.

பொதுக் கடனின் உடைமை பரவலாக இருப்பதால் ஏற்படும் அரசியல் நன்மைகளை அளந்தறியமுடியாது என்றாலும், அத்தகைய நன்மைகள் இருப்பது, மறுக்கவொண்ணாத உண்மையாகும்,

குடிமக்கள் அத்தனை பேரும் (பரம ஏழைகள் கூட) அடையாள அளவிலாவது வரி செலுத்தவேண்டும் என்பதற்கு ஆதரவாக எழுப்பப்படும் அதே வாதங்கள், பொதுக் கடனின் உடைமை பரவலாக இருக்கவேண்டும் என்பதற்கும் பொருந்தும். ஆளப்படுபவர்களின் இசைவிலிருந்து தன் அதிகாரங்களைப் பெறுகிற ஓர் அரசாங்கம் சிறப்புறச் செயலாற்றவேண்டு மாளுல், வாக்காளப் பெருமக்கள் அரசாங்க நடவடிக்கைகளில் அக்கறையுள்ளவர்களாகவும், அந் நடவடிக்கைகள் பற்றிய விவரங்களை நன்கு அறிந்தவர்களாகவும் இருந்தாகவேண்டும். அரசாங்கத்தோடு குடிமக்களுக்கு நிதித் தொடர்பு இருப்பதால், அத்தகைய அக்கறை–அறிவுடைமை–ஆகிய இரண்டுமே ஓங்கி வளரும். அரசாங்க நிதி நடவடிக்கைகளால் நேர்முகமாகவும் தெளிவாகத் தெரியத்தக்க வகையிலும் பாதிக்கப்படுபவர்களின் எண்ணிக்கை, நெடுங்காலமாகவே குடிமக்களின் எண்ணிக்கையில் மிகச் சிறு பகுதியாக இருந்துவருவது, வருந்தத்தக்க ஒரு நிலைமை தான். போர்க்காலக் கடன் பத்திர விற்பனைகளால் குடிமக்களிடம் ஏற்படுகிற மன உறுதியும் ஆர்வமும், மேலே சொல்லப்பட்ட உண்மையை நன்கு விளக்கும் ஆற்றல் படைத்தவனவாக உள்ளன.

பரவலாக உள்ள பொதுக் கடனின் உடைமையால் பொருளாதார நன்மைகள் குறிப்பிடத்தக்க அளவில் ஏற்படுவதை, அந்த உடைமையின் விளைவாக நுகர்வின் அளவு உயர்வடைவதி லிருந்து நன்கு அறியலாம்.. குறைந்த வருமானப் பிரிவினரிடம் மிக்க நீர்மை படைத்த அரசாங்கப் பத்திரங்கள் இருக்குமானுல், நெருக்கடிகளின்போது செலவிடுவதற்காக அல்லது நீடித்த நுகர்வுப் பொருள்களை (durable consumer goods) வாங்குவதற் காக அவர்கள் பயன்படுத்தக்கூடிய திரண்ட சொத்துகளாக (accumulated assets) அவை விளங்கும்.

அக் கடன் பத்திரங்களின் உரிமையாளர்களுக்கு, நுகர்வுச் செலவுக்காக அவற்றை ரொக்கமாக்கிவிடும் எண்ணம் இல்லா விட்டால்கூட, எதிர்பாராச் செலவுகளின்போது பயன்படுத்தக் கூடிய நீர்மைக் காப்பிருப்புகளாக அவை இருப்பதாலேயே, அத்தகைய காப்பிருப்புகளை அமைப்பதற்காக நடப்பு வருமானத்தி லிருந்து சேமிக்கவேண்டிய தேவை ஓரளவுக்கு அகன்றுவிடும். பணவீக்க காலத்தில் செலவு நாட்டத்தில் உயர்வு ஏற்படுவது விரும்பத்தக்கது அல்ல என்பது உண்மைதான். ஆனுல், நீண்ட காலக் கோணத்திலிருந்து பார்க்கும்போது புதிய மூலதன ஆக்கத்திற்குத் தேவையான சேமிப்புகள் ஏற்படவேண்டும் என்னும் நிலைமைக்கு உட்பட்ட வகையில், நுகர்வு மிக உயர்ந்த அளவில் ஏற்படுவது, நாட்டின் பொருளாதாரத்திற்கு இன்றி யமையாதது என்பதில் துளியளவும் ஐயம் இருக்க முடியாது.

## அட்டவணை 18

**ஐக்கிய அமெரிக்க அரசாங்கக் கடன் பத்திரங்களின் உடைமை**

**குறிப்பிட்ட ஆண்டுகள், 1941–1959 ***

(பில்லியன் டாலர்களில்)

| டிசம்பர் முடிவில் | மொத்தம் செலுத்தப்பட வேண்டிய கடன் பத்திரங்கள் | பாங்குகள் | தனியாட்கள் | இன்சூரன்ஸ் கம்பெனிகள் | மாநில, தல அரசாங்கங்கள் | ஏனைய கார்ப்பரேஷன்களும் சங்கங்களும் | ஐக்கிய அமெரிக்க அரசாங்க ஏஜென்சிகள் |
|---|---|---|---|---|---|---|---|
| 1941 | 64·3 | 27·4 | 13·6 | 8·2 | ·7 | 4·9 | 9·6 |
| 1945 | 278·7 | 125·8 | 64·1 | 24·0 | 6·5 | 31·3 | 27·0 |
| 1952 | 267·4 | 97·6 | 65·2 | 16·1 | 11·1 | 31·6 | 45·9 |
| 1958 | 283·0 | 100·8 | 63·8 | 12·4 | 17·3 | 34·7 | 54·4 |

* Federal Reserve Bulletin, ஜூன் 1959, பக்கம் 622.

ஐக்கிய அமெரிக்க அரசாங்கக் கடன் பத்திரங்களின் உடைமை பற்றிய மதிப்பீடுகள், 436ஆம் பக்கத்தில் உள்ள 18ஆவது அட்டவணையில் தரப்பட்டுள்ளன.

போர்க் காலத்தில், இந்த அட்டவணையில் உள்ள எல்லாவகை உடைமையாளர்களும், தங்களிடம் உள்ள அரசாங்கக் கடன் பத்திர உடைமைகளை அதிகப்படுத்திக்கொண்டார்கள். போருக்குப் பிறகு, பாங்குகளும் இன்சூரன்ஸ் கம்பெனிகளும் வைத்திருந்த அரசாங்கக் கடன் பத்திரங்களின் அளவு குறையலாயிற்று. அரசாங்க பத்திரங்களைவிட மிக்க கவர்ச்சியுள்ள வேறு வகைக் கடன் பத்திரங்கள் அங்காடியில் கிடைக்கத் தொடங்கியதே இந்தக் குறைவுக்குக் காரணம். தனியாட்களும் ஏனைய கார்ப்பரேஷன்களும் வைத்திருந்த பத்திரங்களின் அளவு, ஏறத்தாழப் போரின் முடிவில் இருந்தபடியே இருந்தது. ஆனால், அரசாங்கங்களும் அவற்றின் ஏஜன்சிகளும் வைத்திருந்த கடன் பத்திரங்களின் அளவு உயர்ந்து வரலாயிற்று. 1945-ன் முடிவில் சேமிப்புப் பாண்டுகளைப் பயன்படுத்தியதன் விளைவாகத் தனியாட்கள் அரசாங்கக் கடன் பத்திரங்களைப் பெரும் அளவில் வாங்கலானார்கள். 1945-ன் முடிவில், தனியாட்களிடம் இருந்த கடன் பத்திரங்களில் 67 சதவீதம், சேமிப்புப் பாண்டுகளாக இருந்தன. 1959-ன் முடிவில் இந்த எண் 75 சதவீதமாக உயர்ந்துவிட்டது. ஆனால், உண்மையில், சேமிப்புப் பாண்டுகளின் உடைமை, பொது மக்களிடம் பரவலான முறையில் அமைந்திருக்கவில்லை. 1945-ன் முடிவில், ஐக்கிய அமெரிக்காவின் செலவிடும் அலகுகளில் (spending units) 37 சதவீதத்தில் சேமிப்புப் பாண்டுகளின் உடைமையே இல்லை. மற்றொரு 37 சதவீதத்தினரிடம் 500 டாலருக்குக் குறைந்த சேமிப்புப் பாண்டுகளே இருந்தன.[3] 1958-ல் நிலைமை மேலும் இழிநிலை அடைந்தது. இந்த ஆண்டில், 72 சதவீதம் அலகுகளில் சேமிப்புப் பாண்டுகளே இல்லை; 16 சதவீதம் அலகுகளில் 500 டாலருக்குக் குறைந்த சேமிப்புப் பாண்டுகள் இருந்தன.[4] அரசாங்கக் கடன் பத்திரங்களின் உடைமை பரவலாக இருப்பதால் ஏற்படக்கூடிய எல்லா நன்மைகளும் கிடைக்கத்தக்க அளவில் அந்த உடைமை பரவலாகஇல்லை என்பதையே இந்தப் புள்ளி விவரங்கள் தெள்ளிதின் விளக்குகின்றன.

பொதுக் கடனால் ஏற்படும் மற்றொரு நன்மை, நிதிகளை முதலீடு செய்வதற்குப் பாதுகாப்பும் நீர்மையும் உடைய கடன் பத்திரங்களைக் கொடுப்பதாகும். பல்வேறு வகைப்பட்ட கடன் பத்திர உடைமையாளர்களும் அண்மை ஆண்டுகளில் அரசாங்கக் கடனில் முதலீடு செய்திருப்பதிலிருந்து, உயர்ந்த தரமும் நீர்மையும்

உடைய முதலீட்டு வாய்ப்புகள் அவர்களுக்குத் தேவைப்படுகின்றன என்னும் உண்மை தெளிவாகிறது. தற்போது உள்ள சூழ்நிலையில், கார்ப்பரேஷன்களின் (லிமிடெட் கம்பெனிகளின்) கடன் பத்திரங்களைவிடக் கூட்டரசாங்கத்தின் கடன் பத்திரங்கள் உயர்ந்த தரம் உடையனவாக இருக்கவேண்டும் என்பது தவிர்க்க முடியாதது. எனவே, இன்சூரன்ஸ் கம்பெனிகள், பொறுப்பு மற்றும் சிக்கன அமைப்புகள் (Trust and Thrift Organisations), மாநில அரசுகள்—தல அரசுகள் ஆகியவற்றின் கடன் கழிவு நிதிகள் ஆகியவை, தங்கள் சொத்துகளின் ஒரு குறிப்பிடத்தக்க பகுதியைக் கூட்டரசாங்கக் கடனில் முதலீடு செய்யவேண்டும் என்று கட்டாயப் படுத்தப்படும் என்பது இயற்கையாக எதிர்பார்க்கக்கூடியதுதான். முதலீட்டின் பாதுகாப்பே தலையாய நோக்கமாக இருக்கும் சமயங்களில், அத்தகைய நிறுவனங்கள், எத்தகைய சட்டமுறைக் கட்டாயமும் இல்லாமலே, அரசாங்கக் கடன் பத்திரங்களை வாங்க முந்துவதில் வியப்பு ஏதும் இருக்கமுடியாது. கூட்டரசாங்கப் பொறுப்பு நிதிகளின் (trust funds) முதலீடு, சிறப்பான ஒரு நிலையை உடையதாக இருக்கிறது. முதலீடுகளின் பாதுகாப்பு என்னும் கோணத்திலிருந்து பார்க்கும்போது இந்த நிதிகளைக் கூட்டரசாங்கக் கடன் பத்திரங்களில் முதலீடு செய்வதே சிறந்த ஏற்பாடு என்பது தெளிவாகிறது. அது ஒருபுறம் இருக்க, கருவூலக் கடன் பத்திரங்களைத்தவிர வேறு எவற்றில் அத்தகைய நிதிகளை முதலீடு செய்யமுடியும்? வெளிநாட்டுக் 'கடன்' பத்திரங்களிலோ, மாநில அல்லது தல அரசாங்கங்களின் பத்திரங்களிலோ, கார்ப்பரேஷன்களின் பத்திரங்களிலோ இந் நிதிகளை முதலீடு செய்தால், கடன் வாங்கும் நிறுவனங்களிடம் கூட்டரசாங்கத்திற்கு ஒரு நிதித்துறை அக்கறை ஏற்பட்டுவிடும். அப்படி ஏற்படுவது, இறைமைக் கோட்பாட்டுக்கு (concept of sovereignty) முரண்பட்ட ஒரு நிலையாகும். அந் நிலையில், ஒருதலைப் பற்றாக நடந்து கொள்கிறது என்னும் கடுமையான குற்றச்சாட்டுகளுக்கு (charges of gross favouritism) அரசாங்கம் உட்பட நேரிடும். அதோடு, கடன் பெற்ற அமைப்புகளை உரிய காலத்தில் கடனைத் திருப்பிச் செலுத்தத் தவறினால், கடனைத் திருப்பிப் பெறுவதற்கான உரிமையை நிலைநாட்டவேண்டிய சிக்கலான நிலைமை அரசாங்கத்திற்கு ஏற்பட்டுவிடும். கடன் ஈந்தோன் என்ற முறையில் கட்டுப்பாடு செய்தால் ஏற்படக்கூடிய அச்சங்களை அல்லது நிலைமைகளைத் தவிர்த்துவிடுவதே நல்லது.

பொதுக் கடனால் ஏற்படும் சுமையைவிட மிகுதியான நன்மையைத் தரவல்ல செயல்களுக்காக அக் கடன் எழுப்பப் படும்போது, அக் கடனின் சுமை எத்தகையதாக இருந்தாலும்,

அக் கடனை எழுப்புவதே விரும்பத்தக்கது என்னும் முடிவு தவிர்க்க முடியாதது. இந்தப் பொருளில், உற்பத்திச் செலவைப்போலவே கடனும் தேவையான ஒரு தீமையே ஆகும். கடனால் கிடைக்கும் நன்மைகள் கடனைவிடக் குறைந்த சுமையுள்ள வேறு முறைகளால் கிடைக்குமானால் அம் முறைகளை ஏற்றுக்கொள்ளலாம். ஆனால், பொதுக் கடனின் சுமையைப்பற்றி ஆராயும்போது, அந்தச் சுமையைக் குறைக்கவல்ல நன்மைகளும் கடனில் அடங்கியுள்ளன என்பதை நினைவுப்படுத்திக்கொள்வது நலன்பயக்கும். பொதுக் கடனின் உடைமை பரவலாக இருப்பது, ஒற்றுமையைக் கட்டிக் காக்கவல்ல ஆற்றல் வாய்ந்த ஓர் சக்தியாகும் என்று அலெக்சாண்டர் ஹாமில்டன் தெரிவித்த கருத்து இந்தக் காலத்திற்கும் பொருந்துவதாகவே உள்ளது. நீர்மைக் கடன் பத்திரங்களின் உடைமையாளர்களாகப் பொதுமக்கள் இருப்பதால் நுகர்வுச் செலவில் ஏற்படும் தூண்டுதல், நாட்டு வருமானத்தை நிலைபெறும் உயர்ந்த நிலையில் நிறுத்துவதற்குரிய காரணிகளில் முக்கியமான ஒன்றாகும். இறுதியாக, பாதுகாப்பும் நீர்மையும் உடைய அரசாங்கக் கடன் பத்திரங்கள் ஏராளமான அளவில் கிடைப்பது, பாங்குகள், தனிப்பட்ட முதலீட்டாளர்கள், நிறுவன முதலீட்டாளர்கள், அரசாங்கங்கள் ஆகியோரின் சேமிப்பு நிதிகளுக்குப் பொருத்தமான முதலீட்டு வாய்ப்பாக அமைந்துள்ளது. பொதுக் கடனானது, தனியார் சேமிப்புகளின் ஒரு பெரும் பகுதியின் பாதுகாப்புக்கும் நீர்மைக்கும் அரசாங்கம் தருகிற உறுதிமொழியாக அமைந்திருக்கிறது.

**அசலைப் பொறுத்த அளவில் உள்ள கடனின் சுமை**

ஒரு பொதுக் கடனின் சுமை என்பது, அக் கடனால் ஏற்படும் பொருளாதாரத் துன்பத்தையே குறிக்கிறது. இத் துன்பமானது, முழுப்பொருளாதாரத்தின் உற்பத்தித் திறமையில் ஒரு பகுதி வீணாகிற வடிவத்தில் அமையலாம்; அல்லது குறிப்பிட்ட வகுப்பினர்மீது விரும்பத்தகாத பொருளாதாரச் சுமைகள் சுமத்தப்படுகிற வடிவத்தில் அமையலாம். முதல்வகைத் துன்பம் ஏற்படுமானால், உற்பத்தியானது தவறான முறையில் இயக்கப் படுகிறது என்று பொருள். அத்தகைய துன்பம் ஏற்பட்டால், பற்றாக்குறைச் செலவைவிட செலவுதான் காரணம் என்று கூறலாம். அதாவது, உற்பத்திச் சாதனங்கள் தனியார் பணிகளிலிருந்து அரசாங்கப் பணிகளுக்கு ஆதாயமற்ற முறையில் திருப்பப்படுவது (uneconomic diversion) ஒவ்வாத நிலை வரவு செலவுத் திட்டத்தில் எத்துணை எளிதாக நிகழமுடியுமோ அத்துணை எளிதாக ஒத்தநிலை வரவுசெலவுத் திட்டத்திலும் நிகழமுடியும். இரண்டாவதுவகைத் துன்பம் ஏற்படுமானால், செல்வத்திலும்

வருமானத்திலும் மறுபங்கீடு ஏற்படுகிறது என்று பொருள். இத்தகைய மறுப்பங்கீடானது, வரி விதிப்பின்மூலம் செலவுக்கான நிதிகளைப் பெறும்போது அவ்வளவாக ஏற்படுவதில்; கடன் வாங்கிச் செலவழிக்கும்போதுதான் அடிக்கடி ஏற்படுகிறது. கடன் சுமையைப்பற்றிய எந்தப் பகுத்தாய்விலும் நம்முடைய கவனத்தைக் கடனைப் பொறுத்த அளவோடு நிறுத்திக்கொள்வது இன்றியமையாதது. கடன் வாங்குவதற்குக் காரணமாக இருக்கிற செலவானது, நியாயமானதாக இருக்கலாம்; அல்லது நியாமற்ற தாக இருக்கலாம். அதைப்பற்றி இச் சமயத்தில் நாம் ஆராய வேண்டிய தேவை இல்லை. கடன் சுமையைப்பற்றிய எந்தப் பகுத்தாய்வும், ஏதோ ஒரு காரணத்திற்காகக் கடன் வாங்கப் படுகிறது என்று பாவித்துக்கொண்டு, அந்தக் கடனால் பொருளா தாரத்தில் என்னென்ன விளைவுகள் ஏற்படுகின்றன என்பதை மட்டுமே அலசிப்பார்க்கவேண்டும்.

பொதுவாகப் பொதுக் கடனின் அசலுக்கு அளவுக்குமீறிய முக்கியத்துவம் தரப்பட்டுவிடுகிறது என்றாலும், கடன் சுமையின் சில கூறுகள் (elments) அசல் தொகையின் அளவுக்கு ஏற்ப மாறுபடக்கூடும். கடன் சுமையின் அளவை அசல் தொகையின் அளவைக்கொண்டே மதிப்பிடவேண்டும் என்று பொது மக்கள் வற்புறுத்துகிறவரையில், அசல் தொகையின் அளவு உயர்வதால் ஏற்படும் அச்சங்களும் தயக்கங்களும் கடன் சுமையின் ஒரு பகுதியாகவே கருதவேண்டும்.

கடன் வாங்குகிற முறையால் பணவீக்கம் ஏற்படக்கூடும் என்பது, கடன் சுமையின் மற்றொரு கூறு ஆகும். நாட்டின் பொருளாதாரமானது கிட்டத்தட்ட வேலை நிறைவு அளவில் இருக்கும்போது, புதிதாகப் படைக்கப்பட்ட காப்பிருப்புகளைக் கொண்டு பாங்குகள் கடன் பத்திரங்களை வாங்குமானால், விலைப் பணவீக்கத்தின் (price inflation) விளைவாக உண்மை வருமானத்தில் மறுபங்கீடு ஏற்பட்டு, அந்த பங்கீட்டின் பயனாக, நிலையான பண வருமானம் உள்ள வகுப்புகளுக்கு ஓர் உண்மையான சுமை ஏற்பட்டுவிடும். இங்கே சொல்லப்பட்ட மறுபங்கீடானது, அதற்கு முன்னர் தவறான முறையில் ஏற்பட்டிருக்கக்கூடிய வருமானப் பங்கீட்டைப் பொருத்தமான முறையில் மாற்றி அமைப்பதாகத்தான் இருக்கும் என்று கூறமுடியாது. பெரும்பாலான சமயங்களில் அவ்வாறு இருக்காது என்றே சொல்ல வேண்டும். பணவீக்கத்தின்போது, உற்பத்திச் செலவுகள் எதிர் காலத்தில் எவ்வாறு அமையும் என்பதைத் திட்டவட்டமாகக் கூறமுடியாத ஐயநிலை நிலவுவதால், உற்பத்திப் பெருக்கத்திற்கு அல்லது உற்பத்தியை உயர்ந்த அளவில் தொடர்ந்து

நடத்துவதற்குத் தடை ஏற்பட்டுவிடுகிறது. இது சமுதாயத்திற்கு ஏற்படுகிற இழப்பாகும். பணவீக்கச் சக்திகள் பல்வேறு பண்டங்களின் உற்பத்திச் செலவைப் பல்வேறு சமயங்களில் பல்வேறு அளவுகளில் மாற்றியமைக்கின்றன என்பது, நன்குகத் தெரிந்த உண்மை. பணவீக்கத்தின் விளைவாக ஏற்படக் கூடிய சிக்கல்கள் எந்த உற்பத்தித் துறையில் முதலில் ஏற்படும் என்பதைக் கண்டறிவது கடினமான செயல். இத் தொடர்பில் உற்பத்தியாளர்கள் எதிர்பார்க்கிறபடி நிலைமைகள் பெரும்பாலும் உருவாவதில்லை. கடன் வாங்குவது பணவீக்கத்தை ஏற்படுத்துமானால், கடன் எந்த அளவுக்கு அதிகமாக வாங்கப் படுகிறதோ (அதாவது கடனின் அசல்தொகை எந்த அளவு உயர்கிறதோ) அந்த அளவுக்குப் பணவீக்கம் ஏற்படுவதும் அதிகமாக இருக்கும்.

கடனின் அசலைக் குறைப்பதற்கான முயற்சியால் மூன்று வகையான சுமைகள் ஏற்படக்கூடும். (1) கடனைத் திருப்பித் தருவதற்காகத் தேய்வுவீத வரிமுறைப்படி வரிகள் விதிக்கப் படுமானுல்,[5] வரி செலுத்துவதற்கான ஆற்றல் குறைவாக உடையவர்களிடமிருந்து நிதிகள் எடுக்கப்பட்டு, கடன் பத்திரங்களை வைத்திருப்பவர்களுக்கு அந் நிதிகள் மாற்றப்படும். ஆனுல், இக் கடன் பத்திர உடைமையாளர்களுக்கு இந்த நிதி வரவால் குறிப்பிடத்தக்க நன்மை எதுவும் ஏற்படுவதில்லை. (2) பயனுள்ள அரசாங்கப் பணிகளுக்கான செலவுகள் குறைக்கப் படுமானுல், அந்தப் பணிகளால் இதுவரை நன்மை பெற்று வந்தவர்கள்மீது புதிய சுமை ஏற்றப்படுகிறது என்பது தெளிவு. (3) பாங்குகள் வைத்திருக்கும் அரசாங்கக் கடன் பத்திரங்களைத் தீர்ப்பதற்காக வரிகள் விதிக்கப்படுமானுல், புழங்கும் பணத்தின் ஒரு பகுதி நிகரமுறையில் அழிக்கப்பட்டுவிடும்.[6] அரசாங்கம் பாங்கு களுக்குக் கடனைத் திருப்பித் தருவதால் விடுவிக்கப்படுகிற காப்பிருப்புகளை (freed reserves), அந்தப் பாங்குகள், தனியார் தொழில்துணிவுகளுக்குப் புதிய கடன்களைத் தருவதற்கான அடிப்படையாகப் பயன்படுத்தாவிட்டால், வரி செலுத்துவோரிட மிருந்து எடுக்கப்பட்ட வாங்கும் சக்தியானது பொருளாதாரத்தில் ஈடுசெய்யப்படமாட்டாது. வாங்கும் சக்தியில் ஏற்படும் இத்தகைய குறைவு, பொருளாதார வீக்க காலங்களில், வரவேற்கத்தக்க ஒரு நிலைமையாக இருக்கலாம். ஆனுல், மந்த காலங்களில் அத்தகைய குறைவால், நாட்டின் வருமான அளவில் குறைவு ஏற்பட்டுவிடும்.

இறுதியாக, அரசாங்கத்தின் கடன் வாங்கும் ஆற்றல் முழுவதையும் பயன்படுத்தித் தற்போது கடன் வாங்கிவிட்டால், கடன் வாங்கவேண்டிய தேவை மறுபடியும் ஏற்படும்போது கடன்

வாங்குவது, இயலாத செயலாக அல்லது கடினமான செயலாக ஆகிவிடும். அப்படி ஆவதால் நடப்பு வரிகளுக்கு உபரியாகக் கடன் வாங்கிச் செலவு செய்வதால் ஏற்படக்கூடிய நன்மைகளைச் சமுதாயம் இழந்துவிடுகிறது.[7]

கடனின் அசல் தொகையால் ஏற்படுகிற சுமையின் பல்வேறு கூறுகளாக மேலே சுட்டிக்காட்டப்பட்டுள்ள யாவற்றையும் தொகுத்துப் பார்த்தாலும், சுமை மிகப் பெரிதாகத் தோன்றவில்லை. அந்தக் கூறுகள் ஒவ்வொன்றும் சிற்சில நிலைமைகளில் மட்டுமே ஏற்படக்கூடிய தன்மை உடையது ஆகும். அதாவது, தவறான கொள்கைகளைக் கையாளும்போதுமட்டுமே அவை ஏற்படும். ஆனால், அத்தகைய கொள்கைகளைத் தவிர்ப்பது எளிது. தற்காலத்தில், பொதுக்கடனின் அசலைத் திருப்பித்தருவது என்பது, பெரும்பாலும் அரசாங்கமே முடிவுசெய்யவேண்டிய ஒரு செயலாக இருக்கிறது. பல அயல் நாடுகளில், குறிப்பிட்ட தவணை முடிவைப் பெற்றிராத அரசாங்கக் கடன் பத்திரங்களை வெளியிடுவது வழக்கமாகிவிட்டது. பல தலஅரசாங்கங்களைத் தவிர்த்த பிற அரசாங்கங்களைப் பொறுத்த அளவில், பொதுக் கடனை மறுநிதியாக்கம் செய்வதற்கும் (refunding), கடன் இன மாற்றம் (conversion) செய்வதற்கும் மிகுந்த வாய்ப்புகள் இருப்பதால், கடனைத் திருப்பித்தருவதை, கால வரையறையின்றி ஒத்தி வைத்தபடி இருக்கமுடியும். நிலைமை இப்படி இருக்கையில், கடனின் அசல்பற்றிய சுமை என்பது, பெரிதும் கற்பிதமான ஒன்றே (hypothetical) தவிர உண்மையானது அன்று.

பாவிதமான கடன் சுமையை (assumed burden of debt) அசலின் அளவைக்கொண்டே அளந்து பார்க்கிற பழக்கம் பெரு வழக்காக இருப்பது, வருந்தத்தக்க ஒரு நிலைமையே.[8] ஏனென்றால், கடனின் உண்மையான சுமை, வட்டிச் செலுத்தல்களைப் பொறுத்ததாகவே இருக்கிறது. வட்டிச் செலுத்தல்களின் சுமை கூடச் சூழ்நிலைகளுக்கு ஏற்ப மாறக்கூடிய தன்மை படைத்ததுதான். நாட்டு வருமானத்தின் அளவு, வரிமுறையின் தன்மை, கடன் பத்திர உடைமை பரவலாக உள்ள அளவு ஆகிய யாவும், மேற்படி சுமையின் அளவைத் தீர்மானிக்கக்கூடிய காரணிகள் ஆகும்.

**வட்டிச் செலுத்தல்களின் சுமை :**

**மாற்றல் உராய்வுகள் (Transfer Frictions):** வட்டியைச் செலுத்துவதால் ஏற்படுகிற வாங்கும் சக்தியின் மாற்றல்களால் (transfer of purchasing power) நாட்டின் பொருளாதாரத்திற்கு

அல்லது அதன் பகுதிகளுக்கு ஏற்படுகிற மொத்தச் செலவுகளே (total cost) கடனின் தலையாய சுமையாகும். இந்தச் செலவுகளின் ஒரு பகுதி, பணச் செலவுகளாகவும் (money costs), மிச்சப் பகுதி அகச் செலவுகளாகவும் (subjective costs) அமைந்துள்ளன. இவை தனியாட்கள்மீது சுமத்தப்படக்கூடிய செலவுகளாகும். மாற்றல்கள் பற்றிய பணச் செலவுகளில் பெரும்பாலானவை, வட்டிச் செலுத்தல்களுக்கான வரிச்சுமைகளின் அமைப்பு முறையையும் அரசாங்கத்திடமிருந்து வட்டியைப் பெறுவதற்கான உரிமைகளின் அமைப்பு முறையையும் ஒப்பிட்டுப் பார்க்கும் செயலோடு தொடர்புடையனவே. வட்டியைப் பெறுபவர்கள் ஒவ்வொருவரும் வரி செலுத்துவோராக இருந்து, அரசாங்கத்திடமிருந்து தான் பெறக்கூடிய வட்டித் தொகையின் அளவுக்கு வரியைச் செலுத்துவாரானல், அரசாங்கம் வட்டியைச் செலுத்துவதால் ஏற்படுகிற சுமை உண்மையில் மிகக் குறைவாக இருக்கும்.[9] ஆனல், நடைமுறையில் அவ்வாறு வரி செலுத்துவோரும் வட்டியைப் பெறுவோரும் ஒரே ஆளாக இருப்பதில்லை.

வட்டியைச் செலுத்துவதற்காகக் குறிப்பிட்ட வரிகள் எவையும் ஒதுக்கி வைக்கப்படவில்லை என்றாலும், பொது கடனுக்கான வட்டியைப் பெறுபவர்கள், வரியைச் செலுத்துகிற அதே ஆட்களாக அல்லது நிறுவனங்களாக இல்லை என்பதை, 18ஆவது அட்டவணை தெரிவிக்கிறது. கடன் பத்திர உடைமையாளர்களின் ஒவ்வொரு பிரிவிலும் அடங்கியிருப்பவர்களுக்கு இடையிலேயே, கடன் பத்திர உடைமைகளின் அளவிலும், வரி செலுத்துகிற அளவிலும் பெருத்த மாறுபாடுகள் இருக்கின்றன என்பது உண்மை. எந்த அளவுக்குக் குறைந்த வருமானம் உடையவர்களால் வரிகள் செலுத்தப்பட்டு, அவ் வரிகளால் கிடைக்கும் நிதிகள் அதிக வருமானம் உள்ள ஆட்களுக்கும் நிறுவனங்களுக்கும் வட்டியாகச் செலுத்தப்படுகிறதோ, அந்த அளவுக்குச் சமுதாயத்தில் மேல் நோக்கிய வருமான மறுபங்கீடு (an upward redistribution of income) ஏற்பட்டுவிடுகிறது.

ஏராளமாக உள்ள வட்டிச் செலவுகளைச் சரிக்கட்டுவதற்காகச் சில வகை வாணிப நிறுவனங்கள்மீது, அல்லது சிலவகை உற்பத்தித் துறைகள்மீது விதிக்கப்படுகிற வரிகள் மிக அதிகமான அளவுக்கு உயர்த்தப்படுமானல், மாற்றலின் தாக்குதல் (impact of the transfer) அளவுக்கு மீறியதாக இருக்கும். கார்ப்பரேஷன் வருமானத்தின்மீது உள்ள நடப்பு வரிகள் யாவும் இத்தகைய தன்மை படைத்தவை என்றே கூறலாம். கார்ப்பரேஷனின் வருமானம் என்னும் வகையில் ஒரு முறையும், பங்குதாரர்களுடைய

வருமானம் என்னும் வகையில் மற்றெரு முறையும், ஆக இருமுறை, கார்ப்பரேஷனின் இலாபம் வரிவிதிப்புக்கு உள்ளானல், வட்டிச் செலுத்தலின் சுமை (வட்டிச் செலுத்தலுக்காக விதிக்கப்படும் வரியின் சுமை) கடுமையானதாக இருக்கும்.

வட்டிச் செலுத்தல்களுக்கான வரி விதிப்பின் சுமை, வாணிபச் சுழல்களின் பல்வேறு கட்டங்களில் பல்வேறு அளவுடையதாக இருக்கும். வட்டியானது, கருவூலம் செலுத்தவேண்டிய ஒரு நிலையான செலவாக (fixed charge upon the treasury) இருப்பதால், ஒரு குறிப்பிட்ட வட்டித்தொகையைச் செலுத்துவதற்காக விதிக்கப்படும் வரியானது, செழுமைக் காலத்தைவிட மந்த காலத்தில் மிகக் கூடுதலான சுமை உடையதாக இருக்கும். ஆனல், இந்தச் சுமையானது, அதே மந்த காலத்தில் வட்டிச் செலவையும் ஏனைய செலவுகளையும் சரிக்கட்டுவதற்காகக் கடன் வாங்கக்கூடிய வசதி இருப்பதால், ஓரளவு குறைகிறது. சுழல் எதிர்ப்பு நோக்கம் நிறைவேறவேண்டுமானல், மந்த காலத்தில் கடன் வாங்கிச் செலவு செய்வது இன்றியமையாதது என்பதை முந்திய அத்தியாயம் ஒன்றில் விளக்கியுள்ளோம். வரி விதிப்பால் முன்னேக்குகள்மீது ஏற்படக்கூடிய எதிர்மறை விளைவுகளைக் குறைப்பதற்கும், பயன்படுத்தப்படாமல் உள்ள சேமிப்புகளைத் தனியார் புழக்கத்தில் உலவவிடுவதற்கும், அவ்வாறு கடன் வாங்கிச் செலவுசெய்ய வேண்டியிருக்கிறது.

ஏனைய நிலைகள் யாவும் மாருமல் இருக்குமானல், கடனுக்காகச் செலுத்தவேண்டிய வட்டிச் செலுத்தல்கள் எந்த அளவுக்குக் கூடுதலாக இருக்கின்றனவோ, அந்த அளவுக்குக் கடனின் பொருளாதாரச் சுமையும் கூடுதலாக இருக்கும் என்பது, சொல்லாமலே விளங்கும். ஆனல், இப்படிச் சொல்வதால், கடன் கூடுதலாக இருக்கும் அளவுக்குக் கடன் சுமையும் கூடுதலாக இருக்கும் என்று சொல்வதாகப் பொருளாகாது. ஏனென்ருல், கடனின் அசலின் அளவுக்கும் ஆண்டுதோறும் செலுத்தவேண்டிய வட்டித்தொகையின் அளவுக்கும் உள்ள விகிதம் அடிக்கடி மாறிக் கொண்டேயிருக்கும். செலுத்தவேண்டிய கூட்டரசாங்கக் கடனின் ஒவ்வொரு டாலருக்காகவும் தரப்பட்ட வட்டியில் அவ்வப்போது ஏற்பட்டுள்ள மாறுதல்கள், கீழே உள்ள 19ஆவது அட்டவணையில் தரப்பட்டுள்ளன. கடனின் அசலுக்கு அளவுக்குமீறிய முக்கியத்துவம் தரக்கூடாது என்பதை மீண்டும் ஒருமுறை வற்புறுத்திக் கூறுவது நல்லது. கடனின் அளவு உச்சநிலையில் இருந்த ஆண்டாகிய 1946-ல் இருந்த நடைமுறை வட்டிவீதம், 1924-ல் இருந்த வட்டி வீதத்தில் பாதியைவிடக் குறைவாகும்.

இதே உண்மையை வேறு விதமாகக் கூறுவதானல், ஏனைய நிலைகள் யாவும் மாருமல் இருக்குமானல், 1924-ல் இருபது பில்லியன் டாலர் அளவுள்ள கடனல் ஏற்பட்ட வட்டிச் சுமை, 1946-ல் நாற்பத்தி இரண்டு பில்லியன் டாலர் அளவுள்ள கடனல் ஏற்பட்ட வட்டிச் சுமைக்குச் சமமாகும்.

## அட்டவணை 19

### செலுத்தவேண்டிய கூட்டரசாங்க வட்டியுள்ள கடன், கணக்கிடப்பட்ட வட்டிச்செலவு, மற்றும் கணக்கிடப்பட்ட வட்டிவீதம் குறிப்பிட்ட ஆண்டுகள், 1924–1959 *

| கீழ்க் கண்ட நிதி ஆண்டின் முடிவில் | வட்டியுள்ள கடன் (பில்லியன் டாலர்களில்) | கணக்கிடப்பட்ட ஆண்டு வட்டிச் செலவு (பில்லியன் டாலர்களில்) | கணக்கிடப்பட்ட வட்டிவீதம் (சதவீதம்) |
|---|---|---|---|
| 1924 | 21·0 | 877·0 | 4·18 |
| 1932 | 19·2 | 671·6 | 3·505 |
| 1940 | 42·4 | 1,094·7 | 2·583 |
| 1946 | 268·1 | 5,350·8 | 1·996 |
| 1951 | 252·9 | 5,739·6 | 2·270 |
| 1959 | 281·9 | 8,066·0 | 2·867 |

* இப் புள்ளிவிவரங்கள், 'Annual Report of the Secretary of the Treasury', 1951-ன் 813ஆம் பக்கத்திலிருந்தும், Treasury Bulletin, 1960 பிப்ரவரி இதழின் 25ஆம் பக்கத்திலிருந்தும் எடுக்கப்பட்டவை. கணக்கிடப்பட்ட வட்டி, கருவூலப் பாண்டுகள், நோட்டுகள், சான்றிதழ்களைப் பொறுத்த அளவில் வெட்டுச்சீட்டு வட்டி ஆகும் (coupon interest). சேமிப்புப் பாண்டுகள் மற்றும் நோட்டுகளைப் பொறுத்த அளவில், அவற்றைத் தவணை முடிவு வரையில் வைத்திருந்தால் கிடைக்கக்கூடிய வட்டி ஆகும்; உண்டியல்களைப் பொறுத்த அளவில் கழிவு (discount) ஆகும்.

### கடன் சுமையைக் குறைந்த அளவுடையதாக ஆக்குதல் (Minimizing the Debt Burden)

கடன் சுமையைத் தவிர்ப்பதற்கான ஒரேவழி கடனைத் தவிர்ப்பது ஆகும். ஆனல், பெரும்பாலும் இன்றியமையாத பணிகளை நிறைவேற்றுவதற்காக வாங்கப்பட்டுள்ள பொதுக்கடன் ஏராளமான அளவுடையதாக இருக்கிறது என்பதையும், மிக விரைவில் கடனைத் திருப்பித்தரும் செயல் மிகக் கடுமையான சுமையை உடையதாக இருக்கும் என்பதையும் மனதில் நிறுத்திப் பார்க்கும்போது, கடனைத் தவிர்ப்பது இயலாத செயல் என்பது தெளிவாக விளங்கும். அதுபோலவே, ஒரு கடனை, 'நமக்கு நாமே

செலுத்தவேண்டியிருக்கிறது' என்பதால் அது சுமை அற்றதாக ஆகிவிடாது. ஆனால், அத்தகைய கடனின் சுமை, நிலைமைக்கு ஏற்ப மாறும் சுமையாகும். அதாவது, அத்தகைய கடனின் செலுத்தலுக்காக மாற்றப்படும் வாங்கும் திறனின் ஒரு குறிப்பிட்ட அளவால் பொருளாதாரத்தில் ஏற்படும் உண்மையான சுமையானது, பல்வேறு நிலைமைகளில், பல்வேறு அளவுடையதாக இருக்கும். கடைசி முடிவாகப் பார்க்கும்போது, வட்டிக்கான மாற்றல்களின் சுமைகள், உண்மையில் வரிகளின் பொருளாதாரச் சுமைகளாகவே இருக்கின்றன. இச் சுமைகளைப் பாதிக்கும் மாறிகள் (variables) சிலவற்றைப்பற்றி முன்னரே குறித்துள்ளோம்; இங்கே மீண்டும் அவற்றைச் சுட்டிக்காட்டுவது, நலம்பயக்கும்.

**கடனைத் திருப்பித்தருவதற்காகக் கடன் வாங்கலாமா அல்லது வரி விதிக்கலாமா ?** மாற்றலால் ஏற்படும் சுமை (transfer burden) எந்த அளவுடையதாக இருக்கும் என்பது, குறிப்பிடத்தக்க அளவுக்கு, வட்டியைச் செலுத்துவதற்கான நிதிகள் எந்த முறையில் எழுப்பப் படுகின்றன என்பதைப் பொறுத்திருக்கிறது. வேலைக் குறைவு மிகுதியாக உள்ள காலங்களில், கடனைத் திருப்பிக்கொடுப்பதற்காக அல்லது வட்டியைச் செலுத்துவதற்காக எழுப்பப்படுகிற நிதிகளின் சுமை, இந்த நிதிகள் கடனாக எழுப்பப்பட்டால், குறைவாக இருக்கும். உடனடியான சுமையைப் (immediate burden) பொறுத்த அளவில் இது முற்றிலும் உண்மையாகும். வேலைக் குறைவு நிலைமைகள் தொடர்ந்து இருக்கும்வரையில் இந்த உண்மை பொருந்தும். ஆனால், வட்டியைச் செலுத்துவற்காக வாங்கப்படுகிற கடனால் மொத்தக் கடனின் அசல்தொகை உயர்கிறது என்பதையும், அப்படி உயர்வதால் (ஏனைய நிலைமைகள்யாவும் மாறாமல் இருக்குமானால்) மொத்தக் கடனுக்காகச் செலுத்த வேண்டிய வட்டித்தொகையின் அளவு உயர்கிறது என்பதையும், நாம் இந்த நேரத்தில் மறந்துவிடக்கூடாது. வேலைநிறைவுக் காலங்களில், இங்கே சொல்லப்பட்டதற்கு நேர்மாறான நிலைமை இருக்கும் பொருளாதாரத்தின் வருமானம் உயர்ந்த அள்வில் இருக்கும்போது, தனியாட்களிடமிருந்து கடன் வாங்குவதைவிட வரி விதிப்பதால் ஏற்படும் சுமை, குறைவாகவே இருக்கும். அதுபோலவே, பாங்குகளிடமிருந்து கடன் வாங்குவதால் ஏற்படும் சுமையைவிட வரி விதிப்பால் ஏற்படும் சுமை, குறைவாகத்தான் இருக்கும்.

**1. கடன் வாங்கும் வகை (The Type of Borrowing) :** பாங்குகள் அதிகமாகக் கடன் தருவதற்காக அவற்றின் காப்பிருப்புகள் உயர்த்தப்படும் நிலையில், தனியாட்களிடமிருந்து கடன் வாங்குவதை

விடப் பாங்குகளிடமிருந்து கடன் வாங்குவதே, குறைவான உடனடிச் சுமையை உடையதாக இருக்கும். ஏனென்றால், பாங்குகளின் புதிதாகப் படைக்கப்பட்ட காப்பிருப்புகளிலிருந்து கடன் வாங்குவதால், அரசாங்கம் செலவிடும் தொகையைப் பெறுவோரிடமும், வட்டித் தொகையைப் பெறுவோரிடமும் 'புதிய பணம்' தரப்படுகிறது. நாட்டின் வருமானத்தில் புதிய பணம் இணைக்கப்படுவதை அவசியமாக்கும் அளவுக்கு அந்த வருமானத்தின் மட்டம் (level) இருக்குமானால், 'மாற்றுதலை' பாங்குகளிடமிருந்து கடன் வாங்கும் முறையானது முற்றிலும் சுமை அற்றதாக ஆக்கிவிடுகிறது என்றே சொல்லிவிடலாம். ஆனால், நாட்டின் வருமானம் கிட்டத்தட்ட முழுவேலை அளவில் இருக்கும்போது இந்த முறை கையாளப்படுமானால், பொருளாதார வீக்கநிலைகளே வலுப்படும். முழுவேலை நிலையின்போது, பாங்குகளிடமிருந்து கடன் வாங்குவது, தனியாட்களிடமிருந்து கடன் வாங்குவதைவிட மட்டமான முறையே ஆகும். உடனடி விளைவு, நீண்ட கால விளைவு, ஆகிய இரண்டு கோணங்களுக்கும் இந்த உண்மை பொருந்தும். உண்மையைச் சொல்வதானால், உயர்ந்த வேலை அளவின் பெரும்பாலான நிலைமைகளில், வட்டியைச் செலுத்துவதற்கான நிதிகளை எழுப்புவதற்காகத் தனியாட்களிடமிருந்தோ பாங்குகளிடமிருந்தோ கடன் வாங்குவதைவிட வரி விதிப்பதே சிறந்த முறையாகும். ஆகவே, உயர்ந்த வேலை அளவின்போது வரி விதிப்பதும், குறைந்த வேலை அளவின்போது பாங்குகளிடமிருந்து கடன் வாங்குவதுமே சிறந்த கொள்கை என்று பொதுவாகக் கூறலாம்.

**2. வரி விதிப்பின் வகை (The Type of Taxation):** வரி விதிப்பின் ஒவ்வொரு டாலராலும் ஏற்படும் சுமை, நுகர்வுத் தேவைகளுக்கு வேண்டியதைவிட மிகையான அளவில் உள்ள வருமானங்களைத் தாக்கும் வரி விதிப்பால் ஏற்படுவதைவிட, குறைந்த வருமானம் உடையவர்களைப் பாதிக்கும் வரி விதிப்பால் ஏற்படுவது மிகுதியாக இருக்கும். எடுத்துக்காட்டாக, வட்டியைச் செலுத்துவதற்கான நிதிகள், நிகர வருமானத்தின்மீது விதிக்கப்படும் வளர்வீத வரிகள் [பொருத்தமான தனியாள் விலக்குடன் (reasonable personal exemption)] மூலமாக எழுப்பப்படுவதைவிட நுகர்வுக்கான பொதுப் பண்டங்கள்மீது விதிக்கப்படும் விற்பனை வரிகள் மூலமாக எழுப்பப்படும்போது, சுமையின் அளவு கூடுதலாகத்தான் இருக்கும். வரி விதிப்பதால் பொருளாதாரத்தில் ஏற்படும் சுமை மிகக் குறைவாக இருக்கத்தக்க வகையில் வரி வருவாய்களைப் பெறுவது எப்படி என்னும் சிக்கலைப்பற்றி அடுத்துவரும் அத்தியாயங்களில் நாம் விரிவாக ஆராய இருக்கிறோம். ஏனைய நிலைகள் யாவும் மாறாமல் இருக்கும்போது, ஒரு குறிப்பிட்ட அளவு வரி வருவாயை நல்ல வரிகள் மூலமாகவும் எழுப்பமுடியும், தீய வரிகள் மூலமாகவும்

எழுப்பமுடியும் என்பதையும், குறிப்பிட்ட வரிகள் நல்லவையா அல்லவையா என்பது, பெரும்பாலும் அவ் வரிகளால் வரிசெலுத்து வோருக்கு ஏற்படும் சுமையின் அளவைப் பொறுத்திருக்கிறது என்பதையும் மட்டும் சுட்டிக்காட்டுவது, இந்த அத்தியாயத்தின் பகுத்தாய்வுக்குப் போதுமானது ஆகும்.

**கடன் உடமையைப் பரவலாக்குதல்** (Dispersion of Debt Ownership) கடனைத் திருப்பித் தருவதற்காக விதிக்கப்படும் வரிகளின் சுமையானது, வரியைச் செலுத்துவோரே வட்டியைப் பெறுவோ ராகவும் இருக்கும்போது, பெரிதும் குறைந்துவிடுகிறது. மாற்றலால் ஏற்படும் உராய்வு இழப்பை (frictional loss) விட்டுவிட்டுப் பார்த்தால், அத்தகைய நிலைமையில் ஏற்படும் சுமையானது, வரிகளைச் செலுத்தியபிறகு நிகரவட்டி வருமானம் (net interest income after taxes) கிடைக்கவில்லையே என்கிற அகச் சுமையாக (subjective burden) மட்டுமே இருக்கும். மொத்தமாகப் பார்க்கும்போது, பணக்காரர்களிடமிருந்து ஏழைகளுக்கு வருமானத்தை மறுபங்கீடு செய்வதற்கான திட்டத்தின் விளைவாக, குறைந்த வருமான வகுப்பினர் கடன் பத்திரங்களின் உடைமை யாளர்களாக இருப்பதும், உயர்ந்த வருமான வகுப்பினரிடமிருந்தே கடனைத் திரும்பித் தருவதற்கான தொகையின் பெரும்பகுதி பெறப்படுவதுமாகிய நிலைமை ஏற்படும் என்பது உறுதி. (இத்தகைய திட்டத்தால் வாணிபத் தூண்டுதல்கள் (business incentives) குறையக்கூடும் என்பது உண்மையே.) ஆனால், நடைமுறையில், குறைந்த வருமான வகுப்பினரே கடன் பத்திரங்களின் உடமை யாள்ர்களாக இருப்பது, எத்தகைய சூழ்நிலையிலும், ஏற்படக்கூடிய ஒன்றாக இல்லை. அதே சமயத்தில், உயர்ந்த வருமானப் பிரிவினரிட மிருந்து கடனைத் திருப்பித் தருவதற்கான தொகையின் பெரும் பகுதியைப் பெறுவது என்னும் நிலை, மாநிலங்களின் வரி அமைப்பிலும் நகராட்சி மன்றங்களின் வரி அமைப்பிலும் காணப் பெறவில்லை என்றாலும், கூட்டரசாங்கத்தின் தற்போதைய வரி விதிப்பில் அமைந்திருப்பது உண்மையே. குறைந்த வருமானப் பிரிவினரே அரசாங்கக் கடன் பத்திரங்களின் உடைமையாளர்களாக இருப்பார்களானால், அரசாங்கக் கடன் பத்திரங்களிலிருந்து கிடைக்கும் வருமானத்திற்கு வரியிலிருந்து விலக்கு அளிக்கும் ஏற்பாடு, மேலே குறிப்பிடப்பட்ட குறிக்கோளை (கடனைத் திருப்பித் தருவதன் மூலம் பணக்காரர்களிடமிருந்து ஏழைகளுக்கு வருமானத்தை மறுபங்கீடு செய்யும் குறிக்கோளை) ஓரளவு நிறை வேற்ற முடியும். ஆனால், நடைமுறையில், அரசாங்கக்கடன் பத்திரங் களின் உடைமை உயர்ந்த வருமானப் பிரிவைச் சேர்ந்த

தனியாட்களிடமும், முதலீட்டு நிறுவனங்களிடமுமே இருப்பதால், இத்தகைய வரி விலக்கால் கடன் சுமை குறைவதற்கு மாருகக் கூடுதலாகவே ஆகிறது.

**நாட்டின் வருமானமும் கடன் சுமையும்:** அநேகமாக நாட்டு வருமானத்தின் அளவே, கடன் சுமையின் அளவைத் தீர்மானிக்கக் கூடிய தலையாய மாறியாக விளங்குகிறது என்று இயம்பலாம். இது, நாட்டின் வருமான அளவை உயர்த்துவதற்காகப் பற்ருக்குறைச் செலவைக் கையாள்வதுபற்றிய கருத்தாய்வின்போது நினைவில் இருத்தப்படவேண்டிய மிக இன்றியமையாத உண்மையாகும். ஏனென்ருல், அத்தகைய திட்டமானது வெற்றி மிகுந்ததாக அமையும்போது, கடனின் அசலையும் பெரும்பாலும் ஆண்டுதோறும் செலுத்தப்படவேண்டிய வட்டியின் அளவையும் அது உயர்த்தக் கூடும் என்ருலும், கடன் சுமையைக் குறைப்பதற்கான ஆற்றலையும் அது உடையதாகப் பொலிகிறது. பொருளாதாரத்தின் கண்ணேட்டத்திலிருந்து பொதுப்படையாகப் பார்க்கும்போது, கூட்டரசாங்கக் கடனின் வட்டித் தொகையானது, 1932-ல் இருந்ததைவிட 1946-ல் எட்டு மடங்கு மிகுதியானதாக இருந்தபோதிலும்,[10] நாட்டு வருமானமானது முந்திய ஆண்டில் இருந்ததைவிடப் பிந்திய ஆண்டில் நான்கு மடங்கு மிகுதியானதாக இருந்தது. இதன் விளைவு யாதெனில், அரசாங்கக் கடனின் வட்டிக்காகச் செலவிடப்பட்ட நாட்டு வருமானத்தின் வீதம், முந்திய ஆண்டைவிடப் பிந்திய ஆண்டில், இரண்டு மடங்கைவிடச் சற்றுக் குறைந்த அளவிலேயே மிகுதியாக இருந்தது. ஆனுல், குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாடு (diminishing marginal utility) என்னும் பொருளாதாரக் கோட்பாடு நடைமுறையில் இருப்பதை நாம் கணக்கில் எடுத்துக்கொண்டால்[11] 1946-ல் 165 பில்லியன் டாலர் அளவுள்ள நாட்டு வருமானத்தின் $\frac{1}{31}$, பகுதியை மாற்றியதால் ஏற்பட்ட சுமை, 1932-ல் 40 பில்லியன் டாலர் மதிப்புள்ள நாட்டு வருமானத்தின் $\frac{1}{80}$ பகுதியை மாற்றியதால் ஏற்பட்ட சுமையைவிடக் குறைவாக இருப்பதை அறியலாம்.[12]

நாட்டின் வருமானம் உயர்வாக இருக்குமானுல், அந்த வருமானத்தில் கடன் தொகையின் அளவு மிகக் குறைந்த சதவீதமாக இருக்கும் காரணத்தாலேயே, கடன் சுமை குறைந்து விடும். கடன் சுமையின் இந்தக் குறைவானது எந்த அளவுக்குத் தனியாட்களிடம் பங்கிடப்பட்டுள்ளது என்பது வரியின் நிலைப்பாடு (incidence of tax) அல்லது கடன் வாங்கும் முறையோடு ஒப்பிடுகையில் தனியாட்களிடம் உள்ள வருமானப் பங்கீடு எத்தன்மையதாக இருக்கிறது என்பதையும், வட்டிச் செலுத்தல்கள் எந்த முறையில் பங்கிடப்பட்டுள்ளன என்பதையும்

பொறுத்திருக்கிறது. டாலர் கணக்கில் உள்ள கடன் சுமையைத் தனியாட்களிடம் தகுந்த முறையில் பங்கிடுவதால் உண்மையான கடன் சுமை குறைகிறது. டாலர் சுமையின் உயர்வு வீதத்தைவிட நாட்டு வருமானத்தின் உயர்வு வீதம் மிகுதியாக இருக்குமானால், டாலர் சுமை தகுந்த முறையில் பங்கிடப்பட்டாலும் பங்கிடப் படாவிட்டாலும், உண்மையான கடன் சுமை குறையும். எவ்சே டொமார் (Evsey Domar) என்பாரின் வார்த்தைகளில் கூறுவதானால், 'கடன்பற்றிய அச்சத்தால் பீடிக்கப்பட்டுக் கடன்பற்றியே பணியாற்றிக் கொண்டும், பயின்றும், கட்டுரைகளைத் தீட்டியும், சொற்பொழிவாற்றியும், இரவில் தூங்காமல் விழித்தும், கவலைப் பட்டுக்கொண்டும் இருக்கின்ற எல்லா மக்களும், அமைப்புகளும் சிறிது நேரத்திற்குக் கடனைப்பற்றி மறந்துவிட்டு, தங்கள் முயற்சிகளில் பாதியையாவது நாட்டு வருமானத்தை வளர்ப்பதற்கான வழிமுறைகளைக் காண முயல்வதில் செலவிடுவார்களானால், மனித சமுதாயத்தின் நன்மைக்காகவும் நல்வாழ்வுக்காகவும் கடன் சிக்கலைத் தீர்ப்பதற்காகவும் அவர்கள் அளவிடமுடியாத உதவி புரிந்தவர்கள் ஆவார்கள்.'[13]

**கையாளும் திறனால் கடன் சுமையைக் குறைத்தல் (Reduction of Debt Burden by Manipulation):** குறைந்த வட்டியுள்ள அல்லது வட்டியே இல்லாத அரசாங்கக் கடன் பத்திரங்களுக்கான அங்காடிகளைச் செயற்கை முறையில் உருவாக்குவதன்மூலம், சில நிலைமைகளில், கடன் சுமையைக் குறைக்கமுடியும். 1863-லும், 1864-லும் நிறைவேற்றப்பட்ட நாட்டுப் பாங்குமுறைச் சட்டங்கள் (National Banking Acts), மாநிலப் பாங்குகளின் நோட்டுகள்மீது வரி விதித்து அவற்றின் வாழ்வை முடித்துவிட்டதோடு, கருவூலப் பாண்டுகளை வாங்கி அவற்றை வைப்புச் செய்தால்மட்டுமே நாட்டுப் பாங்குகள் (National Banks) தங்களுடைய நோட்டுகளைப் புழக்கத்தில்விட அனுமதிக்கப்பட்டன. இந்த முறையின் விளைவாக, இதற்கு முன்னால் எளிதில் விற்கமுடியாமல் இருந்த அரசாங்கக் கடன் பத்திரங்களுக்குப் பாங்குகள் ஓர் அங்காடியாகச் செயற்கை முறையில் ஆக்கப்பட்டுவிட்டன. நாட்டுப் பாங்கு முறையை நிறுவியதற்கு இது ஒன்றுமட்டுமே காரணம் அன்று என்ற போதிலும், இதுவும் ஒரு காரணம் ஆகும். நோட்டுகளைப் புழக்கத்தில் விடும் உரிமை, நாட்டுப் பாங்குகளுக்கு மிக்க மதிப்புள்ள ஓர் உரிமையாகும். 1900-ல் நிறைவேற்றப்பட்ட மறுநிதியாக்கச் சட்டத்தின்படி, புதிதாக மறுநிதியாக்கப்பட்ட 2 சதவீதப் பாண்டுகள்மட்டுமே, நோட்டுப் புழக்கத்திற்கான ஆதாரமாக இருக்கத் தகுதியுள்ளவை என்று அறிவிக்கப்பட்டன. இந்தச் சட்டத்தின் விளைவாக, 3, 4, மற்றும் 5 சதவீதப் பாண்டுகள்

2 சதவீதப் பாண்டுகளால் ஈடுசெய்யப்பட்டன. இது, செயற்கை யாக உருவாக்கப்பட்ட ஓர் அங்காடியை, வட்டிச் சுமையைக் குறைப்பதற்காகப் பயன்படுத்திக்கொள்ளும் முறையே என்பது வெள்ளிடைமலை.

வாணிபப் பாங்குகள், தங்களிடம் உள்ள வைப்புகளுக்கு எதிரான இரண்டாம் வகைக் காப்பிருப்புகளாக (secondary reserves) அரசாங்கப் பாண்டுகளை வைத்திருக்கவேண்டும் என்று அப் பாங்குகளை வற்புறுத்துகிற ஒரு முறைக்கு, சென்ற சில ஆண்டுக ளாகச் சில வட்டாரங்களில் ஆ த ர வு காணப்படுகிறது. இந்த முறை நடைமுறைக்கு வந்தால், பாங்குகள், தற்போது வைத்திருப்பதைவிட மிகுதியான காப்பிருப்புகளை வைத்துக் கொண்டு, அவற்றில் ஒரு பகுதியைக் கருவூலக் கடன் பத்திரங்க ளாக வைத்திருக்கவேண்டியிருக்கும். இக் கடன் பத்திரங்களில் பாங்கு நிதிகளைப் பிணைத்துவிடுவதும், அப்படிச் செய்வதன்மூலம் பாங்குகள் கடன் தருவதை இறுக்கி விடுவதுமே இந்த முறையின் தலையாய நோக்கம் என்றாலும், இந்த முறையின் விளைவாக இந்தக் கடன் பத்திரங்களுக்கு ஒரு செயற்கை அங்காடி கிடைக்கும் என்பதும், ஓரளவுக்கு அரசாங்கத்திற்கு நலன் தரத்தக்க வட்டி வீதங்கள் உருவாகும் என்பதும் இந்த முறையின் வேறு சில நோக்கங்களாக இருந்தன. இந்த முறையால், கருவூலத்திடமிருந்து பாங்குகளுக்குக் கிடைக்கும் வட்டி வரவுகள் குறையக்கூடும் என்பது உ ண் மை யே. அவ் வரவுகள் எந்த அளவுக்குக் குறையலாம் என்பது, இரண்டாம் வகைக் காப்பிருப்புகள் எந்த அ ள வு க் கு வைத்திருக்கப்படவேண்டும் என்பதையும், பாங்குகளின் கடன் தரும் கொள்கை இறுதியில் இந்த முறையால் எந்த அளவுக்குப் பாதிக்கப்படும் என்பதையும் பொறுத்திருக்கிறது. ஆனால், இந்த முறையை ஆதரிப்பவர்கள், அப்படி ஆதரிப்பதற்குத் தெ ரி வி க் கு ம் காரணம், பணம் தாராளமாகக் கிடைக்கும் காலங்களில் (easy money periods), பாங்குகளுக்கு ஐக்கிய ரிசர்வ் இலவசமாகத் தரும் நிதிகளிலிருந்து அப் பாங்குகள் செய்யும் முதலீட்டுக்கான வட்டித் தொகையை அவை பெறுகின்றன அல்லவா என்பதே. எது எப்படியிருந்தாலும் இத்தகைய முறை களுக்குப் பொதுமக்களிடமிருந்து சிறிதேனும் ஆதரவு கிடைக்க வில்லை. ஐக்கிய ரிசர்வ் முறையின் ஆளுநர் குழுவானது (Board of Governors) இரண்டாம் உலகப்போருக்குப்பின் இரண்டாம் வகைக் காப்பிருப்புத் திட்டம் ஒன்று நிறுவவேண்டும் என்று பரிந்துரை செய்தது என்றாலும், அப் பரிந்துரை, பணவீக்கத்தன்மை படைத்த பாங்குப் பெருக்கத்தைத் திறமையான முறையில் கட்டுப்படுத்தவேண்டும் எ ன் னு ம் விருப்பத்தின் விளைவாகச்

செய்யப்பட்டதேதவிர, அரசாங்கக் கடன்மீதான வட்டிச் சுமையைக் குறைக்கவேண்டும் என்னும் விருப்பத்தால் ஏற்பட்டது அல்ல.

### கடன் வாங்குதலும், போரின் செலவும் (Borrowing and the Cost of War)

அரசாங்கக் கடனின் சுமைபற்றிய பல உண்மை நிலைகள், போர்ச் செலவுக்கான நிதியை வரியின் மூலம் திரட்டுவதா அல்லது கடன் மூலம் பெறுவதா என்னும் கேள்வியை அலசி ஆராயும் போது, மிகத் தெளிவாகத் தெரிகின்றன. போரின்போது இந்த இரண்டு முறைகளில் ஒவ்வொன்றும் எந்த வீதத்தில் பயன் படுத்தப்படுகின்றன என்பது, பெரும் அளவில், அன்றன்றுள்ள வாய்ப்புகளாலேயே தீர்மானிக்கப்படுகின்றன; என்றபோதிலும், இந்த சிக்கலைத் தீர்க்கவேண்டுமானால், போர்க்கால நிதிக் கொள்கையில் இந்தச் சிக்கலைப்பற்றிய திட்டவட்டமான நோக்கங்கள் உருவாக்கப்படவேண்டும். அத்தகைய குறிக்கோள்கள் தெளிவாக அமைக்கப்பட்டால்தான், நடைமுறையில் கையாளப் படும் திட்டங்களை அந்தக் குறிக்கோள்களின் அடிப்படையில் திறனாய்வு செய்யமுடியும். சிக்கல் மிகப் பெரியதாக இருப்பதாலும், போர்க் காலத்தில் இச் சிக்கலுக்கு ஏதாவது ஒரு தீர்வை உடனடியாகக் காணவேண்டிய நெருக்கடி இருப்பதாலும், போர்க் காலத்தில் அலை அலையாகப் பெருகுகிற நாட்டுப் பற்றுகிய உணர்ச்சி வெள்ளத்தின் காரணமாகக் குறிக்கோள்நெறி (idealism) ஓரளவுக்குச் சுயேச்சையாகப் பணியாற்ற முடிவதாலும் தீவிரமான மாற்றங்களுக்குப் பொதுநிதித் துறையின் மரபுகள் காரணமாக எழும் எதிர்ப்பு, அமைதிக்காலத்தில் இருப்பதைவிடப் போர்க்காலத்தில் குறைவாகவே இருக்கும்.

போர்ச் செலவுக்கான நிதி எழுப்புவதில் குறுகியகாலக் கடன் வாங்கும் முறைக்கு ஒரு தலையாய இடம் இருப்பது, தவிர்க்க முடியாதது ஆகும். போர்ச் செலவுக்கான நிதியின் பெரும் பகுதியை வரிவிதிப்பின்மூலம் எழுப்பவேண்டும் என்பதே முடிவாக இருந்தாலும், புதிய வரிகளுக்கான சட்டங்களை இயற்றி முடிப்பதற்குச் சிறிது காலம் தேவைப்படும். அவ்வாறு விதிக்கப் பட்ட வரிகளின் வசூலைத் தொடங்குவதற்கு மேலும் சிறிது காலம் செல்லக்கூடும். ஆகவே, வரி முன்னோக்குக் கடன் (tax anticipation borrowing) எழுப்பப்படுவது அவசியம் ஆகிறது. நீண்ட காலக் கடன்களால் போர்ச் செலவுக்கான நிதி எழுப்பப்படும் அளவுக்கு முன்னோக்குக் கடன் வாங்கப்படும் (loan anticipation borrowing). ஆகவே, போர்க்காலத்தில் செய்ய

வேண்டிய தலையாய நிதிக் கொள்கை முடிவானது, வரிகளை விதிப்பதா அல்லது நீண்டகாலக் கடன்களை வாங்குவதா என்பது பற்றியதே ஆகும்.

**போர்ச் செலவுகளை ஒத்திவைத்தல் (Postponement of War Costs) :** போர்ச் செலவுக்காகக் கடன் வாங்கும் முறையால் போர்ச் செலவின் சுமையானது பிற்காலத் தலைமுறைக்கு மாற்றப்பட்டு விடுகிறது என்று பரவலாக உள்ள ஓர் எண்ணத்தைப்பற்றி முதலில் கவனிப்போம். போர்ச் செலவு என்று எடுத்துக்கொண்டால், போர்க்காலத்தில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களைக் கொண்டே போர் நடத்தப்படுகிறது என்பது தெரிந்த செய்தியே. போரின் உண்மைச் செலவு போருக்காகத் தரப்பட்ட உழைப்பு, பயன்படுத்தப்பட்ட பொருள்கள், தளவாடங்களின் தேய்மானம் ஆகியவையே. இது பொருளாதார முறைக்குப் புறம்பானதுதான். போரினுல் தேய்மானம் அடைந்த தளவாடங்கள் போரின்போதே ஈடுசெய்யப்படுவதில்லை என்பது உண்மைதான். போர்க்காலத்தில் சாதனங்கள் சிதறடிக்கப்பட்டதன் காரணமாகப் போருக்குப் பிந்திய காலத்தில், ஒரு குறிப்பிட்ட அளவு உற்பத்தியைச் செய்வதற்காகத் தரவேண்டிய உண்மை முயற்சி (real effort) என்ற அடிப்படையில் பார்க்கும்போது உற்பத்திச் செலவு கூடுதலாக இருக்கும் என்பதும் உண்மையே. இந்த இரண்டு உண்மைகளையும் தவிர்த்துவிட்டுப் பார்த்தால், போருக்குப் பிந்திய தலைமுறையால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களைக்கொண்டு ஒரு போரை நடத்துவது இயலாத செயல் என்பது தெளிவுற விளங்கும்.

உண்மைச் செலவின் அடிப்படையை ஒதுக்கிவிட்டுப் பணச் செலவு(monetary cost)என்னும் அடிப்படையில்மட்டும் கவனித்துப் பார்த்தாலும், போர்ச் செலவின் சுமையைப் போருக்குப் பிந்திய ஒரு தலைமுறைமீது தள்ளிவிடுவது, இயலாத செயலே என்பது விளங்கும். ஏனென்றால், நட்டப்புச் செலவுகளைச் செலுத்துவதற் காகப் போரின்போது கடன் வாங்கப்பட்ட நிதிகள், போரின்போது உள்ள தலைமுறையால் கொடுக்கப்பட்ட நிதிகளே. போருக்குப் பிறகு கடன்கள் திருப்பிக் கொடுக்கப்படும்போதும், கடன் பத்திரங்களை வைத்துள்ள அப்போதைய தலைமுறைக்கே அவை திருப்பித்தரப்படுகின்றன. போருக்குப் பிந்திய தலைமுறையானது, போரின் விளைவான கடன் பொறுப்புகளைமட்டும் அல்லாமல் சொத்துகளையும் தன் கைவரப் பெறுவதால், போரின் பணச் செலவை அந்தத் தலைமுறை கொடுக்கிறது என்று முடிவுகட்ட முடியாது. எனவே, வெற்றியுடன் முடிந்த ஒரு போரின்

நன்மைகளைப் பெறுகிற போருக்குப் பிந்திய ஒரு தலைமுறையானது அந்தப் போர்ச் செலவின் ஒரு பகுதியைத் தாங்கிக்கொள்ள வேண்டும் என்று எதிர்பார்ப்பது கவர்ச்சிமிக்கதாக இருந்தாலும், நடைமுறையில் மிகக் குறைந்த அளவுக்கே அத்தகைய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. நடைமுறையில் போர்ச் செலவானது ஏதேனும் ஓர் அளவுக்குப் போருக்குப் பிந்திய தலைமுறைக்கு மாற்றப்படுமானால், அப்படி மாற்றப்படுவதற்குக் காரணம், போரின்போது கடன் வாங்கும் கொள்கை கையாளப்பட்டது என்பது அல்ல; உற்பத்திச் சாதனங்கள் ஓரளவுக்குத் தீர்ந்து விட்டன (partially exhausted) என்பதே. போர்ச் செலவின் இந்த மாற்றல், போரின் இயல்பால் ஏற்படும் விளைவே தவிர, போருக்கான நிதிகளை எழுப்பும் முறையால் விளைவது அன்று.

**போர்ச் செலவுகளின் பங்கீடு (Distribution of War Costs):** போருக்கான நிதிகளை எழுப்பும் முறையால் போர்ச் செலவின் சுமையைப் போருக்குப் பிந்திய தலைமுறைமீது தள்ளிவிடமுடியாது என்றாலும், போர்ச் செலவை சமுதாயத்தின் பல்வேறு உறுப்பினர்களிடையே பங்கீடு செய்வதை ஒத்திவைக்க முடியும். அப்படி ஒத்தி வைப்பது பற்றிப் பேராசிரியர் டெவன்போர்ட் (Professor Davenport) செய்துள்ள பகுத்தாய்வைப் பின்வருமாறு சுருக்கமாகக் கூறலாம்.[14] மொத்தப் போர்க்கால உற்பத்தியின் பெரும்பகுதி பொதுமக்களின் உபயோகத்திற்குக் கிடைக்காததால், போர்க் காலத்தில் உழைப்பாளிகளின் முயற்சி கூடுதலாகிற வீதத்தில் அவர்களுடைய வாழ்க்கைத் தர உயர்வு ஏற்படாது. போர்க் காலத்தில், விலைகள் உயர்ந்து, கூலிகள் பின்தங்கிவிடுவதால் **உண்மைக்** கூலிகள் குறைகின்றன; ஆனால் இலாபங்கள் பெருகு கின்றன. உற்பத்திச் செலவுகள் பின்தங்கிவிட்டதால் ஏற்பட்ட எதிர்பாராத இலாபங்கள் (windfall profits) முழுவதையும் அகற்றத்தக்க அளவிலும், உழைப்பாளிகளின் வாழ்க்கைத் தரம் குறைகிற வீதத்தில் இலாபம் பெறுபவர்களின் (profit makers) வாழ்க்கைத் தரத்தையும் குறைப்பதற்குத் தேவையான அளவில் இயல்பான இலாபங்களை (normal profits) அகற்றத்தக்க அளவிலும், அரசாங்கம் இலாபங்கள்மீது வரி விதிக்குமானால் எல்லா வகுப்புகளும் தத்தம் திறனுக்கு ஏற்ற வீதத்தில் போர்ச் செலவுகளைப் பங்கிட்டுக்கொண்டதாக ஆகும். இதற்கு மாறாக, அரசாங்கம், போருக்கான நிதிகளைக் கடன் வாங்குவதன்மூலமாக எழுப்புமானால், கடன் பத்திரங்களை வாங்குபவர்கள் பெரும்பாலும் இலாபங்களைப் பெறுபவர்களாகவே இருப்பார்கள். ஏனென்றால், போரின் விளைவாக அவர்களுக்குக் கிடைத்த உபரி வருமானங்களை அவர்கள் எளிதில் முதலீடு செய்யமுடியும். இவ்வாறாகப் போரின்போது

கடன் பத்திரங்களை வாங்குபவர்கள், போருக்குப் பிந்திய உற்பத்தியில் ஒரு பகுதியைப் பெறுவதற்கான உரிமைகளைப் பெற்றுவிடுகிறார்கள். டெவன் போர்ட் எடுத்துக்காட்டும் உண்மை என்னவென்றால், போர்க் காலத்தில் உற்பத்தி முறையும், விலைகளும் இருக்கிற சூழ்நிலையில் போர்ச் செலவுக்கான நிதிகள் கடன் வாங்குவதன் மூலம் எழுப்பப்படுமானால், போரின்போது உண்மையான வருமானத்தை இழப்பதன்மூலமாக ஒருமுறையும், போருக்குப் பின்னர் அரசாங்கக் கடனைத் திருப்பித் தருவதற்கான வரிகளைச் செலுத்துவதன் மூலமாக ஒரு முறையும் ஆக இருமுறை, உழைப்பாளர்கள் போர்ச் செலவுக்குப் பணம் செலுத்துகிறார்கள் என்பதே ஆகும். இதற்கு மாறாக, இலாபம் பெறுபவர்கள், போர்ச் செலவின் விளைவாக, நிகர இலாபத்தையே பெறுகிறார்கள். போருக்குப் பிந்திய காலத்தில் விலைகள் குறையுமானால், போர்ச் செலவைத் தாங்குவதில் உழைப்பாளி வகுப்பினருக்கும் இலாபம் பெறுபவர்கட்கும் இடையே உள்ள இந்த வேறுபாடானது, மேலும் கூடுதலாகும். அப்படிக் கூடுதலான நிலையில், கடன் பத்திர உடைமையாளர்கள், போருக்குப் பிந்திய உற்பத்தியில் கூடுதலான உண்மை உரிமையை (real claims) உடையவர்களாக ஆகிறார்கள்.

மேலே சொல்லப்பட்ட இரண்டு வகுப்பினரை, போர்க் காலத்தில் விலைகளைவிடப் பின்தங்கிவிடுகிற பண வருமானங்களை உடையவர்கள் என்றும், விலைகளைவிட முன்செல்கிற பண வருமானங்களை உடையவர்கள் என்றும் அழைப்பது மிகவும் பொருத்தமாக இருக்கும். இப்படி அழைப்பதால் மேலே செய்யப்பட்ட பகுத்தாய்வின் தன்மைகள் எவையும் பாதிக்கப் படவில்லை என்பதோடு, 'வர்க்கப் போராட்டத்' தொனி உள்ள சொற்களையும் தவிர்க்கமுடிகிறது. போர்க் காலத்தில், ஒவ்வொரு வகுப்பிலும் அடங்கியுள்ள தனியாட்கள் வெவ்வேறு வகையாகப் பாதிக்கப்படலாம் என்பது உண்மையே. டெவன்போர்ட் அவர்களின் வாதத்தில் என்னென்ன பாவனைகள் (assumptions) அடங்கியுள்ளன? முதலாவது பாவனை, பணவீக்கம் ஏற்படுகிறது என்பதும், சிலருடைய வருமானங்கள் விலைகளைவிடக் குறைவாக இருக்கின்றன என்பதும், ஆகவே ஏனையோருடைய வருமானங்கள் மிக விரைவாக உயர்கின்றன என்பதும் ஆகும். இந்தப் பாவனை போர்க்கால அனுபவத்தை முற்றிலும் ஒத்திருக்கிறது என்பதை யாரும் எளிதில் மறுத்துவிட முடியாது. கடன் பத்திரங்களின் உடைமையைவிடப் போருக்குப் பிந்திய வரிமுறை மிகுந்த தேய்வு வீதம் (regression) உடையதாக இருக்கிறது என்பதே இரண்டாவது பாவனை. வரிமுறையானது உண்மையில் தேய்வு

வீதம் உடையதாக இல்லாவிட்டாலும், இந்த இரண்டாவது பாவனையும் நடைமுறை உண்மைகளோடு பெரும்பாலும் ஒத்திருக்கிறது என்றே கூறவேண்டும்.

போர்க் காலம் ஒன்றில் இருக்கக்கூடிய ஏற்றத்தாழ்வுகள் (inequities), டெவன்போர்ட் கருதுவதைவிடக் குறைந்த கடுமை உடையனவாக இருக்கக்கூடும் என்ருலும், அவருடைய பகுத்தாய்வு, போர்க் கால நிதிக் கொள்கையால் ஏற்படக்கூடிய இரண்டு சமூகத் தீமைகளை எடுத்துக்காட்டுகிறது. போர்ச் செலவுக்காக வரிகளை விடக் கடன்களையே மிகுதியாக நம்பியிருக்கும் போக்கு, பணவீக்கத்தைத் தடுப்பதற்காகப் போதிய முயற்சிகள் செய்யாது இருத்தல் ஆகிய இரண்டுமே, அந்தத் தீமைகள் ஆகும்.

முதல் தவற்றைச் செய்வதன் விளைவாக, பெரும்பாலும் தடுக்கமுடியாத முறையில், இரண்டாவது தவறு ஏற்பட்டு விடுகிறது. ஏனென்ருல், பணவீக்க வருமானங்களை வரிகளின் மூலம் அகற்றிவிடத் தவறுவதால், அந்த வருமானங்களைக் கடன் வாங்குவதன் மூலம் பெறுவது ஒன்றே, எஞ்சியுள்ள வழியாக இருக்கிறது. ஆனுல், கடனைத் தந்தாகவேண்டும் என்கிற கட்டாயம் இல்லாததால், கடன் வாங்குவதன் மூலம் பணவீக்க நிலைமை அகற்றப்பட்டுவிடும் என்று எதிர்பார்க்க முடியாது. போர் நடைபெறும் ஆண்டு ஒன்றில், நாட்டின் ஆக்கம் (national product) 150 பில்லியன் டாலராக இருக்கிறது என்றும், அதில் பாதி பொதுமக்களுக்கான பொருள்கள் (civilian goods) என்றும் ஏனைய பாதி போர்த்துறைக்கான பொருள்கள் (military goods) என்றும் வைத்துக்கொள்வோம். இந் நிலையில் பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தவேண்டுமாஞல் தனியார் வருமானத்தில் ஏறத்தாழ 75 பில்லியன் டாலரை அரசாங்கத்திற்கு மாற்றியாகவேண்டும். இந்த 75 பில்லியன் டாலரில் வரி விதிப்பின் மூலமாக அரசாங்கத்திற்கு மாற்றப்பட்டதுபோக எஞ்சியுள்ள பகுதி, கடன் வாங்குதல் மூலமாக மாற்றப்படவேண்டும். கூடுதலாகியுள்ள வருமானத்தைக்கொண்டு நுகர்வைக் கூடுதலாக்கவேண்டும் என்கிற விருப்பமும் பாங்குகளின் நீர்மை வைப்புகளைக் கூடுதலாக்குகிற விருப்பம் அல்லது-இயங்காத் தன்மையும் (inertia), வரி விதிப்பால் மாற்றப்பட்டதுபோக எஞ்சியுள்ள தொகை முழுவதும் போர்க் கடன்களில் முதலீடு செய்யப்படவேண்டும் என்னும் அரசாங்கத்தின் விருப்பத்தை முறியடிக்கக்கூடும். அந்தத் தொகையில் எந்த அளவு கடனுகக் கிடைக்கவில்லையோ அந்த அளவைக் கருவூலமானது பாங்குகளிடமிருந்து கடனுகப் பெற்றுக் கொள்ள வேண்டும். ஏனென்ருல், போர்த் துறைப் பொருள்களை

வாங்குவதற்குக் கருவூலத்திற்குப் பணம் கட்டாயம் தேவைப் படுகிறது. அவ்வாறு வாங்கப்படும் 'கடனுனது, புதிதாகப் படைக்கப்பட்ட பாங்குக் காப்பிருப்புகளிலிருந்து உருவாகும் புதிய பணத்திலிருந்து பெறப்படுவதைத் தவிர வேறு வழியில்லை.

வரி விதிப்பால் உடனடியாக ஏற்படுகிற அதே வகையான பணவீக்க எதிர்ப்பு விளைவுகளே, வரி விதிப்புக்கு உள்ளாகாத உபரி வருமானத்தை அரசாங்கத்திற்குக் கட்டாயக் கடனுகத் தரும்படிச் செய்வதாலும் ஏற்படும். கட்டாயமாகக் கடன் தரச்செய்யும் திட்டங்கள், வலுக்கட்டாயத்தன்மை (coerciveness)யைப் பொறுத்தவரை, வரிவிதிப்பைப் போன்றவையே. ஆனுல், இத் திட்டங்களின்படித் தாங்கள் செலுத்தும் தொகைகளுக்குப் பதிலாக, இத் தொகைகளைச் செலுத்துவோர், போருக்குப் பின்னர் வரவுகளைப் பெறமுடியும்.[15] (ஆனுல் வரி விதிப்பில் அத்தகைய வரவுகள் கிடையா.) இத்தகைய திட்டம் நடைமுறையில் இருக்குமானுல், வருமானத்தின் ஒரு பெரும்பகுதி, வரிகளாக எடுத்துக்கொள்ளப் படும். அதன் மற்ருெரு பகுதி, கடனுக எடுத்துக்கொள்ளப்பட்டு அதற்குப் பதிலாகக் கடன் பத்திரங்கள் தரப்படும். இந்தப் பத்திரங்கள் போருக்குப் பிந்திய தவணை முடிவையே உடையனவாக இருக்கும். தவணை முடிவுத் தேதிக்கு முன்னுல் இவற்றை மீட்க முடியாது. இத்தகைய திட்டம் போர்க் காலத்தில் பணவீக்கச் சக்திகளை அகற்றும் என்பது மட்டுமல்ல; போருக்குப் பிந்திய காலத்தில் கிடைக்கக்கூடிய எல்லா வகை நன்மைகளுடன், அரசாங்கக் கடனின் உடைமை மிகப் பரவலாக அமைந்திருக்கும் படியும் செய்யும். இத் திட்டம் பொருத்தம் உள்ளதாகக் காணப் பட்டாலும், ஐக்கிய அமெரிக்காவில் மிகச் சிறிய அளவிலேயே இது பயன்படுத்தப்பட்டிருக்கிறது. ஆனுல், குறைந்த வருமானப் பிரிவினர் மீதான வருமான வரிகளில் ஒரு குறிப்பிடத்தக்க சில அளவையும்,[16] குறிப்பிட்ட நிலைமைகளில் 100 சதவீத மிகை இலாபவரியின் உச்ச மட்டத்தில் உள்ள 20 சதவீதத்தையும் போருக்குப் பின்னர் திருப்பித் தருவதற்கான ஒரு திட்டத்தை இங்கிலாந்து வகுத்திருந்தது. ஐக்கிய அமெரிக்காவில் இத்தகைய திட்டம் ஒரே ஒரு முறைதான் பயன்படுத்தப்பட்டது. 1941–1943ஆம் ஆண்டுகளில் மிகை இலாப வரியின் தொடர்பாகவே அவ்வாறு செய்யப்பட்டது. இவ் வரியின் பத்து சதவீதத்தை, அது கார்ப்பரேஷனின் கடனைத் திருப்பித் தருவதற்காகப் பயன் படுத்தப்படுமானுல், செலுத்தப்பட்ட வரியிலிருந்து கழித்துக் கொள்ளலாம் என்றும், அப்படி அது பயன்படுத்தப்படாமல் இருந்தால், போர் முடிந்த இரண்டு முதல் ஆறு ஆண்டுகளுக்குள்

தவணை முடிவுறக்கூடிய வட்டியில்லாக் கடன் பத்திரங்களாக எடுத்துக் கொள்ளலாம்' என்றும் அப்போது ஏற்பாடு செய்யப் பட்டது. [17]

போர்க்காலத்தில் கட்டாயச் சேமிப்பு முறை இல்லாவிட்டால் போர்ச் செலவுக்கான நிதிகளின் பெரும்பகுதியை வரி விதிப்பின் மூலமாகவே எழுப்பவேண்டியிருக்கும் என்பது தெளிவாகத் தெரிகிறது. ஒரு பெரும் போரின்போது, அப் போர்ச் செலவுக்கான நிதிகளின் 100 சதவீதத்தையும் வரி விதிப்பின்மூலம் எழுப்புவது இயலாத செயல். ஏனென்றால், அப்படிச் செய்தால் உற்பத்தித் தூண்டுதல்கள் (production incentives) குறைந்துவிடும். ஆனால், இந்த எண்ணிக்கைக்கு எத்துணை அருகில் வரி விதிப்பது நடைமுறைக்கு ஒத்ததோ அத்துணை அருகில் வரி விதிக்கப்படுவது, விரும்பத்தக்கது ஆகும். இந்தக் கோணத்திலிருந்து பார்த்தால் போரில் ஈடுபட்ட பல்வேறு நாடுகளின் நிலைமை விவரங்கள் மனநிறைவு அளிப்பனவாக இல்லை. ஆனால், சில நாடுகளின் நிலைமை விவரங்கள் பிற நாடுகளின் நிலைமை விவரங்களைவிட அதிக அளவில் வரவேற்கத்தக்கனவாக உள்ளன. இரண்டாம் உலகப் போரின் தொடக்க ஆண்டுகளில் தலையாய போர் நாடுகள் சிலவற்றின் அனுபவத்தை 20ஆவது அட்டவணை எடுத்துக்காட்டுகிறது.

## அட்டவணை 20

### மொத்தச் செலவில் நடப்பு வரிவிதத்தின் சதவிதம் இரண்டாம் உலகப்போர் *

| நாடு | நிதி ஆண்டுகள் | வரிகள், மொத்தச் செலவின் சதவீதமாக |
|---|---|---|
| ஐக்கிய அமெரிக்கா | 1940–44 | 41 |
| பிரிட்டன் | 1939–44 | 47 |
| கனடா | 1940–44 | 50 |
| ஜப்பான் | 1943–45 | 27 |
| ஜெர்மனி | 1939–45 (முதற் பாதி) | 40 |
| ஃபிரான்ஸ் | 1940–44 | 32 |

* இப் புள்ளிவிவரங்கள் பின்கண்ட மூலங்களிலிருந்து தொகுக்கப் பட்டவை : பன்னாட்டு ஏற்பாடுகளுக்கான பாங்கால் (Bank for International Settlements) வெளியிடப்பட்டுள்ள பதினான்காவது ஆண்டறிக்கை (Fourteenth Annual Report), 31–3–1944: ஐக்கிய அமெரிக்கா, பக்கம் 170. பிரிட்டன், பக்கம் 180. ஜப்பான், பக்கம் 193. ஜெர்மனி, பக்கம் 200. ஃபிரான்ஸ், பக்கம் 214.

கனடாவுக்கான புள்ளிவிவரங்கள், எச். எல். செலிக்மன் என்பாரின் (H. L. Seligman) 'Patterns of Wartime Borrowing in the United States, United Kingdom and Canada' என்னும் கட்டுரையிலிருந்து (Federal Reserve Bulletin என்னும் இதழின் 1944 நவம்பர் இதழ், 1057ஆவது பக்கம்) எடுக்கப் பட்டவை. ஜெர்மனி, ஜப்பான் ஆகிய நாடுகளுக்கான புள்ளிவிவரங்கள் சற்று விழிப்போடு பயன்படுத்தப்படவேண்டும். ஏனென்றால், அப் புள்ளிவிவரங்களில் ஓரளவு பிழை இருக்கக்கூடும் என்பதோடு, பணவீக்கம் என்பதற்கு அந் நாடுகளில் தரப்படும் பொருள், பிற நாடுகளில் தரப்படும் பொருளிலிருந்து மாறுபட்டது. பிற நாடுகளைப் பொறுத்தவரை, 100 சதவீதத்திற்கும், இங்கே தரப்பட்டுள்ள சதவீதத்திற்கும் இடையே உள்ள வேறுபாடு, கடன் வாங்கப்பட்ட சதவீதத்தைக் குறிக்கிறது. ஜெர்மனி, ஜப்பான் ஆகிய நாடுகளைப் பொறுத்த அளவில், அந் நாடுகளுக்கு, வெற்றி கொள்ளப்பட்ட நாடுகளால் தரப்பட வேண்டும் என்று விதிக்கப்பட்ட பணமும் பொருளும், வரிவிதிப்பைப் போன்ற விளைவுகளையே உடையனவாக இருந்தன.

போர்க் காலத்திய விலைக்கட்டுப்பாடு என்னும் சிக்கல் முழுவதையும் பகுத்தாய்வு செய்வது, இந்தப் புத்தகத்தின் எல்லைக்கு அப்பாற்பட்ட ஒரு நிலைமையாகும். ஆனால் பண வீக்கச் சக்திகளைத் தடுப்பதில் வரி விதிப்புக்கும் கடன் வாங்கும் முறைக்கும் மிக்க ஆற்றல் இருப்பது, அந்தச் சிக்கலின் தலையாய ஒரு பகுதி என்னும் உண்மையைத் தெளிவாக அறிந்துகொள்வது நல்லது. பணவீக்கச் சக்திகளைத் தடுப்பதில் போர் நிதியத்தின் முறைகள் (the methods of war finance) எந்த அளவுக்கு வெற்றி பெறுகின்றனவோ அந்த அளவுக்கு நேர்முக விலைக் கட்டுப்பாடுகள் ஆற்றல் மிக்கனவாக உள்ளன என்று பொருள்.

### பொதுக் கடனின் சுமைகள்பற்றிய முடிவுகள்

ஒரு சமுதாயம் முழுவதற்குமாகப் பார்க்கும்போது, ஒரு குறிப்பிட்ட அளவுள்ள கடனின் சுமையானது, அக் கடனுக்கான சான்றுகளை (அதாவது கடன் பத்திரங்களை) அச் சமுதாயத்தின் உறுப்பினர்களே வைத்திருக்கும்போது இருப்பதைவிட அச் சமுதாயத்திற்குப் புறத்தே உள்ளவர்கள் வைத்திருக்கும்போது கூடுதலாக இருக்கிறது. காரணம் என்னவென்றால், சமுதாயத்திற்கு அப்பால் இருப்பவர்களுக்குக் கடனுக்கான செலுத்தல்கள் தரப்படும்போது, சமுதாயத்தின் மொத்த ஆக்கத்தில் குறைவு ஏற்பட்டு, சமுதாய வருமானமும் குறைவுபடுகிறது. ஆனால் ஒரு சமுதாயம் தனக்குத்தானே கடனைத் தரவேண்டிய நிலையில் இருக்கும்போதும், அந்த நிலையாலேயே கடன் சுமை அகற்றப்பட்டு விடுகிறது என்று கூறமுடியாது. உள்நாட்டுக் கடனின் உண்மைச் சுமையானது, கடனைத் திருப்பித் தருவதற்காகவும் வட்டியைச் செலுத்துவதற்காகவும் வரி செலுத்துவோரிடமிருந்தும் கடன் தருவோரிடமிருந்தும் வருமானம் மாற்றப்படுவதால் சமுதாயத்தின்

தனியாட்கள்மீது ஏற்றப்படுகிற சுமைகளின் கூட்டுத் தொகையே ஆகும். அதாவது, தனியாட்கள் தாங்கள் பெற்ற வருமானத்தை விருப்ப நிறைவுக்காகப் பயன்படுத்தக்கூடிய வாய்ப்பை இழந்துவிடுவதே ஆகும்.

ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஒரு குறிப்பிட்ட அளவுள்ள உள்நாட்டுக் கடன் சுமையின் அளவு, பல்வேறு காரணிகளைப் பொறுத்திருக்கிறது. கடன் உடைமையின் முறையோடு தொடர்புடைய வரி விதிப்பின் முறை, இத் துறையில் சிறப்பு மிகுந்த ஒரு காரணியாகும். வரி விதிப்பு முறையும் கடன் உடைமை முறையும் ஒன்ருகவே இருக்குமாளுல்—அதாவது வரி செலுத்துவோரே கடன் உடைமையாளர்களாகவும் இருந்து, அவர்கள், தங்களுக்குத் தாங்களே பணத்தைச் செலுத்துகிற நிலை இருக்குமாளுல்—கடன் சுமையின் அளவு மிகச் சிறியதாகவே இருக்கும். வரி விதிப்பு முறையானது கடன் உடைமை முறையைவிட குறைந்த வளர் வீதம் உடையதாக (less progressive) இருந்தால்,[18] குறைந்த வருமானப் பிரிவினரிடமிருந்து உயர்ந்த வருமானம் உடையவர்களுக்கு, வருமான மறுபங்கீடு ஏற்பட்டுவிடுகிறது. இப்படி ஏற்படுவது, எந்தக் கண்ணேட்டத்திலிருந்து பார்த்தாலும் விரும்பத்தக்கது அன்று. இதனுல் கடனின் சமுதாயச் சுமை உச்ச அளவினதாகவே ஆகும். இதற்கு மாருக, வரி விதிப்பு முறையானது, கடன் உடைமை முறையைவிட மிகுந்த வளர்வீதம் உடையதாக இருக்குமாளுல், அந் நிலையில் ஏற்படுகிற வருமான மறுபங்கீடானது, அதிக சமத்துவத்தை ஏற்படுத்துவதாக இருக்கும். அத்தகைய வருமான மறுபங்கீட்டால் ஏற்படும் நிகரக் கடன் சுமை, முன்னர் குறிப்பிடப்பட்ட வருமான மறுபங்கீட்டால் ஏற்படும் சுமையைவிடக் குறைவாகவே இருக்கும். அதோடு அந்த மறுபங்கீடு நுகர்வின் அளவை உயர்த்துவதன் மூலம் பல நன்மைகளைத் தந்து, அந் நன்மைகளின் வாயிலாகச் சமுதாயத்திற்கு நிகர ஆதாயத்தை (net gain) உருவாக்கித் தருகிறது. ஆனுல், நடைமுறை உண்மைகளைப் பார்க்கும்போது, ஐக்கிய அமெரிக்கக் கூட்டரசாங்கத்தின் கடன் உடைமை முறையானது, அந்த அரசாங்கத்தின் வரி விதிப்பு முறையைவிட, ஓரளவு மிகுதியான வளர்வீதத் தன்மையை உடையதாக இருப்பதைக் காணலாம். மாநில, தல அரசாங்கங்களைப் பொறுத்தவரை, வரி விதிப்பு முறையானது தேய்வு வீதம் உடையதாகவே இருந்தாலும், கடன் உடைமை முறையானது உயர்ந்த அளவு வளர்வீதம் உடையதாக உள்ளது. இவ்வாருக மாநில, வட்டாரக் கடன்களின் ஒவ்வொரு டாலராலும் ஏற்படும் சுமை பெரிய அளவுடையதாகவே உள்ளது. ஆகவே, அரசாங்கக் கடனின்

பெரும் பகுதி, மாநில, தல அரசாங்கங்களின் கடனாக இல்லாமல் கூட்டரசாங்கத்தின் கடனாக இருப்பது, கடன் சுமையின் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, நற்பேறு என்றே கருதப்படவேண்டும்.

கடன் சுமையின் அளவைத் தீர்மானிக்கும் மிக முக்கியமான தனிக் காரணி, நாட்டு வருமானத்தின் அளவே என்பதில் ஒரு துளியும் ஐயமில்லை. பொதுக் கடன் மிக உயர்வாக உள்ள இன்றைய நிலையில், கடன் சுமையைக் குறைப்பதற்கு உரிய தலையாய கருவியாக, நாட்டின் வருமான அளவையே நாம் பயன் படுத்தவேண்டியிருக்கிறது. பெரிய அளவுடைய வரவு செலவுத் திட்ட உபரிகள்கூட 280 பில்லியன் டாலர் அளவுள்ள நாட்டின் மாபெரும் கடனில் ஒரு சிறு வீதத்தையே குறைக்கமுடியும். எனவே, அண்மையதான எதிர்காலத்தில் கடனின் மொத்தத் தொகையில் பெரும் அளவில் குறைவு ஏற்படும் என்று எதிர்பார்க்க முடியாது. கடனின் அசலில் பெரிய அளவில் குறைப்பு ஏதும் ஏற்படாது என்பதாலும், அதுபோலவே தற்போதைய கடனின் வட்டி அளவிலும் பெரும்பாலும் குறைவு எதுவும் உண்டாகாது என்பதாலும்,[19] கடனின் சுமையை எளிதில் தாங்கக்கூடிய அளவுக்குக் குறைப்பதற்கு உள்ள ஒரே ஒரு வழி, வேலை அளவையும் வருமான அளவையும் உயர்த்துவதே என்பது நன்றாக விளங்கு கிறது.

கடன் சுமையைப்பற்றிய பகுத்தாய்வு அறிவுக்குப் பொருந்தியதாக இருக்கவேண்டுமானால், கடன் அசலின் அளவுக்குத் தரப்படுகிற முக்கியத்துவம் குறைக்கப்படுவது இன்றியமையாதது. ஏனென்றால், நாம் முன்னரே ஆய்ந்து அறிந்ததைப்போல, கடன் சுமையாக அமைந்துள்ள வருமான மாற்றல்கள், பெரும்பாலும் வட்டிச் செலுத்தல்களோடு (interest payments) தொடர் புடையனவே தவிர அசல் செலுத்தல்களோடு (principal payments) தொடர்புடையன அல்ல. அதோடு, இந்த மாற்றல்களின் அளவை அறிவதற்கு அசலின் தொகை, ஒரு துல்லியமான அளவுகோலாக இல்லை. எனவே, கடன் சுமையைத் தீர்மானிக்கும் முதன்மையான காரணிகள் இவை நான்குதாம். (1) கடனைத் தீர்ப்பதற்காக அல்லது வட்டியைச் செலுத்துவதற்காக ஆண்டுதோறும் ஏற்படும் வாங்கும் திறனின் மாற்றல்களின் அளவு. (2) பொருளாதாரத்தில் கடன் உடைமை அமைந்துள்ள முறை. (3) வரி விதிப்பு முறை. (4) நாட்டு வருமானத்தின் அளவு.

## மேலும் படித்தற்கு உரியவை

1. ஈ. டி. டொமார் (E. D. Domar), 'Public Debt and the National Income'. இது, 'Public Finance and Full Employment' என்னும் நூலில் உள்ளது. வாஷிங்டன், ஐக்கிய ரிசர்வ் முறை (Federal Reserve System), 1945, பக்கங்கள் 53—68.

நாட்டின் வருமான அளவானது கடனுல் எவ்வாறு பாதிக்கப் படுகிறது என்பதை, எளிய முறையில்—ஆனுல், மிகுந்த விவரங்களோடு, எடுத்துக்கூறும் கட்டுரை.

2. எம். எஸ். எக்ளெஸ் (M. S. Eccles), 'Letter to Senator Byrd'. இது, ஆர். எல். வீஸ்மான் என்பாரின் (R. L. Weissman), 'Economic Balance and a Balanced Budget; Public Papers of Marriner S. Eccles' என்னும் நூலில் (நியூயார்க், ஹார்ப்பர் (Harper), 1940, அத்தியாயம் 10) உள்ளது.

கடன் சுமையின் கடுமைக்கும் நாட்டின் வருமான அளவுக்கும் தொடர்பைப்பற்றிய ஒரு தெளிவான விளக்கம்.

3. எப்ஃ. ஆர். ஃபேர்சைல்ட் (F. R. Fairchild), 'The National Debt After the War', Proceedings, National Tax Association, 1943, பக்கங்கள் 268-284.

4. ஏ. எச். ஹான்சன் (A. H. Hansen), 'Federal Debt Policy', மேலே குறிப்பிட்ட அதே நூல், பக்கங்கள் 256-267.

இந்த இரண்டு கட்டுரைகளும், அடுத்தாற்போல் குறிப்பிடப் படுகிற கட்டுரையும் ஒன்று சேர்ந்து, கூட்டரசாங்கக் கடன்பற்றிய ஒரு முழுக் கருத்தாய்வாக அமைகின்றன.

5. டி. மெக்சி. ரைட் (D. McC. Wright), 'The Economic Limit and Economic Burden of an Internally Held National Debt', Quarterly Journal of Economics, நவம்பர் 1940, பக்கங்கள் 116 முதல்.

கடன் சுமையில் பொதிந்துள்ள பொருளாதாரக் காரணிகள் பற்றிய ஒரு கருத்தாய்வு இதே ஆசிரியரின் 'The Creation of Purchasing Power' என்னும் நூலிலும் ஏறத்தாழ இதே வகையான கருத்தாய்வைக் காணலாம்.

## 10ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. ஐக்கிய ரிசர்வ் முறையின் ஆளுநர் குழுவின் (Board of Governors) தலைவராகிய எக்ளெஸ் (Chairman Eccles) என்பார், செனெடர் பிர்ட் (Senator Byrd) என்பாருக்கு 23-12-1938-ல் எழுதிய ஒரு கடிதத்தில் இந்த உண்மையைத் தெரிவித்துள்ளார். காண்க: வீஸ்மான் (Weissman), 'Economic Balance and a Balanced Budget', நியூயார்க், ஹார்ப்பர் (Harper), 1940, பக்கம் 176.

2. இந்த நூலின் 4, 5, 6ஆவது அத்தியாயங்களைக் காண்க.

3. வேளாண்மைப் பொருளாதாரக் கழகம் (Bureau of Agricultural Economics), 'National Survey of Liquid Asset Holdings, Spending and Saving', பாகம் 1, வாஷிங்டன், ஜூன் 1946, பக்கம் 6.

4. Federal Reserve Bulletin, செப்டம்பர் 1958, பக்கம் 1055.

5. இந்தத் தேய்வு வீத வரிமுறையில், உயர்ந்த வருமானம் உடையோரை விடக் குறைந்த வருமானம் உடையோர்மீது கூடுதலான சுமை இருக்கும், இப்படிச் சொல்வதால், குறைந்த வருமானம் உடைய ஓர் ஆள் அதிக வருமானம் உடைய ஓர் ஆளைவிட அதிக வரிகளைச் செலுத்துகிறார் என்று பொருளாகாது. அவருடைய செலுத்தும் திறனைவிட மிகுதியான அளவில் அவர் செலுத்துகிறார் என்பதே பொருளாகும்.

6. காண்க: சி. ஆர். விட்டில்சே (C. R. Whittlesey), 'Retirement of Internally Held Debt', American Economic Review, செப்டம்பர், 1943.

7. கடன் வரையறைகள் மாற்றமுடியாத வகையில் இருந்தால், எந்த அரசாங்கத்திற்கும் இந்த நிலை ஏற்படக்கூடும். ஆனால், கூட்டரசாங்கத்தின் கடன் வாங்கும் திறன் முற்றிலும் தீர்ந்துவிடக்கூடிய ஒரு நிலையைக் கற்பனை செய்து பார்ப்பதும் கடினமான செயலே.

8. 1930ஐத் தொடர்ந்த சில ஆண்டுகளில், 50 பில்லியன் டாலர் அளவுள்ள கூட்டரசாங்கக் கடன்தான், நம் பொருளாதாரத்தால் தாங்கப்படக் கூடிய உச்ச அளவுக் கடன் என்று கூறுவது, பெருவழக்காக இருந்தது. அதே பத்தாண்டின் (decade) பிற்பகுதியில் இந்த உச்ச அளவை 100 பில்லியன் டாலராகப் பலர் நிர்ணயிக்கத் தொடங்கினார்கள். அண்மைக்காலத்தில், உச்ச அளவுக் கடனை, நாட்டு வருமானத்தின் ஒரு குறிப்பிட்ட சதவிகிதமாகக் குறிப்பிடும் முறை—அதிகத் திருத்தமும் நெகிழ்ச்சியும் உள்ள முறை கையாளப் படுகிறது. இத்தகைய விதிகள் யாவுமே, பொருத்தமில்லாத அடிப்படைகளையே கொண்டிருக்கின்றன. ஏனென்றால், அவை அனைத்தும், திட்டவட்டமான அசல் தொகைகளைக் குறிப்பிடுகின்றன; அப்படிக் குறிப்பிடும்போது, கடன்சுமையை முடிவு செய்யும் எல்லாக் காரணிகளுமே தராதரத்தன்மை (relativity) உடையவை என்பதை மறந்துவிடுகின்றன.

9. வட்டிச் செலுத்தல்களின் சுமையானது, அந் நிலையில், கீழ்க்கண்ட வற்றைக் கொண்டதாக இருக்கும்: (1) வரிச் செலுத்தல்களின் மகிழ்ச்சியற்ற தன்மை. (2) மாற்றலை நிர்வாகம் செய்வதற்றாக (to administer the transfer) ஆட்களை வேலைக்கு அமர்த்துவதன்மூலமாக ஏற்படும் உராய்வு இழப்புகள் (frictional losses); அதாவது, வரிச் சட்டங்களை நிறைவேற்றுதல், வரிகளை வசூலித்தல், பிணக்குகளைத் தீர்த்தல், வட்டியைச் செலுத்தல் ஆகிய பணிகள். (3) வட்டி வரவுகள், வரிகளைச் செலுத்தாமல் கிடைக்கும் நிகர வரவுகளாக இருக்கும் என்று கடன்பத்திர உடைமையாளர்கள் நம்பியிருந்தால் அந்த நம்பிக்கை பொய்த்துவிட்ட நிலைமை.

10. அட்டவணை 19ஐக் காண்க.

11. ஒரு வருமானம் கூடுதலாக ஆக ஆக, அந்த வருமானத்தின் இறுதி நிலை அலகின் பயன்பாடு குறைந்துகொண்டே வருகிறது. அப்படிக் குறைவதன் விளைவாக, வருமானம் உயர உயர, ஒரு டாலரை வரியாகத் தருவதில் அடங்கியுள்ள அகத் தன்மறுப்பு (subjective sacrifice) குறைந்துகொண்டே வருகிறது.

12. அத்தகைய ஒப்பீடானது, வரி முறைகள், கடன் வாங்கப்பட்ட நிதிகளின் மூலங்கள், கடன் உடைமையின் பங்கீடு, தேவையான நிதிகளை எழுப்பும் முறை (வரி விதிப்பா அல்லது கடன் வாங்குவதா என்பது) ஆகியவை, நம் எடுத்துக்காட்டில் அமைந்துள்ள இரண்டு ஆண்டுகளிலும் பெரும் அளவுக்கு ஒரே வகையாக இருக்கின்றன என்று பாவித்துக்கொள்கிறது. தேர்ந்து எடுக்கப்பட்ட இரண்டு ஆண்டுகளில் அத்தகைய ஒருமித்த தன்மை பெரும்பாலும் இருந்திருக்கும். ஒரு வேளை அப்படி இல்லாமலிருந்தாலும், அதனால் இங்குக் குறிப்பிடும் கோட்பாடு பாதிக்கப்படமாட்டாது.

13. ஈ. டி. டொமார் (E. D. Domar), 'The Burden of the Debt and the National Income,' American Economic Review, டிசம்பர் 1944, பக்கம் 823.

14. எச். ஜே. டெவன்போர்ட் (H. J. Davenport), 'The War Tax Paradox,' American Economic Review, மார்ச் 1919, பக்கங்கள் 34–46.

15. 'ஒத்திவைக்கப்பட்ட செலுத்தல்' பற்றிய ஓர் அருமையான கருத்தாய்வை, ஜே. எம். கீன்ஸ் (J. M. Keynes) எழுதியுள்ள 'How to Pay for the War' என்னும் நூலில் காணலாம். [நியூயார்க், ஹார்கோர்ட் (Harcourt), பிரேஸ் (Brace), 1940, அத்தியாயங்கள் 5-ம் 6-ம்].

16. '...............1941–42-ல் வருமான வரியானது 5½ மில்லியன் தொழிலாளர்கள்மீது விதிக்கப்பட்டது; அவர்கள் செலுத்திய தொகை, 125 மில்லியன் பவுன். ஆனால், இந்தத் தொகையில் 60 மில்லியன் பவுன் கடனாகக் கருதப்பட்டது; அதாவது, ஒரு சேமிப்புக் கணக்கில் வரி செலுத்துவோரின் பெயரில் வரவு வைக்கப்பட்டது. போருக்குப்பின் அத் தொகை திருப்பித் தரப்படும்.' (Annual Report of the Bank for International Settlements, March 31, 1942. இது 1943, ஜனவரி மாத 'Federal Reserve Bulletin' இதழில், எடுத்து வெளியிடப்பட்டிருக்கிறது. பக்கம் 19).

17. நிதியாண்டு 1945-ன் இறுதியில் செலுத்தவேண்டியிருந்த அத்தகைய பாண்டுகளின் தொகை, 1 பில்லியன் டாலரைவிடச் சற்றே உயர்வாக இருந்தது. Annual Report of the Secretary of the Treasury, 1945, பக்கம் 528.

18. அதாவது, உயர்ந்த வருமானப் பிரிவுகளில் உள்ள கடன் உடைமையாளர்களுக்குத் தரப்படும் செலுத்தல்கள், அவர்கள் செலுத்திய வரித் தொகைகளின் வீதாசாரத்தைவிட மிகுதியாக இருக்கின்றன. இவ்வாறாக, மொத்த வரிச் செலுத்தல்களில் குறைந்த வருமானப் பிரிவினரின் வீதாசாரம், கடனின் அசல், அதன் வட்டி ஆகிய இருவகை வரவுகளின் மொத்தத் தொகையில் அவர்கள் பெறுகிற தொகையின் வீதாசாரத்தைவிட மிகுதியாக இருக்கிறது.

19. நாம் முன்னரே கண்டதைப்போல, இரண்டாம் உலகப் போருக்குப் பின் அரசாங்கக் கடனின் வட்டி வீதங்கள் உயர்ந்துகொண்டிருக்கின்றன. இது பணவீக்க நிலைமையின் ஓர் இயல்பேயாகும். அத்தகைய நிலைமையில், கடன் தரக்கூடிய நிதிகளைப் பெறுவதற்காக, அரசாங்கம் தனியார் வாணிப முதலீட்டோடு போட்டியிடுவது இயற்கை.

# 11. பொது வருவாய்கள்: கொடைகளும், நன்கொடைகளும், நிர்வாக வருவாய்களும்

8, 9, 10 ஆகிய அத்தியாயங்களில், நாம், அரசாங்கத்தின் வருவாய் அல்லாத வரவுகளில் (non-revenue receipts) முதன்மையான இனத்தைப்பற்றி—அதாவது பொதுக் கடன்களைப் பற்றிக் கருத்தாய்வு செய்தோம். இந்த அத்தியாயத்திலும் இதைத் தொடர்ந்து வரும் அத்தியாயங்களிலும், அரசாங்கத்தின் வருவாய் வரவுகளைப்பற்றி (revenue receipts)—அதாவது, கருவூலத்தால் ஆளப்படக்கூடிய நிதிகளை, கடன் பொறுப்புகளை உயர்த்தாமல், அதிகமாக்கக்கூடிய வரவுகளைப்பற்றி ஆராய்வோம். வருவாய் வரவுகளில், பல்வேறு அளவில் வருவாய் முக்கியத்துவம் உடைய பல இனங்கள் இருந்தாலும், தலையாய இனமாக இருப்பது வரியே.

## வருவாய் வரவுகளின் பாகுபாடு (Classification of Revenue Receipts)

தர்க்க முறைப்படிச் சிறிதும் குறை சொல்லமுடியாத வகையிலும், மிக நுணுக்கமான முறையிலும், வருவாய் வரவுகளைப் பல்வேறு பிரிவுகளாக அமைத்து, அந்தப் பிரிவுகளை ஒரு பாகுபாட்டின்கீழ்க் கொண்டுவரும் முயற்சியில் நம் ஆற்றலை வீணாக்குவது, தேவையற்ற ஒரு செயல் என்றே கூறவேண்டும். உண்மையைக் கூறுவதானால், தற்காலத்தில் நடைமுறையில் உள்ள வருவாய் ஏற்பாடுகளை, எந்த வகையிலும் குறை சொல்ல முடியாத வகையில் பாகுபாடு செய்வது இயலாத செயல் என்றே சொல்லிவிடலாம். நடைமுறையில் நிகழ்வது என்னவென்றால், தொடக்கக் காலத்தில் தெளிவான முறையில் தனித்தனியாக இருந்த வருவாய் ஏற்பாடுகள், காலப்போக்கில், நுட்ப வினைமுறைகளை (techniques) ஒன்றிலிருந்து ஒன்று ஏற்றுக்

கொள்கின்றன. அதோடு, புதிய வருவாய்களைத் தேடிப் பெறுவதற்காக ஓயாமல் செய்யப்படும் முயற்சிகளால் உருவாகிற புதிய ஏற்பாடுகள், மரபு வழியாகக் கையாளப்பட்டு வருகின்ற எந்தப் பிரிவுகளிலும் அடங்காமல் தனித்து நிற்கவேண்டிய தன்மை உடையனவாக இருக்கின்றன. இங்கே நாம், வருவாய்களின் பெரும் பிரிவுகளைமட்டும் பயன்படுத்தலாம். அப்படிப் பயன்படுத்தும்போது, தலையாய இயல்புகளைப் பொறுத்தவரையில் இந்தப் பிரிவுகள் ஒன்றிலிருந்து ஒன்று தெளிவான முறையில் மாறுபட்டுள்ளன என்றபோதிலும், எல்லா இயல்புகளைப் பொறுத்த நிலையிலும் அதே வகையில் மாறுபட்டுள்ளன என்று கூறமுடியாது என்பதை நினைவில் நிறுத்திக்கொள்ளவேண்டும்.

வருவாய் வரவுகளின் நான்கு பிரிவுகளாவன:

1. மானியங்களும் நன்கொடைகளும் (Grants and gifts)
2. நிர்வாக வருவாய்கள் (Administrative revenues)
3. வாணிப வருவாய்கள் (Commercial revenues)
4. வரிகள் (Taxes)

**1. மானியங்களும் நன்கொடைகளும்:** பெரும்பாலும் ஒரு குறிப்பிட்ட முறையில் ஒரு குறிப்பிட்ட பணியை ஆற்றுவதற்காக ஓர் அரசாங்கம் மற்றோர் அரசாங்கத்திற்கு நிதி உதவியைத் தருவதற்கான முறையாக உள்ள உதவி மானியங்களின் (grands-in-aid) வளர்ச்சியைப்பற்றி 3ஆவது அத்தியாயத்தில் நாம் கருத்தாய்வு செய்துள்ளோம். கல்வியின் வளர்ச்சிக்காகவும் நெடுஞ்சாலையின் அமைப்புக்காகவும், மாநில அரசாங்கங்கள், தல அரசாங்கங்களுக்கு நீண்டகாலமாகவே கொடைகளைத் தந்து வருகின்றன. அதுபோலவே, சாங்கமானது, மாநில அரசாங்கங்களுக்கு, நெடுஞ்சாலை கூட்டரகளின் அமைப்புக்காகவும் பராமரிப்புக்காகவும், தொழில்முறைக் கல்விக்காகவும், நெடுங்காலமாகக் கொடைகளை அளித்து வருகின்றன. கூட்டரசாங்கம் கொடுத்த நில மானியங்களின் (grants of lands) உதவியாலேயே மாநிலப் பல்கலைக் கழகங்களில் பல, தொடக்கத்தில் நிறுவப்பட்டன.

குறிப்பிட்ட நோக்கத்திற்காக என்று இல்லாமல் பொதுவாக ஓர் அரசாங்கத்திடமிருந்து இன்னோர் அரசாங்கத்திற்கு மானியங்கள் தரப்படும் வழக்கம், ஐக்கிய அமெரிக்காவில் மிகக் குறைந்த அளவில்தான் இருக்கிறது. சில மாநிலஅரசாங்கங்களிலும், பல வெளி நாடுகளிலும், அத்தகைய மாநியங்கள் முக்கியமானவை வையாக இருக்கின்றன. தற்போது ஐக்கிய அமெரிக்காவில் சில மாநில அரசாங்கங்கள் தங்கள் தல அரசாங்கங்களுக்குத் தருகிற சில சிறிய மாநியங்கள் மட்டுமே இத்தகைய பொது மானியங்களாக உள்ளன. 1836-ல் கூட்டரசாங்கம் மாநில அரசாங்கங்களுக்கு,

இன்ன நோக்கத்திற்கு என்று வரையறுக்காமல் பொதுவாகக் கொடுத்த மானியத்தை, வரலாற்றுச் சுவடியில் பொதிந்து கிடக்கும் ஒரு வியத்தகு நிகழ்ச்சி என்றே கூறவேண்டும். அரசாங்க நிலங்களின் விற்பனையிலிருந்தும் சுங்க வரிகளிலிருந்தும் (customs duties) கிடைத்த வருவாய்கள் மாபெரும் அளவில் இருந்த காரணத்தால், 1836-க்குள் கூட்டரசாங்கத்தின் கடன் முற்றிலும் தீர்க்கப்பட்டுவிட்டதோடு, கருவூலத்தில் உபரிகள் குழப்பம் அளிக்கத்தக்க அளவுக்குத் திரண்டு பெருகிவிட்டன. அந்த வருவாய்களைக் குறைப்பதும் இயலக்கூடிய செயலாக இல்லை. ஆகவேதான், ஏறத்தாழ 28 மில்லியன் டாலர் அளவுள்ள உபரித் தொகையை, கூட்டரசாங்கம், தங்களுக்கு ஏற்புடையது என்று தோன்றக்கூடிய வழிகளில் செலவிட்டுக்கொள்வதற்காக மாநில அரசாங்கங்களுக்குப் பங்கிட்டுத் தந்துவிட்டது. அதே வகையான பங்கீடுகள் மீண்டும் ஏற்படும் என்று அப்போது எதிர்பார்க்கப்பட்டபோதிலும், 1837-ல் உருவாகிய நிதி நிலை இடர்ப்பாடுகள் காரணமாகப் பற்றுக்குறையும் கடனும் மீண்டும் ஏற்பட்டுவிட்டன. அதன்பின் குழப்பம் அளிக்கத்தக்க உபரிகள் எக்காலத்திலும் மீண்டும் காட்சி அளிக்கவேயில்லை.

குறிப்பிட்ட நோக்கங்களுக்காக மாநில அரசாங்கங்கட்குக் கூட்டரசாங்கம் தரும் மானியங்கள், 1930-ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளில், ஆழந்த முறையிலும் சரி, அகன்ற முறையிலும் சரி பெரிதும் வளர்ந்து விட்டன. இந்தப் பத்தாண்டுகளின் தொடக்க காலத்தில் ஓரளவுக்குத் தாராளமான நிவாரண மானியங்கள் (relief grants) அளிக்கப்பட்டன. இந்தப் பத்தாண்டுகளின் தொடக்க காலத்திற்குப்பின், பொதுப் பணிகளுக்காகவும் (public works), சமுதாயப் பாதுகாப்புத் திட்டத்தின்படிக் குறிப்பிட்ட மக்கள் குழுவினருக்கு உதவி புரிவதற்காகவும் வேலையின்மை இழப்பீட்டுத் திட்டத்தை நிர்வாகம் செய்வதற்காகவும் ஏராளமான மானியங்கள் தரப்பட்டன. 1940 முதல் உள்ள ஆண்டுகளில், பழைய மானியங்கள் சிலவற்றின் அளவில், சிறப்பாக நெடுஞ்சாலைகளுக்கும் பொது உதவிக்குமான (public assistance) மானியங்களின் அளவில் தொடர்ச்சியாக உயர்வு ஏற்பட்டுக்கொண்டே வந்தது; அதோடு, பல புதிய நோக்கங்களுக்காகப் பல்வேறு புதிய மானியங்களும் தரப்படலாயின. இத்தகைய புதிய மானியங்களுக்கான நோக்கங்களில், வீடு கட்டுதல், நகரங்களைப் புதுப்பித்தல், வானூர்தி நிலையங்கள், உடல் நலமும் மருத்துவ மனைகளும், கூட்டரசாங்க நடவடிக்கை மிகுதியாக உள்ள வட்டாரங்களில் இருக்கும் பள்ளிக்கூடங்கள், நாட்டுச் சாதனங்களின் வளர்ச்சி, பள்ளிக்கூட மதிய உணவு ஆகியவை

அடங்கும். மாநில அரசாங்கங்கட்கும் தல அரசாங்கங்கட்கும் கூட்டரசாங்கம் அளித்த மானியங்களின் மொத்த அளவு, 1927-ல் 139 மில்லியன் டாலராகவும், 1940-ல் 1·3 பில்லியன் டாலராகவும், 1958-ல் 6·3 பில்லியன் டாலராகவும் இருந்தது.[1] தல அரசாங்கங்களுக்கு மாநில அரசுகள் தரும் மானியங்கள், பொது நலன் (public welfare) பற்றிய துறையைத் தவிர்த்து ஏனைய துறைகளில், அண்மைக் காலங்களில், குறிப்பிடத்தக்க அளவில் விரிவாக்கப்படவில்லை. மாநில அரசுகளின் மானியங்களுக்கான தலையாய நோக்கங்கள், கல்வியும் நெடுஞ்சாலையுமாகவே தொடர்ந்து இருந்துவருகின்றன. தல அரசாங்கங்கட்கு மாநில அரசுகள் தரும் கொடைகளின் மொத்த அளவு, 1927-ல் 596 மில்லியன் டாலராகவும், 1940-ல் 1·7 பில்லியன் டாலராகவும், 1958-ல் 7·9 பில்லியன் டாலராகவும் இருந்தது.[2]

உதவி மானியங்களைத் திருப்பித் தரவேண்டிய பொறுப்பு இல்லாததால், அவை, மானியத்தைத் தரும் அரசாங்கங்கட்குச் செலவுச் செலுத்தல்களாகவும் (cost payments), மானியத்தைப் பெறும் அரசாங்கங்கட்கு வருவாய் வரவுகளாகவும் இருக்கின்றன என்பது உண்மை. கொடைகள் குறிப்பிட்ட நோக்கங்களுக்காகத் தரப்பட்டாலும் பொதுவாகத் தரப்பட்டாலும் இந்த உண்மை பொருந்தும்.

நன்கொடைகள் (gifts) என்பன, அரசாங்கத்தைத் தவிர்த்த நன்கொடையாளர்கள், பெரும்பாலும் குறிப்பிட்ட நோக்கங்களுக்காகத் தாமாகத் தருகின்ற தொகைகளைக் குறிக்கும். அத்தகைய நன்கொடைகள், போரின்போது, அக் காலத்தில் முழு அளவில் மலர்கிற நாட்டுப் பற்றின் விளைவாக மிகுந்த அளவில் கிடைக்கக் கூடும்.[3] ஆனால், அமைதிக் காலங்களில்கூட, அக்கறை மிகுந்த, நன்றியுள்ள, அல்லது மனச்சான்றின்படி நடக்கிற ஆட்களிடமிருந்து அத்தகைய நன்கொடைகள் கிடைக்கின்றன. (மானியங்களை விட்டுவிட்டு) நன்கொடைகளை மட்டும் கவனித்துப் பார்த்தால், அவற்றின் மொத்தத் தொகை, எந்தக் காலத்திலுமே சிறப்பாகக் குறிக்கத்தக்க அளவில் இருந்ததில்லை.

வரவுகளின் ஒரு பிரிவு என்னும் முறையில், மானியங்கள், நன்கொடைகள் ஆகியவற்றின் இயல்புகள், அவற்றின் தாமாக முன்வரும் தன்மையும் (voluntary nature), மானியம் கொடுப்பவர் அக் கொடைக்கு மாறாக எத்தகைய நேர்முக நன்மையையும் (direct benefit) எதிர்பாராமல் இருக்கும் நிலைமையும் ஆகும். மானியங்களைப் பொறுத்த அளவில், மானியம் தரும் அரசாங்கம், மற்றோர் அரசாங்கத்தால் ஒரு பணி நிறைவேற்றப்படுவதற்காக

நிதி உதவிபுரிகிறது. மானியம் தரும் அரசாங்கம், அந்தப் பணியைத் தானே நேர்முகமாகச் செய்யாமல் மற்றோர் அரசாங்கத்தைச் செய்ய வைப்பதற்கான காரணம், அரசியல் அமைப்பின் வரையறைகளின்படி (Constitutional limitations) அந்தப் பணியைத்தான் மேற்கொள்ள முடியாததாக இருக்கலாம்; அல்லது, கடனைப் பெறுகிற அரசாங்கமே அந்தப் பணியை நிறைவேற்றுவதற்குப் பொருத்தமுள்ள நிர்வாக அமைப்பாக இருக்கிறது என்பதாக இருக்கலாம். தனியார் நன்கொடைகளும் முற்றிலும் தாமாக முன்வருபவையே. அந்த நன்கொடைகளைப் பொறுத்த அளவிலும், தான் விரும்புகிற நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன என்கிற தனிப்பட்ட மன நிறைவைத் தவிர, நன்கொடையாளருக்கு எத்தகைய நேர்முக நன்மையும் கிடைப்பதில்லை.

2. **நிர்வாக வருவாய்கள்:** கட்டணங்கள் (fees), லைசென்சுகள், அபராதங்கள், பறிமுதல்கள் (forfeitures), அரசினரைச் சேர்தல் (escheats), தனித் தீர்வைகள் (special assessments) ஆகியவை இந்தத் தலைப்பில் அடங்கும். பணத்தைச் செலுத்துபவர் (payer), பணத்தைச் செலுத்தலாமா வேண்டாமா என்பதை ஏறத்தாழ சுயேச்சையான முறையிலேயே முடிவு செய்துகொள்ளும் உரிமையும், செலுத்துபவருக்கு ஏறத்தாழ நேர்முகமான நன்மை (அல்லது தண்டனை) கிடைப்பதும், இந்த வருவாய்களின் இயல்புகள் ஆகும். ஆனால், செலுத்தப்படும் தொகையின் அளவானது, பெறுகிற நன்மையின் மதிப்புடனோ, அல்லது அந்த நன்மையை அவருக்குத் தருவதற்காக ஆகும் செலவுடனோ நெருங்கிய தொடர்பு உடையதாக இருந்தாகவேண்டும் என்று கூறமுடியாது. நிர்வாக வருவாய்களின் மற்றோர் இயல்பு—விசித்திரமான இயல்பு என்று கூறலாம்—என்னவென்றால், அரசாங்கம் கட்டுப்பாட்டுப் பணி ஒன்றை நிர்வாகம் செய்வதன் துணைப் பொருள்களாகவே அவை பெரும்பாலும் உருவாகின்றன. எனவேதான் அவை 'நிர்வாக வருவாய்கள்' என்று அழைக்கப்படுகின்றன.

நிர்வாக வருவாய்களின் இயல்புகளாக மேலே சுட்டிக் காட்டப்பட்டவற்றை விளக்கிக் காட்டுவதற்கான எடுத்துக் காட்டுகள் என்னும் வகையில், பதிவுசெய் கட்டணங்கள் (incorporation fees), மோட்டார் ஊர்திகளின் பதிவு, முடிதிருத்துவோரின் லைசென்சுகள், மோட்டார்கார்களை வைத்திருப்பதற்கான அனுமதிகள் ஆகியவற்றை நாம் ஆராய்ந்து பார்க்கலாம். இந்த வருவாய்த் துறைகள் ஒவ்வொன்றிலும், ஒரு தனியாள், தொகையைச் செலுத்தும்படி வலுக்கட்டாயப்படுத்தப்படுகிறார்

என்று கூறமுடியாது. ஆனல், அந்தத் தனியாள் ஒரு வாணிபத்தைப் பதிவு செய்ய விரும்பினல், மோட்டார்காரைப் பயன்படுத்த விழைந்தால், அல்லது ஒரு முடிதிருத்துவோராகப் பணிபுரிய ஆசைப்பட்டால், குறிப்பிட்ட கட்டணங்களைத் தந்தாகவேண்டும். ஏனைய வகை வாணிப அமைப்புகளைவிடப் பதிவு செய்யப்பட்ட (incorporated) அமைப்புகளுக்குக்கிடைக்கிற சட்டமுறை அனுகூலங்கள், நடைமுறை அனுகூலங்கள் ஆகியவற்றின் வடிவத்திலும், மோட்டாரும் காரோட்டியும் சிலவகைப் பாதுகாப்புகளைப் பெறுகின்ற ஒரு முறையின்கீழ்க் காரைப் பயன்படுத்திக்கொள்கிற வாய்ப்பின் வடிவத்திலும், முடிதிருத்தும் தொழிலில் சில தரங்கள் நிலைநாட்டப்படுவதால் முடிதிருத்துவோருக்குக் கிடைக்கிற அனுகூலங்களின் வடிவத்திலும், கட்டணம் செலுத்துபவருக்கு நன்மைகள் கிடைக்கின்றன என்று கூறலாம். இந்த எடுத்துக் காட்டுகள் எதிலும், செலுத்துகிற கட்டணத் தொகையையும், பெறுகிற நன்மையின் மதிப்பையும் சமநிலைப்படுத்துகிற முயற்சி எதுவும் செய்யப்படவில்லை. ஆனல், செலுத்தப்பட்ட கட்டணத்திற்கும், குறிப்பிட்ட கட்டுப்பாட்டை ஒவ்வொரு தனியாளுக்கும் நிர்வாகம் செய்வதற்கான நேர்முகச் செலவுக்கும் இடையே கிட்டத்தட்டச் சமநிலை இருக்கிறது. இந்தச் சமநிலைகூட அடிக்கடி இல்லாமற்போய்விடுகிறது.[4]

இந்த அத்தியாயத்தின் பிற்பகுதியில் நிர்வாக வருவாய்களை மேலும் விரிவாகக் கருத்தாய்வு செய்யவேண்டிய தேவை இருக்கிறது. தனிச் சலுகை (privilege) அளிக்கப்படும்போது அல்லது ஒழுங்குபடுத்தும் பணி நிறைவேற்றப்படும்போது, கட்டணங்கள் ஏறத்தாழத் தாமாகவே தரப்படுகிற நிலைமைதான் நிர்வாக வருவாய்களின் சிறப்பு இயல்புகளாக இருக்கின்றன. (அல்லது தொடக்க காலத்தில் இருந்தன.)

3. **வாணிப வருவாய்கள்:** அரசாங்கத்தால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களுக்கும் ஊழியங்களுக்கும் செலுத்தப்படுகிற விலைகளின் வடிவத்தில் அரசாங்கத்திற்குக் கிடைக்கிறவருவாய்களே, வாணிப வருவாய்கள் என்று அழைக்கப்படுபவை. அஞ்சல் துறைச் செலுத்தல்கள், சாலைச் சுங்கங்கள் (tolls) அரசாங்கக் கடன் கார்ப்பரேஷன்களிடமிருந்து (Government Credit Corporations) கடன் வாங்கப்பட்ட நிதிகளுக்காகச் செலுத்தப்படும் வட்டி, அரசாங்கக் கல்வி நிலையங்களுக்குக் கிடைக்கும் கல்விப் பயிற்சிக் கட்டணம் (tuition fee), அரசாங்கக் கடைகளில் விற்கப்படும் சாராயத்திற்காகச் செலுத்தப்படும் விலைகள், உபரியாகவுள்ள போர்ப் பொருள்களின் விற்பனைகள், அரசாங்க உடைமையாக

உள்ள பொது வசதிக் கம்பெனிகளால் (public utility concerns) விற்கப்படும் மின்சாரத்தின் விலை முதலியவை வாணிப வருவாய்கள் என்னும் தலைப்பில் அடங்கும். வாணிப வருவாய்களை, ஏனைய பிரிவுகளில் உள்ள வருவாய்களிலிருந்து பிரித்துக் காட்டும் இயல்புகளாவன: 1. செலுத்தம்படும் தொகைக்குப் பதிலாக ஒரு பொருளை அல்லது ஓர் ஊழியத்தை நேர்முகமாகப் பெறுவது. 2. செலுத்தலின் தொகையை, ஏறத்தாழவாவது, பெறுகிற பொருள் அல்லது ஊழியத்தின் உற்பத்திச் செலவுக்கு (அல்லது நன்மைக்குச்) சமமாக ஆக்குவது.

அரசாங்கத்தால் உற்பத்தி செய்யப்பட்ட ஒரு பொருளின் விலை எப்போதும் அதன் சராசரி அல்லது இறுதிநிலை உற்பத்திச் செலவுக்குச் சமமாக இருக்கும் என்று எதிர்பார்க்க முடியாது என்பதை நாம் மறத்தல் ஆகாது. விலையை முடிவு செய்வதில், பொதுவான சமுதாயக் கொள்கைக்கும் வாணிபக் கொள்கைக்கும் இடையே முரண்பாடு ஏற்படக்கூடும். அஞ்சல் கட்டணங்கள் (postage rates) அல்லது துணைவழிக் கட்டணங்கள் (subway fares) உற்பத்திச் செலவைவிடக் குறைவாக இருக்கும் நிலைமைகளில், இத்தகைய முரண்பாடுதான் இருக்கிறது. இத்தகைய நிலைமைகளில், விலையானது உற்பத்திச் செலவின் அளவுக்கு உயர்வாக இருக்கும்போது இந்த ஊழியங்கள் பொது மக்களுக்குக் கிடைக்கக் கூடிய அளவைவிட விரிவான அளவில் அவை கிடைப்பதுதான் சமுதாய நலனுக்கு உகந்தது என்று பொதுவாகக் கருதப்படுகிறது. வேறு சில நிலைமைகளில் சில பொருள்களைப் பங்கீடு செய்வதில் அரசாங்க முற்றுரிமைகள் (government monopolies) ஏற்படுத்தப் படுவதற்கான தலையாய காரணம், 'அத்தகைய முற்றுரிமையின் விளைவாகக் கிடைக்கக் கூடிய முற்றுரிமை இலாபங்களைப் (monopoly profits) பொது நிதிகளில் (general funds) சேர்த்துக் கொள்ளலாம் என்பதே. பிரெஞ்சுப் புகையிலை முற்றுரிமை இதற்குரிய ஓர் எடுத்துக்காட்டு ஆகும். அரசாங்கச் சாராயக் கடைகளை இந்தப் பிரிவிலும் சேர்க்கலாம். ஆனால் இந்தக் கடைகளைப் பொறுத்த அளவில், முற்றுரிமை நடவடிக்கையானது, எந்த அளவுக்கு இலாப நோக்கம் உடையதாக இருக்கிறதோ அதே அளவுக்குக் கட்டுப்பாட்டு நோக்கமும் உடையதாக இருக்கிறது.

பொருள்களையும் ஊழியங்களையும் உற்பத்தி செய்வதில் அல்லது விற்பனை செய்வதில் அல்லது இரண்டு பணிகளிலும், அரசாங்கம், பல காரணங்களை முன்னிட்டு, ஈடுபடக்கூடும். தனியார் தொழில்துணிவு சிலவகை ஊழியங்களைச் செய்ய

இயலாத அல்லது செய்ய விரும்பாத நிலையில் இருக்கலாம். (எடுத்துக்காட்டு: அஞ்சல் முறை அல்லது பனுமா கால்வாய்) வேறு சில ஊழியங்களைப் பொறுத்தவரையில், தனியார் தொழில் துணிவைவிட அரசாங்கம் அவற்றைச் சிறந்த முறையில் அல்லது குறைந்த விலையில் அளிக்கமுடியும் என்று கருதப்படலாம். (எடுத்துக்காட்டு : மின்சாரத்தின் உற்பத்தியும் பங்கீடும்). மற்றும் சில நிலைமைகளில், அரசாங்கம், தன்னிடம் உள்ள சாதனங்கள் அல்லது பொருள்கள் பொதுமக்களால் பயன்படுத்தப்பட வேண்டியவை என்று கருதக்கூடும். (எடுத்துக்காட்டு: உபரியாக வுள்ள போர்ப் பொருள்கள் அல்லது வெள்ளத்தையும் நில அரிப்பையும் கட்டுப்பாடு செய்யும் நடவடிக்கை, கப்பலோட்டுதல் ஆகியவற்றின் துணைப் பொருளாகக் கிடைக்கும் மின்சாரம்). அரசாங்கத்தின் தொழில் நடவடிக்கைகளை அடுத்த அத்தியாயத்தில் இன்னும் விரிவாக ஆராயலாம். வாணிப வருவாய்களின் இயல்பு, தனியாரால் உற்பத்தி செய்யப்படுகிற பொருள்களுக்கும் ஊழியங் களுக்கும் தரப்படுகிற விலைகளைப்போன்றதே என்னும் தலையாய உண்மையை மட்டும் குறித்துக்கொள்வது, தற்போதைக்குப் போதுமானது.

4. **வரிகள் :** வரிகள் என்பவை, அவற்றிற்குப் பதிலாக நேர்முக நன்மை எதையும் எதிர்பாராமல் அரசாங்கத்திற்குத் தரப்படுகிற கட்டாயச் செலுத்தல்கள் (compulsory payments) ஆகும். **ஏறத்தாழக்** கட்டாயச் செலுத்தல்கள் என்று கூறுவது இதனினும் பொருத்தமாக இருக்கும். ஏனென்றால், வலுக்கட்டாய இயல்பு, பல்வேறு வரிகளில் பல்வேறு அளவுகளில் காணப்படுகிறது. தலை வரியானது (poll tax), வரி செலுத்துவோர் வரி விதிக்கப்படக் கூடிய வயதை அடைந்துவிட்ட ஒரு காரணத்தாலேயே செலுத்தப் படுகிறது. வரி விதிக்கப்படக்கூடிய வருமானத்தை அடையாமல் இருப்பதன் மூலமாகவே வருமான வரியைத் தவிர்க்கமுடியும். வரி விதிக்கப்படக்கூடிய சொத்தை உடையவராக இல்லாமல் இருப்பதன் மூலமாகவே சொத்து வரிகளைத் தவிர்க்கமுடியும். குறிப்பிட்ட பண்டங்களை வாங்குவதன்மீது விதிக்கப்படும் வரிகளை, வரி விதிக்கப்பட்ட வட்டாரத்தில் வரி விதிக்கப்பட்ட பண்டங்களை வாங்காமல் இருப்பதன் மூலமாகவே தவிர்க்கமுடியும். வரிகளைச் செலுத்துவதா செலுத்தாமல் தவிர்ப்பதா என்பதை முடிவு செய்வதற்குரிய உரிமை ஓரளவு இருக்கிறது என்றபோதிலும், பெரும்பாலும் இந்த உரிமையைப் பயன்படுத்த முடிவதில்லை. எனவே, நடைமுறையில் வரிகள் யாவும் வலுக்கட்டாயத் தன்மை (coercion) உடையன என்றே நாம் முடிவுகட்டவேண்டும்.

வரிகள் என்பவை இயல்பாகவே அரசாங்கத்தின் பொதுவான நிதிகளுக்குத் (general funds) தரப்படும் தொகைகளே தவிர வரி செலுத்துவோரின் குறிப்பிட்ட நன்மைக்காகத் (specific benefit) தரப்படுவன அல்ல என்று நாம் இயம்பியபோதிலும், குறிப்பிட்ட வரிகளின் வருவாய்களை வரிசெலுத்துவோருக்கு நன்மை தருகிற குறிப்பிட்ட செலவுகளுக்கென்றே ஒதுக்கிவைக்கும் போக்கு அண்மைக் காலத்தில் வளர்ந்து வருவதை நாம் பார்க்கிறோம். ஆனால், தலையாய வரிகள் இன்னமும் வரிகளின் இலக்கணத்திற்கு முற்றிலும் ஒத்த வகையிலேயே அமைந்துள்ளன. கூட்டரசாங் கத்தின் வருமான வரி வரவுகள் பொது நிதிகளில் சேர்க்கப்பட்டு, நிதி ஒதுக்கங்கள் (appropriations) மூலமாகப் பல்வேறு செலவினங் களுக்கும் பகிர்ந்து அளிக்கப்படுகின்றன. சொத்து வரிகள், வாணிப வரிகள் ஆகியவற்றிலிருந்து கிடைக்கும் நிதிகளை மாநில அரசுகள் இதே வகையில் பயன்படுத்துகின்றன. தல அரசாங்கங்களின் சொத்து வரிகள் பயன்படுத்தப்படும் முறையும் இதுவே.

சுருங்கக்கூறின், அரசாங்க வருவாய்களின் நான்கு பிரிவுக ளுடைய இயல்புகளைக் கீழ்க்கண்ட பட்டியலில் உள்ளவாறு ஒப்பிட்டுக் காட்டலாம்.

| வருவாய்ப் பிரிவு | கையாளப் படும் வலுக் கட்டாயத்தின் அளவு | பதிலுக்கு அளிக்கப்படும் குறிப்பிட்ட நன்மை | செலுத்தப்படும் தொகை, நன்மை யின் மதிப்பு அல்லது உற்பத்திச் செலவுக்குக் குறையாமல் உள்ளதா ? |
|---|---|---|---|
| மானியங்களும் நன்கொடை களும் | (—) | (—) | (—) |
| நிர்வாக வருவாய்கள் | (∓) | (+) | (+) |
| வாணிப வருவாய்கள் | (∓) | (+) | (+) |
| வரிகள் | (+) | (—) | ... |

பலதிறப்பட்ட வருவாய் ஏற்பாடுகளின் பாகுபாடு (classification) எதிலும், பல்வேறு பிரிவுகள், தெள்ளத் தெளிவாகவும் ஒன்றிலிருந்து ஒன்று முற்றிலும் வேறுபட்ட வகையிலும் இருக்க மாட்டா என்பதை நாம் நன்கு உணர்வது நலம். இதுவரை நம்மால் விளக்கப்பட்ட நான்கு பெரும் பிரிவுகள், பல்வேறு

பிரிவுகளின் இயல்புகளைத் தம்மகத்தே கொண்டனவாகத்தான் காட்சி தருகின்றன. ஒவ்வொரு பிரிவிலும் இருக்கக்கூடிய சில விதிவிலக்குகளைப்பற்றிக் கருத்துப் போராட்டம் செய்வதால் நன்மை எதுவும் விளையமுடியாது. ஏனென்றால், ஒரு பாகுபாடு முற்றிலும் துல்லியமானதாக இருக்கவேண்டுமானால், ஒவ்வொரு வருவாய் ஏற்பாட்டையும் ஒவ்வொரு தனிப் பிரிவாகத்தான் கருதியாகவேண்டும்.

பொதுநிதித் துறையில் நிர்வாக வருவாய்களையும் வாணிப வருவாய்களையும் மிகுதியாகச் சார்ந்திருக்கும் போக்கு, மாநில மட்டத்தில் இருந்துவருகிறது என்பதை இச் சமயத்தில் குறித்துக் காட்டுவது, இன்றியமையாததாகும். ஒரு புதிய வரியால் அவ் வரியைச் செலுத்தும் வகுப்பினருக்கு நன்மை ஏற்படும் என்கிற நிலை இருந்தால்தான் அவ் வரியை நியாயமானதாக ஏற்றுக்கொள்ள முடியும் என்று வாதாடுகிற ஒரு போக்கு வளர்ந்து வருகிறது. பெட்ரோல் வரிகளில்(gasoline taxes)இந்த இயல்பு குறிப்பிடத்தக்க அளவில் காணப்படுகிறது. ஆனால், இச்சமயத்தில், அரசாங்கப் பணிகள், பொதுவான நலனைப் பேணி வளர்க்கும் அடிப்படையில் அமைந்தவை என்பதை நினைவுபடுத்திக்கொள்வது நல்லது. அரசாங்கத்தின் பொதுவான பணி ஒன்றின் விளைவாக ஒரு குறிப்பிட்ட தனியாளுக்குக் கிடைக்கிற நலனை அளந்தறிவது, பெரும்பாலான நிலைமைகளில், இயலாத செயலே ஆகும். அதோடு, அரசாங்கத்தின் மிக முக்கியமான பணிகளிற் பல, பொது நலனின் அளவை (the level of general welfare) உயர்த்துவதற்காகக் குறைந்த வசதியுடைய மக்களுக்கே பெரிதும் நன்மை தரத்தக்கனவாக இருக்கவேண்டும். எனவே, அரசாங்கச் செலவால் விளையும் நன்மைகளின் அடிப்படையைத் தவிர்த்த வேறு ஓர் அடிப்படையிலேயே, அரசாங்க வருவாய்களின் பெரும்பகுதி குடிமக்களிடமிருந்து பெறப்படவேண்டும். அவ்வாறு பெறப் படாவிட்டால், குறிப்பிட்ட ஊழியங்களுக்கான தொகையை நேர்முகமாகத் தரக்கூடிய தனியாட்களுக்கே அந்த ஊழியங்களைத் தருகின்ற ஒரு வாணிப நிறுவனமாக அரசாங்கம் மாறிவிடும்.

1957-ல் பல்வேறு வருவாய்ப் பிரிவுகளிலிருந்து கிடைத்த வரவுத் தொகைகளின் அடிப்படையில் அந்தப் பிரிவுகளின் தராதர முக்கியத்துவத்தை (relative importance) விளக்கும் புள்ளி விவரங்களைக் கீழே உள்ள 21ஆவது அட்டவணையிற் காணலாம். இந்த அட்டவணையில் வாணிப வருவாய்களும் நிர்வாக வருவாய்களும் இணைக்கப்பட்டிருப்பதைப் பார்க்கலாம். தற்போது கிடைக்கிற புள்ளி விவரங்களிலிருந்து, இந்த இருவகை

வருவாய்களின் வரவுகளைத் தனித்தனியே அறிய முடியவில்லை. எல்லாவகை அரசாங்கங்களின் எல்லாவகை வருவாய் மூலங்களிலும் மிகக் கூடுதலான தொகையைத் தரவல்லவையாக இருப்பவை வரிகளே என்பதற்கான சான்று தெளிவாக இருக்கிறது. 1958-ல் கூட்டரசாங்கத்தின் மொத்த வருவாய் வரவுகளில் 94 சதவீதம், வரிகளிலிருந்து கிடைத்தவையே. அதே ஆண்டில், மாநில, தல அரசாங்கங்களின் மொத்த வருவாய் வரவுகளில், வரி வரவுகள் 60 சதவீதமாகவும், கொடைகள் நான்கில் ஒரு பங்குக்கு மேலாகவும், வாணிப வருவாய்களும் நிர்வாக வருவாய்களும் ஏறத்தாழ ஆறில் ஒரு பங்காகவும் இருந்தன. கூட்டரசாங்கத்தின் 'பிற' வருவாய்களில் முதன்மையானவை வாணிப வருவாய்களே. இவ் வாணிப வருவாய்களில் தலையாயவை, கூட்டரசாங்கக் கடன் ஏஜன்சிகளே. மாநில அரசுகள், நகராட்சி மன்றங்கள் ஆகியவற்றின் 'பிற' வருவாய்கள், இந்த அட்டவணையில், பெரும்பாலும் நிர்வாக வருவாய்களையே குறிக்கின்றன.

## அட்டவணை 21

**வரிகள், மானியங்கள், மற்றும் பிற வருவாய்ப் பிரிவுகளிலிருந்து கூட்டரசாங்கம், மாநில அரசாங்கங்கள், தல அரசாங்கங்கள் ஆகியவற்றிற்குக் கிடைக்கும் வருவாய் வரவுகள், 1958***

(மில்லியன் டாலர்களில்)

| | கூட்டரசாங்கம் | மாநில அரசாங்கங்கள் | தல அரசாங்கங்கள் |
|---|---|---|---|
| வரிகள் | 65,921 | 14,919 | 15,421 |
| உதவி மானியங்கள் | — | 4,764 | 8,220 |
| பிற | 3,196 | 3,835 | 4,948 |
| மொத்தம் | 69,117 | 22,830 | 28,052 |

* இப் புள்ளி விவரங்கள், சென்சஸ் பீரோவின் 'Government Finances in the United States', 1958-ன் பக்கம் 14-லிலிருந்தும், 'Monthly Statements of Receipts and Expenditures of the U. S. Government', 1958, ஜூன் 30-லிருந்தும் எடுக்கப்பட்டவை.

### மானியங்களும் நன்கொடைகளும்

அரசாங்கத்திற்குத் தரப்படுகிற நன்கொடைகளைப்பற்றி முன்னர் தரப்பட்டதைவிட விரிவான விளக்கம் தேவையில்லை. ஆனால்,உதவி மானியங்கள், ஐக்கிய அமெரிக்காவின் பொதுநிதிகளில் பெரும் அளவில் காட்சி அளிக்கின்றன. கொள்கைபற்றிய சில சிக்கல்கள் எழுவதால், அவற்றைப்பற்றி மேலும் சிறிதளவு ஆராய்வது இன்றியமையாதது ஆகிறது. நிறைவேறவேண்டிய

நோக்கங்கள் விரிவானவையாக இருப்பதால் உயர்மட்டத்தில் உள்ள அரசாங்கங்கள் கவனிக்கவேண்டும் என்று இருந்தாலும், அந்த நோக்கங்களை நிறைவேற்றும் பணிகள் பரவலான அடிப்படையில் [அதாவது, மையக் குவிப்பு அற்ற முறையில் (on a decentralised basis)] ஆற்றப்பட்டால்தான் அவற்றைப் பயன்மிக்க முறையில் நிர்வாகம் செய்யமுடியும். இந்த நம்பிக்கைதான், 'உயர்ந்த' மட்டத்தில் உள்ள அரசாங்கங்களிடமிருந்து 'தாழ்ந்த' மட்டங்களில் உள்ள அரசாங்கங்களுக்கு மானியங்கள் தரப்படுவதன் அடிப்படை ஆகும். பரவலாக உள்ள (மையக் குவிப்பு அற்ற) நிர்வாக அமைப்புகளால் பணிகள் ஆற்றப்படும்போது அப் பணிகள் யாவும் ஒரே வகையான தரம் உடையனவாக இருக்கச்செய்வது எப்படி என்பதுதான், இத் துறையில் தோன்றுகிற சிக்கல்.

மானியங்களைப் பெறுபவர்கள் பலரிடையே அந்த மானியங்களைப் பொருத்தமான முறையில் ஒதுக்கீடு செய்யும் சிக்கலின் தன்மையைத் தெளிவாகக் காட்டவல்ல கற்பிதமான எடுத்துக்காட்டு (hypothetical example) ஒன்றை முதலில் அமைத்துக் கொள்வோம். பரப்பளவு, பொருளாதார நிலைமை, பொதுப் பள்ளிக்கூடங்களுக்குச் செல்லும் மாணவர்களின் எண்ணிக்கை ஆகியவற்றில் ஏறத்தாழ ஒத்த நிலையை உடைய இரண்டு நகரங்கள் ஒரு மாநிலத்தில் இருப்பதாக வைத்துக்கொள்வோம். 'அ' என்னும் நகரமானது, சொத்து வரி செலுத்தும் அதன் குடிமக்கள்மீது குறிப்பிடத்தக்க சுமையை ஏற்றுவதன்மூலம், தன் பள்ளிக்கூடங்களைச் சிறந்த முறையில் நடத்தி வருகிறது. ஆனால், 'ஆ' என்னும் நகரமானது, ஒவ்வொரு மாணவனுக்கும் ஆகும் தலா செலவைக் குறைந்த அளவில் உடையதாகவும், ஆகவே சொத்து வரிகளையும் குறைந்த அளவில் உடையதாகவும் இருக்கிறது. அப்படி இருப்பதால் அதன் பள்ளிக்கூடங்கள் சீரற்ற நிலையில் இருக்கின்றன. மாநில அரசாங்கம், எல்லா இடங்களிலும் ஒரே வகையான உயர்ந்த கல்வித் தரத்தை நிலைநாட்டும் நோக்கம் உடையதாக இருப்பதால், அது அநேகமாகக் குறைந்த கல்வித் தரத்தை உடைய 'ஆ' நகரத்தின்மீதே தன் கவனத்தைச் செலுத்தவேண்டியிருக்கும். இத் தொடர்பில் எளிதில் கையாளப்படக்கூடிய முறை என்னவென்றால், 'ஆ'வின் கல்விச் செலவு 'அ'வின் கல்விச் செலவின் அளவுக்கு உயரும் வரையில், மாநில அரசாங்கம், 'ஆ'வுக்குக் மானியங்கள் அளிப்பதே. (இந்த ஏற்பாட்டில், கல்வியின் தரம் ஒவ்வொரு மாணவனுக்கும் செய்யப்படும் சராசரிச் செலவையே பொறுத்திருக்கிறது என்று பாவிக்கப்படுகிறது. ஆனால், இந்தப் பாவனை ஏற்கத்தக்கதா என்பது ஐயத்திற்கு உரியது.) மானியங்களைப் பங்கிடுவதற்கான

இத்தகைய எளிய ஏற்பாட்டால் நம் எடுத்துக்காட்டில் உள்ள இரண்டு நகரங்களின் கல்வித் தரங்களை ஒரே வகையினவாக ஆக்க முடியும் என்றபோதிலும், இந்த முறையை 'அ' நகரக் குடிமக்கள் விரும்பமாட்டார்கள். அப்படி விரும்பாமல் இருப்பதுதான் முறையும்கூட. ஏனென்ருல், தன் பள்ளிக்கூடங்களைப்பற்றிப் போதிய கவனம் செலுத்தாதிருந்த நகரத்திற்குப் பரிசு அளிப்பதாகவும், தன் கல்விக் கடமைகளைப் பொறுப்புடன் நிறைவேற்றிய நகரத்திற்குத் தண்டனை தருவதாகவுமே இந்த ஏற்பாடு அமைந்திருக்கிறது. இந்த ஏற்பாடு இப்படி இருக்கிறதே என்பதற்காக, இதனை விட்டுவிட்டு, 'ஆ'வைவிட 'அ' நகரத்திற்கே கூடுதலாக நிதிகளைத் தரத்தக்க ஓர் ஏற்பாட்டைக் கையாண்டால், இரண்டு நகரங்களின் கல்வித்தரங்களில் முன்னர் இருந்ததைவிட மிகுந்த வேறுபாடு ஏற்பட்டுவிடும். இந்தச் சிக்கலைத் தீர்ப்பதற்கான மிகப் பொருத்தமான ஏற்பாட்டை உருவாக்க வேண்டுமானுல், ஒரு குறிப்பிட்ட தரம் உள்ள முயற்சியைச் செய்துமுடித்த நகரத்திற்கு மட்டும்தான் மானியத்தைப் பெறுகிற தகுதி உண்டு என்கிற விதியை ஏற்படுத்தவேண்டும். 'ஒரு குறிப்பிட்ட தரம் உள்ள முயற்சி' என்பதற்கு, நகரத்தின் வருமானச் செலுத்தல்களில் ஒரு குறிப்பிட்ட சதவீதத்தைக் கல்விக்காகச் செலவிடுவது என்பது பொருளாக இருக்கவேண்டும். [நகரத்தில் உள்ள சொத்துகளின் கணக்கிடப்பட்ட மதிப்பை (assessed valuation) செலுத்தல்களுக்கு மாருன ஒரு பதிலியாக (substitute)—ஆனுல் மட்டமான பதிலியாகப் பயன்படுத்துவதாக இருந்தால், மாநிலம் முழுவதிலும் அந்தக் கணக்கீடு (assessment) ஒத்த நிலையினதாக இருக்க வேண்டும்.] இத்தகைய நிலையில், ஒரு தல அரசாங்கமானது மாநில அரசின் மானியத்தைப் பெறத் தகுதியுடையதாக ஆக வேண்டுமானுல், முதலில் அது தன்னுடைய கல்விச் செலவை, குறிப்பிட்ட தரம் உள்ள முயற்சியின் அளவுக்கு உயர்த்தியாக வேண்டும். இந்த ஏற்பாடு, தன்னுடைய கல்விப் பொறுப்புகளை நிறைவேற்றுவதில் அக்கறையின்றி இருக்கிற நகரங்களைத் தண்டிக்கும் தன்மையதாக இருக்கிறது. இத்தகைய 'தண்டனை'க்குப் பிறகும்கூட இந்த நகரங்கள் கூடுதலான முயற்சியைச் செய்யவில்லையென்ருல், நகராட்சி மன்றங்களால் தரப்படவேண்டிய குறைந்த அளவு கல்வித் தரத்தைச் சட்டத்தின்மூலம் நிலை நாட்டலாம்.

தங்களுடைய கல்விச் செலவை உயர்த்தவேண்டிய அளவுக்கு உயர்த்திவிட்டதன் விளைவாக மானியங்கள் பெறத் தகுதி உள்ளனவாக ஆகிவிட்ட தல அரசாங்கங்களின் இடையே, பொருத்தமான முறையில் மானியங்களைப் பங்கீடுவது எப்படி?

நிறைவேற்றப்படுகிற பணியின் தரம் எல்லா வட்டாரங்களிலும் ஒரே வகையினதாக இருக்கும்படிச் செய்வதே மானியங்களின் நோக்கமாக இருப்பதால், மானியங்களின் பெரும் பகுதி, குறைவான பொருளாதார ஆற்றலை உடைய வட்டாரங்களுக்கே அளிக்கப்படும். பணியை உயர்ந்த தரத்தில் ஆற்றுவதற்கான விருப்பத்தைப் பெற்றுள்ள—ஆனால் அதற்குரிய ஆற்றலைப் பெற்றிராத தல அரசாங்கங்களுக்கு மானியங்கள் தருவதுதான் பொதுவாக மானியங்களை அளிப்பதன் குறிக்கோளாக இருக்க வேண்டுமே தவிர, மேற்படி ஆற்றலைப் பெற்றுள்ள—ஆனால் விருப்பத்தைப் பெற்றிராத தல அரசாங்கங்களுக்கு மானியங்கள் தரப்படல் ஆகாது. மானியங்களின் பங்கீட்டுக்கான இந்தச் சிறந்த கொள்கையை, நடைமுறையில், சட்டமன்றங்களின் அமைப்பு முறையில் செறிந்துள்ள சில அரசியல் நிலைமைகள் காரணமாகச் சிறிதளவு மாற்றி அமைக்கவேண்டியிருக்கும். மாநிலச் சட்ட மன்றங்களில் சிறிய நகரங்களின் பிரதிநிதிகள் அளவுக்குமீறிய எண்ணிக்கையில் இருப்பதும், அப்படி இருப்பதால் தல அரசாங்கங்களுக்கான மானியங்களின் பங்கீட்டை, அவர்கள், தங்களுக்கு உகந்த முறையில் பாதிக்கக்கூடிய நிலையில் இருப்பதும், ஐக்கிய அமெரிக்காவில் உள்ள ஒரு சட்டமன்ற நிலைமையாகும்.

நாம் மேலே தந்துள்ள எடுத்துக்காட்டு, மாநில அரசாங்கம் தல அரசாங்கத்திற்குத் தரும் மானியங்களைப்பற்றியதாக இருந்தாலும், கூட்டரசாங்கம் மாநில அரசாங்கத்திற்குத் தரும் மானியங்களிலும் அதே வகையான சிக்கல்களும் அதே வகையான கோட்பாடுகளும் அடங்கியுள்ளன என்பதை எவரும் எளிதில் தெரிந்துகொள்ளலாம்[5].

### நிர்வாக வருவாய்கள்

விரிவான பணி ஒன்றை அரசாங்கம் ஆற்றுகிறபோது, அதிலிருந்து தற்செயலாகக் கிளைத்து எழுகிற ஒரு சிறப்பு ஊழியம் (a special service) நிறைவேற்றப்படும்போது விதிக்கப்படுகிற தொகையே கட்டணம் (fee) என்று எச். சி. ஆடம்ஸ் (H. C. Adams)[6] என்பார் தந்துள்ள வர்ணனை பயன்மிகுந்ததாக உள்ளது. நிர்வாக வருவாய்கள் என்னும் தலைப்பின்கீழ் நம்மால் சேர்க்கப்பட்டுள்ள எல்லா வருவாய்களுக்கும், பொதுவான நிலையில், இந்த வர்ணனை பொருந்தும். ஆட்களையும் சொத்துகளையும் பாதுகாப்பது, வாணிபத்தை ஒழுங்குபடுத்துவது, சமுதாயத்தின் வசதிக்கும் நன்மைக்கும் தேவையான சில, இன்றியமையாத ஏற்பாடுகளைச் செய்வது முதலிய சில பொதுவான பணிகளைச்

சமுதாயத்திற்காக அரசாங்கம் செய்துவருகிறது. சில சமயங்களில், பொதுவான ஒழுங்குபாட்டுப் பணியை நிறைவேற்றுவதற்காக, சில நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கான அனுமதி ஆணைகளை (permits) அரசாங்கம் கொடுக்கவேண்டியிருக்கும். வேறு சில சமயங்களில், ஒழுங்குபடுத்தும் விதிகளை நிர்வாகம் செய்யும்போது, அந்த விதிகளை மீறுபவர்களைத் தண்டிக்கவேண்டியிருக்கிறது. சிற்சில நேரங்களில், சமுதாயத்திற்கு அளிக்கப்படுகிற பொதுவான நன்மைக்கு உட்பட்டு, தனியாட்களுக்குக் குறிப்பிட்ட நன்மை தரப்படுகிறது. தனியாட்களோடு தொடர்பு ஏற்படும் இத்தகைய நேரங்களில் அந்த ஆட்களிடமிருந்து கட்டணம் வசூலிக்கப்படுவது, நன்மை (benefit), உற்பத்திச் செலவு (cost), அல்லது தண்டனை (penalty) ஆகியவற்றின் அடிப்படையில் நியாயமானதாக இருக்கிறது என்று நிறுவமுடியும். ஆனால், நடைமுறையில், கட்டணத்தின் தொகை, துல்லியமான முறையில் இந்த நியாயத்தின் அளவுக்கு ஏற்றதாக இருப்பதில்லை.

சில எடுத்துக்காட்டுகள்மூலம் இந்த உண்மையைத் தெளிவு படுத்தமுடியும். வெளிநாடுகளுடன் உறவு கொள்வது அரசாங்கத்தின் ஒரு பொதுவான பணியாகும். இந்தப் பணியை நிறைவேற்றுகையில், பயண அனுமதிச் சீட்டுகளை (passport) வழங்குவது, இன்றியமையாத ஒரு செயலாகும். பயண அனுமதிச் சீட்டைப் பெறுபவர், அப்படிப் பெறுவதற்காக ஒரு கட்டணத்தைச் செலுத்துகிறார். செலுத்தப்படுகிற கட்டணத் தொகையானது, பயணம் செய்பவர் பெறக்கூடிய நன்மையுடனோ, அல்லது பயண அனுமதிச்சீட்டை வழங்குவதற்கான செலவுடனோ எத்தகைய தொடர்பும் கொண்டதாக இல்லை. மருத்துவராகப் பணியாற்று பவர்கள் சிலவகைத் தகுதிகளைப் பெற்றிருக்கவேண்டும் என்று, சமுதாயத்தின் பாதுகாப்பை முன்னிட்டு, வரையறுக்கப் பட்டிருக்கிறது. தகுதியுள்ள மருத்துவருக்கு, மருத்துவப் பணி புரிவதற்கான ஓர் அனுமதி ஆணை (permit) தரப்படுகிறது. ஆனால் அந்த அனுமதிக்காக அவர் செலுத்துகிற கட்டணத்தொகை, அந்த அனுமதியால் அவர் பெறக்கூடிய நன்மையின்அளவை வைத்தோ அல்லது அந்த அனுமதியை அளிப்பதற்காக அரசாங்கத்திற்கு ஆகிற செலவைவைத்தோ முடிவுசெய்யப்பட்டது அன்று. ஒரு நகராட்சி மன்றத்தின் குடிமக்களுடைய உடல்நலத்தையும் வசதியையும் முன்னிட்டு ஒரு வடிகால் ஏற்பாடு இருக்கவேண்டியது இன்றியமையாததுதான். ஒரு புதிய வீட்டின் உடைமையாளர், வடிகாலை அந்த வீட்டோடு இணைப்பதற்காக, ஒரு கட்டணத்தைச் செலுத்தவேண்டியிருக்கிறது. அந்தக் கட்டணத் தொகையானது, ஓர் அளவுக்குத்தான், அந்த இணைப்பின் நன்மையோடு அல்லது

செலவோடு தொடர்புகொண்டிருக்கிறது. இறுதியாக, ஒருவர் தன்னுடைய மோட்டார்காரை, வீதியில் உரிய நேரத்திற்குப் பிறகும் நிறுத்தி வைத்ததற்காக அவர்மீது அபராதம் விதிக்கப் படலாம். போக்குவரத்துக் கட்டுப்பாட்டால் அவருக்கு ஏற்படக் கூடிய நன்மையும் அல்லது அக் கட்டுப்பாட்டின் சராசரி தலா செலவும், அபராதத் தொகையும் ஒரே அளவுடையன என்று கூறமுடியாது.

அரசாங்கம் தன் பொதுவான பணிகளை நிறைவேற்றிக் கொண்டிருக்கையில் குறிப்பிட்ட தனியாட்களுடன் தொடர்பு ஏற்பட்டால், அத்தகைய தொடர்புள்ள சமயங்களில் நிர்வாக வருவாய்கள் வசூலிக்கப்படுகின்றன என்னும் உண்மையை, இந்த எடுத்துக்காட்டுகள் யாவும் தெளிவாக விளக்கிக்காட்டு கின்றன. மேற்படி தொடர்புகள் ஏற்படும்போது சிறப்பான கட்டணங்கள் விதிக்கப்படுவதற்கு அடிப்படைக் காரணம் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. ஆனல் அத் தொடர்புகள், வருவாயை வசூலிப்பதற்கு உரிய வாய்ப்புகளைத் தருகின்றன. இந்த வாய்ப்புகளைப் பயன்படுத்திக்கொண்டு அரசாங்கம் தன் வருவாய்களைப் பெருக்கிக்கொள்கிறது. அனுமதி ஆணைகளுக்கான கட்டணங்கள், அவற்றைப் பெறுகிற தனியாட்களின் செலுத்தும் திறனேடு (ability to pay) எத்தகைய தொடர்பும் கொண்டவை அல்ல. அவை, அத்தகைய அனுமதிகளைப் பெற விழைகிற அனைவர்மீதும் ஒரே அளவில் விதிக்கப்படுகிற கட்டணங்களாகும். அதோடு, பல்வேறு நடவடிக்கைகளுக்கான அனுமதி ஆணைகள் ஒன்றுடன் ஒன்று உறவு பூண்டனவாகவும் இல்லை. ஒரு தனி நிர்வாகக்குழுவுக்குத் தேவையான வருவாயைப் பெறவேண்டும் என்னும் அடிப்படையிலேயே இத்தகைய கட்டணங்களின் தொகைகள் முடிவுசெய்யப்படுகின்றன என்று பொதுவாகக் கூறலாம். இத்தகைய நிலைமைகளில், அனுமதியைப் பெறுபவர் களிடமிருந்து அளவுக்குமீறிய எதிர்ப்பு ஏற்படாத வகையிலும், குறிப்பிட்ட தொழிலில் அல்லது நடவடிக்கையில் வெளி ஆட்கள் நுழைவதை அளவுக்கு மீறித் தடுக்காத வகையிலும், அந்தத் தொழிலில் அல்லது நடவடிக்கையில் ஈடுபட்டவர்கள் தாங்கக் கூடிய அளவை அடிப்படையாகக்கொண்டே அனுமதிக்கான கட்டணங்களின் தொகைகள் முடிவு செய்யப்படுகின்றன. வேறு சில நிலைமைகளில், குறிப்பிட்ட தொழிலுக்கு வெளியே உள்ளவர்களை அதில் ஈடுபடாதபடி தடுப்பதே, கட்டணத் தொகையை முடிவு செய்வதற்கான அடிப்படையாக விளங்குகிறது. ஆலியோமார்கரைன் (Oleomargarine) என்னும் ஒரு வகைப் போலி வெண்ணெயை விற்பதற்கான அனுமதிக் கட்டணங்கள் சில மாநிலங்களில் மிக உயர்வாக இருப்பதற்கும், வேறு சில

மாநிலங்களில் மோட்டார் பார வண்டிகளுக்கான (motor trucks) பதிவுக் கட்டணங்கள் மிகக் கூடுதலாக இருப்பதற்கும் இந்த நோக்கமே காரணமாகும். குறிப்பிட்ட தொழிலில் புதிய ஆட்கள் நுழைவதைத் தடுக்கக்கூடிய அளவுக்கு அந்தத் தொழிலுக்கான அனுமதிக் கட்டணங்கள் உயர்வாக இருக்கவேண்டும் என்று, அந்தத் தொழிலில் உள்ளவர்கள் அரசாங்கத்தை வற்புறுத்துகிற நிலைமை, சில சமயங்களில் இருக்கக்கூடும். ஆனுல் வெளியாட்கள் நுழைவதை இதைவிடத் திறமையான முறையில் தடுக்கக்கூடிய, இதனினும் சிறந்த, நேர்முகமான முறைகள் பல இருக்கின்றன. மற்றும் சில நிலைமைகளில், அரசாங்கத்திற்கு உச்ச அளவு நிகர வருமானம் கிடைப்பதற்காக, அனுமதி ஆணைகளுக்கு அளவுக்கு மீறிய கட்டணங்கள் விதிக்கப்படுகின்றன. பல மாநிலங்களில் உள்ள மோட்டார் ஊர்திப் பதிவுக் கட்டணங்கள் இத்தகைய நோக்கம் உடையனவே.

பெரும்பாலான நிர்வாக வருவாய்கள், குறிப்பிட்ட நோக்கங்களை நிறைவேற்றுவதற்கான செலவுகளுக்காக ஒதுக்கி வைக்கப்படுகின்றன. இந்தக் கட்டணங்களை வசூலிக்கிற அரசாங்கத்தின் நிர்வாகக் கிளையே (administrative branch), பெரும்பாலும், இந்த வசூலின் வரவுகளைப் பெற்றுக்கொள்கிற முதல் உரிமை (first claim) உடையதாக இருக்கின்றது. சில இடங்களில் மோட்டார் ஊர்தி இயக்குபவர் லைசென்சை வழங்குவதால் கிடைக்கிற வசூலின் ஒரு பகுதி, அந்த லைசென்சை வழங்குகிற மாவட்ட அதிகாரிக்கே நேர்முகமாகத் தரப்படுகிறது. ஆகவே, அந்த அதிகாரி, 'தரகு' (commission) அடிப்படையில் பணியாற்றுகிறுர் என்று சொல்லிவிடலாம். பல சமயங்களில், ஒரு நிர்வாகக் குழுவால் (administrative commission) வழங்கப்படுகிற அனுமதி ஆணைகள், லைசென்சுகள் ஆகியவற்றின் கட்டண வசூல் முழுவதும் அந்தக் குழுவின் உபயோகத்திற்கே ஒதுக்கப்பட்டு விடுகின்றன. நெடுஞ்சாலை நிதிக்காக ஒதுக்கப்பட்டுள்ள மோட்டார் ஊர்திக் கட்டணங்கள் (பதிவுக் கட்டணங்கள், ஓட்டுபவர்களின் லைசென்சுகள், வணிகரின் அனுமதி ஆணைகள் முதலியன), குறிப்பிட்ட வாணிபங்களில் அல்லது தொழில்களில் ஈடுபடுவதற்கான அனுமதி ஆணைகளை வழங்குகிற சிறப்புக் கழகங்கள் (Boards) மற்றும் குழுக்களின் (Commissions) வசூல்கள் ஆகியவற்றைப் பொறுத்த அளவில் இந்த நிலைமையே பெரும்பாலும் காணப்படுகிறது.

இவ்வாறு நிதிகள் ஒதுக்கப்படுவதன் விளைவாக, குறிப்பிட்ட பணிகளை நிறைவேற்றுவதற்காக உள்ள சிறிய அரசாங்க அமைப்புகளிடம்; அவற்றின் தேவையைவிட மிகக் கூடுதலாக உள்ள நிதிகள்

குவிந்துவிடலாம். அப்படிக் குவிவதால், அந்த அமைப்புகள் தங்களிடம் உள்ள இந் நிதிகளைச் செலவிடுவதற்கான வாய்ப்புகளைத் தேடிக் கண்டறியவேண்டிய நெருக்கடிக்கு ஆளாகக்கூடும். ஒரு நிதி ஆண்டை உபரியுடன் முடிப்பதால் உண்மையிலேயே தொல்லைகள் தோன்றக்கூடும். இத் தொல்லைகள், உபரித் தொகையைப் பொதுவான நிதியில் சேர்த்துவிடவேண்டும் என்னும் வற்புறுத்தலின் வடிவத்திலோ, அல்லது ஆண்டுதோறும் செலுத்தப்படும் கட்டணத்தொகை குறைக்கப்படவேண்டும் என்னும் வடிவத்திலோ, ஏற்படக்கூடும். முதல் வகைத் தொல்லைக்கு இணங்கினால், கட்டணத்தொகையானது 'வேறு திசையில் திருப்பிவிடப்படுகிறது' என்று, கட்டணம் செலுத்துவோரால் கண்டனக் கணைகள் தொடுக்கப்படக்கூடும். ஒரு வருவாயை வசூல் செய்கிற குறிப்பிட்ட அரசாங்க அமைப்புக்கு அந்த வசூல் முழுவதையும் கொடுத்துவிடுவதன் விளைவு, நடைமுறையில், வரவு செலவுத் திட்டத்தின் கட்டுபாட்டிலிருந்து அந்த அமைப்பை விலக்கிவிடுவதாகவே அமைந்துவிடும்.

**கட்டணங்கள், லைசென்சுகள், மற்றும் அனுமதி ஆணைகள்:** இந்தச் சொற்களுக்கு இடையே எத்தகைய வேறுபாட்டையும் காண நாம் முயற்சி செய்யப்போவதில்லை. ஏனென்றால், உண்மையில் அவற்றிற்கிடையே எத்தகைய வேறுபாடும் இல்லை. 'வழக்கைப் பதிவு செய்யும் கட்டணங்கள்' (filing fees), 'இயக்குபவர்களின் லைசென்சுகள் (operators' licenses), 'ஓலியோமார்கரைன் என்னும் பொருளை விற்பதற்கான அனுமதி ஆணைகள்' (permits to sell oleomargarine) என்றெல்லாம் நாம் பேசுகிறோம். ஆனால், அவை அனைத்தும், அடிப்படையில் ஒரே வகையான அரசாங்க வருவாய்களையே தருகின்றன. இவ் வெவ்வேறு சொற்கள் தொடக்ககாலத்தில், தற்செயலாகப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். அந்தப் பழக்கமே தொடர்ந்து இருந்துவருகிறது என்று கூறலாம். அவை அனைத்துமே ஏதோ ஒன்றைச் செய்வதற்கு, அல்லது ஏதோ ஒன்றாக இருப்பதற்கு அரசாங்கம் அளிக்கிற அனுமதியின் விளைவாகப் பிறப்பவையே. இவ்வாறு அளிக்கப்படுகிற அனுமதியில் அடங்கியுள்ள கட்டுப்பாடு இல்லாவிட்டால், ஒரு பொதுவான அரசாங்கப் பணியைப் போதுமான அளவில் நிறைவேற்றமுடியாது. ஆகவேதான் இத்தகைய அனுமதியை அளிக்கிற ஏற்பாடு இருந்தாகவேண்டிய தேவையிருக்கிறது. ஆனால், அனுமதி ஆணைகளைத் தருகிற ஓர் ஏற்பாடு இருந்தாகவேண்டும் என்பதால், அனுமதி ஆணையைப் பெறுபவர் அந்த அனுமதி ஆணைக்காகப் பணம் செலுத்தவேண்டும் என்கிற இன்றியமையாமை ஏற்பட்டுவிடவில்லை. ஓர் அனுமதி ஆணையைப் பெறுவதற்கு முன்பு ஒரு கட்டணத்தைச் செலுத்த

வேண்டும் என்கிற ஏற்பாட்டால், அனுமதி ஆணைமூலம் நடத்தப் படுகிற நிர்வாகத்தில் எத்தகைய முன்னேற்றமும் ஏற்பட்டுவிட வில்லை. கட்டணங்களின்மூலம் அரசாங்கத்திற்கு நிதி திரட்டுகிற ஏற்பாடு, அது இதுவரை வளர்ந்துள்ள முறையை வைத்துப் பார்த்தால், நிதிகளை வசூலிப்பதற்கான வாய்ப்புகள் கிடைக்கின்ற நேரத்தில் அவற்றை வசூலித்துவிடவேண்டும் என்கிற எண்ணத்தின் அடிப்படையில் பிறந்ததாகவே காணப்படுகிறது. நடந்து செல்பவர்கள் தெருவில் உள்ள நடைபாதைகளைப் பயன் படுத்துவதற்கும், பொதுப் பூங்காக்களைப் பயன்படுத்தும் ஆட்கள், அவற்றை அப்படிப் பயன்படுத்துவதற்கும் எத்தகைய அனுமதி ஆணைகளையும் பெற்றிருக்கவேண்டும் என்று வற்புறுத்தப்படாத போது, மோட்டார் கார்களின் உரிமையாளர்கள்மட்டும், நெடுஞ் சாலைகளைப் பயன்படுத்துவதற்கு முன்னால், ஒரு லைசென்ஸ் கட்டணத்தை எதற்காகச் செலுத்தவேண்டும்? தனியார் பள்ளிக் கூடங்களில் பணியாற்றுகிற ஆசிரியர்கள் தங்கள் தொழிலை நடத்துவதற்கு அனுமதி ஆணைகளைப் பெறவேண்டிய தேவை இல்லாதபோது, முடிதிருத்துவோரும் மருத்துவர்களும் மட்டும் எதற்காக அனுமதி ஆணைகளைப் பெற்ற பிறகே பணியாற்றக்கூடிய நிலை இருக்கவேண்டும்?

சில நிலைமைகளில், கட்டண ஏற்பாடானது, அறிவுக்கேற்ற காரணம் எதுவும் இல்லாத அளவுக்குக் கையாளப்பட்டிருக்கிறது. எடுத்துக்காட்டாக, ஒரு மாநிலத்தில், மோட்டார் ஊர்திகளை இயக்குபவர்கள் இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை, காரோட்டும் லைசென்சை வாங்கவேண்டும் என்று விதி செய்யப்பட்டிருக்கிறது. கார் ஓட்டுவதற்கு அவர்களுக்குத் தொடக்கத்தில் தரப்பட்ட அனுமதி ஆணைகளுக்குமுன்பு அவர்களின் கார் ஓட்டும் திறமை பரிசோதிக்கப்படவில்லை. இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை நாற்பது சதங்களைச் (cents) செலுத்துவதன் மூலம் ஒருவர் தன் காரை ஓட்டுவதற்கான அனுமதியைப் பெற்றுவிடலாம். இந்தக் கட்டண வசூலில் பெரும் பகுதி, இந்த லைசென்சை வழங்குகிற மாவட்ட அதிகாரியாலேயே பயன்படுத்தப்படுகிறது. லைசென்ஸ் இல்லாமல் காரை ஓட்டுபவர், அபராதம் விதிக்கப்படுகிற நிலைக்கு ஆளாகிறார். இத்தகைய அனுமதி ஆணை ஏற்பட்டால், பாதுகாப்புப் பணியின் நிர்வாகம் எவ்வாறு முன்னேற்றம் அடைய முடியும் என்பதுதான் புரியவில்லை. நிதிகளை வசூலிப்பதற்கும், லைசென்ஸ் ஏற்பாட்டின் நிர்வாகிகளுக்கு ஊதியம் அளிப்பதற்குமே லைசென்ஸ் ஏற்பாடு தேவைப்படுகிறது. ஆனால், லைசென்ஸ் ஏற்பாடு என்பது, லைசென்சை வழங்கும் பணியை மட்டுமே உடையதாகும். லைசென்சை வைத்திருக்கத் தவறிய குற்றத்திற்காக ஒரு

காரோட்டிக்குத் தண்டனை விதிக்கப்படுகிறது. ஆனால், அந்த லைசென்சின் ஒரே பணி, லைசென்சை வழங்குபவரிடம் கட்டணத்தைத் தருவதற்கான வாய்ப்பை உருவாக்குவதுதான். இந்த நிலைமையைப் பார்க்கும்போது ஒரு கதைதான் நினைவுக்கு வருகிறது. தன் பண்ணையில் தேவையில்லாத ஒரு தொட்டியை வைத்திருந்த குத்தகைக்காரனைப் பார்த்து நிலக்கிழார், ‘அந்தத் தொட்டியை எதற்காக வைத்திருக்கிறாய்’ என்று கேட்டபோது ‘அது ஒழுகாத தொட்டி; ஆகவே அதை வைத்திருக்கிறேன்’ என்று அவன் விடையளித்தானாம். [ஒழுகாத தொட்டி என்பதற்காகத் தேவையில்லாத தொட்டியை வைத்திருக்கவேண்டுமா என்ன? தொட்டியை வைத்திருக்கவேண்டும் என்று முதலில் முடிவு செய்துவிட்டு, அதன் பிறகு, அதை வைத்திருப்பதற்கு ஏதாவது ஒரு காரணத்தைக் கண்டுபிடித்துக் கூறுவதாக அல்லவா இது இருக்கிறது?—(மொழிபெயர்ப்பாளர்)]

அரசாங்கம் ஒரு கட்டணத்தை விதிப்பது நியாயமான செயலாக இருக்கவேண்டுமானால், அந்தக் கட்டணத்தைச் செலுத்துவதால், செலுத்துபவருக்கு ஒரு குறிப்பிட்ட நன்மை கிடைத்தாகவேண்டும் என்னும் போக்கு கட்டண முறையில் அமைந்திருப்பது, அந்த முறையின் மிகப் பெரிய ஆபத்தாக விளங்குகிறது. இந்தப் போக்கின் விளைவு என்னவென்றால், ஒரு குறிப்பிட்ட நன்மை ஏற்படும்போதுதான் ஒரு கட்டணத்தை விதிக்கமுடியும். ஆனால்; இத்தகைய போக்கு, அரசாங்கத்திற்குக் குடிமக்கள் செலுத்தும் தொகைகள் (வரிகள், கட்டணங்கள் முதலியன) செலுத்தும் திறனின் (ability to pay) அடிப்படையிலேயே அமைந்திருக்கவேண்டும் என்னும் கோட்பாட்டுக்கு முரண்பட்டதாக இருக்கிறது. அதோடு, இந்தப் போக்கு, அரசாங்கமானது பொதுநலனைப் பெருக்குவதற்கான ஓர் அமைப்பு என்னும் கருத்திலிருந்து மாறுபட்டதாகவும், குறிப்பிட்ட தனியாட்களுக்கும் குழுவினருக்கும் நன்மைகளை விலைக்கு விற்கும் ஓர் நிறுவனமாக அரசாங்கத்தை மாற்றிவிடும் தன்மை உடையதாகவும் இருக்கிறது.

**அபராதங்களும், பறிமுதல்களும்:** அபராதங்கள் என்பன, சட்டங்களை மீறியதற்காக விதிக்கப்படும் பணமுறைத் தண்டனைகளாகும். அரசாங்கத்தின் பாதுகாப்புப் பணிகளை அல்லது கட்டுப்பாட்டுப் பணிகளை நிர்வாகம் செய்வதற்கான செலவுக்கும் அபராதத் தொகைகளுக்கும் எத்தகைய உண்மைத் தொடர்பும் இல்லை என்பது, வெளிப்படையாகத் தெரிகிற ஓர் உண்மை. ஆனால், அந்தத் தொகைகள், சட்டங்கள் எந்த அளவுக்கு மீறப்பட்டிருக்

கின்றன என்பதோடு ஏதோ ஒரு வகையில் தொடர்பு உடையதாக இருக்கும். அத்தகைய தொடர்பைப் பொறுத்தவரையில்கூட, அபராதங்கள், ஒரு நிலையான அளவையே (fixed amount) உடையனவாக இருக்கும்போதும், சட்டத்தை மீறும் அனைவர் மீதும் ஒருபடித்தாக விதிக்கப்படும்போதும், பல்வேறு வருமானங்களை உடைய பல்வேறு ஆட்களை அவை பல்வேறு அளவுகளில் தாக்குகின்றன. ஜாமீன் தொகை அல்லது பத்திரத் தொகையின் பறிமுதல்கள் (forfeitures of bail or bond), நீதி மன்றங்களில் தோன்றத்தவறியது, குறிப்பிட்டவாறு ஒப்பந்தங்களை நிறைவேற்றத் தவறியது, அல்லது மதிப்புமிக்க சொத்துக்களைப் பாதுகாக்கத் தவறியது ஆகிய குற்றங்களுக்காக விதிக்கப்படும் தண்டனைகளாக இருப்பதால், அவையும் அபராதங்கள் போன்றவையே. அபராதங்கள், பறிமுதல்கள் ஆகியவற்றின் மூலமாகக் கிடைக்கும் வருவாய்த் தொகைகளின் அளவை வைத்துப்பார்க்கும்போது, அவை முக்கியமானவை அல்ல என்பது தெள்ளிதிற் புலனாகும். அவற்றால் கிடைக்கக்கூடிய தொகையை முன்னதாகக் கண்டறிவது பெரும்பாலும் இயலாத செயல். வருவாய்க் கோணத்திலிருந்து பார்த்தால், அவை, பெரும் அளவுடைய அரசாங்கப் பணிகள் நிறைவேற்றப்படும்போது தற்செயலாக ஏற்படுகிற துணைப் பொருள்களாகவே காட்சியளிக்கின்றன.

**அரசினரைச் சேர்தல் (Escheats):** சட்டப்படியான வாரிசுகள் இல்லாமல் இறந்துவிடுகிற ஆட்களின் சொத்தின் மீது அரசாங்கத்திற்கு உள்ள உரிமையையே, இந்த வருவாய்த்துறை, சிறப்பாகக் குறிக்கிறது. இறந்துவிட்ட ஆட்களின் சொத்துகள் அவர்களுடைய உயில்களில் குறிப்பிடப்பட்டுள்ளபடி வாரிசுதாரர்களிடமும், உயில்களை எழுதாமல் அவர்கள் இறந்துவிட்ட சமயங்களில், பொதுச் சட்டத்தின்படி (common law) அல்லது சட்ட மன்றச் சட்டத்தின்படி (statute law) சட்டவழிப்பட்ட வாரிசுகளாக அறிவிக்கப்பட்டவர்களிடமும் பங்கிடப்படும் என்பதற்கான உறுதியை அளிப்பது அரசாங்கத்தின் கடமையாகும். அத்தகைய வாரிசுதாரர்கள் யாரும் இல்லாத சமயங்களில், சொத்தானது, அரசாங்கத்தைச் சேரும். யாராலும் உரிமை கோரப்படாத பாங்கு வைப்புகள், கலைக்கப்பட்டுவிட்ட கல்விக் கார்ப்பரேஷன்களின் சொத்துகள் ஆகியவற்றைப் பெறுவதற்கான அரசாங்க உரிமையும் இந்த வருவாய்த் துறையில் அடங்கும். வருவாய்க்கான ஒரு மூலம் என்னும் வகையில், இந்தத் துறை, மிகுந்த முக்கியத்துவம் உடையது அன்று. இந்தத் துறையின் தொடர்புடையனவாக நிதிக் கட்டுப்பாட்டுச் சிக்கல்கள் மிகுதியாக எழுவதும் இல்லை.

தனித் தீர்வைகள் (Special Assessments)[7]

வீதிகளையும் வடிகால்களையும் அமைப்பது முதலிய சில பொது மேம்பாட்டு ஏற்பாடுகளால், சமுதாயத்திற்குப் பொதுவாகக் கிடைக்கும் நன்மைகளோடு (general benefits) குறிப்பிட்ட சொத்து உடைமையாளர்களுக்குக் குறிப்பிட்ட நன்மைகளும் (specific benefits) கிடைக்கின்றன. அத்தகைய மேம்பாடுகளால் நன்மையடைந்த சொத்துகள்மீது விதிக்கப்படும் கட்டணங்களே தனித் தீர்வைகள் ஆகும். அத் தீர்வையின் தொகை, குறிப்பிட்ட மேம்பாட்டால் ஒவ்வொரு சொத்துரிமையாளருக்கும் கிடைக்கிற நன்மையின் அளவை அல்லது அந்த மேம்பாட்டை ஒவ்வொரு சொத்துரிமையாளருக்கும் கிடைக்கச் செய்வதற்கு ஆகும் செலவைப் பொறுத்திருக்கிறது. இவ்வாருகப் பல தன்மைகளில் தனித் தீர்வைகள் விலைகளைப்போலவே இருக்கின்றன. சொத்தின் உரிமையாளர்கள், தல அரசாங்கத்திடமிருந்து மேம்பாட்டை (improvement) விலைக்கு வாங்குகிருர்கள் என்றே கூறவேண்டியிருக்கிறது. ஆனல், அதே சமயத்தில், தனித் தீர்வைக்கு உள்ளாகும் மேம்பாடுகளால் சமுதாயத்திற்கு ஏற்படும் பொது நன்மையும் ஏராளமான அளவில் இருக்கிறது. மேற்கொள்ளப்படும் மேம்பாட்டின் அளவு, சமுதாயத்தின் திட்டத்திற்குப் பொருத்தமானதாக இருப்பதோடு, அந்த ஏற்பாட்டால் குறிப்பான நன்மைகளைப் பெறுகிற சொத்தின் உரிமையாளர்களுடைய விருப்பங்களுக்கும் ஏற்றதாக அமையவேண்டும். ஆகவேதான் நாம், தனித் தீர்வைகளை, வாணிப வருவாய்கள் என்னும் பிரிவில் இணைக்காமல், நிர்வாக வருவாய்கள் என்னும் தலைப்பில் சேர்த்துள்ளோம். நகர வளர்ச்சிக்கான பொதுப்பணி நிறைவேற்றப்படும்போது தனித் தனி சொத்து உரிமையாளரோடு தொடர்பு ஏற்படுகிறது. இந்தத் தொடர்பின் விளைவாகத் தனியாட்கள்மீது விதிக்கப்படுகிற தனித் தீர்வைகள் தோன்றுவது நியாயமானது என்றே சொல்லவேண்டும்.

தனித் தீர்வைகளின் தோற்றத்திற்குக் காரணமாக உள்ள மேம்பாடுகளில்பொதுவான நன்மைகளும் குறிப்பான நன்மைகளும் இணைந்திருப்பது, அந்த மேம்பாடுகளில் மட்டுமே காணப்படுகிற விந்தையான இயல்பு அன்று. நாம் முன்னரே ஆய்ந்து அறிந்ததைப் போல், இதே வகையான இணைப்பு, பலதிறப்பட்ட அனுமதி ஆணைகளுக்கான செலுத்தல்களிலும் பொதிந்திருக்கிறது. இருந்தபோதிலும், தனித் தீர்வைகளிலிருந்து பல சிறப்புச் சிக்கல்கள் தோன்றுவதற்குக் காரணம், இந்தத் தீர்வைகளில் தனியாட்களிடமிருந்து கிடைக்கும் செலுத்தல்களின் தொகை பெரும் அளவுடையதாக இருப்பதே. நிலைமை இப்படி இருப்பதால், தனித்

தீர்வை விதிக்கப்படுவதற்கு உரிய திட்டங்கள் எவை எவை மேற்கொள்ளப்படலாம் என்பதையும், இவற்றால் ஏற்படக்கூடிய மேம்பாடுகள் எவ்வளவு விரிவாக இருக்கவேண்டும் என்பதையும் முடிவுகட்டுவதில் சொத்தின் உரிமையாளர்களுக்கும் ஓரளவு உரிமை இருந்தாகவேண்டும். அதுமட்டும் அன்று, தீர்வையைச் செலுத்துவதற்கான ஏற்பாடு, அதனைச் செலுத்துபவர்கட்கு உச்ச அளவு வசதி உடையதாக அமைந்திருக்கவேண்டும். ஆனால், திட்டத்தை மேற்கொள்வதும், ஒப்பந்தக்காரர்களுக்குப் பணம் தருவதற்குரிய பொறுப்பை ஏற்றுக்கொள்வதும், அரசாங்கமே.

மேம்பாட்டுத் திட்டங்களை மேற்கொள்வதில் தலையாய நோக்கமாக இருக்கவேண்டியது, சமுதாயத்தை ஒழுங்கான முறையிலும் திட்டமிட்ட வகையிலும் மேம்பாடு அடையச் செய்வது எப்படி என்பதுதான். ஆனால், இத்தகைய திட்டங்களைத் தொடங்குவதில் சொத்தின் உரிமையாளர்களுக்குத் தரப்பட வேண்டிய பங்கு எத்தகையதாக இருக்கவேண்டும்? வெவ்வேறு மாநிலங்கள், இத் துறையில், வட்டார அரசாங்கங்கள் கடைப் பிடிக்கவேண்டிய நடைமுறை விதிகளை, வெவ்வேறு வகைகளில் அமைத்துள்ளன. அத்தகைய மாநில விதிமுறைகள் இல்லாத மாநிலங்களில், வெவ்வேறு வட்டார அரசாங்கங்கள் கடைப் பிடிக்கிற நடைமுறைகள் வெவ்வேறாக உள்ளன. உண்மையில் நடப்பது என்னவென்றால், அரசாங்கமே திட்டங்களை முதலில் முன்மொழிகிறது. அவற்றைப் பொதுமக்கள் அறிந்தபிறகு, அத் திட்டங்களை மறுக்கும் உரிமை (right of veto), சொத்தின் உரிமையாளர்களுக்கு ஓரளவுக்குத் தரப்படுகிறது. ஆனால், அரசாங்கத்தின் நலன்களே முதன்மையானவையாக இருப்பதால், சொத்தின் உரிமையாளர்களில் குறிப்பிடத்தக்க பெரும் பான்மையினர் விரும்பினாலொழிய மறுக்கும் உரிமையைப் பயன் படுத்த முடியாது. திட்டங்களின் செலவில் எவ்வளவு அதிகமான பகுதி அரசாங்கத்தால் தரப்படுகிறதோ, அவ்வளவு அதிகமான அளவில், மேற்படி மறுப்புரிமையை மீறிச்செயலாற்றுகிற அதிகாரம் அரசாங்கத்திற்குத் தரப்படவேண்டும். நடைமுறையில் திட்டங்கள் சொத்தின் உரிமையாளர்களால் பெரும்பாலும் முன்மொழியப் படுவதில்லை என்றாலும், முன்மொழிகிற உரிமை பெரும்பாலான நிலைமைகளில் அவர்களுக்குத் தரப்பட்டிருப்பது, உண்மை. சொத்தின் உரிமையாளர்கள் சில திட்டங்களை முன்மொழிகிற போது, அத் திட்டங்களின் செலவில் உயர்ந்தது எவ்வளவு பகுதியை அவர்கள் ஏற்கமுடியும் என்பதைத் தெரிவிக்கிற உரிமை அவர்களுக்குத் தரப்படவேண்டும். சொத்தின் உரிமையாளர்களில் மதிக்கத்தக்க பெரும்பான்மையினர் ஒரு மேம்பாட்டுத் திட்டத்தை

முன்மொழிந்து, ஏறத்தாழ அத் திட்டத்திற்கான செலவு முழுவதையும் ஏற்றுக்கொள்வதற்கான இசைவையும் தெரிவிப்பாராயின், அரசாங்கத்தின் மறுப்புரிமை குறைந்த அளவிலேயே பயன்படுத்தப்படும். அத்தகைய நிலைமையில் சொத்துரிமையாளர்களால் முன்மொழியப்படுகிற திட்டம், நகரத் திட்டங்களோடு பொருந்தக்கூடியதாக இல்லாதபோது, அல்லது அக் சொத்துரிமையாளர்களால் முன்மொழியப்பட்டதைவிட மிக விரிவான அளவில் அத் திட்டத்தை நிறைவேற்றுவதுதான் நகர நலனுக்கு உகந்ததாக இருக்கும்போதுமட்டுமே, அரசாங்கம் பொதுவாகத் தன் மறுப்புரிமையைப் பயன்படுத்த முனையும். ஏனென்றால், ஒரு புதிய குடியிருப்பில் தற்போது உள்ள குடிமக்களின் தேவைகளை நிறைவு செய்வதற்குப் போதுமானதாக உள்ள ஒரு வீதி அல்லது வடிகால், எதிர்காலத்தில் அக் குடியிருப்பு விரிவாகும் போது போதுமானதாக இராது. அத்தகைய நிலைமையில், அரசாங்கத்தால் விரும்பப்படுகிற விரிவான அளவில் மேம்பாட்டுத் திட்டத்தை மேற்கொள்வதற்கு ஆகக்கூடிய செலவு, முன் மொழிபவர்கள் ஏற்றுக்கொள்ள இசைகிற தொகையைவிட மிகக் கூடுதலாக இருக்கும். திட்டங்களை மேற்கொள்வதுபற்றி அரசாங்கத்துக்கும் மனுதாரர்களுக்கும் (முன்மொழிபவர்களுக்கும்) இடையே முரண்பாடு ஏற்படுமானால், அரசாங்கத்தின் கருத்தே ஏற்றுக்கொள்ளப்படவேண்டும் என்பதைப் பொதுவான விதியாகக் கொள்ளலாம். இப்படிக் கூறுவதால், இந்த இரு சாராருக்கும் இடையே அடிக்கடி முரண்பாடுகள் தோன்றுவதுதான் இயல்பு என்று நாம் கருதிவிடக்கூடாது. இதற்கு மாறாக, சிறப்பான மேம்பாட்டுத் திட்டங்கள், பெரும்பாலும், இந்த இரு சாராராலும் ஒரு சேர விரும்பப்பட்டு, இந்த இரு சாராரின் கூட்டுறவாலேயே நிறைவேற்றப்படுகின்றன.

சொத்துரிமையாளர்களில் ஒவ்வொருவர்மீதும் எந்த அளவுக்குத் தனித்தீர்வை விதிக்கப்படலாம் என்பதை முடிவு செய்வதில் பல சிக்கல்கள் தோன்றுகின்றன. மேம்பாட்டுத் திட்டத்தால் நன்மையடைந்த சொத்தின்மீது, நடைமுறைக் கட்டுமானச்செலவு (actual construction cost), நிலத்தை உரிமைப் படுத்திய செலவு (land acquisition cost), மாநகராட்சி மன்றத் துறைகளால் செய்யப்பட்ட பொறியியல் பணி—மேற்பார்வைப் பணி ஆகியவற்றின் செலவு ஆகிய எல்லாச் செலவுகளையும் உள்ளடக்கிய வகையில் தனித் தீர்வை விதிக்கும் அதிகாரத்தை, தல அரசாங்கங்களுக்குப் பெரும்பாலான மாநிலங்களின் சட்டங்கள் அளித்துள்ளன. சொத்தை மேம்பாடுறச் செய்த மொத்தச் செலவில் ஒரு பகுதியை மட்டுமே (எடுத்துக்காட்டு: பாதி

அல்லது மூன்றில் இரண்டு பங்கு) தல அரசாங்கங்கள் தனித் தீர்வையாக விதிக்கலாம் என்று வேறு சில மாநிலங்கள் சட்டம் இயற்றியுள்ளன. மேம்பாட்டுத் திட்டங்களில் பொது நலன்பற்றிய பகுதி அமைந்திருக்கிறது என்பதும், எனவே அத் திட்டங்களின், செலவில் ஒரு பகுதியை அரசாங்கம் ஏற்றுக்கொள்வதே முறை என்பதும் சட்டப்படி உணரப்பட்டுள்ளன என்பதையே, சில மாநிலங்களில் உள்ள இச் சட்டம் எடுத்துக்காட்டுகிறது. சட்டப்படியான நிலை எப்படி இருந்தாலும், மேம்பாட்டுத் திட்டச் செலவின் ஒருபகுதியை அரசாங்கம் ஏற்றுக்கொள்வதே பொதுவான வழக்கமாக இருந்துவருகிறது. அனுமதிக்கப்பட்டுள்ள தனித் தீர்வைத்தொகை, எங்குமே, மேம்பாட்டுத் திட்டத்தால் ஒரு சொத்தின் மதிப்பில் ஏற்பட்டுள்ள உயர்வைவிட அத் தொகை கூடுதலாக இருக்கக்கூடாது என்னும் பொதுவிதிக்குக் கட்டுப் பட்டதாகவே இருக்கிறது. ஆனால், இந்தப் பொது விதியை நடைமுறைப்படுத்தும்போது பல கடினமான சிக்கல்கள் ஏற்படுகின்றன. சொத்தின் மதிப்பில் ஏற்பட்டுள்ள உயர்வு, சொத்தின் மதிப்பை உயர்த்தவல்ல பிற காரணங்களால் உருவாகாமல் குறிப்பிட்ட மேம்பாட்டுத் திட்டத்தால் மட்டும் எற்பட்டுள்ள உயர்வு ஆகியவற்றைத் துல்லியமாக அளந்தறிவது பற்றிய சிக்கல்களே அவை.

மேம்பாட்டுத் திட்ட வட்டாரத்தில் உள்ள சொத்துரிமையாளர் ஒவ்வொருவர்மீதும் நடைமுறையில் விதிக்கப்படுகிற தனித் தீர்வையின் தொகை, அத் திட்டச் செலவில் ஒவ்வொருவருக்குமாகப் பங்கிடப்பட்டுள்ள தொகைக்கு உட்பட்டு, அல்லது ஒவ்வொருவரின் சொத்து மதிப்பில் ஏற்பட்டுள்ள உயர்வுக்கு உட்பட்டு, அந்தந்த வட்டாரத்தில் உள்ள பழக்கத்தின்படி முடிவு செய்யப்படுகின்றது. ஒரு மேம்பாடானது குறைந்த வருமானத்தை உடைய ஒரு மாவட்டத்தில் நடைபெற்றிருக்கையில், மேம்பாட்டுச் செலவு முழுவதும் அல்லது சொத்தின் மதிப்பில் ஏற்பட்டுள்ள உயர்வு முழுவதும் தீர்வையாக விதிக்கப்படுமானல், அத் தீர்வையைச் செலுத்த முடியாத நிலை ஏற்பட்டு, அதன் விளைவாகச் சொத்துக்களின் உடைமை பிறருக்கு மாற்றப்படுகிற நிலை உருவாகும்.[8] மேம்பாட்டுச் செலவில் எந்த அளவை அரசாங்கம் ஏற்றுக்கொள்ளும் என்பதை முடிவு செய்யும் காரணியாக இந்த உண்மை விளங்குகிறது. இந்தக் காரணியின் விளைவாக, அரசாங்கம், ஒரே நகரத்தின் பல்வேறு மேம்பாட்டுத் திட்டங்களின் செலவுகளைப் பல்வேறு அளவுகளில் ஏற்றுக்கொள்ளக்கூடும்.

மேம்பாட்டுத் திட்டங்களின் விளைவாகச் சொத்துகள்மீது விதிக்கப்படுகிற தனித் தீர்வைகள் பெருந்தொகையினவாக இருப்பதால், அவற்றை, பல ஆண்டுகள் அடங்கிய ஒரு காலப் பகுதியில் பல தடவைகளில் வசூலிக்கும் ஏற்பாடே பொதுவாகக் கையாளப்படுகிறது. தனித் தீர்வைப் பாண்டுகளை (special assessment bonds) விற்பதன்மூலம், ஒப்பந்தக்காரர்களுக்குச் செலுத்தற்குரிய நிதிகளைக் கடனாகப் பெறுவது, தல அரசாங்கங்களின் பொதுவான வழக்கமாக இருந்துவருகிறது. இந்தக் கடன் பத்திரங்களுக்காக அரசாங்கம் உறுதிமொழி தருகிறது. தனித் தீர்வைகளின் வருவாய்கள் இந்தக் கடன் பத்திரங்களின் தொகையைத் திருப்பிக் கொடுப்பதற்கென்றே ஒதுக்கிவைக்கப் படுகின்றன. இவ்வாறாக, மேம்பாட்டுத் திட்டங்களுக்கான நிதிகளை அரசாங்கம் முன்பணமாகத் தருகிறது. அவ்வாறு தருவதால் ஏற்படும் கடனைச் சொத்துரிமையாளர்கள் சிறிது சிறிதாகத் திருப்பித் தருகிறார்கள். மேம்பாட்டுத் திட்டம் ஒவ்வொன்றிற்கும் தனித்தனியாகத் தனித் தீர்வைக் கடன் பத்திரங்கள் மூலம் கடன் வாங்குவதே, பெரும்பாலான திட்டங்களைப் பொறுத்தவரையில், மிகவும் ஏற்கத்தக்க ஏற்பாடாகும். ஆனால், சில பெரிய நகராட்சி மன்றங்கள், கடன் வாங்கிய தொகையின் மூலம் மீளும் நிதி (Recurring or revolving fund) ஒன்றை உருவாக்கியுள்ளன. அந் நகரங்களில் பெரும்பாலான மேம்பாட்டுத் திட்டங்களின் செலவுக்கான தொகை முழுவதும் இந் நிதியிலிருந்து எடுத்துக் கொள்ளப்படுகிறது; அதுபோலவே, அத் திட்டங்கள் அனைத்தினுடைய தனித்தீர்வை வசூல் இந் நிதியில் சேர்க்கப்பட்டு விடுகின்றது.[9]

### நிர்வாக வருவாய்கள்பற்றிய முடிவுகள்

தத்தம் அளவில் சிறியனவாக உள்ள பலதிறப்பட்ட வருவாய் முறைகளின் தொகுப்பே நிர்வாக வருவாய்கள் என்பவை. பொதுவான நிர்வாகப் பணிகள் ஆற்றப்படும்போது அவற்றின் தொடர்பில் இந்த வருவாய்கள் உருவாகின்றன. இந்தப் பணிகள் நிறைவேற்றப்படும்போது, தனியாட்களோடு அரசாங்கத்திற்குக் குறிப்பான தொடர்பு ஏற்படக்கூடும். ஒழுங்குபடுத்தப்பட்ட நடவடிக்கைகளில் ஈடுபடுவதற்கான அனுமதி ஆணைகள் வழங்கப் படும்போதும், சட்டப்படி அல்லது ஒப்பந்தங்களின்படி நடந்து கொள்ளத் தவறியதற்காகத் தண்டனைகள் விதிக்கப்படும்போதும், தனியார் சொத்தின் குறிப்பிட்ட இனங்களுக்கு நன்மை தரத்தக்க மேம்பாட்டுத் திட்டங்களை அரசாங்கம் மேற்கொள்கிறபோதும், இன்னபிற சமயங்களிலும் இத்தகைய தொடர்பு உருவாகிறது. அவ்வாறு உருவாகும் தொடர்புகளை, அரசாங்கம், தன்

வருவாய்களைப் பெருக்கிக்கொள்வதற்கான வாய்ப்புகளாகப் பயன்படுத்திக் கொள்கிறது. அபராதங்களையும் தனித் தீர்வை களையும் தவிர்த்த பிற நிர்வாக வருவாய்களைப் பொறுத்தவரை, ஒழுங்குபாட்டின் (regulation) செலவு, ஒழுங்குபாட்டால் ஏற்படுகிற நன்மை, அல்லது ஒழுங்குபாட்டை மேம்படுத்துவது ஆகிய எந்த அடிப்படையிலிருந்து பார்த்தாலும், அந்தக் கட்டணங்களை விதிப்பதற்கு நியாயம் இருப்பதாகக் கூறமுடியாது. நடைமுறையில், அந்தக் கட்டணங்கள், செலுத்தும் திறனுக்குப் பொருத்தமான முறையில் அமைக்கப்படுவதில்லை. ஆகவே, ஒப்புக்கொள்ளப் பட்டுள்ள வருவாய்க் கோட்பாடுகளின் அடிப்படையில் அந்த வருவாய் ஏற்பாடுகளை ஏற்றுக்கொள்ள முடியாது. அதோடு, அந்த வருவாய் வரவுகள், அவற்றை வசூலிக்கும் நிர்வாகத்துறை களுக்குத் தாமாகவே ஒதுக்கப்பட்டுவிடும் நிலை இருப்பதால், ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள வரவு செலவுத் திட்ட நடைமுறையி லிருந்து மாறுபட்ட வகையில், செலவுகளின் அளவுகள் நிர்ணயிக்கப்படுகின்றன.

கட்டண வருவாய்களின் இந்தக் குறைபாடுகளை, அவற்றின் எளிதில் மாறுத தன்மையோடு (inflexibility)[10]—அதாவது நடப்புத் தேவைகளுக்குப் பொருந்திய முறையில் அவற்றை மாற்றியமைக்க முடியாத நிலைமையோடு சேர்த்துப் பார்த்தால், கட்டண முறை இருப்பதற்குத் தர்க்கமுறைப்படி எத்தகைய் நியாயமும் இல்லை என்பது, திட்டவட்டமாகத் தெளிவாகிறது. தர்க்க முறைப்படி நியாயமோ அல்லவோ, கட்டண முறையானது, அரசாங்க நடவடிக்கையில் அழுத்தமாக வேரூன்றிவிட்டது. பொதுமக்களின் நிதித்துறை அனுபவத்திலும் கட்டணமுறைக்கு நிலையான ஓர் இடம் கிடைத்துவிட்டது. கட்டணங்கள், லைசென்சுகள், அனுமதி ஆணைகள் ஆகியவற்றைப் பொதுமக்கள் ஏற்றுக்கொண்டிருப்பதாலும், மொத்த வருவாய்த் தொகையில் இவற்றின் பங்கு குறிப்பிடத்தக்க அளவில் இல்லாததாலும், இவை தொடர்ந்து இருப்பதைப்பற்றி நாம் மனக்கொதிப்பு அடைய வேண்டிய தேவை இல்லை. ஆனால், வரிகளின் பங்கைக் குறைக்கும் வகையில் இக் கட்டணங்கள் மேலும் பெருகத் தொடங்கினால் அப் பெருக்கத்தை நாம் முழுமூச்சோடு எதிர்க்கத்தான் வேண்டும்.

கட்டண முறையைப்பற்றி நாம் மேலே தெரிவித்துள்ள கருத்துகள், அபராதங்கள், பறிமுதல்கள், அரசினரைச் சேர்தல், தனித் தீர்வைகள் ஆகிய பிற நிர்வாக வருவாய்களுக்குப் பொருந்தமாட்டா. அபராதங்களும் பறிமுதல்களும் வருவாய் அல்லாத வேறு காரணங்களை அடிப்படையாகக் கொண்டிருப்பவை. சட்டங்களை மீறும் ஆட்களைத் தண்டிக்கும் பொறுப்புள்ளவர்கள்,

அபராதங்களையும் பறிமுதல்களையும் அப்படித் தண்டனைக்குப் பொருத்தமான கருவிகளாகக் கருதிக்கொண்டிருக்கும்வரை, அக் கருவிகள் பயன்படுத்தப்படுவதைக் குறைக்கவேண்டும் அல்லது அக் கருவிகளையே எறிந்துவிடவேண்டும் என்று பொதுநிதி இயலின் மாணவர்கள் பரிந்துரை புகல்வது பொருந்தாது. அரசினரைச் சேர்தல் என்னும் வருவாய் முறை, இறந்துபோன அல்லது காணாமற்போன ஆட்களின் சொத்துகள் இறுதியாகப் பங்கிடப் படும்போது, அவற்றைப் பெற்றுக்கொள்ளும் உரிமை படைத்தவர்களின் வரிசையில் கடைசி ஆளாக—அச் சொத்து களுக்குச் சட்டப்படியான வாரிசுகள் யாரும் இல்லாதபோது அவற்றை ஏற்றுக்கொள்ளும் உரிமை உடைய ஆளாக அரசாங்கத்தை நிறுத்துகிறது. தற்போதுள்ள சொத்துப் பாதுகாப்பு நிலைமைகளில், இந்த உரிமையைப் பெறுவதற்கு அரசாங்கத்திற்கு உள்ள அளவு தகுதி வேறு யாருக்கும் இருப்பதாகக் கூறமுடியாது. தனித் தீர்வைகளைப் பொறுத்த அளவில், சில வகைச் சொத்து களுக்குக் குறிப்பாகப் பணமுறைநன்மை விளைவிக்கிற மேம்பாட்டுத் திட்டங்களின் செலவில் ஒரு நியாயமான பகுதியை, அந்தச் சொத்துகளின் உரிமையாளர்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்னும் கொள்கை, முற்றிலும் நியாயமானதாக இருக்கிறது. சொத்துரிமையாளர்களும் அரசாங்கமும் இணைந்து நடத்துகிற மேம்பாட்டுத் திட்டங்களுக்கான தேவை (demand) அளவுக்கு மீறித் தோன்றுவதைத் தடுக்கும் ஒரு கருவியாகவும் தனித் தீர்வை அடிக்கடி பயன்படுகிறது. ஒரு மேம்பாட்டுத் திட்டச் செலவின் எவ்வளவு பகுதி தனியாட்களிடமிருந்து வசூலிக்கப் படுவது நியாயமானதாக இருக்கும் என்பது, நிர்வாகப் பொறுப்பில் உள்ளவர்களால் முடிவு கட்டப்படவேண்டிய சிக்கல் ஆகும். ஆனால், அப்படி முடிவு செய்யும்போது, அத்தகைய திட்டங்கள் முற்றிலும் தனியாட்களுடைய நன்மைக்காக அமைந்தன அல்ல என்பதையும் குறிப்பிடத்தக்க அளவில் (திட்டத்திற்குத் திட்டம், காலத்திற்குக் காலம், மாறக்கூடிய அளவிலும்) அவை பொது நன்மைக்காகவும் அமைந்துள்ளன என்பதையும் மறந்துவிடக்கூடாது. அத் திட்டங் களில் பொது நன்மைக்கான இயல்பும் அமைந்திருப்பதால் அவற்றின் செலவில் ஒரு பகுதியை அரசாங்கத்தின் பொது வருவாய்களிலிருந்து சரிக்கட்ட வேண்டியது, முறையான செயலே.

நிர்வாக வருவாய்களைச் சுழல் எதிர்ப்பு நோக்கங்களை நிறைவேற்றுவதற்கான கருவிகளாக ஏன் பயன்படுத்த முடியாது என்பதற்கான பல காரணங்களை, இந் நூலைப் படிப்பவர்கள், எடுத்துரைக்கக் கூடும். இந்த வருவாய்களின் தொகை குறைவாக இருப்பதால், வாணிபச் சுழலின் பல்வேறு கட்டங்களில் இவற்றின்

வீதங்களை மாற்றுவதால், நுகர்வின் அளவிலும், முதலீட்டின் அளவிலும் குறிப்பிடத்தக்க மாற்றம் எதுவும் ஏற்பட்டுவிடாது. இந்த அளவுகளில் மாற்றம் ஏற்படாததால் நாட்டின் வருமான அளவிலும் மாற்றம் ஏற்படாது. அதோடு. வரிகளில் இருப்பதைவிட இந்த நிர்வாக வருவாய்களில் வலுக்கட்டாயக் கூறு குறைவாக இருப்பதால், இந்த வருவாய்க் கட்டணங்களுக்கு ஆளாகிறவர்கள் சுழல் எதிர்ப்பு நடவடிக்கைகளில் ஈடுபடுவார்களா அல்லது ஈடுபடமாட்டார்களா என்பது, அவர்களுடைய விருப்பத்தைப் பொறுத்த ஒன்ருக அமைந்துவிடுகிறது. இறுதியாக, இந்த நிர்வாக வருவாய்களிற் பெரும்பாலானவற்றில் இயல்பாக அமைந்துள்ள தன்மையின் விளைவாக, இவற்றைச் சுழல் எதிர்ப்பு நோக்கத்திற்குப் பயன்படுத்திஞல், இவற்ருல் நிறைவேற்றப்படவேண்டிய இதனினும் முக்கியமான நோக்கங்கள் பாழாகிவிடக்கூடும். ஆனுல், தனித் தீர்வைகள் இந்த முடிவுகளிலிருந்து ஓரளவு விலகியிருப்பவை என்று கூறலாம். தனித் தீர்வைகளுக்கு உட்பட்ட பொது மேம்பாட்டுத் திட்டங்களைச் சுழல் எதிர்ப்பு நோக்கங்களுக்கு ஏற்றபடிக் கையாளமுடியும். (ஆனுல், அப்படிக் கையாள்வது, செலவுத் துறையைச் சேர்ந்த ஒரு பணி; வருவாய்த் துறையைச் சேர்ந்தது அன்று.) தனித் தீர்வையைச் செலுத்துபவர்கட்கு அந்தத் தீர்வைத் தொகை பேரள்வினதாக இருக்கும். ஆதலால், வாணிபச் சுழல்களின் விளைவாக வருமானத்தில் ஏற்படுகிற ஏற்றத்தாழ்வுகளை முன்னிட்டுத் தனித் தீர்வைத் தொகையைச் செலுத்துவதற்கான காலவரையறையில் ஓரளவு நெகிழ்ச்சியை ஏற்படுத்தவேண்டியது இன்றியமையாதது ஆகிறது. இத்தகைய நெகிழ்ச்சியின் விளைவாகக் குறிப்பிட்ட வட்டாரங்களில் நுகர்வுக்கும் முதலீட்டுக்கும் ஆகும் செலவின் அளவு பாதிக்கப்படும் என்பதோடு, சமுதாய வருமானம் குறைந்த நிலையில் உள்ள—வேலைக் குறைவு மிகுந்த—காலங்களில் பலர் வரி செலுத்தத் தவறுவதால் தல அரசாங்கங்களுக்கு ஏற்படுகிற சிக்கலான நிலைமைகளும் தவிர்க்கப்படும்.[11]

## மேலும் படித்தற்கு உரியவை

வருவாய்களின் பாகுபாட்டைப்பற்றிக் கூடுதலாகப் படிப்பதால் மிகுந்த பயன் விளையமுடியாது. வருவாய்ப் பாகுபாடுகளின் மாதிரிகளை, எச். எல். லட்ஸ் (H. L. Lutz) எழுதியுள்ள 'Public Finance' என்னும் நூலிலும் (நியூயார்க், ஆப்பிஸ்டன் செஞ்சரி, 1947, அத்தியாயம் 10), எம். எச். ஹண்டர் (M. H. Hunter); 'American Economic Review' என்னும் பத்திரிகையின் 1930 மார்ச் மாத இதழில் எழுதியுள்ள 'The Problem of Classification: Public Expenditures and Revenues' என்னும் கட்டுரையிலும் காணலாம்.

நிர்வாக வருவாய்கள்

ஏ.சி. பிகு (A. C. Pigou), 'A Study of Public Finance', லண்டன், மாக்மில்லன், 1951, அத்தியாயம் 4.

பொருளாதாரத்தில் சாதனப் பங்கீட்டைப் பொருத்தமான முறையில் செய்வதற்குக் கட்டணங்களை (fees) எவ்வாறு பயன் படுத்தலாம் என்பதுபற்றிய கருத்தாய்வு.

உதவி மானியங்கள்

ஜேம்ஸ் ஏ. மாக்ஸ்வெல் (James A. Maxwell), 'Federal Grants and the Business Cycle', நியூயார்க், National Bureau of Economic Research, 1952.

கூட்டரசாங்க மானியங்கள்பற்றிய விரிவான விவரங்களையும், அவைபற்றிய சிக்கல்கள்பற்றிய நடைமுறை ஆராய்ச்சியையும் கொண்ட ஒரு சிறிய, மிக அரிய, நூல்.

## 11ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்.

1. Historical Statistics on State and Local Government Finances, 1902–1953, பக்கம் 17. மற்றும், Budget of the United States Government, 1960, சிறப்புப் பகுத்தாய்வு (Special Analysisly.), பக்கம் 988.

2. Historical Statistics on State and Local Government Finances 1902–1953, பக்கம் 19. மற்றும், Summary of Government Finances in 1958, பக்கம் 14.

3. 1942 முதல் 1945 வரை, கூட்டரசாங்கக் கருவூலத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட நன்கொடைத் தொகை 6 மில்லியன் டாலராகும். இது அல்லாமல், பெரும்பாலும் போர் வீரர்களின் பொழுதுபோக்குக்காக, பல மில்லியன் டாலர் மதிப்புள்ள பொருள்களும் தளவாடங்களும் ஒப்புக்கொள்ளப் பட்டன. (Annual Report of the Secretary of the Treasury, 1955, பக்கங்கள் 107, 108.

4. ஆலியோ மார்கரைன் என்னும் போலி வெண்ணெயின் விற்பனைக்கான அனுமதி ஆணையின் (permits) லைசென்ஸ் கட்டணங்கள் அளவுக்கு மீறியனவாக விதிக்கப்படுவது, மோட்டார் டிரக்குகளுக்கான பதிவுக் கட்டணங்கள் மிகக்கூடுத லாக விதிக்கப்படுவது ஆகிய நிலைமைகளைப்போல, திட்டவட்டமான கட்டுப்பாட்டு நோக்கத்துக்காகக் கட்டணங்கள் பயன்படுத்தப்படும்போது, குறிக்கோளாக இருப்பது, போட்டியைக் குறைப்பதே. நிர்வாகத்தால் ஏற்படும் நன்மையை அல்லது நிர்வாகத்தின் செலவை அடிப்படையாக வைத்து இந்தக் கட்டணங்கள் முடிவு செய்யப்படுவதில்லை. இந்தக் கட்டணங்களால் நன்மை பெறுபவர்களில் தலையாயவர்கள், கட்டணம் செலுத்துவோர் அல்ல. ஒரு வருவாய் முறையைக் கட்டுப்பாட்டு நோக்கத்துக்காகப் பயன்படுத்தும் நிலையையே இக் கட்டணங்களில் காண்கிறோம். ஒரு நிர்வாக வருவாய் முறையை ஒரு வரியாகப் பயன்படுத்துவது மற்றொரு வகைப்பட்ட ஒரு முக்கியமான விதிவிலக்கு ஆகும். மோட்டார்கார்

பதிவுக் கட்டணங்கள் இதற்குரிய எடுத்துக்காட்டு ஆகும். இந்த வரியைப் பொறுத்தவரை, கட்டுப்பாட்டுப் பணியின் செலவு அல்லது மதிப்பின் அடிப் படையில் அமைந்த தேவைகளைவிட மிகக் கூடுதலாக உள்ள பதிவுக் கட்டணங்கள் மூலம் வருவாயைப் பெறுவதே நோக்கமாக இருக்கிறது. இந்த உபரி வருவாய்கள் நெடுஞ்சாலை அமைப்புக்காகப் பயன்படுத்தப்படும். இந் நிலையில், பதிவுக் கட்டணத்தின் நோக்கத்திற்கும், பெட்ரோல் வரியின் நோக்கத்திற்கும் இடையே எத்தகைய வேறுபாடும் இருப்பதாகப் புலனாகவில்லை.

5. உதவி மானியச் சிக்கல்கள்பற்றிச் சுருக்கமாகவும் சிந்தனையைக் கிளரும் வகையிலும் அமைந்த அண்மைக்காலப் பகுத்தாய்வு வேண்டுமானால் ஜேம்ஸ் ஏ. மாக்ஸ்வெல் (James A. Maxwell) எழுதிய 'Federal Grants and the Business Cycle' என்னும் நூலைக் காண்க. (நியூயார்க், 1952. National Bureau of Economic Research.) மேலே தரப்பட்ட பகுத்தாய்வின் விரிவான விளக்கம் பெற, சிறப்பாக, அந் நூலின் 3ஆவது அத்தியாயத்தைப் படிக்கவும்.

6. The Science of Finance, நியூயார்க், ஹோல்ட் (Holt), 1906, பக்கம் 226.

7. ஏ. ஆர். பர்ன்ஸ்டன் (A. R. Burnstan) எழுதிய 'Special Assessment Procedure' என்னும்நூலில் Special Report No. 1. of the New York State Tax Commission, ஆல்பனி (Albany, 1929), தனித் தீர்வைகள் பற்றிய விரிவான ஆராய்ச்சியைக் காணலாம்.

8. தொகை செலுத்தப்படவேண்டிய நேரத்தில் தேவையான அளவு ரொக்கத்தைப் பெறமுடியாத நிலையின் காரணமாக இடர்ப்பாடு தோன்றுகிறது. விதிக்கப்படுகிற வரியானது சொத்தின் மதிப்பில் ஏற்பட்டுள்ள உயர்வின் அளவுக்கே வரையறுக்கப்பட்டிருக்கிறது என்றாலும், சொத்தை விற்பதன் மூலமாகவே அந்த மதிப்பேற்றத்தை (appreciation) ரொக்கமாக மாற்ற முடியும். வரி செலுத்துவதற்காகச் சொத்தின் உரிமை மாற்றப்படுவதை—அதிலும் சிறப்பாகக் குடியிருக்கும் வீட்டின் உரிமை மாற்றப்படுவதைக் கூடிய வரை தவிர்க்கவேண்டும்.

9. தனி மேம்பாட்டுத் திட்டங்களுக்கு நிதிகளைப் பெறுவதற்கான இந்த முறைகள், இன்ன பிற முறைகள் ஆகியவைபற்றிய கருத்தாய்வைப் பெற, முன்னர் குறிப்பிட்ட பர்ன்ஸ்டன் என்பாரின் நூலைக் (பக்கங்கள் 77—83) காண்க.

10. நெகிழ்ச்சியின்மைக்கான காரணங்கள் இரண்டு: (1) கட்டணவீதங்களில் ஏற்படும் ஒரு மாறுதலால் வருவாய் விளைவுகளில் ஏற்படக்கூடிய மாறுதலை முன் கூட்டி அறிவிக்க முடியாத நிலை. (2) வருவாய் அல்லாத பிற அடிப்படை களிலேயே கட்டணத்தின் தொகை முடிவு செய்யப்படுகிறது என்னும் உண்மை.

11. அத்தகைய திட்டத்தை ஏற்கவேண்டுமானால், மந்தத்தின்போது, ஏற்கெனவே முடிக்கப்பட்டுவிட்ட திட்டங்கள்மீதான தனித் தீர்வைகளை ஒத்தி வைக்கவேண்டும். செழுமைக்காலத்தில், தனித் தீர்வைச் செலுத்தல்களை உயர்த்தவேண்டும். தற்போதைய நிதி ஏற்பாட்டில், அத்தகைய நடவடிக்கையைக் கையாள்வது கடினம். ஏனென்றால், இந்த ஏற்பாட்டின்படி, தனித் தீர்வைப் பாண்டுகளின் வெளியீடுகள் நிதிகளை முன் பணமாகத் தருகின்றன; அந்த முன்

பணமானது, ஆண்டுதோறும் வசூலாகும் தனித் தீர்வைத் தொகையிலிருந்து திருப்பித் தரப்படவேண்டும். தனித் தீர்வை நிதியானது தனியாகப் பிரித்து வைக்கப்படும் முறை இறுக்கமாக இருக்கும்வரை, முன்சொன்ன நடவடிக்கையைக் கையாள்வது, இயலாத செயலே. அந்த முறையில் தேவையான நெகிழ்ச்சி ஏற்படுத்தப்பட்டால், வருவாய் வசூல ஒத்திப்போடுவதால் வசூலுக்குத் தேவைப் படுகிற நீண்டகால அளவுக்குக் கடனின் வாழ்நாளை நீட்டுவதற்காக, தவணை முடிவடைந்த தனித் தீர்வைப் பாண்டுகளைப் பொதுக் கருவூலக் கடன் பத்திரங்களாக மறுநிதியாக்கம் செய்வதற்கு ஒப்புக்கொள்ளப்படுகிறது என்று பொருள்.

# 12. வாணிப வருவாய்கள் : அரசாங்க வாணிபத் தொழில்துணிவுகள்

## வாணிப வருவாய்களின் இயல்பு

அரசாங்கத்தின் வாணிப வருவாய்கள் என்பவை, அரசாங்கத்தின் உடைமையாகவுள்ள தொழில் துணிவுகளால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களுக்கும் ஊழியங்களுக்குமாகப் பொதுமக்கள் தருகிற விலைகளின் வடிவத்தில் பெறப்படுகின்றன. அவற்றைப் பயன்படுத்துபவர்களுக்குக் குறிப்பான நன்மையைத் தருகிற பொருள்களையும் ஊழியங்களையும் உற்பத்தி செய்வதற்காகவே அரசாங்கத்தின் வாணிபத் தொழில்துணிவுகள் இருக்கின்றன. அவ்வாறு குறிப்பான நன்மையைத் தருகிற பொருள்கள், நிர்வாக வருவாய்களைப் பொறுத்த அளவில் இருப்பதைப்போல், ஒரு பொதுவான அரசாங்கப் பணியை நிறைவேற்றும்போது தற்செயலாக ஏற்படுகிற துணைப் பொருள்கள் அல்ல; அவற்றை உற்பத்தி செய்வதற்காகத் தனியாக ஓர் அரசாங்க வாணிபத் தொழில்துணிவு இருப்பது நியாயம்தான் என்பதை எடுத்துக் காட்டத்தக்க முதன்மைப் பொருள்கள் ஆகும். விற்பனைக்காக அரசாங்கத்தால் உற்பத்தி செய்யப்படும் பொருள்கள், பொதுமக்களின் நுகர்வுக்குத் தேவைப்படும் 'இன்றியமையாத' பொருள்களாக இருக்கலாம்; பெரும்பாலும் அப்படித்தான் இருக்கின்றன. அப்படி இருப்பதால், அவற்றை அரசாங்கம் விலைக்கு விற்பதைத் தவிர்ப்பதற்கு உரிய மாற்று வழி, அவற்றின் உற்பத்திச் செலவைப் பொதுவருவாய்களிலிருந்து (வரிகளிலிருந்து) சரிக்கட்டிவிட்டு, செலுத்தும் திறனோடு தொடர்பில்லாத முறையில் அவற்றைப் பங்கிட்டு வழங்குவதே. ஆனால், அப் பொருள்களை அவ்வாறு நன்கொடையாக வழங்காமல் விலைக்கு விற்க அரசாங்கம் முடிவு செய்வதற்குக் காரணம், அவற்றால்

விளையும் நன்மைகளுக்கும், அவற்றைப் பயன்படுத்தும் ஆட்களுக்கும் உள்ள தொடர்பைக் கிட்டத்தட்ட முழு அளவில் கண்டறியும் திறன் அரசாங்கத்திற்கு இருப்பதே ஆகும். குறிப்பிட்ட பொருள்களால் ஏற்படும் நன்மைகள் பெரும்பாலும் தனித் தனி ஆட்களையே சேர்கின்றன என்னும் நிலை இருக்கும்போது, அப் பொருள்களின் உற்பத்திச் செலவை அவற்றின் விற்பனை வருவாயிலிருந்து சரிக்கட்டவேண்டும் என்பதுதான் நியாயமாகும். அதாவது, அப் பொருள்களைப் பயன்படுத்தும் ஆட்கள் அவற்றிற்கான விலையைத் தராவிட்டால், அவற்றின் உற்பத்தியைத் தொடர்ந்து நடத்தக்கூடாது. விற்பனைக் கோணத்திலிருந்து பார்க்கும்போது, அப் பொருள்களின் உற்பத்தியிலும் விற்பனையிலும் பல தலையாய 'வாணிப' இயல்புகள் பொதிந்துள்ளன. ஆகவே, அரசாங்கத்தின் இந்த வாணிபப் பிரிவைப் பொறுத்த அளவில், வாணிப நடவடிக்கைகளைக் கையாளும் போக்கு அரசாங்கத்திற்கு ஏற்படுவது இயல்பே.

வாங்குபவரின் கண்ணோட்டத்திலிருந்து பார்த்தால் அரசாங்கத்தால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள், தனியாரால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களைப் போன்றவையாகவே இருக்கின்றன. பொருள்களை வாங்குபவர், எவ்வாறு தனியார் பொருளாதாரத்தின் அங்காடியில், பொருள்களை வாங்கவோ அல்லது வாங்காமல் விட்டுவிடவோ உரிமை படைத்தவராக இருக்கிறாரோ, அதே போலத்தான், அரசாங்கப் பொருள்களையும் அவர் வாங்கலாம் அல்லது வாங்காமல் விட்டுவிடலாம். ஒரு மாநகராட்சி மன்றத்தால் உற்பத்தி செய்யப்படும் மின்சக்தி, ஒரு தனியார் கார்ப்பரேஷனால் உற்பத்தி செய்யப்படும் மின்சக்தியிலிருந்து எந்த வகையிலும் மாறுபட்டிருப்பதாகக் கூறமுடியாது. அரசாங்கத்தால் விற்கப்படும் மது, தனியாரால் விற்கப்படும் மதுவைப் போலவேதான் இருக்கிறது. பொருள்களை வாங்குபவர், அவை தனியாரால் உற்பத்தி செய்யப்பட்டாலும் சரி, அல்லது அரசாங்கத்தால் உற்பத்தி செய்யப்பட்டாலும் சரி, அப் பொருள்களின் பயன்பாட்டை (utility) அவற்றின் விலையோடு ஒப்பிட்டுப் பார்க்கும் அங்காடிக் கணக்கு முறையின் மூலமாகத்தான் அவற்றை வாங்குவது அல்லது வாங்காமல் இருப்பது என்னும் முடிவுக்கு வருகிறார். பொருளின் பயன்பாடு, குறைந்தது அதன் விலைக்குச் சமமாகவாவது இருந்தால், பொருளை அவர் வாங்குகிறார்; இல்லையேல் அதை அவர் வாங்குவதில்லை. இவ்வாறாகப் பொருளை வாங்குபவர், அதனால் தனக்கு ஏற்படுகிற குறிப்பான நன்மையை நன்றாக உணர்ந்திருக்கிறார்; அந்த நன்மையைப் பெறுவதற்காகப் பொருத்தமான ஒரு விலையைக் கொடுப்பதற்கும் ஆயத்தமாக இருக்கிறார்.

இதுவரை நாம் கூறியதிலிருந்து, ஒரு வாணிப வருவாயின் தலையாய இயல்பு பிரதிபயனே (quid pro quo) என்பது, தெளிவாக விளங்கும். இப்படிச் செய்வதால், அரசாங்கத்தின் விலைக் கொள்கை, தனியார் தொழிலின் விலைக் கொள்கையைப் போலவேதான் எப்போதும் இருந்தாகவேண்டும் என்று கருதிவிடல் ஆகாது. ஏனென்றால், அரசாங்கமானது ஒரு குறிப்பிட்ட வாணிபத் துறையிலிருந்து தனியார் தொழில்துணிவை முற்றிலும் ஒதுக்கிவைத்துவிட்டு, முற்றுரிமை இலாபத்தை (monopoly profit) அடையும் தலையாய நோக்கத்தோடு, அந்த வாணிபத்தை ஓர் அரசாங்க முற்றுரிமையாக நடத்தக்கூடும்.[1] அல்லது ஒரு குறிப்பிட்ட பொருளை விரிவான அளவில் பயன்படுத்தும்படிச் செய்வதற்காக அதனை வேண்டுமென்றே உற்பத்திச் செலவைவிடக் குறைந்த விலையில் விற்பது என்னும் கொள்கையின் அடிப்படையில் அரசாங்கம் ஒரு வாணிபத்தை நடத்தக்கூடும். அரசாங்கத்தின் விலைக் கொள்கையைப்பற்றி இந்த அத்தியாயத்தின் பிற்பகுதியில் விரிவாக நாம் ஆராய இருக்கிறோம். அரசாங்க விலைகளைப் பொறுத்த அளவில் கொடுக்கப்படுகிற நன்மைக்கும் செலுத்தப் படுகிற தொகைக்கும் இடையே முழு அளவில் நேரடித் தொடர்பு இருக்கிறது என்பதும், நிர்வாக வருவாய்களிலும் வரிகளிலும் இந்தத் தொடர்பு இந்த அளவில் இல்லை என்பதும் ஆகிய முக்கியமான உண்மைகளைமட்டும் இச் சமயத்தில் நினைவில் நிறுத்தினால் போதும்.

**வாணிபத் தொழில்துணிவுகளை அரசாங்கம் நடத்துவதற்கான காரணங்கள்**

ஒரு சுயேச்சைத் தொழில்துணிவு முறையில் (a free enterprise system) பொருள்கள் தனியார் வாணிபத்தால் விற்கப்படுவதற்கு மாறாக அரசாங்கத்தால் விற்கப்படுவதற்கு, வெறும் வருவாய் நோக்கம் மட்டுமே தலையாய காரணமாகப் பெரும்பாலும் இருப்பதில்லை. வாணிபத் தொழில்துணிவுகளை அரசாங்கம் நடத்துவதற்கான காரணங்கள், கிட்டத்தட்ட எல்லாச் சமயங் களிலும் நிதியல்லாத பிற துணைகளைச் சார்ந்தனவாகவே இருக்கின்றன. பெரும்பாலான சமயங்களில், பொதுமக்களின் நலனை மேம்பாடு அடையச் செய்யும் நோக்கத்தோடுதான் தொழில்துணிவுகளை அரசாங்கம் நடத்துகிறது. அதாவது, தனியார் தொழிலால் உற்பத்தி செய்யப்படாமல் அல்லது உற்பத்தி செய்யமுடியாமல் உள்ள பொருள்களை மக்களுக்கு அளிப்பது, தனியார் தொழிலால் பொருள்கள் தரப்படுகிற அல்லது தரப்படக்கூடிய விலையைவிடக் குறைந்த விலையில் அவற்றை மக்களுக்கு வழங்குவது, சில பொருள்களின் உற்பத்தி, பங்கீடு

ஆகியவைபற்றி ஏற்படவேண்டிய ஒழுங்குபாட்டை உருவாக்குவது ஆகிய இத்தகைய நோக்கங்கள்தான், அரசாங்கம் தொழில் துணிவுகளை மேற்கொள்வதற்கான காரணங்களாகப் பெரும் பாலான நேரங்களில் காணப்படுகின்றன. ஆகவே, பொது மக்களுக்குத் தேவையான பொருள்களைத் தேவையான அளவில் தருவதற்குத் தனியார் இலாப நோக்கத்தால் (private profit motive) இயலாதிருப்பதால்தான், வாணிபத் தொழில்துணிவுகளைத் தம் உடைமையாகக் கொள்ளவும் அவற்றை இயக்கவும் அரசாங்கங்கள் முன்வருகின்றன என்பது தெளிவு. இதே உண்மையை இன்னொரு வகையில் கூறுவதானால், பல சமயங்களில் தனியார் தொழில்துணிவோரின் நலன்கள் நுகர்வோரின் நலன்களுக்கு முரண்பாடாக உள்ளன என்றும், அத்தகைய நிலைமைகளில் நுகர்வோரின் நலனை முன்னிட்டு உற்பத்தியை அரசாங்கமே மேற்கொண்டுவிடுகிறது என்றும் கூறலாம்.

**பொது நலனுக்கான கட்டுப்பாடுகள் போதிய பயனை விளையாமை:** பொது வசதித் தொழில்துணிவுகள் (public utility enterprises) குறிப்பட்ட வட்டாரங்களில் முற்றுரிமை உடையவனவாக இருப்பதாலும், அவற்றால் விற்கப்படுகிற பொருள்களும் ஊழியங்களும் மக்களின் வாழ்க்கைத் தரத்தின் தலையாய கூறுகளாக அமைந்திருப்பதாலும், அத்தொழில் துணிவுகளை நடத்துவதற்காக அனுமதி தருவது சில பொதுச் சலுகைகளைத் தருவதாக அமைகிறது என்பதாலும், அத்தகைய தொழில்துணிவுகளை ஒழுங்குபடுத்தவேண்டியது, அரசாங்கத்தின் கடமையாக ஆகிவிடுகிறது. அதாவது, அத்தொழில்துணிவுகளின் உற்பத்தியிலும் பங்கீட்டிலும் இயல்பாக அமைந்துள்ள சில இயல்புக்கூறுகளின் விளைவாகவே அவற்றை ஒழுங்குபடுத்தவேண்டிய இன்றியமையாமை ஏற்படுகிறது. அத்தொழில்துணிவுகளின் ஊழியங்கள் மிக மிக முக்கியத்துவம் உடையனவாக இருப்பதால், அவற்றை ஒழுங்குபாட்டுக்கு உள்ளாக்காமல் விட்டுவிட்டால், அவற்றின் முற்றுரிமை நிலைமை காரணமாக, நுகர்பவர்களுக்கு ஆபத்து ஏற்படக்கூடும். எனவேதான், அத் தொழில்துணிவுகளின் கட்டணங்களையும் நடைமுறைகளையும் கட்டுப்படுத்துவதற்கான விரிவான ஏற்பாடுகள் தோன்றியுள்ளன. ஆனால், பல வட்டாரங் களில், இங்கே விளக்கிக் கூறமுடியாத பல காரணங்களால், அத்தகைய ஒழுங்கு பாட்டு ஏற்பாடுகளால், மக்கள் நலனைப் போதிய அளவில் பாதுகாக்க முடியவில்லை, அத்தகைய சமயங்களில், குறிப்பிட்ட பொருள் அல்லது ஊழியம் பற்றிய உற்பத்திச் சாதனங்களையும் பங்கீட்டுச் சாதனங்களையும் அரசாங்க உடைமையாக்கிவிடவேண்டும் என்னும் கருத்து வலுப்பெற்று, அரசாங்க ஒழுங்குபாட்டுக்குப் பதிலாக அரசாங்க உடைமையே ஏற்பட்டுவிடுகிறது.

தனியாரிடம் உள்ள பொதுவசதி நிறுவனங்கள்பற்றிப் பொதுமக்கள் கொள்ளும் மனக்குறைகள் பெரும்பாலும் விலையைப் பற்றியதாகவே இருக்கின்றன. விலைகள் மிகக் கூடுதலாக இருக்கின்றன• என்றும், சிறிய அளவில் பண்டங்களைப் பயன் பயன்படுத்துவோர்மீது விலைகளால் ஏற்படும் சுமை பெரிய அளவின தாக இருக்கிறது என்றும், ஈட்டப்படும் இலாபங்கள் அளவுக்கு மீறியனவாக உள்ளன என்றும் கண்டனங்கள் எழுப்பப்படுவது இயல்பாக இருக்கிறது. சில சமயங்களில், பண்டங்களின் (அல்லது ஊழியங்களின்) தரத்தை உயர்த்துவதற்காக, அரசாங்கம் பொது வசதித் தொழில்களைத் தன் உடைமையாக்கிக்கொள்ளவேண்டும் என்ற கருத்தும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. குறிப்பாக, மின்சார வசதித் துறையில், மின்சாரக் கம்பெனிகள் மாபெரும் நிறுவனங்களாக இணைக்கப்படுவதும், அந் நிறுவனங்களின் உரிமை பல கம்பெனிகளிடம் கூட்டான முறையில் அமைந்திருப்பதும் பொது மக்களின் உள்ளங்களில் குழப்பத்தை உண்டாக்கியிருக் கின்றன. இக் குழப்பம் காரணமாக, நிறுவன உரிமையாளர்களின் நலன்களும் நுகர்வோரின் நலன்களும் ஒன்ருக இருப்பதில்லை.

நீண்டகாலமாக அரசாங்க ஒழுங்குபாட்டுக்கு ஆளாகியுள்ள வாணிபத் துறைகளில்தான் தல அரசாங்கங்கள் நுழைந் திருக்கின்றன என்னும் உண்மை சிறப்பாகக் குறிக்கத்தக்க ஒன்ருகும். மின்சார சக்தி, தண்ணீர் அளிப்பு, (ஓரளவுக்கு) ஒளியை உண்டாக்குகிற ஆவிகள் (illuminating gases), டிராம் போக்கு வரத்து ஆகியவை இத்தகைய வாணிபத் துறைகளுக்குரிய எடுத்துக் காட்டுகள் ஆகும். பொதுநலனைப் பேணிக்காக்க வேண்டுமானுல், தனியார் நிறுவனங்களை நிர்வாகத் துறைவழி ஒழுங்குபடுத்துவதை விட அவற்றின் உடைமையை அரசாங்கம் மேற்கொள்வதுதான் சிறந்தது என்பதே, மேற்படி உண்மையிலிருந்து நாம் கொள்ளக் கூடிய முடிவாகும். முற்றுரிமை 'இயற்கையானதாக' உள்ள தொழில்களில், ஒழுங்குப்பாட்டைச் சீர்திருத்திச் சிறப்பாக அமைக்கவேண்டிய தேவை ஏற்பட்டபோதெல்லாம், அத் தொழில்களைத் தனியார் உடைமையிலிருந்து அரசாங்க உடைமையாக மாற்றவேண்டிய நிலையே ஏற்படுகிறது. ஆனுல், முற்றுரிமை 'இயற்கையானதாக' இல்லாத தொழில்களில், தனியார் தொழில்துணிவோடு அரசாங்கமும் போட்டியிட வேண்டும் என்று, சில சமயங்களில், பரிந்துரை செய்யப் பட்டிருக்கிறது. தனியாருடைய மின்சாரக் கட்டணங்களின் நியாயத்தை அறிவதற்குரிய அளவுகோலாக அரசாங்கத்தால் நடத்தப்படும் டென்னிசி பள்ளத்தாக்கு நிறுவனம் (Tennessey Valley Authority) விதிக்கும் கட்டணத்தைப் பயன்படுத்தும் போக்கு

இருப்பது, இத்தகைய ஒரு போட்டியைத்தான் எடுத்துக் காட்டுகிறது. கூட்டரசாங்கத்தால் நடத்தப்படும் உள்நாட்டு நீர்வழிகள் கார்ப்பரேஷன் (Inland Waterways Corporation), உள்நாட்டு ஆறுகளில், தனியார் நிறுவனங்களுக்குப் போட்டியாகத் தன் படகுகளை இயக்கிவருகிறது. அப்படி இயக்குவதற்கான காரணம், நியாயமான போட்டிக் கட்டணங்களை (reasonable competitive rates) நிலைநாட்டவேண்டும் என்பதே. மந்த காலத்தில் உருவாக்கப்பட்ட கூட்டரசாங்கக் கடன் கார்ப்பரேஷன்கள் (Federal Credit Corporations) மந்த காலத்திற்குப் பிறகும் தொடர்ந்து இருப்பதற்கான ஒரு காரணம், தனியார் நிதித்துறை நிறுவனங்களால் தரப்படும் கடன்களின் வட்டி வீதம் குறைக்கப்பட வேண்டும் என்னும் அரசாங்கத்தின் விழைவு ஆகும். இந்த விழைவு சிறப்பான அளவில் நிறைவேறியிருக்கிறது. 1874-ல் காங்கிரஸ், இரயில்வே போக்கு வரத்துக் கட்டணங்களைக் குறைந்த அளவில் நிலைநாட்டுவதற்கான வழிமுறைகளைக் கண்டறிவதில் ஈடுபட்டிருந்தபோது, அக் காங்கிரசின் விண்டம் குழுவானது (Windom committee) தனியார் இரயில்வேக்களுக்குப் போட்டியாக அரசாங்கம் தானே சில இரயில்வேக்களை விலைக்கு வாங்கி நடத்த வேண்டும் என்று பரிந்துரை செய்தது. ஆனால், அத்தகைய திட்டம் எதுவும் நடைமுறையில் கையாளப்படவில்லை. கையாளப் படாததற்கு ஒரு காரணம், 1874-க்குப் பிந்திய ஆண்டுகளில் சாலைப் போக்குவரத்துக்கும் இரயில் போக்குவரத்துக்கும் ஏற்பட்ட கடும் போட்டியின் காரணமாக இரயில் கட்டணங்கள் சிறப்பான அளவில் குறைந்து விட்டதே ஆகும். இங்கே தரப்பட்ட விதிவிலக்கு கள் தவிர்த்த பிற அரசாங்கத் தொழில்கள், பெரும்பாலும் முற்றுரிமைத் தொழில்களே.

**தனியார் மூலதனத்திற்கு ஆபத்தை ஏற்கும் விருப்பமின்மை (Unwillingness of Private Capital to Assume Risk) :** இலாபம் கிடைப்பது ஐயத்திற்கு இடமாக உள்ள தொழில்களில் அல்லது இலாபம் நெடுங்காலத்திற்குப் பிறகே கிடைக்கக்கூடிய தொழில்களில் துணிந்து இறங்குவதற்குத் தனியார் மூலதனத்திற்கு விருப்பம் இல்லாதிருப்பதே நுகர்வோர் நலனுக்கும் இலாப நோக்கத்திற்கும் இடையே உள்ள முரண்பாட்டின் இரண்டாவது தன்மை ஆகும். தனியார் மூலதனம், பனமா கால்வாயை (Panama Canal) முடிக்கத் தவறியது, இந்த உண்மையை விளக்கும் ஓர் எடுத்துக்காட்டு ஆகும். இந்தத் திட்டமானது போதிய அளவில் பண இலாபத்தைத் தருமா என்பது ஐயத்திற்கு உரியதாக இருந்தாலும், ஓரளவு பண இலாபத்தோடு, நாட்டுப் பாதுகாப்பையும் குறைந்த கட்டணமுள்ள போக்குவரத்து வசதியையும் தரக்கூடிய திட்டமாக இருந்தால்,

தன்னுடைய ஏராளமான சாதனங்களில் ஒரு பகுதியை இதற்காகத் துணிந்து செலவிடுவது, அரசாங்கத்தால் இயலக்கூடிய செயலாக இருந்தது. பொதுநல மேம்பாடு என்னும் இலாபத்தைப் பெறுவதில் அரசாங்கத்திற்கு உள்ள அக்கறையின் விளைவாக, இத் திட்டத்தின் பண இலாபம் குறைவாக இருக்கும் ஆபத்தைக் கண்டு தனியார் மூலதனம் அஞ்சக்கூடிய அளவுக்கு அரசாங்கம் அஞ்சவில்லை.

1930-ஐத் தொடர்ந்த மந்தகால ஆண்டுகளின்போது நிறுவப்பட்ட கூட்டரசாங்கக் கடன் தரும் கார்ப்பரேஷன்களில் பல, பாங்குகளும் ஏனைய கடன் தரும் நிறுவனங்களும் மிகவும் ஆபத்தானவை என்று கருதி ஒதுக்கிய வகைகளைச் சேர்ந்த கடன்களைத் தருவதற்காகவே ஏற்படுத்தப்பட்டன. மந்த காலத்தில், பாங்குகள், அடைமானக் கடன் பெற விரும்பியவர்களும், தங்களுடைய சொத்துகளின் மூலம் பணம் பெறமுடியாத நிலை ஏற்பட்டதன் விளைவாகப் பாங்குகளிடம் கடன்பெற விழையும் வணிகர்களும் மிக உயர்ந்த நிபந்தனைகளை நிறைவுசெய்தால்தான் அவர்களுக்குக் கடன் தருவது என்னும் கொள்கையைக் கையாண்டன. இத்தகைய நிலைமையில் தரப்படும் கடனில் பொதிந்துள்ள ஆபத்தின் மிகுதி காரணமாக வட்டி வீதங்கள் உயர்ந்துவிட்டன. குறைந்த வட்டிக்குக் கடன் தரும் செயலில் அரசாங்கம் ஈடுபடத் தொடங்கியமை, அதனுடைய பொருளாதார மீட்சித் திட்டத்தின் ஒரு பகுதியாகும். இத்தகைய ஒரு திட்டத்தைத் தனியார் மூலதனம் மேற்கொள்ளவேண்டும் என்று எதிர்பார்க்க முடியாது.

1930 ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளின் இடைப் பகுதியில் கூட்டரசாங்கம், கிராமங்களை விரைவில் மின்சாரமயமாக்கும் பணியை மேற்கொண்டது. இந்தப் பணியை அது மேற்கொண்டதற்குரிய காரணங்கள் பல. மின்சாரத்தை வழங்குவதற்குரிய கருவிகளையும் தளவாடங்களையும் உற்பத்தி செய்வதிலும் வாங்குவதிலும் உள்ள வேகத்தை மிகுதிப்படுத்துவதும், மீட்சித் திட்டத்தின் ஒரு பகுதி என்று அரசாங்கம் கருதியது, ஒரு காரணம். பண்ணைகளில் ஏற்படும் உழைப்புச் செலவைக் குறைக்கவேண்டும் என்பது மற்றொரு காரணம். நகரத்தில் வாழ்பவர்களுக்கு மட்டுமே நெடுநாட்களாகக் கிடைத்துவந்த வாழ்க்கை வசதிகளைக் கிராமப்புற மக்களுக்கும் பெற்றுத் தரவேண்டும் என்பது இன்னொரு காரணம். தனியார் மின்சாரக் கம்பெனிகள் குறைந்த மக்கள் தொகையை உடைய பகுதிகளில் உள்ள பண்ணைகளுக்கு மின்சார சக்தியை வழுங்குவதாக இருந்தால், வழங்கும் செலவு வரை கடந்ததாக ஆகிவிடுகிறது. ஒவ்வொரு வாடிக்கைக்காரருக்கும்

மின்சாரம் வழங்கும் இணைப்புகளை அமைப்பதில் ஏராளமான அளவில் முதலீடு செய்யவேண்டிய நிலை இருப்பதே, அத்தகைய செலவுக்கான தலையாய காரணமாகும். அரசாங்கமானது அந்தந்த வட்டாரங்களில் உள்ள கூட்டுறவுச் சங்கங்கள், பொது மக்களின் அமைப்புகள் ஆகியவற்றிற்குக் குறைந்த வட்டிக்கு நீண்ட காலக் கடன் கொடுத்து, அந்தக் கடன் தொகையைக் கொண்டு மின்சார இணைப்புகளை ஏற்படுத்தும் பணியை அவை மேற்கொள்ளும்படிச் செய்தது. இந்தத் திட்டத்தின் பயனாக நூற்றுக்கணக்கான பண்ணைகளுக்குக் குறைந்த செலவில் மின்சார சக்தி கிடைக்கலாயிற்று. குறைந்த மக்கள் தொகையை உடைய பகுதிகளுக்கு மின்சாரத்தைக் கிடைக்கவைப்பதற்கு அரசாங்கம் மேற்கொண்ட இந்த முறையானது, தனியார் மூலதனம் ஈடுபட விரும்பாத ஒரு வாணிபத் துறையில் (கடன்கள் தரும் துறை) அரசாங்கம் ஈடுபட்டதையே குறிக்கிறது.

பல்வேறு துறைகளில் அரசாங்க வாணிபத் தொழில் துணிவுகள் பெருகிவருவதற்குக் காரணம், தனியார் மூலதனத்தைவிட அரசாங்க மூலதனம் கூடுதலான துணிவு உடையதாக இருப்பதே. பல துறைகளில் அரசாங்கம் துணிந்து மேற்கொண்ட சோதனைகள், பிற்பாடு அரசாங்கத்திற்கும் தனியார் மூலதனத்திற்கும் இடையே 'மோதல்களை' ஏற்படுத்தத்தக்க அளவுக்கு வெற்றி மிகுந்தனவாக விளங்கின. அரசாங்கத் தொழில்துணிவுகள் வேரூன்றிவிட்டபிறகு அவற்றில் செய்யப்பட்ட முதலீடுகள், முதலில் எதிர்பார்த்ததைவிடக் குறைந்த அளவு ஆபத்தையே உடையனவாக இருப்பது, தெளிவாக விளங்கலாயிற்று.

இந்த உண்மையை விளக்கும் வகையில் அண்மைக்கால எடுத்துக்காட்டுகள் இரண்டை இங்கே சுட்டிக்காட்டுவது பொருத்தமாக இருக்கும். 1930ஐத் தொடர்ந்த ஆண்டுகளின் பொருளாதார மந்தம் முடிந்த பிறகு, 'அரசாங்கக் கடன்தரும் நிறுவனங்கள், பாங்குத் துறையிலிருந்து அகற்றப்பட வேண்டும்' என்னும் கருத்து பாங்குகளிடையே பரவலாயிற்று. மந்த காலத்தில் பாங்குகள் ஏற்கவே விரும்பாத ஆபத்துகளை, அல்லது மிகமிகக் கூடுதலான வட்டிக்கு எதிராக மட்டுமே ஏற்க விரும்பிய ஆபத்துகளை ஏற்பதற்காகவே, அரசாங்கக் கடன்தரும் நிறுவனங்கள் முதலில் பாங்குத் துறையில் நுழைந்தன. அப்படி நுழைந்ததன் நீண்ட கால விளைவாக, மூலதன அங்காடியின் நிலைமைகளில் ஒரு மாறுதல் ஏற்பட்டது; இழப்பு ஏற்படக்கூடிய ஆபத்து (risk of loss) எதிர்பார்த்த அளவைவிடக் குறைவாகவே இருக்கிறது என்பதும் தெளிவாகத் தெரிந்துவிட்டது. ஆகவே, பாங்குகள் இப்போது இந்த ஆபத்துகளைக் குறைந்த வட்டிக்கு ஏற்றுக்கொள்ள முன்வரலாயின.

கிராமப் பகுதிகளை மின்சார மயமாக்கும் திட்டம், இரண்டாவது எடுத்துக்காட்டு ஆகும். கிராம மின்சார நிர்வாக அமைப்பின் (rural electrification administration) பெருவெற்றியைக் கண்ட தனியார் மின்சாரக் கம்பெனிகள், தங்களுடைய வாணிபப் பெருக்கத்திற்கான இந்தத் துறை என்றென்றும் தங்களுக்கு எட்டாத கனியாகவே இருந்துவிடுமோ என்னும் அச்சத்திற்கு உள்ளாயின. ஆகவே, அவை, கிராம வட்டாரங்களில் ஒரு பகுதி மேற்படி அரசாங்க அமைப்பாலும், ஏனைய பகுதி தங்களாலும் மின்சார மயமாக்கப்படலாம் என்னும் தன்மையில் அமைந்த ஓர் ஒப்பந்தத்தை முன்மொழிந்தன. ஆனால், அந்த அரசாங்க அமைப்பு இத்தகைய ஒப்பந்தத்திற்கு இணங்க மறுத்துவிட்டது. மின்சாரத்திற்குச் கூடுதலான விலையைத்தர ஆயத்தமாக உள்ள பகுதிகளுக்கு மட்டுமே இந்தத் தனியார் நிறுவானங்கள் மின்சாரத்தை வழங்கக் கூடும் என்றும், குறைந்த வருமானமும், குறைந்த மக்கள்தொகையும் உடைய பகுதிகள் புறக்கணிக்கப்படக்கூடும் என்றும் அந்த அரசாங்க அமைப்பு கருதிய காரணத்தாலேயே மேற்குறித்த ஒப்பந்தத்திற்கு அது இணங்க மறுத்துவிட்டது. அந்த ஒப்பந்தம் ஏற்றுக்கொள்ளப் பட்டிருந்தால், இருவகை அமைப்புகளுக்கிடையே ஏற்பட்டிருக்கக் கூடிய போட்டியால், ஒன்றை ஒன்று குற்றம் சாட்டிக்கொள்ளும் போக்கும் ஒன்றோடு ஒன்று பிணங்கி நிற்கும் நிலையுமே உருவாகி யிருக்கும். ஆனால், ஒன்றுமட்டும் உறுதி. தேவையான அளவிலும் முறையிலும் மின்சார சக்தியை வழங்குவதற்கான உறுதி மொழியைத் தரத் தனியார் நிறுவனங்கள் ஆயத்தமாக இராமல், அங்காடியில் உள்ள கவர்ச்சிமிகுந்த வாடிக்கைக்காரர்களை மட்டும் மன நிறைவூட்ட அவை விழையுமானால், அரசாங்கம் ஒருநாளும் அந் நிலையை ஏற்றுக்கொள்ள முடியாது.

குறைவான—ஆனால் நியாயமான விலையில் ஆபத்துக்களை ஏற்கத் தனியார் மூலதனம் விரும்பாமல் இருக்கும் நிலைமைக்கு மற்றோர் எடுத்துக்காட்டு வேண்டுமானால், போர்க் காலத்தில் தரைப்படை கப்பற்படை ஆகியவற்றின் வீரர்களை உயிர் ஈட்டுறுதி (life insurance) செய்யும் துறையைச் சுட்டிக்காட்டலாம். தற்போது அரசாங்கம் ஆற்றுகிற இந்த ஈட்டுறுதிப் பணியைத் தனியார் ஈட்டுறுதியில் அடங்கியுள்ள இயல்பல்லாத ஆப்பத்துக்களை முன்னிட்டு இயல்பல்லாத கட்டணங்களை விதிக்கவேண்டியிருக்கும். ஆனால் போர் வீரர்களிற் பெரும்பாலோர் தாமாக முன்வந்து தம் உயிரை ஈட்டுறுதி செய்துகொள்ளவேண்டுமானால், கட்டணங்கள் குறைவாக இருக்கவேண்டும். அரசாங்கத்தின் பொது வருவாய்கள் எதிர்பாராத செலவுக்கான ஒரு காப்பிருப்பாக இருப்பதால், அரசாங்கம், ஏராளமான வீரர்களைக் குறைந்த கட்டணங்களில்

ஈட்டுறுதி செய்திருக்கிறது. எந்த அளவுக்கு அதிகமான வீரர்கள் ஈட்டுறுதி செய்யப்படுகிறுர்களோ அந்த அளவுக்கு ஈட்டுறுதி செய்யப்பட்ட வீரர்களின் தலா ஆபத்து குறைவாக இருக்கும்.

இலாப நோக்கத்தை முன்னிட்டுச் சாதனங்களை முற்றிலும் தீர்த்துவிடும் தனியார் ஆர்வத்திற்கும், பொது நலனை முன்னிட்டுச் சாதனங்களைப் பாதுகாக்கும் தேவைக்கும் இடையே ஏற்படும் முரண்பாட்டின் விளைவாகச் சில சமயங்களில் சாதனங்களை அரசாங்க உடைமையாக்கவேண்டியிருக்கிறது. அத்தகைய சமயங்களில், அந்த அரசாங்க உடைமைகளை நடைமுறையில் இயக்கும் பொறுப்பையும் அரசாங்கமே ஏற்றுக்கொள்வது உண்டு; அல்லது அப் பொறுப்பை மட்டும் தனியாரிடம் விட்டுவைப்பதும் உண்டு. இலாபம் பெறும் விழைவானது, எல்லாச் சமயங்களிலும், நாட்டின் பாதுகாப்பு, நாட்டின் சாதனங்களை ஒழுங்கான முறையில் பயன்படுத்துவது ஆகிய நோக்கங்களோடு பொருந்தியிருக்கும் என்று கூறமுடியாது. காட்டுவளத்தைப் பாதுகாப்பதற்குக் காட்டு நிலங்களைத் தனியாருக்கு விற்றுவிடுவதைவிட, அந் நிலையங்களை அரசாங்கம் தன் உடைமையாகத் தொடர்ந்து வைத்துக்கொண்டு, அந் நிலங்களிலிருந்து கிடைக்கும் மரங்களைமட்டும் தனியாருக்கு விற்றுவிடுவதே பொருத்தமான முறையாக இருக்கிறது. அதுபோலவே, பெட்ரோல், நைட்ரேட் (Nitrate) ஆகிய பொருள்கள் கிடைக்கும் இடங்களின் உடைமையை, நாட்டின் பாதுகாப்புக் காரணங்களை முன்னிட்டு அரசாங்கம் தானே வைத்துக் கொண்டிருக்கிறது. தனியார் நிறுவனங்களின் உடைமையாக இந்த இடங்கள் விடப்படுமானுல், அக் கம்பெனிகளால் இந்தப் பொருள்களின் வைப்பு மிகுதியாக உள்ள இடங்கள் முதலில் தீர்த்துக்கட்டப்பட்டுவிடும். அதன் விளைவாக, நாட்டில் நெருக்கடி ஏற்படும்போது பயன்படுத்துவதற்கு இத்தகைய சாதன மூலங்கள் இல்லாமற் போய்விடும்.

பயன்மிகுந்த சிலவகை உற்பத்தித் துறைகளில் தனியார் முதலீடு ஏற்படாததற்குக் காரணம், அத்தகைய துறைகளில் அரசாங்கம் தானே போட்டியிடுவதன்மூலமாக அல்லது வேறு வழிகளில் ஒழுங்குபாட்டை ஏற்படுத்தக்கூடும் என்ற அச்சம் தனியாருக்கு இருப்பதே ஆகும். நாடு முழுவதும் பரவியுள்ள ஓர் அஞ்சல்முறையை இயக்குவதற்குத் தேவையான அளவில் முதலீடு செய்வதற்கான ஆற்றல் தனியார் மூலதனத்திற்கு இருப்பதாக வைத்துக்கொண்டால்கூட, குறைவான அஞ்சல் கட்டணங்களை நிலைநாட்டுவதில் அரசாங்கத்திற்கு உள்ள அக்கறையை எளிதல் உணர்வதால், தனியார் மூலதனம் அத் துறையில் ஈடுபடாது என்பது

வெள்ளிடைமலை. ஏனென்றால், விரிவான அளவில் தகவலைப் பரப்பும் அரசாங்கப் பணி முழுவதும் அஞ்சல் முறையோடு இரண்டறக் கலந்திருப்பதால், அந்தப் பணி மிகச் சிறப்பாக நடைபெறவேண்டும் என்பதற்காக அஞ்சல் கட்டணங்களைக் குறைந்த அளவில் நிறுத்துவதில் அரசாங்கம் ஆர்வம் கொள்வது இயல்பு. இத்தகைய நிலையில் அஞ்சல் பணியைத் தனியார் நிறுவனம் மேற்கொண்டால், மிகக் கடுமையான கட்டணக் குறைப்புக்கு அது ஆயத்தமாக இருக்கவேண்டும். இவ்வாறு மிகக்குறைந்த கட்டணத்தை மட்டுமே விதிக்கக்கூடிய ஒரு தொழிலில் மிக விரிவாக முதலீடு செய்வதில் தனியார் நிறுவனத்திற்கு எத்தகைய் ஆர்வமும் இருக்கமுடியாது. இதுபோலவேதான், அரசாங்கப் போட்டி இருக்கக்கூடும் என்கிற நிலைமை காரணமாக, வாணிபமுறைப் பூங்காக்கள், மற்றும் விளையாட்டுத் திடல்கள், சுங்கம் விதிக்கத்தக்க பாலங்கள் முதலிய திட்டங்களில் தனியார் முதலீடு ஏற்படுவதில்லை. பொதுவாகக் கூறுவதானால், ஒரு தொழில் துணிவிலிருந்து தனிப்பட்ட ஆட்களுக்குக் கிடைக்கக்கூடிய குறிப்பான நன்மைகளைவிடச் சமுதாயத்திற்குக் கிடைக்கக்கூடிய பொதுவான நன்மைகள் மிகுதியாக இருக்குமானால், அந்தத் தொழிலில் அரசாங்கத் தலையீடு அல்லது போட்டி ஏற்படுவது இயல்பு. அது ஏற்படக்கூடும் என்கிற அச்சத்தின் காரணமாக இலாப முன்னேக்குகள் குறைவதால் அத்தகைய் தொழிலில் தனியார் முதலீடு எளிதில் ஏற்படுவதில்லை.

**அரசாங்க உபரிப் பொருள்களின் விற்பனை :** தன்னிடம் உள்ள சில பயன்மிக்க பொருள்களைப் பதுக்கி வைத்துப் பாழாக்குவதற்குப் பதிலாக—அல்லது, அழித்து ஒழித்துவிடுவதற்கு மாறாக அவற்றை விலைக்கு விற்றுவிடவேண்டும் என்று அரசாங்கம் கருதுவதன் விளைவாகச் சில வாணிபத் துறைகளில் அரசாங்கத்தின் ஈடுபாடு உருவாகிறது. ஐக்கிய அமெரிக்காவில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் அரசாங்க நிலங்கள் விற்கப்பட்டது, இதற்குரிய ஒரு முக்கியமான எடுத்துக்காட்டு ஆகும். அமெரிக்காவில் உள்ள அரசியல், பொருளாதாரத் தத்துவங்களின் தன்மை காரணமாக, இந்த நிலங்களை அரசாங்கம் தானே வேளாண்மை செய்வதோ, அல்லது குத்தகைதாரர்களைக் கொண்டு வேளான்மை செய்விப்பதோ இயலாத செயல். ஆகவே, இவற்றின் உடைமையைத் தனியாருக்கு மாற்றுவது ஒன்றுதான் நிறைவேற்றக்கூடிய செயலாக இருந்தது. அந் நிலங்கள், அவற்றில் குடியேறுபவர்களுக்குக் [ஊக வாணிபர்களுக்கும் (speculators)] குறைந்த விலையில் விற்கப்பட்டன; இரயில்வேக்களுக்கு உதவிக் கொடைகளாக (subsidies) வழங்கப்பட்டன. அந் நிலங்களை நன்கொடையாகக் கொடுத்திருக்கமுடியாது. ஏனென்றால், அப்படிக் கொடுத்தால்

அரசாங்கம் விரும்பிய முறையில் குடியிருப்புகள் (settlements) உருவாகியிருக்கமாட்டா. அதோடு, நிலங்களைத் தம் உடைமையாகப் பெறுபவர்கள், அவற்றிற்காகக் குறைந்தது ஒரு பெயரளவு தொகையையாவது (nominal sum) தருவதுதான் நியாயம். அதுமட்டுமல்ல. அவ்வாறு தரப்படும் தொகை அரசாங்கக் கடனைத் தீர்ப்பதற்கும் பயன்படும். எனவே, இந்த நில விற்பனைக் கொள்கையால் குறிப்பான நன்மை அடைபவர்கள், அந்த நன்மைக்காகப் பணம் செலுத்துகிறார்கள். அதே சமயத்தில், நில விற்பனைத்தொகை பொதுக் கடனைக் குறைப்பதற்குப் பயன் படுவதால், வரி செலுத்துவோர் அனைவரும் பொதுவான நன்மை அடைகிறார்கள்.[2]

வாணிபத் துறையைச் சாராத பிற பணிகளை நிறைவேற்றும் போது தனக்குக் கிடைக்கிற துணைப்பொருள்களை விற்பதற்காக, அரசாங்கம், போட்டியுள்ள வாணிபத் துறைகளில் ஈடுபடக்கூடும். சிக்கன உணர்ச்சியின் விளைவாக, அல்லது, பொதுநலனை மேம்படுத்த வேண்டும் என்னும் எண்ணத்தின் விளைவாக அரசாங்கம் இத்தகைய ஈடுபாட்டைக் கொள்ளக்கூடும். எடுத்துக்காட்டாக, டென்னிசி பள்ளத்தாக்குத் திட்டம், தொடக்கத்தில், வெள்ளத்தையும் நில அரிப்பையும் கட்டுப்படுத்துவதற்கும் கப்பல் போக்குவரவு வசதியைப் பெருக்குவதற்குமே தீட்டப்பட்டது. இந்த நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக டென்னிசி பள்ளத்தாக்கில் அணைக் கட்டுகளைக் கட்டவேண்டியது இன்றியமையாதது ஆயிற்று. சற்றே கூடுதலாக முதலீடு செய்வதன்மூலம், மின்சாரத்தை உற்பத்தி செய்ய முடிந்தது. இம் மின்சாரத்தின் ஒரு பகுதி, அரசாங்க உடைமையாகவுள்ள நைட்ரேட் படிவங்களைப் (Nitrate deposits) பயன்படுத்துவதற்காகக் கையாளப்பட்டது என்றாலும், அதன் பெரும் பகுதி, பொதுமக்களிடம் விற்கப்பட்டது.[3] இந்த டென்னிசி பள்ளத்தாக்குத் திட்டத்தில் இவ்வாறு எளிதில் உற்பத்தி செய்ய முடிகிற மின்சாரத்தை உற்பத்தி செய்யாமல் இருந்தால், அது சிக்கனமற்ற நடவடிக்கையே என்பதில் ஐயமும் உண்டோ? அதுபோலவே, போர் முடிவுற்ற நிலையில், தனியார் தொழில் துணிவுடன் போட்டியிடக்கூடாது என்பதற்காக, உபரியாக உள்ள போர்ப் பொருள்களை அழித்துவிடுவது சிக்கனமற்ற முறையே என்பதில் துளியும் ஐயமில்லை. குறிப்பிட்ட பொருள்கள் பயன் உள்ளவையாக இருந்து, தேவையுள்ள இடத்தில் அல்லது தேவையுள்ள காலத்தில் கிடைக்கக்கூடியனவாகவும் இருக்குமானால், அவற்றைப் பயன்படுத்தத்தான் வேண்டும்.[4]

தனக்கு இலாபம் தேடிக்கொள்வதையே முதன்மையான நோக்கமாகக் கொண்டு அரசாங்கம் வாணிபத் துறைகளில் ஈடுபடக்கூடும் என்பதையும், சில சமயங்களில் அது அப்படித்தான் ஈடுபடுகிறது என்பதையும், நம்முடைய பகுத்தாய்வு எடுத்துக் காட்டியுள்ளது. ஆனால், பெரும்பாலான அரசாங்கத் தொழில்களில் இந்த நோக்கம் தலையாயதாக இல்லை. அரசாங்க வாணிபத்தில் ஈடுபடுவதற்கான முதன்மையான காரணங்கள், இலாப நோக்கத்திற்கும் பொதுநலத்திற்கும் ஏற்படும் மோதுதல் என்னும் பொதுவான தலைப்பின்கீழ்க் குறிக்கத்தக்கவையே. இந்த மோதுதல் அல்லது முரண்பாட்டின் விளைவாக, விலைகள், இலாபங்கள் அல்லது ஊழியத்தை அரசாங்கம் ஒழுங்குபடுத்துவதால் கிடைக்கும் பயனைவிடத் தனியார் உடைமைக்குப் பதிலாக அரசாங்க உடைமையை ஏற்படுத்துவதால் மிகுந்த பயன் கிடைக்கும் என்ற முடிவு ஏற்படக்கூடும். அல்லது, சமுதாயத்திற்குத் தேவையுள்ள பொருள்களை உற்பத்தி செய்வதில் தனியார் மூலதனம் ஈடுபட விரும்பாததால், மேற்படி மோதுதலானது, அரசாங்க உடைமையை யும், அரசாங்க இயக்குதலையும் (operation), ஏற்படுத்தக்கூடும். இறுதியாக, அரசாங்கத்திடம் சமுதாயத்தால் விரும்பப்படுகிற சில பொருள்களும் ஊழியங்களும் இருப்பதாலும், அவற்றால் கிடைக்கிற நன்மைகள் பெரும்பாலும் தனித்தனி ஆட்களைச் சேர்வதால் அவர்கள் அவற்றிற்கான விலையைச் செலுத்துவதுதான் முறையே தவிரச் சமுதாயத்தினிடமிருந்து அவற்றை இலவசமாகப் பெறுவது முறையாகாது என்பதாலும், சில சமயங்களில், அரசாங்கம், கிட்டத்தட்டத் தற்செயலான முறையில் வாணிபத் துறைகளில் ஈடுபட நேரிடலாம்.

**கூட்டரசாங்கத்தின் வாணிபத் தொழில் துணிவுகள்**

கூட்டரசாங்க வாணிபத் தொழில் துணிவுகள் நடைபெறும் நிலப்பகுதி, பல மாநிலங்கள் கொண்டதாக அல்லது பல நாடுகள் கொண்டதாக இருக்கிறது. அரசாங்க வாணிபமானது பல்வேறு மாநிலங்களில் ஒரே வகையாக நடைபெற வேண்டிய தன்மை உடையதாக இருக்கும்போது, அந்த வாணிபம் கூட்டரசாங்கத்தால் நிர்வாகம் செய்யப்படுவது, பெரும்பாலும் தவிர்க்கமுடியாததாக ஆகிவிடுகிறது. (இவ்வாறு கூறுவதால் எல்லா வகையான பல மாநில வாணிபமும் பன்னாட்டு வாணிபமும் கூட்டரசாங்கத்தால் தான் நடத்தப்படுகின்றன என்றோ, கூட்டரசாங்கத்தால் தான் நடத்தப்பட வேண்டும் என்றோ, கருதிவிடக்கூடாது. நாம் இங்கே கூறுவதெல்லாம், பல மாநிலங்களில் அல்லது பல நாடுகளில் ஒருசேர நடத்தப்படவேண்டிய தன்மையை உடைய **அரசாங்கத்**

தொழில் துணிவுகள், அந்த வாணிப எல்லையை ஒத்த அரசியல் அதிகார எல்லையை உடைய அரசாங்கத்தால் நிர்வாகம் செய்யப்பட வேண்டியிருக்கின்றன என்பதுதான்.)

அஞ்சல் முறையும், பனமா கால்வாயுமே, கூட்டரசாங்கத்தால் நடத்தப்படுகிற பல்வேறு வாணிபத் தொழில் துணிவுகளில், எளிதில் நம் நினைவுக்கு வருவன ஆகும். அவ்வாறு வருவதற்குக் காரணம், கூட்டரசாங்கத் தொழில் துணிவுகளில், தொடர்ச்சியாகப் பணியாற்றிக்கொண்டு வருகிற மிகப்பழைய தொழில் துணிவுகள் இவை என்பதே. அஞ்சல் துறையைக் கவனிக்கத் தனியே ஒரு கூட்டரசாங்கத் துறை (Federal department) இருக்கிறது. பனமா கால்வாய், பாதுகாப்புச் செயலாளரின் (Secretary Of Defence) மேற்பார்வையின்கீழ் இருக்கின்றது. அவை இரண்டும் ஊழியங்களை விலைக்கு விற்கின்றன என்றபோதிலும், பொது நன்மைக்கான கூறுகள் ஏராளமான அளவில் அவற்றில் செறிந்து கிடக்கின்றன. அவை தொடங்கப்பட்ட காலத்தில், நிலவிய அரசாங்கத் தத்துவமானது, அரசாங்கம் வாணிப நடவடிக்கைகளில் ஈடுபடுவதை மிகக் குறைந்த அளவிலேயே ஆதரித்துள்ளது என்பதை இதிலிருந்து நாம் எளிதில் உய்த்துணர முடிகிறது.

1931-க்குப் பிறகும், இரண்டாம் உலகப் போரின்போதும், கூட்டரசாங்க வாணிபத் தொழில்துணிவுகளில் குறிப்பிடத்தக்க பெருக்கம் ஏற்பட்டிருக்கிறது. பொருளாதார மந்தத்தின்போது, நீர்மை நிதிகளை விரும்பிய தனியாட்களுக்கும் வாணிபங்களுக்கும் குறைந்த வட்டியில் கடனைத் தந்து, அப்படித் தருவதன்மூலம் மேலும் பண வாட்டம் ஏற்படுவதைத் தடுப்பதற்காகவும், அல்லது, தனியார் நிதி நிறுவனங்கள் அத்தகைய கடன்களைத் தரும்போது அந்தக் கடன்களுக்கான உறுதிமொழி தருவதற்காகவும் பல்வேறு கூட்டரசாங்கக் கார்ப்பரேஷன்களும், ‘நிர்வாகங்களும்’ (administrations) தோன்றலாயின. குறைந்த வட்டிக்குக் கடனாக எழுப்பப் பட்ட அரசாங்க நிதிகளையே இந்த நிறுவனங்கள் கடனாகத் தரலாயின. இந்தக் கடன் தரும் நிறுவனங்களும், கடனுக்கான உறுதிமொழி தரும் நிறுவனங்களும், வேளாண்மை, மின்சார சக்திக் கூட்டுறவுச் சங்கங்கள், இறக்குமதிகள்—ஏற்றுமதிகள், வீடுகட்டுதல், பாங்குகள், இரயில்வேக்கள், வேறுபல வாணிப நிறுவனங்கள் ஆகியவற்றிற்கு நிதிஉதவி புரிவதற்காகவே நிறுவப்பட்டன. இவ்வாறாக 1930-ஐத் தொடர்ந்த ஆண்டுகளில் ஏற்பட்ட கூட்டரசாங்கத்தின் வாணிபத் தொழில்துணிவுகள், ஏற்கெனவே இருந்த கூட்டரசாங்கத் தொழில் துணிவுகளைவிடப் பல மடங்கு மிகுதியான முக்கியத்துவம் உடையவையாக விளங்கலாயின. மந்த காலத்தில் ஏற்பட்ட இந்தக்

கூட்டரசாங்கக் கடன் தரும் கார்ப்பரேஷன்களின் விளைவாக, கூட்டரசாங்க வாணிபத் தொழில்துணிவுகள் பெரும்பாலும் கடன் தரும் தொழில்துணிவுகளே என்னும் நிலைமை உருவாகிவிட்டது. இரண்டாம் உலகப்போரின்போது படைக்கப்பட்ட புதிய வாணிபக் கார்ப்பரேஷன்களிடம், பல துறைகளில் உற்பத்தியைப் பெருக்குதல், காப்பிருப்புக்காகப் பண்டங்களைச் சேமித்துவைத்தல், இன்றியமையாத போர்க்காலக் கட்டுமான வேலைகளை நடத்துதல் ஆகியவை பற்றிய பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது. 1945 ஜூன் 30 அன்று, கீழே தரப்பட்டுள்ள அரசாங்க வாணிபக் கார்ப்பரேஷன்கள், ஒவ்வொன்றும் நூறு மில்லியன் டாலருக்கு மேற்பட்ட மதிப்புடைய சொத்துகளை உடையதாய், பணியாற்றிக்கொண்டிருந்தன.[5] இந்த கார்ப்பரேஷன் ஒவ்வொன்றும் நிறுவப்பட்ட ஆண்டு, அடைப்புக் குறிகளுக்குள் தரப்பட்டுள்ளது. அஞ்சல் முறையும், பனுமா கால்வாயும் இந்தப் பட்டியலில் இணைக்கப்படவில்லை.

அயல்நாட்டுப் பொருளாதார நிர்வாகத்தின் (Foreign Economic Administration) மேற்பார்வையில் இருப்பவை:

வாஷிங்டனின் ஏற்றுமதி இறக்குமதி பாங்கு (Export- Import Bank of Washington) (1934)

ஐக்கிய அமெரிக்க வாணிபக் கம்பெனி (United State Commercial Company) (1942)

வேளாண்மைத் துறையின் (Department of Agriculture) மேற்பார்வையில் இருப்பவை:

கூட்டுறவுகளுக்கான பாங்குகள் (Banks for Co-operatives)[6] (1933)

கூட்டரசாங்க நடுத்தரக்கால கடன் தரும் பாங்குகள் (Federal Intermediate Credit Banks) (1923)

கூட்டரசாங்க நிலப் பாகுங்கள் (Federal Land Banks)[6] (1916)

உற்பத்திக்கான கடன் தரும் கார்ப்பரேஷன்கள் (Production Credit Corporations) (1933)

பண்டங்கட்கான கடன்தரும் கார்ப்பரேஷன் (Commodity Credit Corporation) (1933)

பண்ணைக் கடன்தரும் நிர்வாகம் (Farm Credit Administration) (1933)

பண்ணைப் பாதுகாப்பு நிர்வாகம் (Farm Security Administration) (1937)

கூட்டரசாங்கப் பண்ணை அடைமான கார்ப்பரேஷன் (Federal Farm Mortgage Corporation) (*1933*)

கிராம மின்சாரமய நிர்வாகம் (Rural Electrification Administration) (*1935*)

கூட்டரசாங்கக் கடன் ஏஜன்சியின் (Federal Loan Agency) மேற் பார்வையில் இருப்பவை :

மறு அமைப்பு நிதிக் கார்ப்பரேஷன் (Reconstruction Finance Corporation) (*1932*). மற்றும், அதில் இணைக்கப்பட்டுள்ள நிறுவனங்களில், கீழ் கண்டவை :

பாதுகாப்புப் பொறிக் கார்ப்பரேஷன் (Defence Plant Corporation) (*1940*)

பாதுகாப்பு அளிப்புகள் கார்ப்பரேஷன் (Defence Supplies Corporation) (*1940*)

உலோகங்கள் இருப்புக் கம்பெனி (Metals Reserve Company) (*1940*)

இரப்பர் இருப்புக் கம்பெனி (Rubber Reserve Company) (*1940*)

போர் சிதைவுக் கார்ப்பரேஷன் (War Damage Corporation) (*1941*)

நாட்டின் வீடு கட்டும் ஏஜன்சியின் (National Housing Agency) மேற் பார்வையில் இருப்பவை :

கூட்டரசாங்க வீட்டுக்கடன் பாங்குகள் (Federal Home Loan Banks)[6] (*1932*)

சேமிப்புகள் மற்றும் கடன் ஈட்டுறுதிக் கார்ப்பரேஷன் (Savings and Loan Insurance Corporation) (*1932*)

வீட்டு உரிமையாளர்களின் கடன் கார்ப்பரேஷன் (Home Owners' Loan Corporation) (*1933*)

கூட்டரசாங்கப் பொது வீடு கட்டும் அமைப்பு (Federal Public Housing Authority) (*1941*)

கூட்டரசாங்க வீடுகட்டும் நிர்வாகம் (Federal Housing Administration) (*1934*)

சுயேச்சை ஏஜன்சிகள் (Independent Agencies):

கூட்டரசாங்க வேலை ஏஜன்சி (Federal Work Agency) (*1939*)

கூட்டரசாங்க வைப்பு ஈட்டுறுதிக் கார்ப்பரேஷன் (Federal Deposit Insurance Corporation)[6] (*1933*)

ஐக்கிய அமெரிக்கக் கப்பல் துறை குழு (United States Maritime Commission) *(1936)*

சிறிய போர்ப் பொறிகள் கார்ப்பரேஷன் (Small War Plants Coporation) *(1942)*

டென்னிசி பள்ளத்தாக்கு நிறுவனம் (Tennessey Valley Authority) (*1933*)

போர்க் கப்பல் நிர்வாகம் (War Shipping Administration) *(1942)*

மேலே தரப்பட்டுள்ள அமைப்புகளில் பெரும்பாலானவை, அவை எந்தக் குறிப்பிட்ட நோக்கங்களுக்காகப் படைக்கப் பட்டனவோ அந்த நோக்கங்களை நிறைவேற்றிவிட்ட காரணத்தால், இரண்டாம் உலகப்போருக்குப் பின் கலைக்கப்பட்டுவிட்டன. ஆனால், அந்த அமைப்புகளுக்குப் பதிலாக வாணிபத்தன்மை படைத்த பல புதிய அமைப்புகள் தோன்றியிருக்கின்றன. தனியார் பொருளாதாரத்தின் பல்வேறு பகுதிகளுக்குக் கடன் தருவது அல்லது வேறு அமைப்புகளால் தரப்படுகிற கடனுக்கு உறுதிமொழி தருவதே, இந்த அமைப்புகளின் தலையாய பணியாகும். நிதியாண்டு **1958**-ன் இறுதியில் இருந்த இத்தகைய அமைப்புகளின் பட்டியலும் அச் சமயம்வரை அவற்றால் தரப்பட்டிருந்த ,அல்லது உறுதிமொழி கொடுக்கப்பட்டிருந்த கடன்கள் மற்றும் முதலீடுகளின் தொகைகளும் கீழே தரப்பட்டுள்ளன. (தொகைகள் யாவும் மில்லியன் டாலர்களில் கொடுக்கப்பட்டுள்ளன.)[7]

| ஏஜன்சி அல்லது திட்டம் | நேர்முகக் கடன்களும் முதலீடுகளும் | உறுதிமொழி களும் ஈட் டுறுதியும் |
|---|---|---|
| வீடு கட்டுதலும் சமுதாய மேம்பாடும் : | | |
| குடியிருப்பு வீடுகளின் அடைமானங்கள் (கூட்டரசாங்கத் தேசிய அடைமானச் சங்கம்) | 2,503 | |
| நகரங்களைப் புதுப்பித்தலும் சமுதாய வசதிகளும் | 455 | 131 |
| வீடுகட்டுதல் | 386 | 26,518 |
| உழவர்களின் வீடுகள் | 858 | 172 |

| | | |
|---|---|---|
| போர்வீரர்களின் நிர்வாகம் (Veterans' Administration) | 852 | 50,727 |
| கிராமங்களை மின்சாரமயமாக்கல் | 2,774 | — |
| வேளாண்மைப் பொருள்களின் விலை ஆதரவு நடவடிக்கைகள் (Agricultural Price Support Activities) | 1,172 | 428 |
| கப்பல்நிர்வாகம்(Maritime Aeronautics) | | 79 |
| சிவில் வானூர்திகள் (Civil Aeronautics) | | 1 |
| பாதுகாப்பு உற்பத்திப் பெருக்கம் | 244 | 351 |
| சிறு வாணிபம் | 232 | 48 |
| அயல்நாட்டு அரசாங்கங்கட்டுக் கருவூலக் கடன்கள் | 3,470 | — |
| ஏற்றுமதி—இறக்குமதிப் பாங்கு நடவடிக்கைகள் | 2,978 | 56 |
| பொருளாதார மேம்பாட்டுக்கான பிற அயல்நாட்டுக் கடன்கள் | 2,521 | — |
| மொத்தங்கள் | 18,454 | 58,515 |
| பெருமொத்தம் | 76,969 | |

பல்வேறு செயல்களுக்காக, நேர்முகமாகவோ மறைமுகமாகவோ, நிதிகளைத் தருவதில் கூட்டரசாங்கம் பெரும் பங்கு ஏற்கிறது என்பது இந்தப் பட்டியலிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. அவ்வாறு நிதிகளைப் பெறும் பணிகளில் வீடுகட்டுதலே தலையாய முக்கியத்துவம் உடையதாகக் காணப்படுகிறது. ஏனென்றால், அரசாங்க உதவி கிடைத்தாலொழிய, வீடுகட்டும் துறைக்கு மூலதனப் பற்றுக்குறை, பண இறுக்கக் கொள்கைகள் ஆகியவற்றின் காரணமாக எளிதில் நிதிகள் கிடைப்பதில்லை; ஒருவேளை கிடைத்தாலும், உயர்ந்த வட்டிக்கே கிடைக்கின்றன. அதற்கு அடுத்தபடியாக மிக அதிகத்தொகை உடையதாக இருக்கும் இனம், அயல்நாட்டு அரசாங்கங்கட்குத் தரப்படும் மூலதன உதவி என்பதாகும். இவை இரண்டைத் தவிர்த்த பிற இனங்கள், உழவர்கள், போர் வீரர்கள், சிறிய வாணிபங்கள், பாதுகாப்பு பற்றிய வாணிபம், கப்பல் போக்குவரத்து முதலிய குறிப்பிட்ட குழுவினருக்குத் தரப்படும் உதவிகள் ஆகும். பல்வேறு காரணங்களால் இந்தத் துறைகளில் சிறப்பான உதவியைத் தரவேண்டியது இன்றியமையாததாக இருக்கிறது.

நிதியாண்டு 1958-ல், கூட்டரசாங்க வாணிப நடவடிக்கைகளி லிருந்து கிடைத்த வரவுசெலவுத்திட்ட வரவுகள், பின்வருமாறு :

(தொகைகள் யாவும் மில்லியன் டாலர்களில் தரப்பட்டுள்ளன)[8]

| | |
|---|---|
| வட்டி | 745 |
| இலாப ஈவு (Dividend) | 674 |
| வாரங்களும் உரிமைத் தொகைகளும் (Rents and Royalties) | 2 |
| பண்டங்களின் விற்பனை | 303 |
| ஊழியங்களுக்கான கட்டணங்கள் (அஞ்சல் வருவாய்கள் உட்பட) | 2,591 |
| அரசாங்கச் சொத்து விற்பனை | 345 |
| கடன்கள், முதலீடுகளிலிருந்து பெறப்பட்டவை (Realisation on Loans and Investments) | 323 |
| மீட்சிகளும் திரும்பிய வரவுகளும் (Recoveries and Refunds) | 451 |
| மொத்தம் | 5,434 |

நிதியாண்டு 1958-ல் கூட்டரசாங்கத்திற்குக் கிடைத்த அதன் வாணிப வருவாய்களின் இந்த மொத்தத் தொகையை, அதே ஆண்டின் வரவுசெலவுத் திட்டத்தில் வரிகள்மூலம் கிடைத்த தொகையாகிய 65·9 பில்லியனேடு ஒப்பிட்டுப் பார்த்தால் வாணிப் வருவாய்களின் முக்கியத்துவம் ஓரளவு புலனுகும். ஆனல், வரவு செலவுத் திட்டக் கணக்குகளில் குறிக்கப்பட்டுள்ள வாணிப வருவாய்களை மட்டும் கவனித்துப் பார்த்துவிட்டு அவற்றின் முக்கியத்துவத்தின் அளவை மதிப்பிடக்கூடாது. ஏனென்முல், பல வாணிப வரவுகளும் ஓரளவு வாணிபத் தன்மை யுடைய வரவுகளும் (Quasi Commercial Receipts), பொறுப்பு நிதிகளிலும் (Trust funds) மீளும் நிதிகளிலும் (Revolving funds) கையாளப்படுகின்றன. 1958-ல் இந்த நிதிகளில் கூடுதலாகச் சேர்ந்த வாணிப வரவுகளின் தொகை ஏறத்தாழ 2 பில்லியன் டாலராகும்.

**மாநில அரசாங்கங்களின் வாணிபத் தொழில்துணிவுகள்**

ஊழியங்களுக்கான கட்டணங்கள் மூலமாகவும், ஏனைய வாணிப வருவாய்கள் மூலமாகவும் மாநில அரசாங்கங்களுக்கு 1932-ல் கிடைத்த தொகை, 266 மில்லியன் டாலராகும்.[9] 1957-ல் இந்தத் தொகை ஏறத்தாழ 3 பில்லியன் டாலராக உயர்ந்து

விட்டது.[10] இந்தத் தொகை, 1957-ன் மாநில வருவாய் வரவுகளின் மொத்தத் தொகையில் 14 சதவீதமாகும். மாநில அரசாங்கங்களின் வாணிப நடவடிக்கைகளின் முக்கியத்துவத்தில் 1932-க்குப் பிறகு ஏற்பட்டுள்ள வியக்கத்தக்க உயர்வுக்குக் காரணங்கள் என்ன என்பதைக் கண்டறிவது நம் கடமையாகும்.

1932-க்கு முந்திய ஆண்டுகளில் மாநில அரசாங்கங்களின் தொழில்துணிவுகள் முக்கியமானவையாக இல்லாதது ஏன் என்பதை அறிவது கடினமான செயல் அன்று. குறிப்பிட்ட வட்டாரங்களில் உள்ள நிலைமைகளின் விளைவாக, அந்த வட்டாரத் தேவைகளை நிறைவேற்றுவதற்காக அரசாங்கத் தொழில்துணிவுகள் தேவைப்படுகின்றன. ஆனால், மாநில அரசாங்கமோ, வட்டாரங்களின் நிலைமைகளை நேர்முகமாக அறியமுடியாத தொலைவில் உள்ளது. படகுத் துறைகள், நீர்பாசனத்திட்டங்கள், துறைமுக வசதிகள் முதலியவை, இந்த நிலைமைக்குரிய சிறிய எடுத்துக்காட்டுகள் ஆகும். நடைமுறையில் தல அரசாங்கங்கள் மாநில அரசாங்கங்களின் நிர்வாக உறுப்புகளாகவே இருப்பதால், வட்டார ஊழியங்களை நிறைவேற்றுவதற்கான பொறுப்பை அவை ஏற்றுக்கொள்கின்றன. ஆகவே, பல்வேறு தல அரசாங்கங்களிடையே ஒரே வகையான நடைமுறைகள் இருக்கும்படி செய்வதே மாநில அரசாங்கத்தின் பணியாக அமைந்துவிடுகிறது. இவ்வாறு மாநில அரசாங்கமானது குறிப்பிட்ட வட்டாரங்களோடு நெருங்கிய தொடர்பில்லாத காரணத்தால் வட்டார வாணிபங்களை நேர் முகமாக மேற்கொள்ள முடியாதுள்ள அதே நிலையில், விரிவான அளவில் அல்லது நாடு முழுவதற்குமான அளவில் வாணிபத்தை மேற்கொள்ளத்தக்க அதிகார எல்லையும், அந்த அரசாங்கத்திற்கு இல்லை. சிறந்த முறையில் பொருள்களையும் ஊழியங்களையும் உற்பத்தி செய்து மக்களுக்கு வழங்கவேண்டுமானால், அப்படி வழங்குவதற்கான எல்லை, பல மாநிலங்களைக் கொண்டதாக, விரிவானதாக இருக்கவேண்டும்; குறிப்பிட்ட பணியைத் தல அரசாங்கம் சிறந்த முறையில் நிறைவேற்றுவதற்கு ஏற்ற, குறுகிய அளவினதாக இருக்கவேண்டும். சுருக்கமாகக் கூறுவதானால், பெரும்பாலான நேரங்களில், மாநிலங்களின் எல்லை, பொருத்தமான அங்காடிகளின் எல்லையாக இருப்பதில்லை. ஆகவே, மாநில அரசாங்கங்களின் வாணிப நடவடிக்கைகள், பெரும்பாலும், பொதுவான அரசாங்கப் பணிகளை நிறைவேற்றுவதற்குத் துணை புரியத் தக்கவையாகவும், மாநில எல்லைக்குள்ளாகவே நடைபெறத் தக்கவையாகவும், பல்வேறு வட்டாரங்களை உள்ளடக்கியன வாகவுமே இருக்கின்றன. சாராய விற்பனை ஒழுங்குபாடு, மாநில

நெடுஞ்சாலை முறையில் சுங்க வசதிகளைச் செய்தல் ஆகியவை, மாநில அரசாங்கத்தின் இத்தகைய வாணிப நடவடிக்கைகளுக்குரிய சிறந்த எடுத்துக்காட்டுகள் ஆகும்.

1932க்கும் 1957-க்கும்இடையே மாநில வாணிப வருவாய்களில் ஏற்பட்ட குறிப்பிடத்தக்க உயர்வுக்குரிய காரணங்கள், இரண்டு வகை. மாநில அரசாங்கத்தால் நெடுங்காலமாக நடத்தப்பட்டு வருகிற—கட்டண வசூலோடுகூடிய நடவடிக்கைகளில் பெருக்கம் ஏற்பட்டது, ஒருவகைக் காரணமாகும். கல்விப்பணிகளை நிறை வேற்றுவதற்காகக் கட்டணம்வாங்கப்படுவதும், உடல் நலம் மற்றும், மருத்துவமனை வசதிகளுக்காகக் கட்டணம் வாங்கப்படுவதும் இந்த வகை நடவடிக்கைகளுக்கான சிறந்த எடுத்துக்காட்டுகள் ஆகும். பல புதிய கட்டணங்களை வசூலிப்பதில் மாநில அரசாங்கம் ஈடுபட்டது, இரண்டாவது வகைக் காரணமாகும். அவ்வாறு வசூலிக்கப்படும் புதுவகைக் கட்டணங்களில் ஒன்றாகிய சாலைச் சுங்கத்தால், 1957-ல் மாநில அரசாங்கங்கட்குக் கால் பில்லியன் டாலர் வரவு ஏற்பட்டது. பதினாறு மாநில அரசாங்கங்கள், சாராயக் குடிவகைகளை வழங்குவதற்கான முற்றுரிமைகளை உடையனவாக உள்ளன. அரசாங்கத்தின் சாராயக் கடைகளிலிருந்து 1957-ல் கிடைத்த மொத்த வருவாய் (gross revenue) 1 பில்லியன் டாலரைவிடச் சற்றுக் கூடுதலாக இருந்தது. சாராயக் குடிவகைகளை வழங்குவதில் தமக்கே முற்றுரிமைகளை வைத்துக்கொண்ட மாநில அரசாங்கங்கள், குடிவகைகளைக் கட்டுப்படுத்துவதற்கு அதுதான்சிறந்த வழி என்னும் நம்பிக்கையில்தான் அத்தகைய நடவடிக்கையை மேற்கொண்டன. ஆனால், அதே சமயத்தில், அந் நடவடிக்கையால் தங்களுக்கு முற்றுரிமை இலாபம் (monopoly profit) கிடைக்கும் என்பதையும் அந்த அரசாங்கங்கள் மறந்துவிடவில்லை. சாராய விற்பனை முற்றுரிமைகளால் 1957-ல் பதினேழு மாநில அரசாங்கங்கட்குக் கிடைத்த நிகர வருமானம், சாராய விற்பனைத் தொகையில் 21 சதவீதமாக இருந்தது ; அதாவது, 229 மில்லியன் டாலராக இருந்தது. மொத்த வரவுகளைப் பொறுத்த அளவில், சாராய விற்பனையே, மாநில அரசாங்கங்களின் மிகப் பெரிய வாணிப முறைத் தொழில்துணிவாக இருக்கிறது. அதற்கு அடுத்தபடியாக, சொத்துகள், கடன்பத்திரங்கள் ஆகியவற்றிலிருந்து கிடைக்கும் வருமானங்களும், அவற்றிற்கு அடுத்தபடி, உயர்வகைக் கல்விக்கும் சிறப்புவகைக் கல்விக்குமான கட்டண வருவாய்களும், அவற்றிற்கும் அடுத்தபடி நெடுஞ்சாலையைப் பயன்படுத்துவதற்கான கட்டணங்களும் முக்கியத்துவம் உடையனவாக உள்ளன.

நல அரசாங்கங்களின் வாணிபத் தொழில்துணிவுகள்

25,000-க்கு மேற்பட்ட மக்கள் தொகையை உடைய நகரங்களுக்கு மட்டும்தான் வட்டார அரசாங்கங்களின் தொழில் துணிவுகள்பற்றிய விரிவான விவரங்கள் கிடைக்கின்றன. 25,000-க்கு மேற்பட்ட மக்கள் தொகையை உடைய 481 நகரங்களின் மொத்த மக்கள் தொகை, ஐக்கிய அமெரிக்காவின் மொத்த மக்கள் தொகையில் ஏறத்தாழ ஐந்தில் இரண்டு பங்காக மட்டுமே இருப்பதால், இந்த நகரங்களுக்கான புள்ளி விவரங்கள், எல்லாவகை வட்டார அரசாங்கங்களின் நிலைமையையும் எடுத்துக் காட்டுவதாக நாம் கருதமுடியாது. இந்த நகரங்களின் பொது வசதித் தொழில்துணிவுகளுக்கான புள்ளிவிவரங்கள், 22ஆவது அட்டவணையில் தரப்பட்டுள்ளன.

## அட்டவணை 22

**25,000-க்கு மேற்பட்ட மக்கள் தொகையுடைய நகரங்களால் இயக்கப்படும் தொழில் துணிவுகள், 1957***

| தொழில் துணிவின் வகை | நகரங்களின் எண்ணிக்கை | மொத்த வருவாய் (மில்லியன் டாலர்களில்) |
|---|---|---|
| தண்ணீர் வழங்கும் அமைப்புகள் (Water Supply Systems) | 394 | 654 |
| மின்சார விளக்கு மற்றும் மின்சார சக்தி அமைப்புகள் | 67 | 412 |
| போக்குவரத்து அமைப்புகள் | 19 | 369(அ) |
| ஆவி வழங்கும் அமைப்புகள் (Gas Supply Systems) | 22 | 60 |
| சாரயக் கடைகள் | 3 | 15 |
| மொத்தம் | 505 | 1,510 |

* இப் பட்டியலில் உள்ள புள்ளி விவரங்கள், சென்சஸ் பீரோவால் வெளியிடப்பட்டுள்ள 'Compendium of City Government Finances in 1957' என்னும் நூலின் 79ஆம் பக்கத்திலிருந்து எடுக்கப்பட்டவை.

(அ) இந்தத் தொகை இவ்வளவு பெரியதாக இருப்பதற்குக் காரணம், நியூயார்க் நகரப் போக்குவரத்து அமைப்பின் மொத்த வருவாய் மட்டுமே 264 மில்லியன் டாலராக இருப்பதுதான்.

481 நகராட்சி மன்றங்களின் வாணிபத் தொழில் துணிவுகளிலிருந்து கிடைத்துள்ள இந்த மொத்த வருவாய்த் தொகையை (1·5 பில்லியன் டாலர்), அம் மன்றங்களின் வரி வருவாய்த் தொகை

யாகிய 4·8 பில்லியன் டாலரோடு ஒப்பிட்டுப் பார்த்தால், தல அரசாங்கங்களுக்கும் குடிமக்களுக்கும் இடையே உள்ள வாணிபத் தொடர்பின் அளவு, தெளிவாக விளங்கும்.[11]

பொதுமக்களுக்குத் தண்ணீர் வழங்கும் அமைப்பும், மின்சார சக்தியை உற்பத்தி செய்வற்கும் வழங்குவதற்குமான அமைப்புமே, தல அரசாங்கங்களால் விரிவான அளவில் நடத்தப்படும் வாணிபத் தொழில் துணிவுகள் ஆகும். தண்ணீர் வழங்கும் அமைப்பு அரசாங்கத்தின் உடைமையிலும் நிர்வாகத்திலும் இருப்பதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. தண்ணீரின் மூலங்கள் (ஏரிகள் முதலியன) பெரும்பாலும் அரசாங்கச் சொத்துகளாக உள்ளன. தண்ணீர் வழங்கும் அமைப்பை இயக்குவதும் நிர்வாகம் செய்வதும், சிக்கல் இல்லாத எளிய செயல்களாகும். பெருகிக்கொண்டே யிருக்கும் நகர மக்கள் தொகையின் தண்ணீர்த் தேவையை நிறைவு செய்யவேண்டுமானுல், பல சமயங்களில், நெடுந்தொலேவில் உள்ள மூலங்களிலிருந்து அதிக அளவில் செலவழித்துத் தண்ணீரைக் கொண்டுவரவேண்டியிருக்கிறது. ஆனுல், தண்ணீர்க் கட்டண வீதங்களே அந்த அளவு உயர்த்த முடிவதில்லே. வழங்கப்படும் தண்ணீர் தூய்மை நிறைந்ததாக இருக்கவேண்டுமானுல், பொது உடல் நல அதிகாரிகளின் நெருங்கிய மேற்பார்வையில் அது இருப்ப தோடு, அவர்களால் அது அடிக்கடி பரிசோதிக்கப்படுவதும் இன்றி யமையாதது. தண்ணீர் முற்றிலும் இன்றியமையாத ஒரு பொரு ளாக இருப்பதால், அதனே எல்லா வகை வருமானப் பிரிவினரும் விரிவாகப் பயன்படுத்துவதற்கு ஏற்ற முறையில் அரசாங்கக் கொள் கையை வகுக்கவேண்டியிருக்கிறது. தண்ணீரை வழங்குவதும், நெடுந்தொலேவில் உள்ள மூலங்களேப் பயன்படுத்துவதும் செம்மை யாக நடைபெறவேண்டுமானுல் அரசாங்கத்தின் ஆட்சி உரிமையைப் பயன்படுத்தவேண்டிய அவசியம் இருக்கலாம்.

தண்ணீரை வழங்கும் பணியைப்போல, மின்சாரத்தை உற்பத்தி செய்து, வழங்கும் பணி, அவ்வளவு 'இயற்கையான' ஓர் அரசாங்கப் பணியாக இருக்கிறது என்று கூறமுடியாது. இந்தத் துறையில், அரசாங்க அமைப்புகள், ஏற்கெனவே இருந்த தனியார் அமைப்புகளே அகற்றிவிட்டு அவற்றின் இடத்தில் ஏற்படுத்தப் பட்டவையாகவே பெரும்பாலும் இருக்கும். அதாவது, தனியாரின் அமைப்புகளே அரசாங்கம் விலேக்கு வாங்கிக்கொண்ட நிலேமையே இத் துறையில் காணப்படும். இத் துறையின் வாணிப நிறுவனங்கள் தனியாரின் உடைமையாக இருந்தபோது விதிக்கப்பட்ட கட்டணங் கள் அதிகமாக இருந்ததாலும், அந் நிறுவனங்கள்மீது விதிக்கப்பட்ட அரசாங்கக் கட்டுப்பாடுகள் போதிய திருப்தி அளிக்காததாலுமே,

பெரும்பாலும் அந் நிறுவனங்கள் அரசாங்க உடைமையாக்கப்படும் நிலை ஏற்பட்டிருக்கிறது.[12] அதே சமயத்தில், கூட்டரசாங்கமானது 1930 முதல் மாபெரும் மின்சார சாதனங்களை உருவாக்கி வளர்க்கத் தொடங்கியதால், தல அரசாங்கங்கள், மின்சாரத்தை வழங்கும் அமைப்புகள் பலவற்றைத் தாங்களே தொடங்கி நடத்துவதற்கான ஊக்கத்தையும் உற்சாகத்தையும் பெறலாயின. கூட்டரசாங்கமானது, தன் மின்சாரத் திட்டங்களிலிருந்து மொத்தமாக (wholesale) மின்சாரத்தை வாங்கிக்கொள்வதற்கான முதலுரிமையை நகராட்சி மன்ற அமைப்புகளுக்கும் கூட்டுறவுத் தொழில் துணிவுகளுக்குமே தருவது என்னும் கொள்கையைத் தொடர்ந்து கடைப்பிடித்து வரலாயிற்று. இவ்வாறாகக் கூட்டரசாங்கத்தின் குறைந்த விலையுள்ள மின்சார சக்தி நகராட்சி மன்றங்களுக்குக் கிடைத்து வந்த காரணத்தால், அம் மன்றங்கள், தத்தம் வட்டாரங்களில் இருந்த தனியாரின் மின்சாரம் வழங்கும் அமைப்புகளை விலைக்கு வாங்கிக்கொண்டதோடு, இதுவரை மின்சார சக்தி வழங்கப்படாமலிருந்த பகுதிகளில் புதிதாக மின்சாரம் வழங்கும் அமைப்புகளை ஏற்படுத்துவதிலும் ஆர்வம் காட்டலாயின. அவ்வாறு புதிய அமைப்புகள் ஏற்படுத்தப்பட்டபோது, அவற்றின் கட்டுமானச் செலவைச் சரிக்கட்டுவதற்கு, கூட்டரசாங்கத்தின் குறைந்த் வட்டிக் கடன்கள் பேருதவியாக இருந்தன. அவ்வாறு அளிக்கப்பட்ட கூட்டரசாங்கக் கடன்கள், முக்கியமாகப் பொதுப்பணிகள்பற்றிய நிர்வாகம் (Public Works Administration), கிராமங்களை மின்சார மயமாக்கும் நிர்வாகம் (Rural Electrification Administration) ஆகியவற்றின் மூலமாகவே தரப்பட்டன.

இப்படியெல்லாம் இருந்தும், மின்சார விளக்கு, மின்சார சக்தி ஆகியவை பற்றிய அமைப்புகளின் அரசாங்க உடைமை, உண்மையில் மிக விரிவான அளவில் காணப்படுகிறது என்று கூறமுடியாது. 25,000-க்கு மேற்பட்ட மக்கள் தொகையை உடைய 481 நகரங்களில் 67 நகரங்களுக்கு மட்டுமே, 1957-ல், அரசாங்க உடைமையில் இருந்த மின்சாரம் வழங்கும் அமைப்புகளால் மின்சாரம் வழங்கப்பட்டது என்னும் உண்மையை 22ஆவது அட்டவணையிலிருந்து தெளிவாக உணர்ந்துகொள்ளலாம். 1939-ல் பல்வேறு அளவுகள் உள்ள ஏறத்தாழ 2000 நகரங்களுக்கு அரசாங்கத்தால் உற்பத்தி செய்யப்பட்ட மின்சாரம் வழங்கப்பட்டது என்றும், விற்கப்பட்ட மொத்த மின்சாரத்தில் ஏறத்தாழ 7 சதவீதம் மட்டுந்தான் நகராட்சி மன்ற மின்சாரம் வழங்கும் அமைப்புகளால் விற்கப்பட்டன என்றும், ஜான் பார் (John Bauer) என்பவர் மதிப்பிட்டிருக்கிறார்.[13] ஆனால், மின்சாரம் வழங்கும் அமைப்புகளின் அரசாங்க உடைமையின் முக்கியத்துவம் முழுவதும் இந்தப் புள்ளி

விவரத்தால் தெளிவாகிவிடாது. அரசாங்கத்தால் வழங்கப்படும் மின்சாரம் தற்போது குறைந்த அளவுடையதாக இருந்தாலும், மின்சாரத்தைத் தனியாரின் நிறுவனங்கள் மூலமாக வழங்கு வதற்கு மாறாக அரசாங்க நிறுவனங்கள்மூலம் வழங்கும் போக்கு, நாளுக்குநாள் வளர்ந்துவருகிறது. இந்தப் போக்கின் வளர்ச்சி வேகம், 1930-ஐத் தொடர்ந்த ஆண்டுகளில் மிகக் கூடுதலாக இருந்தது. கூட்டரசாங்கத்தின் பல்வேறு திட்டங்களிலிருந்து இந்தப் போக்குக்குக் கிடைத்த ஆதரவே, இந்த விரைவான வளர்ச்சிக்குரிய தலையாய காரணமாகும். நாடு முழுவதிலும் உள்ள தல அரசாங்கங்களின் தொழில் துணிவுகளிலிருந்து அந்த அரசாங்கங்களுக்குக் கிடைத்த வருவாய், 1932-க்கும் 1941-க்கும் இடையில், 71 சதவீதம் மட்டுமே உயர்ந்திருக்க, கென்டகி (Kentucky), டென்னிசி (Tennessee), அலபாமா (Alabama), மிசிசிபி (Mississippi) ஆகிய மாநிலங்களில் உள்ள தல அரசாங்கங்களின் அதே வகை வருவாய், அதே கால அளவில், 173 சதவீதம் உயர்ந்திருக்கிறது.[14] வியக்கத்தக்க இந்த உயர்வுக்குரிய தலையாய காரணம், இந்த நான்கு மாநிலங்களின் நகராட்சி மின்சார அமைப்புகளிலிருந்து கூடுதலான வருவாய் கிடைத்ததேயாகும். இந்த அமைப்புகளுக்கு அதிக வருவாய் கிடைத்தற்குரிய முதன்மையான காரணம், டென்னிசி பள்ளத்தாக்கு அமைப்பி லிருந்து (TVA. i.e. Tennessey Valley Authority) இவற்றிற்குக் கிடைத்த ஆதரவே எனலாம்.

தண்ணீர் வழங்கும் துறையில் ஏறத்தாழ 90 சதவீதம், இப்போதே அரசாங்க உடைமையிலும் அரசாங்க நிர்வாகத்திலும் இருப்பதால், எதிர்காலத்தில் இந்தத் துறையில் நகராட்சித் தொழில் துணிவுகள் பெரும் அளவில் வளர இயலாது. பெரும் அளவில் போக்குவரத்து வசதிகள் தேவைப்படுகிற பெரிய நகரங்களில் மட்டுமே, வட்டாரப் போக்குவரத்துத் துறைபற்றிய நகராட்சி மன்ற வாணிப நடவடிக்கையில் வளர்ச்சி ஏற்பட முடியும். தனியாருடைய மோட்டார் கார்களின் பெருக்கத்தாலும், கடைகள் உள்ள பகுதிகள் புற நகர்களில் பெருகுகிற போக்கின் வளர்ச்சியாலும், டிராம்கள், பஸ்கள், துணைவழிகள் ஆகியவற்றிற்கான தேவை குறைந்து, அப்படிக் குறைவதால் அந்தத் துறைகளில் செய்யப்படுகிற தனியார் முதலீடு இலாபமற்றதாக மாறிவிடுகிற நெருக்கடி ஏற்பட்டால்தான், தற்போதுள்ள தனியாரின் வாணிப அமைப்புகளுக்குப் பதிலிகளாக (substitutes) தல அரசாங்கத்தின் வாணிப அமைப்புகள் பெரும் அளவில் ஏற்படக்கூடும். அத்தகைய நிலைமையில் மக்களுக்கு இன்றியமையாத தேவையாகவுள்ள ஓர் ஊழியத்தைத் தருவதற்காக தல

அரசாங்கங்கள், தனியாரின் அமைப்புகளை ஏற்றுகவேண்டிய கட்டாயம் ஏற்படும். 22ஆவது அட்டவணையில் தரப்பட்டுள்ள அரசாங்கத் தொழில் துணிவு இனங்களைப் பொறுத்தவரை, எதிர்காலத்தில் அவை மிகுதியாக வளரும் என்று எதிர்பார்க்க முடியாது.

பொது வசதித் தன்மை படைத்த அரசாங்கத்தொழில் துணிவுகளைப்பற்றியே நாம் இதுவரை நம் கவனத்தைச் செலுத்தி வந்ததால், பலவகையான அரசாங்கச் சொத்துகளுக்கும் ஊழியங்களுக்கும் விலைகள் தரப்படுகின்றன என்பதைக் கவனிக்க மறந்துவிட்டோம். அரசாங்கத்தால் நிறைவேற்றப்படும் ஊழியங்களுக்கான கட்டணங்களாலும், அரசாங்கச் சொத்துக்களின் விற்பனையாலும் அரசாங்கத்திற்குக் கிடைக்கும் மொத்தவருவாய், பொதுவசதி வாணிபத் தொழில் துணிவுகளிலிருந்து கிடைக்கும் வருவாயைவிட ஓரளவு குறைவாக இருந்தாலும், அதன் தொகை, சென்ற சில ஆண்டுகளாக உயர்ந்தபடி யிருக்கிறது. கல்விக்குத் துணையாகவுள்ள ஊழியங்கள் (எடுத்துக்காட்டு: பள்ளிக்கூட மதிய உணவு), நகராட்சி மன்ற மருத்துவமனையில் அளிக்கப்படும் ஊழியங்கள் ஆகியவற்றிற்கான கட்டணங்களும், வானூர்தி நிலையங்கள், பூங்காக்கள், பொழுதுபோக்கு வசதிகள், நெடுஞ்சாலைகளைப் பயன்படுத்தல், ஆகியவற்றிற்கான கட்டணங்களும், அவ்வாறு உயரும் வருவாய் இனங்களில் முதன்மையானவை ஆகும். அரசாங்க வீடுகளிலிருந்து கிடைக்கும் வாடகை வரவு, அண்மைக்காலத்தில் வளர்ச்சி பெற்றுள்ள வாணிப வருவாய் இனங்களில் ஒன்று. பல்வேறு நோக்கங்களுக்காகவுள்ள காப்பிருப்பு நிதிகளின் வளர்ச்சி காரணமாக, தல அரசாங்கங்களின் வட்டி வருவாய்களும், இப்போது உயர்ந்து வருகின்றன.

**அரசாங்க விலைகளை முடிவு செய்தல்**

தனியாரால் உற்பத்தி செய்யப்பட்டு அங்காடிக்கு வருகிற ஒரு பொருளின் விலை, இறுதி நிலை வாங்குபவருக்கு (marginal buyer) அந்தப் பொருளால் ஏற்படும் பயன்பாடு (utility), அந்தப் பொருளின் சராசரி உற்பத்திச் செலவோடு உற்பத்தியாளருக்கு உரிய இலாபமும் சேர்ந்த ஒரு தொகை ஆகிய இந்த இரண்டையும் பிரதிபலிக்கிறது என்று கூறலாம். அரசாங்கத்தால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை வாங்குபவரின் நிலை, தனியாரால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை வாங்குபவரின் நிலையிலிருந்து வேறுபட்டதல்ல. ஒரு பொருளை உற்பத்தி செய்பவர் யாராக இருந்தாலும், அந்தப் பொருளை வாங்குபவர், அதன் பயன்

பாட்டை முன்னிட்டுத்தான் அதை வாங்குகிறார். அந்தப் பொருளுக்கு அவர் தரவேண்டிய விலையைவிட அந்தப் பொருளிலிருந்து அவர் பெறுகிற பயன்பாடு குறைவாக இருக்குமானால், அவர் அதை வாங்கமாட்டார். அரசாங்கம் ஈடுபட்டுள்ள வாணிபத் துறைகள் மிக விரிவான அளவில் பயன்படுத்தப்படும் பொருள்களை உற்பத்தி செய்யும் துறைகளாகும் என்பது உண்மைதான். அந்தப் பொருள்களில் பெரும்பாலானவை, உயர்ந்தபயன்பாட்டை உடைய 'இன்றியமையாத' பொருள்களாகும் (necessary goods). ஆகவே, அவற்றை வாங்கலாமா அல்லது தவிர்க்கலாமா என்பதை முடிவு செய்யக்கூடிய நிலையில் நுகர்பவர் இல்லை; அவற்றில் சிறிதளவாவது வாங்கித் தீரவேண்டிய நிலையிலேயே அவர் இருக்கிறார். ஆனால் ஒன்று 'இன்றியமையாப்' பொருள்களின் சிறிய அளவுகளைப் பொறுத்தவரை, அவற்றின் தேவை (demand) பெரும் நெகிழ்ச்சியின்மையை (high inelasticity) உடையதாக இருந்தபோதிலும், குறைந்தபட்ச அளவுக்கு மேற்பட்ட நிலையில், அத் தேவை, பெரும் நெகிழ்ச்சி (high elasticity) உடையதாக மாறிவிடக்கூடும். பொருள்களை வாங்குபவர், தனியாரால் உற்பத்தி செய்யப்பட்ட ரொட்டி, இறைச்சி, பெட்ரோல், மருத்துவ ஊழியங்கள் முதலிய 'இன்றியமையாத' பொருள்களை வாங்குமாறு வலுக்கட்டாயப் படுத்தப்படுவதைவிடக் கூடுதலான அளவில் அரசாங்கத்தால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை வாங்குமாறு கட்டாயப் படுத்தப்படவில்லை என்று நாம் தாராளமாக முடிவு கட்டலாம்.

அளிப்பு விலைகள் (supply prices) அதாவது, அங்காடியில் விற்பனையாளர்கள், ஒரு பொருளைப் பல்வேறு அளவுகளில் அளிக்க ஆயத்தமாக இருக்கும் விலைகள், அரசாங்கத்தால் முடிவு செய்யப் படுவதைவிட முற்றிலும் வேறான முறையில் தனியார் தொழிலால் முடிவு செய்யப்படக்கூடும். நீண்ட கால அளவில், தனியார் தொழில், ஒரு பொருளுக்குப் பெறுகிற விலை, அந்தப் பொருளின் உற்பத்திச் செலவுகள் முழுவதையும் (வரிகள் உட்பட) உள்ளடக்கியதாக இருப்பதோடு, தொழிலில் துணியக்கூடிய மூலதனத்தைப் (venture capital) போதுமான அளவில் எழுப்பத்தக்க நிகர வருமானத்தைத் தருவதாகவும் இருந்தாகவேண்டும். இதற்கு மாறாக, அரசாங்கமானது, அதனால் உற்பத்தி செய்யப்படுகிற பொருளின் விலையை முடிவு செய்யும்போது, வாணிபத் தொடர்பில்லாத பல கருத்துக்களையும் கவனிக்கவேண்டியிருக்கலாம். அதோடு, அரசாங்கமானது, பொது நலனைப் பேணி வளர்க்கும் கண்ணோட்டத்துடனேயே எல்லாச் சமயங்களிலும் தன் நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டிய நிலையில் இருக்கிறது. இத்தகைய காரணங்களின் விளைவாக, அரசாங்கத்தால் முடிவு செய்யப்படும்

விலைகள், போட்டியிடும் தனியார் நிறுவனங்களால் முடிவு செய்யப்படும் விலைகளைவிடக் கூடுதலாக இருக்கக்கூடும். ஆனால், பெரும்பாலான சமயங்களில், நடைமுறையில், அரசாங்க விலைகள், தனியார் விலைகளைவிடக் குறைவாகவே இருக்கின்றன. இதற்குக் காரணம், தன்னுடைய தொழில் துணிவு, தன்னுடைய வரவைக் கொண்டே தன்னுடைய செலவைச் சரிக்கட்டியாகவேண்டும் என்று அரசாங்கம் கருதாமல் இருப்பதேயாகும்.

தனியார் தொழில் துணிவு, அரசாங்கத் தொழில் துணிவு ஆகியவற்றின் தராதர அனுகூலங்களைப்பற்றிய வாதங்களில் இந்த இன்றியமையாத உண்மை மறக்கப்பட்டுவிடுகிறது. அதனால் தான், ஒரு அரசாங்கத் தொழில் துணிவின் வரவுகள் அதன் உற்பத்திச் செலவுகளை உள்ளடக்கியதாக இருப்பதோடு, தனியார் தொழில் துணிவானது வரிகளின் வடிவத்தில் எவ்வளவு தொகையைச் செலுத்துமோ அதற்குச் சமமான அளவு தொகையை அரசாங்கத்தின் பொது நிதிக்குத் தருவதாகவும் இருந்தால்தான் அந்தத் தொழில் துணிவைத் தொடர்ந்து நடத்துவதில் நியாயம் இருக்கமுடியும் என்று வாதாடப்படுகிறது. தனியார் வாணிபக் குறிக்கோள்களின் அடிப்படையில், தனியார் வாணிபம் எவ்வளவு திறமை மிகுந்ததாக இருக்கிறதோ அதே அளவு திறமை நிறைந்ததாக அரசாங்க வாணிபமும் இருக்கவேண்டும் என்பதுதான், இந்த வாதத்தின் உட்பொருள். ஆனால், ஓர் அரசாங்க வாணிபத் தொழில் துணிவானது நஷ்டத்தில் பணியாற்றிவந்தாலும், அந்தத் தொழில் துணிவால் சமுதாயத்திற்குக் குறைந்த விலையில் கிடைக்கும் தண்ணீர், மின்சாரம், போக்குவரத்து வசதி, கடன், அஞ்சல் வசதி ஆகியவற்றால் சமுதாயத்தின் வருமானத்தை அது உயர்த்திவிடுகிறது. அவ்வாறு அத் தொழில் துணிவால் ஏற்படும் சமுதாய வருமான உயர்வு, அத் தொழில் துணிவின் நடவடிக்கையில் ஏற்படும் இழப்பின் அளவைவிட மிகக் கூடுதலாக இருக்கிறது. ஓர் அரசாங்க வாணிபத் தொழில் துணிவின் வரவுகள் அத் தொழில் துணிவின் செலவுகளைச் சரிக்கட்டிக்கொள்ளக் கூடியதாக இருக்கவேண்டும் என்பது, பல்வேறு காரணங்களை முன்னிட்டு, விரும்பத்தக்க ஒரு பொது விதியாக இருக்கிறது. ஆனால், வாணிபத் தொடர்பில்லாத நோக்கங்கள் முக்கியமானவையாக இருக்கும் தொழில் துணிவுகளில், இந்தப் பொது விதிக்கு விலக்குகள் தாராளமாக அனுமதிக்கப்படவேண்டும். திறமையாக நடத்தப்படும் அரசாங்கத் தொழில் துணிவுகள் திட்டமிடப்பட்ட இழப்புகளைப் (planned losses) பெறலாம் என்பது பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆனால், அத்தகைய இழப்புகளை உண்டாக்கும் அரசாங்க

விலைகளை, திறமையான முறையில் நடத்தப்படும் தனியார் தொழில் துணிவுகளால் விதிக்கப்படும் விலைகளின் நியாயத்தை அளந்து பார்ப்பதற்கான அடிக்கோலாகப் பயன்படுத்தக்கூடாது.

தனியார் தொழில் துணிவின் அக்கறைகளைவிட அரசாங்கத்தின் அக்கறைகள், மிகவும் விரிவானவையாக இருப்பது தவிர்க்க முடியாதது. அரசாங்கத்தின் இந்தப் பரந்த அக்கறையின் பயனாக உற்பத்திச் செலவைக் கணக்கிடுவதில் ஏற்படும் விளைவு என்னவென்றால், பெரும்பாலும் அரசாங்கத்தால் உற்பத்தி செய்யப்படும் ஒவ்வொரு பொருளும், ஒன்றுக்கு மேற்பட்ட பொருளாக இருக்கிறது என்பதே. அதாவது, அரசாங்கத்தால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள், ஒரே சமயத்தில், அதனை வாங்கும் தனியாளுக்குத் தனிப்பட்ட பயன்பாட்டை (individual utility) அளிப்பதோடு, சமுதாயத்தின் பொது நலனைக் கூடுதலாக்கும் முறையில் சமுதாயத்திற்கும் பயன்பாட்டை அளிக்கிறது. பின்னால் குறிப்பிடப்பட்ட பயன்பாடு, முதலில் குறிப்பிடப்பட்ட பயன்பாட்டின் துணைப்பொருளாகக் கிடைக்கிறது என்று பொதுவாகக் கருதப்படுகிறது.[15] கூட்டுத் தோற்றப் பண்டங்களுக்கு (joint products or multiple products) இடையே அவற்றின் கூட்டுச் செலவுகளைப் (joint costs) பங்கீடு செய்வதற்கான துல்லியமான முறை எதுவும் இல்லை, என்றாலும், கூட்டுத் தோற்றப் பண்டங்களின் மொத்தச் செலவில் ஒரு பகுதியைத் துணைப்பொருள் ஏற்றுக்கொள்வதுதான் நியாயம். சில அரசாங்கத் தொழில்களின் பொருள்கள், உற்பத்திச் செலவைவிடக் குறைவான விலையில் விற்கப்படும் நிலையை, இந்தப் பகுத்தாய்வின் அடிப்படையில்தான் நாம் நியாயமானதாக ஏற்றுக்கொள்ள முடியும். (விலையில் உள்ள பற்றாக்குறையை அரசாங்கத்தின் பொது நிதியிலிருந்துதான் சரிக்கட்டிக் கொள்ளவேண்டும்.) ஆனால், அதே முறையில் தனியார் தொழிலை, நீண்ட கால அளவில், உற்பத்திச் செலவைவிடக் குறைந்த வருமானம் உள்ள நிலையில் நடத்திக்கொண்டிருப்பது நியாயமாகாது. ஏனென்றால், அரசாங்கத்திற்கு வரிகள் இருப்பதைப்போல, தனியார் வாணிபத்திற்கு எத்தகைய புற வருவாய் மூலமும் (outside source of revenue) இல்லை.

அரசாங்க வாணிபத் தொழில் துணிவுகளின் பற்றாக்குறையை வரி வருவாய்களைக்கொண்டு சரிக்கட்டுவதன் மூலம், உற்பத்திச் செலவின் ஒரு பகுதியை ஏற்கும் பொறுப்பு சமுதாயத்திற்குத் தரப்பட்டுவிடுவதால், அத் தொழில் துணிவுகளின் பொருள்களை நுகர்பவர்களுக்கு உதவி மானியங்கள் (குறைந்த விலை என்னும் வடிவத்தில்) கிடைக்கின்றன. அரசாங்கத்தால் முடிவு செய்யப்

படுகிற அல்லது அனுமதிக்கப்படுகிற விலைகளின் மூலமாகச் சில நேரங்களில் உற்பத்தியாளர்களுக்கும் உதவிக் கொடைகள் கிடைக்கின்றன. வான் வழி அஞ்சல்களை (air mail) எடுத்துச் செல்லும் வானூர்த்திகளுக்கு வேண்டுமென்றே கூடுதல் கட்டணங் களைத் தருவதன் வாயிலாக அரசாங்கம், சிவில் வானூர்த்திப் போக்குவரத்து நிறுவனங்களுக்குப் பண உதவி (subsidy) தருகிறது. அதுபோலவே, கப்பல்களில் எடுத்துச் செல்லப்படும் அஞ்சல் களுக்காகத் தரப்படும் கட்டணங்கள் உயர்வாக இருப்பது, கப்பல் நிறுவனத்திற்குத் தரப்படும் பண உதவியாக அமைகிறது. இத்தகைய பண உதவிகள், அஞ்சல் ஊழியத்தை நடத்தும் செலவின் பகுதிகளாகக் கருதப்படுகின்றன. அஞ்சல் வருவாய்கள் அஞ்சல் செலவுகளுக்குச் சமமாக இருக்கும்போது, அஞ்சல் ஊழியங்களை வாங்குபவர்களே — அதாவது பொது மக்களே இந்தப் பண உதவியைச் செலுத்துகிறார்கள் என்று கூறலாம்.

அளிப்பு விலையைப் பாதிக்கக்கூடிய காரணிகளில் வேறுபாடுகள் இருப்பதன் விளைவாக, அரசாங்கத் தொழில் துணிவில் விலைகள் முடிவுசெய்யப்படும் முறை, தனியார் வாணிபத்தில் விலைகள் முடிவு செய்யப்படும் முறையிலிருந்து மாறுப்பட்டிருக்கிறது என்பதை நாம் ஆய்ந்து அறிந்தோம். அரசாங்கப் பொருள்களின் உற்பத்திச் செலவு, தனியார் தொழில் துணிவின் உற்பத்திச் செலவிலிருந்து மாறுப்பட்டிருப்பதற்கான காரணங்களை நாம் ஆராய்ந்தபோது, அரசாங்கத் தொழில் துணிவுகள் அனைத்தும் எப்போதுமே தம் வரவைக்கொண்டு தம் செலவைச் சரிக்கட்டக்கூடிய நிலையில் இருப்பதில்லை என்னும் கருத்து தொனித்திருக்கக்கூடும். அப்படித் தொனித்திருந்தால் அது தவறான கருத்தாகும். அரசாங்கத்தின் தண்ணீர் வழங்கும் அமைப்புகள் எப்போதும் தம்மைத் தாமே தாங்கிக்கொள்கின்றன. (அதாவது, அவற்றின் வரவுகள் அவற்றின் செலவுகளைவிடக் கூடுதலாகவே இருக்கின்றன.) அதுபோலவே, நகராட்சி மன்றங்களின் மின்சார விளக்கு மற்றும் மின்சார சக்தி பற்றிய அமைப்புகளும், நகராட்சி மன்றங்களின் பிற தொழில் துணிவுகளில் பெரும்பாலானவையும், தம்மைத்தாம் தாங்கிக் கொள்ளும் ஆற்றல் உடையனவாகவே இருக்கின்றன. ஆனால், வட்டார அரசாங்கங்களின் போக்குவரத்து அமைப்புகளுக்கு இந்த ஆற்றல் இல்லை என்பது உண்மைதான். நியூயார்க் நகராட்சி மன்றத்தின் போக்குவரத்தின் அமைப்பு, இதற்குரிய தலையாய எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. மாநில அரசாங்கத் தொழில் துணிவு அமைப்புகளில், சாராய முற்றுரிமைகள் மிகுதியான இலாபத்தைத் தருவனவாக விளங்குகின்றன; பிற சிறிய தொழில் துணிவுகளும் ஓரளவு இலாபம் தருவனவாகவே இருக்கின்றன.

கூட்டரசாங்கத் தொழில்துணிவுகளில், அஞ்சல் முறையானது, 1920 முதல், போர்க்காலம் தவிர்த்த பிற எல்லா ஆண்டுகளிலும், தொடர்ச்சியாக ஒரு பற்றுக்குறைத் தொழில் துணிவாகவே இருந்து வருகிறது. இதற்குரிய தலையாய காரணம், அஞ்சல்களை ஏற்றிச் செல்லும் கப்பல்களுக்கும் வானூர்திகளுக்கும் (அதிகக் கட்டணம் என்னும் வடிவத்தில்) பண உதவி தரப்படுவதும், மூன்றும் வகை அஞ்சல்களுக்கு (சிறப்பாகப் பத்திரிகைகளுக்கும் செய்தித் தாள் களுக்கும்) குறைந்த அஞ்சல் கட்டணம் என்னும் வடிவத்தில் பண உதவித் தரப்படுவதுமே ஆகும். இந்த இருவகைப் பண உதவிகளால் அஞ்சல் தொழிலில் ஏற்படும் பற்றுக்குறைகள், வாணிபத் தொடர்பில்லாத காரணங்களால் ஏற்படுபவையே என்பது தெளிவு.

கூட்டாரசாங்கத்தின் மற்றொரு தொழில்துணிவாகிய பனமா கால்வாயை அமைப்பதற்கும், பராமரிப்பதற்கும், இயக்குதற்கும், பலப்படுத்துதற்கும், வாங்கிய கடனுக்கான வட்டி செலுத்து வதற்கும் ஆகிற பணச் செலவுகளை, அந்தக் கால்வாயின் நேர்முக வருவாய்களிலிருந்து முற்றிலும் ஈடுகட்ட முடியவில்லை. பணியாற்றிக்கொண்டிருக்கும் ஒரு வாணிப நிறுவனம் என்னும் முறையில், பனமா கால்வாயின் தற்போதைய பணமதிப்பு, எந்த வகை வாணிபக் கணக்கீட்டின்படிப் பார்த்தாலும், குறைந்தது அதனை அமைத்த செலவுக்கு ஒப்பாக இருக்கும். ஆகவே, ஒரு வாணிபத் தொழில்துணிவு என்னும் முறையில், அது போதுமான சிறப்புடன் பணியாற்றியிருக்கிறது என்னும் முடிவுக்கு நாம் வரமுடிகிறது. ஆனால், பனமா கால்வாயின் படைத்துறைத் தன்மையைக் கவனிக்கும்போது, வெறும் வாணிபத் தொழில் துணிவு என்னும் நிலையிலிருந்து அது பெரும் அளவில் மாறுபட் டிடுக்கிறது என்பதை எவரும் எளிதில் உணரமுடியும்.

அண்மைக் காலத்தில் ஏற்படுத்தப்பட்டுள்ள கூட்டரசாங்கக் கார்ப்பரேஷன்களைப்பற்றித் திட்டவட்டமான பொதுமைகள் (generalisations) எவற்றையும் கூறிவிடமுடியாது. சில கார்ப்ப ரேஷன்கள் முற்றிலும் நிர்வாகக் காரணங்களுக்காகவே ஏற்படுத்தப் பட்டதால், அவை தம்மைத்தாமே தாங்கிக்கொள்ளும் திறன் உடையதாக இருக்கவேண்டும் என்னும் எண்ணமே அரசாங்கத்திற்கு இருந்ததில்லை. எடுத்துக்காட்டாகப் பண்டங்களுக்காகக் கடன்தரும் கார்ப்பரேஷன் (Commodity Credit Corporation), நிதியாண்டு 1958-ன் இறுதி வரையில் சேர்த்து வைத்திருந்த பற்றுக்குறை 7·1 பில்லியன் டாலராகும்.[16] ஆனால், அந்த கார்ப்பரேஷன், தன்னைத்தானே தாங்கிக்கொள்ளத்தக்க ஒரு தொழில் துணிவாக உருவாக்கப்பட்டது அல்ல. வேளாண்மைக்கு உதவித்தொகைகளை

அளிப்பதற்கான ஓர் அரசாங்க ஏஜன்சியாகவே அது அமைக்கப்பட்டது. விலை ஆதரவு நடவடிக்கைகள் (price supporting activities) அடிப்படையில் நிவாரண நடவடிக்கைகளே. ஆகவே, தம்மைத்தாமே தாங்கிக்கொள்ளும் திறன் இயல்பாகவே அந் நடவடிக்கைகளில் அமைந்திருக்க முடியாது. ஏராளமான பற்றுக் குறையைச் சேர்த்து வைத்துள்ள ஏனைய கூட்டரசாங்கக் கார்ப்பரேஷன்களில் பல, உதவித்தொகைகளை வழங்குவதற்காக, அல்லது தனியார் நிறுவனங்களால் உற்பத்தி செய்யப்பட்டிருக்க முடியாத—ஆனால் இன்றியமையாத போர்க் கருவிகளை உற்பத்தி செய்வதற்காக அமைக்கப்பட்ட நிறுவனங்களே.[17] அதே சமயத்தில், சில கார்ப்பரேஷன்கள் ஆபத்தான தொழில் துணிவுகளில் ஈடுபடுவதற்காகப் படைக்கப்பட்டிருந்தாலும், பணத்துறையில் மிகுந்த வெற்றிபெற்ற அமைப்புகளாக அமைந்துவிட்டன. மறு அமைப்பு நிதிக் கார்ப்பரேஷன் (The Reconstruction Finance Corporation), 1953-ல் அது கலைக்கப்பட்ட நேரத்தில், கால் பில்லியன் டாலரைவிடச் சற்று உயர்வான உபரித்தொகையைச் சேர்த்துவைத்திருந்தது. கூட்டரசாங்க நிலப்பாங்குகள் (The Federal Land Banks), நடுத்தரக் காலக் கடன்தரும் பாங்குகள் (The Intermediate Credit Banks), பண்ணை அடைமானக் கார்ப்பரேஷன் (The Farm Mortgage Corporation) ஆகியவை, சிறப்பான அளவில் உபரித்தொகையை ஈட்டியுள்ள அரசாங்கத்தின் ஏனைய தொழில்துணிவுகள் ஆகும்.

அதிகத் திறமையை உடையது அல்லது பொது நன்மையை அதிக அளவில் அளிக்கவல்லது, தனியார் தொழிலா என்னும் கேள்வியை—அன்று இன்று என்றும் உள்ள கேள்வியை அலசி ஆராய்ந்துகொண்டிருப்பது, இச் சமயத்தில் நம்முடைய நோக்கம் அன்று. நாம், இந்த அத்தியாயத்தில், விலை வருவாய்களைத் (price revenues) தருகிற துறைகளைப்பற்றிய ஒரு வர்ணனையைத் தருவதிலும், சில வாணிபத் துறைகளில் மட்டுமே அரசாங்கம் ஈடுபட்டிருப்பதற்கான பொதுவான காரணங்களைச் சுட்டிக் காட்டுவதிலும் மட்டுமே கவனம் செலுத்தியிருக்கிறோம். அரசாங்க விலைகள் எந்தக் கோட்பாடுகளின் அடிப்படையில் முடிவு செய்யப் படுகின்றன என்னும் கருத்தாய்வின் விளைவாக, அரசாங்கம் ஒரு வாணிபத்துறையில் ஈடுபடும்போது, அதாவது விற்பனைக்காகப் பொருள்களையும் ஊழியங்களையும் உற்பத்தி செய்யும்போது, வாணிபத் தொடர்பில்லாத பல செல்வாக்குகளும் விலைகள் பற்றிய முடிவுகளைப் பாதிக்கும் என்னும் முடிவுக்கு நாம் வந்தோம். இந்தச் செல்வாக்குகள் செயலாற்றும் துறைகளில், அரசாங்கப் பொருள்களின் விலைகளுக்கும் தனியார் பொருள்களின் விலைகளுக்கும் இடையே ஏற்றத்தாழ்வுகள்—மிகுந்த அளவிலோ

குறைந்த அளவிலோ—ஏற்படக்கூடும். செயலாற்றும் திறமையை அல்லது விரும்பத்தக்க தன்மையை அதிக அளவில் பெற்றிருப்பது, தனியார் தொழில்துணிவா அல்லது அரசாங்கத் தொழில்துணிவா என்பதை ஒப்பிட்டு அறியவேண்டுமானால், முதலில் அந்த இரு வகைத் தொழில்துணிவுகளாலும் விற்கப்படும் பொருள்களுக்கும் ஊழியங்களுக்கும் இடையே உள்ள ஒற்றுமைகளையும் வேற்றுமைகளையும் ஆராய்ந்து உணரவேண்டும். ஏனென்றால், அப்படி ஆராய்ந்து பார்த்தால்தான், உண்மையில் இருவகைத் தொழில்துணிவுகளையும் ஒப்பிட்டுப் பார்ப்பதற்கான அடிப்படை இருக்கிறதா என்பதைக் கண்டறிய முடியும்.

## மேலும் படித்தற்கு உரியவை

1. ஐ. ஆர். பார்னஸ் (I. R. Barnes), 'The Economics of Public Utility Regulation', நியூயார்க், க்ராஃப்ட்ஸ் (Crofts), *1942*, அத்தியாயம் *24*.

மின்சார வசதித்துறையில் உள்ள அரசாங்க உடைமைபற்றிய கருத்தாய்வு. இந்த அத்தியாயம் பெரிதும் வர்ணனைத் தன்மை பொருந்தியதாக இருப்பதால், இதனைப் படிப்பதற்குப் பொது வசதிக் கட்டுபாடுபற்றிய அறிவு தேவையில்லை.

2. என். எச். ஜேகோபி (N. H. Jacoby), 'Government Loan Agencies and Commercial Banking', American Economic Review Supplement, மார்ச் *1942*, பக்கங்கள் *250—260*.

மிக விரிவாகப் பயிலப்படவேண்டிய ஒரு துறை பற்றித் தற்போது கிடைப்பவற்றில் மிகச் சிறந்த சிறிய கருத்தாய்வு.

3. ஸ்டாசி மே (Stacy May), 'Government Ownership', The Encyclopaedia of the Social Sciences, நியூயார்க், மாக்மில்லன், *1934*.

கோட்பாட்டு விவரங்களையும் வர்ணனை விவரங்களையும் தருகிற மிக அரிய மூலம் (source).

4. சி. ஈ. டிராக்செல் (C. E. Troxel), 'Economics of Public Utilities', நியூயார்க், ரைன்ஹார்ட் (Rinehart), *1947*, அத்தியாயம் *29*.

நகராட்சிமன்ற மின்சார வசதி முறைகள் பற்றிய மிகச் சிறந்த கருத்தாய்வு.

# 12ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. பிரெஞ்சு அரசாங்கத்தின் புகையிலை முற்றுரிமையும், ஐக்கிய அமெரிக்காவில் மதுவைச் சில்லறையில் விற்பதற்கான முற்றுரிமை மாநில அரசாங்கங்கட்கு இருப்பதும், இதற்குரிய எடுத்துக்காட்டுகளாகும். ஆனால், மது விற்பனை முற்றுரிமையைப் பொறுத்தவரை, முற்றுரிமை இலாப நோக்கத்தைவிட, அரசாங்க நடவடிக்கையின் மூலமாக மது விற்பனையை ஆற்றல்மிக்க முறையில் கட்டுப்படுத்துவதே தலையாய நோக்கமாக இருக்கக்கூடும்.

2. 1836-க்குள், கூட்டரசாங்கக் கடனனது முற்றிலும் தீர்க்கப்பட்டு விட்டது. அரசாங்க நில விற்பனை வரவுகள், இதற்கு ஒரு தலையாய காரணமாகும். அந்த ஆண்டுக்குப் பிறகும், அரசாங்க நில விற்பனைத் தொகைகள், பல சமயங்களில், கடனைத் தீர்ப்பதற்காக ஒதுக்கப்பட்டுள்ளன• என்றபோதிலும், நில விற்பனையிலிருந்து அரசாங்கத்திற்கு நிகர வருவாய் கிடைக்கவில்லை என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. ஏனென்றால், நில விற்பனையின் மொத்த வரவுகள், முதலில் அரசாங்கம் நிலத்தை வாங்கிய விலை, நிலக் கொள்கையை நடைமுறைப்படுத்திய செலவு ஆகியவற்றின் கூட்டுத்தொகையை விடக் குறைவாகவே இருந்தன.

3. இப் பல்வேறு குறிக்கோள்கள் தோன்றிய வரிசையைப்பற்றி மிகுந்த கருத்து வேறுபாடு தோன்றியிருக்கிறது. டென்னிசி பள்ளத்தாக்கு அமைப்பானது (T.V.A.), வெள்ளத் தடுப்பு, நில அரிப்புத் தடுப்பு, கப்பலோட்டும் வசதிகள் ஆகிய மூல நோக்கங்களின் விளைவாகக் கிடைக்கிற ஒரு துணைப்பொருளே மின்சார உற்பத்தி என்று வற்புறுத்திக் கூறுகிறது. ஆனால், தனியாரிடமுள்ள பொது வசதி நிறுவனங்கள், மலிவான மின்சார சக்தியை உற்பத்திச்செய்வதே அந்த அமைப்பின் தனிப்பெரும் குறிக்கோள் என்றும், வெள்ளத் தடுப்பு முதலிய பொது நன்மை நோக்கங்கள் இந்தக் குறிக்கோளுக்குப் பூசப்பட்டிருக்கிற சாயமே தவிர வேறில்லை என்றும் அழுத்தந்திருத்தமாக எடுத்துக் கூறுகின்றன. மின்சாரமானது முதன்மைப் பொருளாக இல்லாமல் துணைப் பொருளாக இருப்பது உண்மையாக இருந்து, அதனுடைய உற்பத்திக்காக ஏற்படுகிற கூடுதல் செலவுமட்டுமே அதன் உற்பத்திச் செலவாகக் கணக்கிடப் படுமானல், இந்தக் கூடுதல் செலவை அடிப்படையாகக்கொண்டு முடிவு செய்யப் படுகிற மின்சாரக் கட்டணங்களைத் தனியார் மின்சார நிறுவனங்கள் விதிக்கிற கட்டணங்களின் நியாயத்தை அளந்து பார்க்கும் அடிக்கோலாகப் பயன்படுத்த முடியாது. ஏனென்றால், இந்தத் தனியார் நிறுவனங்களின் தலையாய பொருளும் ஒரே பொருளும் மின்சாரம்தான்.

4. வரலாற்று முறைப்படிப் பார்த்தால் டி.வி.ஏ. (T.V.A.) மின்சாரமானது ஒரு துணைப் பொருளாகவே அமைந்திருக்கிறது• அது அப்படி இல்லாமலிருந்து, பொது நன்மையை முன்னிட்டு இயற்கைச் சாதனங்களைப் பயன்படுத்தவேண்டும் என்னும் ஒரு காரணத்திற்காகவே அரசாங்கம் மலிவான மின்சாரத்தை உற்பத்தி செய்வதாக இருந்தாலும், போட்டியுள்ள ஒரு துறையில் அரசாங்கம் நுழைந்தது நியாயமான செயலே ஆகும். ஏனென்றால், தனியார் மூலதனமானது இயற்கைச் சாதனங்களைப் பொது நன்மைக்காகப் பயன்படுத்த விரும்பவில்லை, அல்லது அதனால் பயன்படுத்த முடியவில்லை.

5. Annual Report of the Secretary of the Treasury, 1945, பக்கங்கள் 645–657.

6. மூலதன நிதிகள், ஓரளவுக்குத் தனியார் துறையிலிருந்து கிடைத்திருக்கின்றன.

7. Budget of the U.S. Government for 1960, சிறப்புப் பகுத்தாய்வு E (Special Analysis E), அட்டவணை 4.

8. Budget of the Government of the United States, 1960, சிறப்புப் பகுத்தாய்வு B.

9. சென்சஸ் பீரோ, Historical Statistics on State and Local Finances, 1902–1953, பக்கம் 19.

10. சென்சஸ் பீரோ, Compendium of State Government Finances in 1957, பக்கம் 6.

11. 25,000-க்கு மேற்பட்ட மக்கள் தொகை உடைய 481 நகரங்களின் பொது வசதி ஊழியங்களிலிருந்து (Public utility services) கிடைத்த வருவாய் (gross revenue) 1·5 பில்லியன் டாலராக இருக்கையில், எல்லா நகரங்களுடைய பொது வசதி ஊழியங்களிலிருந்து கிடைக்கும் மொத்த வருவாய் 2·4 பில்லியன் டாலராக இருப்பதைக் காணலாம். 25,000-ஐ விடக் குறைவான மக்கள் தொகை உடைய நகரங்களின் மொத்த மக்கள் தொகை, 25,000-க்கு மேற்பட்ட மக்கள் தொகை உடைய நகரங்களின் மக்கள் தொகையில் ஏறத்தாழ மூன்றில் ஒரு பங்காக இருக்கிறது. இவ்வாறாக தலா அடிப்படையில் பார்த்தால், 25,000க்குக் குறைந்த மக்கள் தொகை உடைய நகரங்களில், அரசாங்க உடைமையாக உள்ள பொது வசதிகளிலிருந்து கிடைக்கும் மொத்த வருவாய், 25,000-க்கு மேற்பட்ட மக்கள் தொகையுள்ள நகரங்களில் அதேவகை வசதிகளிலிருந்து கிடைக்கும் வருவாய்க்குக் குறையாமல் இருப்பதை அறியலாம். ஐக்கிய அமெரிக்காவின் எல்லா நகரங்களிலும் அரசாங்கப் பொதுவசதி நடவடிக்கைகள் விரிவாகப் பரவியிருக்கின்றன என்பதையே இந்த உண்மை எடுத்துக்காட்டுகிறது.

12. மாநிலப் பொது வசதிக் குழுவின் மூலமாக (The State Public Utility Commission), தனியாரால் உற்பத்திசெய்யப்படும் மின்சாரக் கட்டணங்களைக் குறைக்க இயலவில்லை என்ற நிலை ஏற்பட்டபோது, லா கார்டியா (La Guardia) நிர்வாகமானது, தனியார் துறைக்குப் போட்டியாக அரசாங்கத் துறையில் ஒரு மின்சார நிலையம் அமைக்கப்போவதாக அச்சம் ஊட்டியதன்மூலம் மின்சாரக் கட்டணங்களைக் குறைக்கவைத்தது. ஆனால், பெரும்பாலான நகரங்களில், அத்தகைய அரசாங்கப் போட்டியானது இலாபம் தரத்தக்கதாக இருக்கமுடியாது. ஏனென்றால், அத்தகைய போட்டியில், அரசாங்கமானது, போதுமான ஊழியத்தைத் தரும் திறன் உடைய தற்போதைய (தனியாரின்) மின்சாரம் வழங்கும் அமைப்போடுகூட, அதே வகையான மற்றோர் அமைப்பை ஏற்படுத்துவதற்காக மிகக் கூடுதலான தொகையை முதலீடு செய்யவேண்டியிருக்கும். ஆகவே, தனியார் தொழில்துணிவுக்குப் பதிலாக அரசாங்கத் தொழில் துணிவானது, இலாபம் உள்ள முறையில் ஏற்படவேண்டுமானால், தனியாரின் தற்போதைய தொழில்துணிவை அரசாங்கம் விலைக்கு வாங்கிவிடுவதே சிறந்த முறையாகும்.

13. ஜான் பாயர் (John Bauer), 'Public Ownership of Public Utilities in the United States' என்னும் கட்டுரை, The Annals of the American Academy of Political and Social Science, ஜனவரி, 1939, பக்கம் 50.

14. சென்சஸ் பீரோ, Financing Federal, State and Local Governments: 1941, 1942, பக்கம் 45,

15. சமுதாயப் பயன்பாடானது முதன்மையான பொருளாகவும், தனியாளுக்குக் கிடைக்கும் பயன்பாடானது துணைப் பொருளாகவும் கருதப் பட்டால், குறிப்பிட்ட ஊழியமானது, ஒரு பொதுவான அரசாங்க ஊழியம் என்னும் வகையில், பெரும்பாலும் இலவசமாக வழங்கப்படும்; அல்லது நன்மையை அடையும் தனியாட்கள்மீது பெயரளவு (nominal) நிர்வாகக் கட்டணங்கள் மட்டும் விதிக்கப்படும்.

16. Budget of the U. S. Government, 1960, பக்கம் 369.

17. ஏராளமான பற்றுக்குறையை உடைய கார்ப்பரேஷன்களில் கீழ்க் கண்டவையும் அடங்கும்: கூட்டரசாங்கப் பயிர் ஈட்டுறுதிக் கார்ப்பரேஷன் (Federal Crop Insurance Corporation,) பாதுகாப்புப் பொறிகள் கார்ப்ப ரேஷன் (Defence Plants Corporation), உலோகங்கள் காப்பிருப்புக் கம்பெனி, இரப்பர் காப்பிருப்புக் கம்பெனி, ஐக்கிய அமெரிக்க வாணிபக் கம்பெனி, இரப்பர் வளர்ச்சிக் கம்பெனி, மற்றும் பல்வேறு வீடுகட்டும் கார்ப்பரேஷன்கள்.

# கலைச்சொல் அகராதி

## ஆங்கிலம் — தமிழ்

### A

| | |
|---|---|
| Ability to pay | —செலுத்தும் திறன் |
| Acceleration | —வேகவளர்ச்சி |
| Acceleration principle | —வேகவளர்ச்சிக் கோட்பாடு |
| Accrued interest | —சேர்ந்துள்ள வட்டி, கூடிய வட்டி |
| Accumulation of capital | —முதல் திரட்சி, மூலதனத் திரட்சி |
| Accuracy | —துல்லியம் |
| Adjudication | —தீர்ப்பளிப்பு |
| Administration | —நிர்வாகம் |
| Ad valorem tax | —பெறுமான விகித வரி |
| Agents of production | —உற்பத்தி ஏஜன்டுகள் |
| Aggregate demand | —மொத்தத் தேவை |
| Agreement | —உடன்பாடு |
| Agriculture | —வேளாண்மை |
| Allocation of resources | —சாதனப் பங்கீடு |
| Allotment | —ஒதுக்கீடு |
| Analysis | —பகுத்தாய்வு |
| Announcement effect | —அறிவிப்பு விளைவு |
| Anticipations | —முன்னோக்குகள் |
| Anticipations, falling | —விழுகின்ற முன்னோக்குகள் |
| Anticipations, rising | —எழுகின்ற முன்னோக்குகள், உயரும் முன்னோக்குகள் |
| Anti-inflation tax policy | —பணவீக்க எதிர்ப்பு வரிக் கொள்கை |
| Appendix | —பின்னிணைப்பு |
| Appreciation | —மதிப்பேற்றம் |
| Appropriation | —நிதி ஒதுக்கம் |

Assessment —கணக்கீடு, மதிப்பீடு
Assets —சொத்துகள்
Association —சங்கம்
Assumption —பாவனை
Authorisation —அதிகார அளிப்பு
Automatic measures —தாமே இயங்கும் முறைகள்.

**B**

Balance —இருப்பு
Balance sheet —ஐந்தொகைக் குறிப்பு
Bank —பாங்கு, வங்கி
Bank, commercial —வாணிப பாங்கு
Bank credit —பாங்குச் செலாவணி
Banking system —பாங்குமுறை
Beneficiary —நன்மை பெறுவோன்
Benefit, general —பொது நன்மை
Benefit, specific —குறிப்பான நன்மை
Benefit principle —நன்மைக் கோட்பாடு
Bill —உண்டியல், மசோதா, சட்டமூலம்
Board —கழகம்
Board of Governors —ஆளுநர் குழு, ஆளுநர் கழகம்
Bonds —கடன் பத்திரங்கள், பாண்டுகள்
Book-keeping —கணக்குவைத்தல்
Boom —வீக்கம், பொருளாதார வீக்கம்
Budget —வரவுசெலவுத் திட்டம்
Budget, balanced —ஒத்தநிலை வரவுசெலவுத் திட்டம்
Budget, cash —ரொக்க வரவுசெலவுத் திட்டம்
Budget, conventional —வழக்கில் உள்ள வரவுசெலவுத் திட்டம்
Budget, deficit —பற்றுக்குறை வரவு செலவுத் திட்டம்
Budget, emergency —நெருக்கடி வரவுசெலவுத் திட்டம்
Budget, executive —நிர்வாக வரவுசெலவுத் திட்டம்
Budget, extraordinary —இயல்பல்லாத வரவு செலவுத் திட்டம்
Budget, legislature —சட்டமன்றவரவுசெலவுத்திட்டம்
Budget, ordinary —இயல்பானவரவு செலவுத்திட்டம்
Budget, performance —பணிமுறை அல்லது சாதனைமுறை வரவுசெலவுத் திட்டம்

Budget, unbalanced —ஒவ்வாநிலை வரவுசெலவுத் திட்டம்
Built-in methods —இணைத்து அமைக்கப்பட்ட முறைகள்
Burden —சுமை
Bureau —கழகம்
Business —வாணிபம், வாணிகம், வியாபாரம்
Business cycle —வாணிபச் சுழல்
Business firm —வாணுப நிறுவனம்
Buyer —வாங்குபவர்
Byproduct —துணைப்பொருள், பக்க விளைவு

C

Call loan —அழைப்புக் கடன்
Canon —விதி
Capital —மூலதனம், முதல்
Capital goods —மூலதனப் பொருள்கள், முதற் பொருள்கள்
Capital market —மூலதன அங்காடி
Capitalism —முதலாளித்துவம்
Capitation tax —தலைவரி
Cash —ரொக்கம்
Cash balance —ரொக்க இருப்பு
Central bank —மைய பாங்கு
Certificate —சான்றிதழ்
Cheap money policy —மலிவுப் பணக் கொள்கை
Cheque —செக்கு
Circulation of money —பணப்புழக்கம்
Citizen —குடிமகன்
Civilian economy —குடிமைப் பொருளாதாரம், சிவிலியன் பொருளாதாரம்
Classification —பாகுபாடு
Clearing house —செக்குத் தீர்வகம்
Co-efficient —குணகம்
Coercion —வலுக்கட்டாயம்
Coins —காசுகள்
Collateral security —துணை ஈடு
Collection —தண்டல், வசூல்
Colonies —குடியிருப்புகள்
Comforts —வசதிப் பொருள்கள்
Commerce —வாணிபம், வாணிகம்

| | |
|---|---|
| Commercial enterprise | —வாணிபத் தொழில் துணிவு |
| Commercial policy | —வாணிபக் கொள்கை |
| Commercial tax | —வாணிப வரி |
| Commission | —குழு, கழிவு |
| Committee | —குழு |
| Commodity | —பண்டம் |
| Communication | —செய்தி அறிவிப்பு |
| Community | —சமூகம், சமுதாயம் |
| Company | —கம்பெனி |
| Compensation | —இழப்பீடு |
| Compensatory fisal policy | —ஈடுசெய் நிதிக்கொள்கை |
| Competition | —போட்டி |
| Complementary goods | —நிறைவுசெய் பொருள்கள் |
| Comptroller-General | —கட்டுப்பாட்டுப் பேரதிகாரி |
| Constant dollar | —நிலேயான டாலர் |
| Constituents | —கூறுகள், பகுதிகள் |
| Consumer | —நுகர்வோர், துய்ப்போர் |
| Consumers' goods | —நுகர்வுப் பொருள்கள் |
| Consumers' goods, durable | —நீடித்த நுகர்வுப் பொருள்கள் |
| Consumers' sovereignty | —நுகர்வோர் இறைமை |
| Consumption | —நுகர்வு, துய்ப்பு |
| Consumption function | —நுகர்வுப் பணி |
| Contingent liabilities | —எதிர்பாராப் பொறுப்புகள், ஐயப்பாடான பொறுப்புகள் |
| Contract | —ஒப்பந்தம் |
| Contraction | —சுருக்கம் |
| Control | —கட்டுப்பாடு |
| Control, formal | —விதிமுறைக் கட்டுப்பாடு |
| Conversion | —மாற்றுகை, மாற்றம் |
| Co-operation | —கூட்டுறவு |
| Co-operative Credit Societies | —கூட்டுறவு கடன்வழங்குசங்கங்கள் |
| Corporation | —கார்ப்பரேஷன், கூட்டு நிறுவனம் |
| Corporation tax | —கார்ப்பரேஷன் வரி, கூட்டு நிறுவன வரி |
| Cost | —செலவு, அடக்க விலே |
| Cost, fixed | —மாறுச் செலவு |
| Cost, prime | —முதன்மைச் செலவு |
| Cost,variable | —மாறும் செலவு |
| Cost of living | —வாழ்க்கைச் செலவு |
| Cost of production | —உற்பத்திச் செலவு |

Cost payment —செலவு செலுத்தல்
Council —மன்றம்
Coupon —கூப்பன், வெட்டுச் சீட்டு
Creation of bank credit —பாங்குச் செலாவணிப் படைப்பு
Credit —கடன், வரவு; நாணயம்
Credit instrument —கடன் கருவி
Creditor —கடன் ஈவோன்
Cumulative —குவிந்துள்ள
Currency —செலாவணி
Current dollar —நடப்பு டாலர், தற்போதைய டாலர்
Current price —நடப்பு விலை
Curve —வளைகோடு
Customs duty —சுங்கத் தீர்வை

## D

Data —விவரங்கள்
Death tax —மரண வரி
Debt, conversion of —கடன் இன மாற்றுகை
Debt, floating —மிதக்கும் கடன்; குறுங்காலக் கடன்
Debt, funded —நிதியாக்கப்பட்ட கடன், நிலையாக்கிய கடன்
Debt, gross —மொத்தக் கடன்
Debt, national —நாட்டுக் கடன்
Debt, net —நிகரக் கடன்
Debt, private —தனியார் கடன்
Debt, public —பொதுக் கடன், அரசாங்கக் கடன்
Debtor —கடனாளி
Decline —வீழ்ச்சி
Decrease —குறைவு
Default —தவறுகை, தவறுதல்
Defence —பாதுகாப்பு
Deferred payment —ஒத்திவைக்கப்பட்ட செலுத்தல், தள்ளிப்போட்ட செலுத்தல்
Deficiency —பற்றாக்குறை
Deficit —பற்றாக்குறை
Deficit financing —பற்றாக்குறை நிதியாக்கம்
Definition —இலக்கணம்
Deflation —பணவாட்டம், பணச்சுருக்கம்

Demand —தேவை
Demand, derived —வழிவந்த தேவை
Demand schedule —தேவைப்பட்டியல்
Department —துறை
Deposit —வைப்பு
Deposit, current —நடப்பு வைப்பு
Deposit, demand —நடப்பு வைப்பு
Deposit, fixed —தவணை வைப்பு
Deposit, time — ,,
Depositor —வைப்பாளி
Depreciation —மதிப்பிறக்கம், தேய்மானம்
Depression —மந்தம்
Determinants —தீர்மானிகள்
Diminishing marginal utility —குறைந்து செல் இறுதிநிலைப் பயன்பாடு
Discount —கழிவு
Discrimination —பேதம் காட்டுகை
Discussion —கருத்தாய்வு
Distribution of income —வருமானப் பங்கீடு
District —மாவட்டம்
Double taxation —இரட்டிப்பு (இரட்டை) வரிவிதிப்பு
Duty —தீர்வை
Dynamic economics —இயக்கநிலைப் பொருளாதாரம்

E

Earnings —ஈட்டம், சம்பாத்தியம்
Economic growth —பொருளாதார வளர்ச்சி
Economics —பொருளாதாரம்
Economist —பொருளாதாரவாதி, பொருளாதார அறிஞர்
Economy —பொருளாதாரம், சிக்கனம்
Effect —விளைவு, பயன்
Effect, negative —எதிர்மறை விளைவு
Effort, positive —நேர்முக விளைவு
Effort —முயற்சி
Elasticity —நெகிழ்ச்சி
Employee —வேலையாள், வேலை செய்வோன்
Employer —வேலை அளிப்போன்
Employment —வேலை

Enterprise —தொழில் துணிவு
Enterpriser —தொழில்துணிவோன்
Entrepreneur — ,,
Equality —சமத்துவம்
Equality of sacrifice —தன்மறுப்பு ஒத்தநிலை, சமத் தியாகநிலை
Equilibrium —சமநிலை
Equipment —தளவாடம்
Equity —நேர்மை, அறம்
Estate —முழுச் சொத்து, எஸ்டேட்
Estimate —மதிப்பீடு
Excess —மிகை
Excess profits tax —அமித இலாப வரி, மிகை இலாப வரி
Excise duty —ஆயத்தீர்வை
Expansion, extensive —அகன்ற பெருக்கம், அகன்ற வளர்ச்சி
Expansion, intensive —ஆழ்ந்த பெருக்கம், ஆழ்ந்த வளர்ச்சி
Expenditure —செலவு

F

Factors of production —உற்பத்திக் காரணிகள்
Farm —பண்ணை
Federal Reserve Banks —ஐக்கிய ரிசர்வ் பாங்குகள்
Federal Reserve System —ஐக்கிய ரிசர்வ் முறை
Federation —கூட்டரசு
Fee —கட்டணம்
Finance —நிதி
Firm —நிறுவனம்
Fiscal policy —நிதிக்கொள்கை
Flexibility —வளைந்துகொடுக்கும் தன்மை
Fluctuations —ஏற்ற இறக்கங்கள்
Forfeiture —பறிமுதல்
Formula —வாய்பாடு
Full employment —வேலைநிறைவு
Function —பணி
Functional finance principle —பணியாற்றும் நிதிக்கொள்கை
Fund —நிதி

Fund, general —பொது நிதி
Fund, special —தனி நிதி, சிறப்பு நிதி

G

Gasoline tax —பெட்ரோல் வரி
Generalisations —பொதுமைகள்
Gift —நன்கொடை
Goods —பொருள்கள்
Government —அரசாங்கம்
Grading —தரப்படுத்தல்
Grants —மானியங்கள்
Grants-in-aid —உதவி மானியங்கள்
Grants, matching —இணைமானியங்கள்
Gross national income —நாட்டின் மொத்த வருமானம்
Gross national product —நாட்டின் மொத்த ஆக்கம்
Guarantee —உறுதிமொழி, உத்தரவாதம்

H

Highways —நெடுஞ்சாலைகள்
Hoarding —பதுக்கல்
Holder —வைத்திருப்பவர்
Hypothesis —கற்பிதக் கோட்பாடு, ஊக்கக் கோட்பாடு, கருதுகோள்
Hypothetical —கற்பிதமான

I

Idle funds —ஆளா நிதிகள்
Impact of taxation —வரிவிதிப்பின் தாக்கு
Incentive —தூண்டுதல்
Incidence of taxation —வரிவிதிப்பின் நிலைப்பாடு
Income —வருமானம்
Income, gross —மொத்த வருமானம்
Income, individual —தனியாள் வருமானம்
Income, money —பணவருமானம்
Income, national —நாட்டு வருமானம்
Income, net —நிகர வருமானம்
Income, real —மெய் வருமானம், உண்மை வருமானம்
Imcome-tax —வருமானவரி
Increase —உயர்வு
Index number —குறியீட்டெண்

Indirect tax —மறைமுக வரி
Individual —தனியாள்
Individualism —தனியாள் உரிமைக் கொள்கை
Industry —தொழில்
Inequality of incomes —வருமான ஏற்றத்தாழ்வு
Inflation —பணவீக்கம்
Inheritance —சொத்துப்பேறு
Initiative —முனைப்பு, துணிவு
Innovation —புத்தமைப்பு, புதுமை
Instability —நிலைபேறின்மை
Institution —நிறுவனம்
Insurance —ஈட்டுறுதி, இன்சூரன்ஸ்
Interest —வட்டி
International Monetary Fund —பன்னாட்டுச் செலாவணி நிதி
International trade —பன்னாட்டு வாணிபம்
Inventory —பொருள் இருப்பு, இருப்புப் பட்டியல்
Investment —முதலீடு
Investment function —முதலீட்டுப் பணி
Investor —முதலீட்டாளர், முதலீடு செய்வோர்
Issue of loan —கடன் வெளியீடு
Items —இனங்கள்

J

Joint Committee —இணைக்குழு, கூட்டுக் குழு
Joint cost —கூட்டுச் செலவு
Joint products —கூட்டுத் தோற்றப் பண்டங்கள்

L

Labour —உழைப்பு, உழைப்பாளி
Labourer —உழைப்பாளி, தொழிலாளி
Law of diminishing marginal utility —குறைந்து செல் இறுதிநிலைப் பயன்பாட்டு விதி
Laws, Economic —பொருளாதார விதிகள்
Leakage —ஒழுக்கல், தப்பிச் செல்லல்
Lease —குத்தகை
Legal reserves —சட்டமுறைக் காப்பிருப்புகள்
Legal tender —சட்டமுறைப் பணம்
Leverage co-efficient —லீவரேஜ் குணகம்
Leverage effect —லீவரேஜ் விளைவு

| | |
|---|---|
| Liability | —பொறுப்பு |
| License | —லைசென்சு, உரிமம் |
| Limitation | —வரையறை, வரம்பீடு |
| Liquid assets | —நீர்மைச் சொத்துகள்; ரொக்கமாகக்கூடிய சொத்துகள் |
| Liquidation | —கலைப்பு, முடிப்பு |
| Liquidity | —நீர்மை, ரொக்கநிலை |
| Liquidity preference | —நீர்மை நாட்டம், ரொக்க விருப்பம் |
| Loan | —கடன் |
| Loanable funds | —கடன் தரக்கூடிய நிதிகள் |
| Local Government | —வட்டார அரசாங்கம் |
| Locality | —வட்டாரம் |
| Logic | —தர்க்கமுறை |
| Loss | —இழப்பு, நஷ்டம் |
| Luxuries | —போகப்பொருள்கள் |

M

| | |
|---|---|
| Machinery | —பொறி |
| Management | —மேலாண்மை, நிர்வாகம் |
| Manager | —மேலாளர், நிர்வாகி |
| Manufactured goods | —பொறிசெய் பொருள்கள் |
| Margin | —இறுதிநிலை |
| Marginal income | —இறுதிநிலை வருமானம் |
| Marginal propensity to consume | —இறுதிநிலை நுகர்வு நாட்டம் |
| Marginal propensity to save | —இறுதிநிலைச் சேமிப்பு நாட்டம் |
| Marginal purchaser | —இறுதிநிலை வாங்குவோர் |
| Marginal seller | —இறுதிநிலை விற்பனையாளர் |
| Marginal utility | —இறுதிநிலைப் பயன்பாடு |
| Market | —அங்காடி, சந்தை |
| Market rate | —அங்காடி வீதம் |
| Maturity | —தவணை முடிவு; முதிர்வு |
| Maturity stagnation | —முதிர்ச்சிநிலைத் தேக்கம் |
| Maximum | —உச்ச; உச்ச அளவு |
| Means of production | —உற்பத்திச் சாதனங்கள் |
| Measure | —அளவு, அளவை; திட்டம் |
| Member Bank | —உறுப்பினர் பாங்கு |
| Minimum | —குறைந்த அளவு |
| Mobility | —இடப்பெயர்ச்சி |

Monetary policy —பணக்கொள்கை
Monetisation —பண ஆக்கம்
Money —பணம்
Money market —பண அங்காடி
Money, paper —தாள் பணம், காகிதப் பணம்
Monopoly —முற்றுரிமை
Mortgage —அடைமானம், ஒற்றி
Multiplier —பெருக்கும் எண், பெருக்கி
Municipality —நகராட்சி மன்றம்

N

National debt —நாட்டுக் கடன்
National income —நாட்டு வருமானம்
National output —நாட்டு உற்பத்தி
National product, gross —நாட்டின் மொத்த ஆக்கம்
National product, net —நாட்டின் நிகர ஆக்கம்
Natural resources —இயற்கைச் சாதனங்கள், இயற்கைவளப் பொருள்கள்
Necessary gooods —இன்றியமையாப் பொருள்கள்
Net —நிகர
Norm —மீக்கோள் தரம்
Normal —இயல்பான
Notes —நோட்டுகள்

O

Objective —குறிக்கோள், நோக்கம்
Offer —அளிப்புக் கூற்று
Open market operations —வெளி அங்காடி நடவடிக்கை
Optimum growth —உத்தம வளர்ச்சி
Ordinary —இயல்பான, சாதாரணமான
Organisation —அமைப்பு
Outlay —செலவு, செலவீடு
Output —உற்பத்தி
Outstanding debt —செலுத்தவேண்டிய கடன்
Overhead cost —பொதுச் செலவு, மேற்செலவு
Over-investment —அமித முதலீடு

P

Par value —சமமதிப்பு, ஒத்த மதிப்பு
Payee —பெறுவோன்
Payment —செலுத்து, செலுத்தல்

Payor —செலுத்துவோன்
Payroll tax —சம்பளப் பட்டியல் வரி
Pension —ஓய்வு ஊதியம்
Per capita —தலா
Percent —சதவீதம்
Percentage — ,,
Period —காலப்பகுதி, கால அளவு
Permit —அனுமதி ஆணை
Phase —பருவம், கட்டம்
Plant —பொறி
Policy —கொள்கை
Poll tax —தலைவரி
Population —மக்கள்தொகை
Post office —அஞ்சல் நிலையம், தபால் நிலையம்
Preamble —பாயிரம்
Preference —தெரிவு விருப்பம்
Premium —தவணைக் கட்டணம்
Price —விலை
Price control —விலைக்கட்டுப்பாடு
Price, current —நடப்பு விலை
Price inflation —விலைப்பண வீக்கம்
Prime cost —முதன்மைச் செலவு
Principal —அசல் தொகை, முதன்மையான
Principle —கோட்பாடு
Private sector —தனியார் துறை
Problem —சிக்கல், பிரச்சினை
Processing —பக்குவப்படுத்தல்
Product —உற்பத்தி, ஆக்கம், விளைவு
Production —உற்பத்தி, ஆக்கம்
Productive labour —பயன் தரும் உழைப்பு, பொருளாக்கும் உழைப்பு
Productivity —ஆக்கத்திறன்
Profession tax —தொழில் வரி
Profit —இலாபம்
Progressive taxation —வளர்வீத வரிமுறை
Projection —முன்மொழிவு
Promissary note —புரோநோட்டு
Propensity —நாட்டம்
Property tax —சொத்து வரி
Proportion —வீதாசாரம்

Proportional taxation —வீதாசார வரிமுறை
Prosperity —செழுமை
Public debt —பொதுக் கடன், அரசாங்கக் கடன்
Public enterprise —அரசாங்கத் தொழில்துணிவு
Public expenditure —அரசாங்கச் செலவு
Public finance —பொது நிதி, அரசாங்க நிதி
Public revenue —அரசாங்க வருவாய்
Public sector —பொதுத் துறை, அரசாங்கத் துறை
Public utility —பொது வசதி
Pump-priming —குழாய் நிரப்புகை
Purchasing power —வாங்குந் திறன்

## Q

Quantity —அளவு
Quid pro quo —பிரதிபயன்
Quota —பங்களவு
Quotation —மேற்கோள், விலைக்குறிப்பு

## R

Rate —வீதம், கட்டணம்
Ratio —விகிதம்
Real cost —உண்மைச் செலவு
Receipts —வரவுகள்
Recession —பின்னிறக்கம்
Reconstruction —சீரமைப்பு,மறு அமைப்பு
Recovery —மீட்சி, மறுமலர்ச்சி
Redemption —கடன் மீட்சி
Rediscount —மறுகழிவு
Redistribution of income —வருமான மறுபங்கீடு
Refunding —மறுநிதியாக்கம்
Registration fee —பதிவுக் கட்டணம்
Regressive taxation —தேய்வுவீத வரிமுறை
Regulation —ஒழுங்குபாடு, கட்டுப்பாடு
Relative value —தராதர மதிப்பு
Relief —நிவாரணம்
Remuneration —ஊதியம்
Rent —வாடகை, வாரம்
Reparation —அழிவு ஈடு
Research —ஆராய்ச்சி

Reserve fund —காப்பிருப்பு நிதி
Reserve requirements —காப்பிருப்புத் தேவைகள்
Resources —சாதனங்கள், வளப்பொருள்கள்
Retail trade —சில்லறை வாணிபம்
Ratailer —சில்லறை விற்பனையர்
Return —விளைவு
Revenue —வருவாய்
Revenue receipts —வருவாய் வரவுகள்
Revolving fund —மீளும் நிதி
Rigid money policy —பண இறுக்கக் கொள்கை
Risk —ஆபத்து
Royalty —உரிமைத் தொகை

S

Sacrifice —தன்மறுப்பு, தியாகம்
Sacrifice, comparative —ஒப்புநோக்குத் தியாகம்
Sacrifice, relative —தராதரத் தியாகம்
Salary —ஊதியம், சம்பளம்
Sale —விற்பனை
Saving —சேமிப்பு
Scarcity —கிடைப்பருமை
Schedule —பட்டியல்
Security —கடன் பத்திரம், ஈடு
Seigniorage —நாணய அச்சுத் தீர்வை
Seller —விற்பனையாளர், விற்பவர்
Services —ஊழியங்கள்
Shifting of tax —வரிப் புரட்டுகை
Significance —சிறப்பு
Sinking fund —கடன் கழிவு நிதி, கடன் தீர்வு நிதி
Sinking fund, cumulative —குவிவுக் கடன் கழிவு நிதி
Slack —தளர்ச்சிநிலை
Slope —சாய்வு
Social security —சமூகப் பாதுகாப்பு
Socialism —சமதர்மம்
Soil erosion —நில அரிப்பு
Sovereignty —இறைமை
Special assessment —தனித் தீர்வை
Specialisation —சிறப்புத் தேர்ச்சி
Specialist —சிறப்புத் தேர்ச்சியாளர், நுண்ணறிஞர்

Specifications —விவரக் குறிப்புகள்
Speculation —ஊகவாணிபம்
Spiral —சுழலேறி
Spiral, downward —கீழ்நோக்கிய சுழலேறி
Spiral, upward —மேல்நோக்கிய சுழலேறி
Stabilisation —நிலைபேறுக்கம்
Stability —நிலைபேறு
Stable —நிலையான
Stagnation —தேக்கம்
Standardisation —தரப்படுத்தல்
State —அரசு, மாநிலம், நிலைமை
State government —மாநில அரசாங்கம்
Statement —அறிக்கை
Statistics —புள்ளிவிவரம்
Statute —சட்டம்
Stock —இருப்பு, பங்குத் தொகுப்பு
Subjective nature —அக இயல்பு
Subsidy —உதவித்தொகை
Substitute —பதிலி
Substitution —பதிலீடு
Sumptuary objective —கட்டுப்பாட்டு நோக்கம்
Supplementary appropriation—துணைநிதி ஒதுக்கம்
Supplementary cost —துணைச்செலவு
Supply —அளிப்பு
Supply price —அளிப்பு விலை
Supreme Court —உச்சநீதி மன்றம்
Surplus —உபரி
System —முறை

T

Table —அட்டவணை
Tariffs —சுங்கவரிகள்
Taxable capacity —வரி தாங்கும் வல்லமை, வரி தாங்கும் திறன்
Taxation —வரிவிதிப்பு, வரிமுறை
Tax burden —வரிச்சுமை
Technical sense —துறைநுணுக்கப் பொருள்
Technology —தொழில்நுண்ணியல்
Tenant —குத்தகைக்காரன்

Theory —கோட்பாடு
Tight money policy —பண இறுக்கக் கொள்கை
Toll —வழிச்சுங்கம்
Trade —வாணிபம், வணிகம்
Trade cycle —வாணிபச் சுழல்
Transaction —நடவடிக்கை, பேரம்
Transfer frictions —மாற்றல் உராய்வுகள்
Transfer payment —மாற்று செலுத்தல்
Treasury —கருவூலம்
Treasury bill —கருவூல உண்டியல்
Trend —போக்கு
Trust fund —பொறுப்பு நிதி

U

Underemployment —வேலைக்குறைவு
Unemployment, —வேலையின்மை
Unemployment, involuntary —கட்டாய வேலையின்மை, தான் விரும்பா வேலையின்மை
Unemploment, voluntary —தானே விரும்பிய வேலையின்மை
Uniform —ஒரே வகையான, ஒருபடித்தான
Unit —அலகு
Unproductive labour —பயன் தரா உழைப்பு, பொருள் ஆக்கா உழைப்பு
Urbanisation —நகர்மயமாதல்
Utility —பயன்பாடு
Utility function —பயன்பாட்டுப் பணி

V

Value —மதிப்பு
Variable —மாறி
Velocity of circulation —புழக்க வேகம்
Veto —மறுப்பாணை
Vocational education —தொழில்முறைக் கல்வி

W

Wage —கூலி
Wants —விருப்பங்கள்
Wealth —செல்வம்
Welfare —நலம், நல்வாழ்வு
Withdrawal —திரும்பப்பெறல்

# கலைச்சொல் அகராதி

## தமிழ் — ஆங்கிலம்

### அ

அக இயல்பு —Subjective nature
அங்காடி —Market
அங்காடி வீதம் —Market rate
அசல் தொகை —Principal
அஞ்சல் நிலையம் —Post office
அடைமானம் —Mortgage
அட்டவணை —Table
அதிகார அளிப்பு —Authorisation
அமித இலாப வரி —Excess profits tax
அமித முதலீடு —Over investment
அமைப்பு —Organisation
அரசாங்கம் —Government
அரசாங்கத்துறை —Public sector
அரசாங்க நிதி —Public finance
அரசாங்க வருவாய் —Public revenue
அரசு —State
அலகு —Unit
அழிவு ஈடு —Reparation
அழைப்புக் கடன் —Call loan
அளவு —Quantity, amount, measure
அளவை —Measure
அளிப்பு —Supply
அளிப்புக் கூற்று —Offer
அளிப்பு விலை —Supply price
அறிக்கை —Statement
அறிவிப்பு விளைவு —Announcement effect
அனுமதி ஆணை —Permit

ஆ

| | |
|---|---|
| ஆக்கத்திறன் | —Productivity |
| ஆக்கம் | —Product, production, output |
| ஆபத்து | —Risk |
| ஆய்த்தீர்வை | —Excise duty |
| ஆராய்ச்சி | —Research |
| ஆளா நிதிகள் | —Idle funds |
| ஆளுநர் குழு | —Board of Governors |

இ

| | |
|---|---|
| இடப் பெயர்ச்சி | —Mobility |
| இணைக்குழு | —Joint Committee |
| இணைத்து அமைக்கப்பட்ட முறைகள் | —Built-in methods |
| இயல்பான | —Normal, ordinary |
| இயற்கைச் சாதனங்கள், இயற்கை வளப்பொருள்கள் | —Natural resources |
| இரட்டை வரிவிதிப்பு | —Double taxation |
| இரட்டிப்பு வரிவிதிப்பு | — ,, |
| இருப்பு | —Balance, stock |
| இருப்புப் பட்டியல் | —Inventory |
| இலக்கணம் | —Definition |
| இலாபம் | —Profit |
| இழப்பீடு | —Compensation |
| இழப்பு | —Loss |
| இறுதிநிலை | —Margin |
| இறுதிநிலை சேமிப்பு நாட்டம் | —Marginal propensity to save |
| இறுதிநிலை நுகர்வு நாட்டம் | —Marginal propensity to consume |
| இறுதிநிலைப் பயன்பாடு | —Marginal utility |
| இறுதிநிலை வருமானம் | —Marginal income |
| இறுதிநிலை வாங்குவோர் | —Marginal purchaser |
| இறுதிநிலை விற்பனையாளர் | —Marginal seller |
| இறைமை | —Sovereignty |
| இனங்கள் | —Items |
| இன்றியமையாப் பொருள்கள் | —Necessary goods |

ஈ

| | |
|---|---|
| ஈடுசெய் நிதிக் கொள்கை | —Compensatory fiscal policy |
| ஈட்டம் | —Earnings |
| ஈட்டுறுதி | —Insurance |

உ

உச்ச அளவு —Maximum
உச்ச நீதிமன்றம் —Supreme Court
உடன்பாடு —Agreement
உண்டியல் —Bill
உண்மைச் செலவு —Real cost, real expenditure
உதவித் தொகை —Subsidy
உத்தம வளர்ச்சி —Optimum growth
உபரி —Surplus
உயர்வு —Increase
உரிமம் —Licence
உரிமைத் தொகை —Royalty
உழைப்பாளி —Labour, labourer
உழைப்பு —Lobour
உறுதிமொழி —Guarantee
உற்பத்தி —Output, product, production
உற்பத்தி ஏஜண்டுகள் —Agents of production
உற்பத்திக் காரணிகள் —Factors of production
உற்பத்திச் சாதனங்கள் —Means of production

ஊ

ஊகக் கோட்பாடு —Hypothesis
ஊக வாணிபம் —Speculation
ஊதியம் —Remuneration, Salary
ஊழியங்கள் —Services

எ

எதிர்பாராப் பொறுப்புகள் —Contingent liabilities

ஏ

ஏற்ற இறக்கங்கள் —Fluctuations

ஐ

ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் —Federal Reserve Banks
ஐக்கிய ரிசர்வ் முறை —Federal Reserve System
ஐந்தொகைக் குறிப்பு —Balance Sheet
ஐயப்பாடான பொறுப்புகள் —Contingent liabilities

ஒ

ஒதுக்கீடு —Allotment
ஒத்த மதிப்பு —Par value
ஒப்பந்தம் —Contract

ஒரே வகையான —Uniform
ஒழுக்கல் —Leakage
ஒழுங்குபாடு —Regulation

ஓ

ஓய்வு ஊதியம் —Pension

க

கடனாளி —Debtor
கடன் —Credit, loan, debt
  அரசாங்கக் கடன் —Public debt
  தனியார் கடன் —Private debt
  நாட்டுக் கடன் —National debt
  நிகரக் கடன் —Net debt
  நிதியாக்கப்பட்ட கடன் —Funded debt
  பொதுக் கடன் —Public debt
  மிதக்கும் கடன் —Floating debt
  மொத்தக் கடன் —Gross debt
கடன் இன மாற்றுகை —Conversion of debt
கடன் ஈவோன் —Creditor
கடன் கருவி —Credit instrument
கடன் கழிவு (தீர்வு) நிதி —Sinking fund
குவிவுக் கடன் கழிவு நிதி —Cumulative sinking fund
கடன் தரக்கூடிய நிதிகள் —Loanable funds
கடன் பத்திரங்கள் —Bonds, Securities
கடன் மீட்சி —Redemption
கடன் வெளியீடு —Issue of loan
கட்டணம் —Fee, Rate
கட்டம் —Phase, stage
கட்டுப்பாடு —Control, regulation
  விதிமுறைக் கட்டுப்பாடு —Formal control
கட்டுப்பாட்டு நோக்கம் —Sumptuary objective.
கட்டுப்பாட்டுப் பேரதிகாரி —Comptroller-General
கணக்கீடு —Assessment
கருத்தாய்வு —Discussion
கருவூல உண்டியல் —Treasury bill
கருவூலம் —Treasury
கலைப்பு —Liquidation
கழகம் —Board, Bureau
கற்பிதக் கோட்பாடு —Hypothesis

| | |
|---|---|
| கற்பிதமான | —Hypothetical |
| காசுகள் | —Coins |
| காப்பிருப்புகள் | —Reserves |
| சட்டமுறைக் காப்பிருப்புகள் | —Legal reserves |
| காப்பிருப்புத் தேவைகள் | —Reserve repuirements |
| காப்பிருப்பு நிதிகள் | —Reserve funds |
| கால அளவு | —Period |
| காலப் பகுதி | — ,, |
| கிடைப்பருமை | —Scarcity |
| குடிமகன் | —Citizen |
| குடிமைப் பொருளாதாரம் | —Civilian economy |
| குடியிருப்புகள் | —Colonies |
| குடியேற்ற நாடுகள் | — ,, |
| குணகம் | —Co-efficient |
| குத்தகை | —Lease |
| குத்தகைதாரன் | —Tenant, lessee |
| குழாய் நிரப்புகை | —Pump-priming |
| குழு | —Committee, commission |
| குறிக்கோள் | —Objective |
| குறியீட்டெண் | —Index number |
| குறைந்த அளவு | —Minimum |
| குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டு விதி | —Law of diminishing marginal utility |
| கூட்டரசு | —Federation |
| கூட்டுக் குழு | —Joint committee |
| கூட்டுச் செலவு | —Joint cost |
| கூட்டுத் தோற்றப் பண்டங்கள் | —Joint products |
| கூட்டுறவு | —Co-operation |
| கூட்டுறவு நாணயச் சங்கங்கள் | —Co-operative credit societies |
| கூலி | —Wage |
| கொள்கை | —Policy |
| கோட்பாடு | —Principle, theory |

ச

| | |
|---|---|
| சங்கம் | —Association |
| சட்ட முறைப் பணம் | —Legal tender |
| சட்டம் | —Act, Statute |
| சதவீதம் | —Percent, percentage |
| சமதர்மம் | —Socialism |
| சமத்தியாக நிலை | —Equality of sacrifice |
| சமத்துவம் | —Equality |

| | |
|---|---|
| சமநிலை | —Equilibrium |
| சம மதிப்பு | —Par value |
| சமுதாயம் | —Community, society |
| சமூகம் | — ,, |
| சமூகப் பாதுகாப்பு | —Social security |
| சம்பளப் பட்டியல் வரி | —Pay roll tax |
| சம்பளம் | —Salary |
| சாதனங்கள் | —Resources |
| சாதனப் பங்கீடு | —Allocation of resources |
| சாய்வு | —Slope |
| சான்று இதழ் | —Certificate |
| சிக்கல் | —Problem |
| சில்லறை வாணிபம் | —Retail trade |
| சில்லறை விற்பனையாளர் | —Retailer |
| சிறப்பு | —Significance |
| சிறப்புத் தேர்ச்சி | —Specialisation |
| சிறப்புத் தேர்ச்சியாளர் | —Specialist |
| சீரமைப்பு | —Reconstruction |
| சுங்கத் தீர்வை | —Customs duty, tariff duty |
| சுமை | —Burden |
| சுருக்கம் | —Contraction |
| சுழலேறி | —Spiral |
| கீழ்நோக்கிய சுழலேறி | —Downward spiral |
| மேல்நோக்கிய சுழலேறி | —Upward spiral |
| செக்கு | —Cheque |
| செக்குத் தீர்வகம் | —Clearing house |
| செலவு | —Expenditure, eost, outlay |
| உற்பத்திச் செலவு | —Cost of production |
| துணைச் செலவு | —Supplementary cost |
| பொதுச் செலவு | —Overhead cost |
| மேற்செலவு | — ,, |
| மாறாச் செலவு | —Fixed cost |
| மாறும் செலவு | —Variable cost |
| முதன்மைச் செலவு | —Prime cost |
| வாழ்க்கைச் செலவு | —Cost of living |
| செலவுச் செலுத்துதல் | —Cost payment |
| செலாவணி | —Currency |
| செலுத்தவேண்டிய கடன் | —Outstanding debt |
| செலுத்தும் திறன் | —Ability to pay |

| | |
|---|---|
| செலுத்து, செலுத்துதல் | —Payment |
| ஒத்தி வைக்கப் பட்ட செலுத்தல் | —Deferred payment |
| செலுத்துவோன் | —Payor |
| செல்வம் | —Wealth |
| செழுமை | —Prosperity |
| சேமிப்பு | —Saving |
| சொத்து | —Asset, property |
| சொத்துப்பேறு | —Inheritance |
| சொத்துவரி | —Property tax |

## த

| | |
|---|---|
| தண்டல் | —Collection |
| தரப்படுத்தல் | —Grading, Standardisation |
| தராதர மதிப்பு | —Relative value |
| தர்க்கமுறை | —Logic |
| தல அரசாங்கம் | —Local government |
| தலா | —Per capita |
| தலைவரி | —Capitation tax, poll tax |
| தவணைக் கட்டணம் | —Premium |
| தவணை முடிவு | —Maturity |
| தவறுகை, தவறுதல் | —Default |
| தளர்ச்சிநிலை | —Slack |
| தளவாடம் | —Equipment |
| தனித் தீர்வை | —Special assessment |
| தனியார் துறை | —Private sector |
| தனியாள் | —Individual |
| தனியாள் உரிமைக் கொள்கை | —Individualism |
| தன்மறுப்பு | —Sacrifice |
| ஒப்பீட்டுத் தன்மறுப்பு | —Comparative sacrifice |
| தராதரத் தன்மறுப்பு | —Relative sacrifice |
| தன்மறுப்பு ஒத்தநிலை | —Equality of sacrifice |
| தாமே இயங்கும் முறைகள் | —Automatic measures |
| திட்டம் | —Plan, programme, measure |
| தியாகம் | —Sacrifice |
| திரும்பப் பெறல் | —Withdrawal |
| தீர்ப்பளிப்பு | —Adjudication |
| தீர்மானிகள் | —Determinants |
| தீர்வை | —Duty |
| துணை ஈடு | —Collateral security |
| துணைப்பொருள் | —Byproduct |
| துய்ப்பு | —Consumption |

துய்ப்போர் —Consumer
துல்லியம் —Accuracy
துறை —Department
துறைநுணுக்கப் பொருள் —Technical sense
தூண்டுதல் —Incentive
தெரிவு விருப்பம் —Preference
தேக்கம் —Stagnation
தேய்மானம் —Depreciation
தேய்வுவீத வரிமுறை —Regressive taxation
தேவை —Demand
  வழிவந்த தேவை —Derived demand
தேவைப் பட்டியல் —Demand schedule
தொழிலாளி —Labourer
தொழில் —Industry
தொழில்துணிவு —Enterprise
  அரசாங்கத் தொழில்துணிவு —Public enterprise
  தனியார் தொழில்துணிவு —private ,,
தொழில்துணிவோர் —Enterpriser, Entrepreneur
தொழில்நுண்ணியல் —Technology
தொழில்முறைக் கல்வி —Vocational education
தொழில் வரி —Profession tax

ந

நகராட்சி மன்றம் —Municipality
நகர்மயமாதல் —Urbanisation
நடப்பு டாலர் —Current dollor
நடப்பு விலை —Current price
நடவடிக்கை —Transaction, action, activity
நலம் —Welfare
நல்வாழ்வு — ,,
நன்கொடை —Gift
நன்மை —Benefit
  குறிப்பான நன்மை —Specific benefit
  பொது நன்மை —General benefit
நன்மைக் கோட்பாடு —Benefit principle
நன்மை பெறுவோன் —Beneficiary
நாட்டம் —Propensity
நாட்டின் உற்பத்தி —National output
நாட்டின் நிகர ஆக்கம் —Net national product
நாட்டின் மொத்த ஆக்கம் —Gross national product

நாட்டின் மொத்த வருமானம் —Gross national income
நாணய அச்சுத் தீர்வை —Seigniorage
நாணயம் —Credit
நிகர —Net
நிதி —Finance, fund
சிறப்பு நிதி, தனி நிதி —Special fund
பொது நிதி —General fund
நிதி ஒதுக்கம் —Appropriation
துணைநிதி ஒதுக்கம் —Supplementary appropriation
நிதிக்கொள்கை —Fiscal policy
நிர்வாகம் —Administration, management
நிர்வாகி —Administrator, manager
நில அரிப்பு —soil erosion
நிலைபேறுக்கம் —Stabilisation
நிலைபேறின்மை —Instability
நிலைபேறு —Stability
நிலையான —Stable
நிலையான டாலர் —Constant dollar
நிவாரணம் —Relief
நிறுவனம் —Institution, Firm
நிறைவுசெய் பொருள்கள் —Complementary goods
நீர்மை —Liquidity
நீர்மைச் சொத்துகள் —Liquid assets
நீர்மை நாட்டம் —Liquidity preference
நுகர்வு —Consumption
நுகர்வுப் பணி —Consumption function
நுகர்வுப் பொருள்கள் —Consmer's goods
நீடித்த நுகர்வுப் பொருள்கள் —Durable Consumer's goods
நுகர்வோர் —Consumer
நுகர்வோர் இறைமை —Consumer's sovereignty
நுண்ணறிஞர் —Specialist
நெகிழ்ச்சி —Elasticity
நெடுஞ்சாலைகள் —Highways
நேர்முக வரி —Direct tax
நேர்மை —Equity
நோக்கம் —Objective

**ப**

பகுத்தாய்வு —Analysis
பக்குவப்படுத்தல் —Processing
பங்களவு —Quota

| | |
|---|---|
| பங்குத் தொகுப்பு | — Stock |
| பட்டியல் | — Schedule |
| பணம் | — Money |
| காகிதப் பணம் | — Paper money |
| தாள் பணம் | — ,, |
| பண அங்காடி | — Money Market |
| பண ஆக்கம் | — Monetisation |
| பண இறுக்கக் கொள்கை | — Rigid money policy, Tight money policy |
| பணக்கொள்கை | — Monetary policy |
| பணச்சுருக்கம் | — Deflation |
| பணப்புழக்கம் | — Circulation of money |
| பணவாட்டம் | — Deflation |
| பணவீக்கம் | — Inflation |
| பணவீக்க எதிர்ப்பு வரிக் கொள்கை | — Anti-inflation tax policy |
| பணி | — Function |
| பணியாற்றும் நிதிக்கொள்கை | — Functional finance principle |
| பண்டம் | — Commodity |
| பண்ணை | — Farm |
| பதிலி | — Substitute |
| பதிலீடு | — Substitution |
| பதிவுக் கட்டணம் | — Registration fee |
| பதுக்கல் | — Hoarding |
| பயன் | — Effect |
| பயன் தரா உழைப்பு | — Unproductive labour |
| பயன் தரும் உழைப்பு | — Productive labour |
| பயன்பாடு | — Utility |
| பயன்பாட்டுப் பணி | — Utility function |
| பருவம் | — Phase |
| பறிமுதல் | — Forfeiture |
| பற்றாக்குறை | — Deficit, Deficiency |
| பற்றாக்குறை நிதியாக்கம் | — Deficit financing |
| பன்னாட்டுச் செலாவணி நிதி | — International Monetary Fund |
| பன்னாட்டு வாணிபம் | — International trade |
| பாகுபாடு | — Classification |
| பாங்கு | — Bank |
| உறுப்பினர் பாங்கு | — Member bank |
| மைய பாங்கு | — Central Bank |
| வாணிப பாங்கு | — Commercial bank |

பாங்குச் செலாவணிப்படைப்பு — Creation of bank credit
பாங்குமுறை — Banking system
பாயிரம் — Preamble
பாவனை — Assumption
பிரதிபயன் — Quid pro quo
பின்இணைப்பு — Appendix
பின்னிறக்கம் — Recession
புதுமை — Innovation
புத்தமைப்பு —
புரோநோட்டு — Promissary note
புழக்க வேகம் — Velocity of circulation
புள்ளிவிவரம் — Statistics
பெருக்கம் — Expansion
  அகன்ற பெருக்கம் — Extensive expansion
  ஆழ்ந்த பெருக்கம் — Intensive expansion
பெருக்கும் எண் பெருக்கி — Multiplier
பெறுமான விகித வரி — Ad valorem tax
பெறுவோன் — Payee
பேதம் காட்டுகை — Discrimination
பொது நிதி — Public finance
பொதுமைகள் — Generalisation
பொது வசதி — Public utility
பொருளாக்கா உழைப்பு — Unproductive labour
பொருளாக்கும் உழைப்பு — Productive labour
பொருளாதார வீக்கம் — Boom
பொருளாதாரவாதி — Economist
பொருட் புலவர் —
பொருளாதார விதிகள் — Economic laws
பொருளாதாரம் — Economics Economy
  இயக்கநிலைப் பொருளாதாரம் — Dynamic Economics
பொருள் இருப்பு — Inventory
பொருள்கள் — Goods
பொறி — Machinery plant
பொறிசெய் பொருள்கள் — Manufactured goods
பொறுப்பு — Liability responsibility
பொறுப்பு நிதி — Trust fund
போகப்பொருள்கள் — Luxuries
போக்கு — Trend
போட்டி — Competition

ம

மக்கள்தொகை —Population
மசோதா —Bill
மதிப்பிறக்கம் —Depreciation
மதிப்பீடு —Assessment, estimate
மதிப்பு —Value
மதிப்பேற்றம் —Appreciation
மந்தம் —Depression
மரணவரி —Death tax
மலிவுப் பணக் கொள்கை —Cheap money policy
மறு அமைப்பு —Reconstruction
மறுகழிவு —Rediscount
மறுநிதியாக்கம் —Refunding
மறுப்பாணை —Veto
மறுமலர்ச்சி —Recovery
மறைமுக வரி —Indirect tax
மன்றம் —Council
மாநிலம் —State
மாநில அரசாங்கம் —State Government
மாவட்டம் —District
மாறி —Variable
மாறும் தன்மை —Flexibility
மாற்றம், மாற்றுகை —Conversion
மாற்றல் உராய்வுகள் —Transfer frictions
மாற்று செலுத்தல்கள் —Transfer payments
மானியங்கள் —Grants
இணைமானியங்கள் —Matching grants
உதவி மானியங்கள் —Grants-in-aid
மிகை —Excess
மீக்கோள் தரம் —Norm
மீட்சி —Recovery
மீளும் நிதி —Revolving fund
முதலாளித்துவம் —Capitalism
முதலீடு —Investment
முதலீடு செய்வோர் —Investor
முதலீட்டாளார் — ,,
முதல் —Capital
முதல் திரட்சி —Accumulation of capital
முதல் பொருள்கள் —Capital goods

| | |
|---|---|
| முதிர்ச்சிநிலைத் தேக்கம் | —Maturity stagnation |
| முதிர்வு | —Maturity |
| முயற்சி | —Effort |
| முறை | —System, method, process |
| முற்றுரிமை | —Monopoly |
| முனைப்பு | —Initiative |
| முன்மொழிவு | —Projection, proposal |
| முன்னோக்குகள் | —Anticipations |
| எழுகின்ற (உயரம்) முன்னோக்குகள் | —Rising anticipations |
| விழுகின்ற முன்னோக்குகள் | —Falling anticipations |
| மூலதன அங்காடி | —Capital market |
| மூலதனத் திரட்சி | —Accumulation of capital |
| மூலதனப் பொருள்கள் | —Capital goods |
| மூலதனம் | —Capital |
| மேலாண்மை | —Management |
| மேலாளர் | —Manager |
| மேற்கோள் | —Quotation |
| மொத்தத் தேவை | —Aggregate demand |

ர

| | |
|---|---|
| ரொக்க இருப்பு | —Cash balance |
| ரொக்கநிலை | —Liquidity |
| ரொக்கமாகக்கூடிய சொத்துகள் | —Lquid assets |
| ரொக்கம் | —Cash |
| ரொக்க விருப்பம் | —Liquidity preference |

லி

| | |
|---|---|
| லீவரேஜ் குணகம் | —Leverage co-efficient |
| லீவரேஜ் விளைவு | —Leverage effect |

வ

| | |
|---|---|
| வசதிப் பொருள்கள் | —Comforts |
| வசூல் | —Collection |
| வட்டாரம் | —Locality |
| வட்டி | —Interest |
| வரவு | —Receipt, credit |

| | |
|---|---|
| வரவுசெலவுத் திட்டம் | —Budjet |
| இயல்பல்லாத வரவு செலவுத் திட்டம் | —Extraordinary budjet |
| ஒத்தநிலை வரவுசெலவுத் திட்டம் | —Balanced budjet |
| ஒவ்வாநிலை வரவுசெலவுத் திட்டம் | —Unbalanced budjet |
| நிர்வாக வரவுசெலவுத் திட்டம் | —Executive budjet |
| நெருக்கடி வரவுசெலவுத் திட்டம் | —Emergency budget |
| பணிமுறை வரவுசெலவுத் திட்டம் | —Performance budjet |
| பற்றுக்குறை வரவுசெலவுத் திட்டம் | —Deficit budjet |
| ரொக்க வரவுசெலவுத் திட்டம் | —Cash budjet |
| வழக்கில் உள்ள வரவு செலவுத் திட்டம் | —Conventional budjet |
| வரி | —Tax |
| வரிச்சுமை | —Tax burden |
| வரி தாங்கும் திறன்(வல்லமை) | —Taxable capacity |
| வரிப் புரட்டுகை | —Shifting of tax |
| வரிவிதிப்பின் தாக்கு | —Impact of taxation |
| வரிவிதிப்பின் நிலைப்பாடு | —Incidence of taxation |
| வரிவிதிப்பு | —Taxation |
| வரிமுறை | — ,, |
| வருமான ஏற்றத்தாழ்வு | —Inequality of income |
| வருமானப் பங்கீடு | —Distribution of income |
| வருமான மறுபங்கீடு | —Redistribution of income |
| வருமானவரி | —Income-tax |
| வருமானம் | —Income |
| உண்மை (மெய்) வருமானம் | —Real income |
| தனியாள் வருமானம் | —Individual income |
| நாட்டு வருமானம் | —National income |
| நிகர வருமானம் | —Net income |
| பணவருமானம் | —Money income |
| மொத்த வருமானம் | —Gross income |
| வருவாய் | —Revenue |
| வருவாய் வரவுகள் | —Revenue receipts |

| | |
|---|---|
| வரையறை | —Limitation |
| வழிச்சுங்கம் | —Toll |
| வளர்வீத வரிமுறை | —Progressive taxation |
| வளைகோடு | —Curve |
| வாங்கும் திறன் | —Purchasing power |
| வாங்குபவர் | —Buyer, purchaser |
| வாடகை | —Rent |
| வாணிகம் | —Business, commerce, trade, |
| வாணிபம் | — ,, |
| வாணிபக் கொள்கை | —Commercial policy |
| வாணிபச் சுழல் | —Business cycle, trade cycle |
| வாணிபத் தொழில்துணிவு | —Business enterprise, commercial enterprise |
| வாணிப நிறுவனம் | —Business firm |
| வாணிப வரி | —Commercial tax, business tax |
| வாய்பாடு | —Formula |
| வாரம் | —Rent |
| விகிதம் | —Ratio |
| விதி | —Law, canon |
| விருப்பங்கள் | —Wants, desires |
| விலை | —Price |
| அங்காடி விலை | —Market price |
| நடப்பு விலை | —Current price |
| விலைக்கட்டுப்பாடு | —Price control |
| விலைக்குறிப்பு | —Quotation |
| விலைப் பணவீக்கம் | —Price inflation |
| விவரக் குறிப்புகள் | —Specifications |
| விவரங்கள் | —Details, data |
| விளைவு | —Effect, return |
| எதிர்மறை விளைவு | —Negative effect |
| நேர்முக விளைவு | —Positive effect |
| விற்பனை | —Sale |
| விற்பனையாளர் | —Seller |
| வீக்கம் | —Boom |
| வீதம் | —Rate. |
| வீதாசாரம் | —Proportion |
| வீதாசார வரிமுறை | —Proportional taxation |
| வீழ்ச்சி | —Decline, fall |
| வெளி அங்காடி நடவடிக்கை | —Open market Operation |

| | |
|---|---|
| வேகவளர்ச்சி | —Acceleration |
| வேகவளர்ச்சிக் கோட்பாடு | —Acceleration principle |
| வேலை | —Employment, work |
| வேலை அளிப்போன் | —Employer |
| வேலைக்குறைவு | —Underemployment |
| வேலைநிறைவு | —Full employment |
| வேலையாள் | —Employee |
| வேலையின்மை | —Unemployment |
| கட்டாய வேலையின்மை | —Involuntary unemployment |
| தான் விரும்பா வேலையின்மை | —Involuntary ,, |
| தானே விரும்பிய வேலையின்மை | —Voluntary ,, |
| வேளாண்மை | —Agriculture |
| வைத்திருப்பவர் | —Holder |
| வைப்பாளி | —Depositor |
| வைப்பு | —Deposit |
| தவணை வைப்பு | —Fixed deposit, Time deposit |
| நடப்பு வைப்பு | —Current deposit, Demand deposit |

# பொருட்குறிப்பு அகராதி

ச